l. XXXV 1960—1961



# செந்தமிழ்ச்செல்வி

திங்கள் வெளியீடு

முப்பத்தைந்தாம் சிலம்பு

அ. இராமசாமிப்புலவர்,
கருப்பக்கிளர். (அஞ்சல்)
கோட்டூர் வழி, தஞ்சை மாவட்டம்.

The South India Saiva Siddhanta Works
Publishing Society, Tinnevelly, Ltd,
Tirunelveli. :: Madras-1.

 [Price Rs. 6-00

## 'செந்தமிழ்ச் செல்வி'

# உள்ளுறை

# படங்கள்

## திரு. மீ. ப. சோமுவுக்கு வரவேற்பு-11-4-60

1. *செயலாளர் திரு. வ. சுப்பையா அவர்கள் அனைவரையும் வரவேற்றுப் பேசுதல்*
2. *டாக்டர் அ. சிதம்பரநாதச் செட்டியார் அவர்கள் தலைமையில் திரு. மீ. ப. சோமு அவர்கள் தம்முடைய மேலைநாட்டு அனுபவங்களை எடுத்துரைத்தல்* [illegible]

## மயிலை சீனிவேங்கடசாமியவர்கள் மணிவிழா

1. *உயர்நீதிமன்ற நடுவர் திரு. எஸ். கணபதியா பிள்ளையவர்கள் 'ஆராய்ச்சி அறிஞர்' என்ற பட்டப்பதக்கம் அணிவித்துப் பொன்னாடை போர்த்துதல்*
2. *பேராசிரியர், திரு. மயிலை சிவமுத்து அவர்கள் மணிவிழா மலரை அளித்தல்* [illegible]

## மறைமலையடிகளார் மாளிகை [illegible]

## மறைமலையடிகள் நூல் நிலையம்

1. *டாக்டர், திரு. பா. சுப்பராயன் அவர்கள் பார்வையாளர் ஏட்டை நோக்குதல்*
2. *திரு. சுநீதிகுமார் சட்டர்ஜி அவர்களை அப்பலை வாணர் திருவுருவச் சிலை முன்னர் செயலாளர் வரவேற்றல்* [illegible]

## மறைமலையடிகள் நூல்நிலையம், சென்னை

1. *கல்வி, நூலகத் துறைகளின் இயக்குநர் பத்மஸ்ரீ. நெ. து. சுந்தரவடிவேலு அவர்களுக்குப் பாராட்டு (6-2-61)*
2. *செயலர் திரு. வ. சுப்பையா பிள்ளை, திரு. வி. என். சுப்பராயன், டாக்டர், பா. நடராசன், நீதிபதி திரு. சு. கணபதியா பிள்ளை, திரு. நெ. து. சுந்தரவடிவேலு.*
3. *நீதிபதி திரு. சு. கணபதியா பிள்ளை தலைமையுரையாற்றுதல்* [illegible]

**மேலைநாடுகளுக்குச் சென்று நூலகங்களைப் பார்வையிட்டு வந்த, திரு. வி. என். சுப்பராயன் :** *இவர்களுக்கு 27-10-60 இல் மறைமலையடிகள் நூல் நிலையத்தில டாக்டர் எஸ். ஆர். அரங்கநாதன் அவர்கள் தலைமையில் வரவேற்பளிக்கப்பட்டது.* க0ரு



உருசியாவில் நடந்த கீழ்த்திசை மொழிப் பேரறிஞர்கள் மாநாட்டில் கலந்து கொள்வதற்காகப் பேராசிரியர், டாக்டர், அ. சிதம்பரநாதச் செட்டியார் அவர்கள் 4-8-60 அன்று சென்னை, மீனம்பாக்கம் விமான நிலையத்திலிருந்து புறப்பட்டபோது பெருமக்கள் பல்லோர் அன்னாரை வழியனுப்பிவைத்தனர்.



மாஸ்கோ மாநாட்டில் 'உலகினருக்குத் திருவள்ளுவர் தரும் செய்தி' என்ற தலைப்பில் சிறந்த ஆய்வுரை நிகழ்த்தி மீண்ட டாக்டர். அ. சிதம்பரநாதச் செட்டியார் அவர்களை 20-8-60 இல் அறிஞர் பலர் அன்போடு வரவேற்றனர்.




| சிலம்பு ௩௫ | திருவள்ளுவர் ஆண்டு ௧௯௯௧, ஆவணி<br>செப்டம்பர், 1960 | பரல் ௧ |
| --- | --- | --- |

# இறந்தாரின் உயிர்நிலை

நாம் வாழும் இவ்வுலகம்போன்று பலவுலகங்கள் உண்டு. வானவெளியில் காணப்படும் விண்மீன்கள் அனைத்தும் ஒவ்வோர் உலகங்கட்கு உரிய ஒவ்வொருபெரிய ஞாயிறுகளாம் என்ற உண்மையை அறிந்த உயர்ந்தோர் உவமை காட்டிக் கூறியும் எழுதியும் வருகின்றனர். பலவுலகங்கள் ஒரு ஞாயிற்றுக்குரியவாகத் திகழ்கின்றன. அவையனைத்தும் ஓர் அண்டமெனப் படுகின்றது. ஒன்றோடொன்றுக்குள்ள ஈர்ப்பாற்றலால் அவை யனைத்தும் சுழல்கின்றன. அதனால் அவை அண்டியுள்ளதென்னும் பொருளில் அண்டமென வழங்கப்படுகின்றது. அதனுடைய உண்மை வடிவம் உருண்டையாதலால் உண்டையெனவும் வழங்கப்படும். இவ்வுண்மை வரும் செந்தமிழ்த் திருமாமறை முடிபாலுணரலாம்:

"அண்டப் பகுதியின் உண்டைப் பிறக்கம்
அளப்பருந் தன்மை வளப்பெருங் காட்சி
ஒன்றனுக் கொன்று நின்றெழில் பகரின்
நூற்றொரு கோடியின் மேற்பட விரிந்தன."

(அ. திருவண்டப்பகுதி ௧ - ௪)

அண்டங்கள் அளவில்லன என்பதனைக் குறிக்க மேற்றிருப் பாட்டில் 'நூற்றொரு கோடியின் மேற்பட விரிந்தன' என ஓதியருளினார்.

ஒவ்வோர் உலகங்களிலும் ஓரறிவுமுதல் ஆறறிவு ஈறாகச் சொல்லப்படும் உயிரினங்கள் அளவிறந்து வாழ்கின்றன. உயிர் உல

கங்கள் பல என்பதனைச் செம்பொருட்டுணிவாம் சித்தாந்தச் சைவமெய்யுணர்வு நூல்கள் பலவற்றானுங் காணலாம். அவை வருமாறு :

"உரைசேரு மெண்பத்து நான்குநூ
றாயிரமாம் யோனிபேத
நிரைசேரப் படைத்தவற்றி னுயிர்க்குயிரா
யங்கங்கே நின்றான் கோயில்
வரைசேரு முகின்முழவ மயில்கள்பல
நடமாட வண்டுபாட
விரைசேர்பொன் னிதழிதர மென்காந்தள்
கையேற்கு மிழலையாமே." (௬. ௫௦. [illegible])

மெய்யாகிய தத்துவம் முப்பத்தாறு, புவனங்கள் இருநூற்றிருபத்து நான்கு என்னும் மெய்ம்மையினை வருந்தமிழாகமத் தான் உணரலாம். புவனம் - உலகம் :

"சாந்தியா தீதகலை தன்னின்மந் திரங்க
டாமூன்று பதமொன்றக் கரங்கள்பதி னாறு
வாய்ந்தபுர மூவைந்து தத்துவங்க ளிரண்டு
மருவுமதி தேவதையு மன்னுசதா சிவனாம்
ஏய்ந்தமுறை மந்திரங்கள் பதினொன்று பதங்க
ளெண்பத்தொன் றக்கரங்க ளைம்பத்தொன் றாகு
ஆய்ந்தபுர மிருநூற்றே டிருபத்து நாலா
மறிதருதத் துவமுப்பத் தாறுகலை யைந்தே."
(சிவஞான சித்தியார், அ. க - [illegible])

ஆருயிர்கள் புறத்துப் புலனும் பருவுடலொடு மட்டுமின்றி அகத்துக் கருதப்படும நுண்ணுடலொடுங் கூடிவாழ்கின்றன. இந் நுண்ணுடல் அனைத்துயிர்கட்கும் தனித்தனி வேறுபாடுமின்றித் தொடக்கப் படைப்பின்கண் சிவபெருமானின் திருவருளாற்றலால் படைத்துக்கொடுக்கப்பட்டன. இவ்வுடல் ஒரு பேரூழி காறும் எவ்விதக்கேடுமின்றி மாறுதலிருக்கும். பேரூழிப் பேரொடுக்கத்தின்கண் அழிக்கப்படும். அல்லது இவை பேரின்பப் பேறெய்துமுயிருக்குரிய நுண்ணுடலும் திருவருளால் அழிக்கப் படும். நுண்ணுடல், பூத முதலாய தன்மாத்திரை ஐந்தும், மனம் எழுச்சி இறுப்பு ஆகிய அகக்கலன் மூன்றுங் கூடிய எட்டு மெய் களாலாயது. மெய்கள் - தத்துவங்கள். எட்டு மெய்யுடைமையால் இது புரியட்டகம் எனவுங் கூறப. எழுச்சி - அகங்காரம். இறுப்பு - புத்தி. இந்நுண்ணுடல் உண்மை வருமாறு காண்க :

"ஓசைநற் பரிச ரூப விரதகந் தங்க ளொன்று
பேசுமாத் திரைக ளைந்தும் பிறங்குபூ தாதி கத்தி

னேசமிற் றிரியங் கட்கு நிகழுறி விதனுற் காண்டு
மாசைசேர் மனுதி தன்மாத் திரைபுரி யட்ட கந்தான்.''
(சிவஞான சித்தியார், ௨. ௩ - ௧௪)

ஆருயிர்கள் இந் நுண்ணுடலோடு கூடிக் கனவு காண்கின்றன. அகத்தவம் புரியும் செறிவினர்—யோகியர் தம் பருவுடலைவிட்டு நுண்ணுடலோடு மற்றொரு பருவுடம்பிற் போதலும், அங்கு நின்றும் தம் பழைய பருவுடலிற் புகுதலும் புரிவர். இந்த முறையினாற்றான் தமிழாகமம் அருளிச் செய்த நம்பிரான் திருமூலர் மூலனுடற்கண் புகுந்தருளினர். அவ்வுண்மை வரும் திருமாமறை யானுணர்க:

'' இவனுயிர்பெற் றெழிலன்றி யாக்கையிடர் நீங்காவென்
றவனுடலிற் றம்முயிரை யடைவிக்க வருள்புரியுந்
தவமுனிவர் தம்முடம்புக் காண்செய்து தாமயன்ற
பவனவழி யவனுடலிற் றம்முயிரைப் பாய்த்தினார்.''
(௧௨. திருமூலர் - ௧௩)

மேலும் இவையன்றி வெங்காயச் சருகுபோன்று இன்னும் ஐவகையுடம்புடன் கூடியே ஆருயிர்களிருக்கின்றன. அவை வருமாறு: ௧. உணவுடம்பு ௨. வளியுடம்பு ௩. மனவுடம்பு ௪. அறிவுடம்பு ௫. இன்பவுடம்பு என்பன. இவற்றை முறையே அன்னமயகோசம், பிராணமயகோசம், மனோமயகோசம், விஞ்ஞானமயகோசம், ஆனந்தமயகோசம் எனவுங்கூறுப. உணவுடம்பினைப் பருவுடம்பெனவுங்கூறுப. கோசம் - உடம்பு.

ர் இவ்வைவகையுடம்புகளுடன் கூடியுறையுந் தன்மை வரும் தமிழாகமத்தானுணர்க:

'' மருவா னந்தம் விஞ்ஞான மனோபி ராண னன்னமய
முருவாந் தன்மை யுண்டாய்மு னொன்றுக் கொன்று சூக்குமமாய்
வருமா மன்ன மயம்பற்றி மாயை முதற்கா ரணமாகும்
அருவா யான்மா வைங்கோசத் தார்ப்புண் டவற்றி னகம்புறமாம் ''
யார், ௪. ௨ - ௧௮)

இவ்வகையாக ஆருயிர்கள் பலவுடம்புகளோடு கூடிக் கட்டுற்றுப் பார்ப்பார்க்கு ஒருடலேயென்று தோன்றும்படிப் புறத்துக் காணப்படும் பருவுடலோடு கூடிவாழ்கின்றன. ஒரு பெரிய மாளிகையின் அகத்துப் பல கட்டுக்கள் காணப்படும். புறத்து நின்று நோக்குவார்க்கு அவையொன்றும் புலனாகாமல் முகப்பும் பெருமாளிகையின் புறத்துக் காணப்படும் முழுத் தோற்றமுந் தெரியும். இதுவே மேலதற்கொப்பாகும்.

இதுபோல் இவ்வுடலை விட்டு நீங்கும் ஆருயிர்கள் இருவினைப் பயன் துய்ப்பதன் பொருட்டு வேரினின்றும் மற்றொரு மரந் தோன்றுவதுபோன்று நுண்ணுடலினின்றும் வேறோர் ஆவியுடல் தோன்றும். அவ்வாவியுடல் உலாவுதற்கேற்ற ஒளிப்பகுதி இருட்பகுதி யுலகங்களுமுள. இவ்வாவியுலகில் வாழு முயிர்கள் பண்டைக்காலத்தில் சுருங்கிய அளவில் சிற்சில வீடுகளில் கன்னிக்கு வைத்தல் என்னும் வழக்கத்தின் வாயிலாக ஆவிகள் ஒருவரைப்பற்றி நின்று உரையாடும் முறைமை நிகழ்ந்து வந்திருக்கிறது. அம்முறைப்படி இன்னும் சிற்சில வீடுகளிலும் நடந்து வருகின்றன.

இம் முறையினை மேனாட்டறிஞர்கள் பல்வேறு வகையாகக் கழகங்கள் அமைத்துத் தெள்ளத் தெளிய ஆய்ந்து பற்பல நூல்கள் பல சான்றுகளுடன் எழுதி வெளிப்படுத்தியுள்ளார்கள். அந் நூற்களைக் கண்டு கற்று ஆய்ந்து தெளிந்த நம்நாட்டறிஞர் களும் பற்பல சான்றுகளுடன் பல நூல்கள் வெளிப்படுத்தி யுள்ளார்கள்.

ின் உண்மைகள் உலகுக்குப் பெரும் பயன் தருவன வாகக் காணப்படுகின்றன. அவற்றிற்கு அரண் செய்வனவாகிய செந்தமிழ் நூல்கள் பல. அவற்றின் குறிப்புக்களை அடுத்த கட்டுரையில் விளக்குவாம்.

ஆருயிர்கள் பருவுடலோடு கூடிப்பிறத்தலும், பின் வளர்ந்து பிறங்குதலும், முடிவில் இறத்தலும் செய்கின்றன. இறந்ததும் ஆவியுலகிற் செல்லும் உண்மையினை வரும் திருமுறைகளான் உணர்க:

"துறக்கப் படாத வுடலைத் துறந்துவெந் தூதுவரோ
டிறப்பன் இறந்தா லிருவிசும் பேறுவ னேறிவந்து
பிறப்பன் பிறந்தாற் பிறையணி வார்சடைப் பிஞ்ஞகன்பேர்
மறப்பன்கொ லோவென்றென் னுள்ளங் கிடந்து மறுகிடுமே."
(௪. ௧௧௪ - ௮)

இருவிசும்பு - ஒளிப்பகுதியும் இருட்பகுதியுமாகிய இரு வகை வானம்.

"பூதனு சரீரம் போனாற் புரியட்ட ரூபந் தானே
யாதனு சரீர மாகி யின்பத்துன் பங்க ளெல்லா
நாதனா ராணை யுய்க்க நரகொடு சுவர்க்கந் துய்த்துத்
தீதிலா அணுவா யோனி சேர்ந்திடுஞ் சீவ னெல்லாம்."
(சிவஞான சித்தியார், ௨. ௨ - ௩௩)

# ஐந்திணைப் பெயர்ப் பொருள்

[வித்துவான் திரு. வீ. ப. கா. சுந்தரம்]

குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்னும் பூக்களின் பெயர்கள் அவை குறிக்கும் ஒழுக்கங்கட்கு ஆயின என்று இளம்பூரணர் கூறியுள்ளார். இக்கருத்தே பெரும்பான்மையாக நிலவி வருகின்றது. ஆனால் இறையனார் களவியல் உரையில் குறிஞ்சி, முல்லை முதலியன ஒழுக்கங்களின் பெயரென்றும் பின்னர் அவை மலை, காடு முதலிய நிலங்கட்கும் பூக்கட்கும் பெயராயின என்றும் கூறப்பட்டுள்ளது. "ஒழுக்கமே திணை எனப்படும். குறிஞ்சி யாகிய ஒழுக்கம் நிகழ்ந்த நிலமும் குறிஞ்சி எனப் பட்டது. என்னை, விளக்காகிய சுடர் இருந்த இடனும் விளக்கு எனப்பட்டது போல" என்பது இறையனார் களவியலுரை. இவ்விரு கொள்கைகளில் எது பொருந்துவது என ஆய்தல் வேண்டும்.

பூக்களின் பெயர், ஒழுக்கத்திற்கு ஆயின எனக் கருதும் இளம்பூரணர் கூறியதை முதற்கண் அறிந்து கொள்வோம்.

முல்லை, குறிஞ்சி என்பன இடுகுறியோ காரணக் குறியோ எனின், ஏகதேச காரணம் பற்றி முதலாசிரியர் இட்டதொரு குறி என்று கொள்ளப்படும்.

என்னை காரணம் எனில்—

"நறுவீ முல்லை அரும்பவிழ் அலரிதூஉ" (முல். அ. ௧0)

என்றமையால் காடுறை உலகிற்கு முல்லைப்பூ சிறந்தது ஆகலானும்,

"கருங்கோற் குறிஞ்சிப் பூக்கொண்டு பெருந்தேன்
இழைக்கும் நாடனொடு நட்பே" (குறுந்தொகை. ௩)

என்றவழி மைவரை உலகிற்குக் குறிஞ்சிப்பூ சிறந்தது ஆகலானும்,

"மருதின் தாழ்சினை உறங்கும் தண்துறை ஊர" (அகம். உ௮௬)

என்றவழித் தீம்புனல் உலகிற்கு மருது சிறந்தமையானும்,

"நெய்தல் இளமீன் கருங்கழி" (குறுந். ௬)

என்றவழிப் பெருமணல் உலகிற்கு நெய்தல் சிறந்தமையானும் இந்நிலங்களை இவ்வாறு குறியிட்டார் என்று கொள்ளப்படும்.

"பாலை என்பதற்கு நிலம் இன்றேனும், வேனிற் காலம் பற்றி வருதலின், அக்காலத்துத் தளிரும் சினையும் வாடுதலின்றி நிற்பது பாலை என்பதோர் மரம் உண்டாகலின் அச்சிறப்பு நோக்கிப் பாலை என்று குறிப்பிட்டார்"—இவ்வாறு கூறிப் போந்தார் இளம்பூரணர். ஆகவே, பூக்களின் பெயரே நிலங்கட்குப் பெயராயின என்பது உரையாசிரியர் கொள்கை. இன்றைய ஆசிரியர் பெரும்பாலோர் கொள்கையும் அதுவே.

இனி, ஒரு நிலத்தில் எத்தனையோ வகைப் பூக்கள் இருக்க, குறிஞ்சிப்பூவின் வழியே குறிஞ்சி நிலத்திற்கும், குறிஞ்சி ஒழுக்கத்திற்கும் பெயரிட்டதன் காரணம் என்ன என்று எவரும் என்றும் கூறினாரல்லர். குறிஞ்சிப் பூவிற்கு அப்பெயர் காரணப் பெயரா, இடுகுறியா என்றும் இதுகாறும் எவரும் ஆராய்ந்து கூறினாரல்லர்.

குறிஞ்சி, நெய்தல் முதலிய பெயர்கள் முதற்கண் ஒழுக்கப் பெயர்களாக அமைந்தவை என்பதற்குப் பல சான்றுகள் உள்ளன. முதலில் ஒழுக்கப் பெயராக அமைந்து, பின்னர் அவ்வொழுக்கம் நிகழுதற்கு மிகச் சிறந்து விளங்கிய நிலங்கட்கும், இவ்வொழுக்கத்தைக் குறிக்க எழுந்த பூக்கட்கும் பெயராயின என்பதே பொருந்தும்.

குறிஞ்சி மருதம் ஆகிய [illegible]கள் சொல்லும் இவ்வொழுக்க நெறியை முதற்கண் சுட்டிய பெயர்கள் என்பதை அப்பெயர்களின் பொருளே உணர்விக்கும்.

முதற்கண் குறிஞ்சியை ஆய்வோம். குறிஞ்சி எந்த வேர்ச் சொல்லினின்றும் பிறந்தது? எப்பொருளைத் தெரிவிப்பது? அப்பொருட்கும குறிஞ்சி ஒழுக்கத்திற்கும் என்ன தொடர்பு? இவற்றைத் தெளிதல் நலந்தரும்.

குறிஞ்சி = குறு + ஞ் + சி. இதன்பொருள் குறுகுதல். அணுகுதல், நெருங்குதல், சேர்தல், அடைதல் என்பது கருத்து. நட்புறுதல்—புணர்தல் என்பனவும் சார்தற் கருத்தே.

தலைவியைத் தலைவன் கண்டு முதலில் அணுகி நட்புறுதலே (குறுகுதலே) குறிஞ்சி என்று ஒழுக்கப் பெயராயிற்று. தலைவியைத் தலைவன் அணுகி, மெய் தொட்டுப் பயிறல், இடம்பெற்றுத் தழாஅல் முதலிய குறிஞ்சிக் கிளவிச் செயல்கள் புரிந்து புணர்வதால் குறிஞ்சி என ஒழுக்கத்திற்குப் பெயராயிற்று. இயற்கைப் புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங்கற் கூட்டம், பாங்கியிற் கூட்டம் யாவும் குறிஞ்சியாவது இப்பொருள் பற்றியே. புணர்தல் தவிர, பிரிவச்சம், வன்புறை முதலிய கிளவிகள் புணர்தல் நிமித்தமாதலின் குறிஞ்சி ஒழுக்கத்தின் பாற்படும்.

புறத்திணையில் தழுவுதல்-தழிஞ்சி என ஆயிற்று. அது போல அகத்திணையுள் குறுகுதல் - குறிஞ்சி என "அழிபடை தட்டோர் தழிஞ்சியோடு"—(தொல். புறத்திணை, அ) என்பதில் தழிஞ்சி தழுவுதல் பொருளில் வந்தது என்று உரை கூறியுள்ளனர்.

திணைவழித்தோன்றிய குறிஞ்சி என்னும் பெயர், பின்னர்ப் புணர்தல் நிகழ்வதற்குச் சிறந்து விளங்கிய மலைக்கும், மலை சார்ந்த இடத்திற்கும் பெயராயின. மேலும் அவ்விடத்துத் தோன்றிய மலருக்கும் பெயராயிற்று. குறிஞ்சி ஒழுக்கத்திற்கு அடையாளப் பூவாகக் குறிஞ்சிமலர் பயன்பட்டது. இவ்வாறே செயலை ஒரு பூவால் குறிக்கும் வழக்கம் மேலை நாட்டிலும் உண்டு. காதலன் காதலியைப் பிரியுங்கால் "Forget me not" என்னும் மலரைத் தந்து செல்வானும். மரி அன்னையார் கற்பின் செல்வியாவர் என்பதனைக் குறிக்கப் படங்களில் மரியன்னையின் திருக்கையில் "Lily" மலர் கொடுத்திருப்பதைக் காணலாம். கற்பின் மங்கையை "Lily maid" என்று குறித்த இலக்கிய வழக்கு ஆங்கில மொழியில் காணலாம். ஆகவே, ஒழுக்கத்தின் பெயரே, மலருக்கு ஆயிற்று. உயிர், மெய் என்ற பெயர்களும் முதற்கண் மனிதனின் ஆவிக்கும், யாக்கைக்கும் பெயராக அமைந்து, பின்னர்த்தான் எடுத்துக் காட்டுப் பெயராகக் காரணங்கருதி இட்டு வழங்கினர்.

இனி, முல்லை என்னும் சொல்லின் பொருள் என்ன? அஃதெவ்வாறு முல்லை ஒழுக்கம் குறிக்கும்? என ஆராய்வோம். முல்லை என்பது தன்மை மிகுதி எனப் பொருள்படும். இச் சொல்லைக் கன்னடத்தில் முல்லே (molle) என்றும், மலையாளத்தில் முல்லா என்றும் வழங்குவர். தமிழிலே முல்லை என்பது இயல்பு மிகுதி எனப் பொருள்படும். புறப்பொருள் வெண்பாமாலையிலே, ஏறாண் முல்லை, மூதின் முல்லை, அரச முல்லை, பார்ப்பன முல்லை முதலிய துறைகளைக் காணலாம். அரச முல்லை—அரசனது இயல்பை மிகுத்துக் கூறுதல். ஆகவே புறத்திலும் அகத்திலும் முல்லை எனும் தொடர்க்கு இயல்பு மிகுதி என்றே பொருள்.

வினைவழிப் பிரிந்து மீளும் தலைவனுடைய திறமெல்லாம் இல்லிருக்கும் கிழத்தி நினைக்கின்றாள். அவ்வாறு நினைக்கும் தன்மையை மிகுதிப் படுத்தலே முல்லையாகும். தலைவன் மீளுங்கால் தலைவியை நினைப்பான். தலைவி ஆற்றியிருக்குங்கால் தலைவனை நினைப்பாள். இவர்களின் இன்ப நினைவை மிகுதிப் படுத்தற்கு உதவியாகக் கார்காலமும் மாலை நேரமும் கான் நிலமும் விளங்கும். வினைவயின் பிரிந்தோன் விரைபரித்தே ரூர்ந்து மீள்வது ஆவணி புரட்டாதிக் காலம்; அவை நீரும் நிழ

லும் மிக்க காலம்; மாவும் புள்ளும் மகிழ்வுறுகாலம்; தத்தம் துணையோடு தங்கி, மெத்த இன்பம் மேவுங்காலம்; புனிற்று கன்றை நினைத்துக் கதறி மன்றில் புகும் மாலைக்காலம்; நல்லாயர் இயக்கும் புல்லாங் குழலோசை இல்லாளை வருத்தற் கேற்ற காலம். இத்தகைய இன்பகாலம் பிரிந்து இலையை நினைக்கும் தலைமக்களின் இன்புணர்வை மிகுதிப்படுத்துகிறது. ஆகவே, இருவர்க்கும் காமக்குறிப்புக் கழிபெரும் வகையில் நிலையுதால் முல்லை எனக் காரணப்பெயராயிற்று. புறத்திணையில் வல்லாண் முல்லை என்ற துறைக்குத் தந்துள்ள விளக்கம் இங்கு நோக்கத் தக்கது. வல்லாண் முல்லை—(பு. வெ. கஎஎ)

> " இல்லும் பதியும் இயல்பும் கூறி
> நல்லாண் மையை நலமிகுத் தன்று "

முல் என்ற வேர்ச் சொல்லடியாக முல்லை பிறந்துள்ளது. இல் என்பது இல்லை ஆவதுபோல முல் என்பது முல்லை ஆகும். முல் என்ற வேர்ச் சொல்லடியாகப் பிறந்த பிறசொற்கள் காண இயல வில்லை. முலைக்கும், முல்லைக்கு வேர்ச்சொல் ஒன்றே, பொருள் ஒன்றே என ஆய்ந்து அறிஞர் கண்டு கூறுதல் நலந் தரும்.

இனி, மருதச் சொல்லை ஆய்வோம்.

மருதம் = மருது + அம்; மருது = மரு + து. ஆகவே மரு என்ற வேர்ச் சொல்லடியாக மருதம் பிறக்கின்றது. உலகம் என்ற சொல் போன்று புணர்ந்து நின்றது மருதம். உலகு + அம் = உலகம்; உலகு = உல + கு. உல = உருண்டை எனப் பொருள். இப்பொருள் படுவது சிந்தாமணியில் (பதுமை உ) சீவகனை வர்ணிக்குங்கால் "உலம் கலந்து உயர்ந்த தோளான்" என்றார் திருத்தக்க தேவர். அஃதாவது உருண்டைக் கல்லை ஒத்த தோளான் எனப்பொருள்.

| | | |
|---|---|---|
| மரு | = | மாறுபாடு |
| மருட்டுதல் | = | மாறுபடுத்தல் |
| மருள் | = | ஆவேசங் கொள்ளல்; வெருவுதல் (மாறுபாடு கண்டதால்) |
| மருட்சி | = | ஒரு பொருளின் மாறுபாடு கண்டு தோன்றும் உணர்ச்சி. |

மருதம் தலைவன் தலைவிக்கு ஊடே தோன்றும் மாறுபாடு அல்லது பிணக்கு. ஊடல் பரத்தையிற் பிரிவால் நேரிடுங்கால் தலைவியின் மனமெல்லாம் நொந்து மாறுபட்ட உள்ளத்துடன் உரையாடுவாள். புலத்தல், ஊடுதல், துனித்தல் என்ற சொற்

களும் தலைமக்களுடே நேரிடும் இளங்காலம், வளர்ந்த காலம், முதிர்ந்த காலம் எனப்பொருள்பட்டு மருத ஒழுக்கத்தைக் குறித்து வருவதும் ஒப்பு நோக்கற்குரித்து. ஆகவே மருதம் என்னும் சொற்பொருள் மாறுபடுதல் அல்லது புலத்தல் என்பதே.

இனி, நெய்தல் திணையை ஆராய்வோம். வேப்ப நெய், விளக்கு நெய், கடலை நெய், எண்ணெய் (எள்+நெய்), தேங்காய் நெய் என்றே பண்டைப் பெயர்கள் வழங்கின. இக்காலத்து நெய் என்பதற்குப் பதில் எண்ணெய் எனக்கூட்டிச் சொல்கிறோம். வேப்ப நெய் என்பதிற்குப் பதிலாக வேப்ப எண்ணெய் என வேண்டாத ‘எள்’ளைச் சேர்த்துச் சொல்கிறோம். ஆகவே, இளக்கமான உருகுந்தன்மைப் பொருட்கள் நெய் எனப் பெயர் பெற்றன. வெண்மை நிறத்தாலும், உருகுவதாலும் வெண்ணெய் எனப் பெயர் பெற்றது. எனவே நெய்+தல்=நெய்தல். உருகுதல் என்பததன் பொருள். இரங்குதலும் அதுவே.

தலைவனைப் பிரிந்த தலைவிக்கு ஆற்றாமை கைமிக்கு இரங்குதல் நிகழ்வது இயல்பாதலின் நெய்தல் எனப் பெயரானமை பொருத்தமுடைத்து. இதுவும் ஒழுக்கத்தின்வழிப் பெயர் பெற்றமை அறிக.

எனும் சொல்லைக் காண்போம், பால்+ஐ எனப் பிரியும். பால் என்பது பகு, அல்லது பிரி எனப் பொருள்படும். ஆகவே பாலை என்பது பகுதி, அல்லது பிரிவு அல்லது கூறுபாடு எனப்படும். தொல்காப்பியம் எழுத்ததிகாரம் நச்சினார்க்கினியருரையில் (௧௬௫) பால்வரை கிளவி= பொருட் கூற்றை (பகுதியை) உணர நின்ற சொல் என்கிறார். பாலுங் கொளாலும் வல்லாய் (பதிற்று. ௧௬-௧௧) என்பது பிரித்துக் கொடுத்தல் வல்லவனே எனச் சொல்லப் பட்டது. பாலுள் இரவில் (கலித்தொகை ௯0) என்பது பாதியான இரவில் எனக் கூறப்பட்டது. கீழ்ப்பால் ஒருவன் கற்பின் (புற. ௧௮௩) என்பது கீழ்ப்பகுப்பாகிய குடியுள் ஒருவன் கற்பின் எனப் பொருள்படுகிறது. ஆகவே பால் என்பது பிரிவு, பகுப்பு எனப் பொருளானது.

இனி, பாலை ஒழுக்கம் பிரிவு. குறிஞ்சி களவிற்குரிய திணை. முல்லை மருதம் நெய்தல் கற்பிற்குரிய திணைகள். பாலை களவிற்கும் கற்பிற்கும் உரிய தனிப் பிரிவாகிய திணை. பிரிவு இருவகைப் படும். அவையாவன:(1) தலைமகளை ஓதல், தூது, காவல், பரத்தை வயின் பிரிதல்; (2) தலைமகளை உடன்கொண்டு தமர் வரைப் பிரிதல்.

நால்வகை ஒழுக்கமாகிய புணர்தல், இருத்தல், ஊடல், இரங்கல் இவற்றினின்றும் திரிந்த ஒரு தனிப்பிரிவு ஒழுக்கமாகும் பாலை. இக்கருத்து. "நடுவண் ஐந்திணை நடுவணது ஒழியப் படுதிரை வையம் பாத்திய பண்பே" என்னும் நூற்பாவால் பெறப்படுகின்றது. சிவஞான முனிவரும் இக்கருத்தை வெளியிட்டுள்ளார். நடுவணது (பாலை) என்பது காரணக் குறியீட்டுப்பெயர். பகுக்கப்பட்ட நால்வகை ஒழுக்கமுமாகாது நடு நிகழ்ந்ததாய் நிற்றல்பற்றி நடுவுநிலைத்திணை எனக் குறியீட்டாயிற்றும்; எனவே பாலை நால்வகை ஒழுக்கத்தினின்றும் திரிந்த ஒரு தனிப் பகுப்பு ஒழுக்கமாகும்.

பாலை ஒழுக்கம் கடுமை நிறைந்தது. நீரும் நிழலுமின்றியும் முல்லையுங் குறிஞ்சியும் முறைமையில் திரிந்தும் புல்லும் மரமும் புலம்புற்றும், வேனிலும நண்பகலும் வெப்பத்தைப் பெருக்குவனவாய் அமைந்தும் இன்பம் திரிந்த துன்பம் நிறைந்த ஒரு பகுதி ஒழுக்க மாகும் பாலை.

இதுகாறும் கூறியவற்றால் நிலத்தின் பெயர் ஒழுக்கத்திற்கு ஆகியது என்னும் இளம்பூரணர் கொள்கை பொருந்தாது என்பது வலியுறுத்தப்பட்டது. குறிஞ்சி என்பது குறிஞ்சியாகிய ஒழுக்கத்தைக் குறிக்கும் என்ற இறையனார் களவியல் உரைக் கூற்றே பொருந்துவது. குறிஞ்சி நிகழ்வதற் கேற்ற நிலமும், குறிஞ்சி எனப் பெயர் பெற்றது.

கைக்கிளையும் பெருந்திணையும் ஒழுக்கத்தையே குறிப்பன என்பது அனைவர் கருத்துமாகும். புறத்திற் குரிய எழு திணைகளின் பெயரும் இவ்வாறே ஒழுக்கத்தின் பெயர்களாக முதற்கண் எழுந்து பின் மலர்களுக்குப் பெயராயின என்பதை அடுத்த கட்டுரையில் ஆராய்வோம்.

## மறவல் நெஞ்சே!

[நாஞ்சில், திரு. கா. பாரதி]

செல்வம் பெருகிச் செழித்த காலத்தும்
அல்கா நல்குரவு அடர்த்துங் காலத்தும்
கலையில் தெளிந்து கற்குங் காலத்தும்
உலைவில் முயற்சி உஞற்றுங் காலத்தும்
இல்லறம் உலகில் இயற்றுங் காலத்தும்
தில்லைக் கிழானை மறவல் நெஞ்சே!

கு. அ. இராமசாமிப்புலவர்,
கருப்பக்கிளர். (அஞ்சல்)
கோட்டூர் வழி, தஞ்சை மாவட்டம்.

# "வள்ளுவர் கண்ட அறம்"

[வித்துவான், திரு. வி. சச்சிதானந்தம்]

'அறம்' என்ற சொல்லிற்குப் பொருள் பல கூறுவர் ஆன்றோர். அன்ன சத்திரம் ஆயிரம் அமைத்தலே அறம் என்பர் சிலர்; ஆலயம் பதினாயிரம் நாட்டலே அறம் என்பர் சிலர்; அண்டி வந்தவர்கட்கு உண்டி கொடுத்தலே அறம் என்பர் சிலர்; இல்லை என்று இரந்தவர்கட்கு இல்லையெனாது ஈதலே அறம் என்பர் சிலர். ஆனால் அருந்தமிழ் நாட்டின் சிறந்த தமிழ்ப் புலவரான திருவள்ளுவர் 'அறம்' என்ற சொற்கு மனத் தூய்மை என்ற பொருளையே கூறுகின்றார். திருக்குறள் முழுதும் அறம் கமழ்வதை அறிஞர் அறிவர்.

பிற நூல்கட்கும், திருக்குறளுக்கும் பெரியதொரு வேறுபாடு உண்டு. பிற நூல்கள் அறத்தைப்பற்றிக் கூறினால் அறத்தையே கூறிக்கொண்டு செல்லும்; மறத்தையோ, இன்பத்தையோ காண இயலாது. ஆனால் வள்ளுவர் கூறிய அறநூலிலே மறமும் உண்டு; இன்பமும் உண்டு அறவழியிலே ஈட்டும் பொருளும், அறவழியிலே அனுபவிக்கும் இன்பமுமே என்றும் அழியாமல் நிற்பன என்பதை வலியுறுத்தவே அறம், பொருள், இன்பம் என வரன்முறையாகக் கூறினார் வள்ளுவர்.

எல்லாவுயிர்களினும் மேம்பட்ட நிலையுடையவன் மனிதன். "அரிது அரிது மானிடர் ஆதல் அரிது" என்றார் ஔவையார். "மக்கள் தாமே ஆறறிவுயிரே"-என்றார் ஒல்காப் பெரும் புகழ்த் தொல்காப்பியனார். உயர்திணைக்கு இலக்கணம் வகுத்த பவணந்தி, "மக்கள் தேவர் நரகர் உயர்திணை" என்று உரைத்தார். இறைவனை யுணர்ந்து, இன்ப துன்பங்களை அனுபவித்து, செம்மையான முறையில் வாழ்க்கையைச் செலுத்துவது இம் மக்கட் பிறப்பே. இத்தகைய சிறப்புற்று மனிதன் விளங்குவது எப்போது? 'மனம்' என்ற ஒன்று செம்மையாக இருக்கும் போதுதான். எனவே மனத்தினையுடையவன் மனிதன் எனப் பட்டான். சிந்திக்கும் திறம் வாய்ந்தவன் சிறப்புடையவன்

உள்ளத்தால் பொய்யாதொழுகிய பொய்யில் புலவரும் உள்ளம் செம்மையடையும் வழிகளையே தாம் இயற்றிய குறளில் கூறிப்போந்தார் எனல் குற்றமாகாது. காற்றினும் கடிதிற் செல்லும் குரக்கு மனத்தை அடக்கி நிறுத்துவது, செம்மைப்

படுத்துவது எப்போது? அங்கிங்கெனாதபடி எங்கும் பிரகாசமாய் நீக்கமற நிறைந்துள்ள இறைவனாற்றலை உணரும்போது, கெடுக்கவும் கெட்டார்க்குச் சார்வாய் மற்றாங்கே எடுக்கவும் வல்ல இயற்கையாம் மழையின் திறத்தினை எண்ணும்போது, இறைவனை-இயற்கைச சக்திகளை உணர்ந்து, இடையறா இன்பம் எய்தி, நிறை குணம்படைத்த நீத்தாரை நினைக்கும்போது மனம் செம்மையடைகிறது; உயர்வடைகிறது. ஆகவேதான் அறத்தை வகுத்த திருத்தக்க தேவனார் 'மனத் தூய்மையே அறம்' எனக் கூறினார். மனத் தூய்மையில்லாது மக்கள் பிறர்க்குக் கொடுக்கும் பொருள்கள், செய்யும் செயல்கள் அனைத்தும் தம்மை ஆரவாரிக்கச் செய்வனவேயாகும் எனவும் சொல்லுகிறார்.

" மனத்துக்கண் மாசில னாதல் அனைத்து அறன்
ஆகுல நீர பிற "

என்பது குறள். ஆயிரத்து முந்நூற்று முப்பது அருங்குறட்பாக்கட்கும் அடிப்படையாவதும் இக் குறட்பாவே.

அறச் சிந்தனையுடையவர்களே—அன்பும், பண்பும், ஆன்ற வொழுக்கமும் உடையவர்களே அந்தணராவார். செந்தண்மை பூண்டொழுகும் தன்மையால் அந்தணர் எனப்பட்டார் என்று செந்தமிழ்ப் புலவர் செப்புகிறார்.

" அந்தணர் என்போர் அறவோர்மற் றெவ்வுயிர்க்கும்
செந்தண்மை பூண்டொழுக லான் "

என்பது குறளாகும். அறிஞர் வள்ளுவரின் கொள்கைப்படி அண்மையில் தோன்றி மறைந்த மகாத்மா காந்தியடிகள், மறைமலையடிகள், திரு. வி. க. போன்றவர்களையும் அந்தணர் என அழைத்தல் பொருத்தமே யாகும். மேலும் இல்லற, துறவறத்திற்கும், பொருள் பெறுவதற்கும், இன்பமடைவதற்கும் மனத் தூய்மையே இருத்தல் வேண்டும் என்ற எண்ணமுடையவராய் 'அறன் வலியுறுத்தல்' என்ற அதிகாரத்தை இல்லறவியலின் முதலிலேயே வைத்திருக்கின்றார் வள்ளுவனார்.

இல்லறத்திற்கு மனத்தூய்மை இன்றியமையாதது என்பதைக் குறள் துணைகொண்டு கூறுவாம். இல்லறத்தின் சிறப்பினை எடுத்துக் கூறும் வள்ளுவர் "அறன் எனப்பட்டதே இல் வாழ்க்கை" எனத் தேற்றேகாரம் கொடுத்துச் சொல்லுகிறார். மனம் செம்மையுடையவனே மாண்புடைய மனைவியைப் பெற முடியும்; நன்கலமாகிய நன்மக்கட் பேற்றினையும் அடைய முடியும்; அகம் நெகிழ, அன்புடையவனாக, செல்விருந்தோம்பி வருவிருந்து பார்த்திருக்கும் செம்மையுடையவனாக இருக்க

முடியும் என்று சொல்கின்றார் செந்நாப்போதார். மேலும் அன்பு கலந்து, வஞ்சனையிலாத செஞ்சொற்களைச் சொல்லும் போது, காலத்தினால் செய்த நன்றியைக் கருதும்போது, தீமைவரி னும் நடுநிலைமையினின்றும் தவறாதிருக்கும்போது, எல்லார்க்கும் நன்றாய பணிதலை மேற்கொள்ளும்போது, உயிரினும் சிறந்த ஒழுக்கத்தைக் கடைப்பிடிக்கும்போது, பிறன்மனை விழையாத பேராண்மை கொண்டபோது, மிகுதியால் மிக்கவை செய்தா ரையும் தாம் தம் தகுதியால் வெல்லுகின்ற திறன் பெற்றபோது, உடுப்பதும், உண்பதுவுமின்றி ஒருங்கே கெடுக்கவல்ல அழுக் காற்றினை அகற்றியபோது, புலம் வென்ற பெரியோர் இலம் என்று விழையாத பொருளை நலம் என்று நாமும் விரும்பாத போது, புறங்கூறும் புன்மை நெறியைப் புறத்திலே விடும்போது, மறந்தும் பிறன்கேடு சூழுதலைத் துறந்து வாழும்போது, தாளாண்மையால் வந்த பொருளை வேளாண்மை செய்யும்போது, வறியார்க்கு ஒன்றீந்து உள்ளம் உவக்கும்போது, ஒன்றா உலகத்து உயர்ந்த புகழினை அடையும்போது இயல்பாகவே மனம் தூய்மையாக இருத்தல்வேண்டும்—இருக்கும் என்று எடுத்துக் கூறவும் வேண்டுமோ? மனையறத்தே மனம் சிறிது மாறுபட்டால் நிலை பெரிதும் மாறிவிடும். மனத்தூய்மை யிழந்து மனையறத்தே வாழ்பவன் பிறர் பழிக்கு ஆளாக நேரிடும். எத்தனையோ குடும்பங்கள் தூய்மை யின்மையால் வாழ்க்கையில் வெறுப்படைந்து வறண்ட பாலைவனங்களாக மாறிவிட்டன: பிறர் பழிக்கும் ஆளாயின. எனவேதான் மனையற மாண்பிற்குக் காரணம் மனத்தூய்மையென்ற அறமே என்று எண்ணி,

" அறன்எனப் பட்டதே இல்வாழ்க்கை அஃதும்
பிறன்பழிப்ப தில்லாயின் நன்று "

என்று உரைத்தார் வள்ளுவர்.

மனம் தூய்மையாக இருந்தால்தான் மனம், மொழி, மெய் கடந்த முழுமுதற் கடவுளை அடையமுடியும்; துறவறத்தை மேற்கொள்ளவும் முடியும். துறவிகளின் மனம் தூய்மை பெறுவ தற்குத் திருவள்ளுவர் கூறும் திறத்தினை நோக்குவோம். மன் னுயிரையும் தன்னுயிர்போல் எண்ணும் அருளுடையவனாக வேண்டும். கொல்லும் தொழிலால் வந்த தின்னும் புலாலை மறுக்கவேண்டும்; உற்ற நோய் நோன்று, உயிர்கட்கு உறுகண் செய்யாத தறுகண்மையுடைய தவத்தினை அடைய வேண்டும்; வஞ்சிக்கும் தன்மையினை விட்டொழித்தல் வேண்டும்; உள்ளத்தால் உள்ளலும் தீதெனும் கள்ளத்தன்மையைக் கடிந் தொதுக்கவேண்டும்; எனைத்தானும், எஞ்ஞான்றும், யார்க்கும்

மனத்தால் உண்டாகும் துன்பத்தை மடியவிடல் வேண்டும்; பிறர்க்கின்னா செய்கின்ற பேதைமையைக் கைவிட வேண்டும்; ஒன்றாக நல்லதாய கொல்லாமையை நன்றாக எண்ணிப் போற்றிக் கொள்ளவேண்டும்; நெருநல் உளனொருவன் இன்றில்லை என்னும் பெருமை யுணர்ந்து யாவர்க்கும் இனிமையாய் நடந்துகொள்ளுதல் வேண்டும்; யான் எனது என்னும் செருக்கினை அறுக்க வேண்டும்; காமம் வெகுளி மயக்கம் என்ற மூன்றையும் கடிந்து உண்மையை உணரவேண்டும்; தூய்மை என்பது அவாவின்மையை அறிந்தொழுக வேண்டும்; இருவேறு உலகத்து இயற்கை என்று எண்ணுகிற இயல்பு வேண்டும் என்றெல்லாம் இறைவனார் துறவிகட்குக் கட்டளையிடுகின்றார்.

வள்ளுவர் காலத்தே முடியாட்சியே இருந்தது. மக்களை நல்வழிப்படுத்த மன்னன் என்பானொருவன் இருந்தான். மக்களும் அவன்வழி நடக்கலாயினர். "மன்னனுயிர்த்தே மலர்தலை யுலகம்" என்று மாபெரும் புலவரும் கூறலாயினர். 'மன்னன் எவ்வழி அவ்வழி குடிகள்' என்ற செம்மொழியாட்டு எழுந்தது. இன்னார், இனியார் என்று பாராது ஒப்ப நாடி ஆள்வதற்குப் பண்பு எப்பொழுது உண்டாகும்? மன்னவன் மனத்தூய்மையுடையவனாக இருந்தால்தான் என்பது சொல்லாமலே விளங்கும். எனவே தான் 'இறைமாட்சி' எனும் அதிகாரத்தையே இயற்றியருளினர் இறைவனார். 'காட்சிக்கு எளியனாகவும், கடுஞ்சொல் இல்லாதவனாகவும், நெறிதவறாமல் குடிகளைக் காப்பாற்றும் பண்பு உடையவனாகவும் இருப்பவனே அரசனாவான்' என அறுதியிட்டுக் கூறுகின்றார்.

"முறைசெய்து காப்பாற்று மன்னவன் மக்கட்கு
இறையென்று வைக்கப் படும்"

என்பது குறளாகும். மேலும் அரசன் கடைப்பிடிக்கவேண்டிய கல்வி, கேள்வி, அறிவு முதலாய கொள்கைகளையும், இன்னும் பிற சாதனங்களையும் பொருட்பால் முழுவதும் கூறிச் செல்கின்றார். மனத்தூய்மையோடு "குணம் நாடிக் குற்றமும் நாடி அவற்றுள் மிகைநாடி மிக்க கொளும் ஆட்சியே" செங்கோலாட்சி என்று சிறப்பித்துச் சொல்லப்படும். செங்கோலாட்சியால் செம்மை மிகுந்து, வசையிலா வண்பயன் பெருகும்; வறுமை யொழிந்து, உழுதொழில் சிறந்து உலகமும் புரந்தோங்கும். அரசர், அமைச்சர், தூதுவர், ஒற்றர், நட்பினோர் ஆகியோர்கட்கும் உரிய அறங்களை ஓதிவைத்துள்ளார் உயர்தமிழ்ப் புலவர்.

"காதலிருவர் கருத்தொருமித்து ஆதரவுபட்டதே இன்பம்" என்றோதினர் ஒளவையார். 'ஒத்த நலனும், ஒத்த குணனும்,

ஒத்த கல்வியும் உடைய ஒருவனும் ஒருத்தியுமே வன தலைவியராதற்குத் தகுதியுடையோரெனத் தென்றமிழிலக்கணம் தெரிவிக்கின்றது. ‘அறிவாலும், திருவாலும், அளவிலாச் செல்வத்தாலும் ஒத்த கற்பரசியைக் கைவிட்டு மாதவியிடம் மகிழ்ந்திருந்தான் கோவலன்’ என சிந்தை கவரும் சிலம்பு செப்புகின்றது. மனத்தூய்மை பெற்றவனாகக் கோவலன் இருப்பானேயானால் மாற்றாளாய மாதவியிடத்தே மகிழ்ந்திருக்கமாட்டான்; மாசற்ற கற்புடைய கண்ணகியை மனங்கலங்க விட்டிருக்க மாட்டான். எனவே, தலைவன் தலைவியர் இருவரும் களவியல் முறையிலும், கற்பியல் நிலையிலும் மனத்தூய்மை பெற்றவர்களாக இருந்தால்தான் மாண்புடைய இன்பத்தைப் பெறமுடியும் என்று இன்பத்துப்பால் முழுவதும் எடுத்து இயம்புகின்றார் இறைவனார்.

இதுகாறும் கூறியவாற்றால் வள்ளுவர் கண்ட அறம் மனத்தூய்மையேயாகும் என்பதும், மனம் தூய்மைபெறும் தன்மையையே அறம், பொருள், இன்பம் என்ற அனைத்துப் பாலிலும் குறித்துச் செல்கின்றார் என்பதும் வெள்ளிடைமலை போல் விளங்கும். மனம் தூய்மையாக இருந்தால்தான் மொழி தூய்மைபெறும். மொழி தூய்மை பெற்றால் செயலும் தூய்மையடையும். அப்படிப்பட்ட மனம், ஒன்றை நினைக்குமேயானால் திண்ணமாக முடியும் என்பதைக் காந்தியடிகள் வாழ்க்கை நமக்குத் தெளிவுபடுத்தும்.

வள்ளுவர் வகுத்த குறளினை வேதம் என்றனர் சிலர்; முப்பால் என மொழிந்தனர் சிலர்; நீதிநூல் என நினைந்தனர் சிலர்; ஒழுக்க நூல் என ஓதினர் சிலர்; ஆன்ம நூல் எனப் பேசினர் சிலர்; வாழ்க்கை நூல் என வரைந்தனர் சிலர். ஆனால் செய்ந்நன்றியறிதலின் சிறப்பினைக் கூறவந்த அருந்தமிழ்ப் புலவராய ஆலத்தூர்கிழார் அறிஞர் கருத்தினை அழகாகப் போற்றுவதோடு, குறளுக்கு ‘அறம்’ என்றே பெயரிட்டு அழைக்கின்றமை அறிந்து மகிழ்தற்குரியதாகும். இதோ அவ் வரிகள்!

“செய்தி கொன்றோர்க்கு உய்தி யில்லென
அறம்பா டிற்றே ஆயிழை கணவ” (புறம்.)

# தாமிரவருணி

[திரு. சாலை இளந்திரையன், எம். ஏ., எம். லிட்.]

பொதியமலைப் பொங்கிவரும் வர்ணிப் பெண்ணே!
'பொகுபொகு'மென் நடைபயிலும் நளினக் கண்ணே!
புதியகலை புறப்பட்டால் மருங்கி லுள்ளார்
பூத்தவிழி மூடாமல் பார்த்து நிற்பார்;—
நதியழகே, நீநடக்க இருமருங்கும்
நகைமலரும் பயிர்முகங்கள் கோடி கோடி!
அதிகமழை இல்லாத போதும் தெண்ணீர்
அழகுநடம் பயின்றிடுவா யன்றோ நீதான்! (க)

கதிர்குலுங்கும் மணிநெல்லும், வரப்பி லேறிக்
கவிகுலுக்கும் பசுந்தேரை நிரையும், காற்றின்
எதிர்நிமிரும் இளநாற்றும், உழவர் ஏரால்
இருநிலத்தைப் பிளந்துவளம் திறந்து காட்டும்
புதுக்கலையும், மடைதோறும் நுழையும் நீரும்,
பூஞ்சிரிப்பு மாங்குயிலார் தண்டைப் பாட்டும்—
எதுவரையில் செல்வாயோ அதுவரைக்கும்
இருமருங்கும் இடையறா நிகழ்ச்சி யன்றோ? (உ)

ஓடிவரும் உனையள்ளி அணைத்துக் கொள்ள
உளம்விரித்துக் கிடக்கின்ற குளங்களுக்குப்,
பாடிவந்து சேதிசொல்லும் முகிலும் அங்கே
பழந்தமிழர் பொதியமலை தன்னில் உன்னை(ரு)
ஆடிவிளை யாடுகின்ற தோழி யோ? உன்
அரண்மனையின் சேவகியோ? வரும்போ துன்றன்
கூடஅவள் வருவதில்லை;—மாறு வேடக்
கூத்தாட்டோ, நீரிருவர் செய்யும் கோலம்? (ங)

தீந்தமிழர் உணவினுக்குப் பசுமை காட்டிச்,
செழுங்கரும்புக் கணுக்களிலே இனிமை தேக்கி,
நீந்திவரும் கயல்களெலாம் மின்னல் வீச,
நிறைந்துவரும் மங்கையரும் அதையே வீசச்
சாந்தநடை பயில்கின்ற தமிழப் பெண்ணே!
'தண்பொருநை'ப் பெயர்பூண்டு பொதியை நாட்டைத்
தேர்ந்தெடுத்தாய் விளையாட, வளங்கள் தேக்க!
திரைக்கடலங் குனை எண்ணி ஏங்கு தம்மா! (ச)

# மெய்யுணர்வுத் திருவினர் பாரதியார்

ந. வை. தட்சிணாமூர்த்தி, எம்.ஏ.]

*தமிழ் நிலத்தில் எத்தனையோ கவிஞர்கள், உரை நடை எழுத்தாளர்கள் தோன்றியுள்ளார்கள். வேதாந்த ஞானிகள், சித்தாந்தப் பேரறிஞர்கள், இன்சுவை இலக்கியக் கருத்தாக்கள் ஆகிய எண்ணிறந்தோர் இப்பட்டியலுள் அடங்குகின்றனர். கவிஞர்கள் வேதாந்திகளாவதில்லை. வேதாந்திகள் கவிஞர்களாவதில்லை. கவிஞர்கள் உரைநடை வல்லுநர்களாவதில்லை. உரை நடை எழுத்தாளர்கள் கவிஞர்களாவதில்லை. ஆனால் மகாகவி பெருங்கவிஞன் மட்டுமல்ல; தலை சிறந்த உரைநடை எழுத்தாளனுமாவான். சிறுகதை, கட்டுரை, நாடகம், கவிதை ஆகிய பல துறைகளும் அவனிடம் சரணடைந்திருந்தன. இவை அனைத்தையும் மிஞ்சிப் பாரதியின் கவிதை, கட்டுரை போன்றவற்றில் வேதாந்தக் கருத்துக்கள் மிளிர்வதைக் காணலாம்.*

*அரசியல் வாதிகட்கு உலகியல் தெரியவேண்டும். கவிஞர்கட்கு உளவியல் தெரியவேண்டும். வேதாந்த ஞானிகட்கு உயிரியல் தெரியவேண்டும். பாரதி உலகியல், உளவியல், உயிரியல் மூன்றும் தெரிந்தவன். உலகியலறியாக் குழந்தைக்குச் சூது வாது தெரியாது. அனைத்தையும் அறிந்த ஞானி அறிந்து அறிந்தவற்றைப் பொருட்டாகக் கருதுவதில்லை.*

*ஒரு நாள் கடற்கரைக்குச் செல்லவேண்டும் என்ற எண்ணம் வருகின்றது. குதிரைவண்டியி லேறிக்கொண்டு கையில் பகவத் கீதையுடன் திருவல்லிக்கேணிக் கடற்கரையோரம் சென்றால் மகிழ்வாக இருக்கும். ஏழை பாரதியிடம் பணம் ஏது?.... வண்டி ஏது?.... குதிரை ஏது?.... கவிஞன் பாரதி கருதினான்! ஞானி பாரதி ஒரு ரதத்தில் ஏறிவிட்டான். பாரதி கற்பனையில் ஒரு ஞான ரதத்தைச் சமைத்து அதில் ஏறிப் பல உலகுகட்கும் கற்பனையாகப் பிரயாணம் செய்கிறான். அவன் நெட்டைக் கனவில் பட்டப் பகலில் மனத்திரையில் கண்ட காட்சிகள் கட்டுரைகளாக இன்று நம்கண்முன்னர்க் காட்சி தருகின்றன. சிறு குழந்தைகள் மண்ணைச் சோறாக்கி வந்தவர்க்கெல்லாம வரையாது வழங்கி மகிழ்வதுண்டு. அத்தகைய கற்பனை வாழ்வை வயதால் பெரியவர்களாகிய நாம் மேற்கொள்ள முடியாது. ஆனால் பாரதி கற்பனையில் ஞானரதத்தில் ஏறினான்; பல உலகங்களைக் கண்டான்; நம்மையும் காணுமாறு செய்கிறான்.*

*இறைவனும் உயிரும் ஒன்று; உயிரினங்கள் உணர்ந்து, நெறிநின்றால் இறைநெறி யடையலாம். விருப்பு வெறுப்பற்ற*

..... ஏற்பட்டுவிட்டால் மனிதன் உலகைப் பொருட்டாகக் கருது வதில்லை. விருப்பு வெறுப்பற்ற ஞான நிலையே சீவன் முக்த நிலை. சீவன் முக்த நிலையை அடைந்தவரே இறைவனையும் தன்னையும் அறிந்தவர் என்பதெல்லாம் வேதாந்தக் கருத்துக்கள். இக் கருத் துக்களே பாரதியை ஞானரதத்தில் ஏற்றின. பாரதியின் கவிதை களில் வரும் வேதாந்தக் கருத்துக்கள் தோற்றத்திற்கு எளிமை யாய்த் தோன்றும். ஆராய்ச்சியாளர்க்கு அருமையாய்ப் புரியும். பாரதியின் ஞானப் பாடல்களிலும், குயில் பாட்டிலுந்தான் வேதாந்தம் இருக்கிறது என்பார் சிலர். தொகைநிலையாகப் பாரதியின் கவிதைகள் அனைத்திலுமே வேதாந்தம் மணப்பதை நாம் எளிதில் அறிவதில்லை

தமிழகத்தின் பெருமையைப் பாடும்பொழுது "வேதம் நிறைந்த தமிழ் நாடு" என்றும் பாரத நாட்டைப் பாடும் பொழுது........

"ஞானத்திலே பரமோனத்திலே" சிறந்த நாடென்றும் பாரதி பாடுவதெல்லாம் வேதாந்தக் கண்கொண்டுதான். பாரத மாதாவைப் பாரதி பாட எண்ணுகின்றான். "முன்னை இலங்கை அரக்கர் ஒழிய முடித்த வில் யாருடை வில்" என வினவிப் பாட்டுத் தொடங்குகிறது. இடையே

"ஒன்று பரம்பொருள் நாம் அதன் மக்கள்
உலகின்பக் கேணி என்றே—மிக
நன்று பல்வேதம் வரைந்த கை பாரத
நாயகி தன் திருக்கை"......

என மேற்கோளிட்டுப் பாடுகிறான். உலகில் இன்பத்தைப் பெறலாம்; பரம்பொருள் ஒன்றே; நாம் அதன் மக்கள் என்பதனை உணரவேண்டும் எனப் பெருமைப்பட வேத நெறியை எளிய முறையில் விளக்குகின்றான்.

"பாரத சமுதாயம் வாழ்கவே" எனச் சமுதாயத்தை வாழ்த் திப் பாடும்பொழுது....

"எல்லா உயிர்களிலும் நானே இருக்கிறேன்" என்றுரைத் தான் கண்ண பெருமான் என்று வேதாந்திகள் போற்றும் "தத்துவமசி" வாக்கியத்தைத் தமிழாக்கிக் காட்டுகிறான். பரம் பொருளுக்கும் இறைவனுக்கும் உள்ள தொடர்பை, வேதாந்தக் கருத்துக்களைப் பாரதி தேசியப் பாடல்களிற்கூடப் பாடியிருக் கிறான். பாரதி வேதாந்த ஞானி ஆகையால் அவனுடைய கருத் துக்கள் எல்லாவகைப் பாடல்களிலும் புகுந்துவிட்டன. மேற் கண்ட பாட்டுக்கள் யாவும் தேசியப் பாடல்களில் கண்டவையே.

பாரதி பராசக்தி முதல் சரசுவதி, காளி, விநாயகர் போன்ற பல தெய்வங்களையும் பாடியுள்ளான். அத்தோத்திரப் பாடல்களில் வரும் வேதாந்தக் கருத்துக்கள் படிக்கும் பொழுது நம் கருத்திற் படுவது இயற்கை. இறைவன் ஒருவன் எனக் கூறிப் பாரதி ஏன் பல தெய்வங்களைப் பாடினான்?

"ஆயிரம் தெய்வங்கள் உண்டென்று தேடி
அலையும் அறிவிலிகாள்"......

என்று பாடிய பாரதி எப்படி வேதாந்தியாவான் என்றெல்லாம் எண்ணத் தோன்றுகிறது நமக்கு. பாரதி முன்னோர் மொழி வேதாந்தத்தைப் பொன்னேபோல் போற்றிப் பின்னொரு விளக்கம் தருகிறான். தெய்வம் ஒன்றுதான்; அதைப் பலர் பல பெயரால் அழைப்பர் என்ற கருத்தை,

"நாரணனென்று பழவேதம்—சொல்லும்
நாயகன் சக்திதரும் பாதம்
சேரத்தவம் புரிந்து பெறுவார்—இங்கு
செல்வம் அறிவு சிவபோதம்"......

என்று சக்தி விளக்கம் என்ற தலைப்பில் பாடுகிறான். சக்தி, நாரணன், சிவன் என்பதெல்லாம் அந்த ஒரே தெய்வத்தைத் தான். அந்த ஒரே தெய்வந்தான் அறிவென்பது. அவ்வறிவு சிவம் என்பது என வரும் அரும் பொருளை எளிமையாகப் பாடி விட்டான். கைவல்யம் போன்ற சாத்திரங்கள் விளக்க முடியாப் பொருளை இலக்கியச் சுவையோடு பாரதி எளிதாக விளக்கி விட்டான். காளிப்பாட்டில்,

"யாதுமாகி நின்றாய்—காளி
எங்கும் நீ நிறைந்தாய்"

என்று அங்கிங் கெனாதபடி எங்கும் நிறையும் இறைத்தன்மையை விளக்குகின்றான். மகா சக்தி பஞ்சகம் பாடும் பொழுது....

"மாசுறு பொய் நட்பதனிலும், பன்னாள்
மயங்கினேன்; அவையினு மதியேன்;
தேசுறு நீல நிறத்தினாள்; அறிவாய்ச்
சிந்தையில் குலவிடு திறத்தாள்."

என்கிறான். உலகை மாயை சூழ்ந்துள்ளது. மாயையாகிய பொய்ம்மை வாழ்வில் மயங்குபவர்க்கு இறை நெறி தெரிவதில்லை. அறிவு மேம்பட மேம்பட மனிதன் உணர்கிறான். அத் தெய்வ உணர்ச்சியே அவனது அறிவு. அவ்வறிவு மேம்பாடே இறைவனை அறிதல் என வேதாந்தத்தை வாழ்க்கையோடு ஒப்புக்காட்டு

கிறுன். தத்துவங்கள் வாழ்க்கையோடு ஒட்டியவை; வாழ்க்கைக்கு வழி காட்டுபவை என்பதை யெல்லாம் நயம்பட, சொல், முறையில் விளக்குகின்ற பாரதியின் கவிதைநெறியை வேறு யாரும் கைவரப்பெற்ருரில்லை.

"பவத்தினை வெறுப்ப அருளினன்; நானும்
பான்மை கொன்றவள் மயம் புரிந்தாள்."

என்று மேலும் அமுத பஞ்சகத்தில் பாடும்போது முற்பிறவி அனுபவங்களை மறந்து நான் யார்? என் உள்ளம் யார்? என வருகின்ற அகந்தையையும் முற்பவ வினைகளையும் போக்குதற்கு அருள் கிடைக்கின்றது. அகந்தை அழிந்து முற்பவ வினையொழிந்தவுடன் அறிவு தலைப்படுகின்றது. அவ்வறிவே இறைவன் இறைவியெல்லாம். அகந்தை ஒழிந்தவுடன் அவர் மயமாகின்றது. அவர் மயம் என்பது இறைவன்மயம். அதுவே அறிவு மயம் என்பது. பார்ப்பதற்கு எளிமையான வரிகளாயமையினும் பொருட்செறிவு எண்ணி எண்ணி இன்புறத்தக்கது. பாட்டில் இருப்பது வேதாந்தக் கருத்து. அதை வேதாந்தம் என்று தெரியாது பாடுகின்ருன். பாட்டின் போக்கில் கவிதை இன்பம் ஊட்டி உள்ளுறை பொருளுக்கு உரத்தைத் தருகிருன்.

"விண்டுரைக்க அறிய அரியதாய்
விரிந்தவான வெளியென நின்றனை
அண்டகோடிகள் வானில் அமைத்தனை
அவற்றில் எண்ணற்ற வேகம் சமைத்தனை."

என்பது பாரதியின் தோற்றக் கொள்கை. விஞ்ஞானிகளால் விளம்ப முடியாத அளவு தோன்றி விளங்கும் அண்ட கோளங்களின் அமைப்பை அதன் ஆக்கத்தை விளக்குவனவே மேற்கண்ட அடிகள். கடிகாரத்தை மனிதன் கண்டுபிடித்தது அறிவின் சக்தியால். அதற்கு வேகத்தை ஊட்டியது அறிவின் சக்தியே. அதுபோலவே அண்டத்தைப் படைத்து அதுவுமவைப் படைத்து அதனூடே வேகஞ் சமைத்ததும் அறிவே. அவ்வறிவே தெய்வம். அவ்வறிவே எல்லாம் என்பதே பாரதியின் விளக்கம்.

இறைவனுக் கப்பாற் பட்ட சக்தி மனிதனுக்கில்லை. எல்லாச் செயல்கட்கும், இறைவன் ஆதாரம் என்பதே:

"ஆதாரம் சக்தி யென்றே
அருமறைகள் கூறும்
யாதானுந்தொழில் புரிவோம்
யாதுமவள் தொழிலாம்"

முத்து மாரிப் பாட்டில் கூறுகின்ருர்.

உலகம் ஐம்பூதச் சேர்க்கையால் ஆயது. அவ்வைம்பூத )யக்கம் இறைவனை அடிக்கொண்டெழுவது என்பதை

'ஆகாசந் தீகால்
அத்தனை பூதமும் ஒத்து நிறைந்தாய்
ஏகாமிர்த மாகிய நின்தாள்
ரசரணென்றான் இதுமுடியாது".

சாகாவரப் பாட்டால் கூறுகிறார். நின் தாள் இணை சரண் என்ற தனித் தொடரில் அத்வைத நெறியின் விளக்கம் பொதிந்து கிடக்கின்றது. இறைவனே நீயே கதி என இரண்டறச் செயலற்று அடி சேரும் நெறியை இவ்வளவு அழகாகப் பாடுகின்றார்.

உயிருக்கு அல்லது மனிதனுக்கு ஆற்றலில்லை. இறைவன் காட்டக் காணும் சக்தியுடையது. யான், எனதென்னும் அகந் தையைப் போக்கிக்கொண்டு இறையருள் அறிவிக்கத் தான் அறிய முடியும் என்பதை உட்கொண்டு,

"எளியனேன் யானெனன்பதனை எப்போது
போக்கிடுவாய்"......

என்று பாரதி கோவிந்தனை வேண்டுகிறார்.

பாரதியின்   ்வததுக்கும இனனும விளக்கம தரு "வருவாய் கண்ணா" என்ற கண்ணன் பாட்டு. சிவன் வேறு விஷ்ணு வேறு என்று பூசலிடும் மக்கட்கு அறிவு புகட்டு முகத்தான்....

"தொழுவேன் சிவனும் நினையே—கண்ணா
துணையே, அமரர் தொழும் வானவனே"

என்று பாடுகின்றார். கண்ணா நீயே சிவன், நீயே எனக்குத் துணை; உன்னையே அமரர்களும் தொழுகிறார்கள்; நானும் தொழு கிறேன், என்று பாரதி பாடுவதைக் கேட்கும்போது "அரியும் சிவனும் ஒன்று; அறியாதவன் வாயில் மண்" என்னும் பழ மொழியைப் பன்முறையும் நம் வாய் ஒலிக்கத் தொடங்கு

உண்மடனகிறா; அவன எஙகிருக்கிறான்? காட்டுங்கள்! என்று கேட்பவர்க்குப் பாரதி பதில் தருகிறான் விஞ்ஞானிகள் காயைக் கண்டார்கள். அதன் உள்ளிருக்கும் புளிப்பையும், இனிப்பையும் கண்டார்கள். ஆனால் அதன் மாற்றத் தின் காரணத்தை, தோற்றத்தின் வித்தை விளக்கினார்களில்லை. பாரதி வினவுகிறான். வினாவிலேயே விடை கிடைக்கின்றது.

"காயிலே புளிப்பதென்ன?
r!—நீ
கனியிலே இனிப்பதென்ன?
கண்ணபெருமானே."

என்று தொடங்கி இறைவன் உயிர்களில் பொருள்களில் இயங்கும் இயக்கத்தை விளக்குகின்றார். காக்கைச் சிறகினும், பாக்குமரத்தில் பார்க்குமிடங்களெல்லாம், இறைவன் இருப்பதைப் பாரதியின் லாலாப் பாட்டுக் கூறும். இறைவன் என்றால் எல்லாம் ஒன்றே என்பதை வலியுறுத்துமுகத்தான்

"தவறுதுணர்வீர் புவியீர் மாலும்
சிவனும் வானோர் எவரும் ஒன்றே
ஒன்றே பலவாய் நின்றோர் சக்தி
என்றுந்திகழும் குன்று வொளியே"

என்று கண்ணன் திருவடியைப் பாடுகின்றார். இறைவன் காலம் நாமம் கடந்தவன். அவன், அவள், அது, அவை என்னும் பகுப்பையும் கடந்தவன். அவனே குன்றுத பேரொளி என்பதே அதன் கருத்து.

மனிதனுக்கு அறிவு ஐயங்கள் தீர்ந்த பிறகே மூகிழ்க்கின்றது. அவ்வறிவே தெய்வம். அத்தெய்வ வலியின்றி வையமில்லை, என்ற கருத்தை,

"வையமெல்லாம் தெய்வ வலியின்றி வேறில்லை
ஐயமெலாந் தீர்ந்த தறிவு."

என்று விடுதலை வெண்பாவில் குறிப்பிடுகின்றான்.

"காக்கை குருவி எங்கள் ஜாதி—நீள்
கடலும் மலையும் எங்கள் கூடம்"

எனப் பேரிகை கொட்டும் பொழுது உலகப்பாட்டில் கவிஞன் கண்ட ஒற்றுமை வேற்றுமைகளில் எல்லைக்கோடு தெரிகின்றது. பாரதி மாயையைப் பற்றி "மாயையைப் பழித்தல்" என்ற தலைப்பிலேயே ஒரு பாட்டுப் பாடியிருக்கிறான்.

"ஆயிரந் தெய்வங்கள்" எனத் தொடங்கும் பாட்டில் "அறிவே சிவம்" சாந்த நிலையே வேதாந்தநிலை. இறைவன் உயிரின் உணர்வே என்ற கருத்துக்களை எளிதாகத் தெளிவுபடுத்துகிறான். இறைவனின் நிலையை,

"எல்லை பிரிவற்றதுவாய்
யாதெனுமோர் பற்றிலதாய்
இல்லையுள தென்றறிஞர்
என்றுமயலெய்துவாய்"...

நப்பதாகப் பரசிவ வெள்ளம் என்ற தலைப்பில் கூறுகின்றார். இறைவனுக்கு எல்லையில்லை, பிரிவில்லை, பற்றுக்கோடில்லை. இறைவன் இல்லை என்றும் கூறமுடியாது; இருக்கிறானென்றும் கூறமுடியாது. விளக்கமுடியாது; பரம்பொருளே அது, எனப் புகலும் விளக்கம் பிற ஞானிகள் எளிதில் விளக்காதது. தூல அணுக்களாய், சூக்குமமாய் சூக்குமத்திற்குச் சூக்குமமாய் இருக்கும் இறைவனை இவ்வாறு விளக்கிய பாரதி பெரும் வேதாந்தக் என்பதில் ஐயமேது?

"மலமற்றார் துன்பமற்றார்"

"காவித்துணி வேண்டா கற்றைச சடை வேண்டா
பாவித்தல் போதும் பரமநிலை யெய்தற்கே"

என்றெல்லாம் சீவன் முத்த நிலையை விளக்கிப் பாடும் திறனை மக்கள் எளிதில் உணரவில்லை. பாரதி பெண்கள், சமுதாயம் போன்றவற்றில் மட்டும் சீர்திருத்தம் வேண்டவில்லை. சமயத்திலும் திருத்தம் வேண்டினான்.

ஆரோபம், அத்தியாசம், கற்பனை என்றெல்லாம் தத்துவ சாத்திரங்கள் கூறுவதை,

"நிற்பதுவே நடப்பதுவே பறப்பதுவே நீங்களெல்லாம்
சொற்பனந்தானோ?—பல தோற்ற மயக்கங்களோ
கற்பதுவே கேட்பதுவே கருதுவதே நீங்களெல்லாம்
அற்ப மாயைகளோ?—உம்முள் ஆழ்ந்த பொருளில்லையோ?"

எனப் பாடுகின்றார். தோற்றப்பொலிவுடையது. அதன் நுண்மையினால் எளிதில் அறிவதில்லை. நுண்மை அறிந்தவன் சீவன் முத்தனாகின்றான் என்பதே இதன் கருத்து.

பாரதியின் கவிதைகள் சிலவற்றை மேற்போக்காகக் காணும் பொழுதே இவ்வாறு திண்மையான வேதாந்தக் கொள்கை விளங்குகின்றது. குயில்பாட்டு, ஞானரதம், கட்டுரைகள் போன்றவற்றுள் நுழைந்துவிட்டால் பாரதி தேசிய வாதி, கட்டுரையாளன், கவிஞன் என்பதையெல்லாம் மறந்து பாரதி வேதாந்த ஞானிதான். அஞ்ஞானத்தில்தாம் யாவும் பிறந்தன என்று நாம் கூறுவதற்குத் தடையே இராது. நாடு பாரதியின் பாதையைப் பின்பற்றவேண்டும். சமயம், இலக்கியம், சமுதாயம் ஆகிய பல்துறையிலும் பாரதியைப் பின்பற்றினால் பாரதநாடு பாரதிகாணும் போக பூமியாகவே மாறும் என்பது உ

பார ின் தத்துவக் கொள்கை !!

# புதுமைக்கு...

[வித்துவான் திரு. சொ. சிங்காரவேலனர், B.A.]

அன்புள்ள புதுமைக்கு,

நீ எழுதிய கடிதம் கிடைத்தது. நீ கூறியிருந்த சில வார்த்தைகளை என்னால் என்றும் மறக்க முடியாது. ஆம். நண்பர் மறுமலர்ச்சி தமிழில் உள்ள சில பனுவல்களைக் குறித்து எள்ளி நகையாடியிருந்ததாக அறிந்து மிகவும் வருந்தினேன். தமிழில் உள்ள இலக்கண நூல்கள் அனைத்தும் வாழ்விற்குப் பயன்படாதவை. அவை வெறும் எழுத்துக் குவியல்களே. அவற்றை மனப்பாடம் செய்வது வாழ்வில் ஒரு பயனும் இல்லை. அத்தகைய இலக்கணங்களாகிய தொல்காப்பியம் போன்றவை தமிழைக் கெடுத்தனவே யன்றி வளர்த்தன வல்ல. 'அகத்தியர் காப்பியர்கள் கெடுப்பினும் கெடாது நெஞ்சக் கிளை தொத்தும் கிளியாக' உள்ளாள் செந்தமிழ் அன்னை. அப்பனுவல்களை மீண்டும் பயின்று தமிழ் கூறும் மக்களுக்கு ஊறு விளைத்தல் ஒல்லுவதன்று' என்று அவர் கூறியதை அப்படியே எழுதிவிட்டு, 'இக்கூற்றுச் சற்றேறக் குறைய என் கருத்தைத் தழுவியதே' என்று அடிக்குறிப்பிட்டுக் காட்டியிருந்தாய். இதற்கு ஒரு விளக்கம் தந்து, நண்பர் மறுமலர்ச்சியின் கருத்து உண்மைக்குப் புறம்பானது என்பதை இங்கு விளக்க எண்ணுகிறேன்.

இலக்கணம் வாழ்வியற்குப் பயன்படவில்லை என்று கூறுகின்றவர் சிறிதும் சிந்தியாது பேசுகின்றனர். இலக்கணம் என்பது இன்னது என்றறியாத பேதைமையே இதற்குக் காரணம். நினைவு, மொழி, செயல்களாலாகியதே வாழ்வு அன்றோ? இவற்றுள் மொழி என்பது நடுவண் நின்று முன்னுள்ள நினைவிற்கும், பின்னுள்ள செயலுக்கும் அடியாய் நிற்பதாகும். நினைக்காமல் மொழிய இயலாது. நினைவும் மொழியும் இன்றிப் பெரும்பாலும் செயல் பிறப்பதில்லை. இம்மூன்றையும் ஒழுங்கு படுத்தும் உயர்ந்த குறிக்கோளைக் கொண்டதே இலக்கணம். தமிழ் மக்கள் செய்த தவப்பேறாய்த் தோன்றிய தொல்காப்பியம் இதற்குச் சீரிய எடுத்துக்காட்டாகும். தொல்காப்பியர் இதனை மொழியிலக்கணமாக மட்டும் செய்யவில்லை. மக்கள் வாழ்வு நெறிக்கேற்ற மாண்பொருள்களை உரைக்கும் திருநூலாகவும் யாத்துள்ளார். தம்பி, புதுமை! இலக்கணம் என்ற பெயரைக் கேட்டவுடனேயே அதனைத் தவறான கண்ணோட்டத்துடன் பார்க்கலாகாது. நன்கு ஆழ்ந்து பாராது அதைப்பற்றிய முடிவைப்

புதுமைக்கு.

பலரும் அறிய வெளியிட்டுவிடலாகாது. மறுமலர்ச்சி (
ஸ்யைச் சேர்ந்தவரே. அவர் கூற்றிலே இந்தக் குறைபா

தொல்காப்பியம் மக்கள் வாழ்க்கைக்கு உகந்த சீரிய உண்மைகளை விளக்குகின்றது. எவ்வாறு தூய நினைவு கொண்டு வாழ்வது, எவ்வாறு தூய மொழி கொண்டு உரைப்பது என்பன போன்ற விதி முறைகளை இந்நூலிற் காணலாம். ஆராய்ச்சி வல்லுநர் கருத்துப்படி கி. மு. 5 ஆம் நூற்றாண்டிற்கு முற்பட்ட நூலாகிய இதன்கண் அமைந்த நுட்பங்களை உணரும்போது பழங்காலத் தமிழரின் பண்பட்ட இயன்முறையை நன்கறிய முடிகிறது.

எழுத்து, சொல், பொருள் என்று வகுத்துக் கொண்டதே ஆசிரியரின் பேரருள் சான்ற புலமையைக் காட்டுகின்றது. நெஞ்சுள் நிகழும் நிகழ்ச்சியாக—உந்தி முதலா முந்துவளி தோன்றித் தலை, மிடறு, நெஞ்சில் நிலை பெற்றுப் பின்னர் பல், இதழ், நா, மூக்கு, அண்ணம் ஆகியவற்றின் உறுப்புற்றமையப் பிறப்பின் ஆக்கம் வேறுவேறு இயல்புடையதாய்த் திகழ்கின்றது. (நூற்பா ௮௩). இவ்வொலிவடிவு வரிவடிவாக எழுதப்படும்போது எழுத்தாகி, அவ்வெழுத்து ஒன்றும் பலவுமாய் நின்று சொல்லாகி, அச்சொல் பொருள் குறிக்கும் நிலைமையை இப்பனுவல் பேசுகின்றது. இறைவன் அருவநிலையினின்று உருவ நிலைக்குப் போந்து உயிர்களுக்கு அருள் புரியும் நிலையை இது நினைப்பூட்டுவதாகும்.

அந்தணர் மறையில் காணும் யோகநெறி பற்றியும் தொல்காப்பியர் குறிக்கின்றார் (நூற்பா ௧௦௨). அதனை 'அகத்தெழு வளியிசை' என்கின்றார். அதனை 'அரில்தப நாடி அளபிற் கோடலும் உண்டு' என்றும் குறித்துள்ளார்.

இறைவன் திணை கடந்து, நிலம் கடந்து, சொல் கடந்து நிற்கும் இயல்புடையவன். அவ்விறைவனை எண்ணிப் பரவுதல் வாழ்வின் பயனாகக் கொண்டவர் தமிழராவர். ஆதலின் இறைவனைக் குறிக்குங்கால் குணமிலியாய்ப் பேரிலியாய்க் காண்டலே நெறி. இதனைத் 'தெய்வம் சுட்டிய பெயர்நிலைக் கிளவியும், இவ்வென அறியும் அந்தம் தமக்கிலவே' என்று (நூற்பா ௪௮௭) கூறியுள்ளார். 'காலம், உலகம், உயிர், உடம்பு, பால்வரை தெய்வம், வினை, பூதம், ஞாயிறு, திங்கள், சொல்' என வரும் நூற்பாவில் உலக இயல்பைச் சுட்டிக் காட்டி வாழவேண்டிய வழியினை நன்கு காட்டி யுள்ளமை நன்குணர்தற்குரிய வொன்றாகும். (நூற்பா ௫௪௧)

இயற்கை இது என்பதை நன்கு உணர்ந்து தமை உடைமை யுள் முறைமையின் நிலைத்தது இதுவென்றுணர்ந்து, அதனையே கிழமையாகக் கொண்டு வினையின் ஆற்றலைத் தெரிந்து மெய்ப் பொருள் கண்டு வாழுக என்று அறிவுறுப்பது போன்று அமைந் துள்ளது ஒரு நூற்பா (௫௯௪). கண்ணால் மட்டும் நோக்குதல் ஒரு பொருளை நன்குணர்தற்கு வாய்ப்பாகாது. கருத்தாலும் நோக்க வேண்டும் என்று அறிவுறுத்தி அவ்வாறு கருத்தால் நோக்குதலை 'நோக்கல் நோக்கம்' (நூற்பா ௫௭௭) என்று அருளி யுள்ளது எவ்வளவு பெரிய வாழ்வியல் உண்மை! கண்ணால் நோக்கிக் கருத்தால் நோக்காத கசடர்க்கு இது ஓர் அறிவுரை அன்றோ? இன்னோரன்ன மெய்ந்நெறி காட்டும் தொல்காப் பியமா வாழ்வியற்குப் பயன்படாது என்கிறாய்?

பொருள் குறிக்காத சொல்லே இல்லை. 'எல்லாச் சொல் லும் பொருள் குறித்தனவே' (நூற்பா ௯௪௦) என்கின்றார். இறை வன் உறையாத அணுவும் இல்லை அன்றோ? இம்மெய்ப் பொருளை நினைவூட்டும் பகுதியாக இதனைக் கொள்ளலாம்; ஆனால் அப்பொருட்குற்ற காரணத்தை நன்கு ஆராய்ந்தும் காணவிய லாமையும் உண்டு என்று கூறும் 'மொழிப்பொருட் காரணம் விழிப்பத் தோன்றா' (நூற்பா ௮௭௭) என்பது இறைவனை அறியும் செவ்வி அரியது என விளக்குவதாக அமைந்துள்ளது. ஆயினும் அறியும் முறையில் அறிந்தால் அவ்வியல்பையும் அறிந்து விட லாம். 'உணர்ச்சி வாயில் உணர்வோர் வலித்து' (நூற்பா ௮௭௯) என்பதே அதற்குச் சான்று ஆகும்.

தொல்காப்பியப் பொருளதிகாரத்தைவிட வாழ்வியல் நெறி காட்டும் வேறு நூலுண்டோ? அகத்திணையிற் சிறந்த மனிதன் புற உலகிலும் நெறியொடு வாழ்ந்து, அறநெறியாகிய களவுநெறி யாலோ அன்றிக் கற்புநெறியாலோ இன்பம் துய்த்து மெய்ப் பொருள் காண்டல் வேண்டும். தன்கண் தோன்றும் மெய்ப் பாடுகளைச் சமப்படுத்தி உவமைநல முதலிய செய்யுளாராய்ச்சி தலைப்பட்டு மரபுணர்ந்து வாழ்தல் வேண்டும். இதுவன்றோ பொருளதிகார இயல்களை ஒரு முறைமையிற் காணுமிடத்துக் கொளத்தக்க மெய்ம்மை யாகும்?

ஆங்காங்கு மிகப்பெருஞ்சீரிய கருத்துக்கள் பலவற்றைக் காண்கின்றோம். ஆனால் ஆழ்ந்து படித்தல் வேண்டும். மாயோ னும், சேயோனும், இந்திரனும், வருணனும் ஆகிய கடவுளரை நன்கு வழிபட்டு உய்தல் வேண்டும் என்கின்றார். (நூற்பா ௯௫௧) இன்பத்தை உறுதிப்படுத்தும் பிரிவுமுறைகள் பலவற்றைக் காட்டி யுள்ளார். 'வாழ்நாள் சிறிது என்பதுணர்ந்து, இளமை அருமை உடைமை என்றறிந்து, முயற்சியுடன் தகுதிக்கேற்பப் பொருள்

தேட வேண்டும். ஏனெனில் வறுமை மிக இழிந்தது; உடைமை உயர்ந்தது அன்புடைமை மிக விரிந்தது' என்று கூறும் (நூற்பா ௬அஎ) பகுதியைவிடச் சிறந்த அறிவுரை வேறு இருக்கமுடியுமா?

கைக்கிளை, பெருந்திணைகளாகிய மிகத் தாழ்ந்த நிலைகளைக் காட்டி அவற்றை விலக்கி 'இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு அன்பொடு புணர்ந்த ஐந்திணை வாழ்வே வாழ்வு' என நிறுவியுள்ளார். 'பிண்டம் மேய பெருஞ்சோற்றுநிலை'யைப் போற்றியுள்ளார். 'துகள் தபு சிறப்பின் சான்றோரை'யும், 'எட்டு வகை நுதலிய அவையத்தாரை'யும் போற்றுகின்றார்.

'உயிரைவிட நாணம் சிறந்தது பெண்டிர்க்கு; அந்நாணினும் கற்புச் சிறந்தது' என்று (நூற்பா ௧௦௫௬) கூறும் பகுதி எத்தனை பெரிய உண்மை! பெண்டிர் வாழ்விற்கு இதனினும் வேறு அறவுரை வேண்டுமோ?

நெஞ்சம் அறத்தையே விரும்பிப் போற்றி நினைதல் வேண்டும் என்று அறிவுறுப்பவராய் 'அறம்புரி நெஞ்சமொடு' (நூற்பா ௧௦௬௫) என உரைக்கும் பகுதியை மறத்தலுங் கூடுமோ? வாழ்வுக்குப் பயன்படாது என்பார் வாய்ப்பறை பொய்ப்பறையே யென்பதனை நன்கு விளங்க இதைப்போன்ற பல்வேறிடங்களைக் காட்டவியலும்.

ஒரு தலைவியின் பேச்சு எவ்வண்ணமிருத்தல் வேண்டும் எனின், தொல்காப்பியர் மொழியைக் கேள்: 'அருள் முந்துறுத்த அன்புபொதி கிளவி, பொருள்பட மொழிதல் கிழவோட்கும் உரித்தே' (நூற்பா ௧௧௦எ) இத்தகைய மொழி படைத்தவளாய் ஒரு குடும்பத் தலைவி இருப்பாளாயின் அதுவன்றோ வீட்டுலகம்! தலைவனுக்கு முன்னால் அவள் தற்புகழ்ச்சி செய்து கொள்ளவே கூடாது (நூற்பா ௧௧௨௬) என்பதும் நல்ல அறிவுரையே.

'காமம் சான்ற கடைக்கோட் காலை ஏமம் சான்ற மக்களொடு துவன்றி, அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும், சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே' (நூற்பா ௧௧௫அ) வாழ்வின் நிறைவு காட்டும் நிறைமொழி அன்றோ?

உடைமை, இன்புறல், நடுவுநிலை, அருளல் முதலிய நற்பண்புகளொடு வாழ்தல் வேண்டும். நிம்பிரி, கொடுமை, வியப்பு, புறஞ்சொல் முதலாகத் தொடங்கும் தீப்பண்புகளை விட்டொழிக்க வேண்டும்.

நெறிநின்று வாழ்வானை 'வழிபடு தெய்வமே காத்து நிற்கும்; பழிதீர்ந்த செல்வம் அணுகிப் பணி புரியும்; அவன் மரபு வழி வழி வாழும்' என்று (நூற்பா ௧௫௬எ) பயன் கூறுவது போன்று

அருள்கின்றார். சான்றோர் வாய்மொழி வேம்பும், கடுவும் போன்று கைப்பினும், விளைவில் இனிதாகும். அதனை வாயுறை வாழ்த்து என்பர் (நூற்பா கஙசுகூ). உயர்ந்தவர் நடுவில் அடங்கி வாழ்ந்து நலம் அடைக என்பதைச் செவியுறுஉ என்பர். (நூற்பா கஙஎக)

காணுகின்ற உலகம், 'நிலந் தீ நீர் வளி விசும்போடு ஐந்தும் கலந்த மயக்கம்' (நூற்பா கருஅகூ) என்ற உணர்வொடு, 'வினையின் நீங்கி விளங்கிய அறிவின் முனைவனை' வழிபடுதல் வேண்டும் (நூற்பா கருகூச) என்றும் காட்டுகின்றார்.

இத்துணைச் சீரிய கருத்துக்களையும், இவற்றோடொத்த எனைப்பெருஞ் சீர்மைகளையும் உள்ளிட்டு எழுத்துச் சொற் பொருள் நெறிகளோடு வாழ்வியல் நெறியும் வகுத்தளிக்கும் தொல்காப்பியமா வாழ்விற்குப் பயன்படவில்லை? பயன்படுத்தாதது மக்களின் குறையே என்பதை வருத்தத்துடன் தெரிவிக்க [illegible]

தொல்காப்பியம் இயல் நெறியோடு இனிய பல நீர்மைகளையும் எடுத்து வழங்கி நம் அன்னைத் தமிழுக்கு அமைந்துள்ள அரண். அதனை நன்கு ஆழங்காற்பட்டுணர்ந்தோர் அதன்மாட்சி உணர்வர்.

'பாது கூறுவாயா, புதுமை!—உன் முடிவு என்ன வா ? படிக்காமல், நிழலுக்குக்கூட ஒதுங்காமல் 'பயனற்றது' என்று பேசுவது பண்பாகாது. உண்மையை உணரவும், உணர்த்தவும் வேண்டுமாயின் ஆழ்ந்து பயின்று அகழ்ந்தெடுக்க வேண்டும். இல்லையேல், அறிவுலகின் முன் அக் கருத்துச் செல்லாதென்பதை இனியேனும் உணர்வாய் என்றே நம்புகிறேன். தமிழனுக்குக் கிடைத்த தனிப்பெரும் பேறு தொல்காப்பியம். அதனை மீண்டும் மீண்டும் பயின்று கருத்துக் களை மனத்திற் பதித்துக்கொண்டு வாழ்தல் வேண்டும். நினைவு, மொழி, செயல்களில் அந்த நெறியில் தூய்மை நிலவுதல் வேண்டும்; முழுமை அடைந்து இன்புறுதல் வேண்டும்.

தொல்காப்பியத்தை முழுதும் பலமுறை படி; மறுமலர்ச்சியையும் நன்கு படிக்கும்படி தூண்டு. வாழ்வியலுக்கு அப்பாலுவல் வழங்கியுள்ள கருத்துக்களை அப்போதுதான் ஓரளவு உணர முடியும். வழக்கம்போல், உனக்குத் தோன்றும் எத்தரப்பட்ட ஐயங்களையும் நான் தெளிவிக்க முற்படுவேன்.

உனது

பழமை.

# பண்டைக் கிரேக்க ஞானியரும் பண்டைப் பிரித்தானியரும்[1]

[வித்துவான் மாவை. துரை. பழநி மகாதேவன், ஆம்பூர்]

"பண்டைப் பிரித்தானிய மக்கள் தம் உடலுக்கு வண்ணம் தீட்டிக்கொள்ளும் காட்டுமிராண்டியர்; அவர்கள் தம் உடலில் பச்சை குத்திக் கொண்டார்கள்; அவர்கள் மனிதப்பலி இடும் வழக்கத்தை மேற்கொண்டிருந்தனர்" என்ற சில பழியுரைகளைப் பண்டைப் பிரித்தானிய மக்கள் மீது சுமத்தி, அவர்கள் சமய உயர்வையும் பண்பாட்டையும் மக்களுக்குத் திரித்துக் கூறி இழிவு செய்தனர் வரலாற்று ஆசிரியர்கள். இங்ஙனம் இழித்துரைகளைக் கூறி, பண்டைப் பிரித்தானியர்மீது பிறர் வெறுப்புக் கொள்ளும் வண்ணம் செய்தவன் யார்? இங்ஙனம் கூறப்படும் செய்திகளுக்குச் சான்று யாது?[2] இவ்வாறு இட்டுக்கூறி இழிவு செய்தவன் சூலியசு சீசர்தான் (Julius Caesar). அவன் தனது நூலாகிய டி.பெல்லோ காலிகோ 6 ஆம் பகுதி உட்பிரிவு 1இல் துருயித்துகள் எனப்படும் பண்டைப் பிரித்தானியக் குருக்களைக் குறித்த சில செய்திகளைக் கூறியுள்ளான் என்பது உண்மையே ஆயினும், அவை அவன் கேள்வியுற்ற செய்திகளேயாகல் வேண்டும்; அன்றிப் பிறர் சொற்படி எழுதியிருத்தல் வேண்டும்; அன்றி முற்றிலும் நேராகப் பெறப்படாதனவாக இருத்தல் வேண்டும்.

சூலியசு சீசர் முதன்முதலாகக் கி. மு. 55இல் இங்கிலாந்தின் மீது படை தாங்கிச் சென்றான். சின்னாள் ஆங்குத் தங்கி, அந்நாள் பிரித்தானிய மக்களை வெல்ல இயலாமையின் தன் நாடு திரும்பினன். அடுத்த ஆண்டு மீண்டும் அங்குச் சென்றான்; தேம்சு ஆற்றைக் கடந்து சிற்றாரொன்றைத் தீக்கொளுவினன். அஞ்சிய அரசிளங்குமரர் சிலர் திறைப் பொருள் தர, அவற்றைப் பெற்றபின், காலில் (Gaul) குழப்பங்கள் நிகழ்ந்ததன் விளைவாக உடனே தன் நாடு மீண்டான். ஆக, அவனிரு படையெழுச்சிகளும் முற்றிலும் தோல்வியில் முடிந்தன. ஈண்டுச் சிறப்பாக ஆழ்ந்து உன்னித்தற்குரிய செய்தி ஒன்றுள்ளது; யாங்கு துருயித்துகளின் கொள்கை (Druidsm) அதன் தூய்மையான நிலையில் விளங்கியதோ அந்தப் பகுதியாகிய உவேல்சுப் பகுதிக்கு (Wales) ஒரு முறைதானும் அவன் சென்றானில்லை. அவன் இங்கிலாந்தில்

1. De Bello Gallico-lib VI, c. I

2. சிலம்பு 34 பரல் 11இல் வந்த "பண்டைப் பிரித்தானியர் சைவ சமயத்தினரா?" என்பதனுடன் தொடர்புபடுத்திக் காண்க.

... மிகக் குறுகிய காலம்; துருயிதிசக் (Druidsm) கொள்கைகளை நிலைநாட்டிய துருயித்துகள் வாழ்க்கை நிலையையும் நேரில் கண்டறிந்தவனல்லன். அத்தகையவனோ அம் மக்களைக் குறித்தும் அவர்கள் சமயத்தினைக் குறித்தும் நூல் எழுதத் ... வாய்ந்தவன்?

உரோமாபுரியில் சூலியசு ஆளுகைக்குப்பின் 100 ஆண்டுகள் கழித்துக் கிளாடியசு சீசர் என்பான் அரசுகட்டில் ஏறினான். அந் நாளில் பிரித்தானியச் சாதியாரிடை நேர்ந்த குழப்பத்தால் அவர்களை வெல்ல முடிவுசெய்தான். அவன் சேனைத் தலைவன் கி. பி. 43இல் கெண்ட் (Kent) பகுதியையும், அதைச் சுற்றியிருந்த மாவட்டங்களையும் கைப்பற்றினான். பின் அம் மாமன்னனே பிரித்தனுக்கு வந்து இரு வாரங்கள் தங்கிப் பின் பிரித்தனை வென்றதன் அறிகுறியாக வெற்றிவிழா ஒன்று நடத்தினான். உரோம வீரர்கள் பிரித்தனில் தங்கத் தொடங்கியதை வெற்றி எனக் கொள்ளின், ...ீவைக் கைக்கொள்ள அவர்களுக்கு ஏறத்தாழ 200 ... எனலாம்.

பண்டைப் பிரித்தானியரைப் பற்றிய வரலாறுகளை எழுதினவர்களுள் தாசிதசு (Tacitus) என்ற வரலாற்றாசிரியனும் ஒருவன். உரோம ஆளுநனை (Governor) அகிரிகோலன் (Agricola) பிரித்தனை ஆண்டிருந்தான்; அவன் தன் மாமனாகையால் எவையும் அவன் சொற்படி எழுதவேண்டியவனானான் தாசிதசு. ஆகையினால், அவன் கூறும் கருத்துக்களை உண்மையென ஏற்றல் இயலாது.

மேலும் உரோம வீரர்கள் தமது வெற்றிக்கறிகுறியான மகிழ்ச்சிப் பெருவிழாவில் நிகழ்த்திய பல கொலைகளுக்குச் சான்றாக மோனே (Isle of Mona) என்னும் ஆங்கிலசத் தீவில் (Anglesey) நடந்த துருயித்துகள் கொலையைக் கூறலாம். அவர்கள் முருட்டு வாழ்வுக்கும் கல்நெஞ்சுக்கும் ஈடு எடுப்பே இல்லையென்று சொல்லலாம். அவர்கள் மணவினை நகைப்பிற்குரியதொரு செய்தியாகும். அவர்கள் இறந்த தங்கள் முன்னோர்களை வணங்கியதுடன், எண்ணற்ற தெய்வங்களை வணங்கினார்கள். அந்நாள் கிரேக்க மக்களைப்போலச் சிறந்த தத்துவ ஞானத்தை அவர்கள் அறியமாட்டார்கள். அவர்கள் உலகாயத உணர்வு (Materialism) கொண்ட உளத்தினராயிருந்தனர். எந்நேரமும் போரும், வெற்றியுமே அவர்கள் குறிக்கோள்களாயிருந்தன. அத்தகைய மாறுபாட்டுணர்வு வாய்ந்த அம் மக்கள் எங்ஙனம் அந்நாட்டுப் பிரித்தானிய மக்களினத்தவரோடு பழகி ஒருவரையொருவர் அறிந்து கொள்ள இயலும்? ஆகையால், உரோமர்கள் பண்டைப் பிரித்தானியரின் சமயத்தையும் தத்துவ அறிவையும் ...னர்.

நாடறிந்ததும், மிகத் தொன்மை வாய்ந்ததும்; மேம்பட்டது மாகிய நம் இந்து சமயத்தைக் குறித்துச் சில்லாண்டுகட்குமுன் மறைமுகமாகவும், வெளிப்படையாகவும் அதன் உண்மைத் தத்துவ நிலையை உணராது அறிஞர் மர்தாக் பாதிரி போன்றோர் இழித்துக் கூறினர் என்றால், பண்டை உரோம ஆட்சியாளர் அந் நாள் பிரித்தானியத் தத்துவ ஞானிகளிடமும், அவர்கள் சமயத் திடமும் வெறுப்புற்றனர் என்பதில் யாதொரு வியப்புமின்று.

உரோமர்கள் படையெடுப்பாலும், கொடுமைகளாலும் சிமிரி யர்களாகிய துரூயித்துகள் தமக்கு அழிவு நேரும் என்று தமக்குத் தோன்றும் வரையில், அவர்கள் தம் சமயக் கொள் கையை நூல்களாகச் செய்தாரில்லை. பலர் இச்சிமிரியர் நூல் களைக் காலா காலத்தில் பெயர்த்தெழுதி வைத்தனர். பண்டைப் பிரித்தானிய மொழியில் அந்நூல்கள் எழுதப்பட்டிருந்தமையின், அப்பண்டைப் பிரித்தனில் வாழ்ந்தவருக்கன்றி ஏனையோர்க்கு அவை பயன்பட்டில. இத்தகைய கையேடுகள் "மிஃவிரியன் தொல் பொருள் ஆய்வுகள்"[1] எனப்படும். அவை முப்பகுதிகளாக வெளிவந்தன. 1801ஆம் ஆண்டில் ஒவன் சோண்சு[2] என்பார் அம் முப்பகுதிகளையும் மிகக் கூர்ந்து மொழிபெயர்த்துப் பதிப்பித் தார். இவைகளே பண்டைப் பிரித்தானியர்களால் எழுதப்பெற்று எரியுண்டன போக எஞ்சிய நூல்களாகும்.

உரோமப் படையாளர்களே யன்றிப் பாகன் சாக்சானியரும்[3] கிறித்திய நோமனும்[4] பண்டைப் பிரித்தானியரை எதிர்த்து அழிப்பதில் உரோம எதிர்ப்பாளரையும் விஞ்சி விட்டனர்.

இந்து சமயத்தில் தோன்றிக் கிறித்தவராக மாறும் சோத ரர்கள் தம் முன்னோர்களின் சமயத்தையும், அதன் தத்துவக் கூறுகளையும் உணராராய் இழித்துக்கூறல் போல, பிரித்தானி யரில் கிறித்தவ சமயத்தைத் தழுவியவர்கள் தம் நாட்டைத் தாக் கியவர்களுடன் சேர்ந்து கொண்டு, பண்டைப் பிரித்தானியர் நூல் நிலையங்களை அழித் தொழிக்கத் தொடங்கினர். எதில் பிரெதன்[5] என்னும் வடவாம்பிரிய[6] மன்னன் பங்கூர்[7] சமயாசிரியர்களை வெட்டி வீழ்த்தியதுடன் அவர்கள் பள்ளியையும், அதன் நூல் நிலையத்தையும் எரித்துத் தரைமட்டமாக்கினன். அந்நூல் நிலை யம் சிமிரியர்கள் இனத்தைப்பற்றிய சிறந்த நூற்கருவூலமாக விளங்கியதாம். இக் கொடு நிகழ்ச்சி கி. பி. 7ஆம் நூற்றாண்டில் நிகழ்ந்தது என்ப. தொடர்ந்து 500 ஆண்டுகள் இத்தகு செந்நீர்ப்

---

1. "Myfyrian Archaeolgy." 2. Owen Jones.
3. Pagon Saxon. 4. Christian Noman.
5. King Aethelfrith. 6. North Umbria. 7. Bangor.

பெருக்கும், சீரழிவும், கொள்ளையும் நிகழ்ந்தன. உவெல்சு நாட்டின் (Wales) நூற்கருவூலங்களையும், இலக்கியங்களையும் சுட்டுப் பொசுக்குமாறு முதலாம் எட்வர்டு மன்னன் ஆணையிட்டான். எத்தகு விலையில்லா ஞானக் கருவூலத்தை உலகம் இழந்ததோ நம்மால் அறியக்கூட வில்லை!

“மிஃவிரியன் தொல் பொருள் ஆய்வுகள்” பதிப்பிக்கப் பெற்றபின், பல அறிஞர்கள் அவற்றை ஆய்ந்து, துரிரியர்களைக் குறித்தும், அவர்கள் சமயங் குறித்தும் பல நூல்களை வெளியிட்டனர். இந்து அறநூல், சமய நூல்களை வெளியிட்டோர் மொழி பெயர்த்து வெளியிட்டபின், அவற்றின் அரும் பொருள்களை நம் நாட்டவர் கற்று ஆய்ந்து பாராட்டுமாறு போல, பண்டைப் பிரித்தானியரின் சமயத்தையும் தத்துவத்தையும் மேற்கண்ட நூல்கள் வாயிலாக மக்கள் உணர்ந்து, தம் கிறித்தவ சமயத்தினும் அப் பண்டைச் சமயம் மேலானதெனக் கருதலாயினர். சென்ற நூற்றாண்டுப் புலவர் பெருமகனுராம் மத்தேயு அருநாள்டு[1] ‘கெலித்திய இலக்கிய ஆய்வு’[2] என்னும் தம் நூலில் கெலித்தியர்கள் அத்தீனியத் தத்துவப் பேராசிரியர்களோடு வைத்தெண்ணுஞ் சிறப்புடையவர்களெனவும், உலகின் திருத்தப்பாடுற்ற எல்லா நாடுகளுடனும் வாணிகத் தொடர்பு கொண்டு வாழ்ந்திருந்தனர் எனவும், நுண்கலை, அறிவியல், இலக்கியம் போன்ற கலைஞானங்களில் சிறந்துவிளங்கினரெனவுங்கூறுகின்றார்.

அக்கால ஐரோப்பியப் பெருநில மக்கள் துருயித்துகளிடமிருந்து சமய தத்துவ நூல்களி னுணர்வினைப் பெறுதற் பொருட்டுப் பிரித்தானியத்திற்குச் சென்றனர். பிளேட்டோவின் ஆழ்ந்த தத்துவ ஆய்விற்குக் காரணராகிய பேரறிஞர் பித்தகோரசு[3] என்பவரும் அடிக்கடி துருயித்துகளைச் சென்று கண்டும், அவர்களால் காணப்பெற்றும் உலகம் புகழ் தத்துவ உள்ளம் பெற்றனர் என்பர் அறிஞர். பேரறிஞர் எமர்சனால் பெரிதும் பாராட்டப் பெறும் பிளேட்டோ[4]வாம் தத்துவ ஞானியார், தம் அறிவுச் சுடரைப் பண்டைத் துருயித்திசம் என்னும் பேரொளிப் பிழம்பில் பெற்றனர் என அவ் எமர்சன்[5] பெரியாரே கூறியுள்ளார்.

பிளேட்டோவின் மாணவருள் ஒருவரான அரிசுதாதில்[6] பண்டைக் கிரேக்கர்கள் தம் தத்துவ அறிவைப் பிரித்தானியத் துருயித்துகளிடம் பெற்றனர் என்பர். அத்தகையவரா உடலுக்கு வண்ணம் பூசும் நரபலி இடும் காட்டு மிராண்டியர்!!!

1. Mathew Arnold (1822 - 1888)
2. “Studies of Cellic Literature”
3. Pythagoras (582-500 B.C)
4. Plato (429-347 B.C.)
5. Emerson (1803-1832 A. D.)
6. Aristotle (384-322 B.C.)

# டாக்டர் அ. சிதம்பரநாதனுர்க்குப் பாராட்டு

டாக்டர் செட்டியாரவர்கள் 9-8-1960 இல் ருசிய நாட்டில் நிகழ்ந்த 'கீழ்நாட்டு மொழிப் பேரறிஞர்களின் இருப[illegible] தாவது உலக மாநாட்டில்' கலந்து தமிழ் மொழிக்காகச் செயலாற்றிப் பெரும் புகழுடன் மீண்டுள்ளார்கள். அதன் பொருட்டு அவர்கட்கொரு பாராட்டு விழாவும் வரவேற்பு விழாவும் ஒய். எம். சி. ஏ. பட்டி மன்றத்தின் சார்பில் 23-8-1960 இல் மிக்க சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. மக்கள் திரளாகக் குழுமியிருந்தனர். சென்னைச் சட்டசபைத் தலைவர் டாக்டர், யூ. கிருட்டிணராவ் அவர்கள் தலைமை தாங்கினர்கள். பல பேரறிஞர்கள் வரவேற்புரையும் பாராட்டுரையும் வழங்கினர்கள்.

செட்டியாரவர்கள் நன்றியறிவிக்கும் முகத்தாற் கூறிய உரைச் சுருக்கம் வருமாறு :

இந்தியத் தெரிவாளர் (பிரதிநிதி) பன்னிருவருள் தாம் ஒருவராகத் தேர்ந்தெடுக்கப்பட் டனுப்பியமைக்கு நன்றி தெரிவித்தனர். ருசிய மக்களின் ஊக்கமும் சலியாவுழைப்பும் வியக்கத்தக்கன. அங்குப் பெரும்பாலான அலுவலகங்களில் மகளிர் பணியாற்றுகின்றனர். அதற்குக் காரணம் அங்கு மக்கட் டொகையில் நூற்றுக்கு அறுபத்தேழு விழுக்காடு பெண் பாலாரே. ருசிய மக்கள் அழிக்கும் மனப்பான்மையர் என்பது தவறு. அவர்கள் எல்லாக் காரியங்களிலும் உன்னிப்பாகவிருக்கின்றனர். பேராசிரியர்கள், ஆராய்ச்சியாளர், அறிவியலாளர், போன்றவர்களுக்கு மிகுதியான ஊதியங் கொடுத்து ஊக்குவிக்கின்றனர். ருசிய மக்களிற் சிலர் தமிழ்மொழியை இலக்கணப்படி பேசுகின்றனர். அங்குள்ள மக்கள் மதச்சார்பற்றவர்கள் என்பது தவறு. வழிபாட்டில் விருப்பமுடையவர்கள். கோவில்களுக்குச் சென்று வழிபடுகின்றனர். ருசியாவில் பிறநாடுகளில் நிகழக் கூடிய செய்திகளை அந்நாட்டவர் உடனுக்குடன் தெரிந்து கொள்ள வாய்ப்பில்லை.

செட்டியாரவர்கள் உலகமொழிப் பேரறிஞர் மாநாட்டில் **'உலகினருக்குத் திருவள்ளுவர் தரும் செய்தி'** என்ற அரிய தலைப்பில் அனைவர்களும் சிறப்பாக வரவேற்குமாறு பேசியுள்ளார்கள். அது தமிழ்மொழிக்கே மிக்க சிறப்பினைத் தருவதாகும். செட்டியாரவர்கள் தமிழ்மொழிப் பெரும்புலமை போன்று ஆங்கிலப் பெரும் புலமையும் உடையவர். இருமொழியிலும் நாவன்மை நன்கினிது பெற்றவர். அவர்கள் வெற்றியுடன் மீண்டமையை யாமும் மிகுதியும் பாராட்டுகின்றோம்.

# சங்கப்பாடல்கள் மொழியமைப்பு

[திரு. தி. நா. அறிவொளி]

## 1. மொழியமைப்பு

மனிதர்களின் பண்பாட்டை, அவர்களின் நல்ல நடத்தைகளும், நாகரிகமான ஒழுகலாறும் காட்டும். அதே போல, சீரிய இலக்கியத்தின் பண்பாட்டை அதன் மொழியமைப்பும், கருத்து நலமும் காட்டும். அறிஞனின் நற்கருத்துக்கள் அவனது எண்ணச் செறிவையும், மேதையையும் நிலைநாட்டும். அக்கருத்தை வெளியிடும் மொழி அமைப்போ அறிஞனின் மனத் தெளிவையும், கல்வித் திண்மையையும் புலப்படுத்தும்.

எண்ணத்தைத் தெளிவாகவும், உணர்ச்சித் ததும்பவும், பிறர் உள்ளங் கொள்ளும் வண்ணம் எடுத்துரைப்பது மொழியமைப்பின் திறனிலேயே அமையும். மொழியமைப்பின் அழகு தான் கற்பவனின் ஆர்வத்தைத் தூண்டும். கற்கும் பொருளின் உண்மையை ஆழ்ந்துணர்ந்து ஒழுக எழுச்சி தரும். மொழியமைப்பு ஒன்றைக் கொண்டே, காலம், இடம், சூழ்நிலை, உள்ள நிலை, உணர்ச்சிவேகம் ஆகியவைகளைத் தெளிவிய முறையில் வெளியிட முடியும். ஆங்கில இலக்கியத்தில் 'சார்லஸ் டிக்கன்ஸ்' (Charlas Dickens) தன் 'இருநகரக் கதை' (A Tale of two cities.) என்ற புதினத்தை மொழியமைப்புச் சீர்மையாலேயே சிறப்புப் புகழ் மிக்க இலக்கியமாக்கியுள்ளார். அந்நூலின் துவக்கப் பகுதியின் மொழியமைப்பே கற்போரின் உள்ளத்தைக் கிளர்ந்தெழுந்து, துள்ளச் செய்து, மேன்மேலும் படிக்கும் ஆர்வத்தையும், விருவிருப்பையும் தூண்டத் தக்கதாக அமைந்திருக்கிறது.[1] டிக்கன்சைப் போலவே பல இலக்கியக் கலைஞர்களும் மொழியமைப்பாலேயே சீரிய நூல்களை அழியா வாழ்வு பெறச் செய்துள்ளனர்.[2]

---

1. It was the best of times, it was the worst of times, it was the age of wisdom, it was the age of foolishnes, it was the epoch of belief, it was the epoch of incredulity, it was the season of Light, it was the season of Darkness, it was the spring of hope, it was the winter of despair, we had everything before us, we had nothing before us, we were all going direct to heaven, we were all going direct the other way - in short, the period was so for like the present period, that some of its noisiest authorities, insisted on its being received, for good or for evil, in the superlative degree of comparison only (A Tale of two cities.)

2. மொழி அமைப்பாலேயே சீரிய இலக்கியங்களை உருவாக்கியவர்களாகத் திருவள்ளுவர், கம்பர், அவ்வையார், அருணகிரியார், சயங்

மொழியமைப்பில் அழகோ, மெருகோ, உணர்ச்சியோ, உயிரோ இல்லையென்றால் அந்நூல் சீரிய இலக்கியத் தகுதியினின்றும் சற்றே குறைபட்டதே யாகும். கலைஞனின் எண்ணும் திறனின் ஆற்றலையும், மொழிப் புலமையையும் அவ் விலக்கியத்தின் மொழியமைப்பும், நடையழகும், சொல்லாட்சி வன்மையும் தான் தெற்றெனச் சுட்டிக் காட்டுவன.

## 2. வள்ளுவர் வகுத்த மொழியமைப்பிலக்கணம்

'பேச்சிலும், எழுத்திலும் மொழியமைப்புத் தூய்மை மிக இன்றியமையாதது என்ற கொள்கையை வள்ளுவர் தம் அற நூலில் பல இடத்தும் வற்புறுத்துவார்.

(1) நன்மையும் தீமையும் சொல்லால் (மொழியால்) உண்டாகிறது. ஆகவே சொற் குற்றம் நேராமல் காத்துக் கொள்ளவேண்டும்.[1]

(2) ஒரு மொழியமைப்பு எவ்வாறிருக்க வேண்டுமெனில் கற்பாரின் உள்ளத்தைப் பிணிக்கும் தன்மையதாகவும், கல்லாதவரையும் கற்கத் தூண்டக் கூடியதாகவும் இருக்கவேண்டும்.[2]

(3) சொற்களின் திறனை அறிந்து மொழியமைப்பை ஆக்க வேண்டும். அவ்வாறு செய்தால் அறமும், கருத்தும், பொருளும் அமையும்.[3]

---

கொண்டார், வில்லிபுத்தூரார், சுப்ரதீபக் கவிராயர், நக்கீரர், திருநாவுக்கரசர், பாலை பாடிய பெருங்கடுங்கோ, பரணர், காள மேகக் கவிஞர் ஆகியவர்களைக் குறிப்பிடலாம். ஆயின், மேற் குறித்தவர்களின் கருத்து நலனும், பொருளமைதியும் மிகச் சிறப்பாக அமைந்துள்ளமை மேலும் வியக்கத்தக்கதே.

நம் வீட்டுப் பேச்சில் வழங்கும் ஒரு பழமொழியான, "எதுகை மோனையோடு பேசு" என்ற தொடர்; மொழியமைப்புச் சீரோடு கருத்தை வெளியிடுவதே கற்றோர்க் கழகு என்ற கருத்தினை வலியுறுத்தலை உன்னுக. கல்வியறிவில்லாத மக்களும்கூட 'எதுகை - மோனை' முதலிய சொல் நயங்களை மிகவும் விரும்புகின்றனர் என்ற உளநூல் உண்மையை மேற் பழமொழி நன்கு

1. "ஆக்கமும் கேடும் அதனால் வருதலால்
காத்தோம்பல் சொல்லின்கண் சோர்வு." (குறள் : ௬௪௨)

2. "கேட்டார்ப் பிணிக்கும் தகையவாய்க் கேளாரும்
வேட்ப மொழிவதாஞ் சொல்." (குறள் : ௬௪௩)

3. "திறன் அறிந்து சொல்லுக சொல்லை அறனும்
பொருளும் அதனினூஉங் கில்." (குறள் : ௬௪௪

(4) வெல்லுஞ் சொற்களாகத் தேர்ந்தெடுத்தே சொல்லாட்சி செய்தல் வேண்டும். அவ்வாறு எழுதப்பட்ட மொழியமைப்பை வேறொரு சொல்லாட்சி வெல்லக் கூடாததாக இருத்தல் வேண்டும்.[1]

(5) கருத்துக்களை முறைப்படுத்தி ஒழுங்கான சொல்லமைப் போடு - குழப்பமின்றி - நிரந்து - இனிமையாக அமையுமாறு மொழியமைப்பு அமைத்தல் வேண்டும்.[2]

(6) கல்வியின் ஆற்றல் விளங்கும்படியும், பிறர் மனத்துள் ஆழ்ந்து பதியும் வண்ணமும் கருத்தை உணர்த்தக் கூடியதே சீரிய மொழியமைப்பு.[3]

(7) இனிவந்த சொற்கள், ஒலி மாற்றும் மொழியமைப்பு ஆகியவைகளைக் கடிந்து, இருள் தீர எண்ணிப், பொருள் - கருவி - காலம் - வினை - இடன் ஆகிய ஐந்துக்கும் பொருந்தியவாறு நாட்டின் நாகரிகமும், பண்பாடும் சிறக்கவும்; உண்மைக்கு உயிரூட்டும் முறையிலும் எழுத வேண்டும்.

## 3. சொற்களின் திறன்

சொற்களின் திறனை எடை போடுதற்குச் சொல்லமைப்பு, சொல்லாட்சி முறைகள், வேர்ச் சொற்களின் உயிர்த்துடிப்பு - உணர்ச்சி வேகம் ஆகிய நுட்பங்களையும், ஓட்டங்களையும் உணர்தல் வேண்டும். 'ஆ' என்ற நெடில் எழுத்துத் தமிழ் நெடுங்கணக்கில் ஓர் உயிரெழுத்து; ஆனால், ஒரு நாடகத்தில் அன்பு உணர்வைக்

எழுத்து ஒலிக் குறிப்புச் சொல்லாக ஆளப் படுகிறது. வெறும் நெடிலோசையில் 'பொருள் - குறிப்பு - உணர்வு' எதுவும் கிடையாது. ஆனால் நாடகத்தில் 'ஆ'வின் ன் குறிப்பிட்ட உணர்வை - சுவையை - பயனை - ஆற்ற

1. "சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொல் அச்சொல்லை
வெல்லுஞ்சொல் இன்மை அறிந்து." (குறள்: ௬௪௫)

2. "விரைந்து தொழில் கேட்கும் ஞாலம் நிரந்தினிது
சொல்லுதல் வல்லார்ப் பெறின்." (குறள்: ௬௪௮)

3. "இணரூழ்த்து நாறா மலர்அனையர் கற்ற(து)
உணர விரித்துரையா தார்." (குறள்: ௬௫௦)

[குறிப்பு: மேற் குறட்பாக்கள் பேச்சின் மொழி வல்லமைக்காக ஆளப்பட்டவையேனும், அவ்விலக்கணம் பேச்சுக்கு மட்டுமின்றி எழுத்துக்கும் இலக்கணமாகி விளங்கும் பொருத்தம் உடைமையால் அவற்றை மொழியமைப்புக்கும் ஆண்டுள்ளேன். "புதியன புகுதல் வழுவல" எனச் சான்றோர் கூறிய கூற்றுக்கேற்ப இவ்வாறு புதுமைச் சேர்க்கை அமைக்கப்பட்டது.]

விளக்குவதாக அமைகிறது. இவ்வாறே ஒவ்வொரு சொல்லும் பல நிலைகளில் பல்வேறு கருத்துக்களை - சுவைகளை - பயன்களை அளிக்கிறது. சான்றாகச் சில சங்கப் பாடல்களின் மொழி யமைப்பு நுணுக்கத்தை ஆராய்வோம்:

[1]"அரும்பற மலர்ந்த கருங்கால் வேங்கை
மேகெழு பெருஞ்சினை இருந்த தோகை
பூக்கொய் மகளிரில் தோன்று நாடன்
தகாஅன் போலத் தான்தீது மொழியினும்
தன்கண் கண்டது பொய்க்குவ தன்றே
தேக்கொக் கருந்து முள்ளெயிற்றுத் துவர்வாய்
வரையாடு வன்பறழ்த் தந்தைக்
கடுவனும் அறியும்அக் கொடியோ னையே."
(கொல்லன் அழிசி)

இப்பாடலில் 'கொடியோன்' என்று தலைவனைப் பழிக்கிறாள் தோழி. உண்மையில் அச்சொல் 'பழிக்கும் நோக்கத்தோடுதான்' பாடலில் ஆளப்பட்டதா? இல்லை. இச் சொல்லின் திறம் இங்கு தான் சிறப்படைகிறது. 'கொடியவன்' என்ற பொருளை மட்டு மின்றி; அதனினும் வேறுபட்ட, ஆழ்ந்த உணர்ச்சிமிக்க அன்புணர்ச்சிப்பொருளை - நகைச்சுவை கலந்த காதற்சுவையை - செல்ல உணர்ச்சியை - அச் சொல் வழங்குகிறது. மேலும்,

[2]"என்கைக் கொண்டு தன்கண் ஒற்றியும்,
தன்கைக் கொண்டென் நன்னுதல் நீவியும்,

---

1. இப்பாடல் குறுந்தொகை: ௨௬. இதன் பொருள்:—"அரும்புகள் முதிர்ந்து பூத்த வலியதாளை உடைய வேங்கை மரத்தின் மேலே, ஓங்கி வளர்ந்திருந்த பெரிய கொம்பிலிருந்த மயில்கள்; வேங்கைப் பூக்களைக் கொய்கின்ற அழகிய இளம்பெண்களைப்போலத் தோன்றும். அத்தகைய வளமான நாட்டைத் தனக்குரிமையாகக் கொண்ட தலைவன், 'தகுதி யில்லாதவன்' போலத் தன்னை மறந்து நீங்கினான் என்றெண்ணித் தலைவி "நான் உயிரை விடுவேன்" என்ற கொடிய தீச் சொல்லைச் சொன்னாள். ஆயினும், தேமாவின் பழத்தை உண்ணும் முள்போன்ற கூரிய பல்லினையும், சிவந்த வாயையும் உடைய மலையில் விளையாடும் வலிமைமிக்க குரங்குக் குட்டிகளுக்குத் தந்தையான ஆண் குரங்கும் அத் தலைவனை அறியும். தலைவியோடு காதல் விளையாட்டில் ஈடுபட்ட தலைவனை அக் குரங்கும் பார்த்திருக்கிறது. (இப் பாடலில் எத்துணை அழகிய, நுண்ணிய நகைச்சுவை பொதிந்து விளங்குகிறது பாருங்கள்! இத் தலைவி, தலைவன் பிரிந்து விட்டதற்காக அறமன்றத்தில் வழக் காடினால் சான்றாளர் வேண்டுமல்லவா வழக்குக்கு! எனவே தலைவிக்குத் தலைவன் செய்த கொடுமையை விளக்க அந்த ஆண் குரங்கு சான்று கூறுமாம்!

2. ௨௮ ஆம் பாடல்: இதன் பொருள்:—"நீலமணி போலத் , இழியும் அருவியையும், பொன் போன்ற வேங்கை

**அன்னை போல இனிய கூறியும்,**
**கள்வர் போலக் கொடியன் மாதோ!**
*மணியென இழிதரும் அருவிப் பொன்னென*
*வேங்கை தாய ஓங்குமலை அடுக்கத்து*
*ஆடுகழை நிவந்த பைங்கண் மூங்கில்*
*ஓடுகழை கிழிக்கும் சென்னிக்*
*கோடுயர் பிறங்கல் மலைகிழ வோனே."* (மூதா கூற்றனார்)

தலைவனைக் 'கள்வன்' என்று அன்பு மிகுதி காரணமாக ஏசுவது நடைமுறை வாழ்க்கையிலும் நிகழ்வது. குழந்தைகளை "திருட்டுப் பயலே!" எனக் கொஞ்சுவது வழக்கமல்லவா! இறைவனைச் சம்பந்தரும், "என் உள்ளங்கவர் கள்வன்" எனப் பாடியுள்ளார். இவ்வழக்குக் கலித்தொகையுள்ளும் அழகொழுக ஆளப்பட்டுள்ளது :

*1"சுடர்த் தொடீஇ கேளாய் தெருவில்நாம் ஆடும்*
*மணற்சிற்றில்காலிற் சிதையா அடைச்சிய*
*கோதை பரிந்து வரிப்பந்து கொண்டோடி*
*நோதக்க செய்யும் சிறுபட்டி மேலோர்நாள்*

---

*மலர்கள் உதிர்ந்த உயர்ந்த மலைப் பக்கத்தில்; உயர்ந்த தண்டும், பசுமைக் கணுக்களையுமுடைய அசைந்தாடும் மூங்கில் மரங்கள், வானில் ஓடுகின்ற முகிற் கூட்டத்தைக் கிழிப்பனபோலத் தோன்றும். அத்தகைய வளமிக்க கொடுமுடிகள் உயர்ந்த மலைக்கு உரிமை உடைய நம் தலைவன் முன்பு இயற்கைப் புணர்ச்சிக் காலத்தில் என் கைகளைத் தன்னுடைய கைகளால் எடுத்துத் தன் கண்களில் அன்போடு ஒற்றிக்கொண்டும், தன் கைகளால் என்னுடைய நல்ல நெற்றியை வருடியும்; அன்புமிக்க தாயைப்போல இனிமையான மொழிகளால் கொஞ்சியும் தலையளி செய்து இன்பம் தந்தான். இப்பொழுதோ; கள்வரைப் போலக் கொடியவனாகி விட்டான்!..." [இப்பாட்டில் தலைவனின் முன்னாள் அன்புணர்வைத் தெளிவாகக் கூறிப் பின்னாள் உற்ற குறையால் கொடியன் என்று பழிப்பதும் அளவுக்கு மீறிய காதல் ஏக்கத்தால்தான். வேண்டுமென்றே, தலைவனை இழித்துப் பேசவேண்டுமென்பதோ தலைவியின் - தோழியின் - உள்ளக்கிடக்கை அல்ல என்பதை உணரவேண்டும்.*

1. **பொருள் :** *ஒளி வீசும் வளையணிந்த பெண்ணே! கேட்பாயாக. தெருவில் நாம் மணல் வீடு கட்டி விளையாடிய குழந்தைப் பருவத்தில் அச் சிற்றிலைக் காலால் அழித்தும், நம் கூந்தலில் சூடியிருந்த பூங்கோதையை அறுத்தும், வரிப்பந்தைக் கவர்ந்து கொண்டு ஓடியும் நாம் மிகவும் துன்ப முற்று அழும்படி குறும்புத் தொழில்களைச் செய்யும் சிறுவனொருவன் கேட்பாரில்லாதவன்; முன்னொரு நாள் என் வீட்டிற்கு வந்தான். வெளிப் புறத்தில் நின்றவாறே; நானும் அன்னையும் ஒருசேர இருக்கக்கண்டு, "குடிக்கத் தண்ணீர் வேண்டும்" என நீர் வேட்கைக்குத் தண்ணீர் இரந்தான். என் அன்னை என்னை விளித்து, "ஒளி வீசும் பூணணிந்த மகளே, உண்ணுநீரைப் பொன்னாற் செய்த குவளையில் கொண்டுவந்து அவ்விளவலுக்குக் கொடுத்துவா," என்றாள், நானும் அறியாதவள் தானே! அன்னை கூறியபடி குவளையில் நீரை எடுத்துக்கொண்டு அவனை அணு*

அன்னையும் யானும் இருந்தேமா இல்லிரே
உண்ணுநீர் வேட்டேன் எனவந்தாற் கன்னை
அடர்பொற் சிரகத்தால் வாக்கிச் சுடரிழாய்
உண்ணுநீர் ஊட்டிவா என்றாள் எனயானும்
தன்னை அறியாது சென்றேன் மற்று என்னை
வளைமுன்கை பற்றி நலியத் தெருமந்திட்
டன்னா யிவனொருவன் செய்ததுகாண் என்றேனா
அன்னை அலறிப் படர்தரத் தன்னையான்
உண்ணுநீர் விக்கினான் என்றேனா; அன்னையும்
தன்னைப் புறம்பழித்து நீவமற் றென்னைக்
கடைக்கணாற் கொல்வான்போல் நோக்கி நகைக் கூட்டஞ்
செய்தான்அக் கள்வன் மகன்!" (குறிஞ்சிக்கலி: ூக)

இக்கலிவெண்பா உரைநடைபோல அத்தகு தெளிவும், அமைந்த நடையும், எளிய இனிய சொல்லாட்சிகளும் கொண்டு கவின்மிக அமைந்துள்ளமை நோக்கல் வேண்டும். சொற்களின் ஆற்றலை எடைபோட்டு அளந்தளந்து யாப்பில் கவிஞர் ஆண்டிருக்கிறார். திறனமைந்த சொல்லாட்சியே தலைசிறந்த இலக்கியப் பாட்டை உருவாக்கிவிடமுடியும் என்பதற்கு இக் கலிப் பாட்டே தக்க சான்றாகும்.

## 4. வெல்லுஞ் சொல்

திருவள்ளுவர் மொழியமைப்பைப்பற்றி, ஆண்ட தொடர்களில் அழகியதும் கருத்தாழம் மிக்கதுமான சொற்களில்

---

கினேன். நீரை அவன் முன் நீட்டிய என் வளையணிந்த முன்கையை அச் சிறு பட்டிமகன் பிடித்து இழுத்தான். உடனே திடுக்கிட்ட நான், 'தாயே! இவனொருவன் செய்த செயலைப் பாராய்!" என்று கூவி விட்டேன். என் தாயும் கூப்பிட்ட உடனே ஓடிவந்தாள். பிறகுதான் என்னுள்ளம் என் தவறை உணர்ந்தது. உடனே அவனைக் காப்பாற்ற எண்ணி, உண்மையை மறைத்து, 'அன்னையே! இவனுக்கு நீர் கொடுத்ததும் குடிக்கலானான். திடீரென உண்ணுநீர் விக்கினான். அதனால் பெருந் துன்பமுற்றான்" என்று ஒரு பெரும் பொய்யைக் கூறினேன்.

அன்னை என்னுரையை மெய்யென்று நம்பி, அந் நம்பியின் முதுகைத் தன் கையால் பலகால் தடவிக் கொடுத்தாள். அப்போது அவ்விளமகன் என்னைத் தன் கடைக்கண்ணால் கொலவான் போலப் பார்த்துத தன் உள்ளத்து உவகையைச் சிரிப்பாக்கிக் காட்டி, என்னையும் தன்னடிமையாக்கிக் கொண்டான் அக் கள்வன் மகன்!

[அருமையான நாடக இலக்கியம் இப்பாடல்! சுவை மிக்க உணர்ச்சி வேகமும், உயிர்த் துடிப்பும் பொதுளிய இப்பாடல் காதல் பாட்டுக்களுள் ஒப்பற்ற சிறப்புடையது. இளம் பருவத்தினர் உளவியல் நுண்மைகளையும், குறும்புகளையும் அழகொழுகத் திரைப்படக் காட்சியே போலப் பாடல் விளக்குகிறது. உணர்ச்சி மிக்க நிகழ்ச்சியால் மட்டுமின்றி மொழியமைப்பின் அழகாலும் மிகச் சீரிய இலக்கியப் பாட்டு இது!.]

'வெல்லுஞ்சொல்!' இத் தொடரை நோக்கும்போதே 'தோற்கும் சொல்லும்' உண்டு என்ற உண்மையை உணரலாம். **இன்று தமிழகத்தில் பெரும்பான்மையாக மலரும் 'கவிதை - கதைகள்' என்ற குப்பைக் கூளங்கள் 'தோற்கும் சொற்களுக்கு'ந் தக்க எடுத்துக் காட்டுக்களாகும்!** தமிழிலேயே 'திருக்குறள்' ஒன்றே பெரும்பாலும் 'வெல்லுஞ் சொற்'களாலான நல்ல நூலாகும். பிறிதொரு சொல்லைவிட ஆற்றல் மிக்க சொல்லாட்சி உடைய யாதுந்தாம் படைப்பே வெல்லும் இலக்கியம் ஆகும். 'வெல்லும் சொல் லாட்சி'யில் முதலிடமும், முதற்றகுதியும் பெறத்தக்க மேதைப் பாடல் ஞாலமேதை கணியன் பூங்குன்றனார் அவர்கள் இயற்றிய ௧௯௨ ஆவது புறநானூற்றுப் பாடலே. இப் பாட்டுக்கு இணையான பாடல் உலகிலேயே வேறொன்றில்லை என்பது யான் ஆராய்ந்து, ஆராய்ந்து தெளிந்துதேர்ந்த உண்மைக் கருத்து!

"யாதும் ஊரே யாவரும் கேளிர்
தீதும் நன்றும் பிறர்தர வாரா
நோதலும் தணிதலும் அவற்றோர் அன்ன
சாதலும் புதுவ தன்றே; வாழ்தல்
இனிதென மகிழ்ந்தன்று மிலமே; முனிவின்
இன்னா தென்றலும் இலமே; மின்னொடு
வானந் தண்டுளி தலைஇ யானாது
கல்பொரு திரங்கு மல்லற் பேர்யாற்று
நீர்வழிப் படூஉம் புணைபோல் ஆருயிர்
முறைவழிப் படூஉம் என்பது திறவோர்
காட்சியிற் றெளிந்தனம் ஆகலின் மாட்சியில்
பெரியோரை வியத்தலும் இலமே;
சிறியோரை இகழ்தல் அதனினும் இலமே." (புறம்: ௧௯௨)

இப் பாடலின் ஒருசிறு சொல்லையேனும் நீக்கிவிட்டு, வேறு சொல் பெய்தாலும்; அப் பாடலின் அருஞ்சீர்மை குன்றும். இணைய சொல்லாட்சி வளமிக்க பாடல்போல் அரும்பாட்டை யாண்டும் காணற்கியலாது. ஞாலப் புலவரின் சால்புறக் கருத்தையும், அதன் ஒண்மையையும், பாடலின் மொழியமைப்புத் தெளிவே மேலும் திண்மையும் நுண்மையும் உடையதாக ஆக்கி விட்டது. இத்தகு புலமை மேதை மிக வியக்கத்தக்கது. அறப் பாடலிலும் மொழியமைப் பழகு மிக இன்றியமையாததே என்ப தற்கு இப் பாடலே சீரிய சான்றாகும்.

காதலுணர்ச்சிப் பாடல்களில் மிகச்சிறந்த மொழியமைப் புடைய பாடல் செம்புலப்பெயல் நீராரின் இன்னிசைப் பாடலே யாகும்:

"யாயும் ஞாயும் யாரா கியரோ
எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர்
யானும் நீயும் எவ்வழி அறிதும்?
செம்புலப் பெயல்நீர் போல,
அன்புடை நெஞ்சம் தாம்கலந் தனவே." (குறுந்தொகை: ச0)

பேருணர்ச்சி வேகத்தையும், உவமை நயத்தையும், அழகிய-ிய - அமைதியான மொழியமைப்பு எத்துணை எழிலொழுகப் புலப்படுத்துகிறதென்பதை இப்பாடல் மெய்ப்பிக்கும். பல்லாற்றானும் சுவைதேர் கண்ணோடு கற்றார்க்குப் பாட்டின் வெல்லுஞ் சொல்லாட்சியின் மேதகுநுண்மை நன்கு புலனாகும். காதற் சுவையைக் காட்டுதற்காக வரம்பில்லாச் சொற்களை ஆண்டு, 'சொற்சிலம்பம்' ஆடுகின்ற எழுத்தாளர்கள் இப்பாடலின் எளிய வெல்லும் சொல்லாட்சித் திறனை—அரிய இலக்கியத் தகுதி மிக்க மொழியமைப்பை—ஆழ்ந்தறிந்து திருந்துதல் வேண்டும்.

துன்பியல் கவிதைகளில் அரிய வெல்லுஞ் சொற்களோடு கூடிய அவ்வையாரின் இரங்கற்பா உலக இலக்கியத் தகுதி பெற்றது. அப் பாடலின் சொல்லாட்சி வேகம் கற்றார் குழாத்தையே கண்கலங்கச் செய்கிற தெனின் வேறு என்ன விளம்பல் ஒல்லும்?....

"சிறியகள் பெறினே எமக்கீயு மன்னே;
பெரியகள் பெறினே
யாம்பாடத் தான்மகிழ்ந் துண்ணு மன்னே;
சிறுசோற் றானு நனிபல கலத்தன் மன்னே;
பெருஞ்சோற் றானு நனிபல கலத்தன் மன்னே;
என்பொடு தடிபடு வழியெல்லா மெமக்கீயு மன்னே;
அம்பொடு வேல்நுழை வழியெல்லாந் தானிற்கு மன்னே;
நரந்த நாறுந் தன்கையாற்
புலவு நாறும் என்தலை தைவரு மன்னே!
அருந்தலை யிரும்பாணர் அகன்மண்டைத் துளையுரீஇ
இரப்போர் கையுளும் போகிப்
புரப்போர் புன்கண் பாவை சோர
அஞ்சொல் நுண்தேர்ச்சிப் புலவர் நாவில்
சென்றுவீழ்ந் தன்று அவன்
அருநிறத்து இயங்கிய வேலே;
ஆசாகெந்தை யாண்டுளன் கொல்லோ?
இனிப், பாடுநரும் இல்லைப் பாடுநர்க் கொன்று ஈகுநரும் இல்லைப்
பனித்துறைப் பகன்றை நறைக்கொண் மாமலர்
சூடாது வைகியாங்குப் பிறர்க் கொன்று
ஈயாது வீயும் உயிர்தவப் பலவே." (அவ்வையார்: புறம்: உ௩௫)

இப் பாடலன்றோ வெல்லுஞ் சொல்லாட்சிப் பாடல்! ஒவ்வொரு சொல்லும் உயிர்த் துடிப்போடும், உணர்ச்சிப் பெருக்கோடும், துன்ப வெறியோடும், ஏக்க உணர்ச்சியின் வெடிப்போடும் மிளிர்கிறதென்பதை ஒரே ஒருமுறை வாய்விட்டுக் கற்போரும் நன்குணர முடியும்! இப் பாடலைப் போல வெல்லுஞ் சொல்லாட்சிப் பாடல்கள் சங்க இலக்கியங்களில் அளவின்றி மலிந்துள்ளன. அவற்றை வாழ்நாள் முழுதும் கற்றுக் கற்றுச், சுவைத்துச் சுவைத்துப் பேரின்பம் உற வேண்டியது தமிழரின் தனிப்பெருங் கடன் அன்றோ?

(தொடரும்)

# மறைமலையடிகள் நூல் நிலையம்

சென்னை, 105, இலிங்கிச்செட்டி தெருவில் மறைத்திரு மறைமலையடிகள் பெயரில் நிறுவப்பட்டுள்ள இந் நூல் நிலையம் தொடங்கி ஈராண்டுகள் நிறைவெய்தியுள்ளன. இந் நூலகம் நாள்தோறும் காலை 8 மணி முதல் 11 மணி வரையிலும், மாலை 4 மணி முதல் 8 மணி வரையிலும் திறந்திருக்கும். ஞாயிற்றுக் கிழமைகளிலும் பிற அரசினர் விடுமுறை நாட்களிலும் காலை 8 முதல் 12 வரையிலும், மாலை 4 முதல் 8 வரையிலும் திறந்திருக்கும். திங்கள் கிழமை விடுமுறையாகும்.

ஏறத்தாழ, 15,000 நூல்கள் இந்நூலகத்தில் உள்ளன. மறைமலையடிகள் தம் ஆராய்ச்சிக்கெனத் தொகுத்து வைத்த நாலாயிரம் நூல்களும் இதில் உள்ளன. மற்றும் கிழமை, திங்கள், இதழ்களும் இடம் பெற்றுள்ளன. இரண்டாவது ஆண்டில் (1959-60) 19,600 பேர் வந்து படித்திருக்கின்றனர். அவர்கள் மொத்தம் 12,029 நூல்களைப் படித்திருக்கின்றனர். ஆங்கிலம் 2369 தமிழ் 9660. இலக்கியம், ஆராய்ச்சி, வரலாறு, தத்துவம் போன்ற பல துறைகளில் நூல்கள் உள்ளன. இவை யல்லாது, வழங்கும் பகுதியிலிருந்து 1182 நூல்களை வீட்டுக்கு எடுத்துச் சென்று படித்திருக்கின்றனர். வழங்கும் பகுதியில் உறுப்பினராவதற்கு முன்பணம் ரூ. 10-ம் நுழைவுக் கட்டணம் ரூ. ஒன்றும் செலுத்தல்வேண்டும். இந் நூலகத்தில் சிறந்த ஆராய்ச்சி நூல்கள் இடம் பெற்றிருத்தலின் பல அறிஞர்கள் தொடர்பாக வந்து ஆராய்ச்சி செய்து வருகின்றனர்.

# கூடியெதிர்ப்போம்!

[நல்லைக்கவி திரு. இளங்கோவன்]

தேவர்களின் பாடையதாய்ச்
        சீரழிந்த ஆரியத்தின்
ஏவலினால் இந்திவந்திங்
        கெந்தமிழுக் கூறுசெய்தால்
காவலின்றிச் செந்தமிழர்
        கட்டழிந்து நிற்போமோ?
கோவமது வாராதோ?
        கூடியெதிர்த் தோட்டோமோ? (௧)

அன்னைமடி மீதிருத்தி
        ஆரமுதோ டூட்டியதும்
வன்னமணித் தொட்டிலிலே
        வைத்துத்தா லாட்டியதும்
பின்னர்நம் முட்கருத்தைப்
        பேச்சினிலே காட்டியதும்
கன்னலினும் நல்லினிமை
        காட்டுதமிழ்ச் சொல்லன்றோ? (௨)

அன்னதொரு தாய்மொழியை
        ஆதரித்துக் காப்பாற்றி
மன்னுகிற நன்னெறியில்
        வைத்துவளர்த் தெந்நாளும்
அன்னியர்செய் தீமைகளுக்
        காட்பட்டுத் தேயாமல்
மின்னவழி செய்திடுதல்
        மெய்த்தமிழர் செய்கையன்றோ? (௩)

வந்தமொழி இந்தியினால்
        சொந்தமொழி நந்தமிழை
நொந்துவிழப் பண்ணுவதோ
        நுண்ணறிவீர் கூறுமையா

எந்தமொழி வந்தாலும்
  எந்தமிழ்க்கே ஆட்[illegible]
முந்திமொழி யாதயர்ந்து
  மூச்சிழந்து வாழ்வோமோ? (௫)

நம்முயிரும் நம்முடலும்
  நம்பொருளும் நம்வாழ்வும்
செம்மைமிகு சீர்மொழியாம்
  தென்றமிழே யாகுமன்றோ?
வெம்மைமிகு மாற்றாரின்
  வேற்றுமொழிக் காளாகி
இம்மையினில் வாழ்வதிலே
  என்னபலன்? என்னநலன்?

இந்திமொழி இந்தியர்க்கே!
  இங்கெதற்கு? நாம்தமிழர்!
நந்தமிழால் நம்நாட்டை
  நாமாட்சி செய்திடுவோம்!
வந்தமொழி யாள்வதுவும்
  வந்தவர்கள் வாழ்வதுவும்
நந்தமிழின் தாழ்ச்சியன்றோ?
  நம்வாழ்வின் வீழ்ச்சியன்றோ? (௬)

வந்தமொழி யாளுவதும்
  சொந்தமொழி தாழுவதும்
எந்தவொரு நாட்டினிலும்
  இல்லாத தொன்றாகும்!
  [illegible]மைக் கா[illegible]ட்டால்
  நம்வாழ்வு தாழாதோ?
[illegible]ர் ஒன்றாகச்
  [illegible]ர்ப்புச் செய்யீரோ! (௭)

# செய்திகளும் குறிப்புக்களும்

**(க) இந்தி கட்டாய மில்லை. ஆனால்......?**

"ஆட்சிமொழி பற்றிய குடியரசுத் தலைவரின் ஆணையில் அடங்கியுள்ள வேலைகளைச் செயல்முறைக்குக் கொண்டுவர இந்திய அரசு ஒரு திட்டம் வகுத்துள்ளது. இந்திய அரசுத் துறைகளில் பணியாற்றும் 45 வயதுக்குட்பட்ட மூன்றாம் பிரிவு, அதற்கு மேற்பட்ட பிரிவுகளைச் சேர்ந்த எல்லா ஊழியர்களும் இந்தி மொழியில் கட்டாயமாகப் பயிற்சி பெறவேண்டுமென உத்தரவிடப்பட்டிருக்கிறது. ஆயினும் இந்தி மொழியில் ஒரு குறிப்பிட்ட வகுப்புக்கான தேர்வு தேறவேண்டும் என்று கட்டாயமில்லை" என்று இந்திய உள்நாட்டமைச்சர் பண்டித பந்த் 16—8—60-இல் இந்திய மேல்சபையில் பேசியகாலை குறிப்பிட்டுள்ளார்.

**குறிப்பு:** இந்தி கட்டாயமில்லை, கட்டாயமில்லை என்று அடுத்தடுத்துக் கூறிய வண்ணமிருக்கும் மைய அரசினர் அதே நேரத்தில் 'ஆனால்' என்னும் சொல்லையும் உடன்சேர்த்து மேலே குறிப்பிட்டுள்ளதுபோல் ஊழியர்களில் இன்னின்னார் கட்டாயமாக இந்தி படித்தாகவேண்டும் என்ற உத்தரவையும் ஊடே புகுத்தியிருப்பதுதான் வருந்தத்தக்க செய்தி. ஒருபுறம் இந்தித் திணிப்பு இல்லை என்ற பேச்சு. மற்றொருபுறம் இந்தித் திணிப்புக்கான ஏற்பாடுகள்! என்னே விந்தை! இங்ஙனம் முன்னுக்குப்பின் முரண்பாடுடைய போக்குக்கள் மக்களாட்சிப் பண்புக்கு மாறானது; அதனை நாடு, அதிலும் சிறப்பாகத் தென்னகம் ஒருகாலும் ஏற்காது.

**(உ) நீங்களும் நாங்களும்!**

"இந்தியை எங்கள் மீது திணிக்கவேண்டாமென்று நீங்கள் கூறுகிறீர்கள். அதுபோலவே ஆங்கிலத்தை எங்கள்மீது திணிக்காதீர்கள் என்று நாங்கள் கூறுகிறோம்" என்று 15—8—60 இல் சென்னைப் பொதுக்கூட்டத்தில் பேசிய இந்தியக் குடியரசுத் தலைவர் குறிப்பிட்டார்.

**குறிப்பு:** ஒரு மொழி திணிக்கப்படுகிறது என்பது வேறு; பல காலம் இந்நாட்டில் நிலவியதும், உலகப் பொது மொழியாகவும் இந்தியைவிடப் பண்பிலும் பயனிலும் சிறந்ததான ஆங்கிலமே பொது மொழியாகட்டும் என்று கூறுவது வேறு. முன்னது ஆட்சியாளரின் ஆணை வழித்தோன்றுவது பலருடைய எதிர்ப்புக்கிடையே பிடிவாதமாகப் புகுத்தப்படுவது - தென்னாட்டில் தேவையில்லாத இடங்களில் தேவையில்லாத வகையில் 'மைல் கல்' போன்ற அறிவிப்புக்களில் கூட இந்தி எழுத்துக்களைப் பொறிக்கச் செய்வது. பின்னது நல்லது - நாட்டுக்கும் காலத்துக்கும் ஏற்றது - பொதுமையாதற்குரிய பெற்றிவாய்ந்தது என்று நயமான முறையிலே நல்லோர் பலர் நவில்வது. இந்த எளிய உண்மையை உணராமல் இந்திய நாட்டின் மாபெருந் தலைவர் 'நீங்கள்' 'நாங்கள்' என்று பிரித்துப் பேசியிருப்பது வருந்தத்தக்கது. குடியரசுத் தலைவரின் இந்தப் பேச்சு வடநாட்டார் உளப்பாங்கை எடுத்துக்காட்டும் பெற்றியதாய் இருத்தலும் ஈண்டு நோக்கற்பாலது.

(ஈ) இந்தியை எதிர்த்து மாணவர் எழுச்சி

"இந்தியாவின் ஆட்சிமொழி பற்றிக் குடியரசுத் தலைவர் சென்னைக் கடற்கரையில் நிகழ்த்திய உரை ஏமாற்றமளிப்பதாக இருக்கி... ...ப்பைக் கைவிட அரசியல் சட்டத்தைத் திருத்துங்கள்" என்று வலியுறுத்துமுகத்தான் 16—8—60 இல் சென்னையிலுள்ள கல்லூரி மாணவர்கள் நகரில் ஊர்வலமாக வந்தனர்.

**குறிப்பு:** மொழி நாட்டுக்கு உயிர். அதனைக் காக்க எழுவது அறிவுடையோர் செயல். அறிவுலகின் முன்னணியில் நிற்கும் மாணவர்கள் இதில் ஈடுபட்டதில் தவறு ஏதும் இல்லை.

(உ) பாராட்டுகிறோம்

கடந்த 4—8—60 இல் கூடிய தி. மு. கழகச் செயற்குழுவின் ...ட்டத்தில், கீழ்க்காணும் முடிவு செய்யப்பெற்றது.

"இந்தி குறித்து குடியரசுத் தலைவர் பிரசாத், தலைமை அமைச்சர் நேரு, உள்நாட்டு அமைச்சர் பந்த் ஆகியோர் அளித்த வாக்குறுதிகள் மனநிறைவு அளிக்கக்கூடிய வகையில் அமைந்திருப்பதால் சென்னைக்கு வரவிருக்கும் குடியரசுத் தலைவருக்குக் கறுப்புக் கொடி காட்டுவது என்ற முடிவைக் கை விடுவதெனத் தீர்மானிக்கிறது."

**குறிப்பு:** குடியரசுத் தலைவரின் பெருமைக்கு ஊறுசெய்வது தமிழரின் நோக்கமன்று. ஆயினும் இந்தித் திணிப்பால் ஏற்பட்ட மனக் கசப்பு கறுப்புக்கொடி காட்டத் துணியும் அளவுக்குச் சென்றது. நல்ல வேளையாக மைய அரசின் அமைச்சர்கள், நல்வாக்குத் தந்து இத்தகைய சூழ்நிலையை மாற்றினர். அங்ஙனம் வரும் பொருளறிந்து நடந்து கொண்ட அவ்வமைச்சர்களையும், அவர்களுடைய சொற்களுக்கு மதிப்புத் தந்து, தமிழகத்தின் பண்பாட்டைக் காப்பாற்றிய தி. மு. கழகத்தினரையும் பாராட்டு...

(ஊ) சென்னை மாகாணத் தமிழ்ச்சங்க வெள்ளி விழா

இவ்விழா ஆகஸ்டு 24 ஆம்நாளில் சென்னை இராசாசி மண்டபத்தில் மிக்க சிறப்பாகத் தொடங்கப்பட்டது. சென்னை மாநில முதலமைச்சர் திரு. காமராசர் அவர்கள் விழாவினைத் தொடங்கி வைத்தார்கள்.

அண்ணாமலைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் திரு. தி.மு. நாராயண சாமிப் பிள்ளையவர்கள் விழாவிற்குத் தலைமை தாங்கினார்கள். உயர்நீதி மன்ற நடுவர் திரு. மா. அனந்தநாராயணன் அவர்கள் வரவேற்புரை நிகழ்த்தினார்கள். சென்னை மாகாணத் தமிழ்ச் சங்க வரலாற்றைச் சங்க அமைச்சர் திரு. இ. மு. சுப்பிரமணியபிள்ளை யவர்கள் எடுத்துரைத்தனர். சங்கத்தின் வெள்ளி விழாவை யொட்டித் "திருமுருகாற்றுப் படை நூல்" வெளியிடப்பட்டது. இந்நூலை அறநிலையப் பாதுகாப்புத் துறை ஆணையாளர் திரு. ஏ. உத்தண்டராமனவர்கள் வெளியிட்டனர்.

சென்னை மாநில ஆளுநர் திரு. விஷ்ணுராம் மேதி, திருப்பனந்தாளாதீனம், திரு. கருமுத்து தியாகராசச் செட்டியார் ஆகியோரிடமிருந்து வந்த வாழ்த்துச் செய்திகளை திரு. இ. மு. சு. அவர்கள் படித்தார்கள். திரு. அ. மு. பரமசிவானந்தமவர்கள் நன்றி கூற விழா இனிது நிறைவுற்றது.

# மதிப்புரை

**"இலக்கியப் படைப்பு"**

(முதற்பாகம்) விலை ரூபா ஒன்று. கிடைக்குமிடம்: 'மலை நிலையம்' வேம்படித் தெரு, திருநெல்வேலி நகர். இதன் ஆசிரியர் வித்துவான் நெல்லை, க. சுப்பிரமணியன் அவர்கள் தலைமைத் தமிழாசிரியர், பேரன்பு ரூக் உயர்நிலைப்பள்ளி, சுரண்டை.

இதன்கண் 'இளமைப் பருவம்' முதல் 'உரைப்பாட்டு நடை' ஈருகப் ...ந்து கட்டுரைகள் காணப்படுகின்றன. கட்டுரைகள் அனைத்தும் கற்பார்க்குப் பயன்படுமுறையில் சிறப்பாக அமைந்துள்ளன. இப்புத்தகம் எழுபத்துநான்கு பக்கங்களைக் கொண்டு திகழ்கின்றது. புறநானூறு முதலிய சஙகநூற் பாடலும் பிறவும் பொருத்தமான இடங்களில் எடுத்துக்காட்டப்பட்டுள்ளன. செந்தமிழன்பர்கள் வாங்கிக் கற்று இன்பம் எய்துவார்களாக.

**"சுன்னுகம் செல்லாச்சி அம்மையார் நினைவு மலர்"**

...நவாளர் ச அம்பிகைபாகன் அவர்களால் தொகுக்கப்பட்டுள்ளது. இதன்கண் அம்மையாரின் வரலாற்று நிகழ்ச்சிகள் பெரும்புலவர்கள் கு. அம்பலவாண பிள்ளை, சுன்னுகம், செ. மயில்வாகனம், அளவெட்டி த. கணபதிப்பிள்ளை. அளவெட்டி, கலைப்புலவர் க. நவரத்தினம், ஆகியவர்களால் சிறந்தமுறையில் கட்டுரை வாயிலாக வெளியிடப்பட்டுள்ளன இந்து சாதன முதலிய செய்தித்தாள்களில் வந்தனவும் சேர்க்கப்பட்டுள்ளன. அம்மையார் இல்லற வாழ்வில் நடந்துகொண்ட எழின்முறையும் தவவாழ்வில் நடந்துகொண்ட சால்பும், இறைவன் திருவருள் கைகூடிய இயல்பும், அதனுல் நிகழ்ந்த அருள் நிகழ்ச்சிகளும் பிறவும் நன்கு விளக்கப்பட்டுள்ளன. திருவாசக முதலிய திருமுறைகளிலிருந்து மேற்கோள்கள் காணப்படுகின்றன. இந் நூல் செந்நெறி நிற்பார் அனைவர்கட்கும் இன்றியமையாத வேண்டத்தக்க வழிகாட்டி நூலாகும். சமயச் சார்பினரனைவரும் வாங்கிக் கற்றுப் பேறெய்துவார்களாக. ஸ்ரீகாந்தா அச்சகம், காங்கேசன் துறை வீதி, யாழ்ப்பாணம்.

**'கிறிஸ்தவக் கம்பன் கிருஷ்ணபிள்ளை'**

ஆசிரியர் வித்துவான் D. G. தங்கராசனுர் அவர்கள், விலை ரூபா ஒன்று. வெளியிடுவோர்: திருமறைப் போதகர் திரு. S. தாமஸ் ரத்தினம் அவர்கள் நாசரேத்து. செந்தமிழ் நாட்டுக் கிறித்துவ அன்பர்கள். இப்பொழுது அழகிய முறையில் கிறித்துவ நெறி உண்மைகளையும் கிறித்துவத்தைத் தழுவிய செந்தமிழ்ப்புலவர்கள், அன்பர்கள், செல்வர்கள் முதலியோர் வரலாறுகளையும் வெளியிட்டு வருகின்றனர். இது வரவேற்றுப் போற்றற்குரியதொன்று. அம் முறையில் இந் நூல் நம் பெரும்புலவர் கிருட்டிண பிள்ளையவர்களின் அரிய வரலாருகும். இவர்களியற்றியுள்ள 'இரட்சணிய யாத்திரிகம்', 'இரட்சணிய மனேகரம்', 'இரட்சணிய சமய நிர்ணயம்' முதலிய தமிழ் நூல்கள் மிகவும் சிறந்தன. செய்யுட்கள் பெரும்பாலும் கவிச் சக்கரவர்த்தி கம்பரை யொத்திருப்பதால் கம்பரெனப் பெயர் பெற்றனர். அத்தகைய பெரியார் வரலாறு தமிழ் கற்றூர்க்கும், கற்பார்க்கும், புலவர்கட்கும், நெறிநிற்பார்க்கும் பெருந்துணை புரிவது. ஆதலால் அனைவர்களும் வாங்கிக் கற்று நல

**'கைலாச மகாரிஷி சரித்திரம்'**

விலை அணா எட்டு. கிடைக்குமிடம்: S. தாமஸ் இரத்தினம், நாசரேத்து P O, திருநெல்வேலி. Dt. இந் நூல் திரு. **தாமஸ் இரத்தினம்** அவர்களால் தொகுக்கப்பெற்றது. திருக்கைலாயமலை தொன்று தொட்டுச் செந்நெறியின் விழுமிய முழு முதல்வன் சிவபெருமான் கெழுமிய திருமலையென்பது உலகறிந்த வுண்மையாகும். அம்மலையின் திருத்தோற்றமே அவ்வுண்மையினை யுணர்த்தும. அஃதாவது அருவுருவப் பிழம்பாம் சிவலிங்கத்தின் அரும்பெருந் தோற்றமாகவே அது காட்சியளிப்பதாகும். இம் மலையினைத் தங்கள் நெறியின் வீடுபேறடையும் இடமெனச் சமணர் கூறுகின்றனர். புத்தர்கள் ஆங்குறைந்து வழிபட்டு வருகின்றனர். சிவனெறிச செல்வர்களாகிய முனிவர் முதலாயினோர் என்றுமே ஆண்டுள்ளனர்.

இப்பொழுது இந்நூலால் கிறித்துவர்களும் அத்திருமலை அமைதியும் மெய்யுணர்வும், அன்பும், இன்பமும் பெருகுவதற்குச் சிறந்த வாய்ப்பிடமாகக் கொண்டு ஒரு கிறித்துவப் பெரியவர் தவம் புரிவதால் தங்களுக்குச் சிறந்ததெனக் கருதுவதாகத் தெரிகின்றது. அப்பெரியவர் 318 அகவையினராய் இன்னும் தவம் புரிந்துகொண்டிருப்பதாகத் தெரிகிறது. அவர் தம்முடம்பினை விட்டு ஆவி வடிவில் வெளியுலகங்கட்குச் சென்று ஆண்டாண்டுள்ள செய்திகளை யறிந்து மீண்டும் தம்முடலகத்து வந்து தங்கித் தவம் புரிந்து வருகின்றாரெனவுந் தெரிகின்றது. மேலும் தூய ஆவிகளின் நிலைமையும், தீய ஆவிகளின் நிலைமையும், ஆவியுலக வுண்மையும், அவ் ஆவிகளின் எண்ணமுஞ் செயலும் நன்கு விளக்கப்பட்டுள்ளன. கிறித்தவ நெறியின் முதன்மைக் கொள்கைகள் வரலாற்று நிகழ்ச்சிகளுடன் வரையப்பட்டுள்ளன தெய்வ நாட்டங் கொள்ளத் தூண்டும் வகையில் இஃது அமைந்துள்ளது. இதனை ஒவ்வொருவரும் கற்றுப் பயனெய்துவார்களாக.

கொடுமை! கொடுமை!!

**இந்தி கட்டாயமாகிறது**

"உயர்நிலைப் பள்ளிப் படிப்பை முடிக்கும் ஒவ்வொரு மாணவருக்கும் இந்தி தெரிந்திருக்க வேண்டும். இந்திய அரசினுடைய மும்மொழிக் கொள்கையின் முக்கிய கூறு இதுவே."

மைய அரசின் கல்வி அமைச்சர்
டாக்டர். கே. எல். ஸ்ரீமாலி
(29-8-60 இல் மக்கள் மன்றத்தில் கூறியது)



திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை, 2-140, பிராட்வே, அப்பர் அச்சகத்தில், திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர்: வ. சுப்பையா.

# கழக 1008 ஆவது வெளியீட்டு விழாச் செயற்குழு



முதற்கூட்டம், சென்ற 2—10—1960 அன்று டாக்டர், வ. சிதம்பரநாதன் செட்டியார் அவர்கள் தலைமையில் நடைபெற்றது.



சென்னைவாழ் தமிழறிஞர் பலர் வருகை புரிந்து விழாவிற்குக்கான சிறந்த செயல்திட்டங்களை ஆய்ந்து கூறினர்.





| | | |
|---|---|---|
| சிலம்பு ௩௫ | திருவள்ளுவர் ஆண்டு ௧௯௯௧, புரட்டாசி<br>அக்டோபர், 1960 | பரல் ௨ |


# உயிர்கள் இயங்கும் உலகமும் எண்ணில

"விடையானை மேலுலகேழும் இப் பாரெல்லாம்
உடையானை யூழிதோ றூழி யுளதாய
படையானைப் பண்ணிசை பாடு மணஞ்சேரி
அடைவானை யடையவல் லார்க்கில்லை யல்லலே."—உ. ௧௬. ௪.

இத்திருமாமன்றத் திருப்பாட்டால் மேலுலக மேழும் நிலவுலக மெல்லாமும் உடையான் சிவபெருமான் என்பது தெளிய உணரக் கிடக்கின்றது. இதுபோன்றே திருமுறைகள் அனைத்தினும் பல திருப்பாட்டுக்கள் காணலாம். அவற்றை எடுத்தெழுதின் இக்கட்டுரை மிக விரிவெய்தும். அதனால் அவற்றைக் காண விழைவோர் திருமுறைகளில் கண்டுகொள்வார்களாக. அப்பர் பெருமானும் 'எல்லா வுலகமும் ஆனாய் நீயே' என்றருளினர். அதுபோல் போற்றிப் பஃறொடைக்கண் கண்ணி ௫௫ இல் 'எல்லா உலகும் எடுப்புண் டெடுப்புண்டு' என வருதலுங் காண்க.

பரிபாடலின்கண் பாடல் ௩, வரி ௯. 'மூவே ழுலகமு முலகினுள் மன்பதும்' என்பதன் கண்ணும் மூவேழுலகம் குறிக்கப் பட்டுள்ளது. திருமுருகாற்றுப்படையின்கண் வரி ௧௬௭. 'நால்வே றியற்கைப் பதினொரு மூவரொடு, ௧௬௮. ஒன்பதிற் றிரட்டி உயர்நிலை பெறீஇயர்' என வருவதுங் காண்க. உயர்நிலை யுலகம்—தேவருலகம். இவ்வுண்மை வருங் குறுந்தொகைப் பாட்டானுணாக:

"அம்ம வாழி தோழி யன்னைக்
குயர்நிலை யுலகமுஞ் சிறிதா லவர்மலை

மாலைப் பெய்த மணங்கம ழூநதியொடு
காலை வந்த காந்தண் முழுமுதல்
மெல்லிலை குழைய முயங்கலும்
இல்லுய்த்து நடுதலுங் கடியா தோளே." (௩௬௧)

இவ்வுயர்நிலை யுலகினைப் புறநானூற்றின்கண் அரிதுசெல் உலகு எனக் கூறப்பட்டுள்ளது. அது வருமாறு: வளரத் தொடினும்.......(வரி ௨௧) அரிதுசெல் லுலகில் சென்றனன்....... இதனை வீரசுவர்க்கம் எனவுங் கூறுப. ஈண்டுச் செல்வோர் வீர யாக்கையினை மேற்கொண்டு செல்வர் என்ப. அவ்வுண்மை வருமாறு:

"உதியர் மன்னவர் தம்பெருஞ் சேனையி
னுடன்சென்ற படைவீரர்
கதிகொள் வாசிபிற செல்பவர் தம்மைத்தங
கட்புலப் படுமெல்லை
யெதிர்வி சும்பினிற் கண்டுபின் கண்டில
ராதவி னெல்லாரு
முதிரு மன்பினி லுருவிய சுரிகையான்
முறைமுறை யுடல்வீழ்த்தார்."

"வீர யாக்கையை மேல்கொண்டு சென்றபோய்
வில்லவர் பெருமானை
சார முன்சென்று சேவக மேற்றனர்
தனிநெடுந் தொண்டர் மேல்கொண்ட
வாரு மும்மதத் தருவிவெள் ளானைக்கு
வயப்பரி முனைந்துச்
சேரர் வீரருஞ் சென்றனர் மன்றவர்
திருமலைத் திசைநோக்கி"

—கஉ. வெள்ளானைச்-௩௭, ௩௮.

சீர்த்திமிக்காரும் உயர்நிலை யுலகம் பெறும் உண்மையினை வருமாறு காண்க.

"சேற்றுவளர் தாமரை பயந்த வொண்கேழ்
நூற்றிதழ் அலரி னிரைகண் டன்ன
வேற்றுமை யில்லா விழுத்திணைப் பிறந்து
வீற்றிருந் தோரை எண்ணுங் காலை
உரையும் பாட்டு முடையோர் சிலரே
மரையிலை போல மாய்ந்திசினோர் பலரே
புலவர் பாடும் புகழுடையோர் விசும்பின்
வலவ னேவா வான வூர்தி
எய்துப வென்பதஞ் செய்வினை முடித்தெனக்

—புறம். ௨௭.

'வலவ னேவா வானவூர்தி' - விண்ணிழி விமானம்'

அழுதேங்கி நிலத்தின்வீழ்ந் தாயிழையா டன்கணவன்
றொழுதகைய திருந்தடியைத் துணைவளைக்கை யாற்பற்றிப்
பழுதொழிந் தெழுந்திருந்தான் பல்லமரர் குழாத்துளா
னெழுதெழின் மலருண்க ணிருந்தைக்க எனப்போனான்."
—சிலப்பதிகாரம், கக. ஊர்சூழ்வரி.

"மாநீர்... ... ... ...
மலைமிசை மாக்க டலைமிசைக் கொண்டாங்
கேழ்பிறப் படியேம் வாழ்கநின் கொற்றங்
கான வேங்கைக் கீழோர் காரிகை
தான்முலை யிழந்து தனித்துய ரெய்தி
வானவர் போற்ற மன்னொடுங் கூடி
வானவர் போற்ற வானகம் பெற்றனள்." — காட்சிக்காதை.

"குணவாயிற்... ... ... ...
ஒருமுலை யிழந்தாளோர் திருமா பத்தினிக்
கமரர்க் கரசன் றமர்வந் தீண்டியவள்
காதற் கொழுநனைக் காட்டி யவளொடெங்
கட்புலங் காண விட்புலம் போய
திறம்பூது போலுமஃ தறிந்தரு ளீயென." —,, பதிகம்

"குமரியொடு... ... ...

*செங்குட்டுவன் கூற்று

என்னேயிஃ தென்னேயிஃ தென்னேயிஃ தென்னேகொல்
பொன்னஞ் சிலம்பிற் புனைமே கலைவளைக்கை
நல்வயிரப் பொற்றோட்டு நாவலம் பொன்னிழைசேர்
மின்னுக் கொடியொன்று மீவிசும்பிற் றோன்றுமால்.

செங்குட்டுவற்குக் கண்ணகியார் கடவுணல்லணி காட்டியது.

தென்னவன் றீதிலன் தேவர்கோன் றன்கோயி
னல்விருந் தாயினா னானவன் றன்மகள்
வென்வேலான் குன்றில் விளையாட்டு யானகலே
னென்னோடுந் தோழிமீ ரெல்லீரும் வம்மெல்லாம்"
— ,, உக. வாழ்த்துக் காதை.

* இவ்விரண்டு பாட்டுக்களாலும் நம்மினின்று பிரிந்த நல்லுயிர்கள் உயர்நிலை யுலகம் பெறுதலும், வேண்டும் அன்பர்களின் பொருட்டுக் காட்சியளித்தலும் அவர் புரியும் வழிபாட்டினை ஏற்று வரமளித்தலும், அவர்களோடு கூடி ஆடலும் பாடலும் மகிழலும், உயர்நிலையுலகத் துறைதலும் பிறவும் இஞ்ஞான்றை ஆவியுலகத்தார் விரும்பிப் புரியும் செயல்களோ டொத்தனவாகும் என அறியலாம்.

சிவபெருமானைத் தொழும் மெய்யடியார்களை உயர்நிலை யுலகத்துத் தேவர்கள் வந்து தொழும் உண்மையினை வருந் திருப்பாட்டுக்களானுணர்க:

"முழுத்தழன் மேனித் தவளப் பொடியன் கனகக்குன்றத்
தெழிற்பாஞ் சோதியை யெங்கள்பி ரானை யிகழ்திர்கண்டீர்
தொழப்படுந் தேவர் தொழப்படு வானைத் தொழுதபின்னைத்
தொழப்படுந் தேவர்தம் மாற்றொழு விக்குந்தன் றொண்டரையே."
—ச. ககரு-ரு.

"இந்திரன் மால்பிரமன் னெழிலார்மிகு தேவரெல்லாம்
வந்தெதிர் கொள்ளவென்னை மத்தயானை யருள்புரிந்து
மந்திர மாமுனிவ ரிவனாரென வெம்பெருமான்
நந்தமரூரனென்று நொடித்தான்மலை யுத்தமனே."—எ. க00-க.

"வான நாடர்க ளரியயன் முதலினோர்
வணங்கிமுன் விடைகொண்டு
ஆந லந்திகழ் சோதிவெள் ளானையுங்
கொண்டுவன் றொண்டர்க்குத
தேன லம்புதண் சோலைசூழ் மகோதையிற்
றிருவஞ்சைக் களஞ்சேரக்
கானி லங்கொள வலங்கொண்டு மேவினர்
கடிமதிற் றிருவாயில்." —கஉ வெள்ளானைச்-௩உ.

தேவரினும் மேம்பட்ட முனிவரரும் மெய்யடியார்களைத் தொழுவர் என்னும் உண்மை வருந்திருப்பாட்டானுணர்க:

"சம்பு வின்னடித் தாமரைப் போதலால்
எம்பி ரானிறைஞ் சாயிது வென்னெனத்
தம்பி ரானைத்தன் னுள்ளந் தழீஇயவன்
நம்பி யாரூர னுந்தொழுந் தன்மையான்."–கஉ. திருமலைச். கக.

"பிணத்தினை ஒத்து வாழ்வோர் பின்னடைப் பிணங்கள் போல
உணக்கியே உழல்வீர் உங்க ளுடலுயிர் உணர்வு மெல்லாம்
கணத்திடைத் தோன்றி மாயும் காயமென் றறிந்தொ ருக்கால்
வணக்குறீர் அரனை என்றும் வானவர் வணங்க வைப்பன்."
—சிவஞானசித்தியார், உ-ச-உச.

இவ்வுயர்நிலை யுலகினைப்பற்றிச் செந்தமிழ்ப் பொதுமறை யருளிய தெய்வப் புலமைத் திருவள்ளுவ நாயனார் பலவிடங்களில் அருளிச்செய்துள்ளார். விரிவஞ்சி ஒன்றிரண்டு காட்டுதும்:

"நிலவரை நீள்புகழ் ஆற்றின் புலவரைப்
போற்றாது புத்தே ளுலகு." —திருக்குறள், உ௩ச.

“ தாம்வீழ்வார் மென்றோட் டுயிலின் இனிதுகொல்
தாமரைக் கண்ணான் உலகு.” — ,, ககOரு.

“ பெற்றாற் பெறிற்பெறுவர் பெண்டிர் பெருஞ்சிறப்புப்
புத்தேளிர் வாழு முலகு.” —ருஅ.

வானோர்க்குயர்ந்த வுலகாகிய செம்பொருட் சிவனார் திரு வுலகமும் நாயனாரால் அருளப்பட்டது காண்க:

“ யானென தென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க்
குயர்ந்த உலகம் புகும்.” —ருசசு.

வானோர்க்குயர்ந்த உலகவுண்மை வருந் திருமாமறைமுடி பானும் உணர்க :

“ இந்திரனும் மாலயனும் ஏனோரும் வானோரும்
அந்தரமே நிற்கச் சிவனவனி வந்தருளி
எந்தரமும் ஆட்கொண்டு தோட்கொண்ட நீற்றனாய்ச்
சிந்தனையை வந்துருக்குஞ் சீரார் பெருந்துறையான்
பந்தம் பரியப் பரிமேற்கொண் டான்தந்த
அந்தமிலா ஆனந்தம் பாடுதுங்காண் அம்மானாய்.”
—அ. திரு அம்மானை - ரு.

இதுபோல் இருளுலகக் குறிப்பும் எல்லா நூல்களிலும் யாம் காணலாம். விரிவஞ்சி ஒன்றிரண்டு காட்டுதும் :

“ எருமை யன்ன கருங்கல் லிடைதோ
றானிற் பரக்கும் யானைய முன்பின்
வானக நாடனை நீயோ பெரும
நீயோ ராகலி னின்னொன்று மொழிவல்
ரு. அருளு மன்பு நீக்கி நீங்கா
நிரயங் கொள்பவரொ டொன்றாது காவல்
குழவி கொள்பவரி னோம்புமதி
அளிதோ தானேயது பெறலருங் குரைத்தே.” —புறம். ரு.

“ மண்ணிய சென்ற வொண்ணுத லரிவை
புனறரு பசுங்காய் தின்றதன் தப்பற்
கொன்பதிற் றொன்பது களிற்றோ டவணிறை
பொன்செய் பாவை கொடுப்பவுங் கொள்ளான்
ரு. பெண்கொலை புரிந்த நன்னன் போல
வரையா நிரையத்துச் செலீஇயரோ வன்னை
ஒருநாள் நகைமுக விருந்தினன் வந்தெனப்
பகைமுக வூரிற் றுஞ்சலோ விலளே.” —குறுந்தொகை, உகஉ.

ந்னுவுலகம் - நரகம்; நிரையம்.

"உண்ணாமை யுள்ள
அண்ணாத்தல் செய்யா தளறு." —திருக்குறள், உ௫௫.

அளறு - நரகம்.

"யாண்டு தலைப்பெயர வேண்டு புலத்திறுத்து
முனையெரி பரப்பிய துன்னருஞ் சீற்றமொடு
மழைதவழ்பு தலைஇய மதின்மர முருக்கி
நிரைகளி றொழுகிய நிரைய வெள்ளம்."—பதிற்றுப்பத்து, க௫.

நிரையம் - நரகம்.

"நரக மேழ்புக நாடின ராயினும்
உரைசெய் வாயின ராயி னுருத்திரர்
விரவி யேபுகு வித்திடு மென்பரால்
வரதன் நாம நமச்சி வாயவே." —ங. ௪௧ - ௭.

"நான்முகன்...
மூவேழ் சுற்றம் முரணுறு நரகிடை
ஆழா மேயரு ளரசே போற்றி."
—அ. போற்றித் திருவகவல் - வரி ௧௧௮.

"அரசனுஞ் செய்வ தீச னருள்வழி யரும்பா வங்கள்
தரையுளோர் செய்யிற் றீய தண்டலின் வைத்துத் தண்டத்
துறைசெய்து தீர்ப்பன் பின்பு சொல்வழி நடப்பர் தூயோர்
நிரயமுஞ் சேரா ரந்த நிரயமுன் னீர்மை யீதாம்."
'யார், உ. உ. உக.

துறை - மிகுதிப்பாடு.

உயர்நிலையுலகத் தின்பவாழ்வும், செயிருறு நிரையத்துன்ப வாழ்வும் ஒருங்கு தொகுத்து ஓதியது வருமாறு:

"பூமன்னு...
நாணாள் வரையி லுடல்பிரித்து நல்வினைக்கண்
வாணாளின் மாலா யயனுகி—நீணாகர்
வானுடர் கோமுதலாய் வந்த பெரும்பதத்து
நானு விதத்தா னலம்பெறுநாள்—தான்மாள
வெற்றிக் கடுந்தூதர் வேகத் துடன்வந்து
பற்றித்தம் வெங்குருவின் பாற்காட்ட—இற்றைக்கும்
இல்லையோ பாவீ பிறவாமை யென்றெடுத்து
நல்லதொ ரின்சொ னடுவாகச்—சொல்லியிவர்
செய்திக்குத் தக்க செயலுறுத்து வீரென்று
வெய்துற் றுரைக்க விடைகொண்டு—மையறருஞ்

சகூ. செக்கி னிடைத் திரித்துந் தீவாயி லிட்டெரித்துந்
தக்க நெருப்புத்தூண் டழுவுவித்து—மிக்கோங்கு
நாராசங் காய்ச்சிச் செவிமடுத்து நாவரிந்து
மீராவுன் னூனைத்தின் னென்றடித்தும்—போமல்
அங்காழ் நரகத் தழுத்துவித்தும் பின்னுந்தம்
வெங்கோப மாறாத வேட்கையரா—யிங்கொருநாள்
எண்ணிமுதற் காணாத வின்னாற் கடுநரகம்
பன்னெடுநாட் செல்லும் பணிகொண்டு—முன்னாடிக்
கண்டு கடன்கழித்தல் காரியமா மென்றெண்ணிக்
கொண்டுவரு நோயின் குறிப்பறிவார்—மண்டெரியிற்
காய்சசிச சுடவறுக்கக் கண்ணூரிக்க நன்னிதிய
மீய்ததுத்தாய் தந்தைதம ரின்புறுதல்—வாய்த்தநெறி
யோடியதே ரின்கீ ழுயிர்போன கன்றாலே
நீடுபெரும் பாவமின்றே நீங்குமென—நாடித்தன்
மைந்தனையும் ஊர்ந்தோன் வழக்கே வழக்காக
நஞ்சனைய சிந்தை நமன்றூதர்—வெஞ்சினத்தா
லல்ல லுறுத்து மருநரகங கண்டுநிற்க
வல்ல கருணை மறம் போற்றி.'' —போற்றிப்பஃறொடை

''மடித்தாடு மடிமைக்க ணன்றியே
மனனேநீ வாழு நாளுந்
தடுததாட்டித் தருமனூர் தமர்செக்கி
லிடும்போது தடுத்தாட் கொள்வான்
கடுத்தாடு கரதலத்திற் றமருகமு
மெரியகலுங் கரிய பாம்பும்
பிடித்தாடிப் புலியூர்ச்சிற் றம்பலத்தெம்
பெருமானைப் பெற்றா மன்றே.'' —எ. கூ0 - க.

இன்னும் இவற்றின் விரிவுகளும் விளக்கங்களும் பொது வாகத் தமிழ்நூல்களுட் பரக்கக் காணலாம். சிறப்பாகச் செந் தமிழ்ச் சிவஞான போதத்துப் பேருரைக்கண் தெளியக் கண்டு கொள்ளலாம்.

தொகுத்துக் கூறும் பிங்கலந்தை நூற்பா வருமாறு:

'' அமரர் சித்த ரசுரர் தைத்தியர்
கருடர் கின்னரர் நிருதர் கிம்புருடர்
காந்தருவ ரியக்கர் விஞ்சையர் பூதர்
பசாசர் அந்தரர் முனிவ ருரகர்
ஆகாய வாசியர் போகபூ மியரெனப்
பாகு பட்டன பதினெண் கணமே.'' —பிங்கலந்தை, கூஉ

# மாதரி மாண்பு

[திரு. சாமி. செல்வவிநாயகன்]

சிலப்பதிகாரம் செந்தமிழ்நாட்டார்க்குக் கிடைத்த பெருஞ் செல்வம். தமிழகம் பெற்றுள்ள தனிப்பெரு நாடகக் காப்பியம். இசைத்தமிழ் இயல்பையும் நாடகத்தமிழின் நலத்தையும் காட்டி இவை யிரண்டுமிணைந்த இயற்றமிழ் தன்னைக் கருவியாகக்கொண்டு தமிழகப் பண்பு நாகரிகத்தையும் வரலாற்றுக் குறிப்புக்களையும் கொண்டியல்வதே சிலம்பின் சிறந்த தனிப்பெருமை. சிலப்பதி காரத்தில் கோதற்ற கோவலனும் கற்பென்னுந் திண்மை யுண்டாகப்பெற்ற கண்ணகித்தாயும், தீதிலாத் தென்னவனும் கற்பின் இணைச் சிமையங்களான மாதவியும் கோப்பெருந்தேவியும் மாதவத்தாட்டியான கவுந்தியடிகளும் உணர்ச்சித்திறங்களோடு வாழ்கின்றார்கள். இவர்களைத் தவிரப் பற்பல சிறிய பாத்திரங்கள் சிலம்பில் முழுவொளி வீசும் மாணிக்கங்களாக இறைந்துகிடக் கின்றார்கள். நாடகப்பண்பு தழீஇய இப் பாத்திரங்களினூடே மாதரி என்னும் மடந்தை பெருவாழ்வு வாழ்கின்றாள்.

முதன்முதலில், மாதரியை நாம் காண்பது அடைக்கலக் காதையில். கண்ணகி, கோவலன், கவுந்தி மூவரும் மாதரியைக் காண்கின்றார்கள். மாதரி, "புறஞ்சிறை மூதூர்ப் பூங்க ணியக் கிக்குப் பான்மடை கொடுத்துப் பண்பிற்" பெயர்கின்றாள். கவுந்தி யைக் காண்கின்றாள். கண்டவுடன் பணிகின்றாள். "பணியுமாம் என்றும் பெருமை." என்றதற்கு இயைய இது மாதரியின் அறவோர்ப் போற்றும் நெஞ்சத்திற்கோர் எடுத்துக்காட்டு. இளங்கோவடிகள் கவுந்தியின் வாயிலாக மாதரியை நமக்குக் காட்டுகின்றார். கவுந்தியையை துறவி. தெளிவான நெஞ்சங் கொண்டவள். அவளே போற்றும் அளவிற்குச் சிறந்தவள் மாதரி. மாதரி எளிய நாட்டுச்சூழலாள். அறத்தின்மேல் பெரு நம்பிக்கை கொண்டவள். ஆக்கட்கு வெருவும் பிணியுமுற்றுழிக் காத்து, புலத்தலைப் புல்லார்த்தி, அலைத்தலை நீருட்டி காத்துப், பாலினைக் கன்றருத்தி மிக்கதனை யாவர்க்கு மளிக்குங் கோவலர் குலக்கொழுந்து. தீதற்ற நன்னெஞ்சங் கொண்டவள். இல்லறங் காத்துப் பண்பட்ட முதுமகள். செம்மை சான்றவள். அளிக்குந் தன்மையுடையவள்.

"ஆகாத் தோம்பி ஆப்பயன் அளிக்கும்
கோவலர் வாழ்க்கையோர் கொடும் பாடில்லை
தீதிலன் முதுமகள் செவ்வியள் அளியள்
மாதரி." (சிலம்பு, அடைக்கலக் காதை: ௧௨0-௧௨௩)

இத்தகைய மாதரியுடன் கற்பின் செல்வியை [illegible] கேதமின்றென எண்ணினளாகிக் கோவலன் தந்தையைப் பற்றிக் கூறுகின்றாள் மாதவத்தாட்டி. பின்னர், "ஆயிழை தனக்குத் தாயு நீயேயாகித் தாங்கு" என வேண்டிக்கொள்கின்றாள். இதனால் கற்பின் செல்வி கண்ணகிக்குத் தாயாகும் பேறுபெற்ற மாதரியின் பெருமை நன்கு புலப்படும்.

மேலும் கூறும்பொழுது கவுந்தியையை "தவத்தோர் அடைக்கலந் தான்சிறி தாயினும், மிகப்பே ரின்பம் தருமது கேளாய்" என்று கூறுகின்றாள். இத்தகைய மிகப்பேரின்பம் தரும் தவத்தோர் அடைக்கலம் பெற்ற மாதரி பெரியள். ...ும் கண்ணகியையும் அடைக்கலம் தந்த கவுந்தி, ...ியாக "நீட்டித்திராது நீபோ" என்று சொல்ல உவந் தேத்தி நீங்குகின்றாள். இருவரையும் அடைக்கலம் பெற்ற மாதரி நெஞ்சம் அளியது. அரும்பெறற் பாவையை யடைக்கலம் பெற்ற இரும்பேருவகையின் இடைக்குல மடந்தை நம்பியையும் நங்கையையும் செம்மண்பூசிய பந்தலிடப்பட்ட சிற்றிலில் இருத்திப் பெண்கள் சிலருடன் கண்ணகி தேவியைக் குளிப்பாட்டி தன் மகள் ஐயையை அடித்தொழிலாட்டியாக அவர்க்காக்கி "நான் உம்மைப் பொன்போற் பொதிந்து கொள்ளுவேன்; நீர் ஒன்றற்கும் கவலற்க" என்று தேற்றுகின்றாள். தன்மகள் ஐயையை அடித் தொழிலாட்டியாக்கியும் கோவலனை மகனெனப் போற்றியும் அருள் சுரந்து நின்றது அந்தத் தாயுள்ளம். மாதரி தாய்மையில் கரைந்து கரைந்து மூழ்கி வாழ்கின்றாள்.

கண்ணகி தன் கணவற்குத் தானே ஆக்கிப் படைக்க வேண்டும் என்ற பேரவாவினால் "அடிசிலாக்குதற் கமைந்த நற்கலங்கள் நெடியாது அளிமின் நீரெனக்" கூறினாள். மாதரியின் இல்லத்தில் உண்ணாள். கண்ணகி என்ற வேற்றுமை மனப் பான்மையுடன் அங்ஙனம் நவின்றாள் என்றல் பொருந்தாது. இதன் நுட்பத்தை நன்கு உணரவேண்டும். கண்ணகிக்குப் பலாக்காய், வெள்ளரிக்காய், பசிய மாதுளங்காய், மாம்பழம், வாழைப்பழம், சாலியரிசி, பாலுணவுகள் ஆகியவற்றைக் கொடுத் துதவுகின்றாள் மாதரி.

கோவலன் அமுதுண்ணுகின்றான். கண்ணகி பரிமாறு கின்றாள். மாதரியின் தாயுள்ளமும் ஐயையின் உடன்பிறப் புரிமையும் பொங்கி வழிகின்றது. அவர்கள் நினைக்கின்றார்கள்:

"பூவைப் புதுமலர் வண்ணன் கொல்லோ
நல்லமு துண்ணும் நம்பி யீங்குப்
பல்வளைத் தோளியும் பண்டுநங் குலத்துத்

களில் பட்டிகள் அமைக்கலாம் என்று பல உறுப்பினர்கள் பல தலைப்புக்களைத் தெரிவித்தனர். பட்டிகளின் விளக்கங்களை ஆங்கிலத்திலும் தருதல்வேண்டுமென்ற கருத்துப் பல்லோராலும் வரவேற்கப்பட்டது.

தமிழ் இனம், மொழி, பண்பாடு பற்றி வெளிநாட்டு அறிஞர்களும் காந்திபோன்ற பெரியார்களும் வெளியிட்டுள்ள கருத்துக்களைத் தனித்தனி அட்டையில் அழகுற எழுதிவைக்க வேண்டுமென்று முடிவாயிற்று.

சிற்றுண்டிக்குப் பின்னர்க் கழக ஆட்சியாளர் நன்றி கூறுகையில் இந்த நிலப்படங்களும், விளக்கப்பட்டிகளும் அல்லாமல் காட்சியில் வைப்பதற்கெனத் தமிழ்ப் புலவர் உருவப்படங்கள், கடிதங்கள், கையெழுத்துக்கள், வரலாறுகள் ஆகியவையும், அரிய பழம்பதிப்பு நூல்களும், பழம்செய்தித்தாள்களும் தொகுக்கப் பெற்றிருப்பதாகவும், டாக்டர் எஸ். ஆர். அரங்கநாதனவர்கள் நூலக நுண்கலையின்படி கழக 1008 நூல்கட்கும் பட்டி ஒன்று முன்னுரையுடன் எழுதித் தந்திருப்பது அச்சிடப்பெறுகிறதாகவுங் கூறினார்கள். 1008 கழக வெளியீடுகளும் காட்சியில் இடம்பெறும். விழாச் சிறந்தமுறையில் வியத்தகு வெற்றி பெறுவதற்குரிய வழிகளை எடுத்துக் கூறிய செயற்குழு உறுப்பினர்களுக்கு நன்றி தெரிவித்தபின் கூட்டம் 6 மணியளவில் முடிவுற்றது.

## நாகரிகம்

[மேட்டூர் - தேன்மழை]

நண்பரொடும் நந்நாட்டு நற்பெரியார் தம்முடனும்
உண்பரொடும் உண்ணுகடை உள்ளிடத்தும்-எண்ணுவதைப்
பாகுத் தமிழிலன்றிப் பேசாதாம் வேற்றுமொழி
நாகரிகந் தானறிந்த நா !

நம்மவர்க்கு நாமனுப்பும் நல்லழைப்பும் அஞ்சல்களும்
செம்மையுற ஒப்பந்தம் செய்கையும்—நம்முடைய
கையெழுத்து வைக்கையும் செந்தமிழில் தானெழுதும்
கைகளே நாகரிகக் கை !

# மூளைக்கு வேலை

ிரு. N. K. வேலன், B. A.]

ஒருநாள் அந்திவேளையில் யானும் என்னுடைய நண்பரும் கடற்கரையில் உலாவச் சென்றோம். விஞ்ஞான ஆசிரியர் ஒருவர் அங்குவந்து சேர்ந்தார். விண்ணிலே முழுமதி எழுந்து ஒளி வீசிற்று. 'இந்தக் காட்சியைப் பாருங்கள், எவ்வளவு அழகாய் இருக்கிறது' என்றார் நண்பர்;

'நிலவு ஓர் அழகிய உலகம்' என்று தொடங்கினார் விஞ்ஞான ஆசிரியர். 'பூதக் கண்ணாடியின் உதவியால் பார்த்தால் அதில் மலைகளும் பள்ளத்தாக்குகளும் காணப்படுகின்றன. நெடுந்
ில் இருப்பதால் அது நம் கண்ணுக்குச் சிறியதாய்த்
என்றார்.

'நிலவு பூமியிலிருந்து எவ்வளவு தொலைவில் இருக்கிறது' என்று நண்பர் கேட்டார். அது 2, 38, 000 கல்லுக்கு அப்பால் இருப்பதாகக் கணக்கிடப்பட்டிருக்கிறது. இதுவரை எவரும் நிலவு மண்டிலத்தை அடைந்ததில்லை. இப்பொழுது கூடச் சில வீரர்கள் 'ராக்கெட்' ((Rocket) என்னும் விமானத்தின் உதவியால் நிலவுமண்டிலத்திற்குப்போக முயற்சி செய்து வருகின்றனர். அங்குப் போய்ச் சேர்வது அவ்வளவு எளிதன்று. நிலவில் மூச்சுவிடுவதற்குக் கூடக் காற்றுக்கிடையாது' என்று ஆசிரியர்

'நிலவு நமக்கு எட்டாத 'ல என்று நண்பர் பெருமூச்சு விட்டார்.

எங்களுக்கு அருகில் மணலில் விளையாடிக்கொண்டிருந்த குழந்தை அழுதது. பிறகு சிரித்தது. 'அழுவதும் சிரிப்பதும் எதனால்' என்று நண்பர் கேட்டார்.

'சிரிக்கவைப்பதும் அழவைப்பதும் மூளையின் வேலை. அதற்கு ஏற்றபடி மூளை அமைக்கப்பட்டிருக்கிறது. நாம் சிரிக்கும் பொழுது முகத்திலுள்ள தசைகள் எல்லாம் அசைகின்றன. இந்த அசைவுகளைத்தான் நாம் சிரிப்பு என்று சொல்கிறோம். தசைகளின் அசைவினால்தான் அழுகையும் ஏற்படுகின்றது. குழந்தையின் சிறியமூளை அதை அழச்செய்தது. பெரியவர்கள் ஆனபிறகு நாம் மூளையைக் கட்டுப்படுத்தி அழுகை வராமல் அடக்கிக்கொள்கிறோம்' என்று ஆசிரியர் சொன்னார்.

'மூளை எப்படி வேலைசெய்கிறது' என்று நண்பர் கேட்டார்.

'நமது மூளை மிகவும் அருமையாக ஆக்கப்பட்டிருக்கின்றது. ஒளி, ஓசை முதலியவைகளை முதலில் உணர்ந்து கொள்வது மூளை. நாம் இப்பொழுது நினைப்பதும் பல ஆண்டுகளுக்குமுன் நடந்தவைகளை நினைவில் வைத்துக்கொள்வதும் மூளையினால் தான். உணர்ச்சிகளை நரம்புகள் மூளைக்கு எடுத்துச் செல்கின்றன. அங்கிருந்து வேறு நரம்புகள் அவ்வுணர்ச்சிகளைத் தசைகளுக்கு அறிவிக்கின்றன. மூளையின் கட்டளைப்படி தசைகள் ஆடுகின்றன. தந்திக்கம்பியில் செய்திகளை அனுப்புவது போல் இவ்வேலை நடைபெறுகின்றது' என்று ஆசிரியர் கூறினார்.

எங்கள் தலைக்குமேல் வானவூர்தி ஒன்று பறந்து சென்றது! 'மனிதன் எப்படிப் பறக்கக் கற்றுக்கொண்டான்' என்று நண்பர் கேட்டார்.

'முதன் முதலில் மனிதர்கள் இறக்கை கட்டிக்கொண்டு பறவைகளைப்போல் பறப்பதற்கு முயற்சி செய்தார்கள். ஆனால் அம்முயற்சி கைகூடவில்லை. பறவையின் உடலைக் காட்டிலும் நமது உடல் மிகப்பெரியது. பறப்பதற்கு வேண்டிய அளவு பெரிய இறக்கைகள் ஆண்டவன் நமக்கு அளிக்கவில்லை. இதனால்தான் வானவூர்தியில் இறக்கைகளை அமைத்து அதில் ஏறிப் பறக்கிறோம். வானவூர்தியின் இறக்கைகள் மிகப் பெரியனவாய் இருப்பதால் அதை விரைவுடன் காற்றில் இழுத்துச் செல்வதற்கு ஓர் இயந்திரமும் வேண்டி இருக்கின்றது' என்று ஆசிரியர்

நாங்கள் பேசிக்கொண்டு இருக்கும்பொழுது ஒரு வெடி ஓசை கேட்டது. நண்பர் குதித்து எழுந்தார். 'அணுகுண்டு போடுகிறார்களா' என்று கேட்டார். 'அஃதெல்லாம் ஒன்றுமில்லை. அணுகுண்டு போட்டால் சென்னை நகரம் முழுவதும் அழிந்துவிடும். நாம் கேட்கும் வெடிஓசை கோட்டையிலிருந்து தான் வருகின்றது. பீரங்கியில் சுட்டுப் பழகுகின்றார்கள்' என்று சொல்லினர் அவரை மீண்டும் உட்காரவைத்தேன். 'அணுகுண்டு எப்படிச் செய்கிறார்கள்: அதற்கு அவ்வளவு சக்தி ஏது' என்று நண்பர் கேட்டார்.

'ஒரு பொருளின் மிகச் சிறிய பகுதியை அணு என்று சொல்கிறோம். உலகில் காணும் ஆற்றல்கள் எல்லாம் அணுவின் ஆற்றலையே அடிப்படையாகக் கொண்டுள்ளன. அணுவின் உள்ளே தோன்றும் அசைவும் ஆற்றலும் நம் சிற்றறிவிற்கு எட்டாதனவாக இருக்கின்றன. அணுவின் உள்ளே இருக்கும் துணுக்குகள் ஒருபெரிய ஆற்றலினால் கட்டுப்படுத்தப்பட்டுள்

ளன. உள்ளே இருக்கும் மின்சார அணுக்கள் பூமி சூரியனைச் சுற்றுவதுபோன்று அணுவின் உட்கருவைச் சுற்றி ஓடுகின்றன. அணுக்கருவிலுள்ள துணுக்குகள் மின்அணுக்களைவிட மிகுந்த ஆற்றல் உடையனவாய் இருக்கின்றன.

'அணுவிலுள்ள துணுக்குகளை மின்சாரப் பொறியின் உதவியால் மிகுந்த விரைவுடன் செலுத்தினால் அவைகள் ஒன்றோடொன்று மோதி அணு வெடிக்கின்றது. அணுவின் கருவைத் தகர்க்கும்பொழுது தொடர்ச்சியாகப் பல மாறுதல்கள் ஏற்படுகின்றன. ஒவ்வோர் அணுவிலும் உள்ள கரு வெடித்து மிகப் பெரிய ஆற்றல் வெளிப்படுகின்றது. அணுவின் உள்ளே இருக்கும் கரு அணுவைக் காட்டிலும் பத்துலட்சம் மடங்கு சிறியது. இத்துணைச் சிறிய இடத்தில் எண்ணுதற்கரிய மின்சாரத் துணுக்குகள் ஓய்வில்லாமல் சுழன்று திரிகின்றன. இத்துணுக்குகளை ஆராய்ந்தபோதுதான் அணுச்சக்தியின் அற்புதம் தெரியவந்தது' என்று ஆசிரியர் விளக்கிக் கூறினார்.

'ஆசிரியர் அவர்கள் நம்முடைய மூளைக்கு நல்லவேலை கொடுத்திருக்கிறார். வாருங்கள் போகலாம்' என்று நண்பர் புறப்பட்டார். ஆசிரியரிடம் விடைபெற்றுக்கொண்டு நாங்கள் இருவரும் வீட்டைநோக்கி நடந்தோம். தோட்டத்தில் ஒரு மின்மினிப் பூச்சி பறந்து சென்றது. 'மின்மினிப் பூச்சி ஏன் [illegible]ப்' என்று நண்பர் கேட்டார்.

'மின்மினிப் பூச்சியின் அவயவங்கள் ஒளிவிடுவதற்கு ஏற்றபடி அமைந்துள்ளன. பெண்பூச்சிகள் தம் அழகைக் காட்டுவதற்கு இந்த அற்புத ஒளியை வீசுகின்றன என்று ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர். ஆண்பூச்சிக்கு இந்தச் சக்தி கிடையாது' என்றேன்.

'யார் எதைச் சொன்னாலும் நாம் நம்பிக்கொள்வதா' என்று நண்பர் கேட்டார்.

'இல்லை, இல்லை. ஒருபொருள் எப்படித் தோன்றினாலும் அதன் உண்மையான இயல்பை அறிவதே மெய்யுணர்வு ஆகும். உலகில் நமக்குத் தெரியாத பொருள்கள் எவ்வளவோ இருக்கின்றன. ஆராய்ச்சியாளர்கள் இடைவிடாத முயற்சியினாலும் ஓயாத உழைப்பினாலும் பல அரிய உண்மைகளைக் கண்டுபிடித்துள்ளனர். பண்டைக் காலத்தில் பூமி தட்டையாக இருப்பதென்றும், அது அசைவதில்லை என்றும் மக்கள் எண்ணி இருந்தனர். ஏனெனில் பூமி முழுவதையும் நாம் ஒரே சமயத்தில் பார்க்க முடிவதில்லை. அதன் ஒரு பகுதியைத்தான் பார்க்கி

றோம். அதனால்தான் பூமி தட்டையாக இருப்பதென்று மக்கள் நம்பி வந்தனர். நாளடைவில் இதனை நன்கு ஆராய்ந்து பார்த்துப் பூமி உருண்டையாக இருப்பதென்றும் அது தன்னைத்தானே சுற்றிக்கொண்டு ஞாயிற்றுமண்டிலத்தையும் சுற்றி வருவதென்றும் கண்டுணர்ந்தனர்.

'நியூட்டன் (Newton) என்னும் அறிஞர் பல ஆண்டுகளாக ஆராய்ச்சி செய்து எல்லாப் பொருள்களையும் பூமி தன்னிடம் இழுத்துக்கொள்கிறது என்ற முடிவுக்கு வந்தார். அவருக்குப் பின் தோன்றிய எயின்ஸ்டைன் (Einstein) என்னும் பேரறிஞர் இதனை மற்றொருவகையில் விளக்குகின்றார். கோலிக்குண்டு மேட்டிலிருந்து பள்ளத்திற்கு உருண்டு செல்வதுபோன்று பொருள்கள் எல்லாம் அண்டகோளத்தின் வளைவில் உருண்டு சென்று சமநிலை அடைகின்றன எனக் கூறுகின்றார். இந்த இரண்டு கொள்கைகளில் எது உண்மை என்று மேலும் மேலும் ஆராய்ந்து கொண்டேபோகின்றோம்.

'ஒரு பொருளை ஆராய்ந்து கண்டுபிடித்தால் அதில் மற்றொரு புதிய பொருள் தோன்றுகின்றது. அதிலிருந்து மூன்றாவது பொருள் வந்து முன்னே நிற்கின்றது. படைப்பின் அற்புதங்களைக் காணும் பொழுதெல்லாம் இறைவனுடைய பேராற்றலும் பேரறிவும் வெளிப்படுகின்றன. உண்மையைத் தேடுபவன் எல்லா இடங்களிலும் ஆராய்ச்சி செய்கிறான். கடலிலும் காற்றிலும் கலந்திருப்பதைத் தேடுகிறான். மண்ணிலும் விண்ணிலும் மறைந்து நிற்பதைத் தேடுகிறான். உண்மையைத் தேடுவது இறைவனைத் தேடுவதாகும்' என்றேன். எதற்கும் இறைவன் அருள்வேண்டும். 'அவனன்றி ஓரணுவும் அசையாது' என்று கூறிக்கொண்டு நண்பர் விடைபெற்றுச் சென்றார்.

## செந்தமிழ்த் தெய்வச்சீர்

மெய்யுணர் வாசான்முருகன் மிக்கமறை பிள்ளையார்
உய்க்குமரு ளாற்ற லுமையம்மை—எய்ப்பிலா
ஆற்றற் கறிவுயிர் அன்பாம் சிவபெருமான்
போற்றுவமிந் நால்வர்ப் புகழ்ந்து.

—தொண்டன்.

# சங்கப்பாடல்கள் மொழியமைப்பு

[திரு. தி. நா. அறிவுஒளி]

(செல்வி சிலம்பு, ௩௫, பரல் ௧, ௪௨ ஆம் பக்கத் தொடர்ச்சி)

## 5. நிரந்தினிது மொழிதல்

பல செய்திகளை வெளியிட வேண்டி நேரும்போது, தட்டுத் தடுமாறியோ, முன்பின்னாகச் செய்திகளைக் குழப்பியோ, குன்றக் கூறியோ, மிகைபடக் கூறியோ, கூறியதைக் கூறியோ, மாறு கொளக் கூறியோ, கற்போர் மூளையைக் கெடுக்காமல் முறைப் படத்தெளிவாக எழுத நிரந்தினிது மொழியுந் திறன் பயன்படும். கபிலர் குறிஞ்சிப் பாட்டில் பல்வகைப் பூக்களையெல்லாம் நிரல்படக் குறிக்க அவாவினார். அவாவியே, அப் பூக்களின் பெயர்களை முறையாகத் தொகுத்துரைக்கிறார். நிரந்தினிது கூறுந்திறனுக்கு அஃது இணையற்ற ஓர் எடுத்துக்காட்டு.[1]

ஒண்செங் காந்தள், ஆம்பல், அனிச்சம்,
தண்கயக் குவளை, குறிஞ்சி, வெட்சி,
செங்கொடு வேரி, தேமா, மணிச்சிகை,
உரிதுநாறு அவிழ்தொத்து உந்தூழ், கூவிளம்
எரிபுரை எறுழம், சுள்ளி, கூவிரம்,
வடவனம், வாகை, வான்பூங் குடசம்,
எருவை, செருவிளை, மணிப்பூங் கருவிளை,
பயினி, வானி, பல்லிணர்க் குரவம்,
பசும்பிடி வகுளம் பல்லிணர்க் காயா,
விரிமலர் ஆவிரை, வேரல், சூரல்,
குரீஇப் பூளை, குறுநறுங் கண்ணி,
குருகிலை, மருதம், விரிபூங் கோங்கம்,
போங்கம், திலகம், தேங்கமழ் பாதிரி,
செருந்தி, அதிரல், பெருந்தண் சண்பகம்,
கரந்தை, குளவி, கடிகமழ் கலிமா,
தில்லை, பாலை, கல்இவர் முல்லை,
குல்லை, பிடவம், சிறுமா ரோடம்,
வாழை, வள்ளி, நீள்நறு நெய்தல்,
தாழை, தளவம், முள்தாள் தாமரை,
ஞாழல், மௌவல், நறுந்தண் கொகுடி,
சேடல், செம்மல், சிறுசெங் குரலி,
கோடல், கைதை, கொங்குமுதிர் நறுவழை,
காஞ்சி, மணிக்குலைக் கள்கமழ் நெய்தல்,

வெறும் பெயர்ப் பட்டியல்தான் மேற்பாடல். அப் பாடலடிகளை எத்தனை முறை ஓதினாலும் அலுப்போ, சலிப்போ உண்டாகவில்லையே; ஏன்? அதுதான் நிரந்தினிது கூறும் மொழியமைப்பு மாண்பு! கவிதைக்கும், உரைநடைக்கும் உள்ள வேற்றுமையின் மேன்மையும் ஈண்டே நிலவுகிறது.

இடைக்கழி நாட்டு நல்லூர் நத்தத்தனார் இயற்றிய ( 'ய இலக்கியம் சிறுபாணாற்றுப்படை. ஓய்மான் நல்லியக் கோடனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டது அப்பனுவல். நத்தத்தனார் 'நிரந்தினிது கூறல்' என்ற இலக்கணத்துக்கு இலக்கியமாகத் தம் படைப்பை இயற்றிய மாண்பு வியக்கத் தக்கது. வறுமையால் வாடி, நெடுந்தொலைவு வழிநடைப் பயணம் செய்து, சோர்ந்து நிற்கும் விறலியரை ஓர் எழிலோவியம் போலத் தம் எழுத்தோவியத்தில் நிரந்தினிது விளக்குகிறார் நத்தத்தனார்:

"ஐதுவீழ் இருபெயல் அழகுகொண்டு அருளி
நெய்கனிந்து இருளிய கதுப்பிற் கதுப்பென
மணிவயிற் கலாபம் பரப்பிப் பலவுடன்
மயில்மயிற் குளிக்குஞ் சாயல் சாஅய்

---

பாங்கர், மராஅம், பல்பூந் தணக்கம்,
ஈங்கை, இலவம், தூங்குஇணர்க் கொன்றை,
அடும்பு, அமர்ஆத்தி, நெடுங்கொடி அவரை
பகன்றை, பலாசம், பல்பூம் பிண்டி,
வஞ்சி, பித்திகம், சிந்து வாரம்,
தும்பை, துழாஅய், சுடர்ப்பூந் தோன்றி,
நந்தி, நறவம் நறும்புன் னாகம்,
பாரம், பீரம், பைங்குருக் கத்தி,
ஆரம், காழ்வை, கடிஇரும் புன்னை,
நரந்தம், நாகம், நள்ளிருள் நாறி,
மாயிருங் குருந்தம், வேங்கையும் பிறவும்
அரக்கு விரித்தன்ன பரேரம் புழகுடன்
மாலங் குடைய மலிவன மறுகி

(பத்துப்பாட்டு, குறிஞ்சிப்பாட்டு. ௬௧ - ௬௭)

[சூழ்நிலையை விளக்கும் முறை காப்பியங்களிலும், பெருங்கதைகளிலும், நாடகங்களிலும் சிறப்பாகக் கையாளப்படுகிறது. ஆனால், கபிலர் தனிப்பாடலிலும் இம்முறையைக் கையாண்டுள்ளமை கவனிக்கத் தக்கது. இம்முறை தமிழகத்திறகே சிறப்பாக அமைந்துள்ளமையை உன்னவேண்டும்.]

1. மெல்லியதாக வீழும் மழையின் அழகைப் பெற்றுக், காண்பதற்கு இனிமையளிக்கக் கூடிய, எண்ணெய் தடவப்பெற்று, இருண்டு

உயங்குநாய் நாவின் நல்லெழில் அசைஇ
வயங்கிழை உலறிய அடியின் அடிதொடர்ந்து
ஈர்ந்துநிலந் தோயும் இரும்பிடித் தடக்கையிற்
சேர்ந்துடன் செறிந்த குறங்கிற் குறங்கென
மால்வரை ஒழுகிய வாழை, வாழைப்
பூவெனப் பொலிந்த ஓதி, ஓதி
நளிசசினை வேங்கை நாண்மலர் நச்சிக்
களிசசுரும்பு அரற்றும் சுணங்கிற் சுணங்குபிதிர்ந்து
யாணர்க் கோங்கின் அவிர்முகை எள்ளிப்
பூணகத் தொடுங்கிய வெம்முலை முலையென
வண்கோட் பெண்ணை வளர்த்த நுங்கின்
இன்சே றிகுதரும் எயிற்றின் எயிறெனக்
குல்லையம் புறவிற் குவிமுகை அவிழ்ந்த
முல்லை சான்ற கற்பின் மெல்லியல்
மடமான் நோக்கின் வாணுதல் விறலியர்
நடைமெலிந் தசைஇய நன்மென் சீறடி
கல்லா இளையர் மெல்லத் தைவரப்
பொன்வார்ந் தன்ன புரியடங்கு நரம்பின்
இன்குரற் சீறியாழ் இடவயின் தழீஇ"
(சிறுபாணாற்றுப்படை, கங - ஙரு)

---

விளங்கும் கூந்தல் உடையவர்கள். அக்கருங் கூந்தலைப் போன்ற; நீல மணியைப்போல் மயிற் கண்களையுடைய தோகைகளை விரித்து, பல ஆண் மயில்கள் ஒரே குழுவாக; இவ்வழகிய பெண்ணின் சாயலுக்கு இணையாக மாட்டோம் என்று நாணம் கொண்டும், நம் தோகை இப் பெண்டிரின் கூந்தலுக்கு ஒவ்வாது என்று நாணமுற்றும் தம் துணை களான பெட்டை மயில் குழாத்தினுள்ளே ஓடி மறைதற்குக் காரண மான மென்மை மிக்க சாயலை உடையவர்கள். ஊர் எல்லாம் ஓடி, ஓய்ந்து, வருந்திய நாயின் நாக்கைப்போல், நல்லழகை வருத்தி, வறுமை காரணமாக ஒளிவீசும் அணிகலங்கள் ஏதுமற்ற அடிகளை உடையவர்கள். அவ்வடியைத் தொடர்ந்து, கரிய பெண் யானையின் பெரிய கையைப் போலத் திரண்டு, ஒன்றோடொன்று நெருக்கமாக இணைந்திருக்கும் தொடைகளை உடையவர்கள். - அத் தொடைகளைப் போலத் திரட்சி யுடையதாய்; மலையில் இடையறாது பயிராக விளையக்கூடிய தொடர்ந்த வாழ்க்கையை உடைய, அழகிய வாழையின் பூவைப்போலப் பொலி வுடைய முன் உச்சி மயிரையும், அம் மயிரில் சூடிய வேங்கைப் பூக்களை என்று எண்ணி, வண்டுகள் ஆரவாரிக்கும் தேமல்களை உடையவர்கள். கோங்கத்தின் மொட்டுக்களை இகழும் வண்ணம் பூண்முதலிய அணி கலங்களினிடையே ஒடுங்கிக் கிடக்கும், விருப்பத்தை மிகுவிக்கும் பருத்த முலைகளை உடையவர்கள் - பெண்களின் முலைகளைப் போலப் பெருத்த, பனைக்குலையில் உள்ள நுங்கின் இனிய - தெள்ளிய - சுளைநீர் தோற்கும் வண்ணம் குளிர்ச்சியும், சுவையும் உடைய உமிழ்நீர் ஊற்றெடுக்கும் இடத்தில் ஒளிவீசும் பற்களை உடையவர்கள்-பெண்டிர் பற்களைப் போலக் கஞ்சங் குல்லை நிறைந்த காட்டில், குவிந்த மொட்டுக்கள் விரிந்து, பூத்த முல்லைப்பூவைச் சூடுதற்கு ஏற்ற கற்புள்ள, மெல்லிய இயல்பினையும்,

பெண்டிரின் இயற்கையான உடலழகை விளக்குவதில் நத்தத்தனர் புதிய முறையைக் கையாண்டுள்ளார். இம் முறையை வேறு எந்தத் தமிழ்ப் புலவரும் கையாளவில்லை என்பது இவண் சிறப்பாகக் குறிப்பிடத் தக்கதாம்.

மேலும், நல்லியக்கோடனின் வன்மையைச் சிறப்பிக்க, அவன் காலத்துக்கு முன்னரிருந்த மன்னர்கள்—வள்ளல்களின் வரலாற்றையும், அவர்கள் செய்த தலைசிறந்த ஈகைகளையும் முறைப்படுத்தி, நிரந்தினிது மொழிகின்ற நுண்ணறிவாற்றலைக் காணும்போது, 'மொழிநூல்' மேதையில் அக்காலப் புலவர்களுக்கிருந்த பேரறிவும், பெருந்திறனும் நன்கு விளங்குகிறது :

"கொழுமீன் குறைய ஒதுங்கி வள்ளிதழ்க்
கழுநீர் மேய்ந்த கயவாய் எருமை
பைங்கறி நிவந்த பலவின் நீழல்
மஞ்சள் மெல்லிலை மயிர்ப்புறந் தைவர
விளையா இளங்கள் நாறமெல்குபு பெயராக்
குளவிப் பள்ளிப் பாயல் கொள்ளும்
குடபுலங் காவலர் மருமான் ஒன்னார்
வடபுல இமயத்து வாங்குவிற் பொறித்த
எழுவுறழ் திணிதோள் இயல்தேர்க் குட்டுவன்
வருபுனல் வாயில் வஞ்சியும் வறிதே; அதாஅன்று,
நறவுவாய் உறைக்கும் நாகுமுதிர் நுணவத்து
அறைவாய்க் குறுந்துணி அயில்உளி பொருத
கைபுனை செப்பங் கடைந்த மார்பிற்
செய்பூங் கண்ணி செவிமுதல் திருத்தி
நோன்பகட் டுமணர் ஒழுகையொடு வந்த
மகாஅர் அன்ன மந்தி மடவோர்
நகாஅர் அன்ன நளிநீர் முத்தம்

மடப்பத்தினையும், மான்போன்ற பார்வையையும், ஒளிமிக்க நெற்றியையும் உடைய, விறல்பட ஆடும் மகளிரின் (விறலியர்) கால்கள் நெடுந்தொலைவு நடந்து களைத்துச் சிவந்திருந்தது. அத்தகைய ஓய்ந்த திருவடிகளை - மென்மையான நல்ல அடிகளைக் - கல்வி நிரம்பப்பெறாத இளைஞர்கள் மெத்தென்று வருடுவர். அவ்வாறு இளைஞரின் காதலன்பைக் கவர்ந்த கவினிளங் காதலியர், பொற்கம்பியை ஒத்த, முறுக்கடங்கின நரம்பின் இனிய ஓசையை அளிக்கும் சிறிய யாழைத் தம் இடப்பக்கத்தே தழுவி நிற்கின்றனர் அவ் விறலியர்!

[இப் பாடலில்; ஒரு சொல்லையே ஓரடியின் இறுதியில் மீண்டும் வேறு பொருள் - நயம் - அமையப்பொருத்திப் பாட்டை யாத்திருப்பது நல்லதொரு புதுமை. படிக்கும்போது ஓர் அழகும், இன்னோசை நலமும் அருளுகிறது. பொருட் சிறப்பின்றி, ஓசைச் சிறப்பே போற்றும் சில போலிப் புலவர்கள் இப் பாட்டை மனப்பாடம் செய்வதோடு மூளை காண்டும் நன்குணர்ந்து, திருந்த வேண்டும்.]

வாள்வாய் எருந்தின் வயிற்றகத் தடங்கித்
தோள்புறம் மறைக்கு நல்கூர் நுசுப்பின்
உளரியல் ஐம்பால் உமட்டியர் ஈன்ற
கிளர்பூண் புதல்வரொடு கிலுகிலி ஆடும்
தத்துநீர் வரைப்பிற் கொற்கைக் கோமான்
தென்புலங் காவலர் மருமான் ஒன்னார்
மண்மாறு கொண்ட மாலை வெண்குடைக்
கண்ணார் கண்ணிக் கடுந்தேர்ச் செழியன்
தமிழ்நிலை பெற்ற தாங்கரு மரபின்
மகிழ்நனை மறுகின் மதுரையும் வறிதே; அதா அன்று,
நறுநீர்ப் பொய்கை அடைகரை நிவந்த
துறுநீர்க் கடம்பின் துணையார் கோதை
ஓவத் தன்ன உண்டுறை மருங்கில்
கோவத் தன்ன கொங்குசேர் புறைத்தலின்
வருமுலை அன்ன வண்முகை உடைந்து
திருமுகம் அவிழ்ந்த தெய்வத் தாமரை
ஆசில் அங்கை அரக்குத்தோய்ந் தன்ன
சேயிதழ் பொதிந்த செம்பொற் கொட்டை
ஏம இன்துணை தழீஇ இறகுளர்ந்து
காமரு தும்பி காமரஞ் செப்பும்
தண்பணை தழீஇய தளரா இருக்கைக்
குணபுலங் காவலர் மருமான் ஒன்னார்
ஓங்கெயிற் கதவம் உருமுச்சுவல் சொறியும்
தூங்கெயில் எறிந்த தொடிவிளங்கு தடக்கை
நாடா நல்லிசை நற்றேர்ச் செம்பியன்
ஓடாப் பூட்கை உறந்தையும் வறிதே; அதா அன்று,
வானம் வாய்த்த வளமலைக் கவாஅன்
கான மஞ்ஞைக்குக் கலிங்கம் நல்கிய
அருந்திறல் அணங்கின் ஆவியர் பெருமகன்
பெருங்கல் நாடன் பேகனுஞ் சுரும்புண
நறுவீ உறைக்கு நாக நெடுவழிச்
சிறுவீ முல்லைக்குப் பெருந்தேர் நல்கிய
பிறங்குவெள் ளருவி வீழுஞ் சாரல்
பறம்பிற் கோமான் பாரியும், கறங்குமணி
வாலுளைப் புரவியொடு வையக மருள
ஈர நன்மொழி இரவலர்க் கீந்த,
அழல்திகழ்ந் திமைக்கும் அஞ்சுவரு நெடுவேல்
கழல்தொடித் தடக்கைக் காரியும் நிழல்திகழ்
நீல நாகம் நல்கிய கலிங்கம்
ஆலமர் செல்வற் கமர்ந்தனன் கொடுத்த

சாவந் தாங்கிய சாந்துபுலர்
ஆர்வ நன்மொழி ஆயும், மால்வரைக்
கமழ்பூஞ் சாரற் கவினிய நெல்லி
அமிழ்துவிளை தீங்கனி ஔவைக் கீந்த
உரவுச் சினங்கனலும் ஒளிதிகழ் நெடுவேல்
அரவக் கடல்தானை அதிகனும், கரவாது
நட்டோர் உவப்ப நடைப்பரி காரம்
முட்டாது கொடுத்த முனைவிளங்கு தடக்கைத்
துளிமழை பொழியும் வளிதுஞ்சு நெடுங்கோட்டு
நளிமலை நாடன் நள்ளியும், நளிசினை
நறும்போது கஞலிய நாகுமுதிர் நாகத்துக்
குறும்பொறை நன்னாடு கோடியர்க் கீந்த
காரிக் குதிரைக் காரியொடு மலைந்த
ஓரிக் குதிரை ஓரியும் எனவாங்கு
எழுசமங் கடந்த எழுவுறழ் திணிதோள்
எழுவர் பூண்ட ஈகைச் செந்நுகம்.''[1]

---

1. **பொருள்:** கொழுத்த மீன்கள் வெட்டுப்படும்படி நடந்து வளமான இதழை உடைய செங்கழுநீர் மலரை மேய்ந்தது எருமை. மேய்ந்தபின் பச்சை மிளகுக்கொடி படர்ந்த பலாமரத்தின் நிழலிலே, மஞ்சள் இலை அவ்வெருமையின் முதுகைத்தடவக்காட்டு மல்லிகைக்கொடியாகிய படுக்கையின் மேல், கள் மணம் கமழும்படி, அசையிட்டுக்கொண்டே தூங்கும். இத்தகு வளமுள்ள மேற்றிசையில் உள்ள சேரநாட்டின் அரசர் குடியில் பிறந்தவனும், கணைய மரத்தை ஒத்த வலிமையான தோளை உடையவனும், வட இமயத்தில் வில்லுருவைப் பொறித்தவனும், குட்ட நாட்டுக்குத் தலைவனுமான மன்னன் உறையும் வஞ்சி என்ற நகரும் இக்காலத்தில் பரிசிலர்க்கு அளிக்கும் கொடைவளம் சிறிதாயிருக்கும்!

அவ் வஞ்சி என்ற ஊரையன்றித் தேனைத் தெளிக்கும் பூக்கள் மலர்ந்த நுணா மரத்திலிருந்து வெட்டப்பட்ட பிளப்பினை உடைய சிறிய மரக்கட்டையைக் கூரிய உளிகள் உள்ளே சென்று குடைந்த குறுந்துணி மணிமாலையையுடைய மார்பையும், செய்பூங் கண்ணி சுற்றிய நெற்றியையும் உடையதாய், உப்பு வணிகர் வண்டியோடே வந்த அவ் வணிகர்களின் குழந்தைகளை ஒத்த; மந்திகள் வாள் போன்ற வாயை உடைய இளிஞ்சலின் வயிற்றினுள் பற்களை ஒத்த முத்துக்களை இட்டு, மூடி; சிற்றிடையையும், தோள்புறம் மறைக்கும் ஐம்பாலையும்உடைய உப்பு வணிகத்தியர் பெற்ற பிள்ளைகளோடு கூடிக் கிலுகிலுப்பையாக அக் கிளிஞ்சல்களை ஆட்டி, விளையாடுகின்ற கடற்கரைப் பட்டினமாகிய கொற்கைக்கு வேந்தனும், தெற்கிலுள்ள பாண்டிநாட்டைக் காவல் செய்யும் பாண்டியர் மரபில் தோன்றியவனும்; பகைவர் நாட்டைக் கைக்கொண்டவனும், முத்தணிந்த கொற்றவெண்குடையை உடையவனும்; கண்ணியைப் பூண்டவனும்; கடிய தேரை உடையவனுமான செழியனின்; தமிழ் மொழி வளர்வதாலே மனமகிழ்ச்சி விளங்கும் தெருவினை உடைய மதுரையில் பெறும் பரிசிலும் சிறியதாயிருக்கும்!

மேற் பாடலில் உறந்தை, மதுரை, வஞ்சி என்ற மூன்று நகரங்களையும் ஆண்ட சோழ, பாண்டிய, சேரர் வரலாற்றுண்மை யையும், பேகன், பாரி, காரி, ஓரி, ஆய், அதிகமான், நள்ளி என்ற வள்ளல்களின் வாழ்வுண்மையையும் முறைப்படுத்தி, எழி லொழுக மொழிந்துள்ள திறனே நிரந்தினிது கூறுதலாகும். இவ்வாறு வரிசைப்படுத்துகையில் ஒன்றற்கொன்று மாறுபடு

---

அம் மதுரையே யன்றி, நீர் மிக்க அடைகரையிலே நின்று, வளர்ந்த, செறிந்த கடப்ப மாலை போன்ற மலர்கள் இந்திர கோபம் போன்ற தாதை உதிர்த்தலாலே, ஓவியம் வரைந்தாற்போல், அழகு மிக்க நீருண் துறையில் பக்கத்தே மலர்ந்துள்ள தாமரை மலரின் அரக் கூட்டியது போலச் சிவந்துள்ள அக இதழாற் சூழப்பட்ட, பொன்னிறப் பொகுட் டின்மேல், தும்பி தன் பெடையைத் தழுவிக்கொண்டு, இறகினை அசைத்துச் சீகாமரம் என்ற பண்ணைப் பாடும் மருதநிலம் சூழ்ந்த கிழக்குத் திசையிலுள்ள நிலத்தைக் காக்கும் சோழர்களின் பழங்குடி யில் தோன்றியவனும், பகைவரின் தூங்கெயிலை அழித்தவனும், தொடி அணிந்த கையினனும், புகழ் மிக்கவனும், நல்ல தேரினை உடையோனு மாகிய செம்பியனின் உறந்தை என்ற ஊர் அளிக்கும் பரிசிலும் சிறியதா யிருக்கும்.

அவ் வுறந்தையேயன்றித் தக்க பரிசில் தரும் இடம் வேறு இல்லாமை யால் பருவ மழை பொய்க்காமல் பெய்வதால், வளமிக்க மலைப்பக்கத் துக் காட்டில் திரிந்த மயில் அகவியதைக் கேட்டு, அம் மயில் குளிரால் வருந்தி அகவியது எனக் கருதிப் பேரருள் மிக்கெழத் தன் போர்வை யைக் கொடுத்த, வலிமை மிக்க வடிவமுடைய ஆவியர் குடியில் தோன் றிய பெருந்தகையாகிய பெரிய மலைநாட்டுப் பேகன் என்ற வள்ளலும்,

வண்டுகள் உண்ணுமாறு தேன் வழங்கும் சுரபுன்னை மரங்கள் மிகுதியாக வளர்ந்திருக்கும் நீண்ட வழியில், தன் தேரைத் தடுத்த முல்லைக்கொடி அத் தேரை விரும்பியதாகக் கருதி, அதற்குத் தனது பெரிய தேரை அளித்தவனும்; அருவி மிக்க பறம்பு மலைக்கு மன்னனு மாகிய பாரி என்னும் வள்ளலும்;

மணியையும், தலையாட்டத்தையும் உடைய குதிரையோடே தன் நாட்டையும் அருள்மொழியையும் ஏனையோர் கேட்டு வியக்குமாறு, இரவலர்க்குக் கொடுத்த வேலையும் தொடியினையுடைய கையினையும் உடைய காரி என்ற வள்ளலும்,

ஒளிமிக்க நீலமணியையும், நாகம் கொடுத்த கலிங்கத்தையும், விருப் பத்தோடு ஆலின்கீழ் இருந்த இறைவனுக்குக் கொடுத்தவனும், வில்லேந் திய சந்தனம் பூசிப் புலர்ந்த, தோளை உடையவனும், ஆர்வம் மிக்க மொழிகளைப் பேசுவானும் ஆகிய ஆய் என்ற வள்ளலும்,

பெரிய மலைச்சாரலிலே நின்று, அழகுபெற்ற நெல்லியின் அமிழ்தத் தன்மையுடைய கனியைத் தான் நுகர்ந்து தன் உடம்பிற்கு ஆக்கம் செய்துகொள்ளாமல், அவ்வையாருக்குக் கொடுத்தவனும், கொற்றவை யின் சினந்திகழும் ஒளிமிக்க வேலும், கடல் போன்ற ஒலிமிக்க படை யும் உடையவனுமான அதிகமான் என்ற வள்ளலும்,

தன்னுள்ளத்தில் நிகழ்கின்ற எல்லாவற்றையும் மறைக்காமல் கூறித் தன்னை விரும்பியவர் உள்ளம் மகிழ அவர் வீட்டிற்கு இயன்ற பொருட்களைக் குறிப்பறிந்து வழங்கியவனும், மழை வளமிக்க நீண்ட

தலோ, குழம்புதலோ இன்றித் தெளிவாக விளக்கிய திறமே மொழியமைப்புச் சிறப்பின் மேன்மையாகும்.

நத்தத்தனார், நல்லியக்கோடனின் நல்லியல்புகளை நிரந்தினிது கூறும் மாட்சியை உணர்தல் வேண்டும்.

[1]"செய்ந்நன்றி அறிதலும், சிற்றினம் இன்மையும்,
இன்முகம் உடைமையும், இனியன் ஆதலும்,
செறிந்துவிளங்கு சிறப்பின், அறிந்தோர் ஏத்த,
அஞ்சினர்க் களித்தலும், வெஞ்சினம் இன்மையும்,

---

கோடுகளையுடைய மலைநாட்டை உடையவனும், போர்த்தொழில் வல்லவனுமாகிய நள்ளி என்ற வள்ளலும்,

செறிவுள்ள கொம்புகளில் நறிய பூக்கள் மிகுந்துள்ள சுரபுன்னைகளையும், குறும்பொறைகளையும் உடைய நல்ல நாடுகளைக் கூத்தர்களுக்கு வழங்கியவனும், காரி என்ற குதிரையையுடைய காரி என்ற வள்ளலோடு போரிட்ட, ஓரி என்ற குதிரையை உடையவனுமான ஓரி என்ற வள்ளலும்,

என்று கூறப்பட்ட அக் காலத்தில் வாழ்ந்திருந்த தம்மேல் வருகின்ற போர்களைக் கடந்த கணையத்தோடு மாறுபடுகின்ற திண்மையான தோள்களை உடைய ஏழு வள்ளல்களும்......

[ஒரு வரலாற்றாசிரியரைப் போல நிரல்பட நிகழ்ச்சிகளை வரைந்த நத்தத்தனாரின் வரலாற்றுணர்வு மிகப் போற்றுதற்குரியது.]

1. **நல்லியக்கோடனைச் சான்றோர் புகழ்தல்:** "பிறர் தனக்குச் செய்த நன்றியை மறவாமல் போற்றித் தானும் அவர்க்கு நன்மை செய்தலையும், அறிவும், ஒழுக்கமும் இல்லாத மாக்கள் இனத்தைத் தனக்கு நட்பாக இல்லாமையும், நோக்கினவர்க்கு இனிய முகத்தை எக்காலமும் உடையவனாதலையும், அகமும் புறமும் ஒருங்கே இனியன் ஆதலையும், எக்காலமும் தன்னுடனே செறிந்து விளங்குகின்ற தலைமையினை உடைய பல கலைகளையும் உணர்ந்த சான்றோர் புகழ்வர்.

**போர் மறவர் புகழ்தல்:** "ஆண்மையைக் கண்டு, அஞ்சி, வந்து, அடிபணிந்தவர்க்கு அருள் காட்டுதலையும், கொடிய வெகுளி இல்லாமையையும், மறவர் அணியிலே புகுந்து அதனைப்போரில் அழித்தலையும் கெட்ட படையின் இடையில் சென்று பகைவரைப் பொறுத்தலையும் வாளின் வல்லமையால் மேன்மையான சொல்லை உடைய மறவர் புகழ்வர்.

**அரிவையர் புகழ்தல்:** தன் உள்ளத்தில் எண்ணிய புணர்ச்சியைக் குறை கோராமல் முடிக்கும் தன்மையும், தான் வீழும் பெண்டிர் தன்னைப் பெரிதும் விரும்பும் வண்ணம் நடத்தலும், அங்ஙனம் விரும்பிய வழியும், அப் பெண்டிர்க்கு அடிமையாகாது, தன் உரிமையோடு இருத்தலும், பெண்டிர் வருத்தத்தை அறிந்து, அவர்க்கு அருள்செய்து பாதுகாத்தலும் ஆகிய சிறப்புக்களை, செவ்வரி பொருந்தின அழகிய மையுண்ட கண்ணினை உடைய பெண்டிர் புகழ்வர்.

**பரிசிலர் புகழ்தல்:** அறிவில்லாதவரிடத்தில், தானும் அறியாதவன் போலிருத்தலும், தன்னைப்போல அறிவுடையவர்களிடத்தில் நல்லறிஞனாகத் திகழ்தலும், பரிசிலரின் சிறப்பை அறிந்து அதற்கேற்பக் கொடையளித்தலும், சிறப்பில்லாப் பரிசிலர்க்குக் 'கொடுக்கமாட்டேன்'

ஆணணி புகுதலும், அழிபடை தாங்கலும்,
வாண்மீக் கூற்றத்து வயவர் ஏத்தக்
கருதியது முடித்தலும், காமுறப் படுதலும்,
ஒருவழிப் படாமையும், ஓடிய துணர்தலும்,
அரியேர் உண்கண் அரிவையர் ஏத்த,
அறிவுமடம் படுதலும், அறிவுநன் குடைமையும்,
வரிசை யறிதலும், வரையாது கொடுத்தலும்,
பரிசில் வாழ்க்கைப் பரிசிலர் ஏத்தப்,
பன்மீன் நடுவண் பால்மதி போல
இன்னகை ஆயமோடு இருந்தோன்........"

(சிறுபாணாற்றுப்படை, உ0எ-உஉ0)

மேற் பாடலின் சொற்கள் இன்னிசை அமைதி விளங்க, முறைப்படுத்தப்பட்டிருத்தலைத் தெளிதல் வேண்டும். இம்முறையே 'நிரந்தினிது கூறல்' என்ற வள்ளுவரின் மொழியமைப் பிலக்கணத்திற்குச் சாலும் இலக்கியமாகும். சொற்களாலும், பொருளாலும் ஒத்த முறை வைப்போடு விளங்கும் இம் மொழி யமைப்புக் கற்பார் நெஞ்சைவிட்டு எளிதில் மறையாது மென்பதில் என்ன வியப்பு?

(தொடரும்)

என மறுககாமல; அவரும மஙழும வணணம ஓரளவு ஈதலும; ஆய்ய, தன்மைகளை இரவலர் போற்றுவர்.

இத்தகைய பல சிறப்பான பண்புகளுக்கு உறைவிடமான நல்லியக் கோடன் பல விண்மீன்களுக்கு இடையே தோன்றும் பால்போல வெள்ளொளி பொழியும் முழு வெண்ணிலவு போன்று; இயல்—இசை—நாடகங்களாலும், சிறந்த இனிய மொழிகளாலும் இனிய மகிழ்ச்சியைச் செய்யும் திரளோடு இருந்தனன்—.

[இப் பாடலடிகளின் இனிய ஓசை நயமும், ஒழுங்கான தாளக் கட்டும் பொருளமைதியோடு ஒப்பப் பொலிந்து விளங்குவதைப் பன்முறை ஊன்றிப் பயில்வார் தெளியலாம். முறைப்படப் புகழும் திறமையும், அதற்கேற்ற மொழியமைப்பும் அரிய புலமைச் சிறப்பில் மலர்ந்த பாடலடிகள் இவை என்பதைத் தெளிவாக்குகின்றன.]

[நிறையச் செய்தி இருந்தாலும், அதைக் கவிதையில் அமைக்கத் தனித் திறமை வேண்டும். கருத்து வளமுள்ள பல பாடல்கள் இலக்கியத் தகுதியற்றவைகளாகத் தள்ளப்படுவதை அறிவோம். ஆனால் நத்தத்தனார் வானளவு கருத்துக்களையும் வாழைப்பழத்தில் ஊசி நுழைப்பதைப்போல மெத்தென்று மிக எளிதாகப் பாட்டில் அமைத்து, இலக்கியச் சீர்மை உள்ளதாக ஆக்கிவிடுகிறார். இவரின் இத் தனித் திறன் இக்காலக் கவிஞர்கள் கற்றுணர வேண்டியதாகும்.]

# சங்ககாலத் திருமணத்தில் தாலி

[திரு. வை. தட்சிணாமூர்த்தி, எம். ஏ.]

சங்ககாலத் திருமணத்தில் மணத்தின் அறிகுறியாகத் தாலி யணியும் பழக்கம் உண்டா? இல்லையா? என்பது பற்றி அறிஞர்கள் திரு. இராசமாணிக்கனார் அவர்களும், திரு. ம. பொ. சி. அவர்களும் பத்திரிகைகளில் கட்டுரை எழுதிவந்தார்கள். திரு. இராசமாணிக்கனார் அவர்கள் சங்ககாலத் திருமணத்தில் தாலி அணியும் பழக்கம் இல்லையென்றும், திரு. ம. பொ. சி. அவர்கள் உண்டு என்றும் வாதாடினார்கள். அவர்களின் கூற்றைச் சீர்தூக்கி ஆராய்வதே இக்கட்டுரை.

தாலி என்ற சொல்லுக்கு, மங்கல நாண், மாங்கல்யம், மங்கல சூத்திரம் என அகராதிகள் பொருள் கூறுகின்றன. தாலி என்ற பெயரால் ஐம்படைத் தாலி, புலிப்பல்தாலி, ஓம் படைத் தாலி, மணத்தாலி எனப் பலவகைத் தாலிகள் சங்க காலத்தில் வழக்கிலிருந்திருக்கின்றன. சங்கப் புலவர்கள் தம் பாடல்களில் அடைகொடுத்துத் தாலி என்பதைக் குறிப்பிடுவர்.

[1] "தாலி களைந்தன்றும் இலனே" எனத் தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனை இடைக்குன்றூர் கிழார் பாடுகிறார். இளையவனாக இருக்கும்பொழுதே வீர மேம் பாடும், நடுநிலையும் உள்ளவனாக அவன் அமைந்திருப்பதைக் கூறும்பொழுது, "சிறுவர் ஐம்படைத் தாலியைக்கூடக் கழற்றாத இளையவனான இவன் யாரோ" என்னும் பொருள்பட இவனைக் கூறும்பொழுது தாலி என்ற சொல் இளையவர் அணியும் ஐம் படைத்தாலியைக் குறிக்கின்றது. ஐம்படைத்தாலி என்பது கண்ணேறு படாதிருப்பதற்காகவோ, அன்றி அழகிற்காகவோ அணியப்படுவது.

இது தவிர வீரர் தம் பிள்ளைகட்குத் தாம் கொன்ற புலியின் பற்களைக்கொண்டு புலிப்பல் தாலி என ஓர் அணிசெய்து அணிவித் தலும் வழக்காக அமைந்திருக்கிறது. வீரரல்லாதவரும் வெள்ளி யாலோ, அன்றிப் பொன்னாலோ தாலி செய்து குழந்தைகட்கு அணிசெய்து அணிவிக்கும் பழக்கமும் இருந்து வந்திருக்கிறது. இன்றும் இப் புலிப்பல்தாலி பொன்னால் செய்து அணிவிக்கும் பழக்கம் நாட்டில் இருந்து வருகிறது. இப் புலிப்பல் தாலி போன்றவற்றைப் பெண், ஆண் இருபாற் குழந்தைகளும் அணிவது மரபு.

[2] "புலிப்பல் தாலிப் புன்றலைச் சிறார்" என்ற புறப்பாட்டடி ஆண்மக்கள் தாலி அணிந்தமையைக் குறிக்கும்.

அகப்பாட்டில் தலைவனோடு களவில் ஒழுகி உடன் சென்ற தலைவி, தாலி அணிந்திருந்தமையைச் செவிலி குறித்துப் பேசும்

......... ......... .........பொன்னொடு
புலிப்பல் கோத்த புலம்புமணித் தாலி"

எனக

[4]ஐங்குறுநூற்றில் சோழியைக் கொண்டு கோத்தணிந்த தாலி என அழைக்கப்படுகின்றது.

தாலி எனப்படும் அணி பலவகையாகின்றது. மணத்தாலி என்பது "மங்கலவணி" எனச் சிலப்பதிகாரத்தில் வழங்கு கின்றது. இக்காலத்தவர் மாங்கல்யம் என்றும் தாலி என்றும்

[5]தாலம் என்ற சொல்லுக்குப் பனை என்று பொருள். தால் என்ற சொல்லுக்கு நாக்கு என்று பொருள். தாலாட்டுதல் தொங்கவிட்டு ஆட்டுதல் என்ற பொருளில் வருவது. [6]தால் என்ற சொல்லுக்கு நா என்ற பொருளும் உண்டு. [7]தால் என்ற சொல்லுக்குத் தாலாட்டு என்ற பொருளும் உண்டு. [8]ஞாலல் என்ற சொல்லுக்கு ஞாற்சி அல்லது தொங்குதல் என்பது பொருள். [9]தமிழின மொழிகளுள் வல்லின எழுத்துக்கள் மெல்லினமாதலும், மெல்லின எழுத்துக்கள் வல்லினமாதலும் உண்டு.

யான், நான், ஞான், தான் என்பன யாவும் தன்மை ஒருமைப் பெயர்ச்சொற்களாகும். நான் என்று தமிழிலும், ஞான் என்று மலையாளத்திலும் வருகின்றது. [10]யான் என்ற சொல்லே நான் எனவும், ஞான் எனவும் மாறியது என மொழி நூல் வல்லார் கூறுவர். தான் என்னும் சொல் பல பிற் சேர்க்கைகளைக் கொண்டு பல சொற்களுக்கு இடம் தரும். இந்த யான், நான், ஞான், தான் என்ற சொற்கள் யாவும் ஒரே அடிப் படையில் எழுந்தவை.

ஞண்டு—நண்டு
ஞாய்—தாய்.

என்பனவாய சொற்களில் நேரடியாக ஞ, 'ந'வாக மாறி யதும் ஞா, நா வாக மாறியதும் காணத்தக்கது. ஞாலுதலாய (தொங்குதல்) தொழிலையுடைய மங்கலவணி ஞாலி என

அழைக்கப்பட்டுப் பின்னர் ஞா, தாவாக மாறித், தாலியாக மாறியது. கயல் போன்ற கண்ணையுடையவளைக் கயற்கண்ணி என்பதுபோல், ஞாலுதலையுடைய அணி ஞாலியாகிப் பின் தாலியாகி யிருக்கவேண்டும். பொதுவாகத் தாலி என்ற பெயரால் அழைக்கப்படும் அத்தனை அணிகளும் தொங்கும் தன்மையை உடையதாய் இருப்பதால் தாலி என்பது ஞால் என்ற சொல் அடிப்படையில் தோன்றியிருக்க வேண்டும் என்பது துணிபு. அன்றியும் ஞாலம் என்ற சொல் தனியே பற்றுக்கோடின்றித் தொங்குதல் என்ற பொருளைக்கொண்டு உலகைக் குறிப்பதாயமைகின்றது. அஞ் ஞாலம் என்ற சொல்லே தாலம் என்று வருவதுண்டு. நம்பியார் தம் திருவிளையாடற் புராணத்தில் "தாலம் முறைமையிற் பரிந்து காத்தான்" எனப் பாடுகின்றார். இவண் தாலம் என்ற சொல் ஞாலத்தின் திரிபே. உலகமாய வட்டத்தைத் தாலவட்டம் என்பது மரபு. 'தாலம்' என்று பனையைக் குறிக்கின்ற சொல்லும் தொங்குதல் என்ற அடிப்படையில் எழுந்ததே. அத் தாலம் என்னும் பனை ஓலையால் ஆகிய அணியாக இத் தாலி இருக்குமோ என்று எண்ணவும் இடமிருக்கின்றது. "தாலிக் கொழுந்தைத் தடங்கழுத்திற் பூண்டு" எனத் திவ்வியப் பிரபந்தத்தில் பெரியாழ்வார் குறிப்பிடுகின்றார். நாரணன் தாலமாகிய பனங்கொழுந்தால் ஆகிய தாலியை அணிந்திருந்தான் என எண்ண இவ் வடி ...டம

"தண்பிறைக் கொழுந்தொன் றுளதெனில்"

எனவும்,

"..........மறைக் கொழுந்தின்
படர்வார் சடையின்"

எனவும நைடத ...ல் வ...

"அழற் கொழுந்தாகிய சிகரத்தாய் மணி"

எனக் கந்தபுராணம் கூறும். மருக்கொழுந்து என இன்றும் வழக்கில் வழங்குகின்றோம். கொழுந்து என்ற சொல் இளமைப் பருவமுள்ளது. மெல்லியது என்ற பொருளை உடைத்து எனக் கொள்ளுதலே நன்று. எனவே, நாரணன் அணிந்த தாலி மெல்லியது எனக் கொள்ளுதலே நன்று. சிறுபிள்ளையாக இருப்பவர் அணிந்த தாலி மணத்தாலியினின்று வேறுபட்டதெனவே மெல்லிய தாலி, இளந்தளிர் போன்றது எனக் குறிக்கவே 'தாலிக் கொழுந்'தென்றார்.

...யாலான காதணியை ஓலை என்னும் பெயராலும், தோடு என்னும் பெயராலும் பூணுவது போன்று பனை ஓலையா

லான கழுத்தணியும் பூண்டனர். காதில் ஓலை அணிதல் இன்றும் உண்டு. ஓலையைக் கழுத்தில் கட்டித் தொங்கவிட்டுக்கொள்ளுதல் சிறுபான்மை வழக்காக இருக்கிறது.

'தால்' என்ற சொல் நாவைக் குறிக்கும் எனக் கண்டோம். "தாலி என்பது தாலத்தை அதாவது நாவை உடையது எனப் பொருள்படும். எனவே, 'தாலி' என்பது புலியின் அங்காந்த வாய் வடிவில் செய்த ஆபரணத்தைக் குறிப்பதாயிற்று" எனவும் கூறப்படுகின்றது. தாலுதல் என்ற தொழில் நாவுக்காகி நாவை யுடைய வாயினுக்காகி அது வடிவிற்காகிப் பின் தாலியாய அணியைக் குறித்தல் எனக் கூறுவது அத்துணைப் பொருத்தமுடையதாகத் தோன்றவில்லை. சொல்லைக் கொண்டும் சொல் காட்டும் பொருளைக் கொண்டும் இக்கால வழக்கைக் கொண்டும் பார்க்கையில் தாலி என்ற சொல் தொங்குதலையுடைய ஒரு அணியான மணத்தாலியைக் குறிப்பதெனக் கொள்ளுதலே சாலும்.

தாலி எவ்வாறு தோன்றியது? எத்தகைய உருவம் முதலிற் கொண்டது என்பனவற்றை அறியத் தக்க சான்றுகள் கிடைக்கவில்லை என்றும் ஒருவாறு ஊகிக்கலாம்.

வீரவாழ்வைப் போற்றினர் தமிழர். தமிழருள் முதற்கால மக்கள் புலி போன்றனவற்றை வேட்டையாடிக் கொண்டுவந்த புலியின் தசையை உணவாகக்கொண்டு, தோலை உடையாக ஆக்கிப் பல்லைக் குழந்தைகட்குக் கழுத்தணியாக ஆக்கியிருக்கலாம். இன்றும் நரிக்குறவர்கள் தாம் கொன்ற நரியின் பற்களைத் தம் குழந்தைகட்கும் மகளிர்க்கும் கழுத்தணியாக்கி மகிழ்தலை அறிகிறோம். அதுபோன்றே சங்ககாலத்துக்கு முன் வாழ்ந்த முதற்கால மக்கள் புலிப்பற்களைக் குழந்தைகட்கும் பிறர்க்கும் அணியாக ஈந்திருக்கலாம். ஏறு தழுவுதல் போன்ற வீரச்செயல்களைச் செய்த ஆடவரைப் பெண்டிர் காதலித்ததொத்துப் புலியைக் கொல்லும் வீரரைப் போற்றும் வழக்கமும் இருந்திருக்கவேண்டும். காதலன் களவுக் காலத்தில் தான் காட்டிய வீரத்தின் அறிகுறியாய் அளித்த—தான் கொன்ற புலியின் பற்களைக் கற்புக்காலத்தில் வெளிப்படையாக அணிந்திருக்கலாம். காதலன் தந்த பரிசைக் காப்பாற்றிவரும் கடமை உள்ளம் அவள் பெறுகிறாள். இன்றும் காதலியர் காதலர் ஈவதைப் (மோதிரம் போன்றன) போற்றிக் காப்பதை நாம் காண்கின்றோம். காதலன் காதலிக்குக் கொடுத்ததும் அப்பன் மகனுக்குக் கொடுத்ததும் எனப் பலவகையாக அதே புலிப்பல் தாலி பெருகியிருக்கின்றது. பிற்காலத்தில் சிறுவர் அணியும் தாலி புலிப்பல் தாலி என்ற பெயராலும் மகளிர் காதல் ரியாய் அணிவது வேறொரு பெயரோடும் இலங்கியிருக்

கிறது. களவுக் காலத்தில் அன்றிக் கற்புக்காலத்தில் (மணந்த பின்) அவள் அவ்வணியை அணிவது தன் களவொழுக்கத்தைப் பிறர் அறியாமலிருப்பதற்காகவே. காலப்போக்கில் வயது வந்த மகளிர் மணக்காலத்திற்குப் பின் தான் தாலி அணியலாம் என்ற நம்பிக்கை ஏற்பட்டுச் சடங்குகள் தோன்றிய காலத்தில் தாலி கட்டும் சடங்கும் ஏற்பட்டிருக்கவேண்டும். இத் தோற்றம் தொல் காப்பியக் காலத்துக்குப் பல நூற்றாண்டுகட்கு முன் நடந்திருக்க வேண்டும். புலிப்பல் தாலியின் வளர்ச்சியே மணத்தாலி.

மங்கல சூத்ரம் என்ற சொல்லுக்கு அபிதான சிந்தா மணியில் பின் வருமாறு பொருள் எழுதப்பட்டுள்ளது.

"இது திருமணத்தில் கொண்டோன் தெய்வம் வாழ்த்தித் தன் தேக சம்ரக்ஷணார்த்தமும் தன் சந்ததி விருத்தியின் பொருட்டும் கொண்ட மனைவியின் கழுத்தில் தேவருஷிகள் புரோகிதர்கள் முதலியோர் சாட்சியாகக் கட்டும் அடையாள மாம். இதற்குத் தாலியென்று முற்கால தற்கால வழக்கம். இத் தாலியைச் செல்வமுள்ளோர் பொன் முதலியவற்றாலும் மற்ற பிறவற்றாலும் செய்து அணிவர். இதனைத் தால பத்திரமென்னும் ஓலையால் பலர் அணிதல் பற்றியே இதற்குத் தாலி என்று காரணப் பெயருண்டாயிற்று. மரத்தாலியும் உண்டு போலும். இது வடநாட்டில் தற்காலம் சில கீழ்ச் சாதியாரிடத்து நடை பெறுகிறது. இத் தாலியை வடுகரும் தாலி சூத்ரம் என்றும் பொட்டென்றும் வழங்கிவருகின்றனர். இதன் உரு தேசங்கள் தோறும் ஜாதிகள் தோறும் வேறுபடுகின்றது. இத் தாலி பல வற்றால் செய்யப்படுமென்பதை 'ஸ்வர்ணேன ரஜதேனே வா தாம் ரேணதா குணைரபி அதவா தால பத்ரேவா பௌஞ்சச துரஸ் ரகம்' என்னும் ஸ்ரீ உத்தரகாரண வாக்கியத்தால் அறிக. இதனைப் பதினறிழை கொண்ட சூத்திரத்தில் கோக்கவேண்டும் என்பது ஷெ ஆகமம்."

தாலியின் உருவத்தைப்பற்றி ஆராய்தற்கு மிகுதியான சான்றுகள் இன்று நமக்குக் கிடைக்கவில்லை. தமிழகத்தில் புலிப்பல் போன்ற அமைப்புள்ள தாலிகளே பெருவழக்கு. தெலுங்கையும், கன்னடத்தையும் பேசும் மக்கள் பொட்டு என்னும் வட்டவடிவமான அணியையும் அணிகின்றனர். ஆனல் மலையாளிகளிடத்தில் பதின்மூன்று வகைக்கு மேற்பட்ட தாலிகள் வழக்கிலுள்ளன. சென்னை அரசியலார் பொருட் காட்சிச் சாலையில் வெளியில் பார்வைக்கு வைக்காமல் மலையாள நாட்டுத் தாலிகளைச் சேர்த்து வைத்திருக்கிறார்கள். அப் பொருட்காட்சிச் சாலையில் வாழ்வியல் துறையில் குறியீட்டாளராக இருக்கும் திரு. ஜேசுதேவ் அவர்கள் எனக்குக் காட்டினார்கள்.

ரிடம் வழங்கும் தாலிகள் பலவகை உருவமுடையனவாகத் திகழ்கின்றன. இணை கூம்பு வடிவம், புலிப்பல் வடிவம், பொட்டுப் போன்ற பல்வகை வடிவங்களும் அங்கு வழக்கிலுள்ளன. இன்றும் ஏழைமக்கள் வெள்ளியாலும், செம்பாலும் கூடத் தாலி செய்து அணிந்து கொள்கிறார்கள். இவையனைத்தையும்விட இன்றைய வழக்கில் வெறும் மஞ்சட்கயிறே அவ்வணியின் சிறப்பைப் பெற்றுவிட்டது. சங்ககால மணத் தாலியும் கயிற்றில் கோத்துக் கட்டப்படுவது தான்.

சங்ககால இலக்கியங்களில் தாலிகட்டிய முறைமை வெளிப்படையாக எவ்விடத்தும் கூறப்படவில்லை. சங்க காலத்திலாவது தாலியை மணவணியாக அணிவிக்கும் பழக்கம் இருந்ததா? இல்லையா? என ஆராய நேரிட்டது. பிற்காலங்களில் தாலி கட்டும் வழக்கம் நிலைபெற்றமைக்குப் பலவகைச் சான்றுகளைக் கண்கூடாகக் காட்டும் இலக்கியங்கள்கூடத் திருமணக் காலத்தில் தாலிகட்டும் சடங்கைக் குறிக்க மறந்தன. விருந்தென்றால் சோறுண்டு என்பதுபோல் திருமணம் என்றால் தாலி கட்டுதல் உண்டு எனக் கொண்டே இன்றியமையாச் சடங்கைக் உய்த்துணர வைத்துவிட்டனர்.

திருத்தக்க தேவர் பல திருமணக் காட்சிகளை வருணிக்கிறார். ஆனால் எத் திருமணத்திலும் தாலி கட்டியதை இயம்பவில்லை. கம்பன் கடிமணப்படலம் என ஒரு படலமே வரைந்தான். பல்வேறு காட்சிகளையும் அணிபல அணிந்தமையையும் அழகு படுத்தும் கம்பன் கலியாணச் சந்தடியில் தாலிகட்டியதைக் கூற மறந்துவிட்டான். அதே கம்பன் தன் காப்பியத்திலேயே திருமணத் தாலியைப்பற்றி வெளிப்படையாகக் கூறுகின்றான். தம் நளவெண்பாவில் சுயம்வரக்காண்டம் என ஒரு காண்டத்தை அமைத்த புகழேந்திப் புலவர் சடங்குகளை விளக்கிக் கூறவில்லை. அதிவீரராம பாண்டியர் மணம்புரி படலம் என ஒருபடலமே தம் நைடதத்தில் வரைந்தார். பிற சடங்குகள் அனைத்தையுங் கூறிய அவரும் தாலி கட்டியதைக் கூற மறந்தார். எக் காலத்தில் மணவணியாகத் தாலியணிதல் தெளிவாக உண்டு என அறிஞர் பெருமக்கள் ஒத்துக்கொள்கின்றனரோ அக்காலத்து எழுந்த காப்பியங்களிலேயே தாலிகட்டும் பழக்கம் கூறப்படவில்லை. சங்க இலக்கியங்களிலும் இதேபோல் தாலிகட்டும் பழக்கம் திருமணப் பொழுதில் கூறப்படவில்லை. பிறவழியால் உய்த்துணர வழியுள்ளது. எனவே சங்கப் பாடல்களில் வெளிப்படையாகத் தாலி மணவணி எனக் குறிப்பிட்டுக் கூறப்படாமையால் தாலிகட்டும் பழக்கம் சங்ககாலத்தில் இல்லை என்று கூறுவது பொருத்தமற்றதாகக் காணப்படுகின்றது.

'வளரும் சமுதாயத்தில் காலத்திற் கேற்ப வேறுபாடுகள் உண்டாதல் இயல்பு' என்பது முன்பே கூறப்பட்டது. இவ் வுண்மையை முன்னர்க் கூறப்பெற்ற அகநானூற்று ௮௬ ஆம் பாடலும், ௧௩௬ ஆம் பாடலுமே நன்கு உணர்த்துகின்றன. அகம் ௮௬ ஆம் பாடலில் திருமணத்தின்போது நிகழ்ந்தன வாகக் கூறப்படும் சடங்குகளை (கரணங்களை)விட அகம் ௧௩௬ ஆம் பாடலில் வேறுபாடு கால வளர்ச்சியால் உண்டானது. இதனை ஊன்றிக் கவனித்த நச்சினார்க்கினியர் தொல்காப்பியம் - பொருளதிகாரம் - கற்பியலில் வரும்,

" கற்பெனப் படுவது கரணமொடு புணரக்
கொடைக்குரி மரபினோர் கொடுப்பக்

என்னும் கற்பியல் முதற் சூத்திரத்திற்கு அகம் ௮௬ ஆம் பாடலை எடுத்துக் காட்டி, அதன் கீழ், 'இதனுள் வதுவைக்கு ஏற்ற கரணங்கள் நிகழ்ந்தவாறும், தமர் கொடுத்தவாறும் காண்க,' என்று கூறியுள்ளார். இதனால் வதுவைக்கு ஏற்ற கரணங்கள் இவை என்பது தெரிகின்றது.

இந்த நச்சினார்க்கினியரே கற்பியலில் வரும்,

"பொய்யும் வழுவுந் தோன்றிய பின்னர்
ஐயர் யாத்தனர் கரணம் என்ப"

என்னும் நான்காம் சூத்திரத்திற்கு அகம் ௧௩௬ ஆம் செய்யுளை மேற்கோளாகக் காட்டி, 'தொல்காப்பியர் தாம் நூல் செய்கின்ற காலத்துப் பொய்யும் வழுவும் பற்றி இருடிகள் கரணம் யாத்த வாறு கூறினர், களவின் வழி நிகழ்ந்த கற்பும் கோடற்கென்று உணர்க,' என்று குறித்துள்ளார். இவற்றால், ஐயர் (சான்றோர்) கரணம் யாத்தற்கு முன்னர், அகம் ௮௬ ஆம் செய்யுளில் கண்ட திருமணச் சடங்குகள் தமிழகத்தில் நடைபெற்று வந்தன என்பதும் ஐயர் கரணம் யாத்த பின்னரே, அகம் ௧௩௬ ஆம் செய்யுளில் கண்ட புதிய சடங்குகள் போன்றவை தோன்றின என்பதும் நச்சினார்க்கினியர் கருத்தாதல் தெளியலாம். தெளி யவே, வளரும் சமுதாயத்தில் புதியன புகுதலாக நாளடைவில் பல சடங்குகள் புகுதல் இயல்பு என்ற பொது உண்மையை நச்சினார்க்கினியாரும் உணர்ந்திருந்தார் என்பது அறியப்படும்."

(தொடரும்)

# வியன்புகழாளர் விசுவேசுவரய்யா

. சி. சிவராமலிங்கம், பி. ஏ. (ஆனர்சு)]

"தோன்றிற் புகழொடு தோன்றுக அஃதிலார்
தோன்றலிற் றோன்றாமை நன்று"

என்பது தெய்வப் புலமைத் திருவள்ளுவரின் தெள்ளிய திருமொழி. இதனைத் தம் வாழ்க்கையால் மெய்ப்பிக்கும் பேறு பெற்றவர்கள் உலகத்துள் ஒரு சிலரே. கோடிக் கொருவராகத் தேடிப் பிடிப்பதும் அரிதே. அத்தகு புகழாளர்கள் தமக்கு மட்டுமின்றித் தாம் பிறந்த நாட்டிற்கும் பெருமை தேடித் தருபவராவர். இவர் போன்றாரால் நாடும் பெருமை தேடிக்கொள்ளுதல் உண்டு. 'வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து வான்புகழ் கொண்ட தமிழ்நாடு' என வரும் பாரதியார் வாக்கினை நோக்குக. புகழுக்குரிய பெருமக்களுக்குப் பொதுவாக நீண்ட ஆயுள் வாய்ப்பதில்லை யென்பர். அதனைப் பொய்ப்பித்தவர்களும் உலகில் உண்டு ஆறறிவுடைய மனிதனின் வாழ்நாட்காலம் நூறாண்டு என்ப. அம் முழு அகவையும் வாழும் வாய்ப்பு ஒரு சிலருக்கே கிடைப்பதாகும். அதிலும் வையத்திற் கொளியாக வான்புகழோடு வாழும் பேறு எல்லோருக்கும் எளிதில் கிட்டிவிடுவதன்று. வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவர்க்கே அப் பெறற்கரும் பேறு கிட்டுதல் கூடும். அப் பேற்றினை முழுக்க முழுக்கப் பெற்ற பெருமைக்குரிய திருமகனார் ஒருவரின் நூற்றாண்டு நிறைவு விழா சென்ற செப்டம்பர்த் திங்கள் பதினைந்தாம் நாள் பாரத மணித் திருநாடெங்கும் பார்போற்றும் வண்ணம் கொண்டாடப் பெற்றது. இதற்கு முன் இத்தகு சிறப்புடைய திருவிழா நடை பெற்றதாக வரலாறில்லை. விழாவிற்குரிய வியன்புகழாளராம் விசுவேசுவரய்யா அவர்களின் வாழ்க்கைப் பொன்னேட்டின் ஒளி நிறைந்த ஒரு சில பகுதிகளைப் பார்ப்போம்.

முப்பத்தெட்டுக் கல் தொலைவிலுள்ள 'முத்தன அள்ளி' என்னும் சிற்றூரில் சீனிவாசன் சாத்திரி, வெங்கசம்மா ...ிய பெற்றோருக்கு கஅசுக ஆம் ஆண்டு செப்டம்பர்த் திங்கள் பதினைந்தாம் நாள் அருமைத் திருமகனாராகத் தோன்றினர், மோட்ச குண்டம் விசுவேசுவரய்யா. மோட்ச குண்டம் என்பது அவர் தங்கி வாழ்ந்த ஆந்திரத்தைச் சார்ந்த கர்நூல் பகுதியிலுள்ள சிற்றூரின் பெயராகும். தந்தையாரின் அறிவும் தாயாரின் பண்பும் இவரைச் சான்றோராக்கின. பள்ளிப் படிப்பைச் 'சிக்பள்ளாபூர்' என்னும் சிறுநகரத்தே துவக்கிய

இவர், தம்முடைய அறிவின் திறத்தால் ஆசிரியர்களின் உள்ளங்களை யெல்லாம் கொள்ளை கொண்டார். பெங்களூரிலுள்ள மத்தியக் கல்லூரியில் பயின்று ௧௮௮௦ இல் பி. ஏ. பட்டத் தேர்வில் முதல்வராகத் தேறினார். அதுகாலை இவர்பால் பேரன்பு கொண்டிருந்த கல்லூரி முதல்வர் 'சார்லஸ் வாடர்ஸ்' என்பார் பெரிதும் பாராட்டித் தந்த அன்புப் பரிசில்களாம் 'வெப்ஸ்டர் அகராதி,' பொன்னாலான சட்டைக் கைப்பித்தான்கள் ஆகியவற்றை இன்றும் விசுவேசுவரய்யா போற்றிக் காத்து வைத்துள்ளமை போற்றுதலுக்குரியதாகும். மைசூர் அரசினரின் துணையோடு, பூனாவிலுள்ள அறிவியல் கல்லூரியில் சேர்ந்து பயின்று பம்பாய் மாநிலத்திலேயே முதல்வராகப் பொறியியல் பட்டத் தேர்வில் வெற்றி பெற்றார். ௧௮௮௪ இல் பம்பாய் நகரத் துணைப் பொறியியல் வல்லாராகச் சேர்ந்த இவர் ௧௯௦௮ ஆம் ஆண்டு பம்பாய் அரசியலாரின் தலைமைப் பொறியியல் வல்லுநராகச் சிறந்த தொண்டாற்றித் தமது விருப்பப்படியே வேலையினின்று ஓய்வு பெற்றார். பணியிலிருந்து விலகிய பின்னர் வெளிநாட்டுப் பயணம் மேற்கொண்டு வெற்றியோடு, தாய்நாடு திரும்பிப் பொறியியல் ஆய்வுரையாளராகத் தனியே உரிமையோடு பணியாற்றினார்.

அதுகாலை மைசூர் திவானாகவிருந்த டி. ஆனந்த ராவ் அவர்களின் அன்பு கலந்த அழைப்பிற்கிணங்கி ௧௯௦௯ இல் மைசூர் அரசில் தலைமைப் பொறியாளராகப் பணியேற்றார். டி. ஆனந்த ராவ் திவான் பதவியிலிருந்து ஓய்வு பெற்றதும் மைசூர் மன்னர், விசுவேசுவரய்யாவை அப் பதவியில் அமர்த்தினார். யாவரும் வியக்கும் வகையில் ஆறு ஆண்டுகள் திறம்படத் திவான் பதவி தாங்கிய விசுவேசுவரய்யா அவர்கள் அதுபோழ்து நிகழ்த்திய அருஞ் செயல்கள் என்றும் நின்று புகழ்பாடும் பெற்றியனவாகும். கண்ணுக்கினிய காட்சிதரும் வண்ணப் பூங்காவாம் பிருந்தாவனம் பொலிவுற விளங்கும் கிருஷ்ணராஜசாகர் அணைக்கட்டு, மைசூர் பல்கலைக் கழகம், மைசூர் வணிகக் கழகம், மைசூர் வங்கி முதலியவற்றைத் திட்டமிட்டுத் துவங்கி வைத்து மைசூர் மாநிலத்திற்குப் புகழ் தேடித் தந்த பெருமை அவரைச் சாரும். பத்திராவதியில் இயங்கும் மைசூர் இரும்பு எஃகு ஆலையை நிறுவியவரும், லக்காவல்லித் திட்டம் முதலிய பல உருப்படியான திட்டங்களைத் தீட்டிச் செயல்படச் செய்தவரும் இப் பெருந்தகையே.

செயற்கருஞ் செயல் பல செய்த திறமைமிகு பெரியார் தாமாகவே திவான் பதவியிலிருந்து ௧௯௧௮ ஆம் ஆண்டு, திசம்பர்த் திங்கள் ஒன்பதாம் நாள் விலகிக் கொண்டார். பதவியிலிருந்து விலகிய நாளன்று அலுவலகக் காரில் சென்று விலகல்

கடிதத்தைத் தந்த பின்னர் தம்முடைய காரில் வீடு திரும்பிய இவர், 'நான் என் வேலைகளில் எதையும் குறையாக வைக்கவில்லை' என்று தம்முடைய கடிதத்தில் குறிப்பிட்டிருந்தமை இவருடைய தன்னம்பிக்கைக்கும், ஒழுங்கு மனப்பான்மைக்கும் சான்றாகும்.

நூறாண்டுகள் வாழ்ந்திருக்கும் இப் பெரியவரின் வாழ்விலே நாம் கண்டு போற்றத்தக்க—பின்பற்றத் தக்க நெறிமுறைகள் நிறைய உள. இளமை தொட்டே எதற்கும் அஞ்சாமல் நேர்மைக் காக வழக்காடக்கூடிய நெஞ்சுரம் பெற்றவர் இவர். செய்வன திருந் தச் செய்யும் சீர்மை இவர்பால் மெத்தவுண்டு. உயிரினும் மேலான ஒழுக்கத்தினை உயர்வாக மதித்துப் போற்றிய பான்மையர். 'ஆக்கம் அதர்வினாய்ச் செல்லும் அசைவிலா ஊக்கம் உடையான் உழை' என்னும் அருங் குறளின் பொருளை அகத்திருத்தி எந்த நேரத்திலும் செய்தக்க அறிந்து செய்து கொண்டிருந்த இவர் தம்முடைய வாழ்வில் சோம்பலினை என்றும் சந்தித்ததே இல்லை. ஒழுக்கமும் அசையா ஊக்கமும் இவருடைய உயர்வுக்குப் பெருந் துணை புரிந்துள்ளன. யார் இவரைக் கண்டாலும் செயலின் சிறப்பை நன்கு தெரிந்து கொள்வர். பிறர்க்குரைத்துத் தானடங் காப் பேதையர் பலருளர். நம் பெருந்தகை எதையும் செயலில் செய்து காட்டியே பெருமை கொள்பவர். அயராது பயனுள்ள பணி எதையாவது செய்து கொண்டிருப்பதே இவருக்குப் பிடித்த மானதாகும். 'நேர்மையான, கடுமையான பணி ஒன்றே நம் நாட்டிற்கு வளத்தையும் மக்களுக்கு மகிழ்ச்சியையும் தரவல்லது' என்று இவர் எப்போதும் அறிவுரை கூறி வருகின்றார். இவ் ருடைய இல்லற வாழ்வு இன்பமளிக்கக் கூடியதாக அமையா விட்டாலும் வேலை இவருக்கு வேண்டிய மகிழ்ச்சியையும் நிறை வையும் தந்து வருகின்றது. ஐம்பதாண்டுக் காலமாகத் தனிமை வாழ்வை மேற்கொண்டுள்ள இவர்தம் மன ஆற்றல் நம் கற்பனைக் கும் எட்டாத வொன்றாம்.

வீணாகப் பிறரின் பணியில்—வாழ்வில் தலையிடவேமாட்டார். அதற்கான நேரமும் இவருக்கிருந்ததில்லை. கடந்த நாற்பத் தொன்பதாண்டுகளாகத் தம்முடைய செயலாளராகப் பணிபுரிந்து வரும் சடகோபாச்சாரியார் எங்கு வாழ்கின்றார், அவருடைய குடும்ப நிலைமை என்ன என்பனவற்றைப்பற்றி ஒன்றும் தெரிந்து கொள்ளாதவர் விசுவேசுவரய்யா. காலத்தைப் பொன்னேபோல் போற்றிக் காத்துச் செலவிடும் பண்புடையவர். மேனாட்டின ரைப் போலவே காலத்தில் எதையும் செய்பவர். 'சமன்செய்து சீர்தூக்கும் கோல்போல் அமைந்தொருபாற் கோடாமை சான் றோர்க் கணி' என்பதற்கேற்பச் சொற்செலவு மிகுந்த எண்ணற்ற பதவிகள் தாங்கிய காலத்திலும், இன்றும் தம்மவர் என்ற

காரணத்திற்காக எந்த உதவியையும் எவருக்கும் செய்தறியாதவர். நினைத்திருந்தால் கோடிக் கணக்கில் பொருளைக் குவித்திருக்கக் கூடிய வாய்ப்புப் பெற்றிருந்தும் வாய்மை வழி நின்று அறவாழ்வு நடாத்திய ஆன்றோரான இவர் அன்றும் இன்றும் வாடகை வீட்டில் தான் வாழ்ந்து வருகின்றார். பொருள் சேர்க்கும் எண்ணமே இவருக்கு என்றும் இருந்ததில்லை. நூறாண்டுகள் வாழ்வதற்கான வழிகளைப்பற்றிப் பலர் பலவகையாகக் கூறியிருந்த போதிலும் இவர் அத்தகு வாழ்விற்குக் 'கடினமான உழைப்பு, கட்டுப்பாடான பழக்க வழக்கங்கள், அளவான கேளிக்கை, மன நிறைவான வாழ்க்கை, மகிழ்ச்சியோடு உண்ணல் ஆகியவையே வேண்டும்' என்று தம் அனுபவத்தின் வாயிலாகத் தெளிந்துரைத்து வருகின்றார்.

'உள்ளத்தாற் பொய்யாதொழுகி உலகத்தார் உள்ளத்துளெல்லாம்' ஒளி வீசிக்கொண்டிருக்கும் இத் தலையானவரின் நூற்றாண்டு விழாச் சென்ற 15-9-60 அன்று பெங்களூரில் வெகு சிறப்பாக நடைபெற்றபோது பாரதத் தலைமை அமைச்சர் பண்டித நேரு அவர்கள், 'மக்களினத்தின் போற்றுதலையும், புகழுரையினையும் பெற்ற மாபெரும் மனிதர் டாக்டர் விசுவேசுவரய்யா. அவருடைய பயிற்சிகளும், பணிகளும் உலகிற்குப் பெரும் படிப்பினை'யாகும். நீரகக் குண்டு, அணுக் கருவிகள் முதலிய அழிவுப் பொருள்களின் பிடியிலிருந்து உலகம் தப்பிப் பிழைக்க வேண்டுமானால் டாக்டர் விசுவேசுவரய்யா போன்ற பெரிய மனிதர்களிடமிருந்து பல பெருங் குணங்களை உலகத்தினர் கற்றுக் கடைப்பிடிக்க வேண்டும். விசுவேசுவரய்யா அறிவியல் திறத்தை எப்போதும் ஆக்க வேலைக்கே பயன்படுத்தியுள்ளார். அறிவியலைச் சரியான முறையில் ஆக்க வேலைக்குப் பயன்படுத்தினால், அதன் வாயிலாகப் பெரிய அருஞ் செயல்களையும் புரிய முடியும் என்பதற்கு டாக்டர் விசுவேசுவரய்யா போன்ற பெருந்தகையாளர்களின் வரலாறுகள் எடுத்துக்காட்டுக்களாக உள்ளன. இந்தியா ஈன்றெடுத்த மனிதகுல மாணிக்கமான இவருக்குச் சொந்த முறையில் என் அன்புகலந்த பாராட்டுதல்களைத் தெரிவிக்க நான் இங்கு வந்திருக்க முடியும். எனினும், இந்திய மக்களின் நல்லெண்ணத்தாலும் நம்பிக்கையாலும் நான் தலைமை அமைச்சர் பதவியிலிருப்பதால் இவரை நான் பாராட்டுவதன் வாயிலாக இந்திய மக்கள் சார்பில் வந்து இந்தப் பாராட்டும் பணியைச் செய்கிறேன். இந்த நன்னாளிலே டாக்டர் விசுவேசுவரய்யாவின் வாழ்க்கையிலிருந்து சிலவற்றைக் கற்றுக் கொள்ள நாம் உறுதிபூண வேண்டும். கடினமாக உழைக்கும் தன்மை, அறிவியலை ஆழ்ந்து படித்தல், எதிர்காலத்தை நம்பிக்கையுடன் எதிர் நோக்குதல், குறையப் பேசி நிறையச் செயலாற்றுதல்

முதலியவைகளை இவரிடமிருந்து நாம் படித்தல்வேண்டும். நாம் எல்லோரும் நம்மால் முடிந்த அளவு சிறந்த முறையில் நாட்டுக் காகச் செயலாற்றி விசுவேசுவரய்யா காட்டிய வழியில் வாழ்வதன் மூலம் உண்மையிலேயே இம் மூதறிஞரைச் சிறப்பிப்போமாக' என்று புகழ்ந்து பாராட்டியுள்ளார்.

மக்கள் தமக்களித்த பாராட்டுதல்களுக்கு நன்றி தெரிவிக்கு முகத்தான் பேசிய விசுவேசுவரய்யா அவர்கள், 'உலகப் பயிற்சியை வைத்துக் கொள்கைகளை வகுத்துக் கொள்ளவேண்டும். தனிப் பட்ட வாழ்க்கையிலும் வணிகவாழ்க்கையிலும் உயர்ந்த முறை யில் கட்டுப்பாட்டைப் பேணி வளர்க்கவேண்டும். நேர்மை யையும் காத்தல் வேண்டும். இப்படிச் செய்தால் இந்தியப் பொரு ளாதார வாழ்வின் எதிர்காலம் பற்றி எந்த இந்தியனும் அஞ்ச வேண்டியதில்லை. திறமையாகப் பணிபுரிவதன் மூலமே மக்கள் நல்வாழ்வு பெறமுடியும். இந்தியா முன்னேறுவதற்கான முதல் தேவை, கட்டாயத் தொடக்கக்கல்வியைச் செயல்படுத்துவதே. இதைத்தான் உருசியாவும், சப்பானும் தம்முடைய சீர்திருத் தத்தைத் துவங்குவதற்கு முன்பு செயலுக்குக் கொண்டுவந்தன. ஒரு நாடு சொல்வளம் பெறவேண்டுமானால் கல்வி மிகமிக இன்றியமையாதது. இந்தியாவில் கடினமாக உழைப்பதன் மூலமே யாரும் வாழ்க்கையில் வெற்றியடைய முடியும்' எனக் கூறியுள்ளார்.

இந்தியக் குடியரசுத் தலைவர் அவர்கள் டில்லியில் நடை பெற்ற பாராட்டு விழாவில் பேசுகையில், 'டாக்டர் விசுவேசுவ ரய்யாவின் வாழ்க்கை நேர்மைக்கும் கடின உழைப்பிற்கும் முன்மாதிரியாக இருக்கிறது. இந்த நாட்டின் எதிர் காலத்தை உருவாக்கும் பெரும்பணியில் ஈடுபட்டுள்ள இந்தத் தலைமுறை யினர் விசுவேசுவரய்யாவின் வழிமுறைகளைப் பின்பற்ற வேண்டும். டாக்டர் விசுவேசுவரய்யாவின் நீண்ட ஆயுளுக்குக் காரணம் நடுத்தர வாழ்க்கைதான். அவர் மேற்கொண்ட எந்தச் செயலிலும் தவறுகள் ஏதும் நிகழாமைக்குக் காரணம் அவர் மிகக் கருத்தாக ஒவ்வொரு செயலையும் செய்துவந்தமைதான்' என்று புகன்றுள்ளார். மேலுமவர், டாக்டர் விசுவேசுவரய் யாவின் பண்பு நலன்களைக் குறிப்பிட்டுப் பேசுகையில் நமக் கெல்லாம் படிப்பினையாகும் நிகழ்ச்சியொன்றையும் தெரி வித்தார். இந்திய அரசினரிடமிருந்து 'பாரத ரத்னம்' விரு தைப் பெறுவதற்காக டாக்டர் விசுவேசுவரய்யா டில்லி சென் றிருந்தபோது குடியரசுத் தலைவர் மாளிகையில் தங்கினாராம். தங்கிய நான்காம்நாட் காலை அவர் தலைவரைச் சந்தித்துத் தாம் உடனே வேறொரு விடுதிக்குச் செல்லப் போவதாக அறிவித்

தாராம். காரணம் கேட்டதற்குத் தலைவர் மாளிகையில் எவரும் மூன்று நாட்களுக்குமேல் தங்கலாகாது என்னும் விதியிருப்பதைச் சுட்டிக் காட்டினாராம். அது பழைய விதியென்றும், விசுவேசுவரய்யா போன்ற பெரியவர்களுக்குப் பொருந்தாது என்றும் தலைவர் எவ்வளவோ கூறியும், விதியை மீறுவதைவிடக் குடியரசுத் தலைவர் மாளிகையில் கிடைக்கும் வசதிகளை இழப்பதே சிறப்பு என்று சொல்லிவிட்டு வெளியேறினாராம்.

உலகத் தலைமையாளர் காந்தியடிகள் 1927 இல் மைசூர் மாநிலத்திற்கு வருகை தந்தபோது டாக்டர் விசுவேசுவரய்யாவின் சாதனைகளை வியந்து பாராட்டிக் 'கிருஷ்ணராஜ சாகர அணை அன்னாரது பசுமையான நினைவை இப்பாருள்ளளவும் மக்கள் மனத்தில் நிலைநிறுத்திவரும்' என்று குறிப்பிட்டுள்ளார். டாக்டர் விசுவேசுவரய்யா பல பயனுள்ள நூல்களையும் இயற்றியுள்ளமை ஈண்டு நினைதற்குரியது.

இதைப்போன்று எண்ணற்ற நேரங்களில் டாக்டர் விசுவேசுவரய்யா அவர்கள் தம்முடைய தகைசால் பண்புகளைத் தூயசெயல்கள் வாயிலாக வெளிப்படுத்தியுள்ளார். குடியரசுத் தலைவரும், தலைமை அமைச்சரும், மற்றவர்களும் அன்னாரது நூற்றாண்டு விழாவைப் பெரிதும் மகிழ்ச்சியோடு கொண்டாடிய நேரத்தில் இந்திய அரசினர் அப்பெருந்தகையின் திருவுருவப் படத்தினை அஞ்சற்றலையில் பொறித்து வெளியிட்டமை பாராட்டற் குரியதாகும். 'வாழ்த்துவதும் தாம் வாழ்வான்' என்பது மணிமொழி. அவருக்குச் செய்யும் சிறப்புக்களெல்லாம் நமக்கு— நம் நாட்டுக்குச் செய்யும் சிறப்புக்களாம். தென்னகத்தாய் ஈன்ற கருவில் திருவுடைய பெரியாரான அவருடைய வாழ்க்கையைக் காணுங்கால் 'உண்டாலம்ம இவ்வுலகம்' என்று பாடிய பெரும் புலவனின் வாய்க்குச் சர்க்கரையிடத் தோன்றுகின்றது. நூறாண்டு வாழ்ந்த பெரியார் தாமிர வருணியாற்று மணலினும் பல்லாண்டுகள் வாழ்ந்து, நாட்டிற்கு நல்வழிகாட்ட அம்மையப்பர் அருள்புரிவாராக.

---

## கருத்துள் எண்ணுவாம்

[ந. கா. கணபதி]

நிலைதரு மெய்ப்பொருள் நிலைக்க எ ம
கலைகளும் தொழில்களும் கருதும்
சொலவல சொற்பொருள் துலங்க ம

# இந்தியாவின் "அடிப்படைத் தேவைகள்"

[டாக்டர் விசுவேசுவரய்யா]

1. மக்கள் வேலை செய்யும் நேரம் குறைவு. எனவே, வேலைசெய்யும் நேரத்தை மிகுதிப்படுத்தவேண்டும்.

2. வேலை செய்யும் நேரம் ஒழுங்கு படுத்தப்பட்டதாக இல்லை. எனவே, அதை ஒழுங்கு செய்து கட்டுப்பாட்டுக்குக் கொண்டுவர வேண்டும். ஒவ்வொருவரும் சராசரி நாள் ஒன்றுக்கு 6 இலிருந்து 8 மணி நேரம் வரை வேலை செய்ய வேண்டும்.

3. வாழ்க்கையின் ஒவ்வொரு துறையிலும் ஐக்கியத்தையும் ஒருமைப்பாட்டையும் ஒத்துழைப்பையும் அதிக அளவில் ஏற்படுத்த ஒவ்வொரு குடிமகனும் முயல வேண்டும்.

4. ஒவ்வொருவரும் விடா முயற்சியுடனும், கட்டுப்பாட்டுடனும், நேரத்தைப் போற்றும் பண்புடனும் இருக்கவேண்டும்.

5. வாழ்க்கையில் வெற்றியடைவதற்கு விசுவாசமாகவும் தன்னலமில்லாமலும் உண்மையுடனும் இருக்க வேண்டும் என்பதை எல்லோரும் உணரவேண்டும்.

6. அன்றாட வாழ்க்கையில் மக்கள் மற்றவர்களுக்கு மரியாதை காட்டவேண்டும்—சேவையும் புரியவேண்டும்.

7. ஒவ்வொரு நாட்டிலும் பொதுவாக மக்களில் இருபிரிவுகள் இருக்கும்—அதாவது சிலர் வழிகாட்டுபவர்களாகவும் மற்றும் சிலர் பின்பற்றுபவர்களாகவும் அந்த இருபிரிவுகள் இருக்கும். இந்த இருபிரிவினரையும் தக்க முறையில் பயிற்ற ஏற்பாடுகள் செய்யப்பட வேண்டும்.

8. ஒவ்வொரு குடிமகனும் அடிப்படையான அறிவைப் பெற்றிருக்கவேண்டும்.

9. சில நாடுகள் செய்ய முற்பட்டது போன்று குடிமக்களின் நடத்தையையும், வேலைகளையும் பற்றி விவரம் தயாரிப்பதற்காக ஒரு திட்டக் குழுவை அமைத்து நடத்த வேண்டும்.

10. பள்ளிக்கூடங்களிலும், பல்கலைக் கழகங்களிலும் வேலை செய்யும் பழக்கங்கள், வணிகப் பழக்கங்கள், நடந்து கொள்ளும் முறை ஆகியவை பற்றி வாதித்து, அறிவுபுகட்டவேண்டும். அத்தகைய போதனைகளை நடைமுறைக்குக் கொண்டுவந்து மதிப்புப் பெற்றவைகளாகச் செய்ய வேண்டும்.

11. நேரத்தை வீணாக்கக் கூடாது. நல்ல முறையில் செலவு செய்ய வேண்டும். ஏனெனில் ஒரு கட்டுப்பாடான வாழ்வில் நேரமே 'பணம்'; பணியாற்றுவதால் அது கிடைக்கிறது.

# நினைவுச்சின்னங்களின் திறப்பு விழா[1]

இவ்விழா 23-9-60 வெள்ளிக்கிழமை மாலை தருமையாதீனத் திருமடத்தில் மிக்க சிறப்பாகத் தொடங்கப் பெற்றது. திருமடத்தின் அகம்புறம் எங்கணும் பல்வகைத் தோரணங்களானும் வாழை முதலியவற்றானும் நன்கு ஒப்பனை செய்யப்பட்டிருந்தன. மேளமுதலிய இயங்கள் மிக்கொலித்தன. தேவாரத் திருமுறைகள் சிறந்த ஓதுவாரால் பண்ணொடு பன்முறை பாடப் பெற்றன. திருக்கோவில் வழிபாடுகள் சீர்சிறப்புடன் நிகழ்ந்தன. 'கயிலை மலையானே போற்றி போற்றி' எனவரும் திருத்தாண்டகத் திருப்பதிகங்கள் மூன்றும் ஓவாது ஓதப்பெற்றன.

அழகிய நினைவுச்சின்னங்கள் மின்விளக்குகளால் மேலும் பொலிவுபெற்றுத் திகழ்ந்தன. இவை மெய்யடியார்களின் திருமேனி அருட்பொலிவுடன் வெண்ணீற்றுத் திருப்பொலிவுங் கெழுமித் தோன்றுவதை யொத்துத் திகழ்ந்தன. நினைவுச் சின்னங்களைத் தனிநிகரில்லாக் காளத்தியான் தண்ணருளால் திறந்து வைக்கும் 'திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி 'அருணந்தித்தம்பிரான் சுவாமிகள்'' அவர்கள் குறித்த நேரத்து எழுந்தருளியுள்ளார்கள். மிக்க சிறப்பாக வரவேற்கப்பட்டனர். சிவவழிபாட்டுடன் அடிகளாரின் திருக் கைகளால் அச் சின்னங்கள் திறந்து வைக்கப்பட்டன. அப் பொழுது பெருமக்கள் கொண்டுள்ள எல்லையில்லாப் பெரு மகிழ்ச்சியினைச் சொல்லளவான் விளக்குதல் அரிதென்பது போதரக் கைதட்டுதலானும், சிவமுழக்கத்தானும், முகப்பொலி வானும் பன்முறை புலப்படுத்தினர்.

நினைவுச்சின்னங்களின் திருப்பெயர்கள் வருமாறு: க. திருக் கேதார நிலையம், உ. பசுபதிநாத நிலையம், ங. அமரநாத நிலையம், ச. திருக்கயிலாய நிலையம், ரு. திருக்கயிலாய தரிசன நினைவு வளைவு (ஸ்ரீ ஞானபுரீசர் சந்நிதி) சு. திருக்கயிலாய தரிசன நினைவு வளைவு (ஸ்ரீ தருமபுரீசர் சந்நிதி) என்னும் அறு வகை அருள் நிலையங்களாகும்.

பின் 'திருநெறிய தெய்வத்தமிழ் மன்றத்தின்'கண் பேரவைத் திருக்கூட்டம் பேராரவாரத்துடன் துவங்கப்பெற்றது. வனப்புற அமைந்த அரங்கின்கண் திருத்தருமபுரம் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குரு மகாசந்நிதானம் அவர்கள் தலைமைபூண்டு வீற்றிருந்தருளினர்.

ீல [illegible] ஏபரடிகள புண்ணியத்தின் திருவுருவே போன்று தலைவரண்மையில் தமக்கெனவமைத்த தனி [illegible] கை யில் அருளொடு பொலிந்து எழுந்தருளிருந்தனர்.

---

1. திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்களது திருக்கயிலை முதலிய யாத்திரை.

நனிமிகு இனிய குரலில் இளைஞரொருவரால் திருநெறிய தமிழ்ப் பாடல்கள் பண்ணுடன் ஓதப்பட்டன. கயிலைக்குருமகா சந்நிதானம் தலைமையுரை மொழிந்தருளினர். பொருளுரை வழங்கும் அருளடிகளாரவர்கட்குத் தருமபுர ஆட்சிக்குட்பட்ட பல்வேறு கல்லூரி, பள்ளிகளின் மாணவ ஆசிரியன்மாராலும், வெளியூர் மெய்யன்பராலும் ஒன்பது வரவேற்பு நன்மொழிகள் படித்து அடியுறையாக ஒப்புவிக்கப்பட்டன. இவற்றை மகளிர் ஆடவர்களாகிய ஆசிரியன்மாரும், மாணவரும் பணிவுடன் படித்தனர். வடமொழி வரவேற்பொன்றும் தருமபுர ஆட்சிக்குட்பட்ட ஆகமப் பாடசாலை முதல்வரால் கனிவொடு படித்துக் கையுறையாக ஒப்புவிக்கப்பட்டது. ஒவ்வொரு வரவேற்பு நன்மொழியும் பூமாலை புகழ்மாலைகளுடன் ஒப்புவிக்கப்பட்டன.

குருமகாசந்நிதானம் அவர்கள் அடிகளாரின் பணிவு, அன்பு, பயிற்சி, பண்பாடு, அடியார் ஆசான் முதலியோரிடத்துப் புரியும் அளவிறந்த காதற்றொண்டு, தந்நோவைப் பொருட்படுத்தாது முற்பட்டுப் பிறர் நோவைப் போக்கியருளும் பெருந்தகைமை, திருவூர்ச்செலவிற் கொள்ளும் பெருவேட்கை, ஏனையாரையும் கொள்ளுமாறு செய்வித்து வேண்டுந் துணைபுரிதல், யாண்டும் 'சிவசிவ' என உள்ளமும் உரையும் உடலும் உடங்கியைந்து ஒல்லும் வகை ஓவாது எண்ணலும் ஓதலும் எழுதலும் விழுத்தவமாகக்கொண் டொழுகிவரும் பழுத்த முதுபணி கேதாரச் செலவின்கண் தம்மாட்டு நேரில் புரிந்துள்ள தனிப் பெருந் தொண்டு, உடலுயிரனைய செந்தமிழுக்கும் சிவனெறிக்கும் செய்துகொண்டு வரும் எல்லையிலா அறக்கட்டளைகள் பிறவும் பற்றி விளக்கமாக மொழிந்தருளினர். மேலும் அடிகளாருக்கு நிறைவு எய்திய ஆறுபத்தாண்டுக்கு அடியவர்களால் எடுத்து அடியுறையாக ஒப்புவிக்கப்பட்ட தட்டுகள் ஆறுபத்து. அவற்றையொத்து வரும் எண்பதாண்டின் எழினிறைவினுக்கும் எண்பது தட்டுகளும் ஒப்புவிக்கப்படும் புண்ணியப் பேறும் பொருந்தும் எனவும், அறக்கட்டளைகள் ஒருகோடிக்கு மேலோங்குமெனவும், குருவின்பாற் கொள்ளும் கரைகடந்த அன்பினுக்கும் தொண்டினுக்கும் இவர்களே உரைகல்லனைய எடுத்துக்காட்டெனவும், நீடுவாழ வேண்டுமெனவும் கொற்றவையையும் குருபரரையும் போற்றி வாழ்த்தியருளினார்கள். அடிகளார் பொருளுரை வழங்கத் தனிப்பெரும் பொலிவுடன் எழுந்தருளினர். குருமகாசந்நிதானத்தடிகளை எட்டுறுப்பும் நிலந்தோய வீழ்ந்தெழுந்து வணங்கித் தொழுதனர். இவ்வருட்காட்சி யாண்டுங் காணொணாப் பெரும் பொருட்காட்சியாய் இருந்தது. காணும் பேறுபெற்ற பண்டைத் தவஞ்சார் மெய்யன்பர்களின் கண்ணையுங் கருத்தையும் என்றுான்றும் விட்டகலா அருட்பெரு விருந்

னுக் காட்சியாயிருந்தது. அம்மட்டோ? அரவணாடி தொழும் குரவனார் மாட்டுப் பரவுசீர் மாணவர் பணிவொடு வணங்கும் பண்பாட்டினைப் பாருளோர் உணர்ந்து பயின்றுய்யத் தோன்றிய பண்டை நெறியின் எடுத்துக்காட்டாகவும் இருந்தது.

பண்டை நாளில் திருநாவுக்கரசு நாயனார்பால் காணு முன்னே அளவிறந்த காதல்கொண்டொழுகிய அப்பூதியடிகளார் காணும் பேறுபெற்ற ஞான்று புரிந்தருளிய வணக்கமும், தருமபுரத்து நான்காம் பட்டத்து மாசிலாமணி தேசிகர் திருவடிகளைக் கண்டதும் குமரகுருபரவடிகள் வணங்கிக் குரவராகக் கொண்டொழுகி அவர்தம் அருட்கட்டளையின் வண்ணம் நிகழ்ந்தமையும் நூல் வாயிலாகவும் நுண்ணறிவாளர் நுவலும் அறிவுரை வாயிலாகவும் உலகம் கேட்டறிந்து உள்ளத்தடங்கா உவகை பூத்தொளிர்கின்றது. அவ்வுலகினுக்குத் தருமபுர முதல்வர் இயல்பிலே குருமகாசந்நிதானமாகவும், காசிமடத்ததிபர் அது போன்று அம் மகாசந்நிதானத்துத் திருவடி மாணவராகவும் அமைந்துள்ளமை சாலவும் பேறளிப்பதொன்றாகத் திகழ்ந்து பண்டை மாசிலாமணி தேசிகர் குமரகுருபர அடிகள் இருவரின் அருளியல் காட்சியைக் கண்ணுக்கு நேராகக் காட்டுவதாக விளங்கிற்று. இதனைக் காணுதாருங் கண்டு கருத்தமைத்துக் களிகூரும் வண்ணம் நிழலோவியங்கள் பல நிரலே எடுக்கப்பட்டுள்ளன.

அடிகளார் அருளுரை தொடங்குங்கால் "மனத்தகத்தான் தலைமேலான்" என்னுந் திருத்தாண்டகத்தைப் பண்ணொடோதியருளித் தொடங்கினர். அப்பொழுது அடிகளார் நிலையினைக் கண்டு செப்பருஞ்சீர் ஒப்பில் அப்பர் பெருமானே என உன்னி யுணர்ந்துளத்தமைக்கும் வண்ணம் மன்னிற்று. அதுபோல் திருமுறைப் பாடல்கள் ஓதியருளினர். கருத்துறும் அருளுரைகள் அருமறைகளென நுவன்றருளினர்.

பின் குருமகாசந்நிதானம் நிறைவுரை நிகழ்த்தி அடிகளாருக்குப் பொன்னாடை போர்த்தியருள்புரிந்தார்கள். திருநெறிய தமிழ்மறையோதப் பேரவை நிறைவுற்றது.

பின் கொற்றவை வழிபாடாகிய துர்க்காதேவி வழிபாடு மிக்க சிறப்பாக நடந்தது. பின்னர்க் குருமகாசந்நிதானம் திருவருட் கொடையாகிய பிரசாதத்தினை அடிகளாருள்ளிட்ட மெய்யன்பர்களனைவர்கட்கும் வரிசையின் வழங்கி வாழ்வித்தருளினர்.

வாழ்க குருமகாசந்நிதானம்; வளர்க தருமையாதீனம்.
வாழ்க அருளடிகள்; வளர்க அறநெறிகள்.

# அகராதிகள்

*[இப்பகுதியில் சென்னை மறைமலையடிகள் நூல்நிலையத்திலுள்ள அகராதிகளைப் (Dictionaries) பற்றிய விளக்கங்கள் திங்கள் தோறும் வெளியிடப்பெறும்.]*

## 1. முதல் தமிழ் - தமிழ் அகராதி

சொற்பொருள் விளக்கத்தைத் தருதற்குத் தமிழர்கள் பண்டு தொட்டுக் கடைப்பிடித்து வந்த முறை நிகண்டு முறையே யாம். நிகண்டின்கண் ஒவ்வொரு சொல்லுக்கும் பொருளுரைக் கும்போது அதற்குரிய பொருளனைத்தையும் பாவடிவத்திலேயே அமைத்து ஒவ்வொரு பாவாக அமைத்து விடுவர். அக் காலத்தில் தமிழ் கற்கப் புகுந்தோர் அனைவரும் நிகண்டிலுள்ள பாக்களை மனத்தில் பதியவைத்துக்கொள்வர். இம்முறை கடின மானதோடல்லாது தேவையில்லாததுமாகும். அச்சுவசதி இல் லாத காலத்தில் இம்முறை பெரிதும் பயனளித்தது. அகர வரிசை முறை மேலைநாடுகளில் செல்வாக்கு எய்திய பின்னர் நம் நாட்டிற்கும் பரவிற்று.

முதல் தமிழ் - தமிழ் அகராதி கி. பி. ௧௭௩௦ இல் வீரமா முனிவர் என வழங்கும் பெஸ்கிபாதிரியாரால் இயற்றப் பெற்றது. இதன் பெயர் 'சதுரகராதி' என்பது. இந் நூல்தான் முதன்முதல் அகராதி என்ற பெயரைத் தலைப்பில் கொண்டு விளங்கியது. வீரமாமுனிவர் இத்தாலிய நாட்டைச் சார்ந்தவர். ௧௬௮௦ இல் தோன்றி ௧௭௪௬ இல் மறைந்துவிட்டார். இந்தியாவில் கிறித்துவ சமயத்தைப் பரப்புவதற்காக வந்தார். சமயத்தைப் பரப்புவதற் காகத் தமிழைக் கற்றவர். அதில் புலமை எய்திச் சிறந்த காவிய மாகிய "தேம்பாவணி"யையும் இவர் இயற்றியுள்ளார். சதுரக ராதியை இயற்றிய இவர் தமிழ்—இலத்தீன் அகராதி (௧௭௪௨), தமிழ் - பிரெஞ்சு அகராதி (௧௭௪௪), போர்த்துகீசு - இலத்தீன்- தமிழ் அகராதி, இலத்தீன் - தமிழ் அகராதி, தமிழ்-ஆங்கில அக ராதி முதலிய அகராதிகளையும் இயற்றியதாகத் தெரியவரு கின்றது.

சதுரகராதி கி. பி. ௧௭௩௦ ஐ ஒட்டி எழுந்ததாயினும் ஒரு நூற்றாண்டுவரை அது ஏடுகளிலேயே பல பிரதிகள் செய்யப் பெற்றுத் தமிழ்நாடு முழுவதும் பரவியுள்ளது. நூல் முழுவதும் ௧௮௨௪ இல் ரிச்சர்டு கிளார்க் என்பவரது உத்தரவின்மேல் தாண்டவராய முதலியார், இராமச்சந்திர கவிராயர் என்ற இரு பேரறிஞர்களாலும் பரிசோதிக்கப் பெற்று அச்சிடப்பட்டுள்ளது. சென்னைச் சங்கத்தில் அச்சுப்பதித்தது என்று நூலில் குறிப்

பிடப்பட்டுள்ளது. இதன் அளவு $28\frac{1}{2} \times 19$ செ. மீ; மொத்தத்தில் 552 பக்கங்கள் உள்ளன.

இந்நூல் மர எழுத்துக்களால் அச்சிடப்பட்டுள்ளது. ஒற்றுக்களுக்கு மெய்யெழுத்துக்களின்மேல் புள்ளிவைக்கும் வழக்கம் முற்றிலும் இல்லாது சில இடங்களில் மட்டும் காணப்படுகின்றது. ஓலையில் எழுதும்போது ஒற்றுக்களுக்குப் புள்ளிவைக்கும் வழக்கம் பெரும்பான்மை கையாளப்படவில்லை. ஏனெனில் ஒவ்வொரு ஒற்றுக்கும் புள்ளிவைக்கும் பொழுது ஓலை துளை விழுந்து வீணாகிவிடுமாதலின் புள்ளிவைக்கவில்லை. இம் முறையே அச்சிலும் கையாளப்பட்டுள்ளது சில இடங்களில் புள்ளி வைத்தும் சில இடங்களில் புள்ளிவைக்காதும் தடுமாறிய நிலையை இந்நூலிற் காணலாம்.

'சதுரகராதி' என்பது நான்கு அகராதி என்றுபொருள் படும். இதில் பெயரகராதி, பொருளகராதி, தொகையகராதி, தொடையகராதி என்ற நால்வகை அகராதிகளும் அடங்கி யுள்ளன. பெயரகராதியில் ஒரு சொல்லுக்குரிய பல பொருள் கள் கொடுக்கப்பட்டுள்ளன. இது பெரும்பான்மை இன்றைய அகராதியைப் போலவே உள்ளது. பொருளகராதியில் ஒரு பொருளுக்குரிய பல சொற்கள் காணப்படுகின்றன. இது நிகண்டையொத்துள்ளது. அடுத்துத் தொகையகராதி. இது இலக்கிய வழக்கில் தொகுத்துச் சொல்லப்பட்ட சொற்களுக் குரிய விளக்கத்தைத் தருகின்றது. இருமை, மும்மை போன்ற தொகைச் சொற்களுக்குப் பொருள் தருகின்றது. இறுதியி லுள்ள தொடையகராதியில் எதுகைச் சொற்கள் அனைத்தும் எதுகைமுறை நோக்கித் தரப்பட்டுள்ளன. அவற்றின் பொருளும் இணைக்கப்பட்டுள்ளது. அகடு, பகடு, முகடு போன்ற முறையில் உள்ளன. பா இயற்றும் பாவலர்களுக்கு இது பெரிதும் பயனளிக்கும்.

## நன்றி

சென்னை, 105 இலிங்கிச் செட்டித் தெருவிலுள்ள மறைமலை யடிகள் நூலகத்திற்குப் பண்டிதை எஸ். கிருஷ்ணவேணி அம்மையார் அவர்கள் செப்டம்பர் இறுதியின்கண் ரூ. 250 மதிப்புள்ள இருபத்தைந்து அரிய நூல்களை அன்பளிப்பாக மனமுவந்து அளித்தனர். அவர்தம் இவ் வறச் செயலுக்கு எம்முளங்கனிந்த நன்றி என்றென்றும் உரித்தாகுக.

இவ்வாறு பழம் பதிப்பு நூல்களையும் புதிய நூல்களையும் இன்னும் பலர் இந் நூலகத்திற்கு அன்பளிப்பாக அளிக்குமாறு தாழ்மையுடன் கேட்டுக்கொள்கிறேன்.

—நூலகர்.

# செய்திகளும் குறிப்புக்களும்

## (க) தமிழகப் புலவர்குழு

தி. வ. 1991, புரட்டாசித் திங்கள் 10 ஆம் நாள் (25-9-60) ஞாயிற்றுக் கிழமை காலை 9 மணிக்குத் தமிழகப் புலவர் குழுவின் 6 ஆவது கூட்டம் சேலம் நகராட்சி உயர்நிலைப் பள்ளியின் முன் சேலம் நகர்த்திருவள்ளுவர் கழகத்தார் அமைத்துள்ள பந்தலிற் கூடியது. முது பெரும் புலவர் பேராசிரியர் மயிலை, சிவ. முத்து அவர்கள் தலைமை தாங்கினார்கள். சேலம் நகராட்சியினர் வரவேற் பளித்தனர். சேலம் பெருமகன், திரு. எம். இரத்தினசாமி பிள்ளை அவர்கள் விருந்தளித் தார்கள். வரவேற்புக்குப் புலவர் குழுவில எழுவா எழுந்து நன்றியுரை

மாலை 6 மணிக்கு மேற்குறித்த இடத்தில் மீண்டும் தமிழகப் புலவர் குழுவின் கூட்டம் கூடியது. அந்தணர், திரு. நடேச உடையார் தலைமை தாங்கினர். திருவள்ளுவர் கழகத்தினர் வரவேற்புரை வாசித் தளித்தனர். புலவர் குழுவினர் அனைவருக்கும் ஒவ்வொரு வெள்ளிப் பதக்கம் திரு. எஸ். வி. கோவிந்தராசு செட்டியார் அவர்கள் வழங்கினார். வரவேற்புக்கு நன்றியுரை புலவர் குழுவில் எழுவர் எழுந்து கூறினார்கள். கூட்டம இரவு $9\frac{1}{2}$ மணிகரு இனிது கலைந்தது.

கூறும்போது டாக்டர் மு. வரதராசன் அவர்கள் சென்னைக்குத் "தமிழ் நாடு" என்று பெயரிடவேண்டும் என்பதை வலி யுறுத்தினார்கள். டாகடர், அ. சிதம்பரநாதன் அவர்கள் இப்போதாவது அல்லது தேர்தல் நடக்கும் நேரமாவது "தமிழ்நாடு" என்ற பெயரிடப் படலாம் என உறுதி கூறினார்கள்.

"தமிழ் நாட்டில் இந்தி புகுவதற்கு எந்த வகையிலும் ஆதரவுதரக் கூடாது என்று புலவாகுழு சென்னை அரசினரையும், இந்திய அரசின ரையும் கேட்டுக் கொள்கிறது"

'தமிழ்நாடு' போன்ற தூய தமிழ் நடையில் எழுதிவரும் நாளிதழ்களை யும் கிழமையிதழ்களையும் திங்களிதழ்களையும் வாங்கிப் படித்துத் தனித் தமிழ் நடையை வளர்க்கத் துணை புரிய வேண்டும் என இப்புலவர் குழு பொதுமக்களைக் கேட்டுக் கொள்கின்றது"

இவை போன்ற தமிழ்மொழிச்சீர்திருத்தத்திற்கும் வளர்ச்சிக்கும் உரிய 14 தீர்மானங்கள் அக்கூட்டத்தில் நிறைவேறின.

## (உ) திருவள்ளுவன் படத் திறப்புவிழா

கடந்த 18-9-60 அன்று, வாலாசாபாத் இந்துமத பாடசாலையில், சென்னை உயர்நீதி மன்ற நடுவர், உயர்திரு. கே. வீராசாமி அவர்கள் தலைமையில், சென்னை மாநிலக் கல்வித்துறை இயக்குநா உயர்திரு. நெ. து. சுந்தரவடிவேலு அவர்களின் செல்வமகன், காலஞ்சென்ற திரு வள்ளுவன் திருவுருவப்படம், சென்னைச் சட்ட மன்றத்தலைவர் உயர் திரு. டாக்டர் யூ. கிருஷ்ணாராவ் அவர்களால் திறந்து வைக்கப் பெற்றது.

பல்லாயிரக் கணக்கான பள்ளிக்குழந்தைகளுக்குப் பகல் உணவு தரும் திட்டத்தைத்தெரிவித்து அது செயல்பட முதற்காரணமாயிருந்த, தெய்வ நாட்டமும் சிறியபருவத்தே பெரிய அறிவும் பெருந் தன்மையும் இயல்பாய்ப் பெற்றிருந்த திருவள்ளுவனின், திருவுருவப் படம் திறந்து வைத்தமை நனிமிகப் பாராட்டற் குரியதாம். இங்ஙனமே பல்வேறூர்ப் பள்ளிகளிலும் திறந்து வைத்துப் பாராட்டினமையும் ஈண்டு நினைவு கூரற்பாலது.

## (ங) தமிழ்நாடு எனப் பெயரிடுக!

"சென்னைமா நிலத்திற்குத் தமிழ்நாடு எனப்பெயரிட வேண்டும்" என்று அரசினரைக் கேட்டுச சென்னை நகராண்மைக் கழகம் 27-9-60 அன்று ஒரு மனதாக முடிவெடுத்துள்ளது. நகராண்மைக் கழகத்தலைவர், திரு. எம். எஸ். அப்துல் காதர் தலைமையில் நகராண்மைக் கழகக்கூட்டம் நடைபெற்றபோது, நகர் நலக் கட்சியைச் சேர்ந்த திரு. பி. டி. பக்கி இராசகோபாலன் 'தமிழ்நாடு' பெயர் மாற்றம் பற்றிய முடிவை முன்மொழிந்தார் திரு. மா. சு. சம்பந்தம் (தி. மு. க.) அதை வழி மொழிந்தார்.

சென்னை மாநிலத்திற்குத் 'தமிழ்நாடு' எனப் பெயரிட வேண்டுமென முடிவெடுககாத நகராட்சி, ஊராட்சி மன்றங்களோ, இயக்கமோ, கழகமோ இல்லையென்னலாம். தமிழ்நாட்டு மக்கள் அனைவரும் இடைவிடாது வேண்டிவரும் கோரிக்கையும அதுவே. தமிழகப்புலவர் குழுவும் அவ்வக்காலங்களில் இம்முடிவை நன்கு வலியுறுத்தி வருதல் யாவரும் அறிந்ததே. மொழிவழி மாநிலம் அமைந்த பின்னர் மொழியின் அடிப்படையிலேயே நாட்டின் பெயரும் அமைதல்வேண்டும் என்றும், வரலாறு, இலக்கிய அடிப்படையிலும் சென்னை மாநிலத்திற்குத் 'தமிழ்நாடு' என்றே பெயர் வைத்தல் பொருந்துமென்றும் எல்லோரும் ஒரு மனதாக விரும்புகையில் தமிழ்ப் பற்றுள்ள அரசினர் வாளாவிருப்பது வருந்துதற் குரியதே. இனி வீரமாகப் பேசுவதாலும், முடிவுகள் எடுப்பதாலும் பயனில்லை. தமிழராயினோர் எல்லோரும் சென்னைக்குத் தமிழ்நாடு என்று பெயர் அமையும்வரை ஓய்வு கொள்ளாத ஓர் அறப் போராட்டம் துவங்கி வெற்றி பெறுதல் நன்றாம் என நடு நிலையும் நாட்டுப் பற்றும் உடையாரனைவரும் நவிலமுற்படுவரென்பது வரலாற்றுமுறையறிந் தாரனைவர்க்கும் நன்கு விளங்குவ தொன்றாகும்.

## (ச) கம்பளிப்புழுத் தொல்லை

மதுரை மாவட்டத்தைச சார்ந்த செல்லம்பட்டி, வாலாந்தூர், உசிலம்பட்டி, சேடபட்டி, திருப்பரங்குன்றம் ஆகிய ஊர்களிலுள்ள பத்தாயிரம் ஏக்கருக்கு மேற்பட்ட நிலங்களில் விளைந்திருந்த பயிர்களைக் கம்பளிப் புழுக்கள அழித்துப் பெருங்கேடு விளைவித்து விட்டன என்று சென்னை அமைச்சர் திரு. வி. இராமையா அவர்கள் 2-10-60 இல் தெரிவித்துள்ளார்கள். இதனால் ரூபா ஐந்து லட்சத்திற்கு மேல் பொருட்கேடு ஏற்பட்டிருக்கக்கூடும் என்று கருதப்படுகின்றது. அது மட்டுமன்று அப் பூசசிகள் எண்ணிறந்தனவாய்த் தண்டவாளத்தின்மீது கிடந்தமையான் வண்டியின் உருளைகள்பட்டு அவைகள் நைந்து பிசினாய் ஒட்டிக்கொண்டன. அக்காரணத்தால் புகைவண்டிகள் போதற்கிடருண்டாகித் தாழ்த்துச் சென்றதாகவுந் தெரிகின்றது.

# மதிப்புரை

‘சிறுவர் இலக்கியம்’ [ஆசிரியர் திரு. நாகமுத்தையா அவர்கள். வெளியிடுவோர் வள்ளுவர் பண்ணை 137, பிராட்வே, சென்னை-1. விலை ரூபா. ஒன்றரை.]

கற்பாரனைவர்க்கும் உரை நடையைக் காட்டிலும் செய்யுள் நடையில் தனியின்பம் ஏற்படுவதியற்கை என்பது யாவரும் நன்குணர்ந்த தொன்றாம். செய்யுட்கள் ஓசை யொழுங்கும், எதுகை மோனை முதலிய யாப்பமைதியும், அணிச்சிறப்பும் பொருளாழமும் மிக்குச் செறிந்து கற்பாரைத் தம்பால் ஈர்க்கின்றன. மேலும் கருத்தை விட்டகலாது உள்ளத்துறைந்து என்றும் அழியாது நின்று உன்னுந்தோறும் ஒப்பிலா ... ட்டுகின்றன.

அழுங்குழந்தைகளும் அன்னையின் தாலாட்டுப் பண்கேட்டு அழுகை யகன்று முழுதுறக்கங் கொள்கின்றன. விளையாடும்பொழுதும் பிற நேரங்களிலும் பாட்டையே விரும்புகின்றன; பாடுகின்றன; பாடியாடுகின்றன. இத்தகைய சிறுவர்கட்கு வேண்டத்தக்க கருத்துக்களை நல்ல முறையாகக் கோவைப்படுத்தி, பாடித்தந்துள்ள ஆசிரியரவர்கட்குத் தமிழுலகம் என்றுங் கடமைப்பட்டுள்ளது. பாட்டுக்கள் எளிமையும் இனிமையும் பொருந்தியன. அழகிய பதிப்பு; கண்ணைக் கவரும் வனப்பில் பன்னிற அட்டைப்படம். அதுவுங் குழந்தைப்படமே. நூலகத்தும் ஏற்ற ஏற்ற கருத்துக்களை விளக்குந்தன்மை வாய்ந்த பல வகைப்படங்கள் காணப்படுகின்றன. இதனை மெய்யன்பர்க ளிருபாலாரிலுமுள்ள அனைவர்களும் வாங்கிக் கற்றுங் கற்பித்தும் பயன் எய்துவார்களாக.

‘இளைஞர் ஒற்றுமை மன்றம்’ [27, அக்கிரகாரம் தெரு, சிந்தாதிரிப் பேட்டை, சென்னை-2]

**16-வது ஆண்டு மலர்:** இம்மலரின்கண் பல்வேறு அறிஞர், பெருமக்களின் பயனுடைய கட்டுரைகள் பல நன்முறையில் ஆங்கிலம், தமிழ் ஆகிய இரு மொழிகளாலும் அமையப் பெற்றுள்ளன. சென்ற ஆண்டு மன்றத்தாரால் நிகழ்த்தப்பட்ட கலை நிகழ்ச்சிகள் பலவும் செவ்விய முறையில் விளக்கப்பட்டுள்ளன. மன்றத்தின் தலைவர்கள் அலுவலர்கள் ஆகிய அறிஞர்கள் பலர்தம் வனப்பமை நிழல் ஓவியங்கள் பல நிரலே நின்று பொலிகின்றன. திருவருளாற்றலாய அம்மையாரின் திருவுருவ வண்ணப் படம் முகப்பிலே கண்ணருட் பொலிவுடன் திகழ்கின்றது. அதனையடுத்து மூத்த பிள்ளையாரின் திருவுருவப்படம் அதுவே போன்று நின்ற திருக்கோலத்துடன் பொலிவுறுகின்றது. இன்னும் பல தெய்வத்திருவுருவப் படங்களும் ஆங்காங்கே அழகிய முறையில் மிளிர்கின்றன. இருபெருந்திருவும் ஒரு பெரும் பண்பும் உருவும் நலனும் ஒருங்கமைந்த சிவத்திரு [illegible]

[illegible] ப்பனவாகும். செந்தமிழன்பர்களும் செந்நெறிச்செல்வர்களும் இம் மலரினை வாங்கிக் கற்றுப் பெரும் பயனை எய்துவார்களாக.

**'குழந்தைப் பாடல்கள்'** [ஆசிரியர் திரு. நாகமுத்தையா அவர்கள். வெளியிடுவோர், 'செல்வி பதிப்பதிகம்' காரைக்குடி, இராமநாதபுரம் மாவட்டம். விலை ரூபா ஒன்றரை.]

ஆசிரியரவர்கள் வருங்காலப் பெரியவராம் வாய்மையாளர்கள் இப்பொழுது சீர்சிறப்புடன் விளங்கும் குழந்தைச் செல்வங்களே என்னும் உண்மைகளை ஊடன்றியுணர்ந்த ஆன்றோராவர். அவர்தம் தன்மைகளும் நூலின் சிறப்பும் மேற்கூறிய 'சிறுவர் இலக்கியம்' என்பதற்குக் கூறியவற்றில் விளக்கியனவேயாகும். இப்புத்தகம் பெற்றுள்ள பெயரானே அதனகத்துள்ள பாட்டுங்கருத்தும் அப்பருவத்தினர்க்கு ஏற்புடைத்தாமென்பது புலனும். இது போன்றதே 'சிறுவர் இலக்கியம்' என்னும் சீரிய நூலுமாகும். ஆசிரியர் இவை போன்ற பயனுடைய பலநூல் காலத்துக் கேற்றவாறு யாத்தமைத்துத் தனித் தமிழன்னைக்கு இனித்த அணி செய்வாராக. ஆண்டவன் அருள் செய்வாராக. இதனையும் மேலது போன்று வாங்கிப் பயனெய்துவார்களாக.

**'ஸ்ரீ தாண்டவராய சுவாமிகள் சரித்திரம்'** [இதன் ஆசிரியர் நன்னிலம் ஸ்ரீ சதானந்த சுவாமிகளாவர். வெளியிட்டவர், நன்னிலம் ஸ்ரீ நாராயண தாண்டவராய சுவாமிகள் மடாலயத் தலைவர். விலை. 50 காசுகள்.]

ஸ்ரீ தாண்டவராய சுவாமியவர்கள் வேதாந்த நூலாகிய 'கைவல்லிய நவநீதம்' என்னும் அரியநூலின் ஆசிரியராவர். இவ்வடிகளார் ஏறத்தாழ 552 ஆண்டுகளுக்கு முன் தோன்றியவராவர். அவர்தம் வரலாறு ஐம்பது செய்யுட்களுக்கு மேலாக அமைந்துள்ளது. அவ்வரலாற்றினைச் செவ்விய முறையில் கருப்பக்கிளர் திரு சு. அ. இராமசாமிப்புலவர் அவர்கள் உரைநடையாக்கி யுதவியுள்ளனர். அதுவும் இதன்கண் இணைந்து எழிலுற மிளிர்கின்றது. நல்லபதிப்பு. நாடு மொழி நன்னெறிகளை நன்குணர்ந் தொழுகி நலமெய்திவாழ இத்தகைய தவப்பெரியார் மெய்வரலாறு துணைபுரியும். அனைவர்களும வாங்கிக் கற்றுப் பயனெய்துவார்களாக.

திருவேற்காடு **'ஸ்ரீதேவி கருமாரி அம்மன் திருவருட் பிரசாதம் அரவணைக்கும் பிரார்த்தனை முறை'** [வெளியிட்டோர், ஸ்ரீதேவி கருமாரி அம்மன் தேவததானம், திருவேற்காடு, விலை அணு நான்கு.]

தேவி கருமாரிஅம்மன் திருவருளால் இந்நாளிலும் மெய்யன்பர்கள் பலர்க்கும், ஏற்பட்டுள்ள எவ்வகை நோய்களையும் நீக்கி இன்னலம் கைமேல் கொடுத்தருளிவருகின்றனள். இவையும் அச்சம், பைத்தியம், பேய், பகை முதலியவற்றான் ஏற்படுந் துன்பங்களையும் அகற்றி நலமருளுகின்றனள். அதற்குச் செய்யும் வழிபாட்டு முறையும், சாம்பர், மஞ்சள், எலுமிச்சம் பழம் முதலியவற்றான் நோய் நீககற்கு அமைக்க வேண்டிய செய்முறைகளும், அம்மனை அன்புடன் உள்கும் உயரியமுறைகளும் பிறவும் இந்நூற்கண் நன்கு விளக்கப்பட்டுள்ளன. இத்தகைய தெய்வ நாட்ட மிகுவிக்கும் இந்நூலை மெய்யன்பர்கள் கற்று வழிபட்டு அம்மையின் திருவருட்குரியராகி வாழ்வார்களாக.

திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை, 2-140, பிராட்வே,
அப்பர் அச்சகத்தில், திரு. வ. சுப்பையா அவர்களால்
அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர்: வ. சுப்பையா.





| சிலம்பு | திருவள்ளுவர் ஆண்டு ௧௯௯௧, ஐப்பசி | பரல் |
| --- | --- | --- |
| ௩௫ | நவம்பர், 1960 | ௩ |


# எண்ணிலா உயிர்கட்கு எய்தும் பிறப்பும் எண்ணில

[சித்தாந்த பண்டிதர் திரு. ப. இராமநாதபிள்ளை அவர்கள்]

"பதிபசு பாசம் எனப்பகர் மூன்றிற்
பதியினைப் போற்பசு பாசம் அநாதி
பதியினைச் சென்றணு காப்பசு பாசம்
பதியணு கிற்பசு பாசம் நிலாவே".
—௧௦-௧௧௫.

செம்பொருட்டுணிவாம் சித்தாந்த சைவத்தின் அடிப்படை, மேலோதியுள்ள தமிழாகமமாகிய திருமந்திரத் திருமாமுறையிற் காணப்படும் திருப்பாட்டாகும். பதி, பசு, பாசம் என்னும் மூன்றும் முறையே இறை, உயிர், தளை என வழங்கப்படும். இறை யாண்டும் எள்ளில் எண்ணெய்போல் நீக்கமின்றி உள்ளும் புறம்பும் ஒத்து நிறைந்து தலைமையுற்றுத் திகழ்வது. உயிர் இறையினால் படைத்தளிக்கப்பட்ட உடம்பகத்துத் தங்கி உயிர்ப்புடையதா யுழல்வது. தளை உயிர்க்கு அறியவிளங்கி இறை நிறைவிற் சாரவொட்டாது தம்பாலே சாருமாறு தளைப்பது. தளைத்தல்-பிணித்தல்.

இம்மூன்றனுள் வேறுபட்ட கொள்கையினர் அனைவரும் பதியாகிய இறைவன் தொன்மையிலேயே உளன் என ஐயமின்றித் துணிந்து உரைக்கின்றனர்; ஒப்புக்கொள்ளுமாறு ஏனையோரையும் வற்புறுத்துகின்றனர். அது போலப் பசுவாகிய உயிர்களையும், பாசமாகிய தளைகளையும் தொன்மையிலேயே

உள்ளன என ஒப்புக்கொள்ள மறுக்கின்றனர். அவர்தம் மறுப்புக்குப் பொருத்தமான காரணம் அவர்தம்மாற் கூறவியல வில்லை. அந்நிலைக்குக் காரணம் அவர் கைக்கொண்டொழுகும் கொள்கையும் அவர்தமக்கு வாய்த்த நூல்களுமேயாம். அந் நூல்கள் அங்ஙனம் வாய்த்தமைக்குக் காரணம் அம்மொழியும் அம்மொழியினை வளர்த்த அறிஞர்தம் அறிவுமேயாம். செந்தமிழ் நாடும், மொழியும், அறிஞரும் சீர்சிறப்பு வாய்ந்தோராதலால் தமிழ்முதல்நூல்கள் உண்மையினைத் திரிபின்றி உரைப்பன. அதனால் இத்திருமந்திரத் திருப்பாட்டின்கண் பதியினைப்போல் பசு பாசம் அணுகா என ஓதியருளினர். பதியினைப் பாசம் அணுகு வதில்லை. என்னை காரணமெனின்? அவன் இயல்பாகப் பாசங் களினின்று நீங்கியவனாகலானென்க. அவ்வுண்மை அவனுக் கமைந்துள்ள திருப்பெயரின் பொருளானே விளங்கும். பதி-வன்; முதல்வன்.

பசுபதியாகிய முதல்வன் நெருப்பொப்பன். பசு உடலோடு கூடிய உயிரொக்கும். உடலோடு கூடிய உயிர் நெருப்பினைச் சென்றணுகாது. உயிர் நீங்கியவுடல் நெருப்பிற் படுவதற்குத் தானாகச் செல்லாது. அதனால் பதியினைச் சென்றணுகா பசு பாச மென்றனர். 'பதியணுகிற் பசுபாசம் நில்லா' வென்பது பசுத்தன்மையும் பாசத்தன்மையும் நிலையாவென்பதாம். பசுத் தன்மை என்பது உடலோடு கூடிய தன்மை. உடலோடு கூடிய உயிர் நெருப்பினைத் தொடாது. ஆனால் அருளோடு கூடியவுயிர் நெருப்பினைத் தொடும். காரணம் அருளுடன் கூடின் அதுவும் நெருப்புவண்ணம் ஆகின்றது. ஆனால் உயிர் நீங்கிய வுடல் அவ்வுயிர்போல் அருளுடன் கூடுவதில்லை. அஃது அறிவில்லாத பொருள். அறிவில்லாத பொருள் கூட்டுவிப்பாரையின்றித் தானாகக் கூடாது. கூட்டுவிப்பாருங் காரணமின்றிக் கூட்டு விப்பாரல்லர். அறிவில்லுடலை அறிவுள்ளுயிரோடு இறை கூட்டு விப்பது உயிரைப் பண்டே புல்லிய மலநோயினை அகற்றுவித்தற் பொருட்டேயாம்.

ஆகவே அவ்வுடலாகிய பாசம் ஆருயிரையும் தானாக அடுக்க வில்லை என்பது போதரும். போதரவே இறையை அடுப்பதற்கு வாயில் இல்லை. இறையின்பாலும் மலமில்லை. எனவே இறைவன் உயிரை உய்வித்தற்பொருட்டு எழுந்தருளுங்கால் அவ்வுயிரைப் பற்றிய உடலாகிய பாசம் தோற்றப் பருமை நீங்கித் தோன்றா நுண்மையாய்த் தனக்கு நிலைக்களனாகிய மாயையின்கண் ஒடுங் கும். நோயாளிக்கு இடம் மருத்துவ மனையும், உடையும், கிடக்கையும்; கருவி-மருந்தும் மருத்துணவும், மருத்துக்கலனும் ஆகும். இவையனைத்தும் மருத்துவன் வந்து மருந்து நல்கி

நோய் நீக்கியபின் அம்மருத்துவ மனையில் கிடப்பனவன்றி மருத்துவனை யணுகா. நோயகன்று நலமுற்றுவக்கிடம் நோயணுகா வீடேயாம். அதுபோல் மலமகன்று நலமுற்றுவக் கிடம் மாயா காரியமாகிய உடல் உலகங்களன்றி அருள் நிலைக் களமாகிய திருவடிப்பேறேயாம். இம்முறையால் நோக்குவார்க்குப் பசுநில்லா தென்பதற்குப் பொருள் உயிர் பாசத்தொடு பிணிப்புற்று நில்லாதென்பதாம். உயிரே கெட்டொழியும் என்பதன்று. அதுபோல் பாசம் நில்லாதென்பதற்கும் கெட்டழியும் என்பதன்று; தோற்றமாகிய காரியநிலை நீங்கித் தன் நிலைக்களமாகிய தோற்றமில் காரணமாகிய மாயையின்கண் ஒடுங்கும் என்பதாம். காணப்படுவது தோற்றம்; காணாது கலந்து மறைவது ஒடுக்கம்.

முப்பொருள்களின் தொன்மையினை நம் தாயுமானச் செல்வர் வருமாறு கூறுவது காண்க:

"ஒருவனவன் யானைதொடக் குருடர்கட் செய்கை
ஓட்டுதல்போல் நான்வேதம் உட்போ ரட்பை
மருவவிட்டுங் கர்ப்பூர மதனில் தீபம்
வயங்கவிட்டும் ஓங்கியும் உண்மை வருந்தி நிற்பேன்
அருளுடைய பரமென்றே அன்று தாமே
யானவனா னென்றும்பொனக்கே ஆணவாதி
பெருகுவினைக் கட்டென்றும் எனக்குறக் கட்டிப்
பேசியதன் றேஅருள்நூல் பேசிற்றன்றே".
—கக. ஆகாரபுவனம்-சிதம்பர ரகசியம். உ௰

"அரும்பொனே மணியேஎன் அன்பேஎன் அன்பான
அறிவேஎன் அறிவிலூறும்
ஆனந்த வெள்ளமே என்றென்று பாடினேன்
ஆடினேன் நாடிநாடி
விரும்பியே கூவினேன் உலறினேன் அலறினேன்
மெய்சிலிர்த் திருகைகூப்பி
விண்மாரி எனவெனிரு கண்மாரி பெய்யவே
வேசற்ற யர்ந்தேனியான்
இரும்புநேர் நெஞ்சகக் கள்வனா ஒனும்உனை
இடைவிட்டு நின்றதுண்டோ
என்று நீ யன்றுநான் உன்னடிமை யல்லவோ
யாதேனும் அறியாவெறுந்
துரும்பனேன் என்னினுங் கைவிடுதல் நீதியோ
தொண்டரொடு கூட்டுகண்டாய்
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
சோதியே சுகவாரியே."
—௯. சுகவாரி - எ.

"மாயா சகமிலையேல் மற்றெனக்கோர் பற்றுமிலை
நீயேநான் என்றுவந்து நிற்பேன் பராபரமே." —சங-க0எ

" காரிட்ட ஆணவக் கருவறையில் அறிவற்ற
கண்ணிலாக் குழவியைப்போற்
கட்டுண் டிருந்தவெமை வெளியில்விட் டல்லலாங்
காப்பிட் டதற்கிசைந்த
பேரிட்டு மெய்யென்று பேசுபாழ்ம் பொய்யுடல்
பெலக்கவினை யமுதமூட்டிப்
பெரியபுவ னத்தினிடை போக்குவர வுறுகின்ற
பெரியவிளை யாட்டமைத்திட்
டேரிட்ட தன்சுருதி மொழிதப்பில் நமனைவிட்
டிடருறவுருக்கி இடர்தீர்த்
திரவுபக லில்லாத பேரின்ப வீட்டினில்
இசைந்துதுயில் கொண்மினென்று
சீரிட்ட உலகன்னை வடிவான எந்தையே
சித்தாந்த முத்திமுதலே
சிரகிரி விளங்கவரு தச்சிணு மூர்த்தியே
சின்மயா னந்தகுருவே." —" ச.—ரு.

ஆருயிர்கள் எண்...... உண்மை வரும்
திருப்பாட்டுக்களா லுணர்க:

"பசுப்பல கோடி பிரமன் முதலாய்ப்
பசுக்களைக் கட்டிய பாசமூன் றுண்டு
பசுத்தன்மை நீக்கியப் பாசம் அறுத்தாற்
பசுக்கள் தலைவனைப் பற்றி விடவே." -க0-உநகூஎ.

" நூறு கோடி பிரமர்க ளொந்திறூர்
ஆறு கோடி நாராயண ரங்ஙனே
ஏறு கங்கை மணலெண்ணி லிந்திரர்
ஈறி லாதவ னீச னொருவனே" —ரு-க00.ந.

" எண்ணுடை மூவர் இராக்கதர்கள் எரிபிழைத்துக்
கண்ணுதல் எந்தை கடைத்தலைமுன் நின்றதற்பின்
எண்ணிலி இந்திரர் எத்தனையோ பிரமர்களும்
மண்மிசை மால்பலர் மாண்டனர்காண் தோணோக்கம்."
—அ. திருத்தோ—க.

பரிபாடற்கண் இக்குறிப்பு வருவதுங்காண்க :

" மாஅ யோயே மாஅ யோயே
மறுபிறப் பறுக்கு மாசில் சேவடி
மணிதிக ழுருபின் மாஅ யோயே

தீவளி விசும்பு நிலனீ ரைந்து
ஞாயிறுந் திங்களும் அறனும் ஐவரும்
திதியின் சிறாரும் விதியின் மக்களு
மாசி லெண்மரும் பதினொரு கபிலரும்
தாமா விருவரும் தருமனும் மடங்கலும்
மூவே ழுலகமு முலகினுண் மன்பது
மாயோய் நின்வயிற் பரந்தவை யுரைத்தேம்
மாயா வாய்மொழி யுரைதர வலந்து..." —ங.

அறன்—புலனுடைய மைந்தன். ஐவர்—செவ்வாய், புதன் வியாழன், வெள்ளி, சனி ஆகிய ஐந்து. மன்பது—உயிர்ப் பன்மை.

"... ... ... ...
வெளவற் காரிருள் மயங்குமணி மேனியன்
எவ்வயி னுலகத்துந் தோன்றி யவ்வயின்
மன்பது மறுக்கத் துன்பங் களைவோன்
அன்புது மேஎ யிருங்குன் றத்தான்." —கரு.

புறநானூற்றின்கண் வருவது:

"மன்பதை காக்குநின் புலமை நோக்காது." —உக0.

உயிர்கள் எண்ணில என்பதோடு மன்றும் பொன்று நிலையாகிய அழிவில்லன என்பதுமாம். அக் கருத்தில் மன்னுயிர் என வழங்குப.

அவ்வுண்மை வருமாறு காண்க:

"மாநிலங்கா வலனவான் மன்னுயிர் காக்குங் காலைத்
தானதனுக் கிடையூறு தன்னாற்றன் பரிசனத்தால்
ஊனமிகு பகைத்திறத்தாற் கள்வரா லுயிர்தம்மால்
ஆனபயம் ஐந்துந்தீர்த் தறங்காப்பா னல்லனோ."
—கக. மனுநீதி—ந அ.

"தம்மின்தம் மக்கள் அறிவுடைமை மாநிலத்து
மன்னுயிர்க் கெல்லாம் இனிது." —திருக்குறள், கூஅ.

"பகுத்துண்டு பல்லுயி ரோம்புதல் நூலோர்
தொகுத்தவற்று ளெல்லாந் தலை." —திருக்குறள், ஙஉஉ.

இதுபோல் திருக்குறளின்கண் பல பாட்டுள்ளன. அவற்றுள் சிலவற்றின் எண்கள் வருமாறு: உசச, உகூஅ, ஙகஅ, சருஎ, ககசூஅ.

பல்லுயிரெனவும், எல்லா உயிர் எனவும், பலர் எனவும் வருமிடம் பல:

உகூ0, ககக, ககஉ, ககச, உஎ0, உஎஅ, ௩கூக, சகு0, சகூஅ, சஎ௩, ௫கச, எஎக, ககஉ, அஎ௩, கககக, ககசகூ, ககசகூ, ககஞ0.

இவை போன்ற குறிப்புக்கள் சங்கத்தொகை நூல்களுள்ளிட்ட பழந்தமிழ் நூல்களனைத்தினும் பரக்கக் காணலாம். அவற்றை ஆண்டாண்டுக் காண்க.

இனித் தளை மூவகைப்படும். அவை முறையே பண்டே புல்லிய ஒட்டுமலமும், அதனையகற்றும்பொருட்டு ஆண்டவனால் இடையே ஒட்டுவிக்கப்படும் மாயை வினைகளும் என மூன்றும். ஒட்டுமலம் ஆணவ மலம் எனப்படும். ஒட்டுவிக்கப்படும் மலம் உடல், உலகு, உண்பொருள்கள் முதலிய காரியங்களும் அவற்றின் காரணங்களுமாகிய மாயை ஒன்று மற்றொன்று வினைபுரிதற்கண் ஊக்கத்தை விளைவிக்கும் வினைமுதல். இதனை மூலகன்மமென்பர்.

இம்மூன்றும் முற்றவும் உடையார் மும்மலத்தினரெனப் படுவர். இவரைச் சகலரெனக் கூறுப. இவர்க்கு இடம் தூவா மாயை. இம்மாயாவுலகமே மூவேழுலகம் எனக் கூறப்படும். இவ்வுண்மை வருமாறு :

"மூவே ழுலகமும் உலகினுள் மன்பதும்." —பரிபாடல்,௩ வரி.—கூ

இம் மூன்று மலமுடையாரையே காமம், வெகுளி, மயக்கமுடையாரென்ப. காமம், மாயைப் பிணிப்பால் மருளல். வெகுளி, தானென முனைத்து வினைசெய்தல். மயக்கம், மலமறைப்பால் திரியக்கோடல். அஃதாவது நில்லாத வுலகத்தை நிலைக்கும் எனவும் நிலைக்கும் மெய்ப்பொருளாகிய இறைவனை நாடாமையும் நாட்டுவாரை மறுத்தலுமாம்.

இவ்வுண்மை வரும் 5ககுறள்களான் உணர்க :

"காமம் வெகுளி மயக்கம் இவைமூன்றன்
நாமங் கெடக்கெடு நோய்." —திருக்குறள்—௩கூ0.

"பொருளல்ல வற்றைப் பொருளென் றுணரும்
மருளானும் மாணாப் பிறப்பு." —௩௫க.

இருமலமும் ஒரு மலமும் உடையார்க்குத் தூமாயையின்கண் உடல், உலகம் முதலியனவுளவாம். இருமலமுடையார் மாயைப் பிணிப்பகன்றவர். அஃதாவது தூய உலகுடல்களில் கூடியிருந்தும் அவற்றின்கண் பற்றகன்றவர். இவர் உடற்பெருமையோ, உலகப் பெருமையோ கொண்டாடுபவரல்லர். வினை செய்வதை விழைந்து செய்வர்.

ஒருமலமுடையார் வினைவிழைவும் விடுத்து முதன்மைப் பசையால் அதிகார வேட்கையுடையராயிருந்து முதன்மை யாற்றுவர்.

இவ்வுயிரினங்கள் இயற்கையிலேயே இத்தகைய பாகு பாட்டினை யுடையன. அவ்வுயிர்களைப் புல்லிய மலையாற்றல் பல திறத்தன. அதனால் இத்தகைய பாடுகள் நேரலாயின. இவற்றைப் பிறப்புயிர்கள் எனக் கூறுவர். மும்மலப்பிணிப்பினர் ஒருமலத்தாராதலும், இருமலப்பிணிப்பினர் ஒருமலத்தாராதலும் உள்ளது சிறத்தலாகிய கூர்ப்பின்வழி நேர்வன. இவற்றுறுப்பு வுயிர்களைச் சிறப்புயிர்களென்ப. ஓரறிவு முதல் ஐயறிவு ஈறாக வுள்ள சிற்றுயிர்கள் ஆறறிவுடைய மக்கட்பிறப்பினை யெய்துதலும் சிறப்பின் பாலதே. இவ்வுண்மை வரும் தொல்காப்பிய நூற் பாவானும், அதற்கு நச்சினார்க்கினியர் இயற்றிய வுரையானு முணர்க.

"அமரர்கண் முடியும் அறுவகை யானும்
புரைதீர் காமம் புல்லிய வகையினு
மொன்றன் பகுதி யொன்று மென்ப."

—தொல். பொ. புறத்திணை, உ௬.

**உரை:** "பிறப்புவகையா னன்றிச் சிறப்புவகையால் தேவர்கண்ணே வந்து முடிதலையுடையவாகிய அறுமுறை வாழ்த்தின்கண்ணும்." "அமரர்கண்ணே வந்து முடியுமெனவே அமரர் வேறென்பதூஉம் அவர்கண்ணே வந்து முடிவன வேறென்பதூஉம் பெற்றாம். அவை முனிவரும், பார்ப்பாரும், ஆனிரையும், முடியுடைய வேந்தரும், உலகுமாம்."

இவ்வுண்மை வருமாறு:

"வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வான்உறையும்
தெய்வத்துள் வைக்கப் படும்." —திருக்குறள், ௫0.

"முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்
கிறையென்று வைக்கப் படும்." — ,, ௩௮௮

"ஐயப் படாஅ தகத்த துணர்வானைத்
தெய்வத்தோ டொப்பக் கொளல்." — ,, எ0௨.

சிறப்புவகையான் வாழ்த்தும் வாழ்த்து வருந் திருமாமறை யானுணர்க:

"வாழ்க வந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனு மோங்குக
ஆழ்க தீயதெல் லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே."

—சம்பந்தர், (பொது) ௩௪—க.

இதன்கண் காணப்படும் 'வானவர்' வானுலகத்தவரல்லர் என்பது மேலோதியவாற்றா னுணர்க. அந்தணர் - ஓதுவிப்பார். வானவர் - ஒத்தியற்றுவார். இவர்கள் முறையே பள்ளியாசிரியர், நூலாசிரியர் எனப் பகரப்படுவர். ஒத்து - மறைநூல்.

மாயாகாரியப்பொருள் முத்திறப்படும் : க. உணர்த்துமெய்; உ. உணர்வுமெய்; ௩. உடல்மெய். இவற்றை முறைமுறையே சிவதத்துவம், வித்தியாதத்துவம், ஆன்மதத்துவம் என்ப.

மேலும் இவ்வுண்மை வரும் செந்தமிழ்ச் சிவஞானபோதத்திற்குச் செந்தமிழ்த் தெய்வச்சீரியர் மாதவச் சிவஞான முனிவரனார் இயற்றியருளிய பேருரையானுணர்க :

"இனி, விஞ்ஞானகலர் அநாதியே மலபந்த மாத்திர முடைய விஞ்ஞான கலரும், அனுபவத்தானாதல், விஞ்ஞானத்தானாதல், யோகத்தானாதல், சன்னியாசத்தானாதல், தீக்கையானாதல், இடையே மாயாபந்தம், கன்மபந்தம் முழுவதும் நீங்கி அசுத்தமாயையின் மேலுள்ள புவனங்களி னுகரக் கடவனவாகிய போகங்கட்கு ஏதுவாய் நின்ற மலபந்த மொன்றே யுடையராகிய விஞ்ஞானகலருமென இருவகையர்.

பிரளயாகலரும் அநாதியே மலகன்மங்கள் மாத்திர முடைய பிரளயாகலரும், இடையே பரிபக்குவ விசேடத்தான் மாயாபந்த மாத்திர நீங்கி, ஏனையிரண்டுமுடைய பிரளயா கலருமென இருவகையர்.

அற்றேல், விஞ்ஞானகலர், பிரளயாகலரென்பன விஞ்ஞானத்தாற் கலையற்றவர், பிரளயத்திற் கலையற்றவர் எனக் காரணக் குறியாகலின், அக்காரணமின்றி இயல்பானும் ஒருமலமுடையாரும், இருமலமுடையாரும் உளராயின் அவர் அப்பெயர் பெறுதல் சாலாதாம்பிற எனின்,— மலமொன்று மிரண்டு முடைமையாகிய ஒப்புமைபற்றி இவர்க்குரிய பெயரே அவர்க்கு மாதல் சாலுமாகலின், ஈண்டிழுக்கின்மையுணர்க." ௪. உ. "மாயா தனுவிளக்காம்" என்பதன் விரிவுரை.

இதுகாறும் விளக்கியவாற்றால் முப்பொருளுண்மையும், அப்பொருள்களுள், உயிர்களின் பாகுபாடுகளும் அப் பாகுபாடும் மலங்களின் கூட்டுறவே துவால் உண்டாவதும், மலங்களின் பாகுபாடுகளும் ஒரு சிறிது விளக்கப்பட்டன. இவற்றான் ஆருயிர்ப் பிறப்பு அளவில்லன என்பது தானேபோதரும்.





மேலைநாடுகளுக்குச் சென்று நூலகங்களைப் பார்வையிட்டுவந்த, திரு. வி. என். சுப்பராயன் அவர்களுக்கு 27-10-1960 இல் மறைமலையடிகள் நூல்நிலையத்தில் டாக்டர் எஸ். ஆர். அரங்கநாதன் அவர்கள் தலைமையில் வரவேற்பளிககப்பட்டது.

# திரு. வி. என். சுப்பராயன் அவர்களுக்கு

அக்டோபர்த் திங்கள் 27, வியாழக்கிழமையன்று மாலை, இலிங்கிச் செட்டித் தெருவிலுள்ள மறைமலையடிகள் நூல்நிலையத்தில் அண்மையில் பிரிட்டனுக்கும் ஐரோப்பாவிற்கும் அங்குள்ள நூலகங்களைப் பார்வையிடுவதற்காகச் சென்று திரும்பிய சென்னை நூலகக் குழுத்தலைவர், திரு. வி. என். சுப்பராயன் அவர்களுக்குத் தேநீர் விருந்தொன்று அளிக்கப்பட்டது. பத்மஸ்ரீ டாக்டர், எஸ். ஆர். ரங்கநாதன், எம். ஏ., டி. லிட்., விருந்திற்குத் தலைமை தாங்கினார்கள். நூலகத்தை நடத்திவரும் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் ஆட்சிப் பொறுப்பாளரான திரு. வ. சுப்பையா பிள்ளை அங்கு வந்திருந்த அனைவரையும் வரவேற்றார்.

“திரு. சுப்பராயன் அவர்கள் கடந்த இருமுறையாகச் சென்னை நூலகக் குழுவின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருப்பது பாராட்டற்குரியது. பல மாவட்டங்களில் ஆட்சியாளராய்ப் பணியாற்றியுள்ள இவர் சென்னை நகரின் நூலகப்பணியில் பெருந்தொண்டு புரிந்து வருகிறார்” என்று தம் வரவேற்புரையில் குறிப்பிட்டார்.

பிரிட்டனில் நூலகப்பணி சிறந்து விளங்குவதாகத் திரு. சுப்பராயன் தம் உரையில் குறிப்பிட்டார். மேலும் “அங்கு ஒவ்வொருவருக்கும் அரைப்பவுண்டு முதல் ஒரு பவுண்டுவரை நூலகப்பணிக்காகச் செலவழிக்கப்படுகின்றது. நம் நாட்டிலோ அதிக வருவாயுள்ள சென்னை நகரில்கூட ஒவ்வொருவருக்கும் நான்கணாதான் செலவழிக்கப்படுகின்றது. இந்நிலை உயர வேண்டும். அங்குள்ள நூலகங்களில் சிறுவர்க்கெனத் தனிப் பகுதி உள்ளது. அங்குக் கதை சொல்லல், படக்காட்சி நடத்துதல் ஆகியவை நடைபெறுகின்றன. நூலகத்திற்குத் தேவையான நூல்களை உதவி நூலகர்களும் தலைமை நூலகரும் சேர்ந்தே தேர்ந்தெடுக்கின்றனர். பொதுமக்களுடைய தேவைகளும் கேட்கப்பெற்று நிறைவேற்றப் படுகின்றன.

"நூலகத்திற்கு வந்து புத்தகங்களை வீட்டிற்கு எடுத்துச் சென்று படிப்போரின் எண்ணிக்கைதான் அதிகமாக உள்ளது. அங்கேயே தங்கிப் படிப்போரின் எண்ணிக்கை மிகமிகக் குறைவு. சிறு கிராமங்களின் வசதிக்காக நூல்கள் உந்துவண்டியில் எடுத்துச் செல்லப்பெற்று வழங்கப் பெறுகின்றன. கிராம மக்கள் இதனை பெரிதும் வரவேற்கின்றனர்," என்று குறிப்பிட்டார்.

டாக்டர் ரங்கநாதன் தம் தலைமையுரையில் "திரு. சுப்ப ராயன் அவர்கள் அயல்நாடுகளுக்குச் சென்று அங்கு நடைபெறும் நூலகப்பணியை நேரில் கண்டு வந்ததற்காகத் தாம் மகிழ்வதாகக் கூறினர். பல நாடுகளில் சென்று பலவற்றை நேரில் காண்பதன் மூலம் இந்நாட்டின் நூலகப்பணியை இன்னும் எந்த எந்த வகைகளில் பெருக்கலாம் என்ற எண்ணம் ஏற்படும். இதைப்போலவே நம் மாகாணத்தில் உள்ள மற்ற மாவட்ட நூலகக் குழுக்களின் தலைவர்களும் மேலைநாடு சென்று அங்கு நடைபெறும் நூலகப்பணியை நேரில் கண்டு தம் மாவட்டத்தின் நூலகப்பணியையும் பெருக்க முற்படவேண்டும்" என்று கூ[illegible]

நூலகரான திரு. இரா. முத்துக்குமாரசாமி நன்றி கூறக் கூட்டம் இனிது முடிந்தது.

## நன்றி

சென்னை, **மறைமலையடிகள் நூல் நிலைய**த்திற்கு நாடகப் பேராசிரியர், **திரு. பம்மல் சம்பந்த முதலியார்** அவர்கள் முப்பத்தெட்டு அரிய நாடக நூல்களை மனமுவந்து அன்பளிப்பாக அளித்துள்ளனர். அவர்கட்கு எம் மனமுவந்த நன்றி என்றும் உரித்தாகுக.

அரிய பல பழைய நூல்களைத் தொகுத்து வைத்திருப்போர் அன்பளிப்பாக நூல்களை அளிப்பின் நூலகத்தில் அவை என்றென்றும் பாதுகாக்கப்பட்டு ஆராய்ச்சி செய்ய வருவோர் அனைவர்க்கும் பயன் தருவதாய் அமையும்.

—**நூலகர்.**

## உருசிய நாட்டு அறிஞர் திரு. 'செம்பியன்' (உருதியா) அவர்களது கடிதம்

சோவியத் ஒன்றியம்.
லெனின்கிராது
[illegible] 9.1960

பேராசிரியர் டாக்டர் ரெ. தனிநாயகம் அவர்களுக்கு; வணக்கம் பல. தாங்கள் நலமுடன் ஊர் போய்ச் சேர்ந்தீர்கள் என்று நம்புகிறேன். தங்[களுட]ன் நாள் கழித்த [illegible] அந்த்தில நா[illegible]ள் என்றும் மறக்க முடியாது.

செப்டம்பர் முதல் தேதி கோடை விடுமுறைக்குப் பிறகு தங்கள் பல்கலைக் கழகத்தில் மறுபடியும் பாடங்கள் தொடங்கி விட்டன. திருமதி ஆதிலட்சுமி அவர்களும் தங்கள் ஐரோப்பிய பயணத்தை முடித்து விட்டு அண்மையில் தான் இங்குத் திரும்பினார்கள். இரண்டு நாட்களுக்கு முன்பு சென்னையிலிருந்து தாங்கள் அனுப்பச் சொன்ன Tamil Culture பத்திரிகையின் 44 படிகள் கிடைக்கப் பெற்றோம். இங்கு பெயர்களுள் பல எங்கள் நூல்நிலையங்களில் கிடைப்பதில்லை. ஆகவே தங்களது இப்பரிசிலைப் பெரும்பேறாகக் கருதி எங்கள் மனமார்ந்த நன்றியைச் செலுத்துகிறோம்.

நான் அங்கு தமிழ்நாட்டுக்கு வருவது பற்றி இன்னும் ஒரு தகவலும் கிடைக்கவில்லை. கிடைக்கும் போது தங்களுக்குக் கட்டாயம் அறிவிப்பேன்.

நாம் சந்தித்த போது தாங்கள் அன்புகூர்ந்து சில நூல்களை அனுப்ப ஏற்பாடு செய்வதாகக் கூறினீர்கள் அல்லவா? அதைப் பயன்படுத்திக் கொண்டு இத்துடன் எங்களுக்கு வேண்டிய புத்தகங்களைக் குறிக்கிறேன். அவைகளைக் கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பக் கோருகிறேன்: The Librerian, Library of the Oriental Faculty, Leningrad State University, Leningrad, USSR.

[illegible] தமிழை முதல் மொழியாகப் பயிலும் மாணவர்கள் மூன்றாவது ஆண்டில் நுழைந்தார்கள். இன்னும் அவர்கள் முடிப்பதற்கு 2½ ஆண்டுகள் பிடிக்கும். அதற்[illegible] தாங்கள் மீண்டும் ஒருமுறை எங்கள் [illegible] வந்து மாணவர்களுடன் [illegible] ஊக்கம் ஊட்டுவீர்கள் என்று ஆசைப்படுகிறேன்.

இப்படிக்கு,
தங்கள் தமிழன்பன்
S. G. Rudin (செம்பியன்).

'படி' என்ற அருமையான தமிழ்ச்சொல்லை எடுத்தாளுவதற்கு இசைவார்களா?

9. 'முகவரி'

இந்தத் தமிழ்ச் சொல்லின்மீது தமிழராகப் பிறந்த ருக்கு எம்மட்டு அருவருப்பு! 'அட்ரெஸ்' என்று சொன் லும் சொல்லலாம், 'முகவரி' என்றால் முழுகிப்போய்விடும், என்கிறார்களே காலம் ந்த 'விலாசம்' செல்லும்?

10. 'கோருகிறேன்'

இதைக் 'கோறுகிறேன்' என்று எழுதுவது தமிழரில் பலருக்கு இயல்பாக இருக்கிறதே. தமிழைத்தான் அவர்கள் கோறுகிறார்கள். 'கோறுகிறார்கள்' என்றால் 'கொல்லுகிறார்கள்' என்பது பொருள் என்று அறிந்தால் அவர்கள் அப்படி எழுது வார்களா? உருசிய அறிஞர் இந்த நுணுக்கமறிந்து திருத்தமாக எழுதியிருக்கிறாரே!

11. 'செம்பியன்'

தங்கள் பெயரைத் தமிழ்ப் பெயராக வைத்துக்கொள்ளும் எண்ணமே பலருக்கு இல்லாமல் இருக்கிறதே! தாங்களாகத் தங்கள் குழந்தைகளுக்கு இடும் பெயர்களையும் சிறிதும் சிந்தனை யின்றி, பிறமொழிப் பெயர்களாகவே வைத்துவிடுகிறார்களே! திரு. உருதியா (Rudia) அவர்கள் தமது பெயரைச் 'செம்பியன்' என்னும் தமிழ்த்திருப் பெயராக மாற்றி யமைத்துக்கொண்டிருப் பதைக் கண்டாவது நம்மவர்களுக்கு உணர்ச்சி முகிழ்க்காதா!

சந்திப்பிழைகள் இல்லாமல் எழுதத் தமிழராகப் பிறந்தவர் கள் எத்தனை பேருக்குத் தெரிகிறது? திரு. செம்பியன் அவர் களது கடிதத்தில் ஒரு பிழையுண்டா? 'போய்ச் சேர்ந்தீர்கள்' 'அந்தச் சில', 'விடுமுறைக்குப் பிறகு', 'இங்குத் திரும்பினர் கள்' 'அனுப்பச் சொன்ன', 'இப்பரிசினைப் பெரும்பேறாகக் ' 'தங்களுக்குக் கட்டாயம்', 'அவைகளைக் கீழ்த்தரும்' இவைபோன்ற டங்களில் நம்மில் பலர் சந்தியில் நின்று விடுவார்களே!

'அண்மை', 'பெரும்பேறு', 'ஆண்டு', 'ஊட்டுவீர்கள்' அறிஞர் ஆளும் இவைபோன்ற நல்ல சொற்களை நாம் எளிதில் எடுத்தாள முடிகிறதா? 'தமிழன்பன்' என்று ஒப்பமிடுகிறார்களே? நம் மிடையேயுள்ள பலருக்கு இந்த உணர்வு வருகிறதா? வர வேண்டாமா?

# [1]தமிழ்க் கவிதைக் களஞ்சியம்

[சி. சிவராமலிங்கம், பி. ஏ. (ஆனர்ஸ்)]

தமிழையும் தமிழ்ப் பெரியார்களையும் தாக்குவதென்றே ஒரு கூட்டம் நாட்டில் வேலைசெய்து வருவதாகத் தெரிகின்றது. தெய்வப்புலமைத் திருவள்ளுவர் செய்தருளிய உலகம் போற்றும் திருக்குறள் இலக்கியமன்று என்றார்கள். தமிழ்க்கடலாம் மறைமலையடிகளார் எழுதியது தமிழா? என்று கேட்டார்கள். தனித் தமிழியக்கம் வெறித்தன்மை வாய்ந்தது என வைதார்கள். கட்டுரையென்ற பெயரால் நான்கு சங்கப் பாடல்களுக்கு விளக்க வுரை யெழுதுபவர்களும், நாவல் என்று எதையெதையெல்லாமோ எழுதிக் குவிப்பவர்களும் தமிழ்ப் பேராசிரியர்களா என வினவி னார்கள். 'அகழ்வாரைத் தாங்கும் நிலம்போல' அவற்றை யெல்லாம் பொறுத்துக்கொண்டோம். நம்முடைய பொறுமை யைத் தவறாகப் புரிந்துகொண்ட அவர்கள் இதுபோது ஒரு மாபெருந் தாக்குதலை நடத்தியிருக்கின்றார்கள்.

**'தமிழ்க் கவிதைக் களஞ்சியம்'** என்னும் அரிய நூலுக்கு விமரிசனம் எழுதும் வாய்ப்பைப் பயன்படுத்திக்கொண்டு, தமிழ்த் திருநாட்டின் அக்கால—இக்காலக் கவிஞர்களுக்கெல்லாம் மாசு பூச முனைந்துவிட்டனர்.

"இந்தக் களஞ்சியம் தமிழுக்குச் சிறப்புச் செய்வதன்று. அன்று திகழ்ந்த பெருமையைக் காட்டவல்லதும் அன்று. நிகழ் காலத்தின் ஆராய்ச்சியோ, வருங்காலத்தில் நம்பிக்கையோ ஊட்டக்கூடிய தொகுப்பும் அன்று இது."

தங்கம்நிகர் சங்கப் பாடல்களிலிருந்து பாரதி பரம்பரை யினரின் கவிதைகள் ஈறாகவுள்ள சிறந்த திருமணியனைய பல நூறு கவிதைகள் தமிழ்க் கவிதைக் களஞ்சியத்தில் தொகுக்கப் பெற்றுள்ளன. தமிழ்மொழியைப் பற்றிக் கோடியில் ஒரு கூறுமறியாத ஒருவருக்கு அக்களஞ்சியத்தின் அருமை தெரியாது.

"நல்லதோர் சந்தர்ப்பத்தைப் பேராசிரியர், ரா. பி. சேதுப் பிள்ளை தவற விட்டுவிட்டார் என்றுதான் சொல்லவேண்டும். தற்காலத்துக் கவிதையில் அவர் தேடிப் பிடித்துச் சேர்த்திருப் பது பற்றியும் சொல்லத்தான் வேண்டும். இந்தப் பகுதியிலே பேராசிரியருக்குக் கவிதை பற்றியுள்ள அவநம்பிக்கையும், ரசனை இன்மையும் நன்கு தெரிகிறது."

---

1. சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறைத் தலைவர், டாக்டர் ரா. பி. சேதுப் பிள்ளை அவர்களால் தொகுக்கப்பட்டு, புதுதில்லி, சாகித்திய அக்காதெமியாரால் வெளியிடப்பெற்ற இந் நூலுக்குச் சென்ற 15-10-60 தேதிய 'சுதேசமித்திரன்' ஞாயிறு மலரில் எழுதப்பெற்ற விமரிசனம் பற்றிய கட்டுரை.

'நவில்தொறும் நூல்நயம் போலும்' என்பதை நன்குணர்ந்தவர் நம் பேராசிரியர். தம் வாழ்நாள் முழுவதும் தமிழை ஆய்ந்து சுவைத்தேன் மாந்தித் தக்கவாறு அதன் பெருமையைப் பிறருக்கு—உலகுக்குச் சொல்லி வருபவர். 'தீ பரவட்டும்' என்று பிறரெல்லாம் தமிழ்நூற் கருவூலங்களுக்குத் தீ வைக்கையில் தண்டமிழ்ச் சொன்மாரி பெய்து அணைத்த அருள்நிறை மேகம் அவர். 'ஊரும் பேரும்' உணர்த்தியவர். தமிழ்ப் பகையை வெல்ல 'வேலும் வில்லும்' தந்தவர். 'கடற்கரையிலே'—'ஆற்றங் கரையினிலே' தமிழர்களையெல்லாம் கொண்டு நிறுத்தித் 'தமிழர் வீரம்' சொல்லித் 'தமிழின்பம்' ஊட்டியவர். தமிழ் தழைக்கத் தம் அறிவுச் செல்வமேயன்றிப் பொருட்செல்வத்தையும் வாரி வழங்கும் அருட்செல்வர். பிற்காலத்தில் தமிழ்த்தொண்டாற்றப்போகும் தமிழ் மாணவர்களைத் தேர்ந்தெடுக்கும் பொறுப்பான பணியினையுடைய சென்னைப் பல்கலைக் கழகத்தின் தமிழ்த் துறைத் தலைவராக விளங்குபவர். அவர் தொகுத்த நூலுக்கு இழிவு கற்பிக்க முயலுநரின் புல்லறிவு இருந்தவாறென்னே! என்னே !!

தமிழ்க் கவிதைக் களஞ்சிய முன்னுரையில் பேராசிரியர் தமிழ் இலக்கிய வரலாற்றின் சாற்றைப் பிழிந்து தந்துள்ளார். அதன் அருமையை ஆராய்ச்சி அறிஞரே அறிவர். தமிழிலக்கியத்தின் பண்டைப் பெருமையையும், தற்கால மறுமலர்ச்சிச் சிறப்பையும் ஒருங்கே அறிந்தின்புறும் வாய்ப்பினைத் தமிழ்க் கவிதைக் களஞ்சியத்தைத் தொகுத்ததன் மூலம் நமக்கு வழங்கியுள்ளார் பேராசிரியர். சிறப்பு வாய்ந்த ஒருவரால் தொகுக்கப் பெற்ற பெருமை நிறைந்த ஒரு நூலுக்கு விமரிசனம் செய்பவர் எத்தகையராக இருக்கவேண்டும் என்பதைச் சற்றுச் சிந்தித்திருக்க வேண்டும் செய்தியிதழாசிரியர்.

"இதனை இதனால் இவன்முடிக்கும் என்றாய்ந்து
அதனை அவன்கண் விடல்"

என்பதை நினைந்து செயலாற்றியிருந்தால் இந்நிலை தோன்றியிருக்காது. 'கற்றாரைக் கற்றாரே காமுறுவர்'; பேராசிரியர் பணியினைப் பற்றிப் பேசப் பேரறிவுடையோருக்கே தகுதியுண்டு.

தமிழை எழுதிப் பிழைப்பவரும், தமிழில் செய்தியிதழ் நடத்துவோரும் இவ்வாறு தமிழையும், தமிழரையும், தமிழ்ப்பேராசிரியர்களையும், தமிழ் நூல்களையும் இழித்தும் பழித்தும் பேசி வருதல் இழிதகைமை மட்டுமன்று; நன்றி கொல்வதுமாகும்:

"எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
[illegible] மகற்கு"

# சங்ககாலத் திருமணத்தில் தாலி

[திரு. வை. தட்சிணாமூர்த்தி, எம். ஏ.]

(செல்வி சிலம்பு, ௩.௫, பரல் [illegible], [illegible] ஆம் பக்கத் தொடர்ச்சி)

"இங்ஙனம் ஐயர் கரணம் விதிப்பதற்கு முன்னர் நடந்தனவாகக் கூறப்படும் திருமணச் சடங்குகளில் (அகம் ௮௬-இல்) தாலி பற்றிய பேச்சு வரவில்லை. ஐயர் கரணம் விதித்த பின்னர் நடந்தனவாகக் கூறப்படும் திருமணச்சடங்குகளிலும் (அகம் ௧௩௬-இல்) தாலி கட்டும் சடங்கு (கரணம்) குறிக்கப்படாமை கூர்ந்து கவனித்தற்குரியது" என டாக்டர், இராசமாணிக்கனார் அவர்கள் கூறுகிறார்கள்.

அகநானூற்றுப் பாடல்கள் யாவும் தொல்காப்பியத்திற்குப் பிற்காலத்து எழுந்தவையே. தொல்காப்பியத்தில் கூறியவாறு பொய்யும் வழுவும் தோன்றியதால், அதைக் கண்டு ஐயர் கரணம் யாத்ததும் தொல்காப்பியர் காலத்துக்கு முன் நடந்தவைகளாகும். தமக்கு முற்காலத்தில் நடந்தவற்றையே தொல்காப்பியர் கூறுகின்றார். தொல்காப்பியத்துக்கு உரை எழுதிய நச்சினார்க்கினியர் கி. பி. பன்னிரண்டாம் நூற்றாண்டுக்குப் பிந்தியவர். தொல்காப்பியம் கி. மு. ஏழாம் நூற்றாண்டுக்கும் நான்காம் நூற்றாண்டுக்கும் இடைப்பட்டது. அகநானூற்றுப் பாடல்களை எழுதிய புலவர்கள் இருவருள் எவர் முந்தியவர் எனக் கூறத் தக்க சான்றெதுவும் நமக்கு இன்றுவரைக் கிடைத்திலது. இருவரும் ஒரே காலப் புலவர் எனக் கொள்ள அவர்தம் பாடல்களின் கருத்துக்கள் இடம் தருகின்றன. ௮௬ ஆம் செய்யுளில் சடங்குகள் குறைவாகவும், ௧௩௬ ஆம் பாடலில் மிகுதியாகவும் கூறப்பட்டிருத்தலைக் கொண்டு முற்பட்டது, பிற்பட்டது என வரையறுக்க இயலாது. அக் கவிஞர்கள் தலைவனின் உணர்ச்சியைக் காட்டக் கவிதை இயற்றினரே யன்றி, மணச்சடங்குகளை வகுத்தும் தொகுத்தும் காட்டக் கவிதை இயற்றவில்லை. எனவே, கால மயக்கத்தை எண்ணாது கருத்து மயக்கங்கொண்டு, அகப்பாடல்களில் தாலி கட்டும் பழக்கம் கூறப்படாததால் அக்காலத்தில் தாலி கட்டும் பழக்கம் இல்லையென ஒல்லா வழக்குரைத்தல் ஏற்புடைத்தாகவில்லை. அகநானூற்றுப் பாடல்கள் பாடப்பட்ட காலத்தில் திருமணத்தில் தாலிகட்டும் பழக்கம் இருந்திருக்கிறது. கவிஞர் அதைப் பாடவில்லை எனக் கொள்ளுதலே தகும்.

புறநானூற்று கஉஎ ஆம் பாடலில் ஆய்அண்டிர னை கோயில் சிறப்பை ஏணிச்சேரி முடமோசியார் பாடுகின்றார்.

ஆயின் கட்டுத்தறியில் யானைகள் இல்லை; யானைகட்குப பதிலாகக் கான மயில்கள் தத்தம் இனத்தோடு அங்கே தங்கி மகிழ்கின்றன. இதற்குக் காரணம் களாம்பழம் போன்று கரிய தண்டையுடைய சிறிய யாழிசைத்த பாணர் பாடி அக் களிறு களைப் பரிசிலாகப் பெற்றுச் சென்றுவிட்டனர். அவனது கோயிலில் (இல்லம்) பெண்கள் பிறருக்குக் கொடுக்கமுடியாத மாங்கலியத்தை மட்டும் உடையவர்களாக இருக்கிறார்கள். எல்லா விலைமதிப்புள்ள அணிகளையும் பிறவற்றையும் அவன் பரிசிலர்க்கு ஈந்துவிட்டான். மாங்கலியம் மட்டும் மங்கல மகளிர் கழற்ற இயலாததாகையால் தங்கிற்று. இவ்வாறு பொலிவழிந்து அவன் அரண்மனை இருந்தாலும் இனிய உணவினைப் பிறர்க்குத் தராது தன் வயிற்றையும் நிரப்பும் புகழில்லாச் செல்வர் இல் லினும் புகழ் மேம்பாடு உடையதாயிற்று.

“ ..... ... ......... அரண்பல நூறி
நன்கலம் தரூஉம் வயவர் பெருமகன்
சுடர்மணிப் பெரும்பூண் ஆய் ”

எனச் சிறப்பிக்கப்பட்ட ஆயின் உரிமை மகளிர் தாலி தவிரப் பிற அணிகளைப் பரிசிலர்க்கு ஈயக் கொடுத்துவிட்டனர்.

‘ களங்கனி யன்ன கருங்கோட்டுச் சீறியாழ்ப்
பாடின் பனுவற் பாண ருய்த்தெனக்
களிறில வாகிய புல்லரை நெடுவெளிற்
கான மஞ்ஞை கணனொடு சேப்ப
ஈகை யரிய இழையணி மகளிரொடு
சாயின் றென்ப வாஅய் கோயில்
சுவைக்கினி தாகிய குய்யுடை அடிசில்
பிறர்க்கீ வின்றித் தம்வயி றருத்தி
உரைசா லோங்குபுக ழொரீஇய
முரைசுகெழு செல்வர் நகர்போ லாதே ”

இப்பாட்டில் வரும் ஈகையரிய இழையணி மகளிர் என்ற அடிக்கு அரும்பதவுரைகாரர் “பிறிதோரணி கலமுமின்றிக் கொடுத்தற்கரிய மங்கலிய சூத்திரத்தை அணிந்த மகளிருடனே” எனப் பொருள் கூறுகின்றார். சித்தாந்த கலாநிதி, ஒளவை, சு. துரைசாமிப் பிள்ளை அவர்களும் “பிறிதோர் அணிகலமு மின்றிக் கொடுத்தற்கரிய மங்கலிய சூத்திரத்தை யணிந்த மகளி ருடனே” என அதே பொருளைத்தான் கூறுகிறார்கள். மகா வித்துவான், இரா. இராகவையங்கார் அவர்களும் இதேபொருளைக்

கொள்கின்றார்கள். அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் நான் தமிழ்ச் சிறப்பு வகுப்பு மாணவனாக இருந்தபொழுது அவண் வந்த தமிழ்ப் பேராசிரியர்கள், நாவலர் பாரதியார், இலக்குவனார், டாக்டர் சேதுப்பிள்ளை, தெ. பொ. மீ., அ. ச. ஞானசம்பந்தம், டாக்டர் மு. வ. போன்றாரும் மற்றும் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்து ஆராய்ச்சி, கலை, கீழ்த்திசைப் பகுதி, மொழியியல் போன்ற பல்துறையிலும் செயலாற்றும் பேராசிரியர் பலரும் ஈகையரிய இழையணி என்ற தொடர் தாலியையே குறிக்கும் என மொழிந்தனர். ஈகையரிய இழையணி என்பதற்கு டாக்டர் இராசமாணிக்கனார் அவர்கள் விலையுயர்ந்த ஆபரணம் எனப் பொருள் காண்கின்றார்கள். 'வலிந்து பொருள் கோடல்' என்னும் புதுத் தமிழ் உத்திகொண்டு எச்சொற்கும் எப்பொருளும் கொள்ளலாம். கொடைத்தன்மை மிக்க ஆய் பொன்னோ மணியோ பதித்த விலையுயர்ந்த ஆபரணமாயிருப்பின் அதையும் பரிசிலர்க்கு ஈயும் தன்மையன் என்பதை உணர்வதில்லை. தம் மதமேற் கொண்டு தனது முற்கோளை நாட்டினால் விளக்கம் கூற யாரால் இயலும்? அன்றியும் அவ் வீகையரிய இழையணி தொடியாக இருக்கும் எனவும் மொழிகிறார்கள். பெரும்பான்மையும் இலக்கிய வழக்கில் வளை, தொடி போன்றவற்றைக் குறிக்கும் போது சிறு சொற்களாக உள்ள அத் தொடி, வளை போன்ற சொற்களைக் கூறுவதுதான் முறை. இவண் இழையணி என்று இழைத்துச் செய்யப்பட்ட என்ற பொருளில் வாராது. இழைகளால் ஆக்கப்பட்ட அணி என்ற பொருளில் வருகின்றது. ஈகையரிய அணி, அதுவும் இழையாலான அணி இது எவ்வகையானும் விலையால் உயர்ந்த அணியாதல் இல்லை. எனவே இது மணத்தாலியைக் குறிப்பதே எனல் தகும்.

பத்துப் பாட்டுள் ஒன்றாய நெடுநல்வாடை நக்கீரர் பெருமானால் ஆக்கப் பெற்றது. அதில் பாண்டிய மன்னன் போர்க் களத்தில் இருக்கிறான். தேவி பிரிவுத் துயரால் வாடுகிறாள். அணிகள் முதலியனவற்றைத் துறந்து வாடுகிறாள். அக்காட்சியைக் கீரர் பெருமான் கூறும்போது,

> "ஆரந் தாங்கிய அலர்முலை யாகத்துப்
> பின்னமை நெடுவீழ் தாழத் துணைதுறந்து
> நன்னுத லுலறிய சின்மெல் லோதி"

என்கின்றார். இதற்கு உரை எழுதும் நச்சினார்க்கினியர் "முன்பு முத்தாற் செய்த கச்சுச் சுமந்த பருத்த முலையினையுடைய மார்பிடத்தே இப்பொழுது குத்துதலமைந்த நெடிய தாலி நாணொன்றுமே தொங்க" என எழுதுகிறார். எல்லாவகை யணியையும் துறந்த அவள் மார்பில் கழற்றப்படாது தாலி நாண் மட்டும்

தாழ்ந்து வீழ்ந்து புரள்கிறது. 'பின்னமை நெடுவீழ்' என்பதைப் பின்னுதலமைந்த நெடியவீழ், மயிரென்பாருமுளர்' என்றும் நச்சினார்க்கினியர் எழுதியுள்ளார். இவை இரண்டு பொருள்களில் எதுசிறந்தது என்று பார்க்கவேண்டும். மன்னன் தேவி அணிகளைத் துறந்தாள், மணப் பொருட்களை மறந்தாள், அவளது தலைமயிர்கள் நுதலிடத்தே உலறிக் கிடக்கின்றன. உலறிக் கிடக்கும் மயிரை, ஒப்பனை செய்யாக் கோலத்தவள் பின்னி விட்டுக் கொண்டிருத்தல் இயலாது. சாந்தமும் மணப்பொருளும் மறப்பின் மயிரினை எவ்வாறு கோதுவாள்? கோதி ஒதுக்காது பின்னுதலமைந்த மயிர் அவளது மார்பில் வந்துகிடக்க இயலாது. துன்பக் காலத்தில் (பிரிவு) மயிரினைக் கோதா மன்னன் மனைவியின் ஆகத்தில் தாலி நாணே புரண்டது எனப்பொருள் கொள்ளலே தகும். இலக்கியத்தின் எல்லைகண்ட நச்சினார்க்கினியர் மட்டுமன்றி இராகவையங்கார், ந. சி. கந்தையாப் பிள்ளை போன்றவர்களும் தாலி என்ற பொருளையே கொள்கின்றனர்.

சிலப்பதிகாரம் இதுகாறும் ஏற்பட்ட ஐயங்களைத் தெளிவுறுத்திவிடுகின்றது. கோவலன் கண்ணகி இருவரின் தந்தையரும் அவர்கட்கு ஒரு நன்னாளில் மணம் செய்விக்க விரும்பினர். அப்பெருநாளில் முதலில் அணிபல அணிந்த மகளிர் யானையின் மீதேறிச் சென்று ஊர் முழுமைக்கும் மணச் செய்தியினை அறிவித்தனர். அடுத்து முரசம், மத்தளம், சங்கு முதலியன முழங்க, வெண்குடைகள் அரசர் ஊர்வலம் வருவதொப்ப அணிவகுத்துவர மாங்கல்ய சூத்திரம் வலம் வருகின்றது. இன்றும் திருமணத்துக்கென நாள் வகுத்து, அந்நாளில் உறவினர் முதலியோரை அழைக்க மகளிர் சென்று வீடுதோறும் அனைவருக்கும் செய்தியறிவித்து அழைப்பீந்து வந்த பின்னர் மணத்திற்கு முதல் நாள் மாங்கல்ய சூத்திரமாகிய தாலியை வாத்தியம் பல முழங்க ஊர்வலமாகக் கொண்டு செல்லல் மரபு. மணமகள் வீடும் மணமகன் வீடும் ஒரே ஊரில் இருந்தால் மணமகன் வீட்டில் இல்லுறை தெய்வத்திற்கு மாங்கலியத்தை வைத்துப் படைத்து மணம் நடக்கும் இல்லிற்கு இவ்வூர்வலம் செல்லுதல் இயல்பு. இன்றும் இவ்வழக்குச் செட்டி நாட்டில் கண்கூடாகக் காணக்கிடைப்பது. அன்றியும் சில இனத்தவர் பொற்கொல்லர் வீட்டிலிருந்து மணம் நடக்கும் இடத்திற்கு முதல்நாள் இரவில் மணத்தாலியை ஊர்வலமாகக் கொண்டு வருவர். செட்டி நாட்டினருள் மணமகனின் தந்தை கையில் தேங்காய் போன்றன ஏந்திவர, மாங்கல்ய சூத்திரத்தை மணமகனின் தாய் ஏந்திவர உறவினர் அனைவரும் புடைசூழ மணமகன் குதிரை மீதேறி சற்றுமுன் ஊர்வலமாகச் செல்வதை

இன்றும் காணலாம். பொருளாதார ஏற்றத் தாழ்வுகள் காரண மாகப் பல நாட்களில் நடைபெறும் திருமணச் சடங்குகளை ஒரே வேளையில் செய்து முடிக்கும் விருப்பத்தால் மாங்கலிய அணி வலம் வருவதை ஆரவாரமின்றிச் செய்கின்றனர். இன்று வழக்கிலிருக்கும் மாங்கலிய ஊர்வலமே சிலப்பதிகாரத்திலும் கூறப் படுகின்றது.

"இருபெருங் குரவரும் ஒருபெரு நாளான்
மணவணி காண மகிழ்ந்தனர் மகிழ்சிறந்
யானை யெருத்தத்(து) அணியிழையார் மேலிரீஇ
மாநகர்க் கீந்தார் மணம்
அவ்வழி,
முரசியம்பின முருடதிர்ந்தன முறையெழுந்தன
பணிலம் வெண்குடை
அரசெழுந்ததோர் படியெழுந்தன அகலுள்
மங்கல வணியெழுந்தது"

என்பதில் வரும் அகலுள் மங்கலவணி எழுந்தது என்பதற்கு 'ஊரிலே மாங்கலிய சூத்திரம் வலம் செய்தது' என அரும்பத வுரைகாரரும், 'மங்கலவணி ஊரெங்கும் எழுந்தது என்க' என அடியார்க்கு நல்லாரும் கூறுவர். சிலப்பதிகாரத்தில் தாலி கட்டும் பழக்கம் கூறப்படவில்லை எனக் கூறப்புகுவோர் இம் மங்கலவணி என்ற சொல்லுக்கு மங்கல மகளிர் கூட்டம் எனப் பொருள் கூறப் புகுகின்றனர். மற்றும் ஊர் பொலிவுற்றதை மங்கலவணி ஊரில் எழுந்தது எனக் கூறினர் எனவும் கூறு கின்றனர். யானையின்மேல் மகளிர் ஏறிச் செய்தி அறிவித்ததைக் கூறி அதன் பிறகு தாலி ஊர்வலம் வந்தமையைக் கூறவே "மாநகர்க்கீந்தார் மணம்" என்ற அடிக்குப் பின்னர் "அவ்வழி" என்ற தனிச் சொல்லைப்போட்டு அரசெழுந்தன வாத்தியம் பல முழங்க, குடைகளோடு மாங்கலிய அணி அகலுள் எழுந்தது என்றார். ஊரினுள் அல்லது ஊரிலே மங்கலவணி எழுந்தது எனக் கூறுவதாலேயே ஊர்வலம் என்பது தெரிகின்றது. மங்கல மகளிர் அணி புறப்பட்டதை முதலில் கூறி, அக்கூற்றை முடித்துத் தெளிவாகத் தாலி வலம் வந்ததைக் கூறுவதால் இச் சொல்லுக்கு மங்கல மகளிர் அணி என்றோ, மங்கல அழகு என்றோ பொருள் கொள்ள வழியில்லை. மங்கல அழகாயின் அது எழுவதில்லை. அழகு எவ்வாறு ஊர்வலமாக வரும்?

திருமணத்தில் பல நிகழ்ச்சிகளைக் கூறிய கவிஞர் தாலி கட்டியதைக் கூறவில்லை. முன்பே கண்டோம். கம்பராமா யணத்தில் தசரதன் "உன் கழுத்தின் நாண் உன் மகனின் காப்பின் நாண் ஆகும்" என்றும்,

"மங்கலக் கழுத்துக் கெல்லாம்
தானணியாய போது தனக்கணியாது மாதோ ..."

என்றும்,

"மற்றை நல் லணிகள் காணுன்
மங்கலங் காத்த மன்னே"

என்றும் பிறவுமாய இடங்களில் மணத்தாலி பற்றிக் குறிப்பிட்ட கம்பர் திருமணக் காலத்தில் தாலிகட்டியதைக் கூருதுவிட்டது போன்றே இளங்கோ அடிகளும் விடுத்துச் சென்றுள்ளார். திருமண நிகழ்ச்சிகளைக் கூறும்போது கூருது விடுத்ததாலேயே பிற சொற்களுக்கு அப்பொருள் கொள்ளாது விடுத்தலோ, வேறு பொருள் காணலோ அல்லது அக்காலத்து அவ்வழக்கே இல்லை என இழிவழக்குப் பேசலோ இயலாத ஒன்று.

மணம் முடிந்த பின்னர் கோவலனும் கண்ணகியும் தனி மனைப்படுத்தப் படுகின்றனர். நெடுநிலை மாடமொன்றின் இடை நிலத்தில் இருக்கும்பொழுது காதல் வெறியில் கோவலன் கண்ணகியைப் போற்றுகிருன். தீராக் காதலால் கண்ணகியின் திருமுகம் நோக்கி,

"குழவித் திங்கள் இமையவ ரேத்த
அழகொடு முடித்த அருமைத் தாயினும்
உரிதின் நின்னோ டுடன்பிறப் புண்மையின்
பெரியோன் தருக திருநுதல் ஆகென
அடையார் முனையகத்(து) அமர்மேம் படுநர்க்குப்
படைவழங் குவதோர் பண்புண் டாகலின்
உருவி லாள(ன்) ஒருபெருங் கருப்புவில்
இருகரும் புருவ மாக வீக்க
மூவா மருந்தின் முன்னர்த் தோன்றலின்
தேவர் கோமான் தெய்வக் காவற்
படைநினக் களிக்கவத னிடைநினக் கிடையென
அறுமுக வொருவனோர் பெறுமுறை இன்றியும்
இறுமுறை காணு மியல்பினி னன்றே
அஞ்சுடர் நெடுவேல் ஒன்றுநின் முகத்துச்
செங்கடை மழைக்கண் இரண்டா வீத்தது
மாயிரும் பீலி மணிநிற மஞ்ஞைநின்
சாயற் கிடைந்து தண்கா னடையவும்
அன்ன நன்னுதல் மென்னடைக் கழிந்து
நன்னீர்ப் பண்ணை நளிமலர்ச் செறியவும்
அளிய தாமே சிறுபசுங் கிளியே
குழலும் யாழும் அமிழ்தும் குழைத்தநின்

மழலைக் கிளவிக்கு வருந்தின வாகியும்
மடநடை மாதுநின் மலர்க்கையி னீங்கா
துடனுறைவு மரீஇ யொருவா வாயின
நறுமலர்க் கோதைநின் னலம்பா ராட்டுநர்
மறுவின் மங்கல வணியே யன்றியும்
பிறிதணி யணியப் பெற்றதை யெவன்கொல்
பல்லிருங் கூந்தற் சின்மல ரன்றியும்
எல்லவிழ் மாலையொ டென்னுற் றனர்கொல்
நான நல்லகி னறும்புகை யன்றியும்
மான்மதச் சாந்தொடு வந்ததை யெவன்கொல்
திருமுலைத் தடத்திடைத் தொய்யி லன்றியும்
ஒருகாழ் முத்தமொ டுற்றதை யெவன்கொல்
திங்கண்முத் தரும்பவுஞ் சிறுகிடை வருந்தவும்
இங்கிவை அணிந்தன ரென்னுற் றனர்கொல்''

சிலப்பு. மனையறம்படுத்த காதை.

என்றெல்லாம் பாராட்டுகின்றான். முதலில் ௩௮ ஆவது அடி முதல் ௬௧ ஆவது அடிவரை கண்ணகியின் புனையா அழகுகளாய நுதல், புருவம், இடை, கண், சாயல், நடை, மழலைக்கிளவி போன்ற நலங்களைப் பாராட்டுகிறான். ௬௫ ஆவது அடி தொடங்கி ௭௦ ஆவது அடிவரை மலர், மாலை, புகை, சாந்து, தொய்யில், முத்துமாலை முதலியவற்றால் புனையப்பெற்ற நலங்களைப்பாராட்டுகின்றான். முதல்வரிகள் புனையா அழகுகளை வருணித்தனர். பின்னர்க் காட்டும் வரிகள் புனைந்த அழகுகளை வருணித்து முடித்து ௬௨ ஆவது அடியில் 'நின்நலம்' என்று குறிப்பிடுவதால் அவளிடம் இயற்கையாக அமைந்த புனையா அழகுகள் மேற் கூறியன என்பது தெரிகின்றது. புனையும் அழகுகளைப்போற்றி முடிக்கும் ௭௨ ஆவது அடியில் 'இங்கிவை அணிந்தனர்' என்பதால் அவை புனையப்பட்டன என்றாகின்றது. புனைந்த அழகு ௩௮ முதல் ௬௧ ஆவது அடி வரையிலும் புனையாத அழகு ௬௫ முதல் ௭௨ ஆவது அடிவரையிலும் கூறப்பட்டது. இடைநிற்கும் ௬௩, ௬௪ ஆவது அடிகளுள் வரும்,

"மறுவின் மங்கல வணியே யன்றியும்
பிறிதணி யணியப் பெற்றதை யெவன்கொல்"

என்பது மங்கலவணியாய தாலியைக் குறிப்பது. முதலில் கோவலன் தன் காதலியின் இயற்கையழகைக் கூறிமுடிந்தவுடன் அவளை நோக்குகிறான். அவள் புனைந்துள்ள பல்வகை அழகு தரு பொருள்களிலும் அன்று அவன் தொட்டுக்கட்டிய தாலி கண் முன் முதலில் வந்து நிற்கின்றது. பாடத் தொடங்குகிறான்.

"மங்கலவணியாய தாலியே உனக்கு அழகைத்தர, பிறவற்றையும் ஏன் அணிந்தார்கள்? உன் இயற்கையழகே போதும். தாலி இன்னும் அழகு தருவது. அது அணிந்தே இருக்கவேண்டியது. இதைத்தவிர வேறு ஒப்பனை உனக்கு ஏன்?" என்ற பொருள் படப் பேசுகின்றான். தாலி அவ்வப்பொழுது புனையப்படும் அணியல்ல; மணமான காலத்திலிருந்து கழுத்திலேயே இருந்து அழகு தருவது. மணமான பெண்டிர்க்கு இயற்கை அழகை எடுத்துக் காட்டுவது மங்கல அணி. எனினும் உடலோடு ஒட்டிய சாயல் போன்ற அழகன்று. மலர், தொய்யில் மாலை போன்று நாள்தோறும் கழற்றிக் கழற்றி அணியும் அணியுமல்ல. எனவே புனையா அழகுக்கும் புனையும் அழகுக்கும் இடையில் மணநாளிற் புனைந்து பிறகுபுனையாவண்ணம் பொலிவு தரும் தாலி கூறப்பட்டது. 'மங்கலவணி' என்ற இச்சொல்லுக்கு இயற்கையான உடலழகு எனப்பொருள் கொள்ளின் **நின் நலம்** என்று இயற்கை அழகைப் பாராட்டிய பின்னரும் கூ... இல்லை. இம்மங்கலவணியும் தாலியையே குறித்ததெனக் கொள்ளலே தக்கது.

(தொடரும்)

## வருவது காணீர்

**ந. கா.**

இம்மைப் புகழும் கல்வி!—மறுமை
ஈடில் செல்வம் கல்வி!
மும்மைக் காலம் வெல்லும்—தமிழ்
மொழியிற் கற்பதே கல்வி!

ஆண்டி அரசன் யாரும்—ஒன்றாய்
அணுகச் சேர்ப்பது கல்வி!
வேண்டா செல்வம் வேறு—என்ற
விழுப்பம் தருவது கல்வி!

கற்க கசடறு கல்வி—எவரும்
கன்னித் தமிழே கற்க—பிற
நற் கலைகளெல்லாம்—தமிழில்
நன்கு வருவது காணீர்!

# பெருமைக்குச் சித்திரனார்

[கணக்காயர்—புலவர், திரு. செந்துறைமுத்து]

ஏறத்தாழ இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் ‘என்றுமுள தென்தமிழ்’ நாட்டிலும் வீட்டிலும் ஏட்டிலும் இனித்தாண்ட தருணம்—தமிழாய்ந்த தமிழறனல் தனியரசு நிகழ்ந்த காலம்—புலவர் பெருமக்கள் மன்னர் மன்னர்களாகப் பொலிவுற்ற பொழுது ஒரு நாள்!

எடுப்பான தோற்றம்—ஆண்டுகள் பல கழிந்தும் தளராத கட்டுடல்—அகில் கமழும் குழற்கூடல்—மணிமாலையொடு மலர் மாலை அசையும் கழுத்து—நல்லொளி வீசும் பொற்பூண்செவி—மடிப்பு மறையாப் பட்டாடை மிளிரும் தோள்—முதிர்பொன் வளையலுடை முன்னங்கை—இடையில் இனிய புத்தாடை—மாற்றாரின் உயிர் கவரும் மாண்புமிகு யானைமீதுடைய இருக்கையின்கண் தோற்றம்—மறவர் குடியின் தோற்றம் மாண்புடன் பொலிவுற்றது—யானையின் நடை செருக்களமேகும் படையில் நடை—படையின் நடை யானையில்—எடுப்பான தோற்றத்தில்—விரிந்த சாலையில் விரைந்துவந்தார் ஒரு புலவர் பெருமான்!

அச் சாலையின் ஓரம்—ஆன்ற முதியோர் சிலர்—விரைந்து வரும் யானையைச் சிறிது தொலைவில் கண்டனர்—வருவார் யார் என ஒருவரையொருவர் வினவினர்.

“யானை மிக விரைந்து வருகின்றதே! அதன்மீது வருவோர் யார் என நீவிர் அறிவீரோ?”

“அறிவேன் அன்பரே! நீவிர் நன்று வினவினீர்! அவரை அறியாமல் இருக்கின்றீரே! அவர்தாம் பெருஞ்சித்திரனார்! பெருஞ்சித்திரனார் என்றால் ஊரில் இளையோர் முதியோர் எல்லோருமே அறிவரே! நீவிர் வினவியது வியப்பாக அன்றோ உள்ளது! பெரும்புலவர் பெருஞ்சித்திரனாரே வருவோர்!”

“அப் பெரும்புலவர் இவர்தாமா! நன்று, நன்று! நான் நெடுநாட்களாக இவரைப் பற்றிக் கேள்விப்பட்டுள்ளேன்; இன்று கண்ணாரக் கண்டேன்! இன்று காணப்பெற்றது எம் தவமே!”

“உண்மையில் உம் தவந்தான். இப் புலவர்பெருமான் நம் ஊருக்கு முன் ஒருமுறை வந்துள்ளார். அது சமயம் இச் சாலையின் வழியாக நடந்துதான் சென்றார். இன்றுபோல் யாங்கள் அன்றும் நின்று கண்டனம். இதுபொழுது எங்கோ சென்று பரிசில் பெற்று வருகின்றார் போன்று புலனாகின்றது. யானை இப்பொழுது வெளிமானூருக்கு அருகில் வந்துகொண்டுள்ளது.”

" ஆம்! வெளிமானூரை அடைந்துவிட்டது )பபககம வ( )ென்றீரே, எங்கு யாரிடம் போய்வரக் கூடும்?"

" இப் பக்கத்தின்கண்ணுள்ள முதிரமலைக்குத்தான் சென்று வரவேண்டும். குமணனிடம் பரிசில் பெற்று வருகின்றார்போலும்! யானையும், அணியும் அளிக்கத்தக்க மன்னவர் வேறு யார் இப் பக்கத்திலுள்ளார்? யாருமின்று. எனவே குமணனிடம்தான் சென்று வருகின்றார் எனத் தெரிகின்றது," இன்னணமாகச் சாலை யோரத்தில் நின்ற பெரியோர் உரையாடிய வண்ணம் நின்றனர்.

மதிலரண், நீரரண், காட்டரண் முதலான அரண்களைத் தன் ஊரின் காப்பிற்காக வெளிமான் அமைத்திருந்தான். காட்டரணின்கண் பெருமரங்கள் நிறைந்துள. புலவர்பெருமான் யானையுடன் காட்டரணில் புகுந்தார். ஒரு பெருமரத்தில் யானையைப் பிணித்தார். ஊரினுள் விரைந்து நுழைந்தார்.

ஊரார் புலவருக்கு அறிமுகமானவர் ஆகையால், புலவரைக் கண்டவுடன் கழிமகிழ்வுற்றுக் கைகூப்பி வணங்கினர்—வாழ்த்தினர். புலவர்பெருமானும் அவர்களைக் கண்டு வணங்கி மகிழ்ந்தவாறே மன்னவன் மனைக்குள் நுழைந்தார்.

மன்னவன் வெளிமான் அரச மன்றத்தில் அமர்ந்து ஆட்சியின் அன்றாடச் செயல்களைக் கவனித்து வந்தான். உள்ளே வந்த புலவரைக் கண்டவுடன் எழுந்து வணங்கி வரவேற்றான். புலவரும் கைகூப்பி வணக்கம் தெரிவித்தார். ஆனால் முகத்தில் சினக்குறி தென்பட்டது.

'யைக கண்ட மனனவன தன உளளததளவில தயங்கினன். ஒன்றும் வாய் விளம்ப இயலாமல் திகைத்தான். இருப்பினும் ஒருவாறு தெளிந்து புலவரை இருக்கையில் அமரும்படி வேண்டினன்.

புலவர்பெருமான் இருக்கையில் அமரவில்லை. அரசனை உற்று அயராது நோக்கினர். புலவரின் நோக்குப் புரவலனை அழிக்கும் தீயாகக் காட்சியளித்தது.

புலவரின் பார்வையைக் கண்ட புரவலனுக்குச் சில பழமைச் செயல்கள் மனக்கண்ணில் தோன்றின. சிலைபோல் நின்று சிந்தித்தான். ஒருசில நாட்களுக்கு முன்னர்ப் புலவர், வெளிமானைப் பார்க்க வந்தார். அதுபொழுது வெளிமான் படுக்கையில் துயின்றான். புலவரின் வருகையைத் தெரிவித்தும் புலவரைப் பார்க்க எழுந்து வரவில்லை. தன் இளவலை அழைத்து 'ஏதேனும் பரிசில் அளித்து அனுப்புக' எனப் பணித்தான். மீண்டும்

புலவர் 'மன்னவன் வருவான், பரிசில் பெறலாம்' என எதிர்நோக்கி இருந்தார். இறுதியில் இளவல் வருவதறிந்தார். இளவல் சிறிது பொருள் கொடுவந்து புலவரிடம் நீட்டினான். புலவருக்கு அளவற்ற சினம் பொங்கியது. கண்கள் சிவந்தன. இளவலையும் பரிசிலையும் இடையறாது நோக்கினார். இதழ்கள் சினத்தால் துடித்தன. சினத்துடன் சில சொற்களைக் கூறத் தொடங்கினார்.

"இளவலே இது என்ன?"

"தங்களுக்குக் காணிக்கைப் பொருள்தான் புலவரீர்."

"மன்னவன் வெளிமான் எங்கே?"

"அவர்........துயில்கின்றார். தங்களுக்குக் காணிக்கை நல்கும்படி என்னைப் பணித்தார். கொண்டுவந்தேன்."

"நன்று! யாம் கூறியதாக வெளிமானிடம் சென்று விளம்பு! எமக்குக் காணிக்கை வேண்டாம்! காரணம்! வெளிமான் எம்மைக் கண்களால் காண விரும்பவில்லை! என் தகுதியை அறிந்து காணிக்கை கொடுக்கவில்லை! காண விரும்பாதவனின் காணிக்கை பெறேம்! தகுதியை அறியாமல் அளிக்கும் பரிசிலைப் பெறேம்! வெளிமான் இது போன்று நடந்தமைக்கு நாணுகின்றேம்! விரைந்து செல்! சொல்! வருகின்றேம்!" என்று கூறி வெளிநடந்தார்.

இந் நிகழ்ச்சிகள் வெளிமான் உள்ளத்தில் அலைபோல் தோன்றின. கன்னித்தமிழ் போன்ற கனிவும் குழைவும் புலவர் முகத்தில் இன்மைக்குக் காரணம் அந் நிகழ்ச்சிகளே என்பதைக் குறிப்பால் உணர்ந்தான். புலவரை நோக்கி மீண்டும், "இருக்கையில் அமருங்கள், ஏன் தயங்குகின்றீர்கள்," என்று வேண்டினன்.

"மன்னவனே! நாம் உம்முடன் அமர்ந்து பேச வரவில்லை! பேசி மகிழ வரவில்லை! மகிழ்ந்து செல்ல வரவில்லை! ஒன்றை உணர்த்திச் செல்லவே வந்தேம்!" என்று சொல்லம்புகளை எய்யத் தொடங்கினார்.

"புலவர்பெரும! ஏன் தங்களுக்கு இவ்வளவு சினம்? ஏன் இவ்வளவு வருத்தம்? என் மீது தங்களுக்கு என்ன வெறுப்பு?" என்று அறியாதவன் போன்று வினவினான்.

"தலைவனே! நீர் விரைந்து பாய்ந்து செல்லும் குதிரையை உடைய வீரன்! அதற்காக உம்மைப் பாராட்டுகின்றேன்! ஆனால் உம்மிடம் இரந்து வரும் இரவலர்க்குப் பொருள் கொடுத்துப் புரக்கும் தன்மை உடையவராகமாட்டீர்! அதனால் இரப்போர் இறந்துவிடார்! இரப்போரைப் புரக்கும் பெரு

மக்கள் நாட்டில் பலருளர்! நீர் இரப்பவர்களையும் காண லாம்! இரப்போரைப் புரப்போர் இருப்பதையும் காணலாம்! பொருள் கொடுத்துக் காத்து மகிழ்வதையும் காணலாம்! இதற்கு எடுத்துக்காட்டு, அதோ பாரீர்! உம் காட்டரணிலுள்ள காவல் மரங்களின் கிளைகளை முறித்துத் தழைகளைத் தின்று மரங்களைப் பாழ்படுத்தும் பெருநல் யானையைப் பாரீர்! யாம் குமணனிடம் பெற்றுப் போந்த பரிசில்! அதைப் பாரீர்! நன்றாகப் பாரீர்! பார்த்துப் புரிந்துகொண்மின்! இதை உணர்த்தவே ஈண்டு வந்தேம்! வேலை முடிந்தது! வருகின்றேம்!" என்று கூறிப் புலவர் பெருமான் வெளியேறி யானையொடு சென்றுவிட்டார்.

வெளிமானை இடித்துரைத்த புலவரின் நிலையையும்—பெருமை யையும் என்னென்று இயம்புவது! வறுமை மிக்கிருந்த காலத் தும் தம் பெருமையை—மானத்தைத் தளராது காத்தார்! வறு மைக்குப் பொருள்தானே தேவை என்றெண்ணி வெளிமான் இளவல் அளித்த பொருளைப் பெறவில்லை. தம்மானத்தையும் தமிழ்ப் பண்பையும் பேணினார். தம் உயர்நிலையைக் காட்டினார். வெளிமானின் இழிநிலையை வெளிப்படுத்தினார். கடமை தவறிய —தகுதியறியாத மன்னவனுக்கு இடித்துரை வழங்கினார். 'நான்' என்னும் அகந்தையை அகற்றும்படி அறிவுறுத்தினார்.

தவறிய மன்னவனை நன்னிலைக்குக் கொணர்தல் தமிழ்ப் புலவர் கடனன்றோ! எனவே வெளிமானை நன்னிலைக்குக் கொணரவே உண்மை நிலையை உணர்த்திச் சென்றார். புலவரின் இடித்துரையின்கண் பெருமிதம், துணிவு, மானங்காத்தல், அறி வுரை பகர்தல் முதலிய அழகுகள் அமைந்து புலவருக்குப் பெருமையை அளித்தன. பெருமையுடைய புலவர்களிலேயே இவர் பெரும் புலவராகையால் பெருஞ்சித்திரனார் எனப்பட்டார். புலவர்களின் பெருமையை அறிய வேண்டின், சித்திரனாரின் பெருமையை அறிந்தால் போதியதாகும். எனவே இப்பெருமானை இனிது பெருமைக்குச் சித்திரனார் என்றும் வழங்க இயலு கின்றது. புலவரின் பெருமைக்குக் காட்டாக அமைந்த சித்திர னாரின் இவ் வரலாற்றுக் காட்சி வரும் புறப்பாடலானுணர்க.

" இரவலர் புரவலை நீயும் அல்லை
புரவலர் இரவலர்க்(கு) இல்லையும் அல்லர்
இரவலர் உண்மையும் காண்இனி இரவலர்க்(கு)
ஈவோர் உண்மையும் காண்இனி நின்ஊர்க்
கடிமரம் வருந்தத் தந்தியாம் பிணித்த
நெடுநல் யானைஎம் பரிசில்
கடுமான் தோன்றல் செல்வல் யானே." (புறம். கசுஉ)

# கோசர்

[வித்துவான், தி. பொ. நாராயணசாமிபாரதி, உத்தமபாளையம்]

முடிமன்னர் குறுநிலமன்னர் வேளிர் என்ற பிரிவுகளில் சேராதவராய் ஒரு கூட்டத்தார் பழங்காலத் தமிழ்நாட்டில் இருந்தனர். அக் கூட்டத்தார் 'கோசர்' எனப்படுவார்; விற்போரில் சிறந்தவர்கள்; உண்மை மொழி கூறுபவர்கள்; புகழும் செல்வமும் உடையவர்கள்; இச் சிறப்புள்ளவர்களும் முடி மன்னனிடமும் குறுநில மன்னனிடமும் தோற்றனர்; ஒரு குறுநில மன்னனது நியாய சபையில் இடம் பெற்றனர். இக் கோசர்களின் தனித் தனிப் பெயர் தெரியவில்லை. இவர்களைக் குறிப்பிடும் பொழுதெல்லாம் "கோசர்" என்றே பழங்கால இலக்கியங்கள் கூறுகின்றன. கடைச்சங்க இலக்கியங்களான அகநானூறு, புறநானூறு, குறுந்தொகை, மதுரைக் காஞ்சி, சிலப்பதிகாரம் முதலியவை பலவாறாகப் பகர்கின்றன. எனினும் இக் கோசர்களின் வரலாற்றை நன்கு அறியத்தக்க குறிப்புக்கள் கிடைக்கவில்லை. இவர்களின் நாடு, ஊர் முதலியன நன்கு தெரியவில்லை.

கோசர் நாடு :

இக் கோசர்களின் நாடு, கொங்கு நாடாக இருக்கலாம்; சிலப்பதிகாரம் உரை பெறு கட்டுரையில், "அது கேட்டுக் கொங் கிளங் கோசர் தங்கள் நாட்டகத்து நங்கைக்கு விழவொடு சாந்தி செய்ய மழைத்தொழில் என்றும் மாறாதாயிற்று" எனவருவதில் "கொங்கிளங் கோசர்" குறிப்பிடப்பட்டுள்ளனர்; இத் தொடர்க்கு "அரும்பத உரையாசிரியர்", "குறும்பு செலுத்துவார் சில வீரர்" எனக் குறித்தார்; குறும்பு = வம்பு; சண்டை; அடியார்க்கு நல்லார், 'இளங்கோவாகிய கோசர்' எனக் குறித்தார்; இவ்வுரையைத் தவிர அடியார்க்கு நல்லார் வேறு ஒன்றும் அத் தொடர்க்கு எழுதவில்லை; இவர் உரையில் "இளங்கோவாகிய கோசர்" எனப் பண்பு உருபு விரித்து இரு பெயர் ஒட்டாக்கி எழுதியிருப்பதால் கோசர் என்பார், கொங்குநாட்டவரா? ஒரு கூட்டத்ாரா? தனித்த ஓரரசரா? என ஐயம் எழுகின்றது; எனினும் அரும்பத உரையாசிரியர், "குறும்பு செய்வார் சில வீரர்" என்பதால் கோசர், கொங்குநாட்டைச் சேர்ந்த ஒரு கூட்டத்தார் எனலாம். நாடு எது எனத் திட்டமாகக் கூற இயலவில்லை. சொந்த ஊரை உடையவர்கள் என இலக்கியங்கள் கூறுகின்றன.

கோசர் இயல்பு

உடல் நிறையப் பெரிய கவசங்களையும் பிற போர் அணிகளையும் பூண்டு வீரத்திலே சிறந்தவர்கள் இக் கோசர்கள்; முகங்

களிலே விழுப்புண் பட்டு வடு உண்டான முகங்களை உடைய வர்கள்; கடிய கோபம் காட்டும் கண்களை உடையவர்கள். பல வேல்களைக் கொண்டு காவல் செய்வதில் சிறந்தவர் கள். உண்மையையும் நெடுந் தொலைவிலும் விளங்கும நல்ல புகழையும் உடையவர்கள்; "ஆதன் எழினி" என்ற அரசனது வளம் மிக்க செல்லூரில் கொன்றை குவளை முல்லை மலர்களைக் 'கண்ணி'யாகக் கட்டி விளையாடுவார்கள்; பாண்டி நாட்டிலுள்ளது மோகூர்; அதை ஆண்டவன் குறுநில மன்னனான பழையன்; இப் பழையனுடன் கோசர் போர்புரிந்தனர்; அப்போர் செய்யும் போது வெற்றிக் கொடி கட்டியதும் காற்றைப்போல் விரைவதும் அழகியதும் ஆன தேர்ப்படைகளை வைத்திருந்தனர்; போரில் மோகூர்ப்பழையன் பணியவில்லை; எனவே "மோரியர்" என்ற வீரர்களைத் துணையாகக் கொண்டனர் இக் கோசர்.

## அன்னி மிஞிலியின் வஞ்சினம்

'அன்னி மிஞிலி' என்பவள் ஒரு கன்னிப் பெண்; இப் பெண்ணின் தந்தை நிறையப் பசுக்களை வைத்திருந்தான்; ஒரு நாள் இவன் பசுக்கள் கோசர்களுக்கு உரிய புன்செய் நிலத்தில் புகுந்தன; பசிய இலைகள் நிறைந்த பயற்றில் மேய்ந்தன; மேய்ந்த பசுக்களையும் அவற்றுக்கு உரியவனை அன்னிமிஞிலியின் தந்தை யையும் கோசர் பிடித்தனர்; "பசுக்கள் மேய்ந்தது உண்மை தான்" என்று உண்மை கூறினன் அன்னிமிஞிலியின் தந்தை. இப்படி உண்மையைக் கூறியும் ஒப்புக்கொள்ளாது கருணை காட்டாத கோசர்கள் அவனுடைய கண்களைப் பிடுங்கிவிட்டனர்; கண் இழந்த தந்தையின் நிலையைக் கண்ட அன்னிமிஞிலி பதைத் தாள்; உருகினாள்; கண்ணீர் உகுத்தாள்; கொதித்தாள்; "கோசரைக் கொன்றாலன்றிப் பாத்திரத்திலும் உண்ணேன்; தூய ஆடையும் உடுத்தேன்" என வஞ்சினம் கூறினாள்; தவக் கோலம் கொண்டாள்; ஒரு சூழ்ச்சி செய்ய முற்பட்டாள்; அரசர் களான திதியனிடமும் குறும்பியனிடமும் தந்தைக்குக் கோசர் செய்த கொடுமையை அவர் நெஞ்சம் நெகிழவும் கோபம் மீறவும் கூறினாள்; கேட்ட திதியனும் குறும்பியனும் போர்க்கோலம் கொண்டனர்; அக் கோசரைக் கொன்றனர்; கண்ணைத் தோண் டிய கோசர்கள் மண்ணைக் கவ்வியதை அறிந்து அன்னிமிஞிலி மனம் மகிழ்ந்தாள்; இப்போர் நடந்த இடம் திதியனது "அழுந் தூர்" என்பதாம். இ- -

கண்கவின் அழித்ததன் தப்பல தெறுவர
ஒன்றுமொழிக் கோசர்க் கொன்று முரண்போகிய
கடுந்தேர்த் திதியன் அழுந்தைக் கொடுங்குழை
அன்னி மிஞிலி"

எனவரும் பரணரின் கஅசு-ஆம் அகப் பாடற் பகுதியாலும்,

"பாசிலை அமன்ற பயறு புக்கென
வாய்மொழித் தந்தையைக் கண்களைந்து அருளாது
ஊர்முது கோசர் நவைத்த சிறுமையிற்
கலத்தும் உண்ணாள்; வாலிதும் உடாஅள்
சினத்திற் கொண்ட படிவம் மாறாள்
மறங்கெழு தானைக் கொற்றக் குறும்பியன்
செருவியல் நன்மான் திதியற் குரைத்தவர்
இன்னுயிர் செகுப்பக் கண்டு சினம் ஆறிய
அன்னி மிஞிலி ....."

எனவரும் அவரது உ௲உ ஆம் அகப் பாடலானும் அறியலாம்.

### கோசர்களின் பயிற்சியும் பணிவும்

பெரிய முருக்குமரத்தை வெட்டித் தூணாக நட்டனர்; அதைக் குறியாக வைத்து அம்பு எய்து பழகினர் இக் கோசர்; அங்ஙனம் பழகுவதில் ஒருவர்க்கு ஒருவர் 'குறி எய்வ'தில் போட்டியிட்டனர்; மோகூர்ப் பழையனுடன் போர் செய்வதற்கு அவன் மோரியரைத் துணைக் கொண்டும் பணியவில்லை. பின் அவனுக்குப் பணிந்து அவன் அவையில் இருந்தனர். இதனைப்,

"பழையன் மோகூர் அவையகம் விளங்க
நான்மொழிக் கோசர் தோன்றி"

என்ற மதுரைக் காஞ்சியின் ருOஅ-சு ஆம் அடிகளாலறியலாம்.

தலையாலங்கானத்துச் செரு வென்ற பாண்டியன் நெடுஞ்செழியனுக்கும் இக் கோசர் பணிந்தனர் என்பதை,

"... ... ... ... ...இளங் கோசர்
இயல்நெறி மரபினின் வாய்மொழி கேட்ப"

எனவரும் மதுரைக்காஞ்சி ௫௱௩-௪ ஆம் அடிகளாலறியலாம்.

### சூழ்ச்சியில் சிறந்தவர்கள் கோசர்கள்

கோசர்கள் நன்னனுடன் போராட முற்பட்டனர்; போர் தொடங்கும் முன்பு ஆநிரைகளைக் கவர்தல்போலப் பகை அரசரது "காவல் மரத்தை"யும் வெட்டும் மரபு இருந்தது; அதன்படி நன்னனது காவல் மரமான மாமரத்தைச் சூழ்ச்சி செய்து வெட்டினர்; வெட்டிய பின் நன்னனது நாட்டுக்குள் படையெடுத்துச் சென்றனர்; வெற்றியும் அடைந்திருப்பார்கள். இதனை,

"... ... ... ... ...நன்னன்
நறுமா கொன்று நாட்டிற் போகிய
ஒன்றுமொழிக் கோசர் போல
வன்கண் சூழ்ச்சியும் வேண்டும்"

என வரும் எஙஆம் குறுந்தொகைப் பாட்டுப் பகுதியால் அறியலாம். இதனைப் பாடியவரும் பரணரே. இக் கோசர் எத்தகைய சூழ்ச்சி செய்தார்கள் என்பதனை அறியச் சான்றுகள் இல்லை.

**பிற குறிப்புக்கள்**

இக் கோசர்கள் சிறந்த வீரர்கள்; 'வஞ்சினம்' கூறுபவர்கள்; ஆதலின் இவர்கள் 'ஒன்று மொழிக் கோசர்' என்றும், 'வாய் மொழிக் கோசர்' என்றும் பாராட்டப்படுகின்றனர்; பகைவரைக் கொல்லுவதில் தவறாத வாள்களை உடையவர்கள்; உண்மையும் செல்வமும் புகழும் உடையவர்கள்; இத்தகையவர்களின் படைகளை அழித்து அக்கோசர்களின் நிலத்தைக்கொள்ள விரும்பினான் ஒரு சோழன் என்பதை,

> " வாய்மொழி நிலைஇய சேண்விளங்கு நல்லிசை
> வளங்கெழு கோசர் விளங்குபடை நூறி
> நிலங்கொள விரும்பிய பொலம்பூண் கிள்ளி "

என்ற உ0௬ ஆம் அகப்பாட்டுப் பகுதியாலறியலாம். இவ்வாறு விரும்பிய சோழன் காவிரிப்பூம் பட்டினத்தை உடையவன். இக் கோசர்கள் நான்கு வகையாக இருந்தார்கள்; இவர்கள் கூறும் மொழி உண்மையாக இருக்கும்; அல்லது பின்னால் விளைவதை முன்னறிந்து கூறும் மந்திரம் என்ற மறைமொழி உடையவராயிருந்திருக்கின்றனர். வீடுகளில் சிறந்த கள்ளை வைத்திருந்தனர்; கள்ளைக் குடிப்பர்; இளைஞர்கள் கூறிய வஞ்சினத்தின்படி செய்பவர்கள்; பழைய ஊர்களைச் சொந்தமாக உடையவர்கள்.

தமிழ்நாட்டில் இக் கோசர்கள் வாழ்ந்திருக்கின்றனர்; பல போர்களில் ஈடுபட்டிருக்கின்றனர்; நியாய சபையில் இவர்கள் இடம் பெற்றதை நோக்கும்போது, இவர்கள் உண்மைக்குப் புறம்பானவற்றைக் கூறமாட்டார்கள் என்பது தெரிகிறது. விற்பயிற்சி பெற இலக்காக எய்யப்படுவதற்கு வலிமை இல்லாத முருக்கு மரத்தைத் தூணாக நட்டுப் பழகினர் என்பதால் மரத்தின் இயல்பு அறிந்துள்ளனர். தற்காலச் 'சர்க்கஸ்'களில் "கத்தி எறித"லுக்கு இத்தகைய மரத்தையே பயன்படுத்துகின்றனர். வெற்றியடைந்தபோது மிஞ்சியும் தோல்வியடைந்தபோது கெஞ்சியும் வாழ்ந்தனர் எனத் தெரிகிறது.

# மறைமலையடிகள் நூல்நிலையம், சென்னை

## டாக்டர் ப. சுப்பராயன் பார்வையிட்டார்

9-11-60 புதன்கிழமையன்று காலை 11-45 மணியளவில் மத்திய அரசு போக்குவரத்து அமைச்சர், உயர்திரு. டாக்டர் ப. சுப்பராயன் அவர்கள் சென்னை லிங்கிச் செட்டித் தெருவிலுள்ள மறைமலையடிகள் நூல்நிலையத்தைப் பார்வையிட வந்தனர். சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழக ஆட்சியாளர், திரு. வ. சுப்பையா பிள்ளை அமைச்சரை வரவேற்று நூலகம் முழுவதையும் சுற்றிக் காண்பித்தார். மறைமலையடிகளாரின் நூல்கள், கடிதங்கள், பழம்புலவர் படங்கள், கடிதங்கள், பழந்தமிழ் இதழ்கள், எங்கும் காணமுடியாத அரிய தமிழ் நூல்கள் முதலியவற்றைக் கண்டு பாராட்டினார். "கிறித்துவக் கல்லூரியில் பயிலும்போது தமக்குத் தமிழ்ப் பேராசிரியராக விளங்கிய மறைமலையடிகள் பெயரில் நிறுவப் பெற்றிருக்கும் இந்நூலகத்திற்குவந்து இதில் உள்ள அடிகளாரின் புத்தகங்களைப் பார்க்கும்பொழுது பெருமகிழ்வு எய்துகின்றேன்" என்று அமைச்சர் கூறினார்.

பார்வையாளர் ஏட்டில் "மறைமலையடிகள் ஞாபகார்த்தமாக நடக்கும் நூல்நிலையத்தை என் நண்பர் சுப்பையா பிள்ளை அவர்கள் மிகத் திறமையுடன் ஸ்தாபித்து நடத்துவதைப் பார்த்ததில் எனக்கு மிகமிக மகிழ்ச்சி. அநேக தற்காலத்தில் கிடைக்க முடியாத புஸ்தகங்களைச் சம்பாதித்துத் தமிழகத்துக்குப் பெரிய சேவை செய்திருக்கிறார். இந் நூல்நிலையம் ஈசன் அருளால் பெருகித் தமிழகத்துக்குப் பல துறைகளில் உதவவேண்டுமென்பது எனது அவா" என்று எழுதியுள்ளார். அரை மணி நேரம் நூலகம் முழுவதையும் சுற்றிப் பார்த்தபின் அமைச்சர் அங்கிருந்தோர் அனைவரிடமும் விடைபெற்றுச் சென்றார்.

---

மேற்கு வங்காள மேல்சபைத் தலைவர்

## திரு. சுநீதி குமார் சட்டர்ஜி வருகை

பன்மொழி வல்லுநரான திரு. சுநீதி குமார் சட்டர்ஜி எம்.ஏ., டி.லிட்., 3-11-60 வியாழனன்று மாலை நூலகத்தைப் பார்வையிட வந்திருந்தார். இவர் மொழியியல் ஆராய்ச்சியில் வல்லவர். 1952 முதல் மேற்கு வங்காள மேல்சபைத் தலைவராக விளங்குகின்றார். தமிழ்மொழியில் நன்கு பயிற்சியுடைய இவர்

அம் மொழிமீது பற்று உடையவர். இவருடன் வங்காள நண்பர் இருவரும், டாக்டர் அ. சிதம்பரநாதன் செட்டியார் அவர்களும் நூலகத்திற்கு வந்திருந்தனர். மறைமலையடிகளாரின் அரிய தமிழ்த்தொண்டைப் பாராட்டிய இவர் இந் நூலகத்தைப் பற்றிப் பெரிதும் பாராட்டி மகிழ்ந்தார்.

"இந்தியரின் உள்ளத்திலும் உணர்ச்சியிலும் அடைந்த சில சிறந்த வெற்றிகள்—உலக முழுவதிலும் உள்ளவரின் உள்ளத்திலும் உணர்ச்சியிலும் அடைந்தவை கூட—தமிழ் மொழி வழியாக, தமிழ்நாட்டின் இலக்கியம், கலை மூலமாக விளங்குகின்றன. தமிழ் இலக்கியம் தமிழகத்திற்கு மட்டும் வழி வழிச் சொத்தாக அல்லாது இந்தியா முழுவதிற்கும் உரிய தாகும். சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம் கடந்த 40 ஆண்டு களாகச் சிறந்த பண்பாட்டுப் பயனையுடைய பணியைச் செய்து வருகின்றது. இச் சிறந்த வெற்றியைத் தனது பெருமையாக வைத்துள்ளதற்கு அது பாராட்டற்குரியது. தமிழ்மக்களின் இலக்கியம், தத்துவம், சமயம், பண்பாடு பற்றி ஏற்கெனவே 1,008 நூல்கள் வெளிவந்துள்ளன.

"தமிழ் ஆராய்ச்சியில் தலைசிறந்து விளங்கிய சுவாமி வேதா சலம் என்னும் மறைமலையடிகளின் நினைவாக நிறுவப்பட்டுள்ள 'மறைமலையடிகள் நூல்நிலையம்' என்னும் இவ்வழகிய நிலையத்தைப் பார்வையிட வாய்ப்பேற்பட்டதற்குப் பெரிதும் மகிழ்ச்சியடை கிறேன். மக்களை அமைதியான படிப்பிற்கும் ஆராய்ச்சி செய்வ தற்கும் அழைக்கும் இந்த அழகிய நூலகத்தில் அடிகளின் நினைவு பாதுகாக்கப்படுவதைக் காணப் பெருமகிழ்வு ஏற்படுகின்றது. தமிழை முதல்நிலைக்குக் கொண்டுவரவும், மக்களினத்திற்குப் பணிசெய்யும் இந்தியாவின் அழியாப் புகழ் ஓங்கி வளரவும் இந் நூல் நிலையமும் இதைச் சார்ந்த நிலையங்களும் தொடர்ந்து பெருகி வளருமாக" என்று பாராட்டியுள்ளார்.

தமது கருத்தைப் பார்வையாளர் ஏட்டில் எழுதிய இவர் கையெழுத்திடும்பொழுது ஆங்கிலத்தில் 'Suniti Kumar Chatterji' என்றும், தமிழில் 'நன்னெறி முருகன்' என்றும் கையெழுத்திட் டுள்ளார். 'சு நீதி' என்பதற்கு 'நன்னெறி' என்றும், 'குமார்' என்பதற்கு 'முருகன்' என்றும் தம் பெயரைத் தமிழில் மொழி பெயர்த்துள்ளார். இவருடைய தமிழார்வத்தையும் தமிழ் மொழிப் பற்றையும் கண்டாவது தமிழ்மக்களிடம் ஆர்வம் பெருகவேண்டாமா?

# மறைமலையடிகள் நூல்நிலையம், சென்னை



டாக்டர், திரு. ப. சுப்பராயன் அவர்கள் நூல்நிலையப் பார்வையாளர்
ஏட்டை நோக்குதல்



திரு. சுநீதி குமார் சட்டர்ஜி அவர்களை அம்பலவாணர்
திருவுருவச்சிலை முன்னர் செயலாளர் வரவேற்றல்

தமிழ் எழுத்தாளர் சங்க எட்டாவ, மாந 960





திரு தெ. பொ. மீனுட்சிசுந்தரனுர், திரு. கு. கோதண்டபாணிப் பிள்ளை ஆகிய இரு தமிழ்ப் பேரறிஞர்களுக்கும் செட்டிநாட்டரசர், டாக்டர், திரு. எம். ஏ. முத்தைய செட்டியார் கேடயங்கள் வழங்குதல்

# தமிழ் எழுத்தாளர் சங்க எட்டாவது மாநாடு

திருமலிந்த சென்னையில் செந்தமிழ் எழுத்தாளர் சங்க எட்டாவது மாநாடு 1960 ஆம் ஆண்டு, அக்டோபர்த் திங்கள் 15, 16 ஆகிய இருநாட்களிலும் சீரோடும் சிறப்போடும் வெற்றிகரமாக நடைபெற்றது குறித்து உண்மையிலேயே தமிழ்ப் பெருங்குடிமக்கள் பெருமைப்பட வேண்டும். தமிழுணர்வு பெருகி எழுச்சி யுண்டாகிவரும் இந்த நேரத்தில் இந்த மாநாடு நடைபெற்றிருப்பது பாராட்டப்பட வேண்டிய செய்தியாகும். தமிழர் தம்முடைய பழஞ்சிறப்பை மீண்டுமடையச் சாதித்துத் தீரவேண்டிய பணிகள் மிகுதியாக வுள்ளன. மாநாட்டில் நிறைவேறியுள்ள தீர்மானங்கள் அப்பணிகளை நமக்கு நினைவுறுத்துவனவாக இருப்பதும் மகிழ்ச்சிக் குரியதே.

பதினைந்தாம் தேதி மாலையில் மாநாட்டை, சென்னை உயர் நீதிமன்றத் தலைமை நடுவர், திரு. பி. வி. இராசமன்னார் அவர்கள் திறந்துவைத்தார்கள். தமிழ் எழுத்தாளர் சங்கத் தலைவரும், பன்மொழிப் புலவருமாய, திரு. கா. அப்பாத்துரை அவர்கள் தலைமை தாங்கினார். லால்குடி, திரு. கிருஷ்ணமூர்த்தி இறைவணக்கம் பாடினார். மாநாட்டில் கலந்துகொள்ள வருகை புரிந்த அனைவரையும் வரவேற்குமுகத்தான் குழந்தைக் கவிஞர், திரு. அழ. வள்ளியப்பா அவர்கள் ஆற்றிய உரையின் சில பகுதிகள் வருமாறு:

'பல வேறுபாடுகள் இருப்பினும் நாம் யாவரும் ஒரே இனம்; நம் அனைவருக்கும் ஒரே தொழில். இது மிகவும் புனிதமான ஒரு தொழில். ஆனால் மிகவும் பொறுப்பு வாய்ந்த தொழில். இத் தொழில்தான் நம் அனைவரையும் ஒன்றுகூட்டி வைத்துள்ளது. கதை, கட்டுரை எழுதியதன் மூலம் செயற்கரிய செய்த எழுத்தாளர்களைப் பற்றி நாம் கேள்விப்படவில்லையா? மகாத்மா காந்தியின் உள்ளத்தைப் பண்படுத்தி, அவரை உலகம் போற்றும் உத்தமராக மாற்றியது எது? "என் வாழ்க்கையில் புரட்சி மிக்க ஒருபெரும் மாறுதலைச் செய்தது ரஸ்கின் எழுதிய 'Unto this last' என்ற புத்தகம்தான் எனக் காந்தியடிகளே கூறியிருக்கிறார். இன்று எத்தனையோ எழுத்தாளர்களின் நல்ல எழுத்தோவியங்கள் பிறருக்குத் தெரியாமல் பெட்டிக்குள் அடைபட்டுக் கிடக்கின்றன. உண்மையிலேயே தகுதி வாய்ந்த ஓர் எழுத்தோவியம் புத்தக உருப் பெறுதற்கான வழியில்லை, வாய்ப்பில்லை என்ற ஒரு நிலை இருக்கலாமா? தமிழ் வளர்ச்சி ஆராய்ச்சிக் குழு, சாகித்திய அக்காதெமி முதலிய நிறு

வனங்கள் எழுத்தாளர்களிடமுள்ள கையெழுத்துப் பிரதிகளை வரவழைத்து, அவற்றுள் தகுதிவாய்ந்தனவற்றை, விரைவில் புத்தகங்களாக வெளியிட வழிவகை செய்தால் எவ்வளவோ உதவியாயிருக்கும். சாதி, மத, அரசியல் நோக்கமில்லாத—நடுவு நிலைமையுடன் எதையும் பார்க்கக்கூடிய சிலர் அடங்கிய குழுக்களை அமைத்து இப்பணியைச் சீரிய முறையிலே திறம்படச் செய்யலாம். இச் செயலால், சிறந்த எழுத்துக்களைத் தேடிப் பிடித்து உலகுக்குத் தந்த பெருமை கிடைக்கிறது. அத்துடன் "சூழ்நிலை வாய்த்திலையே!" எனச் சோர்ந்து கிடக்கும் எத்தனையோ எழுத்தாளர் உள்ளங்கள் மலர்ச்சி பெறவும் வழி பிறக்கிறது."

மாநாட்டைத் திறந்துவைத்துப் பேசிய திரு அவர்கள் சொற்பொழிவின் பிழிவு வருமாறு:

"இலக்கியம் பொதுவாழ்வுச் சிக்கல்களையும், தனி மனிதர் சிக்கல்களையும், நாட்டுச் சிக்கல்களையும் தீர்க்கும் வண்ணம் அமைய வேண்டும். 'இலக்கியம் கடந்த காலத்தைக் கூற வேண்டும்; நிகழ்காலத்தை உருவாக்க வேண்டும்' என்று டாக்டர் இராதாகிருட்டிணன் அவர்கள் கூறியுள்ளதை இங்கு நினைவுபடுத்த விரும்புகின்றேன். பாடல்கள் சிறந்த உணர்ச்சிகளை வெளிப்படுத்த வேண்டும். ஆங்கிலக் கவிஞர் ஓர்ட்சு ஒர்த்தும் பாடலை, 'உணர்ச்சிகளின் நினைவுறுத்தல்' என்று கூறியுள்ளார். பாடல் காதல், வீரச்சுவைகளில் சிறந்து திகழ வேண்டும். தேவைக்குத் தக்கவாறு பணிபுரிதல் எழுத்தாளர் கடன். இப்பொழுது இலக்கியத் திறனாய்வு உணர்ச்சி மிகுந்துள்ளது. எழுத்தாளர்கள் கடந்தகாலப் பெருமைகளை ஒதுக்கிவிடல் கூடாது. எந்த மொழி எழுத்தாளர்களாக இருந்தாலும் எழுத்தாளர் சமூகத்திடையே பொது உணர்ச்சி உண்டு. அவர்களை யெல்லாம் ஊக்குவிக்கும் சக்தி ஒன்றே; அவர்களுடைய அனுபவம் பொதுவானது. பழங்காலச் சங்க இலக்கியங்கள் தாம் தமிழுக்குப் பெருமையளித்தன. இடைக்காலத்தில் குன்றியிருந்த தமிழ்மொழிவளர்ச்சி தற்போது புத்துயிர் பெற்று விளங்கி வருகின்றது. பல்லாண்டுகளாக ஆங்கிலேயரின் ஆதிக்கத்தின் கீழிருந்த காரணத்தால் ஆங்கில இலக்கியத்தின் மோதல் மற்றமொழி இலக்கியங்களுக்கு ஏற்பட்டிருப்பது வரவேற்கத் தக்கதே. இலக்கியத்துறை சம்பந்தப்பட்டவரை ஆங்கில இலக்கியத் தொடர்பு தற்காலப் பல்வேறு மொழி இலக்கியங்களின் வளர்ச்சிக்குத் துணையாயிருக்கிறது என்பதில் ஐயமில்லை.

"எல்லாத் துறைகளிலும் மாறுதல் ஏற்பட்டிருப்பதுபோல் மொழி இலக்கியத் துறையிலும் மாறுதல்கள் தற்போது காணப்

படுகின்றன. இலக்கியப் படைப்புக்காக எடுத்துக்கொள்ளப் படும் பொருள் குறித்த மாறுதல், இலக்கிய உருவத்தின் மாறுதல், மொழி நடைமாறுதல் ஆகிய மூன்று வகையாக அம் மாறுதல்களைக் கொள்ளலாம். பழங்காலத்தில் பத்தி, புராண தத்துவங்களை அடிப்படையாகக் கொண்டே கவிதைகள் புனையப் பட்டன. கவிதை எழுதும் காலம் இனி மறைந்துவிட்டது என்றே நான் கருதுகிறேன். தற்போதும் சிலர் கவிதை எழுது கிறார்கள். ஆனால் பழங்காலக் கவிதைகளின் தரத்தை அவை எட்டிப் பிடிக்கக்கூடிய நிலையில் இல்லை. உரைநடையே தற்போது பெரும்பாலும் நிலைபெற்றுவிட்டது. பாமர மக்களுக்குப் புரியும் முறையில் தமிழ்நடை வளர்க்கப்பட்டிருக்கிறது. அன்றாட வாழ்க்கைச் சூழ்நிலையோடு நெருங்கிய தொடர்பு கொண்டா லன்றிச் சிறந்த இலக்கியப் படைப்பு உருவாக முடியாது. தென்னிந்திய மொழிகளைப் பொறுத்தவரை ஒருமொழியிலுள்ள இலக்கியங்கள் பிறமொழிகளில் பெயர்க்கப்பட வேண்டும். ஒரு மொழியில் வல்லுநராய் உள்ளவர்கள் மற்றமொழி இலக் கியங்களைப் புரிந்து சுவைக்கக்கூடிய நிலை உண்டாக வேண்டும். தென்னிந்தியா சம்பந்தப்பட்டவரையாவது இத்தகைய நிலை விரைவில் உண்டாகும் நன்னாளை எதிர்பார்க்கின்றேன். அழகுச் சுவை மலிந்த தமிழ் நாட்டின் சீரிய வருங்காலத்திற்காக நான்

மாநாட்டிற்குத் தலைமை தாங்கித் திரு. கா. அப்பாத்துரை அவர்கள் சொற்பொழிவாற்றியதன் சுருக்கம்:

"உலக நாகரிகத்தின் முன்னோடிகள் தமிழர்கள் என்று வரலாறுகளும் ஆராய்ச்சித் துறைகளும் முழங்குகின்றன. மனித இன நாகரிகத்தையும் பண்பாட்டையும் பண்பையும் ஆக்கிய தாயகம் தமிழகம். அத் தமிழகத்தின் பண்பின் முன்னோடி, அதன் கலையூற்று, தமிழ்க்கலை—தமிழிலக்கியம்! தமிழ் இலக் கியத்தை ஆக்கிய மரபு எழுத்தாளர் மரபு! எழுத்தாளர் மரபில் மூத்தோர் ஆக்கித்தந்த தமிழின் தொல் பேரிலக்கியத்தை வளப் படுத்தவும், மேலும் நல்லிலக்கியம், புத்திலக்கியம் தீட்டவும் வழிவகுக்கும் தமிழ் எழுத்தாளர் உலக அமைப்பாகிய தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் எட்டாம் ஆண்டு மாநாட்டில் நாம் இங்கே கூடியிருக்கிறோம்.

"இறைவனே தலைமை வகித்து நடத்தினார் என்று தமிழ் முன்னோர் பெருமையுடன் கூறும் முத்தமிழ் முச்சங்க மரபில் வந்தது நம் சங்கம். சங்கத் தமிழின் மங்காத தங்கப் புகழ்வளம் நம் கலைவளம். அகல்பேருலகில் உள்ள நூற்றுக்கணக்கான மொழிகளில் வேறெம் மொழியிலும் இல்லாத அளவில் மனித

நன மழலை இளமைக் காலத்திலிருந்து தொடங்கி மூப்பது நூற்றாண்டுகளுக்கு மேற்பட்ட தொடர்ச்சியான இலக்கியம் நம்மிடம் உண்டு.

"விரைந்து ஒருலகமாக, ஒரு பெருநாடாக, ஒரு மாபெரும் குடும்பமாக ஒன்றுபட்டுவரும் நம் தற்கால உலகிலே மேலை மொழிகளிலே ஒரு மேலை மொழியாகக் கீழைமொழி களிலே ஒரு கீழை மொழியாக, மேல்திசைக்கும் கீழ்த்திசைக்கும் இடையே ஒரு பாலமாக, இரண்டின் பழமைகளுடன் ஊடாடி இரண்டின் வருங்கால வளங்களின் ஒளி நிழல் வண்ணமாக நம் மரபுவளம் விளங்குகிறது. தாய்மொழிகளிடையே ஒரே உயர்தனிச் செம்மொழியாய், உயர்தனிச் செம்மொழிகளிடையே ஒரு தாய்மொழியாய் காலத்தின் எல்லையளாவிப் பழமை உரத்துடன் புதுமை வளம் இணைக்கும் உயிர் நிலமாய் நம் தமிழ் நிலைபெற்று வளர இருக்கின்றது.

"தமிழ் ஆட்சி மொழியாகி வளரும் எதிர்காலத்தில் எழுத் தாளர் சங்கம் தமிழ்ச்சங்க மரபில் வந்த புதுச்சங்கமாகவும், எழுத்தாளர் இனம் பண்டை நக்கீரர் மரபில் வந்த புது இன மாகவும், வருங்கால இலக்கியம் சங்க இலக்கிய மரபில் வந்த உயரிய, ஆனால் அதனினும் பரப்பிலும் வளத்திலும் அகன்ற உலக இலக்கியமாகவும் வளர வழியுண்டு. அதை விரைவுபடுத்தும் வகையில் எழுத்தாளரின் உரிமைகளுக்காக எழுத்தாளர் மன்றங்களும், பத்திரிகைகள், ஆட்சித்துறைகள் போன்ற அமைப்புக்களும் பாடுபடவேண்டும்; போராட வேண்டும். எழுத்தாளர்களைப் பேணச் செல்வர்களும் ஏழை களும் கல்வி நிலையங்களும் போட்டியிட்டு முந்தவேண்டும். எழுத் தாளர்கட்காகச் செலவாகும் ஒவ்வொரு காசும் மொழிக்கும் நாட்டுக்கும் கோயிலுக்கும் செலவாகும் ஓர் ஆயிரம் பொன்னின் மதிப்புடையதாகும் என்ற எண்ணம் தமிழரிடையே வளர்ந்தால் தமிழகம் பொன்னுலகமாக உயர்ந்து ஓங்கிச் செழித்து வளர்தல் உறுதி."

நச சிறப்பாகத் தொண்டாற்றிப் பெரும்புகழ் கொண்டுள்ள பன்மொழிப் புலவர், திரு. தெ. பொ. மீனாட்சி சுந்தரனார், இராவ்சாகிப், திரு. கு. கோதண்டபாணிப் பிள்ளை ஆகிய இருவருக்கும் தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் சார்பில் கேடயங்கள் வழங்கிப் பாராட்டுரை நிகழ்த்திய செட்டிநாட் டரசர், டாக்டர் திரு. எம். ஏ. முத்தைய செட்டியார் அவர்கள் கூறியதாவது:

"மன்னர், சமீன்தார்கள் ஆகியோர் மட்டும் தமிழ்ப் புலவர் களைப் புகழ்ந்து போற்றிய காலம் மறைந்து, பொதுமக்களும்

ப பாராட்டி ஊ 'கருமம் காலம் இது. கடந்த
)களாகத் ச் சீரிய தொண்டாற்றி இன்று
நம் பாராட்டிற் குரியவர்களாக விருக்கும்
தமிழ்ப் புலவர்கள் மரபிலுதித்த பெரியார்கள். இவர்களில் வழக்கறிஞரான திரு. மீனாட்சிசுந்தரனார் அத்தொழிலில் நாட்டம் மிகக்கொள்ளாது, தமிழ்ப் பணியில் முழுமூச்சாக இறங்கியுள்ளது தமிழகத்தின் பெரும்பேறாகும்.

நப் பயிலாவிடில் வடநாடு தென்னாட்டை
)மட. பிராமணரல்லாதார் இந்த ஆபத்தை உணர
ம. பின்னர் ஏமாற்றமடைவதில் பயனில்லை. ஆங்கிலத்
தைப பய )ல்தான் நம்மில் பலர் உயர்தரப் பதவிகளை அக்கால )ல அடைய முடிந்தது. பிராமணர்கள் எல்லோரும் ஆங்கிலம், இந்தி மற்றும் பல மொழிகளைப் படித்தனர்; படிக்கின்றனர். தமிழை வைத்து இந்தியை எதிர்க்க முடியாது; இந்தி நம்மை அழித்துவிடும். முன்பு ராஜாஜி கட்டாய இந்தியைப் புகுத்தியபோது நான் எதிர்க்கட்சித் தலைவராக இருந்து அதைக் கடுமையாக எதிர்த்தேன். தற்போது ராஜாஜி எனக்கு 'ஏஜண்டு'போல் இருந்து ஆங்கிலம் நீடிக்கவேண்டுமென்று வலியுறுத்தி வருகிறார். உண்மைநிலையை உணர்ந்து ஒப்புக்கொள்கிறார். இதில் தவறு என்ன?

"திரைப்படத்தில் வரும் உரையாடல்கள் மிகவும் மட்டமான தரமுடையனவாக இருக்கின்றன; கொச்சைத் தமிழிலும் நடுச்சாலையில் கீழ்த்தர மக்கள் பேசும் மொழியிலும் இருக்கின்றன. தமிழ் எழுத்தாளர்களுக்கு இதுபற்றி மிக்க பொறுப் தமிழுக்குத் தொண்டு செய்பவர்கள் இதில் கவனம் கோடிக் கணக்கான மக்கள் தினமும் திரைப்படம் பார்க்கச் செல்கின்றனர். அதைத் தடுக்க முடியாது. ஆதலின் சினிமாவின் தரம் உயரவேண்டும். நாடக மேடையில் சிறப்புப் புகழ்பெற்றவர்களைத் திரைப்படத்தில் நடிக்கச் செய்ய வேண்டும். அந்தக் காலத்தில் கிட்டப்பா, சுந்தராம்பாள் போன்ற பாடகர்களின் இனிமையான பாடல்களைக் கேட்கவே நாடகத்துக்குச் செல்வதுண்டு. ஆனால், தற்போது நல்ல பாட்டுக்களே சினிமாவில் கிடையா. இதழ் அசைவதற்கு முன்பாகவே 'இரவல் குரல்' ஒலிக்கிறது. திரைப்படத்தைக் கண்டித்து ராஜாஜி கூறுவதில் உண்மை இருக்கிறது."

கேடயம் பெற்ற புலவர் பெருமக்களைப் பாராட்டி, 'முத்தமிழ் வித்வகலா ரத்தின' திரு. ஔவை டி. கே. சண்முகம் அவர்கள் பேசியதன் சுருக்கம்:

"திரு. தெ.பொ. மீ. தமிழ் மரபில் தோன்றிய பெரியார். தமிழ்ப் புலவர்கட்குத் தம் இல்லத்திலேயே கல்வி பயிலுவித்து வந்தார். பல மொழிகளையும், வேதாந்தம், சித்தாந்தம் ஆகிய பலவற்றையும் கற்றறிந்தவர். நாட்டுப் பற்றிலும் [illegible] சிறை சென்றுள்ளார். திரு. கு. கோதண்டபா[illegible]ப பிள்ளையின் 'நெடுநல் வாடை', 'பழந்தமிழர் இசை' எனும் நூல்கள் நாம் பாராட்டற் குரியவை."

திரு. **நாரண துரைக்கண்ணன்** அவர்கள் வழங்கிய பாராட்டுரை :

"இத் தமிழ்ச் சங்கம் ஆண்டுதோறும் புலவர்களைப் பாராட்டி வருகின்றது. முதல் ஆண்டு, சொல்லின் செல்வர், டாக்டர், ரா. பி. சேதுப்பிள்ளை, வெ. சாமிநாத சர்மா ஆகியோரைப் பாராட்டியது. திரு. தெ. பொ. மீ. தண்டமிழ்த் தொண்டே தம் உயிர்த் தொண்டாகப் பேணினர். சட்ட வல்லுநர்கள் அறையிலும் தமிழ் நூலன்றி வேறு தொடார். படிப்புச் சுவையையும், பாநலம், பொருள்நலம் ஆகியவற்றையும் நன்கறிந்தவர். அவர் பல்லாண்டுக்காலம் வாழ இறைவனை வணங்கு[illegible]ன்."

'கலைமகள்' ஆசிரியர், திரு. **வா. சகந்நாதன்** அவர்கள் சொற்பொழிவின் சில பகுதிகள்:

"தமிழ் எழுத்தாளர்களிடையே விரிந்த உள்ளம் வேண்டும். தன் வீட்டு முல்லைமலர் மணத்தை உணருங்கால வேறு மலர்களை ஒதுக்கிவிடல் கூடாது. நந்தமிழ் மொழியினேடு பல மொழிகளையும் நாம் கற்றுணர்தல் சிறப்பு.

"சூடான வடை போன்றது மேடைப் பேச்சு; குளிர்ந்த தயிர்வடை போன்றது பழமை இலக்கியம். பழையவற்றை விடாது புதுமைப் பாதையில் நாம் முன்னேற வேண்டும். பழந்தமிழர் காதல் வாழ்வை இனிக்கச் செய்த அதே பழமைத் தென்றல், தற்காலத்தில் கடற்கரையில் இளங்காதலர் உள்ளங்களையும் கிளுகிளுப்பில் ஆழ்த்துகிறது. நமது பழமை பாசி பிடித்த பழமையன்று.

பத்திரிகை உலகு, பண்டிதர் உலகு, புலவர் நடை, கொச்சைநடை ஆகிய வேற்றுமைகள் தற்பொழுது மறைந்தமை கண்டு நான் பெருமகிழ் வெய்துகிறேன். தமிழ் உரம் பண்டை போரது அறிவின் உரத்தால் அமைந்தது. அதன் மலர்ச்சி சீரிய உரத்தைப் பொறுத்ததே. உரம் குறைந்த மலர்ச்சி காகித மலர் மலர்ச்சியே. நாவன்மையும், எழுத்து வன்மையும் ஒருங்கமைந்த

புலவர்கள் தற்காலம் உள்ளமை கண்டு மகிழ்கிறேன். தமிழின் வேர் அல்லது அடி விட்டம் மிக்கது. 'எத்தனை கோடி இன்பம் வைத்தாய் இறைவா' எனும் பாரதியாரின் சொற்களின் உண்மையை நாம் நன்கு உணரும் பேறு பெற்றுள்ளோம். திரு. வி. க. வைப்போன்று நாம் உலகக் குடிமகனாகத் திகழின், இந்தியக் குடிமகனாகவும், தமிழ்க் குடிமகனாகவும் திகழ்தல் விந்தையன்று. விரிந்த உள்ளம்கொண்டு, நாடு, ஊர், இல்லம் ஆகியவற்றைப் பேணவேண்டும். எழுத்தாளர் புலமை ஆழமும் அகலமும் ஒருங்கே அமைந்து திகழ்தல் வேண்டற்பாலது. பொதிகை மலையின் மீதிருந்து நாம் உலகை நோக்கி முன்னேற வேண்டும்; வீட்டின் ஒரு மூலையிலிருந்தன்று."

தமக்களிக்கப்பட்ட பாராட்டுரைகளுக்கு நன்றி தெரிவிக்கு முகத்தான் திரு. கு. **கோதண்டபாணிப் பிள்ளை** அவர்கள் பேசியதாவது:

"தெருவெல்லாம் தமிழ் முழக்கம் எனும் பாரதியாரின் சொற்கள் உண்மையாகத் திகழுகின்றன. மூலை முடுக்கெல்லாம் கூட இப்பொழுது தமிழ் முழக்கமே தமிழர் உள்ளத் துடிப்பாக இயங்குகிறது. 'ஐந்தின் வகைதெரிந்தான் கட்டே உலகு' எனும் தெய்வப் புலமைத் திருவள்ளுவரின் சொற்களுக்கிணங்க தற்பொழுது சிலரே உளர். ஒன்றின் வகை தெரிந்தாரும் ஒரு சிலரே. சிறிதாகச் செய்தாலும் பெரிதாகக்கொள்ளும் தமிழர் தம் விழுமிய பண்பினையே இப்பாராட்டு விளக்குகின்றது. மொழி, கலை ஆகியவற்றைக் காக்கவே எமக்கு இக்கேடயம் வழங்கப் பட்டுள்ளது என்று கருதுகிறேன்."

பேராசிரியர், திரு. தெ. பொ. **மீனாட்சிசுந்தரனார்** அவர்கள் நன்றி கூறுகையில் நவின்றதாவது:

"நான் எழுத்தை ஆளுபவனோ அன்றி எழுத்தை ஆளுபவரோ அல்ல. என்றும் எழுத்துக்கு அடிமையே என்று நான் காப்புக் கட்டிக் கொண்டு நெடுநாளாகி விட்டது. தமிழுக்கு ஊறு நேர்ந்தால், எல்லா எழுத்தாளர்களும் என்னுடன் தோளோடு தோள் நின்று தமிழ்மொழியைக் காக்க முன்வரவேண்டுமெனக் கேட்டுக் கொள்கின்றேன். எனக்கு வாள்தரப் படவில்லையே என்று வ[illegible]."

"குழந்தை தாய்ப்பாலை விரும்பினால், அதற்கு மாலையா போடவேண்டும்? தமிழ் என் தாய்மொழி; நான் தாய்ப்பால் குடிக்கும் நாள் முதற்கொண்டு நான் பேணும் தமிழை என்றென்றும் காப்பேன்."

மாநாட்டின் இரண்டாம்நாள் நிகழ்ச்சிகள் காலையும், மாலையும் நடைபெற்றன. 'இருபதாம் நூற்றாண்டில் தமிழ் வளர்ச்சி' என்பது குறித்துத் திரு. அகிலன் தலைமையில், திருவாளர்கள், எஸ். வி. சகச்ரநாமம், கிருஷ்ணசாமி ரெட்டியார், ந. சஞ்சீவி, சுகி சுப்பிரமணியம், அ. நடராசன், க. அறிவழகன், திருமதி வசுமதி இராமசாமி ஆகியோர் பேசினர். மாலையில், திரு. கா. அப்பாத்துரை தலைமையில் தமிழ் இலக்கியங்களை மலையாளத்தில் மொழிபெயர்த்துள்ள திரு. வென்னிக்குளம் கோபாலகுருப், தமிழ் இலக்கியங்களைத் தெலுங்கில் மொழிபெயர்த்துள்ள திரு. சல்லா இராதாகிருஷ்ண சர்மா ஆகிய இருவருக்கும் டாக்டர் யூ. கிருஷ்ணராவ் பதக்கங்கள் வழங்கினர்.

திரு. டாக்டர், யூ. கிருஷ்ணராவ் உரையாற்றியதாவது :

"நாம் நமது அண்டை மொழிகளான தெலுங்கு, மலையாளம், கன்னடம் எனும் மொழிகளையும் கற்றுணர்ந்து, அவற்றுடன் போட்டியிட்டுத் தமிழில் முன்னேறவேண்டும். உலக மொழியாக ஆங்கிலத்தையும், இந்திய மொழியாக இந்தியையும், மாநில மொழியாகத் தமிழையும் நாம் கொள்ள வேண்டும். தமிழ் எழுத்தாளர் சங்கம், பிறமொழிக் கலைஞர்களையும் பாராட்டுவது சிறப்பான ஒன்றாகும்."

திரு. சல்லா இராதாகிருஷ்ண சாமாவைப பாராட்டித ஓ. ரா. கிருட்டிணசாமி சொற்பொழிவாற்றியதாவது: "ஒரு மொழியினரை அம்மொழியினரே பாராட்டல் குடத்திலிட்ட விளக்குப் போன்றது ; தமிழ் மொழியை நன்முறையில் கற்று அதன் வளத்தைத் தெலுங்கர்கள் அறியுமாறு செய்துள்ள திரு. சர்மாவின் சேவை குன்றின்மேலிட்ட விளக்குப்போன்று திகழ்கின்றது. ஒப்பிலக்கணம் யாத்த கால்டுவெல் பெரியாருக்குப் பிறகு, திரு. சர்மா ஒப்பிலக்கணம் எழுதவேண்டும். தமிழரிடம் மொழிப்பற்று உண்டு; மொழிவெறி இல்லை. திரு. சர்மா, திருக்குறள், சிலப்பதிகாரம் ஆகியவற்றைத் தெலுங்கில் மொழிபெயர்த்துப் பெரும்பணி புரிந்துள்ளார்."

பாராட்டுக்கு நன்றி தெரிவித்துத் திரு. வென்னிகுளம் கோபாலகுருப் உரையாற்றியதாவது : "இப்பாராட்டு உங்களது சிறந்த மொழிப்பற்றையும், உலக நன்மைக்கு உழைக்கும் பண்பையும் விளக்குகின்றது. 'ஞானத்திலே, அன்னதானத்திலே சிறந்தது தமிழ் நாடு.' 'செந்தமிழ் நாடெனும் போதினிலே ஒரு சக்தி பிறக்குது மூச்சினிலே.' தமிழ் 'இனிமை' என்று பொருள்படும். செந்தமிழர் எல்லோரையும் வாழவைப்பர். 'குணமென்னும் குன்றேறி நின்றார்' என்னைப் பாராட்டுவது

கண்டு மகிழ்கிறேன். திருக்குறளும், கம்ப இராமாயணமும் தலைசிறந்தவை. தமிழ், மலையாளம், தெலுங்கு, கன்னடம் ஆகியவை ஒரே குடும்பம். தமிழும், மலையாளமும் பெரும்பாலான சொற்களைப் பொதுவாகக் கொண்டுள்ளன. திருவாங்கூர்ப் பல்கலைக் கழகத்தில், எம். ஏ. பட்டப்படிப்பில், வடமொழியைப் போல் ஒரு தென்னிந்திய மொழியைக் கற்றுத் தருவது பற்றி ஆராயப்படுகின்றது. வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து வான்புகழ் கொண்டது தமிழ் நாடு.''

திரு. **இராதாகிருஷ்ண சர்மா** உரையாற்றியதாவது: ''சிலப்பதிகாரம், மணிமேகலை, சீவக சிந்தாமணி போன்ற சீரிய காப்பியங்கள் வேறு மொழிகளில் இல்லை. மனு சாத்திரம், வசு சாத்திரம் எனும் நூல்கள் தமிழாக்கப் பெற்றுள்ளன.''

''தமிழ் நூல்களை வளர்ப்பதற்கு மேற்கொள்ள வேண்டிய வழிகள்'' என்பது குறித்துத் திரு. டாக்டர், **எஸ். ஆர். ரங்கநாதன்** உரையாற்றியதாவது:

''இயற்கை அறிவியல், சமுதாய அறிவியல் ஆகிய துறைகளில் தமிழ் நூல்கள் பெருமளவு வெளிவரல் இன்றியமையாதது. கவிதை, சிறுகதை, இலக்கணம், நாடகம், கட்டுரை, ஆராய்ச்சி ஆகிய இலக்கியத்துறையிலும், சமயம், தத்துவம் எனும் மனித இயல் துறையிலும் தற்பொழுது பல நூல்கள் உள்ளன. தற்காலத்தில் குழந்தை இலக்கியம் செழித்துத் தழைத்துத் திகழுதல் பெருமகிழ்வுக்குரியது. அடுத்த ஆண்டு மாநாட்டில், கணிதம் போன்ற இயற்கை அறிவியல் நூல்கள் பற்றிய சொற்பொழிவுகள் ஈண்டு நிகழ்த்தப்பெறும் என்று எதிர்பார்க்கிறேன். அரசினர் குழுக்கள் அமைத்து வலுக்கட்டாயமாக ஒரு மொழியை முன்னேற்ற முடியாது. மக்கள் உள்ளத்து உணர்வே மொழியின் முன்னேற்றத்துக்கு உறுதுணை பயக்கும். கடந்த காலத்தை விடத் தற்காலத்தில் படிப்பகங்களில் படிப்போர் எண்ணிக்கை கூடியுள்ளது. மக்கள் விரும்பும் பொருள்களிலேயே நூல்களைப் படைத்தல் எழுத்தாளரின் இன்றியமையாத கடன்.''

'தமிழிலக்கியம்' குறித்துத் திரு. **இரா. நெடுஞ்செழியன்** பேசியதாவது:

''ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம்
உயிரினும் ஓம்பப் படும்.''

மக்கட் பண்பின் சீர்மை அவர்தம் ஒழுக்கத்திலேயே அமைந்துள்ளது. ஓவியக்கலை, சிற்பக்கலை ஆகியவற்றுடன் ஒப்புநோக்கும்போது இலக்கியக் கலையே சிறந்தது. சிற்பக்கலை ஓர் உருவத்தில் ஒரு பண்பையே வெளிப்படுத்த முடியும். ஓவியக்

கலைஞனின் ஓவியம், பார்க்கப் பார்க்கச் சுவை குன்றும தனமை யது. இலக்கியக் கவிஞனோ, இயற்கை அழகைத் தன் சொற்களின் வழியாக வடித்து, மாந்தர்தம் உள்ளத்தில் உறையும் உணர்ச்சிகளையும் நன்கு வெளிப்படுத்துகிறான்.

"தமிழிலக்கியம் வாழ்க்கை இலக்கணத்தை நன்கு புலப்படுத்துகின்றது. குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை எனும் ஐவகை நிலங்களில் உறையும் மாந்தர்தம் குணநலன்களையும் தொழில்களையும், இயற்கை வளத்தையும் தமிழிலக்கியம் நன்கு விளக்குகின்றது. அறிவை அறிவதே அறிவியல்; உணர்ச்சிகளை வடிப்பது இலக்கியம். ஐம்புலன் இன்பங்களையும் தமிழிலக்கியம் நன்கு உணர்த்துகிறது. இலக்கிய இன்பம் நெடுநேரம் மக்களை இன்ப வெள்ளத்தில் திளைக்க வைக்கும்.

"யாமறிந்த மொழிகளிலே தமிழ் மொழிபோல் இனிதாவதெங்கும் காணோம்" என்றார் பாரதியார். தமிழ் வேர்ச்சொற்களைப் படைத்தது; அதில் பிறமொழிக் கலப்பு தேவையற்றது. காலமும், மக்கள் மன்றமும் தமிழின் சீர்மையை உறுதியாகப் பேணும்."

சென்னை மாகாணத்திற்குத் "தமிழ்நாடு" என்று பெயரிடும்படி மீண்டும் வேண்டி மாநாட்டில் ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

வெளிநாடுகளுக்கு அனுப்பி வைக்கப்படும் தூதுக் குழுக்களில் தமிழ் எழுத்தாளர்களைச் சேர்த்துக்கொள்ளுமாறும் தமிழ் எழுத்தாளர் சங்கத்தினரைக் கலந்து ஆலோசித்து அவர்களைப் பொறுக்குமாறும் மாகாண, இந்திய அரசுகளைக் கேட்டுக்கொண்டும் மற்றொரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

தமிழ்ப் பிரிவுகளை ஏற்படுத்தியுள்ள பல்கலைக் கழகத்தை மாநாடு பாராட்டியது. தரச் சிறப்பு வாய்ந்த தமிழ் நூல்களைத் தேர்ந்தெடுத்துப் பொதுவாசகசாலைகளுக்கும், பள்ளி வாசகசாலைகளுக்கும் வாங்கியளிக்குமாறு அரசினரைக் கேட்டு மாநாட்டில் இன்னுமொரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

நாவலர் சோமசுந்தர பாரதியார், டி. வி. சதாசிவ பண்டாரத்தார், மு. இராகவ ஐயங்கார், பேராசிரியர் சக்கரவர்த்தி, பாப்லி பாதிரியார், எஸ். எம். பாசில், பட்டுக்கோட்டை கலியாண சுந்தரம், வை. மு. கோதைநாயகி அம்மாள் ஆகியோர் மறைவுக்கு இரங்கல் தெரிவிக்கப்பட்டது.

# அகராதிகள்

(செல்வி சிலம்பு, ௩௫, பரல் ௨, ௧௨ ஆம் பக்கத் தொடர்ச்சி)

## 2. முதல் தமிழ் – ஆங்கில அகராதி

வீரமா முனிவர் சதுரகராதி இயற்றி ஏறத்தாழ ஐம்பது ஆண்டுகட்குப் பின்னர்த் தமிழ் மொழியில் முதன் முறையாக தமிழ் ஆங்கில அகராதி அச்சிடப் பெற்று வெளியாயிற்று. சதுரகராதி கி. பி. ௧௭௩௦ இல் இயற்றப்பெற்றிருப்பினும் ௧௮௨௪ இல் தான் அச்சிடப்பட்டது. ஆனால் இந்த முதல் தமிழ் ஆங்கில அகராதி கி. பி. ௧௭௭௯ இல் அச்சிடப்பெற்றுள்ளது. எனவே தமிழ் மொழியில் முதன்முதல் அச்சிடப்பெற்ற அகராதி இந்தத் தமிழ் ஆங்கில அகராதியேயாம்.

இவ் வகராதியின் பெயர் "தமிழும் இங்கிலேசுமாயிருக்கிற அகராதி" என்பது. இதை இயற்றியோர் இருவர். சான் பிலிப் பெப்ரிசியசு, சான் கிறித்தியன் பிரிதாப்ட் என்ற இருவரின் கூட்டுமுயற்சியிலேயே இந்நூல் உருவாயது. இவர்கள் இருவரும் செர்மானிய நாட்டைச் சார்ந்தவர்கள். கிறித்துவ மதத்தைப் பரப்புவதற்காக இந்தியாவிற்கு வந்தவர்கள். 'புரொடஸ்டன்ட்' மதக் குழுவைச் சார்ந்த இவர்கள் அம் மதத்தைப் பரப்புவதற்காக அயல்நாடுகள் பலவற்றினின்றும் வந்துள்ளோர்க்கு இந் நாட்டுமொழி புரியாதாகையால் அவர் களுக்கு விளங்கும் பொருட்டு இவ்வகராதியை இயற்றியுள்ளனர்.

'இவ்வகராதி இந்நாட்டில் வந்து பணியாற்றும் ஆங்கிலேயப் பெருமக்களுக்கும், வணிகருக்கும் இந்நாட்டு மக்களின் மொழியைப் பிறர் உதவியின்றி, புரிந்து கொள்ளப் பயன் தருவதாயிருக்கும்' என்று நூலின் முன்னுரையில் ஆசிரியர்கள் குறிப்பிட்டுள்ளனர். பெப்ரிசியசு கடன் தொகைக்காகச் சிறையில் அடைபட்டுக்கிடந்தபொழுது இவ்வகராதியை இயற்றினார். இதனால் வந்த ஊதியத்தைக்கொண்டு கடனைக் கொடுத்துச் சிறைமீண்டார். இவ்வகராதியுடன் தாம் இயற்றிய தமிழ் இலக்கணத்தையும் இணைத்துள்ளதாக முன்னுரையில் குறித் துள்ளார்.

இந்நூலின் முகப்புப் பக்கத்தில் உள்ள தலைப்பு வியப்பும், ஆராய்ச்சி செய்வதற்கு இடமும் தருவதாய் அமைந்துள்ளது. அது வருமாறு:

தமிழும இங்கிலேசுமாயிருககற

அகராதி

# A
# MALABAR and ENGLISH DICTIONRAY

**WHEREIN THE WORDS AND PHRASES**

**of the Tamulian Language, commonly called**

**by Europeans the Malabar Language,**

ARE EXPLAINED IN ENGLISH

By the English Missionaries of Madras

**1779**

(தொடரும்)

# செய்திகளும் குறிப்புக்களும்

## (க) அருவருப்புச் செய்திகளுக்குத் தடை

அருவருக்கத்தக்க முறையில் செய்திகளை வெளியிடுவதைத் தடை செய்யும் சென்னை அரசினரின் சட்டத் திருத்தத் திட்டப்படிக்கு இந்தியக் குடியரசுத்தலைவர் தம்முடைய இசைவை அளித்துள்ளார். இத்திட்டப்படியில் அச்சுறுத்தும் நோக்கத்துடன் அருவருக்கத்தக்க போக்கில் செய்திகளை எழுதுவதற்கும், வெளியிடுவதற்கும் முன்னிலும் கூடுதலான ஒறுப்புக்கு வகை செய்யப்பட்டுள்ளது. அத்தகு நூல்களை விற்பனை செய்வதற்கும் ஒறுப்பளிக்கச் சட்டத்தில் திருத்தம் செய்யப் பட்டுள்ளது.

மறுக்கத்தக்க செய்திகளுக்கு எதிர்ப்புத் தெரிவிக்க வகை செய்யும் 1951 ஆம் ஆண்டின் சட்டம் விலக்கப்பட்டதற்குப் பின்னர், அருவருக்கக் கூடிய வழியில் செய்திகளை எழுதுவதையும், வெளியிடு வதையும் தடுக்கச் சென்னை மாநிலத்தில் சட்டமில்லாத காரணத்தால் அத்தகு செய்திகளை வெளியிடும் செய்தி இதழ்கள் வாய்ப்பை நன்கு பயன்படுத்திக் கொண்டு சமூகத்தில் உயர்ந்த தரமுடையவர்களுக்கு எதிராகத் தவறான செய்திகளை எழுதி வெளியிடுவதில் தீவிரமாக ஈடுபட்டு வந்தன. ஒறுப்புக்குப் பின்பும் அவ்விழி தொழிலை அவை தொடர்ந்து செய்துவந்தன.

குடியரசுத் தலைவரின் இசைவைப் பெற்றுள்ள திட்டப் படியினால் இத்தகு குறைபாடுகள் தவிர்க்கப்படுதல் உறுதி. உயர்ந்த வாழ்வுடை யோரை அச்சுறுத்திப் பணம்பறிக்கும் கீழ்த்தொழில் நடத்துபவர் செய்தியிதழை அத்தொழிலுக்குரிய கருவியாக்கிக் கொண்டமையை உணர்ந்து அரசினர் இத்திருத்தத்தைக் கொணர்ந்தது மக்களால் போற்றி வரவேற்கப்படவேண்டிய வொன்றாகும். அருவருக்கத்தக்க செய்திகள் படிப்போருள்ளத்தையும் பாழ்படுத்தி வந்தன. அதுவும் இதனால் விலக்கப்பட்டமை அறிக. சமூகத்தின் கொடும்பகைவர்களான அக்கீழ் மக்கள் இனியேனும் திருந்துவார்களாக.

## (உ) அருவருக்கத்தக்க விளம்பரங்கள் ஒழிப்பு

நிலக்கொடை இயக்கத் தலைவர் வினோபாபாவே அவர்களின் விருப்பத்திற்கிணங்க, மக்களின் பார்வையை ஈர்த்து அவர்தம் உள்ளத்தைப் பாழ்படுத்தும் அருவருக்கத்தக்க மொழிகளையும், படங் களையுங்கொண்ட விளம்பரங்களையும், சுவரொட்டிகளையும் ஒழிக்கும் முயற்சியில் சர்வோதயத் தொண்டர்கள் சபல்பூர், இந்தூர் முதலிய பகுதிகளில் ஈடுபட்டிருத்தல் பாராட்டி வரவேற்கப்படவேண்டிய செய்தியாகும்.

இத்துறையில் திரைப்பட விளம்பரங்கள் செய்துவரும் தீங்கு களுக்கு அளவேயில்லை. ‘அருவருக்கத்தக்க காட்சிகள் வருவதால் திரைப்படத்திற்குச் செல்லுதல் கூடாது’ என்று உறுதி பூண்டிருப்ப வர்களின் கண்ணையும் கருத்தையும் கவர்ந்து கெடுதி செய்ய வல்லன வாய்த் திரைப்பட விளம்பரங்கள் உள்ளன. கீழ்த்தரமான பாலுணர்ச்சி யைத் தூண்டும் சுவரொட்டிகள் மக்கள் உள்ளத்தைக் கெடுப்பதுடன் நம் நாட்டின் பண்பாட்டிற்கே ஊறு விளைக்கின்றன.

பெண்களும் இப்பணியில் பங்கேற்று நாடோறும் அறப்போர் நடத்திவருவதாகத் தெரிகின்றது. சுவரொட்டிகளையும், விளம்பரங்களையும் அப்புறப்படுத்துமாறு வேண்டுவதும், உரியவர்கள் மறுத்தால் அவற்றைத் தாமே கிழித்துப்போடுவதும், தீக்கிரையாக்குவதும் அறப்போர் நடத்துவோர் மேற்கொண்டுள்ள வழிகளாம். நாடெங்கும் இவ் வறப்போர் நடைபெற வேண்டுமென நல்லோர் விழைதல் இயல்பே.

**(ங) இந்தியைப் புறக்கணிக்கலாகாது!**

"இருமொழிக் கொள்கையான ஆங்கிலத்தையும் இந்தியையும் ஏற்றுக்கொண்டால் இந்தியைப் புறக்கணிக்கலாம் என ஒருபொழுதும் எண்ணக்கூடாது. இரண்டு மொழியிலும் நல்ல புலமை பெறவேண்டும்" என்று நிதியமைச்சர் திரு. சி. சுப்பிரமணியம் கருத்துத் தெரிவித்தார்.

இரண்டு மொழியிலும் நல்ல புலமை பெறவேண்டும்,' என்று சொல்லுகிறபோது நமக்கென்று நம் தாய் மொழியாகிய தமிழ் ஒன்றும் உளது என்பதை அமைச்சர் அவர்கள் மறந்திருக்க முடியாது. ஆக, தமிழ்நாட்டு மக்கள் மூன்று மொழிகளைக் கற்றுப் புலமை பெற வேண்டும் என்றாகிறது. தாய்மொழியாகிய தமிழையே இன்னும் பிழையற எழுதமுடியாத வகையில் பயில்வோரும் பாடத்திட்டங்களுமிருக்கையில், தமிழல்லாத பிற இரு மொழிகளிலும் புலமை பெற வேண்டுமென்பது இயலாதவொன்றாகும். 'இந்தியைக் கட்டாயமாகக் கற்றுத்தான் ஆகவேண்டும்' என்று சொல்வதற்குப் பதில் அமைச்சர் அவர்கள் இந்தியைப் புறக்கணிக்கலாகாது என்று கூறியுள்ளார்.

உலக அறிவைப் பெறுவதற்கும், தமிழக எல்லையைத் தாண்டியுள்ள பகுதிகளோடு தொடர்புகொள்ளுவதற்கும் பொதுமொழியான ஆங்கிலத்தையும், தமிழகத்திற்குள்ளே எல்லாத் துறைகளுக்கும் தமிழினையும் கொண்டால் போதுமானதெனக் கருத்துத் தெரிவிக்காத அறிஞர்களே இலர். இருந்தும் மைய அரசினருக்காகப் பரிந்துகொண்டு தமிழைக் காக்கும் பொறுப்பிலிருப்போர் இந்தியைப் புகுத்தும் முயற்சியிலீடுபடுதல் நம் பேற்றுக் குறைவேயாகும்.

**(ச) புதிய அமெரிக்கக் குடியரசுத் தலைவர்**

அமெரிக்காவின் புதிய குடியரசுத் தலைவராகச் சனநாயகக் கட்சி உறுப்பினர் ஜான் கென்னடி தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளார். தேர்தலில் அவருக்கு எதிராகப் போட்டியிட்ட குடியரசுக் கட்சி உறுப்பினரும் தற்போதையக் குடியரசுத் துணைத்தலைவருமான நிக்சன் தோல்வியுற்றார். 43 வயதான கென்னடி சனவரித்திங்கள் பதவி ஏற்பார். 20 ஆம் நூற்றாண்டில் பிறந்த ஒருவரும், வெள்ளை மாளிகைக்குக் குடியரசுத் தலைவராக வரும் முதல் கத்தோலிக்கரும் இவரே.

புதியக் குடியரசுத் துணைத்தலைவராகச் சனநாயகக் கட்சியின் முக்கியத் தலைவர்களில் ஒருவரான **ஜான்சன்** வெற்றிபெற்றுள்ளார்.



திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை, 2-140, பிராட்வே, அப்பர் அச்சகத்தில், திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர்: வ. சுப்பையா.

## திரு. மீ. ப. சோமுவுக்கு வரவேற்பு — 14-11-'60



செயலாளர், திரு. வ. சுப்பையா அவர்கள் அனைவரையும் வரவேற்றுப் பேசுதல்.



டாக்டர், அ. சிதம்பரநாதன் அவர்கள் தலைமையில் திரு. மீ. ப. சோமு அவர்கள் தம்முடைய மேலை நாட்டு அனுபவங்களை எடுத்துரைத்தல்.




| சிலம்பு ௩௫ | திருவள்ளுவர் ஆண்டு ௧௯௯௧, கார்த்திகை<br>திசம்பர், 1960 | பரல் ௪ |
| --- | --- | --- |

# பிறப்புத் துன்பம் பேசொணுப் பெருந்துன்பம்

அளவிலா ஆருயிர்கள் உய்தற்பொருட்டு இறைவன் முதற்கண் உயர்நிலை யுலகத்துள்ளாரைப் பயிற்றி அவரைக்கொண்டு நம்மைப் பயிற்றுவித்தருளுகின்றனன் என்பதாம். இதுபோல் நம்முள்ளும் முற்பயின்றாரைக் கொண்டு ஏனையாரை எல்லாத்துறைகளிலும் எஞ்ஞான்றும் யாண்டும் எழிலுற இடையறாது நடைமுறைப் பயிற்சியாகப் பயிற்றுவித்து நலமுறுத்தியருளுகின்றனன். இதுவே இறைவன்றன் நீங்கா நிலையுண்மையாகும். நீங்கா நிலையெனினும், உண்மை நிலையெனினும் ஒன்றே. இதனைச் சொரூப நிலையெனவுங் கூறுப; இவ்வுண்மை வருமாறு:

"சிவனரு வுருவு மல்லன் சித்தினோ டசித்து மல்லன்
பவமுதற் றொழில்க ளொன்றும் பண்ணிடு வானு மல்லன்
தவமுத லியோக போகந் தரிப்பவ னல்லன் றானே
யிவைபெற வியைந்து மொன்று மியைந்திடா வியல்பி னானே."

—சிவஞானசித்தியார், ௧. ௩ - ௧௧.

இவ்வுண்மைகளை நினைவுகூற ஒரு வெண்பாவில் தருகின்றாம்:

மேலாம் உயிர்வழியாய் மெய்ப்பொருளும் தாழ்வுயிர்க்கு
மேலாம் அருள்வரையும் மேவுவிக்கும்—நூலாலும்
கட்டொன் றிரண்டுடையார் காண்டும் இயற்கையிலும்
கட்டகன்றும் ஆம்சிறப்பாற் காண்.

மன்பதைத் தொகுதி எண்ணில வென்னும் உண்மை செல்வி, சிலம்பு ௩௫. பரல் ௧ பக்கம் ௨ இல் காணப்பெறும் "உரை சேருமெண்பத்து" எனத் தொடங்கும் திருமாமறையா னுணர்க.

இவ்வுயிர்கட்கு மலமாகிய இருள் நீக்கத்தின் பொருட்டு மாயாகாரிய உலகுடலாம் மருளினை விழுமிய முழுமுதலிறைவன் பேரருளால் படைத்துக் கூட்டியருள்கின்றனன். இக்கூட்டுவித்தலையே படைத்தலென்பர். இக்கூட்டுவித்தலால் ஏற்படுவதே ஆருயிர்கட்குப் பிறப்பு. இவற்றைப் பிரிவிப்பதால் ஏற்படுவதே இறப்பு.

ரக்குத் தொன்மைப்பிறப்பு வந்தவாறு வருமாறு காண்க: மெய்கண்டான் தமிழாகிய செந்தமிழ்ச் சிவஞான போதம் மெய்ப்பொருளை நம்புக எனக் கூறியமையாது, பிள்ளையைக் கொண்டு பெற்றோரையும், மாணவரைக்கொண்டு ஆசிரியரையும், செயப்படு பொருளைக்கொண்டு செய்வோரையும் உணர்வது போன்று காணப்படுங் காரியத்தைக்கொண்டு கருதப்படுங் காரணவுண்மையை உணரச் செய்வது. எனவே இஃதும் இதனையொத்த மெய்ம்மைத் தமிழ்நூல்கள் மட்டுமே அளவை முறைப்படி ஆய்வுக்கு இடந்தருவனவாகும். அவற்றுள் இவை சிறப்பன. இவையே மெய்ம்மைச் செந்தமிழ்ப் பொதுமறையாம் திருக்குறட்பாக்களுக்கு அமைவுடைய என்க. அவை வருமாறு:

“ எப்பொரு ளெத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு.” —திருக்குறள், ௩௫௫.

“ எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு.” — ,, ௬௨௩.

“ அஃது அங்ஙனமாக; முதலுற்பவம் வருமாறுணர்த்தாது புனருற்பவம் வருமாறுணர்த்துவது என்னையெனின், - பிரபஞ்சம் அநாதியாகலின், அம்முதற்கோடி நம்மனோரான் அறிய வாராமையானும், ஒடுங்கியின் மீள உளதாமாறே ஈண்டு அவாய் நிலையான் உணர்த்த நின்றதாகலானும் அதுவே கூறினாரென்பது. அற்றாயினும், முதற்கணுற்பவமாமாறு இவ்வியல்பிற்றென்பது” எனச் சிவஞானமுனிவரனார் வருமாறு கூறியருளினர்.— சிவஞானபோதம், உ. சூத்திர விரிவுரை.

“ பூமன்னு...
ரு. பல்லுயிர்வெவ் வேறு படைத்து மவைகாத்து
மெல்லை யிளைப்பொழிய விட்டுவைத்துந்—தொல்லையுறு
மந்த மடிநடுவென் றெண்ண வளவிறந்து
வந்த பெரிய வழிபோற்றி—முந்துற்ற
நெல்லுக் குமிதவிடு நீடுசெம்பிற் காளிதமுந்
தொல்லைக் கடன்மேன்றத் தோன்றவரு—மெல்லா
மொருபுடையொப் பாய்த்தா னுள்ளவா றுண்டா
யருவமா யெவ்வுயிரு மார்த்தே—யுருவுடைய

மாமணியை யுள்ளடக்கு மாநாகம் வன்னிதனைத்
தானடக்குங் காட்டத் தகுதியும்போன்—ஞானத்தின்
௧௦. கண்ணை மறைத்த கடியதொழி லாணவத்தா
லெண்ணுஞ் செயல்மாண்ட வெவ்வுயிர்க்கு—முண்ணுடிக்
கட்டிஞற் காணூர்தங் கைக்கொடுத்த கோலேபோற்
பொற்புடைய மாயைப் புணர்ப்பின்கண்—முற்பாற்
றநுகரண மும்புவன முந்தந்த வற்றுன்
மனமுதலால் வந்தவிகா ரத்தால்—வினையிரண்டுங்
காட்டி யதனுற் பிறப்பாக்கிக் கைக்கொண்டு
மீட்டறிவு காட்டும் வினைபோற்றி—நாட்டுகின்ற
வெப்பிறப்பு முற்செய் இருவினையா னிச்சயித்து."
—போற்றிப்பஃறொடை, ௬ - ௧௪.

மேற்போந்தவாற்றான் புரியட்டக வடிவாகிய நுண்ணுடற் பிறப்பு ஓரறிவுமுதல் ஆறறிவு ஈருகிய ஆருயிர்கட்கும், தேவர் முதலாகிய சிற்றுயிர்கட்கும் எவ்வகை வேறுபாடுமின்றி ஒன்று போன்றமைந்ததேயாம். இப்பிறப்பினையே திருவள்ளுவ நாயனுர் 'பிறப்பொக்கும் எல்லா வுயிர்க்கு' மென்றருளினர். உயிர்க்கு நுண்ணுடலடைந்ததும் அதனைப் பிணித்துள்ள மலவாற்றலுக்குத் தக்கவாறு மனம் வினைபுரிய வேட்டு முனையும். அதுவே மேலெடுத்துக்காட்டின்கண் "மனமுதலாய் வந்த விகாரத்தால்" என்று ஓதப்பட்டுள்ளது. அதற்காகக் கொடுக்கப் படும் பருவுடற் பிறப்பே வினைக்கேதுவாம் பிறப்பாகும். பின்னர்த் தொடர்ந்துவரும் பிறப்பனைத்தும் செய்தவினையின் பயனுக்கீடாக நேரும் பிறப்பாகும். இப்பிறப்பே ஒன்ருெடொன்ருெவ்வாச் சிறப்புப் பிறப்பாகும். பசி அனைத்துயிர்க்கும் ஒன்றே. அதன் பொருட்டு உணவினை உட்கொள்ளும் வழியாகிய வாயமைப்பும் ஒன்றே. ஆனுல் உண்ணும் முறையில் பெரிதும் வேறுபாடுடைமை காணுதும். மக்களாகிய நமக்கும், யானை, குரங்கு, அணில், எலி முதலிய சிற்றுயிர்கட்கும் இருகை அமைந்துள்ளன. கையுள்ள நாமும் பிறவும் கையாலெடுத்துண்ணக் காண்கிறேம். இதுவே செய்தொழிற் சிறப்பாகும். கையுள்ள நாம் கடவுளையும் பெரியாரையும் தொழுகின்றேம். இது சிறப்பிற் சிறப்பாகும்.

இவ்வுண்மை கையுள்ள யானையும் அஃறிலாச் சிலந்தியும் சிவ பெருமானை வழிபட்ட வியல்பாற் றெரியலாம். அவை வருமாறு:

"அப்பூங் காவில் வெண்ணுவ லதன்கீழ் முன்னுள் அரிதேடும்
மெய்ப்பூங் கழலார் வெளிப்படலு மிக்க தவத்தோர் வெள்ளானை
கைப்பூம் புனலு முகந்தாட்டிக் கமழ்பூங் கொத்து மணிந்திறைஞ்சி
மைப்பூங் குவளைக் களத்தாரை நாளும் வழிபட் டொழுகுமால்."
—௧௨. கோச்செங்கட் - ௨.

இவ்வியானை முற்பிறப்பில் மக்களாய்த் தோன்றித் தவம் புரிந்திருத்தல் வேண்டும். அதனாலேயே இப்பிறப்பில் வழிபடும் அன்புத் தொடர்ச்சி வாய்த்துள்ளதென்க. அக்குறிப்பு, 'மிக்க தவத்தோர் வெள்ளானை' என்பதனாற் பெறப்படும். இதுபோன்றே ஏனைச் சிற்றுயிர் வழிபாட்டினைத்திற்குங் கொள்க. அவ்வுண்மை "மானுடப் பிறவி தானும் வகுத்தது மனம்வாக் காயம், ஆனிடத் தைந்து மாடும் அரன்பணிக் காக வன்றோ" என்னும் சிவஞான சித்தியார்த் திருப்பாட்டானுமுணர்க.

"ஆன செயலாற் றிருவானைக் காவென் றதற்குப் பெயராக
ஞான முடைய வொருசிலந்தி நம்பன் செம்பொற் றிருமுடிமேற்
கானல் விரவுஞ் சருகுதிரா வண்ணங் கலந்த வாய்நூலான்
மேனற் றிருமேற் கட்டியென விரிந்து செறியப் புரிந்துளதால்."
—கஉ. கோச்செங்கட். ரு.

சிலந்திக்கு யானையைப் போன்று கையின்மையான் வாயின் நூலாற் பந்தரியற்றியதென்க. மேற்போந்த திருக்குறள் வருமாறு:

"பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான்." —திருக்குறள், கஎஉ.

ஈண்டோதப்படுந் தொழில் செய்யப்பட்டுள்ள நல்வினை தீவினைப்பாகுபாடாகிய தொழிலன்று. அப்பாகுபாடு வருந் திருக்குறளாற் பெறப்படும். மேலும் இதன்கண் 'எல்லா வுயிர்க்கும்' என அஃறிணை வாய்பாட்டாற் கூறியிருப்பது நோக்குக. வருந் திருக்குறளில் 'தெரிந்து தெளிதற்' காம் உயர் வாய்பாட்டாற் கூறியிருப்பதுங் காண்க:

"பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்குந் தத்தங்
கருமமே கட்டளைக் கல்." —திருக்குறள், ௫0௫.

மேற்கூறியவாறுள்ள ஆருயிர்கள் ஈண்டுப் புரியும் நல்வினை களுக்கு ஈடாகிய இன்பத்துன்பப் பயன்களை வேந்தனால் எய்தும். அஃது ஒரு வேளை எக்காரணத்தாற் றவறினும் இரு விசும்புப் பகுதியாகிய ஒளியுலகு இருளுலகுகளில் தவறாது அவ்வப்பயனை எய்தும். இவ்வுண்மை வரும் [illegible] நியார் திருப்பாட்டுக்களா னுணர்க:

"ஆணையா லவனி மன்ன னருமறை முறைசெய் யாரை
யாணையிற் றண்டஞ் செய்து மருஞ்சிறை யிட்டும் வைப்பன்
ஆணையின் வழிசெல் வோருக் கரும்பதி செல்வ நல்கி
ஆணையும் வைப்பன் எங்கு மாணையே யாணை யேகாண்."

"அரசனுஞ் செய்வ தீச னருள்வழி யரும்பா வங்கள்
தரையுளோர் செய்யிற் றீய தண்டலின் வைத்துத் தண்டத்

துரைசெய்து தீர்ப்பன் பின்பு சொல்வழி நடப்பர் தூயோர்
நிரயமுஞ் சேரா ரந்த நிரயமுன் னீர்மை யீதாம்."

—உ. உ - உஅ, உ௯.

உரை செய்து - எடுத்துச் சொல்லி. துரைசெய்து எனக்கொள்ளின்; துரை - மிகுதிப்பாடு.

இதற்குரிய சிவஞான முனிவரனுர் பொழிப்புரை வருமாறு :

"அரச தண்டம் வைத்தது, நரகதண்டம் வாராமற் பாதுகாத்தற் பொருட்டாகலானும், நரக தண்டத்தை அறிவுறுத்தற் பொருட்டாகலானும், அவ்வரசனுணையும் முதல்வன் ஆணையின் வழித்தாவதன்றிச் சுதந்திர மன்று."

"பாவஞ் செய்யிற் றண்டலின் வைத்துத் தண்டத்துரை செய்து தீர்ப்பன்; நிரய முன்னீர்மை யீதாமெனவே, புண்ணியஞ் செய்யின் அதற்குரிய வரிசையின் வைத்துத் தீர்ப்பன்; அந்தத் துறக்க முன்னீர்மை யீதாமென்ப தூஉம் பெற்ரும்."

இத்தண்ட முறையினை வரும் திருமாமுறையானு முணர்க :

"நாடி நாரண னுன்முகன் வானவர்
தேடி யேசற வுந்தெரி யாததோர்
கோடி காவனைக் கூருத நாளெல்லாம்
பாடி காவலிற் பட்டுக் கழியுமே."

—ரு. எஅ - சு.

மெய்கண்டான் தமிழாகிய சிவஞானபோதம் இரண்டாம் நூற்பா இரண்டாங்கூற் றேதுவின்கண் பாடிகாவற்சொற் பயின் றுள்ளது வருமாறு :

"ஒரு நகரியைக் காப்பான் பாடிகாவலிட்டாங்கு அவை அவனதாக்கினை யாகலான்."

"இதை விளக்கும் முனிவரனுர் பேருரை வருமாறு: 'பாடி காவல்' என்பது நெறியின் வழீஇயினுரை வழக்கு வினுய் ஒப்ப நாடிச் செய்யுந் தண்டத் தொழிலுணர்த்துவதோர் சொல்."

வரும் திருப்பாட்டுக்களான் ஈண்டுச் செய்யப்படும் இருவினைகட் கீடாகச் செய்தவுயிர்கள் அவற்றின் பயனை எய்தும் இன்பத்துன்ப வுலகங்களின் இருப்புணர்க :

"மங்குறோய் மணிமாட மதிதவழு நெடுவீதிச்
சங்கெலாங் கரைபொருது திரைபுலம்புஞ் சாய்க்காட்டான்
கொங்குலா வரிவண்டின் னிசைபாடு மலர்க்கொன்றைத்
தொங்கலான் அடியார்க்குச் சுவர்க்கங்கள் பொருளலவே."

—உ- ௪௧ - எ.

**சுவர்க்கம் -** ௧௨

“ அண்டர் வாழ்வு மமர ரிருக்கையும்
கண்டு வீற்றிருக் குங்கருத் தொன்றிலோம்
வண்டு சேர்மயி லாடு துறையரன்
தொண்டர் பாதங்கள் சூடித் துதையிலே.” —தி. ௩௪ - ௩.

“ மூவேழ் சுற்ற முரணுறு நரகிடை
ஆழா மேயரு ளரசே போற்றி.” —தி. போற்றி. ௧௧அ, ௯

“ நரகொடு சுவர்க்கம் நானிலம் புகாமல்
பரகதி பாண்டியற் கருளினை போற்றி ” —௨௧௩, ௪

“ கொள்ளேன் புரந்தரன் மாலயன் வாழ்வு குடிகெடினும்
நள்ளேன் நினதடி யாரொடல் லால்நர கம்புகினும்
எள்ளேன் திருவரு ளாலே யிருக்கப் பெறினிறைவா
உள்ளேன் பிறதெய்வம் உன்னையல் லாதெங்கள் உத்தமனே.”
—தி. திருச்சதகம், ௨

“ வேலைமலி தண்கானல் வெண்காட்டான் திருவடிக்கீழ்
மாலைமலி வண்சாந்தால் வழிபடுநன் மறையவன்தன்
மேலடர்வெங் காலனுயிர் விண்டபினை நமன்றூதர்
ஆலமிடற் றானடியா ரென்றடர வஞ்சுவரே.” — ௪அ -

“ நீற்றினை நிறையப் பூசி நித்தலு நியமஞ்செய்து
ஆற்றுநீர் பூரித்தாட்டு மந்தண னாரைக் கொல்வான்
சாற்றுநா ளற்றதென்று தருமரா சற்காய்வந்த
கூற்றினைக் குமைப்பர் போலும் குறுக்கைவீ ரட்ட[illegible]ா.”
—௪. ௪.௯- ௨.

“ கார்கொள் கொன்றைக் கடிமலர்க் கண்ணியான்
சீர்கொள் நாமஞ் சிவனென் றரற்றுவார்
ஆர்க ளாகிலு மாக வவர்களை
நீர்கள் சாரப் பெறீரிங்கு நீங்குமே.” ௯௨ - ௩.

“ சாற்றி னேன்சடை நீண்முடிச் சங்கரன்
சீற்றங் காமன்கண் வைத்தவன் சேவடி
ஆற்ற வுங்களிப் பட்ட மனத்தராய்ப்
போற்றி யென்றுரைப் பார்புடை போகலே.” ௪.

[illegible]வ [illegible]வேறுலகங்களும் உயிர்க்குயிராம் உடையான் மருத்துவ முறையினின்று ஆவிகளின் உயிர்களைப் பிணித்துள்ள அறம் பாவங்கள் என்னும் நோய்களுக்கு மருந்தாக நல்குவன வாம்; அவ்வுண்மை வருமாறு :

"அருளினு லுரைத்த நூலின் வழிவாரா ததன்மஞ் செய்யின்
இருளுலா நிரயத் துன்பத் திட்டிரும் பாவந் தீர்ப்பன்
பொருளுலாஞ் சுவர்க்க மாதி யோகத்தாற் புணியந் தீர்ப்பன்
மருளுலா மலங்கள் தீர்க்கு மருந்திவை வயித்திய நாதன்."
—யார், உ. உ. ௩௦.

"கொல்லிடு குத்தென்று கூறிய மாக்களை
வல்லடிக் காரர் வலிக்கயிற் றாற்கட்டிச்
செல்லிடு நில்லென்று தீவாய் நரகிடை
நில்லிடும் என்று நிறுத்துவர் தாமே." —௧௦. உ௪௦.

"பொல்லாப் புலாலை நுகரும் புலையரை
எல்லாருங் காண இயமன்றன் தூதுவர்
செல்லாகப் பற்றித் தீவாய் நரகத்தில்
மல்லாக்கத் தள்ளி மறித்துவைப் பார்களே." — ,, உ௪உ.

துறக்கத்தும் நரகத்தும் இன்பத்துன்பங்கள் அடைந்தாலும் எஞ்சியவற்றின் பொருட்டு, இவ்வுலகிடைப் பிறந்து இன்பத் துன்பங்கள் நுகர்தலும் உண்டு. துறக்க நிரயங்களில் நுகர்வது அவ்வவ்வுயிர்களின் நினைவோடாகும். அம்மட்டுமன்று, நுகர்விப் போரும் நுவன்று நுகர்விப்பர். அவ்வுண்மை செந்தமிழ்ச் செல்வி சிலம்பு ௩௫. பரல் உ. (பக்கம் ௫௪) இல் காண்க.

ஈண்டு நுகர்விப்பது அவ்வவ்வுயிர்களுக்கு நினைவின்றியும் நேர்ந்துரைப்பாரின்றியுமாகும். அங்ஙனமாயினும் உலகிடைக் காண்பார் இவ்வின்பத்துன்பங்கள் பண்டைப் பழவினைப் பயன் எனக் கண்டுங் கேட்டுங் கூறியுணர்த்துவர். இம்மைக்கண் வருவன வருமாறு:

"பந்தித்த பாவங்க ளம்மையிற் செய்தன இம்மைவந்து
சந்தித்த பின்னைச் சமழ்ப்பதென் னேவர் தமரர்முன்னாள்
முந்திச் செழுமல ரிட்டு முடிதாழ்த் தடிவணங்கும்
நந்திக்கு முந்துற வாட்செய்கி லாவிட்ட நன்னெஞ்சமே."
—௪. ௧௧௪ - ௪.

"எய்ந்தறுத் தாயின்ப ளுயிருந் தேபடைத் தான்தலையைக்
காய்ந்தறுத் தாய்கண்ணி னுலன்று காமனைக் காலனையும்
பாய்ந்தறுத் தாய்பழ னத்தர சேயென் பழவினைநோய்
ஆய்ந்தறுத் தாயடி யேனைக் குறிக்கொண் டருளுவதே."
—௪. ௮௭ - ௬.

"தன்னைச் சரணென்று தாளடைந் தேன்றன் னடியடையப்
புன்னைப் பொழிற்புக லூரண்ணல் செய்வன கேண்மின்களே
என்னைப் பிறப்பறுத் தென்வினைக் கட்டறுத் தேழ்நரகத்
தென்னைக் கிடக்கலொட் டான்சிவ லோகத் திருத்திடுமே."
—௪. ௧௦௬ - ௧.

" விண்ட மாமலர் மேலுறை வானொடும்
கொண்டல் வண்ணனுங் கூடி யறிகிலா
அண்ட வாணன்ற னொரு ரடிதொழப்
பண்டை வல்வினை நில்லா பறையுமே." —௫. எ - கக.

" முன்னை நான்செய்த பாவ முதலறப்
பின்னை நான்பெரி தும்மருள் பெற்றது
அன்ன மார்வயற் கோழம்பத் துள்ளமர்
பின்னல் வார்சடை யானைப் பிதற்றியே." —௫. சுச - எ.

" உண்ணாமை யுள்ள துயிர்நிலை ஊனுண்ண
அண்ணாத்தல் செய்யா தளறு." —திருக்குறள், உருரு.

அளறு - நரகம்.

" ஒருமைச் செயலாற்றும் பேதை எழுமையும்
தான்புக் கழுந்து மளறு." —அ௩௫.

" வரைவிலா மாணிழையார் மென்றோள் புரையிலாப்
பூரியர்க ளாழும் அளறு."

" அடக்கம் அமரரு ளுய்க்கும் அடங்காமை
ிருள் உய்த்து ம.' — ,, கஉக.

ள் - நரகம். க ஆயவாளா இருட்பகுதி
எனப வ.

" சிறப்பொடு பூசனை செல்லாது வானம்
வறக்குமேல் வானோர்க்கும் ஈண்டு." — ,, கஅ.

வானோர்கள் இந்நிலவுலகத்து வந்து முழுமுதற் சிவ பெருமானைச் சிறப்பொடு வழிபாடு செய்வர். அப்பொழுது அவர்க்கும் பூவும் புனலும் இன்றியமையாது வேண்டப்படுவன. அதனால் அவர் நாட்டு ஊண் உறக்கமின்றி வாழும் அவர்க்கும் ஈண்டுச் செய்யும் வழிபாட்டின் பொருட்டு மழை வேண்டுதலால் அவர்க்கும் இன்றியமையாமை ஓதப்பட்டது.

அவர் ஈண்டுவந்து வழிபடுமுண்மை வருமாறு காண்க:

" மானுடப் பிறவி தானும் வகுத்தது மனம்வாக் காயம்
ஆனிடத் தைந்து மாடு மரன்பணிக் காக வன்றோ
வானிடத் தவரு மண்மேல் வந்தரன் றனையர்ச் சிப்பர்
ஊனெடுத் துழலு மூம ரொன்றையு முணரா ரந்தோ."
—சிவஞானசித்தியார், உ. ச - உ0.

வானோர் வழிபட்டமை அவரால் நிறுவப்பட்ட திருக் கோவில்களின் திருப்பெயர்களான் விளங்கும். அவை வருமாறு:

"பிறப்போ டிறப்பென்று மில்லா தான்காண்
பெண்ணுருவோ டாணுருவு மாயி னான்காண்
மறப்படுமென் சிந்தைமறு வாக்கி னான்காண்
வானவரு மறியாத நெறிதந் தான்காண்
நறப்படுபூ மலர்தூபந் தீப நல்ல
நறுஞ்சாந்துங் கொண்டேத்தி நாளும் வானோர்
சிறப்போடு பூசிக்குந் திருவா ரூரிற்
றிருமூலட் டானத்தெஞ் செல்வன் றானே." —௬. ௩௦. ௫.

"அணையலை சூழ்கட லன்றடைத் துவழி செய்தவன்
பணையிலங் கும்முடி பத்திறுத் தபழி போக்கிய
இணையிலி யென்றுமி ருந்தகோ யிலிரா மேச்சுரம்
துணையிலி தூமலர்ப் பாதமேத் தத்துயர் நீங்குமே."—௩. ௧௦ - ௬.

"தோடுடையசெவி யன்விடையேறியோர் தூவெண்மதிசூடிக்
காடுடையசுட லைப்பொடிபூசியென் னுள்ளங்கவர்கள்வன்
ஏடுடையமல ரான்முனைநாட்பணிந் தேத்தவருள்செய்த
பீடுடையபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே." —௧. ௧ - ௧.

"புத்தரும் புந்தியிலாத சமணரும் பொய்ம்மொழி யல்லால்
மெய்த்தவம் பேசிட மாட்டார் வேடம் பலபல வற்றால்
சித்தருந் தேவருங் கூடிச் செழுமலர் நல்லன கொண்டு
பத்தர்க டாம்பணிந் தேத்தும் பாண்டிக்கொடுமுடி யாரே."
—௨. ௬௬ - ௧௦.

"தாழ்வீழ்வார் மென்றோட் டுயிலி னினிதுகொல்
தாமரைக் கண்ணா னுலகு." —திருக்குறள் ௧௧௦௩.

"செய்குவங் கொல்லோ நல்வினை யெனவே
ஐய முறாஅர் கசடீண்டு காட்சி
நீங்கா நெஞ்சத்துத் துணிவில் லோரே
யானை வேட்டுவன் யானையும் பெறுமே
குறும்பூழ் வேட்டுவன் வறுங்கையும் வருமே
அதனால், உயர்ந்த வேட்டத் துயர்ந்திசி னோர்க்குச்
செய்வினை மருங்கி னெய்த லுண்டெனிற்
றொய்யா வுலகத்து நுகர்ச்சியுங் கூடும்
தொய்யா வுலகத்து நுகர்ச்சி யில்லெனின்
மாறிப் பிறப்பி னின்மையுங் கூடும்
மாறிப் பிறவா ராயினு மிமயத்துக்
கோடுயர்ந் தன்ன தம்மிசை நட்டுத்
தீதில் யாக்கையொடு மாய்தறவத் தலையே."—புறநானூறு; ௨௧௪.

தொய்யாவுலகம் - துறக்க வுலகம்; உயர்நிலை யுலகம்; மேலுலகம்; சுவர்க்கம். இப்பாட்டின்கண் ஆருயிர்கட்கு

வினைக்கீடாகப் பல்பிறப்புண்டாதலும் மேனுலகங்களில் வாழ்த லும் பிறவும் காணப்படுவன காண்க.

" இளமை கைவிட்ட டகறலு மூப்பினார்
வளமை போய்ப்பிணி யோடு வருதலால்
உளமெ லாமொளி யாய்மதி யாயினான்
கிளமை யேகிளை யாக நினைப்பனே." —ஞி. கஎ-உஅ.

" பிறப்பு மூப்புப் பெரும்பசி வான்பிணி
இறப்பு நீங்கியிங் கின்பம்வந் தெய்திடும்
சிறப்பர் சேறையுட் செந்நெறி யான்கழல்
மறப்ப தின்றி மனத்தினுள் வைக்கவே." —ஞி. எஎ-ங.

" பிறத்தலும்பிறந் தாற்பிணிப்பட வாய்ந்தசைந்துட
லம்பு குந்துநின்
றிறக்குமா றுளதே
யிழித்தேன் பிறப்பினைநான்
அறத்தையேபுரிந் தமனத்தனு யார்வச்செற்றக்கு
ரோத நீக்கியுன்
திறத்தனு யொழித்தேன்
றிருவாரூ ரம்மானே." —சு. உ0-அ.

" பாலனய்க் கழிந்தநாளும் பனிமலர்க் கோதைமார்தம்
மேலனய்க் கழிந்தநாளும் மெலிவொடு மூப்புவந்து
கோலனய்க் கழிந்தநாளும் குறிக்கோளி லாதுகெட்டேன்
சேலுலாம் பழனவேலித் திருக்கொண்டீச் சரத்துளானே." —சு. சுஎ-க.

" பிறவியால் வருவன கேடுள வாதலாற் பெரிய வின்பத்
துறவியார்க் கல்லது துன்பநீங் காதெனத் தூங்கினுயே
மறவனீ மார்க்கமே நண்ணினுய் தீர்த்தநீர் மல்கு சென்னி
அறவனு ரூர்தொழு துய்யெலா மையல்கொண் டஞ்சல் நெஞ்சே." —உ. எக-ஞி.

" வளைத்துநின் றைவர் கள்வர் வந்தெனை நடுக்கஞ் செய்யத்
தளைத்துவைத் துலையை யேற்றித் தழலெரி மடுத்த நீரில்
திளைத்துநின் றாடுகின்ற ஆமைபோற் றெளிவி லாதேன்
இளைத்துநின் றாடுகின்றேன் என்செய்வான் றோன்றி னேனே." —சு. எக-க0.

திருவள்ளுவப் பெருந்தகையார் திருமொழியுங் காண்க:

" நெருந லுளனொருவன் இன்றில்லை என்னும்
பெருமை யுடைத்திவ் வுலகு." —திருக்குறள், ௩௩௬.
" குடம்பை தனித்தொழியப் புள்பறந் தற்றே
உடம்பொ டுயிரிடை நட்பு." " ௩௩௮.

"உறங்கு வதுபோ லுஞ் சாக்கா டுறங்கி
விழிப்பது போலும் பிறப்பு." ,, ௩௩௯.

"புக்கி லமைந்தின்று கொல்லோ உடம்பினுள்
துச்சி லிருந்த வுயிர்க்கு." ,, ௩௪௦.

"அவாவென்ப எல்லா உயிர்க்குமெஞ் ஞான்றுந்
தவாஅப் பிறப்பீனும் வித்து." ,, ௩௬௧.

"பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும்
செம்பொருள் காண்பது அறிவு." ,, ௩௫௮.

நாலடியாரில் வருவதூஉங் காண்க:

"படுமழை மொக்குளில் பல்காலுந் தோன்றிக்
கெடுமிதோர் யாக்கையென் றெண்ணித்—தடுமாற்றம்
தீர்ப்பேம்யாம் என்றுணரும் திண்ணறி வாளரை
நேர்ப்பார்யார் நீணிலத்தின் மேல்." —நாலடியார், உ௭.

இதுகாறும் கூறியவாற்றான் ஆருயிர்கட்கு மலநோய் நீங்கத் தொன்மையிற் படைத்தளித்த பிறப்புக் கருதும் நுண்ணுடற் பிறப்பெனவும், அதுவே நாயனாரருளிய எல்லாவுயிர்க்கும் ஒக்கும் பிறப்பெனவும், செய்தொழில் வேற்றுமையால் ஒவ்வாச் சிறப்புப் பிறப்புக் காணும் பருவுடற் பிறப்பு எனவும், பிறந்தவுயிர்கள் நன்னெறியொழுகின் வீடுபேறெய்தும் எனவும், தீநெறி யொழுகின் இருள்நரகெய்தும் எனவும், இம்முறை மண்ணுலகத்தார்க்கன்றி விண்ணுலகத்தாருக்கு முண்டெனவும், திருமாலுள்ளிட்ட தேவர்களும் சிற்றுயிர்களேயென்பதும், சிவபெருமான் ஒருவனே வினையினீங்கி விளங்கிய அறிவனாகிய விழுமிய முழுமுதல்வனென்பதும், அவனைத் தொழுவதே ஆருயிர்களின் விழுமிய கடமை என்பதும், சிவ வழிபாடே சிறந்ததென்பதும், தேவர்களும் இங்குவந்து, சிவனை வழிபட்ட குறிப்பு அவரவர் பெயரான் வழங்கி வருகின்ற திருவூர்ப் பெயர்களானறியலா மென்பதும் அங்ஙனமாயினும் பிறவியான் வருவன பெருந்துன்பம் என்பதும் பிறவும் உணர்த்தப்பட்டன. இவை பல்லாயிரக்கணக்கான யாண்டுகளுக்குமுன் பெரிய செந்தமிழ்ச் சான்றோரால் நாரிபாகன் நல்லருள் துணைகொண்டு நாட்டப்பட்டனவாகும். இவை இஞ்ஞான்றை ஆவியுலக ஆய்வாளர் கோட்பாட்டிற்கு அரண் செய்யும் தன்மைய என்பதனை மெய்ம்மையாளுணர்வார் ஆவியுலகச் செய்திகளில் ஐயமும் மறுப்பு மகன்று செய்வன செய்து தெளிகுவர் என்பதும், அதனால் நன்னலம் எய்துவர் என்பதும் ஒருதலை யாலுணரலாம்.

# சங்ககாலத் திருமணத்தில் தாலி

[திரு. வை. தட்சிணுமூர்த்தி, எம். ஏ.]

(செல்வி சிலம்பு, ௩௫, பரல் ௩, ௧௨௦ ஆம் பக்கத் தொடர்ச்சி)

கோவலன் கண்ணகியைப் பிரிந்து மாதவி மனையை அடைகிறான். பிரிவுத்துயரால் கண்ணகி வாடுகிறாள். கணவனைப் பிரிந்த காலத்தில் தமிழ்ப்பெண்டிர் தம்மை ஒப்பனை செய்து கொள்ளார். மங்கலியம் தவிரப் பிற அணிகளையும் அணியார். நெடுநல்வாடைத் தலைவி தன் கணவனான பாண்டிய மன்னன் போர்க்களத்திற்குச் சென்றிருந்த காலத்தில் பிரிவால் வருந்தி அணிகளை மறந்தாள். அஃதொப்பவே கண்ணகியும்,

> "அஞ்செஞ் சீறடி அணிசிலம் பொழிய
> மென்றுகி லல்குல் மேகலை நீங்கக்
> கொங்கை முன்றிற் குங்கும மெழுதாள்
> மங்கல வணியிற் பிறிதணி மகிழாள்
> கொடுங்குழை துறந்து வடிந்துவீழ் காதினள்
> திங்கள் வாண்முகஞ் சிறுவியர்ப் பிரியச்
> செங்கய னெடுங்க ணஞ்சன மறப்பப்
> பவள வாணுதற் றிலக மிழப்ப
> மையிருங் கூந்த னெய்யணி மறப்பக்
> கையறு நெஞ்சத் ......... தோடிருந்தாள்."

இதன் பொருள்: சீறடிகளில் அணியும் பேற்றைச் சிலம்பு பெறவில்லை. அல்குல் அணியும் பேற்றை மேகலை பெறவில்லை. அவள் திருமுலைத் தடத்திடைக் குங்கும மெழுதவில்லை. மங்கல வணியாய தாலியைத் தவிர வேறெதையும் விரும்பாததால் அதைமட்டும் மகிழ்ந்தணிந்தாள். குழை இன்றி வடிந்து வீழ்ந்து அழகமைந்த காதையுடையவளான அவளின் திங்கள் போன்ற ஒளி வீசும் முகம் வியர்க்கின்றது. கண்கள் அஞ்சனத்தை மறந்தன. நுதல் திலகம் இழந்தது. வாயின் முறுவலாகிய நகையைக் கோவலன் இழக்க, கூந்தற்கு நெய் பூசவில்லை. இப்படிக் கலங்கினாள் கண்ணகி.

இதில் மங்கலவணிக்கு 'இயற்கையழகு' எனப் பொருள் கொண்டார், அரும்பதவுரைகாரர். அடியார்க்கு நல்லார் மங்கலவணி எனத் தாலியையே கொண்டார். சிந்தித்து எழுதிய ஆசிரியர்கள் சிறப்புமிக்கவரே எனினும் அவற்றில் தெளிவில்லாப் பகுதிகள் இருப்பது இயற்கை. ஒருவருக்குப்

புரியாதன மற்றவருக்குப் புரியலாம். இம்மங்கலவணிக்குப் பொருள் என்ன என்பதை இனி ஆராய்வோம்.

'உரைசால் பத்தினிக் குயர்ந்தோ ரேத்தலைக்' குறிக் கோளாகக் கொண்டு இளங்கோ கண்ணகியின் வரலாற்றைக் கூறுகின்றார். தொடக்க முதல் இறுதிவரை கண்ணகியைத் தெய்வமணம் கமழப் போற்றுகின்றார் கவிஞர். இங்கும் 'கண்ணகி கையறு நெஞ்சத்தோடிருந்த கோலத்தைக் கடவுளரை வருணிப்பதொத்து அடி முதல் தலைஈறாக ஏறுவரிசை வருண உரையில் கூறுகின்றார். முறையாகப் பின்வருமாறு உறுப்புக்கள் கூறப்படுகின்றன :

1. அடி - சிலம்பு. 2. இடை - மேகலை. 3. மார்பு - குங் குமம். 4. கழுத்து - மங்கலவணி. 5. காது - குழை. 6. முகம் - வியர்வை. 7. கண் - அஞ்சனம். 8. நுதல் - திலகம். 9. வாயிதழ் - நகை. 10. கூந்தல் - நெய்.

பொருநராற்றுப் படையில் தலைமுதல் அடிஈறாக வருணிக் கும் ஒரு வருணனை வருகின்றது. அதில் விறலியின் கூந்தல், நுதல், புருவம், கண், வாய், பல், காது, கழுத்து, தோள், கை, விரல், உகிர், ஆகம், கொப்பூழ், இடை, தாள், அடி போன்றவை வரிசையாக வருணிக்கப் பட்டன. இவண் கண்ணகியின் வருணனையும் இதற்கு நேர் மாறாக அடி முதல் தலைஈறாக அமை கிறது. அடி, இடை, மார்பு, கழுத்து, காது, முகம், கூந்தல் முதலியன வருணிக்கப் படுகின்றன. காட்டியிருக்கும் வரிசையில் கண், நுதல், இதழ் இம்மூன்றும் விடுபட்டன. காதுக்கும் கூந்தலுக்கும் இடையில் முகத்தை வருணித்தார். முகத்தை வருணித்தவுடன் அதன் உள் உறுப்புக்களாய கண், நுதல், வாயிதழ் போன்ற மூன்றையும் கூறினார். கழுத்துக்குப் பின் காது, முகம், கண், நுதல், இதழ் எனக்கொண்டால் முறை பிறழ்ச்சிகள் தோன்றும். இதழ், கண், நுதல் என்றியம்பினால் தான் ஏறு வரிசை வரும். கிடந்தபடியே கண்டால் இது பிறழ்ச்சியாகத் தோன்றும். எல்லா அணிகளும் தாம் கண்ணகி யின் உறுப்பில் அணியும் பேற்றை இழந்தன. வாயின் இதழுக்கு அணி நகை (நகைத்தல்). அந்நகை வாயில்தான் இருக்கிறது. மகளிர் நகையரும்புவதைக் கணவர்தாம் காண முடியும். அந்தக் கனியை சுவைக்க வேண்டிய கோவலன் கண்ணகியைப் பிரிந்து மாதவி மனையில் இருப்பதால் அந் நகையைச் சுவைக்கும் பேற்றை அவன் இழந்தான். இது வரையில் நகைகட்கும் உறுப்புகட்கும் தொடர்பு அற்ற நிலை கூறப்பட்டது. இங்கோ இதழாகிய உறுப்பு நகையை இழக்க வில்லை. ஆனால் கோவலன் இழக்கிறான். இது வருணனை முறை

யில் வேற்று முடிவு. அரும்பெறற் செல்வியோடு கூடி வாழ் வதைக் கோவலன் பெருமை அவனுக்குப் பேரிழப்பு என் பதைச் சுட்டிக்காட்டி இவ்வேற்று முடிவைக் கூற நினைத்து, வருணனையில் கழுத்து, காது, முகம், கூந்தல் என்று கூறிப் பின்னர் முகத்தைக் கூறியவுடன் அதனையே விதந்து முகத்தின் உள்ளுறுப்புக்களாய கண், நுதல், இதழ் போன்றவற்றை விளக்கு கிறார். கோவலனோடு இணைத்து வேற்று முடிபு கூறுவதற்காகவே வருணனை இலக்கணத்தை முகத்தோடு அமைத்துவிட்டுப் பின்னர் உள்ளுறுப்புக்களைக் கூறினார். எனவே இது ஏறுவரிசை வருணனையாகவே அமைகின்றது. இவ்வருணனையிலும் தாலி பற்றிக் குறிப்பிடுவதால் சிலப்பதிகாரத்தில் கோவலன் கண் ணகிக்குத் தாலி கட்டினான் எனக் கொள்ளலே தகும்.

இதுகாறும் கண்டவற்றால் "ஈகையரிய இழையணி" எனப் புறநானூற்றில் தாலியைப் பற்றிய குறிப்பு வருவதாலும், நெடு நல்வாடைத் தலைவி தாலியை மட்டும் அணிந்து பிறவற்றைத் துறந்தமையாலும், சிலப்பதிகாரத்தில் தெள்ளத் தெளிய மூன்று இடத்தில் தாலிபற்றிய செய்தி கூறப்படுவதாலும் சங்க காலத் தில் திருமணத்தின் போது தாலிகட்டும் வழக்கம் உண்டு என்பது உறுதிப்படுகின்றது. சிலப்பதிகாரத்திலோ, அகப் பாடல்களிலோ திருமணக் காட்சியைக் கூறும்போது தாலி பற்றிக் கூறப்படவில்லை என்பதால் அக்காலத்தில் அவ்வழக்காறு இல்லை என மறுப்பது ஒல்லா வழக்காகின்றது. அன்றியும் பிற்காலப் புலவர் காலத்தில் மணத்தாலி கட்டும் பழக்கம் இருந்தது வெளிப்படையாகத் தெரிந்தும் அவர்களும் திருமணக் காட்சிகளைப் பாடும்போது தாலிபற்றிக் கூறாமையை எண்ணக் கவிஞர் தாலியைப் பற்றிக் கடிமணக் காட்சியில் கூறவேண்டும் என்ற நியதியைக் கொள்ளவில்லை எனக் கொள்ளலே தகும். அறிவுடையார் தருக்க நெறியால் எதையும் மறுத்தியம்ப இயலும் எனினும் நடுநிலையாளர் இக்கால வழக்கு, பண்டைத் தமிழர் உள்ளம் இவற்றை வரலாற்று அடிப்படையில் எண்ணிப் பார்த்து முடிவு கட்டலே நன்று. பண்டை உரையாசிரியர் கட்குப் புரியாத சில நமக்குப் புரிந்தாலும் தவறில்லை அஃதொப்பவே பேரறிஞர்கள் சூழல் காரணமாகச் சிலவற்றைப் புரியாது விடலும் உண்டு. எனவே ஓர்ந்து பார்க்கையில் சங்க கால மணத்தில் மணமகன் மணமகளுக்குத் தனது உறவின் அறிகுறியாகத் தாலி அணிவித்தல் உண்டு என்பது உறுதிப் படுகின்றது.

# இறைவன்சுரம் - ஈச்சுரம்

[திரு. ஆ. சிவலிங்கனார், மயிலம்]

நாடக மாடிடம் நந்திகேச் சுரம்
மாகா ளேச்சுரம் நாகேச்சுரம் நன்கான
கோடீச்சுரம் கொண்டீச்சுரம் திண்டீச்சுரம்
குக்குடேச்சுரம் மககீச்சுரம் கூறுங்கால்
ஆடகேச்சுரம் அகத்தீச்சுரம் அயனீச்சுரம்
அத்தீச்சுரம் சித்தீச்சுரம் அந்தண்கானல்
ஈடுதிரை இராமேச்சுரம் என்றென்றேத்தி
இறைவனுறை சுரம்பலவும் இயம்பு வோமே.

இஃது அப்பரடிகள் அருளிய அடைவுத் திருத்தாண்டகப் பாடல்களுள் ஒன்று. இதில் நந்திகேச்சுரம் முதல் இராமேச்சுரம் வரையிலும் பதினொன்கு ஈச்சுரங்கள் கூறப்பட்டன. 'ஈச்சுரம்' என்ற சொல் 'இறைவன் உள்ள கோயில்' என்னும் பொருளில் வழங்கப்படுகின்றது. ஈஸ்வரன் உள்ள இடம் ஈஸ்வரம் என்பர். ஈஸ்வரம் என்பது ஈச்வரம் - ஈச்சுரம் - ஈசுரம் என்பனவாகத் திரிந்துவரும் என்றும் கூறுவர். ஆனால் நம் அப்பரடிகள் ஈச்சுரம் என்பதை வடசொல் எனக் கொண்டார் என்று கூறுதற்கில்லை. நந்திகேச்சுரம் முதலானவற்றை 'இறைவனுறைசுரம்' என்றார். ஈச்சுரம் என்ற சொல்லைப் பிரித்துச் சுரம் எனத் தனித்துக் கூறுதல் பொருந்தாது. அதனால் ஈச்சுரம் என்றசொல் இறைவனுடைய சுரம் என்ற பொருளுடைய தானால்தான் சுரம் எனத் தனியாகப் பிரிக்க இயலும். இறைவன் சுரம் என்ற இருசொற்கள் மருவி, 'அருமருந்தன்ன பிள்ளை' என்னும் சொற்கள் 'அருமந்த பிள்ளை' யென மருவியதுபோல 'ஈச்சுரம்' என்றாகி யிருக்கவேண்டும். அதனால்தான் அப்பரடிகள் 'இறைவன் உறை ஈச்சுரம் பலவும்' என்னாமல் 'இறைவன் உறை சுரம்பலவும்' என்றார்.

சுரம் என்ற சொல்லைத் தனிச்சொல்லாகவே கொண்டு கூறினார் அடிகள் என்பதற்கு அவருடைய மேற்பாடலின் முன் பின் பாடல்களும் சான்றுபகரும். "பெருக்காறு சடைக்கரந்த" என்று தொடங்கும் தாண்டகத்தில் கரக்கோயில் முதலாகத் திருக்கோயில் இறுதியாகக் கூறி அவற்றை இறுதியில் 'சிவனுறையும் கோயில்' என்று பாடியுள்ளார். "கந்தமாதனம் கயிலை" என்று தொடங்கும் பாடலில் கந்தமாதனம் முதலாக அத்தமலை யிறுதியாகக் கூறி அவற்றை 'இந்துசேகரன் உறையும் மலைகள்" என்றார். எனவே கோயில்களின் முழுப்பெயர்களைக் கூறி யிறுதில் அப்பெயர்களின் இறுதிச் சொல்லைமட்டும்கொண்டு இறை

வனுக் குரியதாகக் கூறியதைக் காணலாம். அதுபோலவே மேற்பாடலில் பல ஈச்சுரங்களைக் கூறி இறுதியில் இறைவன் உறைசுரம் என்றார். அதனால் சுரம் என்ற சொல்லை ஒரு பொருள் பொருந்திய தனிச்சொல்லாகவே கொண்டார் அடிகள் என்னலாம். அன்றியும் இறைவனுடைய் குடி, ஊர், காடு, வாயில், ஆறு, குளம், கா முதலியவற்றால் முடியும் ஊர்களையும் கூறியமைக் கேற்பச் சுரம் என்ற சொல்லால் முடிந்த ஊர்களையும் கூறினார். அதனால் சுரம் என்றது ஒருதனிச்சொல் என்னலாம். எனவே ஈச்சுரம் என்பது இறைவன் சுரம் என்ற இரண்டு சொற்களின் மரூஉ என்னலாம்

இனி ஈச்சுரம் என்றதன் பொருளைக் காண்போம். சுரம் என்பதற்குப் பல பொருள் உண்டு. ஒன்று காடு என்பதாம்.

"சுரம் போழ்ந்த இகலாறறல்." (மதுரைக் காஞ்சி, ௩௮)

என்ற விடத்தில் சுரம் என்பது காடு என்ற பொருளில் வந்தது காண்க. பழங்காலத்தில் ஊர்களின் பெயர்கள் பலவகையில் அமைந்தன. அவற்றுள் ஒருவகை காடு பற்றியது. தில்லைமரங்கள் நிறைந்த காட்டுப்பகுதி தில்லை என்றும், மருதமரங்கள் நிறைந்த பகுதி மருதூர் என்றும் பெயர்பெற்றன. காடுகெடுத்து நாடாக்கிய காலத்தில் காட்டின் பெயரே நாட்டுக்கு - ஊர்க்கு வைக்கப்பட்டது. காடு கெடுத்த காலங்களில் அக் காட்டில் இலிங்கங்கள் காணப்பட்டன. இலிங்கம் ஒன்று காணப்பட்ட காட்டுப் பகுதியை இறைவன் சுரம் என்றார்கள். அக்காட்டுப்பகுதி மரத்தின் பெயரால் ஊராக அமையவே அங்கிருந்த இறைவன் இடம் (கோயில்) இறைவன்சுரம் எனப்பட்டது. இறைவன்சுரம் என்பது மருவி ஈச்சுரம் என்றாயது. பின்னர் ஈச்சுரம் என்றால் கோயில் என்ற பொருள் வந்தது. பின்னர் அது பொதுப் பெயராகிக் காட்டில் இருந்த கோயில்களுக்குமட்டுமின்றி எல்லாக் கோயில்களுக்கும் வழங்கும் பெயராகியது. அதனாலேயே ஈடு திரை இராமேச்சுரமும் அப்பெயர் பெற்றது.

இப்பால் ஈஸ்வரன் உள்ள இடம் ஈஸ்வரம் என்ற வடசொல்லின் கருத்தும் கோயிலைச் சுட்டுதலின், ஈச்சுரம் என்ற தமிழ் மரூஉச் சொல்லுக்கும் ஈஸ்வரம் என்பது ஈச்சுரம்என வந்த வடசொல்லுக்கும் வேறுபாடில்லாமல் அவை வழக்கத்தில் வந்தன. ஆனால் ஈச்சுரம் என்பது வடசொல் என்ற எண்ணமே பெரிதும் நிலைப்பதாயிற்று. அப்பரடிகள் இறைவன் உறை ஈச்சுரம் என்னாமல் இறைவனுறை சுரம் என்றமையால், அவர் கருத்து, 'ஈச்சுரம் என்பது தமிழ்ச் சொல்லே' என்பதாகலாம்.

# உதயகுமரன்

[வித்துவான், திரு. சொ. சிங்காரவேலனர், பி. ஏ.]

**உதயகுமரன் - சாத்தனர் படைப்பு**

மணிமேகலைப் படைப்புக்களில் "உதயகுமரன்" ஓர் உயிர்ப்புடைய சிறிய படைப்பு ஆகும். சாத்தனர் உதயகுமரனை ஒரு பெருவீரனகவே படைத்துள்ளார். பெருவீரனகிய அவன் விரைவில் உணர்ச்சி வயப்படக் கூடியவனகவும் காட்டப்படுகின்றான். இவ்வரசிளங்குமரனது வாழ்வும் குணநலமும் பற்றிச் சாத்தனர் காட்டிய நெறிச் சென்று இங்குக் காண்போம்.

**சுருங்கிய வாழ்நாள்**

காவிரிப்பூம்பட்டினத்தைத் தலைநகராகக் கொண்டு சோழப் பெருநாட்டை ஆண்ட நெடுமுடிக் கிள்ளியின் வீரப்புதல்வன் இவன். இவன் காஞ்சனன் என்னும் விஞ்சையன் வாளால் வெட்டுண்டு உயிர் துறக்கின்றான். சோழப்பெருநாட்டை ஆள வேண்டிய இவ் வரசிளங்குமரன் தன் இளமையிலேயே உயிர் நீத்தது நாட்டிற்கே ஒரு பேரிழப்பாகும்; ஆயினும் அதுவே மணிமேகலைக்கு நற்பேருக வாய்த்தது. பன்முறை இவ்விளவரசனற் பின்தொடரப் பெற்றுப் பெருந்துயரம் எய்தினள் மணிமேகலை எனக் காண்கின்றேம். சுருங்கிய வாழ்நாள் உடைய இவனை நல்ல படைப்பாகவே சாத்தனர் தண்டமிழ்க் காப்பியத்திற் காண்கின்றேம்.

**வீரமாட்சி**

வீரமும் காதலுமாகிய தமிழகத்து இருபெரும் பண்புகளை உடையவனக உதயகுமரனை அறிமுகப் படுத்தும்போதே ஆசிரியர் காட்டுகின்றார். பளிக்கறை புக்க காதையின் தொடக்கப் பகுதி. காலவேகம் என்னும் களிறு மதங்கொண்டு பிளிறிப் பாய்ந்து வருகின்றது. ஒரு நீல மலை அடியோடு புரண்டெழுந்து வருவதுபோல் வருகின்றது;

> "நீல மால்வரை நிலமிசை டைந்தெனக்
> கால வேகம் களிமயக் குற்றென"[1]

என்கின்றார் கவிஞர். அதுமட்டுமோ? மாலுமி நடுங்கும்படியாக, பாய்மரம் அடியிலே முறியும்படி கயிறு அற்றுக் கடலிடைச் செல்லும் திசையறியாது காற்றால் அலைக்கப்பட்டு இயங்கும் மரக்கலத்தைப் போன்றிருந்தது அம்மதயானை என்கின்றார் பாவலர். பாகர்கள் செயலற்று நிற்ப, எல்லாவீதிகளிலும்

1. பளிக்கறை புக்க, ௬௫ - ௬௬.

சென்று அலைக்கழித்துத் திரிந்துவரும் அம் மாபெருங்களிற்றினை ஒரு குதிரையின் மீதேறிச் சென்று அடக்குகின்றான் அரசிளங் குமரன். அத்தகைய பேராண்மை படைத்த அப் பெருவீரன் கடம்புமாலை சூடாது ஆத்திமாலை சூடி அளவில் தேர்த்தானை யோடு வந்துகொண்டிருக்கும் வீரத்திருக்கோலத்தில் நாம் முதன் முதலிற் காண்கின்றோம். உதயகுமரனின் பெருவீரத்தைக் காட்டவே இந்நிகழ்ச்சி இங்குச் சுட்டப்பட்டிருத்தல் வேண்டும்; காப்பிய நிகழ்ச்சிக்குச் சிறிதும் தொடர்பில்லாத நிகழ்ச்சி மத யானையை அடக்கியது ஆதலால், "மதிமருள் வெண்குடை மன்னவன் சிறுவன் உதயகுமரன்" என்கின்றார் ஆசிரியர்; உதயகுமரன் என்ற பெயரிற் கேற்ப 'சிறுவன்' என்று கூறி யிருப்பதை உளம் கொள்ளுதல் வேண்டும். இளமையிலேயே இத்தகைய பெருவீரம் கொண்டோனுதலின் ஒவ்வொரு வியத்தகு வீரச் செயலை இங்கு விளக்கியது மிக்க பொருத்தமே.

மற்றும், மணிமேகலை காப்பியத் தலைவி எனின் இவ்வுதய குமரனைச் சற்றேறக்குறையக் காப்பியத்தலைவன் என்றே கூறி விடலாம் அல்லவா? காப்பியத்தலைவன் ஒப்பாரும் மிக்காரும் இல்லாத் தலைமையனாக இருக்கவேண்டுவது விதியல்லவா? அது பற்றியும் இங்கே இந்நிகழ்ச்சியை ஆசிரியர் சுட்டியிருக்கக் கூடும். இங்குக் களிற்றினை அடக்கிய உதயணனையும், கோவலனும் ஆகிய இருவர் நினைவும் காப்பியங் கற்பார் சிந்தையில் வருதல் கூடும். அவற்றைப் பெருங்கதை, சிலப்பதிகாரத்தில் நன்கு அறியலாம்.

## கோவலன் வீரம்

கோவலன் யானை ஒன்றை அடக்கிய நிகழ்ச்சி, மாதவியின் பால் மணிமேகலை பிறந்து அவட்குப் பெயர்சூட்டும் விழாவிலே நிகழ்ந்தது. புண்ணியதானம் புரிந்திருக்கும்போது தளர்வுடன் வந்தெய்திய மறையோன் ஒருவனைக் களிறு ஒன்று கைக் கொண்டு வருத்தியபோது, தானே அதன் கையிடைப் புகுந்து அதனை ஆற்றலொடு அடக்கி அதன் பிடரியில் ஏறியிறங்கின பெருவீரன் கோவலன்; இந்நிகழ்ச்சியினை மதுரையிற் கோவலனைக் கண்டு மாடலன் அறம் பாராட்டிக் கூறும் புகழ் மொழிகளின் தொடக்கத்திற் காண்கின்றோம்.

> "பிடர்த்தலை இருந்து பெருஞ்சினம் பிறழாக்
> கடக்களிறு அடக்கிய கருணை மறவ!"[1]

என்று மாடலன் அதனைக் கூறி வாழ்த்தினான். அதனைப் போன்றே ஈங்கும் உதயகுமரனின் வீரம் குறிக்கும் ஒப்பற்ற செயலாக இது விளங்குகின்றது.

---

1. சிலப்பதிகாரம் — அடைக்கலக், இஉ - இங.

**கருணையும் காதலும்**

வரும்வழியில் எட்டிகுமரன் ஒருவன் எழுதிய பாவையைப் போல் இருந்த காட்சியைக் காணும் உதயகுமரன், "மயங்கினை இருந்தோய்! யாது நீ உற்ற இடுக்கண்?" என்று அவனை வினவுகின்றான். தேரிடை ஏறித் தெருவிற் போங்கால் வழியிடை நிற்போர் வருத்தமும் கண்டு அன்போடு வினவுகின்றான் அரசிளங்குமரன்; இது இவனது இனிய பண்பினையே காட்டுகின்றது. 'கடுஞ்சொல்லன் அல்லனேல்' என்ற குறள்நெறியை இங்குக் காண்கின்றோம். தான் முடியணிந்த மன்னன் மகனாயிற்றே, அவன் வணிகனாயிற்றே என்ற வேற்றுமை உணர்ச்சியை உதயகுமரனிடத்து இவ்விடத்து நாம் காணவில்லை. இயல்பான ஒரு மனித உள்ளத்தோடு பேசுகின்றான்: "யாது நீ உற்ற இடுக்கண்?" என்ன, எட்டிகுமரன் தொழுது கூறுகின்றான்: "செப்புக்குள் இருந்து சிறப்பிழக்கும் மலர்போல், கோவலனுக்குற்ற கொடுந்துயர் தோன்ற மாதவி, மணிமேகலை அடைந்த அவலநிலை என்னை வாட்டிற்றாதலின் அது, பகை நரம்பின் என் கைச்செலுத்தியது; இதுவே யான் படும் துயரத்திற்குக் காரணம்."

மணிமேகலை என்றதும் உதயகுமரன் உள்ளத்தே இரக்கம் மாறிக் காதல் அரும்புகின்றது: "ஆங்கவள் தன்னை என் அணித்தேரில் ஏற்றி, ஈங்கு யான் வருவேன்" என்று சோலை நோக்கிச் செல்கின்றான். சோலையில் சுதமதியைக் கண்டு மணிமேகலையைப்பற்றி வினவுகின்றான். அறிவுரை கூறுகின்றாள் அவள். இருப்பினும் காதல் உணர்ச்சி வயப்பட்டுவிட்டானாதலின் அவள் சொற்கள் அவன் செவிகளில் விழவே இல்லை. பளிங்கறையில் தோன்றும் மணிமேகலையையும் பார்த்துவிடுகின்றான்: மணிமேகலை காமனைக் கடந்த வாய்மையள் என்கின்றாள் சுதமதி. கடைசியில் உதயகுமரன் 'அவ்வியநெஞ்சத்தோடு' அவ்விடம் விட்டு அகல்கின்றான். போகுமுன் சில வார்த்தைகள் புகலுகின்றான். 'தண்ணீர் வரம்புமீறி வரும் போது அதனைத் தடுக்கவல்ல அணையும் உண்டோ? காமம் காழ்க்கொண்டு நன்கு முதிர்தலுற்றால் நிறையென்பதும் உண்டோ?' என்பவை அவை.

> "சிறையும் உண்டோ செழும்புனல் மிக்குழீ?
> நிறையும் உண்டோ காமங் காழ்க்கொளின்?"[1]

இவ்விரண்டு வரிகளில் உதயகுமரனது கொள்கையையே காண்கின்றோம். சிறை மீறிப் பாயும் செழும்புனல் போன்று ஆகிவிடுகின்றான் அவன். இவ்வாறு, வீரம், கருணை, காதல் ஆகிய

1. மணிமேகலா தெய்வம், கக - உ0.

முப்பெரும் உணர்ச்சிகளை உடையவனாக உதயகுமரன் நமக்கு முதற்கண் அறிமுகப் படுத்தப் பெறுகின்றான். இங்கு உதய குமரனின் பேரழகையும் நாம் நன்கு அறிகின்றோம். முருகனைப் போன்ற அழகன். 'கண்டேத்தும் செவ்வேள் என்று இசை போக்கி' என்பாரே கோவலனை இளங்கோவடிகள், அதனைப் போன்றே சாத்தனாரும் அறிவிக்கின்றார்:

"_ _ _ பயாக் குன்றம் கொண்ருன் அல
முருகச செவ்வி முகந்து, தன் கண்ணால்
பருகாள்"[1]

என்கின்றாள் சுதமதி. உதயகுமரனின் அழகு 'முருகச் செவ்வி' என்று சுட்டப்படுவதை உணர்தல் வேண்டும். ஆயினும் அவ்வுடலழகை மணிமேகலை ஒரு பொருளாகக் கொள்ளாதவள். 'வினையின் வந்தது; வினைக்கு விளைவாயது; புனைவன நீங்கின் புலால் புறத்திடுவது' ஆகிய இவ்வுடலழகு அவ்வறப் பெருஞ் செல்வியைக் கவர்ந்து விடமுடியுமா?

## உறுதியான உள்ளமும் மாறிய மாண்பும்

மணிமேகலையின்பால் உதயகுமரன் கொண்ட விருப்பம் அவனைத் தன்வயப்படுத்தி விட்டது. எப்போதும் அவள் நினைவாகவே இருக்கலாயினன். அன்று இரவு கனவில் அவளைப் பற்றி எண்ணிக் கொண்டிருக்கின்றான். மணிமேகலா தெய்வம் கனவில் தோன்றிப் பின்வருமாறு கூறுகின்றது:

"மன்னவன் மகனே!
கோனிலை திரிந்திடிற் கோணிலை திரியும்;
கோணிலை திரிந்திடின் மாரிவறங் கூரும்;
மாரிவறங் கூரின் மன்னுயிர் இல்லை;
மன்னுயிர் எல்லாம் மண்ணாள் வேந்தன்
தன்னுயிர் என்னும் தகுதியின் றாகும்;
தவத்திறம் பூண்டோள் தன்மேல் வைத்த
அவத்திறம் ஒழிக!"[2]

இவ்வாறு தெய்வம் உரைப்பக் கேட்டும் உதயகுமரன் தன் விருப்பம் மாற்றினனல்லன். எப்படியேனும் அவளை அடைவேன் என்றே கருதியிருந்தான். இவ்வாறே அறப் பெருஞ் செல்வியாகிய மணிமேகலையும் உதயகுமரனைச் சோலையிற் கண்டது முதல் மறக்கவே இல்லை. அது சென்ற பிறவியில் இராகுலன் என்ற பெயரோடு அவள் கணவனாக

1. மணிமேகலா தெய்வம், கங - கரு.
2. துயிலெழுப்பிய, எ - கச.

இருந்ததேயாகும் என்று மணிமேகலா தெய்வம் கூறுவதாலும் அறியலாம்:

“உவவன மருங்கின் உன்பாற் றோன்றிய
உதய குமரன் அவனுன் பழம்பிறப்புக் கொழுநன்
ஆங்கவன் அன்றியும் அவன்பா லுள்ள
நீங்காத் தன்மை நினக்குமுண் டாகலின்”[1]

என்று அத்தெய்வம் கூறுகின்றது. அன்றியும் உதயகுமரன் வித்தியாதரனால் வெட்டப்பட்டபொழுது மணிமேகலையே பின் வருமாறு கூறுவதும் அதற்குச் சான்றாகும்:

“உவவன மருங்கின் நின்பால் உள்ளம்
தவிர்விலன் ஆதலின் தலைமகள் தோன்றி
மணிபல் லவத்திடை என்னையாங் குய்த்துப்
பிணிப்பறு மாதவன் பீடிகை காட்டி,
என்பிறப் புணர்த்த.”[2]

உதயகுமரன் என்னும் வண்டு மணிமேகலை என்னும் மலரை நுகர்தல் வேண்டும் என்று விரும்பிய சித்திராபதி உதய குமரனிடம் நேரில் சென்று அவன் எண்ணத்தைத் தூண்டி விடுகின்றாள். ஆயினும் உதயகுமரன் தான் சோலையில் கண்டதையும், கனவில் மணிமேகலா தெய்வம் உரைத்ததையும் கூறி மறுக்கின்றான். சித்திராபதி மேலும் தன் கருத்தை நிலைநாட்டு வாளாக, தேவர்களிடையேயும் காமமயக்கம் உண்டு என்று காட்டி மணிமேகலை குலமகள் அல்லள் ஆதலால், பரத்தையர் குலமுறைப்படி நடத்தற்குரியவளே என்று கூறுகிறாள்; அது மட்டுமோ? அரசர் அத்தகையோரை அடக்கிக் குலமுறைப்படி நடக்கச் செய்தலே செங்கோன்மை என்று நன்கு நிறுவுகிறாள். இங்கே உதயகுமரனின் உறுதியான உள்ளநிலை படிப்படியாகச் சித்திராபதியால் தகர்க்கப் படுதலைக் காண்கின்றோம். இந்த இடத்திலே உதயகுமரனை ஓர் ஊசலாகத் தொங்கக் காட்டி, அதனை மெல்லமெல்லச் சித்திராபதி யென்னும் தீய சக்தி அசைத்து ஆட்டுங் காட்சியாக செய்திருக்கும் கவிஞரின் திறத்தினைக் காண்கின்றோம்.

## இராமகாதையும் மேலைக்காப்பியமும்

கைகேயியின் உள்ளத்தைத் திரித்த மந்தரையும், ஒதெல்லோவின் உள்ளத்தைத் திரித்த இயாகோவும் நம் நினைவிற்கு ஈண்டு வருவர்; ஆம்: அசையாப் பெருவீரனாகிய ஒதெல்லோ

1. மந்திரங்கொடுத்த, ௬௨ - ௬௫.
2. கந்திற்பாவை, ௧௩ - ௧௭.

வின்[1] உள்ளத்தை இயாகோ[2] மெல்ல மெல்லத் திரித்து அவனது அன்புக்குரிய காதலியைக் கொலைசெய்யுமளவிற்குத் தூண்டிய நிலையினைச் செகப்பிரியர்[3] சித்திரிப்பதும், தூய உள்ளம் கொண்டு இராமனையும் தன் மகவெனக் கருதிய கைகேயியை மெல்ல மெல்லத் திரித்து இராமகதையை நடக்குமாறு செய்யும் மந்தரைக் கூனியை எழிலொழுகுமுறையில் உளவியல் நெறிப்படி கம்பர் சித்திரிப்பதும் இலக்கிய உலகம கண்ட அற்புதங்கள் அல்லவா? சித்திராபதி உதயகுமரனைத் தன் ‘சலம் புணர் கொள்கை’ மொழிகளால் மயக்கி உடனே ‘விரைபரி ஏறி’ ஓடுமளவிற்குச் செய்த திறமும் இதனைப் போன்ற சிறப்பினதே யாகும்.

“ இடங்கழி காமமொடு அடங்கான் ஆகி
உடம்போடு என்றன் உள்ளகம் புகுந்துஎன்
நெஞ்சம் கவர்ந்த வஞ்சக் கள்வி.”

என்று எண்ணிய அவன் தவமேற்ற காரணத்தை வினவ, இராகுலனை முற்பிறப்பில் தன் கணவனுந்தன்மை உள்ளத்துக் கொண்டவன் ஆதலின் வணங்கி அறிவுரை கூறுகின்றாள்; மந்திர உருவாற் காயசண்டிகை உருமாறிக் கொள்கின்றாள்: சம்பாபதித் தெய்வத்தின்முன் ‘மணிமேகலைதனை ஒழியப்போகேன், உன்அடி தொட்டேன்’ என்று வஞ்சினம் உரைக்கின்றான் உதயகுமரன்; அது பயனற்றதென அது கூறியவுடன் உள்ளம் கலங்குகின்றான். அவ்விடம்விட்டு அச்சத்துடன் அகல்கின்றான். இங்கும் உணர்ச்சிவயப்பட்ட நிலையிலேயே உதயகுமரனுக்கு விடை கொடுக்கின்றோம் நாம்.

## வாழ்வு முடிந்துவிடுகிறது

இனி, உதயகுமரன் வாழ்வின் இறுதிக் கட்டத்துக்கு வருகின்றோம் சிறைச்சாலையை அறச்சாலையாக்கியது முதலிய அனைத்தையும் கேட்டுத் தெரிந்துகொண்ட இளவரசன், மணிமேகலையை,

[5]“ மதியோர் எள்ளினும் மன்னவன் காயினும்
பொதியில் நீங்கிய பொழுதிற் சென்று
பற்றினன் கொண்டுஎன் பொற்றேர் ஏற்றி.”

வருவேன் என்று புறப்பட்டு வருகின்றான்; மணிமேகலா தெய்வமும் சம்பாபதித் தெய்வமும் கூறிய மொழிகளை அவன்

1. Othello. 2. Iago. 3. Shakespeare.
4. உதயகுமரன் அம்பலம் புக்க, கக - உக.
5. உதயகுமரனை வாளால், கஎ - கஞ.

அறவே மறந்துவிட்டான். அவன் உள்ளத்தில் இப்போது ஒரே யொரு நினைவுதான்; மணிமேகலையைத் தவிர மற்றொன் றறியான் அவன். உருமாறிய மணிமேகலையைக் காயசண்டிகை எனக் கருதி அவளோடு உரையாடுகின்றான்: 'பழைமைக் கட்டுரை பல பாராட்டுகிறான்,' அப்போது யாக்கையின் இழிவு பற்றி மீண்டும் மணிமேகலை பேசுகின்றாள். காயசண்டிகையின் கணவன் காஞ்சனன் பிழைபட உணர்ந்து மறைந்திருக்கின்றான். காயசண்டிகையின் உருவோடு அறம்புரிவோள் மணிமேகலையே என்று அறிந்து பின்னிருளில் வந்து அறியலாம் என்று மீளு கின்றான். அப்போது அவன் ஒரேயொரு துணையோடு சென்றான் என்கிறார் ஆசிரியர். காமக்கடவுளின் துணை ஒன்றியுடன் சென்றானும்:

"வான்தேர்ப் பாகனை, மீன்கிகழ் கொடியனை,
கருப்பு வில்லியை, அருப்புக்கணை மைந்தனை,
உயாவுத் துணையாக வயாவொடும் போகி."[1]

நடு இரவில் அவன் எழுந்து உலக அறவிக்கு வருகின்றான்; வேழம் ஒன்றை விரும்பியெழுந்த புலியைப் போல வருகின்றான்; கோயில் கழிந்து, வாயில் நீங்கி, அம்பலம் அணைந்தான். அங்கே காஞ்சனனின் வாள் காத்திருக்கிறதே என்று இரங்குகின்றார் ஆசிரியர்.

"வேக வெந்தீ நாகம் கிடந்த
போகுயர் புற்றளை புகுவான் போல"[2]

ார:

நாகம் கிடந்த புற்றிலே புகுவதுபோல என்பது மிகவும் தெளிந்த உவமை. அவன் வந்துவிட்டான் என்ற செய்தியை, மார்பின் அணிந்திருந்த சாந்தின் நறுமணமே அவ்விருளில் காஞ்சனனுக்குக் காட்டிக் கொடுத்துவிட்டதாம். புற்றிலிருந்த நாகம் படம் விரித்து நச்சுப் பல்லாற் ஜெட்டது போன்று காஞ்சனன் சீறியெழுந்து உதயகுமரனை ஓங்கி வாளால் வீசி விட்டான்; மணிமேகலை நினைவோடேயே வந்த இளவரசன் மரணத்தின் நினைவிறந்த நிலைக்குத் தள்ளப்பட்டான். இவ்வாறு உதயகுமரனின் வாழ்வு முடிந்து விடுகிறது.

## முற்பிறப்புத் தொடர்பு

மணிமேகலை உதயகுமரன் படுகொலையறிந்து புலம்புகின்ற பகுதி, அவள் அவ்வரசிளங் குமரனிடத்து வைத்த அயராத

1. உதயகுமரனை வாளால், ககக - கக௩.
2. உதயகுமரனை வாளால், கஅ - கஅக.

அன்பினை விளக்குவதாகும். அப்போது தெய்வம் அவளைத் தேற்றிப் பழவினை விளைவே உதயகுமரன் கொல்லப்பட்டதற்குக் காரணம் என்று கூறக் கேட்கின்றோம்;

> " நினக்குஇவன் மகனாத் தோன்றிய தூஉம்
> மனக்குஇனி யாற்குநீ மகள்ஆய தூஉம்
> பண்டும் பண்டும் பல்பிறப்பு உளவால்;
> கண்ட பிறவியே அல்ல, காரிகை!"[1]

என்ற தெய்வத்தின் தேறுதல்மொழி பிறவிதொறும் தொடர்ந்த பெருங்காதல் இவ்விருவரிடை நிலவியது என்பதற்கு உறுதியான சான்றாகிறது. இவ்வுறுதியான அன்பின் விளைவே உதயகுமரனின் இறப்புக்குக் காரணமாக என்று [illegible]

**உதயகுமரனின் பிழை**

உதயகுமரன் அறமல்லாத வழியில் மணிமேகலையை அவள் விருப்பத்திற்கு மீறி அடைய முற்பட்டது பெரும்பிழையாகும். காதல் என்பது ஒருசார் நிற்கும் உறுதிப்பாடு இல்லாமை அன்று; அது கைக்கிளை யன்றோ? உதயகுமரன் தான் அரச குமரன் என்ற எண்ணத்தினாலேயே அவளைக் கொண்டு விடலாம் என்று பிழைபட எண்ணினன்; ஆயினும் அறத்தின் பொதுவிதிக்குப் பின் யார் நிற்க முடியும்? 'இழைக்கின்ற விதிமுன் செல்லத் தருமம் பின் இரங்கி ஏக' இறந்தனன் என்கின்றது காப்பியம். உதயகுமரனைக் கொலை செய்துவிட்ட காப்பிய ஆசிரியர் தண்டமிழாசான் சாத்தனார்க்கு ஓர் ஐயம் எழுந்திருக்கும் போலும்; அதனைச் சோழப் பெருமன்னன் வார்த்தைகளில் வைத்துத் தெளிவாக்கி விடுகிறார். எப்படி? செய்தி அறிந்த சோழன் நெடுமுடிக்கிள்ளி சிறிதும் கலங்காது கூறுகிறான்:

> " யான் செயற்பாலது இளங்கோன் தன்னைத்
> தான்செய் ததனால் தகவு இலன் விஞ்சையன் "[2]

யான் செய்ய வேண்டியது இச்செயல் என்று கூறி 'உதயகுமரன் தண்டிக்கப்பட வேண்டியவனே' என்று நிறுவுகிறார். இன்னும்:

> " மகனை முறைசெய்த மன்னவன் வழி ஓர்
> துயர்வினை யாளன் தோன்றினன் என்பது
> வேந்தர் தஞ்செவி உறுவதன் முன்னம்."[3]

ஈமச்சடங்குகள் முடித்திடுக என்று கட்டளையும் இடுகின்றான் காவலன்.

---

1. கந்திற்பாவை, உக - ஙஉ. 2. சிறைசெய், உ0சு - உ0எ.
3. சிறைசெய், உக0 - உகஉ.

முரண்பட்ட பண்புகள்

உதயகுமரனின் குணநலன்களாக இதுகாறும் கூறிய வற்றால் அறியப்படும் செய்திகளாவன: உதயகுமரன் பெரு வீரன்; அழகன்; இரக்கம் உடையவன்; மணிமேகலைபாற் பிறவி தோறும் தொடர்ந்த பெருங்காதல் உடையவன்; ஆயினும் இளவரசன் என்ற பதவிச் செருக்கால் அவளைப் பற்றிக்கொள்ள முயன்ற பழிச்செயல் உடையவன்; உறுதியான உள்ளம் உடை யவன் ஆயினும் மெல்லமெல்ல உறுதி இறக்கும் மென்மையும் உடையவன். இன்னோரன்ன பல முரண்குணங்கள் உடைய வனாக உதயகுமரனைப் படைத்திருக்கின்றார் ஆசிரியர் பழிச் செயல் புரிந்தவனாயிருப்பினும் அறப்பெருஞ் செல்வியாகிய மணிமேகலையின் அன்பிற்குரியவன் என்று எண்ணும்போது உதயகுமரன் கொலைப்படும்போது மனம் உருகாமல் இருக்க இயலாதுதான்.

---

## மறைமலையடிகள் நூல்நிலையம், சென்னை.

## திரு. கி. ஆ. பெ. விசுவநாதம் வருகை

தனித்தமிழியக்கம் காண விரும்பும் முத்தமிழ்க் காவலர், திரு. கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்கள் மறைமலையடிகள் நூல் நிலையத்தை 10-11-1960 வியாழனன்று பகல் இரண்டு மணிக்குப் பார்வையிட வந்தார். நூல்நிலையம் அமைந்துள்ள கட்டிடம் மிக அழகிய முறையில் உள்ளது என்று பாராட்டினார். நூல்நிலையத் தின் பல பகுதிகளையும் பார்வையிட்ட அவர் ஆங்கிலம், தமிழ் ஆகிய இருமொழிகளிலும் அரிய பல நூல்களைத் தொகுத்து வைத்திருப்பதைக் காண மகிழ்ச்சியடைவதாகக் கூறினார்.

“நான் இன்று மறைமலை அடிகளின் நூல்நிலையத்தைப் பார்வையிட்டு மகிழ்ந்தேன். நூல்நிலையத்தின் அமைப்பு என்னைப் பெரிதும் மகிழ்வித்தது. அச்சில் இல்லாத பல பழைய நூல்கள் இந் நிலையத்தில் இருந்து இதை உயர்வுபடுத்திக்கொண்டிருக் கின்றன. அடிகள் தமிழுக்குச் செய்த, தமிழர்க்குச் செய்த, தமிழகத்திற்குச் செய்த தொண்டுகளுக்கு இந் நூல்நிலையம் ஒரு நினைவுச் சின்னமாக அமைந்துள்ளது. இதில் அடிகளின் திரு வுருவம் சிலையாக அமைந்திருக்கவேண்டும் என்பது எனது எண்ணம்.

“நண்பர் திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்களின் கண்காணிப் பில் இந் நூல்நிலையம் இன்னும் சிறந்து விளங்கித் தமிழகத்தில் ஒரு பெரிய நூல்நிலையமாக விளங்கவேண்டும் என விரும்புகின்றேன்” என்று பார்வையாளர் ஏட்டில் எழுதியுள்ளார்.

# [1]திருவள்ளுவர் உலகினர்க்குத் தரும் செய்தி

[டாக்டர், அ. சிதம்பரநாதன் செட்டியார், எம். ஏ., எம். எல். சி.]

கி. மு. முதல் நூற்றுண்டுக்கும் கி. பி. முதல் நூற்றுண்டுக்கும் இடைப்பட்ட காலத்தில் வாழ்ந்த திருவள்ளுவர் என்னும் தமிழ்ப் பேரறிஞரும் பெரும்புலவரும் பெருங்கவிஞருமாகிய பெரியார் ஆயிரத்து முந்நூற்று முப்பது அருங்குறட் பாக்கள் அடங்கிய திருக்குறள் என்னும் பெருநூலினை உலகத்தார்க்குத் தந்துள்ளார். அது உலக மக்கள் அனைவருக்கும் என்றென்றும் பயன்படக்கூடிய விழுமிய நூலாக உள்ளது. உலக மொழிகளிற் சிறந்த பலவற்றுள் இந்நூல் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. டாக்டர் ஜி. யூ. போப், எல்லிஸ், பாப்ளி போன்ற பேரறிஞர்கள் திருக்குறள் உலகத்தார்க்கு ஒரு சிறந்த வழிகாட்டி என்று கூறி அதனைச் சிறப்பித்துள்ளனர். டாக்டர் ஆல்பர்ட்டு சுவைட்சர் போன்ற மூதறிஞர்கள் இந்நூலினைப் பேரற நூல் எனப் போற்றி, உலக மக்களிடையே அன்பு வளர்தற்கும் அறியாமை அகலுதற்கும் இது எவ்வளவு சிறந்த கருவியாக இருந்துவருகிறது என்பதை எடுத்துக்காட்டி உள்ளனர். ஒருவரையொருவர் நன்கு அறிந்து கொள்ளுதலினாலும், மற்றவர்களுடைய குணத்தைப் பாராட்டிக் குற்றத்தை மறைக்கவும் மறுக்கவும் பழகிக் கொள்ளுதலினாலும், ஒருவரையொருவர் மதிப்பது உலகத்தில் வளர்ச்சி அடையும். அவ்வளர்ச்சியின் அடிப்படையில் உலக மக்களின் ஒற்றுமையாகிய பெருமாளிகையை எழுப்புதல் கூடும். உலகமக்களிடையே உடன்பிறப்பெண்ணத்தையும் அமைதியையும் செழிப்பினையும் நிலைநாட்டுதற்கு ஏற்றவகையில் திருவள்ளுவருடைய நூல் அமைந்துள்ளது என்பது குறிப்பிடத்தக்கது.

ஏறத்தாழ இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் இயற்றப்பட்டதாயினும், இந்நூல் இக்கால உலகத்தார்க்குக்கூட மிக்க கவர்ச்சி உடையதாய் இருக்கிறது. ஈண்டுச் சில சிறப்பான பகுதிகள்மாத்திரம் எடுத்துக் காட்டப்படும்.

இல்லறத்தில் வாழும் ஒருவரும் துறவறத்திற் செல்லும் ஒருவரும் வீடுபேறு எய்துதல் கூடும் என்பது திருவள்ளுவர் கருத்து. தீரத் துறந்தவர்களே நல்லவர்கள் என்றும், அவர்களுக்கே வீடுபேறு உண்டென்றும் திருவள்ளுவர் கூறினாரென்று சிலர் ஒருபக்கம் செப்பினும், திருவள்ளுவர் நல்வழியிலே

1. மாஸ்கோவில் அண்மையில் நடைபெற்ற கீழைநாட்டு மொழிப் பேரறிஞர்களின் உலக மாநாட்டில் ஆங்கிலத்தில் ஆற்றிய சொற்பொழிவின் சுருக்கம்.

இல்லறம் நடாத்துகின்ற ஒருவரது வாழ்க்கை நோற்றுத் துறவறத்தில் இயல்வாரது வாழ்க்கையைக் காட்டிலும் வலிமையுடைத்து என்று கூறியுள்ளார் என்பதை எடுத்துக்காட்ட விரும்பு

“ தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி
வலைப்பட்டார் மற்றை யவர்.”

என்று அவர் ஓரிடத்திற் கூறினாராயினும் இன்னோர் இடத்தில்,

“ ஆற்றின் ஒழுக்கி அறனிழுக்கா இல்வாழ்க்கை
நோற்பாரின் நோன்மை உடைத்து.”

என்று கூறியுள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது. மேலும், நாள்தோறும் ஏதாவதொரு நற்செயலை ஆற்றுகின்ற ஒருவர் இனிப் பிறக்கும் நாள் இல்லாது செய்துவிடுகின்றார் என்றும், பிறவியாகிய பெரிய குகையைத் தம்முடைய நற்செயலால் அடைத்துவிடுகின்றார் என்றும் அவர் கருதினரென்பது,

“ வீழ்நாள் படாஅமை நன்றாற்றின் அஃதொருவன்
வாழ்நாள் வழியடைக்குங் கல்.”

என்ற குறட்பாவினல் தெளிவாகும்.

திருவள்ளுவர் புறவேடங்களுக்கு வைத்த மதிப்பைக் காட்டிலும் அகப்பண்புகளுக்கு நிரம்பிய மதிப்பு வைத்திருந்தார் என்பது பல சான்றுகள் கொண்டு நிறுவக்கூடியது. ஒருவர் மனத்தினல் மாசற்றவராக இருக்க வேண்டுமென்பதையும், அவ்வாறு இருத்தல்தான் அறமென்பதையும், மற்றவையெல்லாம் வெறும் ஆரவாரத் தன்மையன என்பதையும் அவர் விளக்கியுள்ளார். ஒருவருடைய தலைமயிரை நீக்கிவிடுவதாலோ, நீட்டி வளர்த்து முடிப்பதாலோ ஒருவர் ஒழுக்கம் உள்ளவராக மதிக்கப்பட்டு விடமாட்டார் என்றும், உலகத்தாரால் வெறுக்கப்படும் தீயனவற்றை வெறுத்தொதுக்கி அகத்தூய்மை கொள்ளுதலே விரும்பத்தக்கது என்றும் அவர் கூறியுள்ளமை,

“ மழித்தலும் நீட்டலும் வேண்டா உலகம்
பழித்த தொழித்து விடின்.”

என்ற குறட்பாவால் அறியப்படும்.

நவர் உலகம் இருண்டது என்று கருதியவரல்லர். வாழ்வதற்கு உரியது உலகம் என்றும், வாழப்பிறந்தவன் மனிதன் என்றும் திருவள்ளுவர் கருதினர். இடர்ப்பாடுகளைப் பொடியாக்கி, துயரங்களை எதிர்த்துநின்று போராடி வெல்பவனே சிறந்த மனிதன் என்பது அவரது நம்பிக்கை. “இடுக்கண்

வருங்கால் நகுக" என்று கூறிய பெருமைக்குரியவர் திருவள்ளுவர். இயல்பிலேயே சிரிக்க முடியாமல் இருக்கின்ற மாந்தரைக்குறித்து இரக்கப்படுபவர் திருவள்ளுவர். சிரிக்க மாட்டாதவர்களுக்குச், சிரிக்க விரும்பாதவர்களுக்குப் பட்டப் பகல் கூட இருளாகத்தான் தோன்றும் என அவர் விளம்பி யுள்ளார் என்பதை எடுத்துக்காட்ட விழைகிறேன். உள்ள உவகையையும் நகைமுகத்தையும் கொல்லும் பகையாகச் சினம் இருக்கிறதென்று கூறி, அச்சினத்தினை வெல்ல வேண்டுமென்று விளம்பி, அவ்வகையான் மனிதன் மகிழ்ச்சியோடு உலகில் வாழ வேண்டுமெனத் தெளிவுபடுத்தியவர் அவர்.

விதியின் வெல்லலாகாத தன்மையை வற்புறுத்தியவர் திருவள்ளுவர் என்று கூறிச் சிலவேளைகளில் திருவள்ளுவருடைய குறட்பாக்கள் சில எடுத்துக்காட்டப்படுகின்றன.

"ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந் தான்முந் துறும்."

என்று அவர் கூறியிருப்பது மெய்யாயினும்,

"ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித்
தாழா துஞற்று பவர்."

எனக் கூறியிருப்பதும் மெய்யே. சிறிதுகூடச் சோர்வு இல்லாமல், குலையாமலும் உலையாமலும் பெருத்த முயற்சி கொள்பவர்கள் ஊழையும் தள்ளிவிட முடியும் என்ற கருத்தினை அழகுறத் திருவள்ளுவர் எடுத்துக்காட்டியுள்ளார். விதியினால் மனிதன் முழுதும் கட்டுண்டவன் என்றும், செயலுரிமை இல்லாதவன் என்றும் கூறுவது பொருந்தாது என்பது அவருடைய நம்பிக்கை போலும்! விதி என ஒன்று உண்டா யினும், விதிக்கப்பட்டதே நடக்கும் என்று கருதி மனிதன் செயலாற்றாது அயர்ந்து ஓய்ந்து கிடப்பதைத் திருவள்ளுவர் விரும்பியவரல்லர். விதியினால் ஒருபொருள் கிடைக்கக்கூடியதாக அமையவில்லை என்றாலும், ஒருவனுடைய முயற்சிக் கேற்பக் கூலி கிடைக்கும் என்றும், பெருமை வினையுமென்றும் அவர் வற்புறுத்தி மக்களை மனவெழுச்சி கொள்ளுமாறு செய் துள்ளார்.

திருவள்ளுவர் இயற்றியுள்ள ஊக்கமுடைமை, மடியின்மை, ஆள்வினையுடைமை, இடுக்கண் அழியாமை ஆகிய அதிகாரங்களில் அமைந்து கிடக்கும் குறட்பாக்களின் செறிந்த கருத்துக்கள் உள்ளத் தக்கவை. மனத்தில் ஊக்கமுடையவர்கள் உண்மையில் உடையவர் எனத் தக்கவர் என்றும், மனவெழுச்சி இல்லாதவர் வேறு எதனைப் பெற்றிருந்தாலும் பெற்றில்லாதவரைப் போல

மதிக்கப்படுவர் என்றும் அவர் கூறியுள்ளார். ஊக்கத்தை உறுதியாகக் கடைப்பிடிப்பவர்கள் ஏதாவதொன்றினை இழந்து விட்டாலுங்கூட, அவ்விழப்பிற்காக வருந்தமாட்டார்கள் என்றும், நடுங்காமல் குலையாமல் ஊக்கத்தைக் கடைப்பிடியாகக் கொள்ளும் ஒருவர் இருக்கும் இடந்தேடி ஆக்கம் பணிந்து வந்துறும் என்றும் அவர் சொல்லியுள்ளவை உலகத்தினருக்கொத்த அருங்கருத்துக்களாக அமைந்து கிடக்கின்றன. ஒருவர் வாழ்க்கையிற் கொள்ளும் குறிக்கோள்கள் மிகவும் உயர்ந்தனவாக இருக்கவேண்டுமென்றும், ஒருவேளை அக்குறிக்கோள்கள் நிறைவெய்தாமற் போனாலும் குற்றம் இல்லையென்றும், உயர்ந்ததைப் பெற உள்ளியது போதும் என்றும் குறிப்பிட்ட பெரியார் திருவள்ளுவர். சோம்பர், தனி மனிதனிடத்திலாயினும் ஒரு சமுதாயத்தினிடத்திலாயினும் ஒரு மக்களினத்தினிடத்திலாயினும் வந்து குடிபுகுமானால், அந்த மனிதன் அல்லது சமுதாயம் அல்லது மக்களினம் பகைவர்களுக்கு அடிமையாவது உறுதி என்று சொல்லி, மடியை மடியும்படி செய்ய வேண்டுமென்று கூறிய பெருமை திருவள்ளுவருடையது.

"இவ்வுலகில் ஆகாதன இல" என்று கூறி உலகத்தினர்க்கு வழிகாட்டியுள்ள உலகப் பேரறிஞர்களிடையே திருவள்ளுவருக்குச் சிறந்த இடமுண்டு. இவ்வுலகில் ஒருபொருள் அருமையுடையது என்று கருதி அக்காரணத்தால் தளராமல் இருக்க வேண்டுமென்றும், உண்மைமுயற்சி பெருமைதரும் என்றும் அவர் அன்று எழுப்பிய குரல் இன்றும் பல நாடுகளிற் கேட்கப் பட்டுக்கொண்டு இருப்பதால்தான், வானவெளிக் கப்பல்கள் போன்றனவும் உருவாகின்றன எனக் கருதுதல்கூடும். இடும்பைக்கு இடும்பை படாதவர் இடும்பைக்கு இடும்பை உண்டாக்குபவர் என்றீ திருவள்ளுவர் கூறியதன் சொல்லழகும் கருத்தழகும் நோக்கத் தக்கவை. துயரத்தையே தமக்கு இன்பமாகக் கொள்ளும் மனப்பண்பினை உண்டாக்கிக்கொண்டுவிடுகிற ஒருவர் தம்முடைய பகைவராலும் விரும்பத்தக்க பெருஞ்சிறப்புப் பெறுவர் என்ற உறுதியை எடுத்துக்காட்டி, வழிவழி மக்களை உரநெஞ்சம் கொள்ளுமாறு செய்த பெருமையுடையவர் திருவள்ளுவர்.

திருவள்ளுவர் இன்று உயிருடன் இருப்பவராயின், போரிட்டு அழிய முற்பட்டு நிற்கும் பல நாட்டினரை நோக்கி, அணுக்குண்டுகளும், நீர் அணுக்குண்டுகளும் இவைபோன்ற பிறவும் ஆகிய அழிப்புக்கருவிகள் மலிந்துள்ள இவ்வேளையில், நீங்கள் என் ஒருவரையொருவர் இகலித் தினவு தீர்த்துக்கொள்ள விரும்புகிறீர்கள்? என்றும், "ஒருவருடைய நாட்டை இன்னொரு

வர் அடிமைப்படுத்திக்கொள்ளவும் சேர்த்து எடுத்துக் கொள் வதற்கும் ஏன் முற்படுகிறீர்கள் ?" என்றும் கேட்பார் என மத

"ஒருபொழுதும் வாழ்வ தறியார் கருதுப
கோடியும் அல்ல பல."

எனக் கூறிய திருவள்ளுவர் வேறு எப்படித்தான் கேட்பார் ? தனித்தனி மனிதரும் சமுதாயங்களும் மனித இனங்களும் முயன்று உழைத்து வருவாய் தேடி வாழ்ந்து மகிழவேண்டு மென்று அவர் விரும்புபவராஜனாலும், பிறரை அழித்துப், பிறரைப் புண்படுத்தி, பிறருக்குத் தீமை விளைத்து ஒருவர் வாழ வேண்டுமென்பதை ஒப்புக்கொள்ளாதவர் அவர். நல் வழியில் வருவதே அறமென்றும், தீய வழியில் கிடைப்பது அறம் அன்றென்றும் எடுத்துப் பறைசாற்றியவர் திரு வள்ளுவர்.

"அறத்தான் வருவதே இன்பம்மற் றெல்லாம்
புறத்த புகழும் இல."

என்ற திருக்குறளைக் கருதுவீர்களாக !

எல்லாவற்றிற்கும் மேலாக, திருவள்ளுவர் தம்முடைய மேன்மையான நூலில் சாதியின் அடிப்படையில் அறங்களை வகுக்காமல் இருப்பது போற்றத்தக்கது. நூலின் பல்வேறு இடங்களில் உலகு என்னும் சொல்லினைக் கையாண்டு, உலகினரின் நன்மையைப்பற்றி எண்ணியுள்ளார். ஒரு நாட்டினர்க்கோ ஒரு தேசத்தார்க்கோ அல்லாமல் உலகத் தார்க்கே ஒத்த ஒரு பெரும் பனுவலாகத் திருக்குறள் திகழ்கிறது. சாதியின் அடிப்படையில் தண்டனைகளையும் பரிசில்களையும் வகுத்துக்காட்டும் பிறமொழி நூல்கள் சிலவற்றைப்போல் அல்லாமல், எல்லாச் சாதியாருக்கும் ஒத்தவகையில் அறத்தை விளம்பிய பெரும்பெருமை திருவள்ளுவருக்குரியது.

திருவள்ளுவரைப்பற்றியும் அவர் இயற்றிய திருக்குறளைப் பற்றியும் மேன்மேலும் அறிந்துகொள்ள வேண்டுமென்ற எண்ணத்தை இச்சொற்பொழிவு எழுப்புமானல், மிக்க மகிழ்ச்சியுடையவனவேன்.

இச்சொற்பொழிவைக் கேட்ட பேரறிஞர்களில் பலர் இதனை மிகவும் பாராட்டினர். மாஸ்கோ வானொலி நிலையத்திலும் இது சிறந்ததொரு சொற்பொழிவு என எடுத்தியம்பப்பட்டது. ருசியா வில் வெளியாகும் "பிறவாத" போன்ற பத்திரிகைகளும் பாராட்டி எழுதின.

(செல்வி சிலம்பு, ௩௫, பரல் ௩, ௧௨௧-ஆம் பக்கத் தொடர்ச்சி)

தமிழில் தமிழ் ஆங்கில அகராதி என்று குறிப்பிட்டிருப்பினும் ஆங்கிலத்தில் 'மலபார் ஆங்கில அகராதி' என்ற பெயரைக் கொடுத்துள்ளனர். அவ்வாறு தமிழை மலபார் என்று குறிப்பிடுவதால் யாருக்கும் ஐயம் உண்டாகுமோ என்ற ஐயம் ஆசிரியர்களுக்கே ஏற்பட்டதோ, இல்லையோ தங்கள் செயலுக்கு விளக்கத்தை அங்கேயே கொடுத்துள்ளனர். 'மலபார் ஆங்கில அகராதி, இதில் மலபார் மொழி என்று ஐரோப்பியரால் வழக்கத்தில் குறிக்கப்படும் தமிழ்மொழியின் சொற்களும் தொடர்களும் ஆங்கிலத்தில் விளக்கப்பட்டுள்ளன' என்று விளக்கம் கூறியுள்ளனர்.

ஐரோப்பியர் தமிழ்மொழியை மலபார் மொழி என்று குறிப்பிட்டனர் என்பதற்கு அச்சிட்டசான்றாக இது விளங்குகிறது. மேலைக் கடற்கரையில் வந்து இறங்கிய ஐரோப்பியர்களுக்கு அங்குப் பேசப்பெறும் மலையாளமொழிக்கும் தமிழ் நாட்டில் பேசப்பெறும் தமிழ்மொழிக்கும் பெரும் வேறுபாடு ஒன்றும் புலப்படவில்லை. எனவே மேலைக் கடற்கரையில் வழங்கி வரும் மலபார் மொழியே தமிழுமாகும் என்று எண்ணி விட்டனர். அத்துடன் பதினெட்டாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் மலையாளம் இன்றுள்ள அளவு தமிழினின்றும் நிறைந்த வேறுபாடுடையதாய் விளங்கவில்லை.

இவ்வகராதியில் 9,000 சொற்களுக்குப் பொருள் கூறப்பட்டுள்ளன. இலக்கியத்தில் பயிலப்படும் சொற்களோடு பேச்சு வழக்கிலுள்ள சொற்களுக்கும் பொருள் கூறப்பட்டுள்ளன. பெரும்பான்மையான மரபுத்தொடர்களும் சேர்க்கப்பட்டுள்ளன.

இவ்வகராதி 24 × 19 செ. மீ. அளவுடையது. 4,185 பக்கங்களுடையது. சென்னையில் உள்ள வெப்பேரியில் கி. பி. ௧௭௭௯ இல் அச்சிடப்பெற்றது. இவ் வகராதியில் பயன்படுத்தப் பட்டுள்ள எழுத்துக்கள் அனைத்தும் மர அச்சு எழுத்துக்களே. ஒற்றுக்களுக்குத் தலையில் புள்ளிகளே பயன்படுத்தப் பெறவில்லை. ஆங்கில எழுத்துக்கள் ஈய அச்சு எழுத்துக்களாகவே தோன்றுகின்றன. ஒவ்வொரு பக்கமும் இரண்டு பத்திகளாகப் பிரிக்கப் பெற்றுள்ளன.

இவ்வகராதி ஆங்கிலேயக் கிழக்கிந்தியக் கம்பெனியின் இயக்குநர் குழுவுக்குக் காணிக்கையாக்கப் பெற்றுள்ளது.

# 3. முதல் ஆங்கில - தமிழ் அகராதி

முதல் தமிழ் ஆங்கில அகராதியை இயற்றிய பெப்ரிசியசு, பிரிதாப்ட் என்ற இருவரும் அதன் முன்னுரையில் "ஆண்டவன் அருள் புரிந்தால் ஆங்கிலச் சொற்கள், தொடர்கள் இவற்றின் பொருள்களைத் தமிழில் விளக்கும் அகராதி ஒன்றையும் தொடர்ந்து வெளியிடுவோம்" என்று குறிப்பிட்டுள்ளனர். தமிழ் ஆங்கில அகராதி கஎஎ௯ இல் வெளியானதைத் தொடர்ந்து இந்த ஆங்கில — தமிழ் அகராதியும் கஎஅ௬ இல் வெளிவந்துள்ளது.

இவ் வகராதியின் முகப்புப் பக்கத்தில் ஆசிரியர் பெயர்கள் குறிக்கப் பெறவில்லை. எனினும் மேலே கூறியவாறு தமிழ் ஆங்கில அகராதியைத் தொடர்ந்து இது வெளிவந்துள்ளதாலும், இந் நூலின் தலைப்பும் "A Dictionary of the English and Malabar Languages" என்று தமிழை மலபார் என்று குறிப்பிட்டுள்ளதாலும் முற் கூறிய தமிழ் ஆங்கில அகராதியின் ஆசிரியர்களே இவ்வகராதிக்கும் ஆசிரியராக இருத்தல் கூடும் என்று கூறலாம்.

இவ் வகராதியில் பத்தாயிரத்திற்கு மேற்பட்ட ஆங்கிலச் சொற்களுக்கும், தொடர்களுக்கும் பொருள் கூறப்பட்டுள்ள தமிழ்ச் சொற்கள் பெரும்பாலும் பேச்சு வழக்கில் காணப்படுவன வாகவே உள்ளன.

தமிழ் மக்கள் ஆங்கிலத்தைக் கற்பதற்கும் புரிந்து கொள்வதற்கும் இவ் வகராதி பெரிதும் பயன்பட்டிருக்கும் என்பதில் ஐயமில்லை. சமயத்தைப் பரப்புவதற்காக இந் நாட்டிற்கு வந்த மேலை நாட்டினர் தங்களுக்கு இந் நாட்டின் மொழியைப் புரிந்து கொள்வதற்காக ஓர் அகராதியும், தங்கள் மொழியும் இந் நாட்டினர்க்குப் புரிய வேண்டுமென்று மற்றோர் அகராதியும் இயற்றி நப்பது அவர்களின் மொழித் தொண்டை வெளிப்படுத்து

இவ் வகராதி கஎஅ௬ இல் சென்னையிலுள்ள வேப்பேரியில் அச்சிடப் பெற்றுள்ளது. இதன் அளவு 24 × 19 செ. மீ. 282 பக்கங்கள் உடையது. இதுவும் மேற் கூறப்பட்ட தமிழ் - ஆங்கில அகராதியைப் போன்றே அச்சிடப்பட்டுள்ளது. சதுரகராதிக்கு முன்னரேயே அச்சிடப்பட்டுள்ள இவ் விரண்டு அகராதிகளும் தமிழ் மொழிக்குப் புதியதொரு பாதையைக் காட்டிப் பெருந் தொண்டு புரிந்துள்ளன.

## ஆராய்ச்சி அறிஞர் மயிலை சீனி. வேங்கடசாமி அவர்களின்

# மணிவிழா வேண்டுகோள்

தமிழ் ஆராய்ச்சி அறிஞர் உயர்திரு. மயிலை சீனி. வேங்கடசாமி அவர்களின் அறுபதாம் ஆண்டு நிறைவு நாள் நாளது சனவரித் திங்கள் முதல் வாரத்தில் வருகின்றது. கடந்த முப்பதாண்டுகளுக்கு மேலாகத் தளராது, தம்மை மறந்து தமிழ்ப்பணியாற்றி அரிய பல ஆராய்ச்சி நூல்களை இயற்றியுள்ள இப் பெரியாருக்குத் தமிழ்நாடு பெரிதும் கடமைப்பட்டுள்ளது.

தமிழர்தம் நன்றியறிதலை வெளிப்படுத்தும் வகையில் அவருடைய மணிவிழாவின்போது அவருக்குப் பொற்பதக்கம் அளித்துப் பொன்னாடை போர்த்தவும், அவர்தம் வாழ்க்கை வரலாற்றை வெளியிடவும், பாராட்டு வாழ்த்திதழ் படித்துத் தரவும் அறிஞர் பெருமக்கள் எண்ணியுள்ளனர்

தமிழ் வளர்ச்சியிலும் தமிழர் நல்வாழ்விலும் நன்னோக்கமுடைய பெருமக்கள் இவ்விழாச் சிறப்புற நடந்தேறப் பொருளுதவி புரியும்படி வேண்டுகின்றோம்.

அன்புள்ள,
மணிவிழாக் குழுவினர்.

நன்கொடை அனுப்பவேண்டிய முகவரி:
திரு. மா. இளஞ்செழியன்,
விரிவுரையாளர், பச்சையப்பன் கல்லூரி,
சென்னை-30.

---

## தென்னிந்திய தமிழ்ச்சங்கம், திருநெல்வேலி

# தமிழ்ப்புலவர் மாணவர் தேர்வு 1961

இச் சங்கத்தினின்றும் ஆண்டுதோறும் நடத்தப்படும் "தமிழ்ப் புலவர் மாணவர் தேர்வு" 1136 ஆம் ஆண்டு தைத்திங்கள் 17 ஆம் நாள் (30-1-61) திங்கட் கிழமை முதல் ஆறு நாட்கள் நடைபெறும். நம் தமிழகத்திலுள்ள புலவர் கல்லூரிகள் யாவும் தேர்வு இடங்களாகத் திகழும் சென்னை, திருநெல்வேலி போன்ற நகர்களிலும் தேர்வு நடைபெறும்.

புலவர் கல்லூரிகளிற் பயின்று சென்னைப் பல்கலைக் கழக வித்துவான் வகைத் தேர்வுகட்கு எழுதுகின்றவர்கள் அனைவரும் இச் சங்கத் தேர்வுகட்கும் 1960 திசம்பர் 30உக்குள் புலவர் குழுத் தலைவர் அவர்களுக்கு விண்ணப்பிக்கவேண்டும்.

தேர்வுக்கட்டணம்:—

வித்துவான் இறுதிநிலை ரூ. 3-00.
,, முதனிலை ரூ. 2-00.
,, புகுமுகம் ரூ. 1-00.

98, கீழைத்தேர்த் தெரு,
திருநெல்வேலி-6.

பு. சி. புன்னைவனநாதன்,
புலவர் குழுத் தலைவர்.

# திரு. மீ. ப. சோமுவுக்குப் பாராட்டு

அண்மையில் தொலைக்காட்சி முறையைப் பயிலும் பொருட்டும் மேனாட்டுக் கலைக்கழகங்களுடன் தொடர்புகொள்ளும் பொருட்டும் இங்கிலாந்து சென்று திரும்பிய திரு. மீ. ப. சோமசுந்தரம் அவர்களை வரவேற்கச் சென்னை மறைமலையடிகள் நூல் நிலையத்தில் தேநீர் விருந்தொன்று 14-11-60 அன்று மாலை அளிக்கப்பட்டது. டாக்டர், அ. சிதம்பரநாதன் செட்டியார், எம்.ஏ., எம்.எல்.சி. அவர்கள் தலைமை தாங்கினார்கள்.

கழக ஆட்சிப் பொறுப்பாளர் திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்கள் அனைவரையும் வரவேற்றுப் பேசுகையில், "திரு. சோமு அவர்கள் திருச்சி வானொலியில் முதலில் பணி ஏற்றுப் பின்னர்ச் சென்னை வானொலி நிலையத்திற்கு வந்தார்கள். அதிலிருந்து எங்களிடை நெருங்கிய தொடர்பு உண்டு. 'கல்கி' இதழின் ஆசிரியராகச் சிலகாலம் பணியாற்றினார்கள். அடுத்து 'நண்பன்' என்ற இதழை நடத்தினார்கள். இவர்களுக்கு இளமை முதல் திரு. டி. கே. சி. அவர்களின் தொடர்பும், திரு இராசாசி அவர்களின் தொடர்பும் ஏற்பட்டது. அவர்களின் ஆசியால் இன்று புகழ்பெற்று விளங்குகின்றார்கள். தொலைக் காட்சிப் பதிவுக் கலையைப் பயிலும் பொருட்டு மேலைநாடு சென்றவர் இலண்டன் கவிக் கழகத்தில் 2-11-60 அன்று மிகச் சிறப்பாகப் பேசி அக் கழகத்தின் தலைவர் திரு. இராபர்ட் ஆர்ம்ஸ்ட்ராங் அவர்களின் பாராட்டுதலையும் பெற்றிருக்கிறார். சைவத்திற்கும் தமிழுக்கும் பெருந்தொண்டாற்றிய மறைமலையடிகளின் நூல்நிலையத்தில் சைவம் தமிழ் ஆகிய இரண்டிலும் பற்றுடைய திரு. சோமு அவர்களை வரவேற்பது மிகப் பொருத்தமானதாகும்" என்று ிப்பிட்டார்கள்.

டாக்டர் அ. சிதம்பரநாதன் செட்டியார் தம் தலைமையுரையில் "திரு. சோமு தமிழ் நாட்டிற்கு இருபத்தைந்து ஆண்டுகட்கு முன்னரேயே அறிமுகமானவர். சிறந்த எழுத்தாளர், பேச்சாளர், கலைஞர், சுவைஞர் என்ற முறையில் தமிழ்நாடு அவரை நன்கறியும். அவரைத் திருச்சியில் பணியாற்றியபோதே நான் அறிவேன். அவர் விடா முயற்சியாலும் பெரும் உழைப்பாலும் முன்னேறி இன்று சென்னை வானொலி நிலையத்தில் பணியாற்றி வருகின்றார். வானொலிக்கும் மக்களுக்கும் இடையே சிறந்த தொடர்பை ஏற்படுத்தியவர் சோமு. மக்கள் நிலைக்குத்தக அவர்கள் எதிர்பார்ப்பதைத் தருபவர். பி. பி. சி-யில் பயிற்சி பெறுவதற்காக இலண்டன் சென்றிருந்தார்.

"ஆங்கிலேயர்கள் பழைமையை விரும்புகிறவர்கள். அங்கு இப்பொழுது பவுன் என்ற நாணயம் வழக்கிலிருப்பினும் அவர்கள் கணக்கிடும்போது வழக்கற்றுப்போன கினி நாணய முறையி லேயே கணக்கிட்டுக் கடைசியில் பவுனுக்கு மாற்றிக்கொள்வர்.

"சோமு, தொலைக்காட்சி தமிழ்நாட்டில் புதிதாக நிறுவப் போகும் இச்சமயத்தில் 'அதை எவ்வாறு பயன்படுத்தலாம் எந்த அளவு மக்களை முன்னேற்ற முடியும்' என்பதைக் கற்றுக்கொள்ளச் சென்றார். மக்களுக்குப் படிப்பு மட்டும் போதாது, பண்பும் வேண்டும். அந்த முறையில் சோமு சிறந்த பண்பாளர். அத் தோடு அவர் இலக்கியச் சுவைஞர் கூட. கவிதையைச் சுவைக்க நன்கு அறிந்தவரே மக்களை இலக்கியச் சுவை காணுமாறு செய்ய முடியும். அதற்கேற்றவாறு திரு. சோமு இலண்டன் கவிக் கழகத்தின் சார்பில் சிறந்த சொற்பொழிவாற்றியுள்ளார். ஆர்ம்ஸ்ட்ராங் எழுதியதைப்போல மக்கள் மனத்தைக் கவர்ந்து வந்திருக்கின்றார். இலக்கியச் சுவையைத் தட்டி எழுப்பி வந்திருக் கின்றார். அது தமிழ் நாட்டில் நல்ல தமிழை வளர்க்க உதவுமென எதிர்பார்க்கிறேன்" என்று கூறினார்.

திரு. சோமு சொற்பொழிவாற்றும்போது கடந்த ஆறு மாதங்களாகத் தாம் இலண்டனில் பெற்ற அனுபவங்களைக் கூறினார். "தலைவரும் சுப்பையா பிள்ளை அவர்களும் என்மீது தம் அன்பையெல்லாம் கொட்டினார்கள். அவர்கள் வாழ்த்து வழிநடத்த வேண்டுமென்று இறைவனை இறைஞ்சுகின்றேன். இலண்டனில் நடந்தவற்றில் இரு முக்கிய நிகழ்ச்சிகளை மட்டும் இங்குக் குறிப்பிட விரும்புகின்றேன். சமயத்தையும் தமிழையும் வளர்த்த பெருமகனாரின் நூல்நிலையத்தில் இந்த இரண்டையும் காணிக்கையாகச் செலுத்துகின்றேன்.

"ஆங்கில மக்கள் பழைமையான வழக்கங்களை அளவற்ற பற்றோடு பிடித்துக்கொண்டிருக்கின்றார்கள். சான்றாக இலண்டன், ஸ்காட்லண்டு ஆகிய இரு நகர்களினுள்ளும் அரசரோ அரசியோ அவற்றின் மேயர்களிடம் அனுமதிபெற்றே நுழைவர். இன்றும் அவ் வழக்கம் நடைமுறையில் இருக்கின்றது.

"'யார்க்' என்ற ஊரிலுள்ள மியூசியத்திற்குச் சென்றிருந் தேன். அங்குப் பழைமையான கண்ணாடிப் பெட்டி ஒன்றிருப்ப தாகக் காட்டினார்கள். அதில் சில படிமங்களுக்கிடையில் ருத்தி ராட்ச மாலை ஒன்றிருந்தது. என்னை அழைத்துச் சென்ற செய்தித்துறை அதிகாரியிடம் அது எப்படி வந்தது என்று கேட்டேன். அவர் அந்நிலையத்தின் அதிகாரியைக் கேட்போம் என்று அழைத்துச் சென்றார். அதிகாரி பழைய

பதிவேடுகளைப் பார்த்து அம் மாலை அந் நகரின் மேயராக 350 ஆண்டுகட்கு முன் இருந்த ஒருவரால் அளிக்கப்பட்டது என்று கூறினார். அந்த மேயர் கிழக்கிந்தியக் கம்பெனியில் முக்கியப் பொறுப்பேற்றுச் சில ஆண்டுகள் தென்னிந்தியாவில் தங்கியிருக்கின்றார். அப்பொழுது அந்த ருத்திராட்ச மாலையை அவர் அணிந்திருக்கின்றார். ஏனெனில் அம் மாலையில் 54 மணிகள் காணப்படுகின்றன. அதன் கீழ் 5 சிவமணிகளைச் சிலுவை வடிவில் அமைத்துக் கோத்திருக்கின்றார். இதிலிருந்து அவர் அதன் நன்மையையுணர்ந்து தம் மதத்திற்கேற்பச் சிலுவைச் சின்னம் அமைத்து அணிந்துகொண்டிருக்கிறார் எனத் தெரிகின்றது. அன்று பகல் எனக்கு விருந்தளித்த மேயரிடம் ருத்திராட்ச மாலையின் சிறப்புக்களைப் பற்றிக் கூறினேன். அவர் அதை டைப் செய்வித்து 5 படிகள் எடுத்து ஒன்றை அக் கண்ணாடிப் பெட்டியில் ஒட்டச் செய்திருக்கிறார். 'யார்க் நியூஸ்' என்ற பத்திரிகையிலும் இது வெளியாகியது.

"அடுத்துத் தமிழுக்குப் பெருந்தொண்டாற்றிய போப் பெருமகனாரின் கல்லறையைக் காண வேண்டுமென்று பெரும் பாடுபட்டேன். பலரிடம் விசாரித்த பிறகு யார்க் நூலகர் அக் கல்லறை வால்டன் தெருவிலுள்ள சைபல்கர் செமிட்ரியில் இருப்பதாகக் கூறினார். அங்குச் சென்றபொழுது அச் செமிட்ரியின் முன் சிகரெட் விற்றுக் கொண்டிருந்த பெண்மணி இச் செமிட்ரியில் 1500 கல்லறைகள் உள. 3800 பேர் அடக்கம் செய்யப்பட்டிருப்பதால் இதை மூடிவிட்டார்கள். காவலாளரை அணுகிப் பாருங்கள் என்று கூறினாள். காவலாளரை அணுகித் திறக்கச் செய்து பல கல்லறைகளைப் பார்த்தும் போப்பின் கல்லறையைக் கண்டுபிடிக்க முடியவில்லை. கடைசியில் காவலாள் முட்புதர் செடி கொடிக்கு இடையில் இருந்த கல்லறையைக் கண்டுபிடித்துக் காட்டினான். மண் படிந்திருப்பதைப் பார்த்த என்னுடன் வந்த கோபாலகிருஷ்ணன் என்ற நண்பர் தம் கைக்குட்டையைத் தண்ணீரில் நனைத்து அதைத் துடைத்தார். அதில் 'இக் கல்லறை தென்னிந்திய தமிழன்பர்கள் அனுப்பிய பணத்தைக் கொண்டே கட்டப்பட்டது' என்று குறிக்கப்பட்டிருக்கிறது. அதன் பக்கத்தில் அவர் மனைவியின் கல்லறையும் உள்ளது. அவரும் தமிழ்ப் பற்றுடையவர். சலவைக் கல்லினால் ஆய போப்பின் கல்லறையில் அவர் ஒரு 'தமிழ் மாணவன்' என்று குறிக்கப்பட்டுள்ளது. அத்தகைய பெருமகனாரின் கல்லறையை வணங்கி மீண்டேன்" என்று குறிப்பிட்டார்.

நூலகர் நன்றிகூற வரவேற்பு விருந்து இனிது முடிந்தது.

## வாழ்த்துச் செய்திகள்

### திரு. சி. இராசகோபாலாச்சாரியார் அவர்கள்

"நண்பர் சோமு அவர்களின் இலக்கியத் தொண்டும் தெய்வ பக்தியும் அறிந்தவர்களில் நான் ஒருவன். அவர்களை ஆசீர்வதிக்கும் கூட்டங்களில் நான் கலந்து கொள்ள சவுகரியமில்லாவிடினும் என்னுடைய வாழ்த்தும் அவற்றில் சேர்ந்துகொள்ள வேண்டுமென்று ஆசைப்படுகிறேன்."

### திரு. மயிலை சிவமுத்து அவர்கள்

"சென்னை வானொலி நிலையத்தின் வாயிலாகவும், தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் மூலமாகவும் திரு. சோமு அவர்கள் ஒப்பற்ற தமிழ்ப் பணிபுரிந்து வருதல் கண்டு அவர்கட்கு என் பாராட்டும் வாழ்த்தும் வணக்கமும் தெரிவித்துக் கொள்கின்றேன்."

### சென்னை நகராண்மைக் கழகத் துணை ஆணையாளர்
### திரு. நா. சங்கரன் அவர்கள்

"என் மனமார்ந்த பாராட்டையும் மகிழ்ச்சியையும் நண்பர் திரு. சோமு அவர்களுக்குத் தெரிவிக்குமாறு கோருகிறேன்."

### திரு. மீ. ப. சோமு அவர்கட்கு
### இங்கிலாந்து நாட்டுக் கவிக் கழகத் தலைவரின் கடிதம்

### குறிப்பு

இங்கிலாந்து நாட்டிலுள்ள முக்கியமான இலக்கிய வட்டங்களில் மிகவும் புகழ்பெற்றது "The Poetry Society" என்ற 'கவிக் கழகம்' ஆகும். லண்டனில் உள்ளது இதன் தலைமைப் பணிமனை. இந்தக் கவிக் கழகத்தின் உறுப்பினர்கள் அனைவரும் புகழ் நிரம்பிய எழுத்தாளர்களும், ஆங்கிலப் பத்திரிகைகளின் ஆசிரியர்களும் ஆவார்கள். இதன் தலைவராகிய ராபர்ட் ஆர்ம்ஸ்ட்ராங் என்பார் ஆற்றல் நிரம்பிய பன்மொழிப் புலவர். இங்கிலாந்தின் புலவர்களால் பெரிதும் மதிக்கப்பெறும் இலக்கிய இலக்கணப் பண்டிதர் இவர். கவிபுனையும் ஆற்றலும், கலைகளின் ஆய்வுத் திறனும் நிரம்பிய இம் முதுபெரும் புலவர் சோமு அவர்களின் ஆங்கிலச் சொற்பொழிவைப் பாராட்டி மனமகிழ்ந்து எழுதியுள்ள கடிதம் இது. சொற்பொழிவு நடந்த தேதி: 28-10-60.

தேவாரம், திருவாசகம், திருக்குறள், திருமூலர் திருமந்திரம், மற்றும் தமிழ்ப் புலவர் பெருமக்களின் அரிய பாடல்கள் பலவற்றையும் குறித்துத் தக்க மொழிபெயர்ப்புக்களுடன் ஏறக் குறையத் தொண்ணூறு நிமிடங்கள் நிகழ்ந்த இச் சொற்பொழிவானது இருநூற்றுக்கும் மேற்பட்ட ஆங்கிலப் புலவர்கள் அடங்கிய இங்கிலாந்து இலக்கிய மன்றத்தை எங்ஙனம் கவர்ந்துள்ளது என்பதற்கு இக் கடிதம் ஒரு சான்றாகும்.

**ROBERT ARMSTRONG**
President,
The Poetry Society, London.

LONDON
*Dated: 2nd Nov., 1960*

Dear Somu,

I send all my finest wishes for your voyage home and for the success of all you may undertake. But first let me say that the Poetry Society have never had a more splendid occasion than your presentation of Indian poetry and philosophy. It was a revelation to every one and myself included, for even though in meeting you I had found a warm and excitingly creative friend, your own native humility and humour disguised your powers of audience projection. From the moment of that sweet invocation by Saraswathi Madhavan you captured everyone and held them even as the ancient mariner held the wedding guest! I have never heard better lecturing and yet not lecturing; but a dedicated, saturated poet shedding light for an enthralled gathering on the subject of his heart with perception, delicacy and delight.

My heart went out to you for your charm, your wisdom and your vision. I must never let you go and I will write to you in Madras to tell you how we as poets are faring here in England and to learn of your progress as you go from strength to strength for I am sure, as a bridge between your great country and my own, your Tamil people and other races, both of the East and West, you have been called to very great achievements indeed. The Poetry Society through your coming had a window opened for them that they will use and pursue. Whenever you come again to England you will be our more than welcome guest and for my own part and that of my wife, we shall welcome you as a brother.

Perhaps it was granted to us in spite of difference in background, race and experiences to find a wave length of harmony - but whatever it was, it has been a great joy to have known you and I send my blessings with my bonvoyage.

Ever,
*(Sd.)* **Robert Armstrong.**

ராபர்ட் ஆர்ம்ஸ்ட்ராங் நவம்பர் இரண்டு

தலைவர், 1960

கவிக் கழகம், லண்டன்.

அன்புள்ள சோமு !

நீங்கள் தாய்நாட்டுக்குப் புறப்படுகிற சமயத்தில் உங்களுக்கு என் நல்வாழ்த்துக்களை அனுப்புகிறேன். எடுத்த காரியம் யாவினும் வெற்றி எய்துக !

முதற்கண் ஒன்று கூற விரும்புகிறேன். தாங்கள் வந்து நிகழ்த்திய "கவிதையும் தத்துவமும்'' என்ற சொற்பொழிவைக் காட்டிலும் சிறப்பான ஒரு வாய்ப்பு எங்கள் கவிக்கழகத்துக்கு இதுவரை கிட்டிய தில்லை. எங்கள் ஒவ்வொருவருக்கும் அது ஓர் எதிர்பாராத உணர் வாக இருந்தது. எனக்குமே அது எதிர்பாராத அனுபவமாகவே இருந்தது ஏனென்றால் உங்களைக் கண்டு பேசி அன்பும் கலையாக்கத் திறனும் கொண்ட நண்பர் என்பதைத் தெரிந்துகொண்டிருந்தேன் என்றாலும், உங்களுடைய இயல்பான அடக்கத்திற்குள்ளும் உங்க ளுடைய நகைச்சுவைக்குள்ளும் உங்களது மேடைக் கலையாற்றலை அதுவரை மறைத்து வைத்துக்கொண்டிருந்தீர்கள் ! ஆனால் சரசுவதி மாதவன அவர்கள் துதிப்பாடல் ("மாசில் வீணையும்'') பாடிய அந்த வினாடியிலிருந்து நீங்கள் எங்கள் ஒவ்வொருவரையும் அப்படியே கொள்ளைகொண்டுவிட்டீர்கள் ! முதிய மாலுமி மணமகனைக் கவர்ந்த கதையைத்தான் அதற்கு ஒப்பிடுவேன். உங்களுடைய சொற்பொழிவை விட உயர்ந்த ஒரு சொற்பொழிவை நான் இதுவரை கேட்டதில்லை. அதை ஒரு சொற்பொழிவு என்றே கூறமாட்டேன். மனம் ஒன்றிய வனும் முழு நிறைவு பெற்றவனுமான ஒரு கவிஞன் தனது உள்ளத் திறகு உகந்த பொருளைப்பற்றி உணர்வு, கலையழகு, களிப்பு இம் மூன்று பண்புகளும் துலங்கும்வண்ணம் மனம் மயங்கிக் கேட்கும் மக்கள் கூட்டத்திற்கு ஒளி வீசினான் என்றே அதைச் சொல்வேன்.

உங்களுடைய வனப்பு, மதியாற்றல், உங்களுடைய ஞான நோக்கு இவற்றை நாடி என் இதயம் ஓடியது. உங்களை இந் நாட்டிலிருந்து அனுப்பவே மனமில்லை. எனினும், இனி இங்கிலாந்தின் கவிஞராகிய நாங்கள் இங்கே என்ன செய்துவருகிறோம் என்பதைத் தெரிவிக்கவும், உங்களுடைய முன்னேற்றத்தைத் தெரிந்துகொள்ளவும் சென்னைக்கு எழுதுவேன். உங்களுடைய பெருநாட்டுக்கும் எனது நாட்டுக்கும், உங்கள் தமிழ் மக்களுக்கும் பிறருக்கும், கீழை நாடுகளுக்கும் மேலை நாடுகளுக்கும் இடையே ஒரு பாலமாகத் திகழ்ந்து நீங்கள் எதிர்காலத் தில் மேலும் பல அரிய சாதனைகளைச் செய்யப் போகிறீர்கள் என்பது உறுதி. உங்களுடைய வரவினால், எங்கள் கவிஞர் கழகத்துக்கு ஒரு புதிய சாளரம் திறந்தது. இனி அதை மேலும் மேலும் நன்கு பயன் படுத்துவோம். நீங்கள் இனிமேல் இங்கிலாந்துக்கு எப்பொழுது வந்தாலும் எங்கள் கழகத்தின் அருமை விருந்தாளிக்கும் மேலாக விளங்குவீர்கள் நானும் என் மனைவியும் உங்களை ஒரு சகோதரராகவே கருதி வரவேற்போம்.

இனத்திலும், வளர்ப்பிலும், சூழ்நிலையிலும் வேறுபட்டிருந்துங் கூட நமக்குள் ஒரு நேய அலைவரிசையின் இணையொலியைக் கண்டு பிடிக்கும் பேறு எங்களுக்குக் கிடைத்தது. உங்களை அறிந்துகொள்ள நேர்ந்ததை ஒரு பெருமகிழ்ச்சியாக மதிக்கிறேன். என் நல்வாழ்த் துக்கள். உங்கள் பயணம் நன்முறையில் அமைக.

என்றும் தங்களுடைய,

ராபர்ட் ஆர்ம்ஸ்ட்ராங்.

# சங்கப்பாடல்கள் மொழியமைப்பு

[திரு. தி. நா. அறிவுஒளி]

(செல்வி சிலம்பு, நடு, பரல் உ, எந ஆம் பக்கத் தொடர்ச்சி)

## 6. செலச் சொல்லல்

மொழி நுட்பத்தோடு சொல்லுகின்ற சொற்கள் கேட்போர் உள்ளத்தை விட்டு அகலவே அகலாது. அந்தகைய அரிய சொல்லாட்சிகளையே 'மறைமொழிகள்', 'பொன்மொழிகள்', 'மரபு மொழிகள்' எனவெல்லாம் பாராட்டுகிறோம். ஆயிரக் கணக்கான ஆண்டுகளாகப் பேச்சு வழக்கில் பழமொழிகள் நாட்டில் நிலைபெற்று, வாழ்ந்து வருவதன் காரணம் அப் பழமொழியின் 'செலச் சொல்லும் ஆற்றலே' ஆகும். மாற்றார் உள்ளத்தின் அடி ஆழம் வரை வேர்விட்டுப் பரந்து சென்று பதியும் வண்ணம் பேசுகின்ற பேச்சே 'செலச் சொல்லல்'. இப் பெயரை நமக்குக் கண்டுபிடித்து வழங்கியவர் வள்ளுவச் சான்றோரே! அவர்க்கு நாம் என்ன நன்றி செலுத்தல் ஒல்லும்? இச் செலச் சொல்லும் முறை 'சொல்லேர் உழவர்க்கு' மட்டுமின்றி, ஏனை 'எழுத்தேர் உழவர்'களுக்கும் உரிய இலக்கணமே. 'செலச் சொல்லல்' என்ற சொல்லாட்சியே நுண்ணிய பொருளாழம் உடையது; அகழ்ந்துணர்தற்கரிய பல்வகை நயமான கருத்தை வழங்கத்தக்கதாக உள்ளது. செலச் சொல்லும் திறன் அமையுமாயின், எழுதும் எழுத்தெல்லாம் இலக்கியக் கருவூலமாகிவிடும்! இனி, வள்ளுவர் செலச் சொல்லலைப் பற்றிக் கூறியவைகளை நோக்குவோம் :

"எண்பொருள வாகச் செலச்சொல்லித் தான்பிறர்வாய்
நுண்பொருள் காண்ப தறிவு." (குறள் : ௪உ௪)

"கற்றுக்கண் ணஞ்சான் செலச்சொல்லிக் காலத்தாற்
றக்க(து) அறிவதாந் தூது." (குறள் : ௬அ௬)

"புல்லவையுட் பொச்சாந்துஞ் சொல்லற்க நல்லவையுள்
நன்கு செலச்சொல்லு வார்." (குறள் : எ௧௬)

"கற்றாருட் கற்றார் எனப்படுவர் கற்றார்முன்
கற்ற செலச்சொல்லு வார்." (குறள் : எஉஉ)

"கற்றார்முன் கற்ற செலச்சொல்லித் தாங்கற்ற
மிக்காருள் மிக்க கொளல்." (குறள் : எஉ௪)

"பல்லவை கற்றும் பயமிலரே நல்லவையுள்
நன் கு செலச்சொல்லா தார்." (குறள் : எஉஅ)

"உளர்எனினும் இல்லாரொ(டு) ஒப்பர் களன்அஞ்சிக்
கற்ற செலச்சொல்லா தார்." (குறள்: ௭௩௦)

இச்செலச் சொல்லும் திறனுக்குச் சான்றாகத் திருக்குறளே விளங்குவது தமிழ் செய்த தனிப்பெருந் தவமேயாகும்.[1] செலச் சொல்லும் மொழியமைப்பிற்கு,

[2] "நன்னலந் தொலைய நலமிகச் சாஅய்
இன்னுயிர் கழியினும் உரையல்; அவர்நமக்கு
அன்னையும் அத்தனும் அல்லரோ? தோழி!
புலவிய தெவனோ அன்பிலங் கடையே."
(குறுந்தொகை: ௯௩ அள்ளூர் நன்முல்லையார்)

---

1. திருக்குறளில் 'செலச் சொல்லல்' மொழியமைப்புக்குச் சான்றுகள் சில:—அறத்தான் வருவதே இன்பம் (௩௯), அறன் எனப் பட்டதே இல்வாழ்க்கை (௪௯), சிறை காக்கும் காப்பு எவன் செய்யும் மகளிர் நிறைகாக்கும் காப்பே தலை (௫௭), அன்பிற்கும் உண்டோ அடைக்குந் தாழ் (௭௧), அன்பீனும் ஆர்வமுடைமை (௭௪), அன்பின் வழியது உயிர்நிலை (௮௦), ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்படும் (௧௩௧), ஒருபொழுதும் வாழ்வது அறியார் கருதுப கோடியும் அல்ல பல (௩௩௭), தூஉய்மை என்பது அவாவின்மை (௩௬௪), அஞ்சுவ தோரும் அறனே ஒருவனை வஞ்சிப்ப தோரும் அவா (௩௬௬), முகத்திரண்டு புண்ணுடையர் கல்லாதவர் (௩௯௩), கேடில் விழுச் செல்வம் கல்வி (௪௦௦), கல்லாதான் சொற்கா முறுதல் முலையிரண்டும் இல்லாதாள் பெண்காமுற் றற்று (௪௦௨), அறிவற்றங் காக்கும் கருவி (௪௨௧), நன்றின்பால் உய்ப்பது அறிவு (௪௨௨), அஞ்சுவது அஞ்சாமை பேதைமை (௪௨௮), அறிவுடையார் எல்லாம் உடையார் அறிவிலார் என்னுடைய ரேனும் இலர் (௪௩௦), அணங்குகொல் ஆய்மயில் கொல்லோ கனங்குழை மாதர்கொல் மாலும் என் நெஞ்சு (௧௦௮௧), கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியும் ஐம்புலனும் ஒண்டொடி கண்ணே உள (௧௧௦௧), ஊடல் உணர்தல் புணர்தல் இவைகாமம் கூடியார் பெற்ற பயன் (௧௧௦௯), மலரினும் மெல்லிது காமம் (௧௨௮௯), ஊடுதல் காமத்திற் கின்பம் (௧௩௩௦).

2. மேற் குறுந்தொகைப் பாடலின் பொருள்: "தோழியே! தலைவர் பரத்தைமை காரணமாக நம் நல்லழகு தொலைந்து, இனிமையான ஆருயிர் நீங்குவதாயினும், நம் நல்ல நாணை உணர்ச்சி அழியுமாறு நாம் ஊடியுள்ளோம் என நீ கூறவேண்டாம். நம் தலைவர் நமக்குக் காதலர் என்ற உறவுமட்டுமா? உறவினர் அல்ல. நம் அன்னையும், தந்தையும் போலச் சிறப்புடைய உறவினராயிற்றே நமக்கு! ஆகவே, அவர் நம்பால் அன்பில்லாதவராக உள்ளபோது, நம் ஊடல் ஒரு பயனையும் விளைவிக்காதே."

[இப் பாடலில் தலைவி மிக நுண்ணிதாக 'இகழ்ச்சிக் கிண்டல்' ஊடாடப் பேசுகிறாள். புகழ் மொழிகளாலேயே எதிரியினை இகழ்கின்ற மொழிநுட்பத்தை இப் பாடலில் அள்ளூர் நன்முல்லையார் மிகத் திறமையாகக் கையாண்டு வெற்றி பெற்றுள்ளார். எதிரியின் உள்ளத்தின் ஆழத்தில் தைக்கக்கூடிய முறையில் கருத்துக்களைப் பொதிந்துள்ள முறையே செலச் சொல்லல்! 'தலைவர் நமக்குத் தாயும் தந்தையும் அல்லரோ?' என்ற பகுதி மிக நுட்பமான உணர்வும் உண்மையும் சுட்டுவது.]

அவ்வையார் 'செலச்சொல்லும்' மொழியமைப்போடு பல பாடல்களைத் தமிழுக்கு வழங்கியுள்ளார். அவர் மொழியிலே வெறியும் வேகமும் உணர்ச்சிப் புயல்களும் சுழன்று சுழன்று வீசி மோதக் காணலாம்.

> [1]"உள்ளின் உள்ளம் வேமே; உள்ளா
> திருப்பின்எம் அளவைத் தன்றே; வருத்தி
> வான்றோய் வற்றே காமம்
> சான்றோர் அல்லர்யாம் மரீஇ யோரே." (குறுந்தொகை: ௧0௨)

"சொல்லிய சொல்லோ சிலவே" என்று ஒரு பழம்பாடலில் வரும் கருத்து இந்த அவ்வை பாடலைக் கற்கும்போது நினைவில் உறுகிறது. சில சொல்லாயினும், பல பொருட்களை விளக்கும் மேதை வியக்கத்தக்கது. பாடிய பாடலின் அளவோ சிறிதே. ஆயின், அதன் உணர்வும், சுவையும், அழகும், நயமும், வேகமும் வான்றோய் அளவினதென்பதை நுண்பொருளுணர்வோர் அறிய முடியும்.

உணர்ச்சி, குறித்த அளவுக்குமேல் பெருகும்போது, பேச்சாற்றல் குன்றி, அவ்வுணர்வுகளை விளக்க உலகிலேயே ஈடிணையில்லாத 'ஓரிரு சொற்களை' மட்டும் உதிர்க்கும் நிலை அமையும் என்ற உண்மையை அவ்வையாரின் இப்பாட்டு மெய்ப்பிக்கிறது. தமிழ்க் கவிஞர்கள் உணர்ச்சியுருவான பாடல்கள் எழுதுதற்கு மேற்பாடலைத் தம் மனத்துள் இருத்திக்கொள்வது நலமாகும்.

வரலாற்று மேதை பரணர் பெருமானும் 'செலச்சொல்லும்' கலையில் முதலிடம் பெறத்தக்கவராவார். இவ்வாற்றல் பரணர் பால் செறிந்திருந்தமையாற்றான் வரலாற்றுச் செய்திகளை முறை கெடாது, எழிலொழுக இலக்கியப் பாடல்களிடைப் பொன்னணியிலே பன்மணிகளை ஓவியத்திறனோடு பதித்து, எழில் நகை உருவாக்கும் பொற்கொல்லக் கலைஞர்போல் பதித்துத் தமிழகத் ...ர்.

1. பொருள்: "தோழீ! நம்மைப் பிரிந்து—மறந்து விட்டிருக்கும் தலைவரை நாம் நினைத்துப் பார்க்கையில், 'அவர் பிரிவாகிய' பெருந் தீ நம்மைச் சுடுவதால் என் நெஞ்சம் வெந்து விடுகிறது. அதற்கு மாறாக, அவரை எண்ணாமலே இருப்போம் என்றாலோ, அவ்வாறிருக்கக் கூடிய 'சிறப்பான ஆற்றல்' என்னுற்றலுக்குட்பட்டதாக இல்லை. ஆகவே, எப்போதும் அவரையே எண்ணி வருந்துகிறேன். இவ்வாறு பிழைக்கும் வழியில்லாமல் இடையறாது காமநோய் எம்மைத் துன்புறுத்தி, மேன் மேலும் வளர்ந்து கொண்டே சென்று வானை முட்டுமளவுக்குப் பெருகி விட்டது போலத் துன்பம் தருகிறது. இவ்வகையில் நாம் துன்பமுற விட்ட நம் தலைவர் அருளுணர்வுடைய சான்றோர் அல்லர். (அவர் கொடியவர்!)"

'அமைந்த நினைவு வேகம்' செலச் சொல்லலுக்கு மிக இன்றியமையாதது என்ற உண்மையைப் பரணர் பாடலிலிருந்து நாம் தெளியலாம்.

[1]"இல்லோன் இன்பம் காமுற் றாங்கு
அரிதுவேட் டனையால் நெஞ்சே! காதலி
நல்லள் ஆகுதல் அறிந்தாங்கு
அரியள் ஆகுதல் அறியா தோயே!"

(குறுந்தொகை : ௧௨௦ - பரணர்.)

வறுமை கொடிது. இளமையில் வறுமை மிகமிகக்கொடிது. இந்நிலையில் வறியவன் பேரின்பங்களை அடைய ஏங்கிக், கனவு காண்பது எத்தகு நகைக்கிடமான செயல்! இவ்வுணர்வை, இரக்க உணர்வோடு குழைத்து, மாண்புள்ள சொல்லாட்சியோடு எளிய மொழியமைப்பில் 'செலச் சொல்லிய' பரணர் பாடலே பாடல்!!

பிரிவாற்றாமை உணர்ச்சியை அறிவாற்றலோடு அழகிலக்கிய ஓவியமாக இசைக்கும் புகழ்சால் புலவர், பாலைபாடிய பெருங் கடுங்கோ. அவர் பாடல்களும் 'செலச் சொல்லும்' ஆற்றல் மிக்கன.

[2]"வினையே ஆடவர்க் குயிரே; வாணுதல்
மனையுறை மகளிர்க்கு ஆடவர் உயிரென
நமக்கு உரைத்தோரும் தாமே,
அழாஅல் தோழி அழுங்குவர் செலவே."

(குறுந்தொகை : ௧௩௫)

---

1. "நெஞ்சே, நம்மால் காதலிக்கப்பட்டவள் பெண்மை நலம் முழுதும் அமைந்தவள் என்பதை நீ அறிந்துள்ளாய். ஆனால், அந்த அளவுக்கு, அவளை நாம் விரும்பியபடி பெறுவதற்கு உரியவளோ எனின், அதுதான் இல்லை. அவள் அடைவதற்கு அரியவள். ஆதலால் வறுமையாளன் ஒருவன் அரச இன்பங்களைக்—காதல் இன்பங்களைத்—துய்க்க விரும்பினால், அஃது எவ்வாறு அடைவதற்கு இயலாததாய் இருக்குமோ அதைப் போன்றது இவள்பால் நீ கொண்ட காதல்! கிட்டற்கரிய இன்பத்தை விரும்பித் துன்பமுறுகிறாயே; அந்தோ! உன்நிலை இரங்கத் தக்கது!!" [இப் பாடலின் உணர்ச்சிப் பண்பாடு, கருத்துவளம் ஆகியவை தற்கால வாழ்க்கை இயலுக்கும் ஒத்திருக்கும் நிலையை ஊன்றி உணர்தல் வேண்டும்.]

2. "தோழியே! அழாதே. 'செயலாற்றலே ஆடவர்க்கு உயிர் போன்றது. ஒளி பொருந்திய நெற்றியை உடைய வீட்டிலே வாழும் பெண்களுக்கு; அவர்கள் கணவர்களே உயிராவர்' என்று நமக்கு அறிவுறுத்தியவரும் நம் காதலரே. ஆகவே உன்னைப் பிரியமாட்டார். தன் செலவை நிறுத்தி விடுவார்."

[இக் குறுந்தொகைப் பாடலின் கருத்துவளம் மிகமிக உயர்ந்தது. இதனை ஒரு 'குடும்ப இலக்கணம்' என்றே கூற விரும்புகிறேன்.

கணவன்—மனைவி ஆகியோரின் உறவு நிலை—வாழ்க்கைக் கடமை—உரிமைத் தகுதி ஆகியவைகளை மிக எளிய முறையில், இனிய மொழியில், இலக்கணமாக வகுத்தளித்த பாவேந்தர் பாலை பாடிய கடுங்கோவின் அறிவுடைமை வியத்தற்குரியதே. வினையே சிறந்ததென்று ஆடவன் கருதி இயங்கும்போது, அறிவுக்கும் ஆண்மைக்கும் ஆடவன் கட்டுப்படும்போது—குடும்பத்தில் உணர்ச்சிக்கும் கொடுமைக்கும் தன்னையறியாமலே அவன் இடங்கொடுக்கவேண்டிய சிக்கலான நிலையை அடைகிறான். இவ்வியல்புப் போராட்டத்தை இப்பாடலில் கவிஞர் எழிலோடு எடுத்துக்காட்டியுள்ளார். இப் பாடல் எக்காலத்துக்கும், எல்லாக் குடும்பங்களுக்கும், எல்லா இடத்துக்கும் பொருந்தியதொரு வாழ்விலக்கியப் பாட்டு.

(தொடரும்)

## தாய்மொழி

[நாஞ்சில், திரு. கா. கணபதி]

திருந்திய தாய்மொழி முதற்கற்றுத்
தெளிவு நிறைந்த வதன்பிறகே
அருமையும் பெருமையும் பெறுவதற்கு
ஆங்கிலம் பயிலல் முறையாகும்
உரிமையும் உணர்வும் முன்னையதே
ஊட்டும் வாய்ப்பு உண்மையதால்
பெருமை பெறவே பின்னையதைப்
பின்பே பயிலல் கடனமே.

கன்னித் தமிழில் மன்னிய பொருளெலாம்
உன்னை உயர்த்தும் ஒளிமலை யன்றோ?
அன்னை தயையும் அருள்நிறை செல்வமும்
கன்னித் தமிழில் துன்னிடு மன்றே!

---

ஆடவர்கள் தொழிலிலும், தொண்டிலும், முயற்சியிலுமே பெருநாட்டம் உடையராதல் வேண்டும். ஆள்வினையுடைமை ஆண் மகற்கு உடைமை அன்றோ? ஆயின் மனையிலேயே வாழும் பெண்களுக்குக் கணவரே உயிர் போன்றவர்! மகளிர் தொழில் நாடிச் சென்று, பெண்மை துறந்து ஆடவர் போல் வாழ முயலும் ஆகா நெறியின் புன்மையைக் கடியவே அன்றே இவ்வெழிற் கருத்தைப் பாலை பாடிய பெருங் கடுங்கோ பாடி வைத்தனர் போலும்!]

# செய்திகளும் குறிப்புக்களும்

## தமிழ்நாட்டைப் பின்பற்றுக!

"நாட்டின் பல்வேறு பகுதிகளில் நான் சுற்றுப் பயணம் செய்த காலத்தில் பல்வேறு இடங்களிலும் புதுமைகளைக் கண்டேன். குறிப்பாகக் குழந்தைகளைப் பேணுவதில் சென்னை மாநிலத்தில் ஏற்பட்டுள்ள முன்னேற்றம் என்னை மிகவும் கவர்ந்தது. சென்னையில் பள்ளி ஆசிரியர்கள் தாங்களாகவே முயற்சி எடுத்துச் சில ஆண்டுகளுக்கு முன்பு, பள்ளிக் குழந்தைகளுக்கு இலவசமாகப் பகல் உணவு, உடை முதலியன வழங்குவதற்காக ஓர் இயக்கம் தொடங்கினர். இந்த இயக்கம் நான்கு ஐந்து ஆண்டுகளில் ஒரு தலைசிறந்த பெரிய இயக்கமாக மாநிலம் முழுவதும் பரவியது. ஆட்சியினரின் ஒத்துழைப்புடன் பொதுமக்களின் ஒத்துழைப்பையும் பெற இந்த இயக்கம் உதவியது. இதன் பயனாகச் சென்னை மாநிலத்திலுள்ள பள்ளிக் குழந்தைகளில் முக்கால்வாசிப் பேருக்கு இப்பொழுது இலவசமாக பகலுணவு வழங்கப்பட்டு வருகிறது. மீதமுள்ள கால்வாசிப் பேருக்கும் இன்னும் ஓர் ஆண்டுக் காலத்தில் பகலுணவு அளிக்க முயற்சி செய்யப்பட்டு வருகின்றது. தமிழ்நாட்டின் இந்த வழியைப் பிற மாநிலங்கள் பின்பற்ற வேண்டும் என விரும்புகிறேன். ஒரு குறிப்பிட்ட வயதுக்குட்பட்ட குழந்தைகளுக்காவது இலவசக் கல்வியுடன் இலவச உணவும் அளிப்பது நல்லது."

இந்தியக் குடியரசுத் தலைவரின் மேற்காணும் பாராட்டுரையும் அறிவுரையும் நடுநிலையினின்று கூறப்பட்டவையாகும். அன்னாரைப் போன்றோர் நம்மை ஆளும் பொறுப்பிலுள்ளோர் வடநாட்டினின்று தமிழ்நாட்டின் நிலையை ஆராயின் பெரும்பாலாக நமக்குக் கிடைக்க வேண்டிய பல பயன்கள் கிடைத்தல் கூடும். தமிழ்நாட்டிற்குப் பெருமையளிக்கும் பாராட்டிற்குக் காரணமான சென்னை மாநில அமைச்சர்கள், கல்வித்துறை இயக்குநர், பள்ளி ஆசிரியர்கள், பொதுமக்கள் ஆகியோரின் பெருந்தொண்டை நாம் வியந்து போற்றுகின்றோம். மேன்மேலும் இத்தகு செயற்கருஞ் செயல்களையாற்றிச் செந்தமிழ் நாட்டிற்குச் சிறப்பினைச் சேர்க்கச் சென்னை மாநிலத்தோர் முயல்வாராக.

## இந்தியைத் திணிக்கும் வெறி!

பிறமொழி மாநிலத்தாரின்மேல் வலுக்கட்டாயமாக இந்தியைத் திணிக்கும் வெறுக்கத்தக்க செயலில் தொடர்ந்து ஈடுபட்டுவரும் இந்தியர்களுக்கு அறிவு புகட்டும் முறைத்தான் மேனாள் கவர்னர் திரு. கிரி அவர்கள் திருவாங்கூர் இந்திப் பிரசார சபையினரால் ஏற்பாடு செய்யப்பட்டிருந்த அனைத்திந்திய இந்தி ஆசிரியர்கள் கருத்தரங்கைத் தொடங்கி வைத்துப் பேசிய சொற்பொழிவின் சுருக்கத்தைக் கீழே தருவாம்.

"இந்தி மொழியை வலுக்கட்டாயமாகத் திணித்தால் அசாம், பஞ்சாப் முதலிய இடங்களில் நிகழ்ந்தவை போன்ற மொழிக் கலவரங்கள் மூள இடமேற்படும். இக் கலவரங்களுக்குப் பின்னரும், இந்தியை வன்முறையாகப் புகுத்த முயல்வது முறையாகாது. இந்த நிகழ்ச்சிகளி

விருந்து பாடம் கற்றுக்கொள்ள வேண்டும். இந்தி மொழியின் உண்மையான பெரும் பகைவர்கள் இந்தி வெறியர்கள்தாம். இந்திய நாட்டு மக்கள் அனைவரும் இந்த நிமிடத்திலேயே இந்தியைப் படித்து அந்த மொழியிலேயே பேசவேண்டும் என இந்தி வெறியர்கள் விரும்புகிறார்கள்."

தென்னாட்டின் நிலையை வடநாட்டினரான திரு. கிரி அவர்கள் நன்குணர்ந்து மொழிப் பிரச்னை குறித்துப் பேசியிருப்பதை அறிஞர் அனைவரும் பாராட்டுதல் திண்ணம். இந்தியைத் திணிக்க முயல்வோர் அன்னார்தம் அறிவுரையை ஆழ்ந்தாராய்ந்து தம் மனப்போக்கை மாற்றிக் கொள்ளுதல் அவர்களுக்கும் நாட்டிற்கும் நலம் பயப்பதாகும்.

**புதிய தலைவர்!**

தமிழ் எழுத்தாளர் சங்கப் புதிய தலைவராகச் சென்னைப் பச்சையப்பன் கல்லூரியின் தமிழ் விரிவுரையாளர் திரு. அன்பு கணபதி அவர்கள் ஒருமனதாகத் தேர்ந்தெடுக்கப் பட்டிருப்பதறிந்து பெரிதும் மகிழ்கின்றோம். தமிழுணர்வு மிக்கவரும் சிறந்த தமிழ்த்தொண்டருமாய இவர்கள் தலைமையில் தமிழ் எழுத்தாளர் சங்கம் நாட்டிற்கும் மொழிக்கும் நல்ல பல பணிகளைச் செய்யுமென்று நம்புகின்றோம். புதிய தலைவரை வருக வருக என வரவேற்று வாழ்த்துகின்றோம்.

**மொழிபெயர்ப்புக்கான மைய நிறுவனம்**

"பல்வேறு மொழிகளில் இயற்றப் பெற்றுள்ள உறுதி பயக்கும் உயரிய இலக்கியங்களை எழுதப்பட்ட மொழியிலேயே கற்றுச் சுவைக்க முடியாது போனாலும் அவற்றின் மொழிபெயர்ப்புக்களையாவது மக்கள் படித்து அந்தந்த மொழியின் இலக்கிய வளத்தையும், கலை, பண்பாடு ஆகியவற்றின் சிறப்பையும் அறிந்துகொள்ளுதல் நாட்டின் ஒருமைப்பாட்டிற்கு இன்றியமையாததாகும். இவ்வரிய மொழிபெயர்ப்புப் பணியினைச் செய்வதற்கு மைய நிறுவனம் ஒன்று இல்லாதது பெருங்குறையேயாகும். அது விரைவில் நிறுவப்படுமாயின் பெரும்பயன் விளைதல் கூடும்."

மைய அரசின் செய்தி—ஒலிபரப்பமைச்சர் டாக்டர் பி. வி. கேஸ்கர் அவர்களின் இக் கருத்துரை நாட்டு மக்களால் போற்றி வரவேற்கத் தகும் பெற்றி வாய்ந்ததாகும். 'பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள் தமிழ்மொழியில் பெயர்த்தல் வேண்டும்' என்னும் கோட்பாடுடைய நமக்கு இக் கருத்துரை மிகவும் மகிழ்வளித்தல் வியப்பன்று. இக் கருத்து ஏற்கப்பட்டுத் திட்டமாகிச் செயற்படுமாயின் பாரதப் பண்பாட்டின் சிகரமாகத் தொன்மையும், நன்மையும், இயற்கை மென்மையும், உயிர்ப்புச் செட்டும், மாறா எழிலும் கொண்டு பண்டுபோல் இன்றும் இருவகை வழக்குகளிலும் நின்றுநிலவும் பைந்தமிழ்ப் பண்பாட்டின் மாண்பினைப் பாரதப் பெருநாடேயன்றிப் பாருமறிய வகையேற்படும்.

# மதிப்புரை

**"திருவள்ளுவர் காவியம்"**

இதன் ஆசிரியர் **பண்டிதர் அ கிருட்டிணசாமி நாயுடு** அவர்களாவர். இதன் விலை ரூபா 10.=(பத்து). கிடைக்குமிடம் 'தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழக லிமிடெட், 1/140, பிராட்வே, ர-1.

இந்நூல் காப்பியப் பண்பமைந்து வாய்ப்புடைய வளநூலா வையத்தார் வாழும் வகையாய்க் காலத்துக்கேற்றவாறு நுண்மாண் நுழைபுல நூலாசிரியரால் தம் கற்பனை நயந்தோன்றத் திறம்பட யாத்த பெருநூலாகும். கம்பர் காவியம் போன்ற முன்னுள்ள காவியங்களும் அவ்வக் காலங்களில் இக்காவியம்போற் றோன்றிய கற்பனைக் கருவூலங்கள் என்று கருதுவார்க்கு இது பெருந்துணைபுரியும் புதுவிருந்தாகும். முடியாட்சி யொழிந்து, குடியாட்சி தழைக்கவேண்டுமென்பதும், அதற்குப் பாடுபட்ட ஆன்றோர் வரிசையில் திருவள்ளுவப் பெருந்தகையார் திகழ்கின்றனரென்பதும், சாதிசமயப் பிணக்குகளும், அவற்றிற்குத் துணையாம் வாயில்களும் சாதல் வேண்டுமென்பதும், தீமைகள் அனைத்தும் மாயவேண்டுமென்பதும், தூயோர் ஆய்ந்து கைக்கொண்டொழுகும் நன்மைகள் முழுவதும் தாயென நின்று என்றும் பொன்றாது வாழ்தல் வேண்டுமென்பதும், ஒருவனும் ஒருத்தியும் உளமொத்துக் கலந்து களவுமணத்தின் பின் வரும் உறவுமறியச் சீர்சிறப்பாகச் செய்யுங் கரணத்துடன் கூடிய கற்புமணங் கைக்கொண்டு விருந்தோம்பலாகிய வேள்விபுரிந்து மக்கள் பேற்றுடன் ஒக்கல் விழைய ஊராண்மையுடையராய் வாழ்தல் வேண்டுமென்பதும், உழைத்துண்டலும் பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதலும் பாரிடைப் பரவுதல் வேண்டுமென்பதும், கொலைபுலை நீக்கி வாழ்தல் வேண்டுமென்பதும், கொலை வேள்விக்கொடுமை மாள்தல் வேண்டுமென்பதும், தனித்தமிழ் மொழியே முதன்மொழியென்பதும், அதுபோல் தமிழ்நாடே முதல்நாடென்பதும், எழுத்து வடிவில் உயிர்மெய்யென ஒன்றமைத்து வழங்குவது தமிழ்மொழியொன்றேயென்பதும், ஆரிய மொழியும் தமிழைப்பார்த்தே அமைத்துக் கொண்டதென்பதும், சமதருமம், அகிம்சை, பொதுவுடைமை, விஞ்ஞானத்தை ஆக்கத்திற்கே பயன்படுத்தல், அழிவுக்குப் பயன்படுத்தாமை முதலிய நடைமுறைகளை உடனடியாகக் கைக்கொள்ளுதல் வேண்டுமென்பதும் பிறவும் தெள்ளத் தெளிய இந்நூலின்கட் காணலாம்.

ஆசிரியவர்கள் திருக்குறளாம் பொதுமறையைக் கருவியாகக் கொண்டு அஃது உலகப் பொதுநூலென்றமையால் அதன் ஆசிரியர் உலகெங்கணும் உலவிவருதல் வேண்டுமென உளங்கொண்டு பெரியதொரு கற்பனைக் களஞ்சியப்படைப்புப் படைத்துள்ளனர். இந்நூல் முழுவதும் நேரிசை வெண்பாயாப்பில் அமைந்துள்ளது. நாலாயிரத்து முப்பது செய்யுட்கள் கொண்டது. காண்டங்கள் ஐந்து, படலங்கள் நூற்றுநான்கு. இஃது கற்பனையேயாயினும் வாழ்க்கையுலகுக்கு வள்ளுவர் காட்டிய வழியைக் கதைப்போக்கில் வகுத்தும் விரித்துங்காட்டும் வளநூலெனக் கொள்ளுதல் வேண்டும். ஆய்வாளர்கட்குப் பெருந்துணையும் தூண்டுதலுமாக வயங்குமிந்நூல் யாவர்க்கும் புது விருந்தாகும். அதனால் யாவரும் வாங்கிக் கற்றல் நன்றே.

**"சிவபூசை, திருக்கோயில் தமிழ் மறை வழிபாட்டு நூல்"**

விலை 37 காசு. வெளியீடு: அருள் நெறித் திருக்கூட்டம், கோட்டை, ஈரோடு. இத்தொகுப்புச் சிறந்த தொகுப்பாகும். இக்கூட்டத்தார் திருத்தொண்டு நனிமிகப் போற்றற்குரியது. திருமா மறைகள் வழிபாட்டின் உயிர். திருமாமறை ஓதிப் புரியாத வழிபாடு உயிரில்லா வழிபாடாகும். வழிபாட்டினைத் தன்பொருட்டெனவும் உலகர் பொருட்டெனவும் இரண்டாகப் பிரித்துள்ளனர். உலகர் பொருட்டுச் செய்யப்படும் வழிபாடு திருக்கோவில் வழிபாடாகும். உலகம் என்பது மொழியின் அடிப்படையில் பகுக்கப்பட்டு நாம் வாழும் உலகம் தமிழுலகம் எனப் பெயர் வழங்குகின்றது. நாமும் தமிழரென அழைக்கப்படுகின்றோம். நம்மால் வணங்கப்படும் கடவுளும் தமிழ் வேட்கும் கடவுளாகின்றனன். அம்மட்டு மன்று; முழுத்தமிழு மாகின்றனன். இவ்வுண்மை "பண்ணும் பதம் ஏழும் பல ஓசைத் தமிழவையும்" எனத் தொடங்கும் சம்பந்தப் பெருமானாருளிய திரு வீழிமிழலைத் திருப்பதிகத்தால் உணரலாம்.

இப்பெருங்குறையினை முற்ற வொழிப்பது இந்நூல். இதன் கண் சிவதீக்கை, சிவபூசை, சிவன் கோவில் நாள் வழிபாடு, திருவிழா, குடமுழுக்கு, கடவுண்மங்கலம் முதலிய எல்லா அருள்நிகழ்ச்சிகளுக்குந் தமிழ்த் திருமாமறைத் திருப்பாட்டுக்களே பொருத்தமுற அமைக்கப் பட்டுள்ளன. பெரும்பயன் தருவதுறுதி.

**"செந்தமிழ்க் கட்டுரை"**

இதன் ஆசிரியர் பன்மொழிப்புலவர் ப. சுந்தரவேலனார் அவர்க ளாவர். இதன் விலை ரூபா 2-50. கிடைக்குமிடம் 'பாரதி பண்ணை' 75, சிறிய வாய்க்கால் தெரு, புதுச்சேரி.

சீரிய நூலினைக் கூர்ந்து நோக்கினோம். ஆசிரியர் ஆற்றிய தமிழ்த் தொண்டு போற்றற்குரியதென வியந்தேம். இதுகாறும் வெளிவந்த கட்டுரைத் திரட்டு நூல்கள் அனைத்தையும் வென்று மேனின்று மிளிர் கின்றது. எழுத்தியல், சொல்லியல், தொடரியல், அணியியல், கட்டுரை யியல் என வகுத்தாக கட்டுரை பயில்வார்க்கு இலக்கணங் காட்டியிருப் பது புதிய முறையாம். பயிற்சிக்கு வேண்டப்படுவதும் இதுவே. வடசொல், இந்துத்தானிச்சொல், போர்த்துக்கீசியச்சொல், தெலுங்குச் சொல், கன்னடச்சொல் இவற்றிற்கு நேரான தமிழ்ச்சொல் ஆய்ந்து வரைந்துள்ள செயல் மாணவர்க்குப் பெருந் துணையாம். நாற்பது கட்டுரைகளையும் ஆய்ந்து, வரைந்து பயின்ற மாணவர் தமிழ்மொழியில் என்ன தலைப்புக் கொடுத்துக் கட்டுரை வரையும்படி கூறினும் உடனே மயங்காது எளிதில் விரைந்து வரைந்து தருவர் என்பது தேற்றம். இந்நூலினைத் தமிழகத்துக்குதவிய நூலாசிரியர் தமிழ்த்தொண்டு மேன் மேலும் பெருகுக.



திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை, 2-140, பிராட்வே, அப்பர் அச்சகத்தில், திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர்: வ. சுப்பையா.




சிலம்பு ௩௫ | திருவள்ளுவர் ஆண்டு ௧௯௯௧, மார்கழி சனவரி, 1961 | பரல் ௫

# பிறந்த வுயிர்செய் பாவச்செயலால்

## [illegible]

அல்லது நரகம் என்னும் நிலையைக் கிடைக்கத் துன்புறும் எண்ணிய உலகம் உண்டென்பது பெரியோர்கள் கூறும் துணிபாம். இந்நெறியையே ஆவியுலக ஆய்வாளர் புண்ணியப் பகுதியாகிய ஒளியுலகத்திருக்கும் ஆவிகளின் துணையால் இருட் பகுதி ஆவிகளை வருவித்து அவ்வாவிகளின் உறவினருடன் பேசுவிக்கச் செய்கின்றனர். அப்பேச்சுக்களிலிருந்து அவ்வாவிகள் படும் பல துன்பங்களுந் தெரியவருகின்றன. அத்துன்ப நீக்கத்தின் பொருட்டு நாம் மேற்கொள்ளும் வழிபாடு இயற்றுதல் இன்றியமையாததென்பதும் புலனாகின்றது. அவ்வழிபாட்டினால் அந்த ஆவிகளுக்குத் துன்ப நீக்கம் உண்டாகின்றதென்பதுந் தெரியவருகின்றது. அம்மட்டுமன்று. அவ்வாவிகள் தத்தந் தொடர்புடையாருடைய நன்மை தீமைகளை நாடுகின்றனவாகவுந் தெரிகின்றது. மேலும் அவைகள் ஈண்டுள்ளார் அறிந்தோ அறியாமலோ தீமை செய்யக் கண்டால் வெறுப்புற்று மனமிக வருந்துவதாகவுந் தெரிகின்றது. அதனைத் தடுக்கவோ கூறித் திருத்தவோ அவைகளுக்கு நேரடியான ஆற்றல் இல்லை. ஆண்டுள்ள வீரவாகு தேவர் முதலிய தெய்வத் தலைவர்களின் ஆணை பெறுதல்வேண்டும். அம்மட்டுமன்று; ஈண்டும் அவ்வாவிகளின் பேச்சு முதலியவற்றை வெளிப்படுத்தும் ஆற்றல்வாய்ந்த இடைநிலையாளர் ஒருவர் வேண்டும். இவற்றான் அறியக் கிடப்பது யாதெனின்? ஆருயிர்கள் ஒன்றோடொன்று தொடர்பு கொள்ளின் அத்தொடர்பு

தெனவும், ஒருவர் பொருட்டு —ட- நவர் செய்யும் புண்ணியப் பயன்கள் செய்யப்பட்டாரையே சார்கின்றன என்பதும் புலனும்.

ஒருவர்தம் நீங்காப் பசிக்கும் நோய்க்கும் பிறிதொருவர் சோறுண்டும் மருந்துண்டும் போக்கமுடியாதென்பது துணிபு. ஆனால் ஒருவர் கொண்ட கடனை மற்றொருவர் கொடுத்து நீக்குதல் போலவும், பரிவுரை பகர்ந்து பரிவகற்றுவது போலவும், மேற் சொல் எழுதியும் இசைத்தும் துணைசெய்வது போலவும் புண்ணி யங்கள் செய்து அப்புண்ணியப் பயன்களை ஏனையோர்க்கு இசை விப்பது ஏற்புடைத்தாமென்க. இம்முறையினால் ஒவ்வொரு வரும் இறந்துபோய தத்தம் முன்னோர்கள் பொருட்டு ஈண்டுச் சிவவழிபாடு புரிதலும், சிவனடியார்க்குத் திருவமுதூட்டலும், சிறார்க்குப் பள்ளித் துணைபுரிதலும், சாலை, குளம், கூவல், காவு, கடவுட் கற்றளி, மெய்யுணர்வு நூல் வெளியீடு, செந்நெறிச் சீர்மையினைப் பரப்புதல், நாள் வழிபாடு முதலிய நற்றவங்கள் முதலிய புண்ணியம் புரியின், அவர் ஒளியுலகமெய்தி இன்புறுவர்.

)கத் தொடர்பினால் நம்முடைய பண்டைப் பனுவல் களில் கூறியுள்ள மேலுலக வுண்மை நன்கு புலனாகின்றது. அம் மட்டுமன்று ; அவ்வாவியுலகத்தோர் நம்மாட்டு மிகவும் அன்பு கொண்டிருக்கின்றார்கள் என்பதும் புலனாகின்றது. மேலும் நம்முடைய நன்மையிலும் முன்னேற்றத்திலும் மிகவும் கருத் தாகிக் கருத்துடன் கண்காணித்து வருகின்றார்கள் என்பதும் புலனாகின்றது. தாங்கள் செய்துள்ள வினைகளுக்கீடாக இன்பத் துன்பங்கள் தங்களை வந்து நுகர்விக்கின்றன என்னும் உண்மை யினை நேரே காண்பதால், தங்களைச் சார்ந்தாரைத் தீமையி னின்றும் விலக்கி நன்மையிற் செலுத்தி இன்புறச் செய்தல் வேண்டும் என்னும் பெருவேட்கை யுடையவர்களாகவுமிருக் கின்றனர் என்பதும் தெரியவருகின்றது. ஆனால் நம்மைத் தீமையினின்றும் விடுக்கும் வாயில்களில்லாமல் வருந்துகின்றனர். முடமும் ஊமையும் உடையார் கண்கொண்டு பார்ப்பினும் கையால் பிடித்துத் தடுக்கவும், வாயால் சொல்லித் தடுக்கவும் வழியில்லாது விழிப்பது போன்று வருந்துவதாகவுந் தெரிய வருகின்றது.

ஆவியுலகச் செய்திகள் கூறும் நூற்களின் மேற்கோள்கள் பலப்பலவாகும். விரிவஞ்சி ஒன்றிரண்டு காட்டுதும். திருவிளை யாடற்புராணத்தின்கண் மலயத்துவசனை யழைத்த படலத்தில் காஞ்சனமாலையம்மையார் எழுகடல் தீர்த்தம் ஆடுதற்பொருட்டு அன்னையின் வேண்டுகோளுக்கு இணங்க ஆண்டவன் அம் வருமாறு திருவுள்ளங்கொண்

டருளினன். மலயத்துவச பாண்டியனும் திருவாணைவழி நிலவுல கத்து வந்து மனைவியுடன் திருவைந்தெழுத்தோதித் திருத்த நீராடினன். அக்குறிப்புள்ள பாட்டுக்கள் வருமாறு :

" தன்னுயிர்க் கிழவனை யடைந்து தாழ்ந்துதன்
அன்னைதன் குறையுரை யாட வாண்டகை
மன்னவன் வலாரியோ டொருங்கு வைகிய
தென்னவன் மேன்மனஞ் செலுத்தி னனரோ."
—திருவிளையாடல், க0. மலயத்—கசு.

(கிழவன் - உரியவன்; கணவன்.)

" மஞ்சோ தியகாஞ் சனமா லைகையிற்
பைஞ்சோ திவிளங் குபவித் திரையாய்ச்
செஞ்சோ திமுடிச் சிவநா மவெழுத்
தஞ்சோ திநெடுங் கடலா டுமரோ."     —  ,,  கஎ.

(காஞ்சனம் - பொன்.)

" துங்கக் கலைவே தியர்தொன் மறைநூற்
சங்கற் பவிதிப் படிதன் துணைகை
அங்கைத் தளிர்பற் றியகத் தவகை
பொங்கப் புணரிப் புனலா டினளே."     —  ,,  கஅ.

இராமாயண மீட்சிப் படலத்தின்கண் இராமன் சீதையை வெறுத்துப் பேசியபோது அச்சீதை தீக்குளித்துத் தீங்கின்றி எழுந்தாள். இராமன் பிறத்தினை நான்முகன் தணிக்கத் தணியாமை கண்டு வானுலகத்திலிருந்த தசரத வேந்தன் நிலவுல கத்து வந்து இராமனை ஆற்றுவித்தனன் எனக் கூறப்பட் டுள்ளது. அதனால் மேலுலகத் தொடர்பு அறியலாம். அப் பாட்டுக்கள் வருமாறு :

" பின்னு நோக்கினன் பெருந்தகை முன்புதற் பிரிந்த
இன்ன லாலுயிர் துறந்திருந் துறக்கத்து ளிருந்த
மன்ன னாங்குவற் சென்றுநீ கண்டனை வணங்க
முன்னை' வான்றுயர் நீக்குதி மொய்ம்பினோ யென்றான்."—கக

" அன்று கேகயன் மகள்கொண்ட வரமென்னு மயில்வேல்
இன்று காறுமென் னிதயத்தி னிடைநின்ற தென்னைக்
கொன்று நீங்கல திப்பொழு தகன்றதுன் குலப்பூண்
மன்ற லாகமாங் காந்தமா மணியின்று வாங்க."     —கக அ.

" பண்டு நான்முறுமுந் தேவரு முனிவரும் பாராய்
கண்டு கண்டெனைக் கைத்தலங் குவிக்கின்ற காட்சி
புண்ட ரீகத்துப் புராதனன் றன்னொடும் பொருந்தி
அண்ட மூலத்தொ டாசனத் திருத்தினை யழக."     —கஉ0.

துறக்கத்திருக்கும் நிலை வரும் புறநானூற்றுப் பாட்டானும் உணரலாம்.

"உரையும் பாட்டு முடையோர் சிலரே
மரையிலை போல மாய்ந்திசினோர் பலரே
புலவர் பாடும் புகழுடையோர் விசும்பின்
வலவ னேவா வான வூர்தி
எய்துப வென்பதஞ் செய்வினை முடித்தென." —புறம், உஎ.

(மரை - தாமரை.)

திருவள்ளுவ நாயனார் கூறுவதூஉங் காண்க :

"நிலவரை நீள்புகழ் ஆற்றின் புலவரைப்
போற்றாது புத்தே ளுலகு." —திருக்குறள், உ௩௪.

(புத்தேளுலகு - தேவருலகு; வானுலகு)

தீவினைக் கீடாக நரகிடை வீழ்ந்து துன்புறுவோர் நிகழ்ச்சிகளும் பல அவற்றிற்கு எடுத்துக் காட்டுக்கள் வருமாறு :

"அந்நா ளிரவின்கண் அமண்புகல் சார்ந்துவாழும்
மன்னு இயபோர் வடுகக்கரு நாடர் மன்னர்
தனநாளும் முடிந்தது சஙகரன் சார்பி லோர்க்கு
மின்னு மெனநீ டியமெய்ந்நிலை யாமை வெல்ல."
—க௨. மூர்த்தியார் - உ௪.

"இவ்வா றுலகத்தின் இறப்ப உயர்ந்த நல்லோர்
மெய்வா முலகத்து விரைந்தணை வார்க ளேபோல்
அவ்வா றரனார் அடியாரை அலைத்த தீயோன்
வெவ்வாய் நிரயத் திடைவீழ விரைந்து வீந்தான்." — „ உ௫.

(மெய்வாழுலகு - கடவுளுலகு; ஒளியுலகு.)

சீவக சிந்தாமணியின்கண் க௩. முத்தியிலம்பகம் க௦. நரககதித்துன்பம் என்ற பகுதியில் பதினைந்து பாட்டுக்கள் மிக விளக்கமாக இருளுலகத்துன்பங்கள் கூறப்பட்டுள்ளன. அவற்றுள் ஒரு பாட்டு வருமாறு :

"காதலாள் கரிந்து நையக் கடியவே கனைந்து கன்றி
ஏதிலான் றார நம்பி எளிதென இறந்த பாவத்
தாதுலை யுருக வெந்த வொள்ளழற் செப்புப் பாவை
ஆதகா தென்னப் புல்லி யலறுமால் யானை வேந்தே." —கஎக.

நாலடியார்க்கண்ணும் பல பாட்டுக்களுள்ளன. அவற்றுள் ஒன்று வருமாறு :

" காணின் குடிப்பழியாம் கையுறின் கால்குறையும்
ஆணின்மை செய்யுங்கால் அச்சமாம்—நீள்நிரயத்
துன்பம் பயக்குமால் துச்சாரி நீகண்ட
இன்பம் எனக்கெனைத்தாற் கூறு." —அச.

(நிரயம் - நரகம்.)

இஞ்ஞான்றை ஆவியுலக ஆய்வாளர் கூறுமாறு ஆண்டுக் கதவுகளும் உண்டென்பதும் காட்டும் நாலடியார்ப் பாட்டு வருமாறு :

" இல்லா விடத்தும் இயைந்த அளவினால்
உள்ள விடம்போற் பெரிதுவந்து—மெல்லக்
கொடையொடு பட்ட குணனுடைய மாந்தர்க்கு
அடையாவாம் ஆண்டைக் கதவு." —கக.

திருக்குறளிலும் பல பாட்டுக்களுள்ளன ; சில வருமாறு :

" அடக்கம் அமரரு ளுய்க்கும் அடங்காமை
ஆரிரு ளுய்த்து விடும்." —கஉக.

" உண்ணாமை யுள்ள துயிர்நிலை ஊனுண்ண
அண்ணாத்தல் செய்யா தளறு."

(அளறு - நரகம்.)

" ஒருமைச செயலாற்றும் பேதை எழுமையுந்
தான்புக் கழுந்து மளறு." —அநரு.

" வரைவிலா மாணிழையார் மென்றோள் புரையிலாப்
பூரியர்க ளாழு மளறு." —கூகக.

" கள்வார்க்குத் தள்ளு முயிர்நிலை கள்ளார்க்குத்
தள்ளாது புத்தே ளுலகு." —கூo.

" நரக மேழ்புக நாடின ராயினும்
உரைசெய் வாயின ராயி னுருத்திரர்
விரவி யேபுகு வித்திடு மென்பரால்
வரத னுமை நமச்சி வாயவே." —ந. சகூ - எ.

(நரகம் - துன்பவுலகம்; இருட்பகுதி.)

நரகம் ஏழின் விளக்கம் : க. இருள் உ. குளிர் ந. புகை ச. மணல் ரு. துயிலாமை சு. குருதி எ. தீ என்பன. இவற்றின் பெயர் முறை வருமாறு :

" பெருங்களிற்று வட்டம் பெருமணல் வட்டம்
எரிபரல் வட்டம் அரிபடை வட்டம்
புகையின் வட்டம் பெருங்கீழ் வட்டம்
இருளின் வட்டமென எழுவகை நரகம்." —பிங்கலம், சகஉ.

"கொல்விடு குத்தென்று கூறிய மாக்களை
வல்விடிக் காரர் வலிக்கயிற் றாற்கட்டிச்
செல்விடு நில்லென்று தீவாய் நரகிடை
நில்விடும் என்று நிறுத்துவர் தாமே." —கo. உசo.

"பொல்லாப் புலாலை நுகரும் புலையரை
எல்லாருங் காண இயமன்றன் றூதுவர்
செல்லாகப் பற்றித் தீவாய் நரகத்தில்
மல்லாக்கத் தள்ளி மறித்துவைப் பாரே." —கo. உசஉ.

(இயமன் - கூற்றுவன்.)

இத்தகைய இருளுலகத்துன்பநீங்கி இன்பவுலகத்திருந்து நன்மைபெறவேண்டுமானல் கூற்றுதைத்த கோமானகிய விழுமிய முழுமுதற் சிவபெருமானைச் செந்தமிழ்த் திருமாமறை வழியாய்ப் போற்றி என்னுந் தமிழ் மந்திரம் புகன்று மலர்தூவி நாள்வழி பாடு சிறப்புவழிபாடு இடையறாது செய்தல் வேண்டும். அங்ஙனம் செய்வோர் பொய்யிலாப் புகழ்நிறை மெய்யடியாராவர். அவ் வடியவரைத் தன் திருவடிக்கீழ் அவன் வைத்தருள்வன். இவ்வுண்மைவரும் திருமாமறையான் உணரலாம்:

"வேலைமலி தண்கானல் வெண்காட்டான் றிருவடிக்கீழ்
மாலைமலி வண்சாந்தால் வழிபடுநன் மறையவன்றன்
மேலடர்வெங் காலனுயிர் விண்டபினை நமன்றூதர்
ஆலமிடற் றானடியா ரென்றடர வஞ்சுவரே." —உ. சஅ-௫.

"நீற்றினை நிறையப்பூசி நித்தலு நியமஞ்செய்து
ஆற்றுநீர் பூரித்தாட்டு மந்தண னாரைக்கொல்லான்
சாற்றுநா ளற்றதென்று தருமரா சற்காய்வந்த
கூற்றினைக் குமைப்பர்போலுங் குறுக்கைவீ ரட்டனாரே."
—ச. சகூ-உ.

"சாற்றி னேன்சடை நீண்முடிச் சங்கரன்
சீற்றங் காமன்கண் வைத்தவன் சேவடி
ஆற்ற வுங்களிப் பட்ட மனத்தராய்ப்
போற்றி யென்றுரைப் பார்புடை போகலே." —௫. கூஉ-ச.

"தன்னைச் சரணென்று தாளடைந் தேன்றன் னடியடையப்
புன்னைப் பொழிற்புக லூரண்ணல் செய்வன கேண்மின்களோ
என்னைப் பிறப்பறுத் தென்வினை கட்டறுத் தேழ்நரகத்
தென்னைக் கிடக்கலொட் டான்சிவ லோகத் திருத்திடுமே."
—ச. கoகூ - க.

# தேய்ந்த தமிழகம்

[பேராசிரியர், திரு. ப. முருகன்]

இந்த மண்ணிலே முதன் முதலில் தவழ்ந்த குழந்தை ஒரு தமிழ்க் குழந்தையாகும்; அது தவழ்ந்த இடம் தமிழகம்; நிமிர்ந்து நின்று நடை பயிலக் கற்றுக், கலைவல்லவனாகிய இடமும் தமிழகம். தமிழகமே மக்கள் இனத்தின் தொட்டில். இத்தகைய பழம் பெருமை எந்நாட்டினர்க்கும் இல்லை. எந்நாட்டினர்க்கும் கிடைத்தற்கரிய பெருமை, உலகத்தில் தமிழ்மக்களுக்கு மட்டுமே வாய்த்தது. ஆனால் இன்று, "கல் தோன்றி மண் தோன்றாக் காலத்தே வாளொடு முன் தோன்றி மூத்த குடி" தமிழர்கள் என்று கூறினால், அச்சொல் அம்பலம் ஏறுவதாகத் தோன்றவில்லை. காரணம், தமிழர்கள் பண்பாட்டிற்கெலாம் உறைவிடமாய்ப், பழம் பெருமை கொண்டிருந்தாலும், இன்று உலக மக்கள் மதித்து, அஞ்சி, வழிபடும் செல்வாக்குப் பெற்றுத் திகழவில்லை!

திரைகடலோடியும் திரவியம் தேடச் சென்ற தமிழ்மக்கள் தாம் தேடிய பொருளினாலும், தம் தளரா உழைப்பினாலும், தாம் குடியேறிய நாட்டையெல்லாம் வளமுறச் செய்துவிட்டு, இன்று வெறுங் கையினராய்த் தாயகம் திரும்புகின்றனர். தம் உதிரத்தே உதித்தெழுந்த தம் மக்களாகிய கன்னடரும், தெலுங்கரும், மலையாளரும் பிறரும், தாய் வீட்டின் ஏழ்மை நிலை கண்டு, தமிழகத்தில் பிறக்கவில்லை என்று துணிந்து கூறுகின்றனர்! இவை போதா என்பதுபோல், தமிழகத்தினைக் கடல் அன்று தொட்டே அலைக்கழித்துக்கொண்டே வருகின்றது. இயற்கையன்னையும், தமிழகத்தினைப் பழிவாங்குகின்றாள்! உலகத்திலேயே, கடல் பெருக்குக்குத் தமிழ்மண் இரையானதைப் போன்று, வேறு எந்த நாடும் இரையாகவில்லை. 'தமிழ் மணம்' நெருப்பினையும் நீரினையும் வா என்று அழைத்துத்தானே இரையாகி நிற்கின்றது. அதன் விளைவு, நம்முடைய தமிழகம் பண்டு பல காவத தூரம் பரவி, ஒளிபெற்றுத் திகழ்ந்த நிலைபோய், இன்று மிகச் சுருங்கித் தேய்ந்த தமிழகமாய் ஒளியிழந்து, இருட்டறையில் கிடக்கின்றது.

**கடல்கோள்**

கடல் பொங்குவதும், நாடு கடல் கொள்ளப்படுவதும் உலகில் நடைபெறுவது உண்மை; இருந்தாலும் தமிழகப்

பகுதியில் நடைபெற்று அழிவு நேர்ந்ததைப் போன்று, எங்குமே நடைபெறவில்லை அதனால் தமிழ்மக்கள், கடலைக் கண்டு அஞ்சியும், கடலைத் தெய்வமாகக் கொண்டும் வழிபட்டு வந்தனர். கடலையடுத்து நின்று, கடலினால் உண்டாகும் ஆக்கத்தினைவிடக், கடல் பொங்கி அதனாலுண்டாம் கேடின்றி வாழ்வதே சிறந்தது என எண்ணி வந்தனர். திருமுடிக் காரியைப் பாடவந்த கபிலரும், அவன் நாட்டிற்குக் கடல் கோளினால் உண்டாம் தீமை இல்லை என்று புறம் கஉஉ இல்,

"கடல்கொளப் படாஅ துடலுநர் ஊக்கார்
கழல்புனை திருந்தடிக் காரிநின் னாடே"

என்று கூறுகின்றார். பனம்பாரனார் என்பாரும், குறுந்தொகை ருஉ ஆம் பாட்டில் கடல் எழுந்து மிதித்தலால் மலை அசைந்து நடுங்கும் காட்சியினை,

"ஆர்கலி மிதித்த நீர்திகழ் சிலம்பிற்
கூரசைந் தனையையாய் நடுங்கல் கண்டே"

எனத் தீட்டுகின்றார். இத்தகைய குறிப்புக்கள் தமிழ் யத்தில் வருவன காண்க. இவை தவிர, நாடோடிக் கதைகளும், புராணங்களும், கடல் பெருக்கினைப்பற்றிப் பரக்கப் பேசுகின்றன. யுகமுடிவு, ஊழிக்காலம், பிரளயம் போன்ற சொற்கள், கடல் கோளினைப்பற்றிக் குறிப்பிடுகின்றன. இவை தவிர மேனாட்டறிஞர் பலர், கடல் வெள்ளத்தினைப்பற்றி ஆராய்ந்து நூல் பல வெளியிட்டுள்ளனர். இவைகளையெல்லாம் காண்கின்றபோது, கடல்கோளினைப்பற்றிக் கூறுவனவற்றைக் கட்டுக் கதை என்று நம்மால் தள்ளிவிட முடியாது.

### கடல்கோளும் தமிழகமும்

தமிழகத்தின் எல்லை, கடல்கோளினால் மாறிமாறி வந்திருக் கடல் கோள்களே, முச்சங்கங்கள் தோற்றத் நம் காரணமாகின்றன. தமிழ்நாட்டின் தென்பகுதியில் கடல் பெருக்குத் தோன்றியிராவிடில் ஒருகால், மூன்று சங்கங்கள்கூடத் தோன்றி இரா. ஒரே இடத்திலேயே அமர்ந்து, தமிழாய்ந்திருக்கவும் கூடும். மூன்று சங்கத் தோற்றத்திற்கும் இக் கடல்கோளே காரணமாகின்றன. இனி, வரலாற்றுக் கால எல்லைக்குட்பட்டு, நடைபெற்ற கடல் கோளினையும், அவைகளால் தமிழகத்தின் தென் எல்லை எங்ஙனம் தாக்கப்பட்டது என்பதனையும் காண்போம். பல நூறு ஆண்டுகளாகவே, வேங்கடமே தமிழ்நாட்டின் வடவெல்லையாக அமைந்து கிடக்கின்றது. தென் எல்லை மட்டுமே மாறிமாறி வந்துள்ளது.

நாவலந் தீவு

முன்பு ஒருகாலத்தில், தமிழகம் தெற்கே பல காவதம் பரவி, மேற்கில் ஆப்பிரிக்காக் கண்டத்துடனும், கிழக்கே ஆத்திரேலியாக் கண்டத்துடனும் தொடர்பு கொண்டிருந்தது. பின்பு நடைபெற்ற ஒரு கடல் கோளினல், பிற கண்டங்களுடன் கொண்டிருந்த தொடர்ச்சி நீங்கப்பெற்றுத், தன் எல்லையில் சுருங்கி நின்றது. அப்போது அதனை நாவலந் தீவு என்றனர். சம்புத் தீவு என்றும் பிறர் அழைத்தனர். தீபகற்பத்தினையும் தீவு என்று நம் முன்னோர்கள் அழைத்துவந்தனர். இந்நாளில் கருதுவதுபோல், அந்நாளில் நான்கு பக்கங்களிலும் கடல்சூழ்ந்த பகுதியே தீவு எனக் கொள்ளவில்லை; மூன்று பக்கம் கடல் சூழ்ந்துகிடந்த நிலப் பகுதியும் தீவு என்ற பெயருடன் அழைக்கப் பட்டு வந்தது. நாவலந் தீவு என்பதனைத் தீவாகவே கொள்ள வேண்டுமென்றாலும் கொள்ளலாம். அதற்கு சில நூலும் இடம் தருகின்றது. முன்பு இமயமலை தோன்றவில்லை; விந்திய மலைக்கு வடக்கே கடலே இருந்தது என்று கூறுவதை எடுத்துக்கொண்டால், நான்கு பக்கத்திலும் கடல் சூழ்ந்துகிடந்த நிலப்பகுதி நாவலந் தீவு ஆகிவிடுகின்றது. எனினும் தீபகற்பகமாகக் கொள்வதே பொருத்தமுடையதாகத் தோன்றுகின்றது. நாவல் மரம் மிகுந்திருந்த இடமாகத் திகழ்ந்திருக்கும். மிகப் பழங் காலத்திலிருந்தே நாவல் மரமும், நாவல் பழமும் தமிழ்நாட்டில் பெருமை பெற்று விளங்கின என்பது, முருகன் - அவ்வையார் கதையினாலும் அறியலாம். பழம் பெருமை மிக்க ஒன்றினையே கடவுளர்க்கு வழங்குவது மரபாகும்; அம்மரத்தினாலேயே தம் நாட்டினையும் அழைத்தனர் என்க.

முதற் சங்கம்

அந்நாளில், வடவேங்கடம் முதற்கொண்டு, தெற்கே தென்பாலி நாடுவரை தமிழகம் பரவி இருந்தது. இப்போதுள்ள குமரி முனைக்குத் தெற்கே முதற் சங்க காலத்தில், குமரியாறு ஓடிக்கொண்டிருந்தது; அங்கே பன்மலை யடுக்கத்துக் குமரிக் கோடும், பிறவும் இருந்தன. அவைகளுக்குத் தெற்கே பஃறுளி யாறும் ஓடிக்கொண்டிருந்தது. பஃறுளியாற்றிற்கும் தெற்கே பல காத தூரம் பரவியிருந்த தென்பாலி நாடு இருந்தது. அந்தத் தென்பாலி நாட்டில்தான் தென்மதுரை என்ற இடத்தில் முதற் சங்கம் நிறுவப்பட்டது. அதனால் முதற் சங்க காலத்தில், வேங்கட முதற்கொண்டு, தென்பாலி நாடுவரை தமிழகம் பரவி யிருந்தது. தென் மதுரையில் தமிழாய்ந்தது மதுரை என்பதனை "முதற் சங்க மிருந்து தமிழாய்ந்தது கடல் கொள்ளப்பட்ட மதுரை" என்று இறையனாரகப்பொருள் உரையும்

**இடைச் சங்கம்**

தென்பாலி நாட்டில், மதனமதுரை என்ற இடத்தில் அமர்ந்து புலவர்கள் தமிழாய்ந்து வந்தபோது ஏற்பட்ட கடல் கோளினால் தென்மதுரை அழிந்துபட, புலவர்கள் வடக்கு நோக்கிச் சென்று வேறோர் இடத்தில், சங்கத்தினை அமைத்தனர். அதுவே இடைச சங்கமாகின்றது. இடைச் சங்கத் தோற்றத்திற்குக் காரணம் கடல்கோளேயாகும். இக்கடல் கோளினால், முதற் சங்கத்தின் இறுதியில், பஃறுளியாற்றின் வடகரை வரை இருந்த தென்பாலி நாடு கடலுள் மூழ்கி அழிந்தது. இடைச்சங்க காலத் தொடக்கத்தில் தமிழகம் வேங்கட முதற்கொண்டு, பஃறுளியாறுவரை பரவி நின்றது. அதனைத் தெளிவுக்காக மூன்று பிரிவுகளாகப் பிரிக்கலாம். 1. வட வேங்கட முதற்கொண்டு குமரிமுனை வரையுள்ள பகுதி; 2. குமரி முனை முதற்கொண்டு குமரியாறு வரை பரவியுள்ள பகுதி; 3. குமரியாறு முதற்கொண்டு பஃறுளியாறு வரையுள்ள பகுதி. ஆக இம்மூன்று பிரிவுக்குள் அடங்கிய நிலப்பகுதியே இடைச் சங்கததின் தொடக்கத்தில் தமிழகமாக நின்றது.

முதற்சங்க முடிவுக்குக் காரணமாகிய கடல் கோளுக்கஞ்சிய மக்கள், இடைச் சங்கத்தினை அமைத்தபோது, நீண்டதூரம் வடக்கு நோக்கிச் சென்று, உள்நாட்டில் கபாடபுரம் என்ற இடத்தில் அமைத்தனர். கபாடபுரம் என்பது, குமரி முனைக்கும் குமரியாற்றிற்கும் இடைப்பட்ட இடத்தில் இருந்ததாகக் கருதலாம். கபாடபுரத்தில் இடைச் சங்கத்தினை நிறுவியது, கடல் பெருக்கினின்றும் தப்பித்துக்கொள்ளவே ஆகும். கடல் பெருக்குக்கஞ்சி வடக்கே தொலை தூரத்தில் இடைச் சங்கத்தினை அமைத்தலால் விளைந்த தீமையும் ஒன்று உண்டு. தமிழ்ச் சங்கமிருந்த இடத்திற்கும், பிறநாட்டிற்கும் தொடர்பு நீங்கிப் போய் விட்டது. அதனால் தென் தமிழ்ப் பகுதி தமிழ்திரிந்து வழங்கும் நிலமாயிற்று. இடைச் சங்கம் தொடங்கிய காலத்தில், பஃறுளி யாறு வரை செந்தமிழ் மொழியே வழங்கி வந்தது. ஆனால் காலப்போக்கில், நெருங்கிய தொடர்பின்மை காரணமாகவும், குமரி ஆற்றின் தடையினாலும், குமரியாற்றிற்கும் பஃறுளியாற்றிற்கும் இடைப்பட்ட குமரி நாடு, தமிழ்திரி நிலமாகியது. பாண்டியர்க்குரிய நாடாக இருந்தும், தொடர்பின்மையினால் தமிழ் திரிமொழி வழங்கிய நிலமாக மாறியது. அங்ஙனம் இடைச் சங்கம் தொடங்கிய சில காலத்தில், குமரியாற்றின் தெற்கே, தமிழ்திரிமொழி வழங்குவதாயிற்று. அக்காலப் பகுதியில் தொல்காப்பியனார் தம் பெருநூலினை இயற்றினார். அதனால் தொல்காப்பியர் காலத்தில், செந்தமிழ் நிலத்தின் எல்லையைப் பனம்பாரனார்,

"வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத்
தமிழ் கூறு நல்லுலகத்து"

எனக் குமரியாற்றினைத் தென்னெல்லையாகக் கூறிப் போந்தார். குமரியாற்றிற்கும் தெற்கே பஃறுளியாற்றுப் பகுதி வரை நிலம் பரவிக் குமரி நாட்டுடன் இருந்தும், அது கொடுந் தமிழ்நாடாக இருந்தது. தொல்காப்பியர் காலத்தில், குமரியாற்றிற்கும் தெற்கே நிலம் இருந்தது என்பதைக் "கடல் கொள்வதன் முன்பு பிறநாடும் உண்மையில் தெற்கும் எல்லை கூறப்பட்டது" என்று உரையாசிரியர் கூறுவதும் இதனை வலியுறுத்தும். இதனை வலியுறுத்துவார் போன்றே பெருங்காக்கை பாடினியாரும்,

"வடக்குந் தெற்குங் குணக்குங் குடக்கும்
வேங்கடங் குமரித் தீம்புனல் பௌவமென்
றிந்நான் கெல்லை யகவயிற் கிடந்த"

என்று தெற்கே அமைந்து நின்றது குமரியாறே என்று குறிப்பிடுகின்றார். தொல்காப்பியர், பனம்பாரனார் என்னுமிவர் தம் ஒருசாலை மாணவரும், இசை நுணுக்கம் செய்தாருமாகிய சிகண்டியாரும் தமிழகத்தின் எல்லையைக் கூறுமிடத்துத் தெற்கே குமரியாறே இருந்தது என்றதனை,

"வேங்கடங் குமரித் தீம்புனல் பௌவமென்
றிந்நான் கெல்லை தமிழது வழக்கே"

என்ற அடிகளில் தெளிவு செய்தலைக் காண்க. தெற்கே நாடில்லை எனின், 'குமரித் தீம்புனல்' என்பதற்குப் பொருள் இல்லாமல் போய்விடுகின்றது. தெற்கே நாடு இருந்தது; ஆனால் அது கொடுந் தமிழ்நாடாக இருந்தது.

இங்ஙனம் செந்தமிழ் நாட்டின் எல்லையைக் குமரியாற்றுடன் நிறுத்திக் கூறிவந்தபோது, மற்றொரு கடல்கோள் தோன்றியது. அக்கடல் கோளினால், குமரியாற்றிலிருந்து பஃறுளியாறு வரை பரவித் தமிழ் திரிமொழி வழங்கிய நிலம் கடலுள் மூழ்கியது. கபாடபுரத்திலிருந்தபோது, தொல்காப்பியனார் - பனம்பாரனார் காலத்தில் இக் கடல்கோள் நிகழ்ந்தது. கடல்கோளினைத் தம் கண்ணால் கண்ட பனம்பாரனார்,

"ஆர்கலி மிறிந்து நீர்நிகழ் சிலம்பிற்
கூரைசெந் தனையயாய் நடுங்கல் கண்டே"

என்று கடல்கோளினால் ஏற்படும் நடுக்கத்தினைக் கூறுப. களவியலுரையும் "அவர் சங்கமிருந்து, தமிழாராய்ந்தது கபாடபுரத்தென்ப; அக்காலத்துப் போலும் பாண்டியநாட்டைக் கடல் கொண்டது" என்று கூறுப. இதனைத்தான் இளங்கோவடிகளாரும்,

"வடிவேல் எறிந்த வான்பகை பொறாது
பஃறுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக்
குமரிக் கோடுங் கொடுங்கடல் கொள்ள"

என்று வருந்திக் கூறுகின்றார். அடியார்க்கு நல்லாரும் "தென்பாலி முகத்திற்கு வடவெல்லையாகிய பஃறுளியென்னுமாற்றிற்கும் குமரியாற்றிற்குமிடையே எழுநூற்றுக் காவதாவாறும், இவற்றின் நீர்மலிவானென மலிந்த ஏழ்தெங்க நாடும, ஏழ்மதுரை நாடும், ஏழ்பாலை நாடும்,....இந்த நாற்பத்தொன்பது நாடும், குமரி கொல்ல முதலிய பன்மலை நாடும், காடும் நதியும் பதியும், தடநீர்க் குமரி வடபெருங் கோட்டின்காறும் கடல் கொண்டது" என்று கூறுப. அப்படித் தான் இழந்த நிலத்தைப், பாண்டியன் கங்கையும் இமயமும் கொண்டு நிறை செய்தான் என்பதை அடிகளார்,

"வடதிசைக் கங்கையும் இமயமுங் கொண்டு
தென்றிசை யாண்ட தென்னவன்"

என்று குறிப்பிடுகின்றார். இவ்வரிகளில் அடிகளாரும் தமக்கு முன் நிகழ்ச்சியினைக் குறிப்பிடுகின்றார் என்பதனை மனத்தில் வைத்துக் கொள்ளுதல் வேண்டும்.

**கடைச் சங்கம்**

குமரியாற்றின் பகுதிவரை கடலுள் ஆழ்ந்த பிறகும், கபாடபுரத்திலே தொடர்ந்து தமிழ்ச் சங்கத்தினை நடத்திவந்தனர். அப்போது தோன்றிய மூன்றாவது கடல் பெருக்குக் கபாடபுரத்தினையும் அழித்துவிட்டது—குமரிமுனை வரை கடலுள் மூழ்கி விட்டது! அதுசமயம், கடல் பெருக்கில் உயிர்தப்பி வடக்கே போந்த நிலந்தருதிருவிற் பாண்டியன் என்பவன், இப்போதுள்ள மதுரையில் மூன்றாவது சங்கத்தினை நிறுவினான். தான் இழந்த நிலத்திற்கு நிறை செய்வதற்காகச் சேரர், சோழர் நாட்டினைக் கைப்பற்றினான். இதனையே,

"மலிதிரை யூர்ந்துதன் மண்கடல் வௌவலின்
மெலிவின்றி மேற்சென்று மேவார்நா டிடம்பட
புலியொடு வின்னீக்கிப் புகழ்பொறித்த கிளர்கெண்டை
வலியினான் வணக்கிய வாடாச்சீர்த் தென்னவன்"

என்று எடுத்தியம்புகின்றது. கபாடபுரம் அழிந்து பின்னர் இருந்த நிலையினை கடைச் சங்கத் தமிழகத்தினைத்தான், இளங்கோவடிகளார்,

"நெடியோன் குன்றமும் தொடியோள் பௌவமும்"

என்று கூறுமிடத்துக் குறிப்பிடுகின்றார். கடைச் சங்க காலத்தில் சுருங்கிக் கிடந்த தமிழகத்தினையே சிறுகாக்கை பாடினியாரும்,

"வடதிசை மருங்கின் வடுகுவரம் பாகத்
தென்றிசை யுள்ளிட்ட எஞ்சிய மூன்றும்"

என்று, மூன்று பக்கத்தும் கடலையும் எல்லையாகக் கூறிப் போந்தார்.

காலப் போக்கில் மேற்றிசையில் மலையாள மொழி தோன்றிய பிறகு கடல் மேற்கு எல்லையாக நின்ற நிலையும் போய் விட்டது! குடகுமலையே எல்லையாகி விட்டது. அந்த நிலையையே நன்னூலார், 'குணகடல் குமரி குடகம் வேங்கடம்' என்று கூறுப. அவ்வெல்லையே பாரதியார் காலம் வரை தொடர்ந்து வரப், பாரதியார் தமிழகத்தின் எல்லையை,

"நீலத் திரைகட லோரத்திலே—நின்று
நித்தம் தவஞ்செய் குமரிஎல்லை—வட
மாலவன் குன்றம் இவற்றிடையே—புகழ்
மண்டிக் கிடக்கும் தமிழ்நாடு"

எனப் பாடிவைத்தார். ஆனால் இன்றோ வடவேங்கடம் அப்பாட்டெல்லையாக நிற்கவில்லை; வடவேங்கடம் வடுகர்க்குரியதாகி விட்டது!

இங்ஙனம், ஆதிநாளில் நாவலந் தீவாய் வேங்கட முதல் தென்பாலி நாடுவரை முதற் சங்க காலத்தில் பரவிப் பெருமையுடன் திகழ்ந்த தமிழகம், இடைச்சங்க காலத்தின் தொடக்கத்தில் பஃறுளியாற்றுப் பகுதிவரை சுருங்கி, இடைச் சங்கத்தின் இடைப் பகுதியில் ஏற்பட்ட கடல் கோளினால் குமரியாற்றுப் பகுதிவரை குறைந்து கடைச்சங்கப் பகுதியில் குமரிமுனை வரை வந்து, தேய்ந்த தமிழகமாய்க் கிடப்பதைக் காண்கின்றபோது, "யானை தேய்ந்து பூனை யாகியது" என்ற பழமொழியே நினைவுக்கு வருகின்றது.

---

## செழித்து வாழியர்!

[நாஞ்சில், திரு. கா. கணபதி]

பொலிவுறு இன்பப் பொங்கல் நாளினில்
ஒலிபெறு தமிழினை உயர்த்த எண்ணியே
கலைநிறை பெரியரும் கவின்பு குத்திடும்
சிலைபெறு கவிஞரும் செழித்து வாழியர்!

# முப்பெரும் புலவர்களின் திருநாள்கள்

[திரு. கா. பொ. இரத்தினம் அவர்கள், எம். ஏ., பி. ஓ. எல்.]

"பூர்வீக மகான்களின் ஞாபகத்தைத் தீவிரமான பக்தியுடன் வளர்க்காத நாட்டில் புதிய மகான்கள் பிறக்க வழியில்லை. தப்பித் தவறி ஓரிருவர் தோன்றினாலும் அவர்களுக்குத் தக்க மதிப்பு இராது....எதனை விரும்புகிறோமோ அது தோன்றுகிறது. எதை ஆதரிக்கிறோமோ அது வளர்ச்சி பெறுகிறது. பேணாத பண்டம் அழிந்து போகும். பழக்கத்தில் இல்லாத திறமை அழிந்து விடப்படும். அறிவுடையோரையும் லோகோபகாரிகளையும் வீரரையும் கொண்டாடாத தேசத்தில் அறிவும், லோகோபகாரமும், வீரமும் மங்கிப போகும். தமிழ்நாட்டில் இப்போது 'புதிய உயிர்' தோன்றியிருப்பதால், நாம் இவ் விஷயத்தில் தமோகுணஞ் செலுத்தாமல் கம்பன், இளங்கோ, திருவள்ளுவர் முதலிய மகா கவிகளுக்கு ஞாபகச் சிலைகளும், வருடோற்சவங்களும் ஏற்பாடு செய்யவேண்டும். வள்ளுவர் சன்ம தினம் நிச்சயமாகத் தெரியவில்லை. மயிலாப்பூரிலுள்ள திருவள்ளுவர் கோவிற் பூசாரிக்குத் தெரியக்கூடும்" இவ்வாறு பாரதியார் எழுதித் தம் பேர் ஆர்வத்தை வெளியிட்டார்.

தமிழ்ப் புலவர்களுள்ளே திருவள்ளுவர், இளங்கோ, கம்பர் எனும் மூவரும் மிகுந்த சிறப்புடையவர்கள் என்பதை அவர் தம்முடைய பாடல்களிலே எடுத்துக் கூறியுள்ளார். "யாமறிந்த புலவரிலே கம்பனைப்போல் வள்ளுவர்போல், இளங்கோவைப் போல் பூமிதனில் யாங்கணுமே பிறந்ததில்லை, உண்மை வெறும் புகழ்ச்சியில்லை" என்று இம் மூவரையும் உலகத்திலேயே பெரும் புலவர்களெனப் போற்றினார். இவர்களுக்கு சின்னங்கள் விழாக்கள் எடுக்கவேண்டுமென்றனர்.

இன்று, இந்த மூன்று புலவர்களையும் தமிழ்மக்கள் ப பாகப் போற்றித் திருநாள் கொண்டாடுகிறார்கள்.

**பங்குனி உத்தரம்** கம்பர் திருநாளாகக் கொண்டாடப் படுகிறது. காரைக்குடிக் கம்பர் கழகமும் பிற நிலையங்களும் இந்நாளில் பெரு விழாக்கள் நடத்துகின்றன. திரு. சா. கணேசன் அவர்கள் கம்பர் திருநாளை எங்குங் கொண்டாடச் செய்தற்கு வேண்டிய ஆக்கமும் ஊக்கமும் அளித்து வருகிறார்.

சித்திரைச் சித்திரை (பூரணை) இளங்கோ அடிகள் திருநாளாக இப்பொழுது தமிழ்நாடெங்கும் கொண்டாடப்படு இளங்கோவையும் அவருடைய நெஞ்சையள்ளுஞ் சிலப்

பதிகாரத்தையும் மறந்திருந்த தமிழர்களுக்கு உண்மையை உணர்த்திச் சிலப்பதிகாரத்தின் சிறப்பைப் பட்டி தொட்டியெல்லாம் பரப்பிய பெருமை தமிழரசுக் கழகத் தலைவர் திரு. ம. பொ. சிவஞானம் அவர்களுக்குரியது. அவர்களே இளங்கோவடிகளைக் கொண்டாடுதற்கு இந்த நாளையும் குறிப்பிட்டு இத்திருநாளை எங்குங் கொண்டாடச் செய்தற்குச் சென்ற சில ஆண்டுகளாகப் பெரும் பணியாற்றி வருகிறார்.

வைகாசி அனுடத்தைத் திருவள்ளுவர் திருநாளாகக் கொண்டாட எமது தமிழ்மறைக் கழகவாயிலாகத் தொண்டாற்றி வருகிறோம். சென்ற ஐந்தாண்டுகளில் தமிழ் கூறும் நல்லுலகெங்கும் இந்நாளைக் கொண்டாடச் செய்தோம். சிங்கப்பூர், தெல்லி, சென்னை, திருச்சி, கொழும்பு வானொலி நிலையங்களும் இலண்டன் பி. பி. சி. நிலையமும் இந்த ஆண்டுத் திருவள்ளுவர் திருநாளுக்காகச் சிறப்பு நிகழ்ச்சிகளை ஒலிபரப்பிற்று. பாரதியார் போற்றிய—நாம் யாவரும் ஒன்றுபட்டுப் போற்றுகிற—இம் முப்பெரும் புலவர்களுள்ளே திருவள்ளுவரே கம்பராலும் இளங்கோவாலும் போற்றப்பட்டவர். எனவே, இம் முப்பெரும் புலவர்களில் முதல்வர் திருவள்ளுவராவார். தமிழ் மறையினை இயற்றித் தந்து உலகப் பேரறிஞர்களாலும் போற்றப்படும் பெருமைக்கு உரியவராக விளங்குகிறார். ஆகையால் திருவள்ளுவர் திருநாளை மிகச் சிறப்பாகக் கொண்டாடவேண்டியது நம் கடமையாகும்.

தமிழ் பேசும் மக்கள் தத்தம் சமயங்களோடு தொடர்புடைய பல திருநாள்களைக் கொண்டாடி வருகிறார்கள். எனினும், யாவரும் எவ்வித வேறுபாடுமின்றிக் கொண்டாடும் ஒரு நாள், தமிழ் கூறும் நல்லுலகத்தில் நிலைக்கவில்லை. தமிழினத்தோடு தொடர்புடையதாகச் சாதிமத அரசியற் கட்சி வேறுபாடுகளின்றி யாவருங் கொண்டாடத் தக்கதான ஒரு நாளைத் தமிழ் பேசும் மக்கள் யாவருங் கொண்டாடினால், தமிழினத்தின் ஒற்றுமை ஓங்கும்; வாழ்வு சிறக்கும். இத்தகைய ஒரு நாளாகத் தக்கது பல்வேறு சமயத்தினரும் கொள்கையினரும் எக்காலத்தும் போற்றுந் தமிழ்மறையைத் தந்த திருவள்ளுவர் தம் திருநாளே என்பதை யாவரும் ஏற்றுக்கொள்வர்.

பல காரணங்களாற் பிளவுபட்டுக் கிடக்கும் தமிழினத்தை மாத்திரமன்றி உலகம் முழுவதையுமே ஒன்றுபடுத்தும் ஆற்றல் திருக்குறளுக்கே உரியதென்பதையும், அதன் ஆசிரியருடைய திருநாளை யாவருங் கொண்டாடச் செய்தல் எல்லா மக்களையும் ஒருமுகப் படுத்துதற்குச் சாலச் சிறந்ததொரு வழி என்பதையும் யாவரும் அறிவார்கள். எனவே, எல்லோருஞ் சேர்ந்து கொண்டாடத் தக்கதான ஒரு நாளில்லாத குறையை நீக்கவும்,

திருவள்ளுவருடைய அரிய கருத்துக்கள்—வாழ்வாங்கு வாழும் நெறிகள்—வளர்நதவர்களுடைய உள்ளங்களில் மாத்திரமன்றிக் குழந்தைகளுடைய உள்ளங்களிலும் வேரூன்றிப் பயனளிக்கவுந் திருவள்ளுவர் திருநாளினைத் தமிழினத்தினை ஒன்றுபடுத்தும ஒரு நாளாகத்-தமிழரின் தனிப்பெரு நாளாக ஆண்டுதோறும் ஒவ்வொரு வீட்டிலும் யாவருங் கொண்டாடுதல்வேண்டும்.

ஊர்தோறுங் கொண்டாடப்படுந் திருநாளாக மாத்திரமன்றி வீடுதோறுங் கொண்டாடப்படுந் திருநாளாகவும் திருவள்ளுவர் திருநாள் நிலைத்து விளங்கச் செய்தல் வேண்டும்.

இவ்வாறு செய்தால் இப்பொழுது தமிழ்ப் பெருமக்கள் கொண்டாடிவரும் தமிழர் திருநாளாகிய தைத்திங்கள் முதல் நாளும், திருவள்ளுவர் திருநாளும் தமிழினம் முழுதுக்குமுரிய இருபெருந் திருநாளாக இலங்கும். தமிழர் திருநாள ஆண்டின் முதலிலும் திருவள்ளுவர் திருநாள் ஆண்டின் நடுவிலும் பொருத்தமாக அமைந்துமுள. தமிழர் திருநாள் நல்லுழைப்பைப் போற்றுந் திருநாள். திருவள்ளுவர் திருநாள் பேரறிவைப் போற்றுந் திருநாள. இந்த இருநாளையும ஒவ்வொரு வீட்டிலுங் கொண்டாடி, நல்லுழைப்புக்கும் பேரறிவுக்கும் விழா எடுக்கும் பெருமைக்கும் நம்மினத்தை உரித்தாக்குவோம.

மேலும், பழமையும் செழுமையும் உடைய மொழியையும், வனப்பும் வளமும நிறைநத இலக்கியத்தையும், சீரும் சிறபபும் பொருந்திய நாகரிகத்தையுமுடைய நம் தமிழினத்துக்கு, எம் மினப் பெரியார் ஒருவருடன் தொடர்புடையதொரு தொடர் ஆண்டு வேண்டுமென மறைமலையடிகள் முதலிய பெருமக்கள் உணர்ந்தனர். திருவள்ளுவருடன் தொடர்பு படுத்தி வழங்குவதே பொருத்தமென உரைத்தனர். எனவே திருவள்ளுவர் தொடர் ஆண்டையும் நாம் எல்லோரும் வழங்குதல்வேண்டும்.

இப்பொழுது திருவள்ளுவர் தொடர் ஆண்டு 1991 நடைபெறுகிறது. தைமுதல் நாளே திருவள்ளுவர் தொடர் ஆண்டின் முதல் நாளாகும். திருவள்ளுவர் தொடர் ஆண்டின் ஈராயிரம் ஆண்டு கி. பி. 1969 ஆகும். திருவள்ளுவருடைய ஈராயிரம் ஆண்டு நிறைவு விழாவை 1969 இல் வைகாசித் திங்கள் முழுவதுஞ் சிறப்பாகக் கொண்டாடுதற்கு ஆவன செய்தல் வேண்டும். திருவள்ளுவருடைய ஈராயிரம் ஆண்டு நிறைவு விழாவிற்குமுன் திருவள்ளுவர் திருநாளைத் தமிழர் ஒவ்வொருவரும் தத்தம் வீட்டிலுங் கொண்டாடி நிலைத்திடச் செய்யுமாறு தமிழ்ப் பெருமக்களைக் கேட்டுக் கொள்கிறேன். வாழ்க தமிழ்; வளர்க தமிழினம்.

# சங்கப்பாடல்கள் மொழியமைப்பு

ஜ. தி. நா. அரு

(செல்வி சிலம்பு, நடு, பரல் ௪, கஅஅ ஆம் பக்கத் தொடர்ச்சி)

நற்றிணை நடுநு ஆம் பாடல் நுண்புலமை சான்ற 'செலச் சொல்லும்' பாடலாகும. ‾)யற்றிய புலவர் பெயர் கிட்ட வில்லை. அவர் யாரேயாயினும் என்ன? அப்பாடல் மிகப் பாராட்டத் தக்கதே!

"புதல்வன் ஈன்ற பூங்கண் மடந்தை
முலைவாய் உறுக்கும் கைபோல் காந்தள்
குலைவாய் தோயும் கொழுமடல் வாழை
அம்மடற் பட்ட அருவித் தீநீர்
செம்முக மந்தி ஆரும் நாட!
முந்தை இருந்து நட்டோர் கொடுப்பின்
நஞ்சும் உண்பர் நனிநா கரிகர்
அஞ்சில் ஓதிஎன் தோழி தோள்துயில்
நெஞ்சின் இன்புறாய் ஆயினும், அதுநீ
என்கண் ஓடி அளிமதி!
நின்கண் அல்லது பிறிதியாதும் இலளே."

1. பொருள்: பிள்ளைப் பேற்றினை எய்திய நீலமலர் போன்ற கண்களையுடைய பெண்ணல்லாள் தன் முலையைக் கையால் பிடித்து மகனின் வாயில் வைக்க, பின் அக் குழந்தை அம் முலைப்பாலைப் பருகும். அது போலக் காந்தள் பூங்கொத்தோடு ஒன்றியிருக்கும் கொழுத்த மடலை உடைய வாழைப் பூவின் தோற்றம் விளங்கும். அவ் வாழைப்பூவின் மடலின் உட்பட்ட அருவிபோலப் பெருகும் இனிய நீரைச் சிவந்த முகத்தை உடைய பெண் குரங்கு கையால் பற்றிப் பருகும். அத்தகைய வளமிக்க மலைநாட்டைத் தனக்குரிமையாகக் கொண்ட தலைவனே! கண்ணோட்டம் உடையவர்க்கு நண்பர்கள் எதிரில் இருந்து, கொடிய உயிரைக் கொல்லும் நஞ்சைக் கலத்தில் பெய்து, "உண்க" எனக் கொடுத்தாலும், அந் நட்பின் காரணமாக நஞ்செனத் தெரிந்தும், மறுத் துரைக்க மனம் எழாமல் அதனைப் பருகிப் பின்னும் அந் நண்பரின் அன்பிலே ஈடுபடுவர். நீயும் அத்தகைய நட்புடையவனாக இருந்தும், அழகிய கூந்தலை உடைய என்னருமைத் தோழியின் தோளில் இன்ப மாகத் தூங்குவதை உன் உள்ளத்திலே 'இன்பம்' என்று கொள்ளவில்லை. அங்ஙனம் நீ கொள்ளாதொழிந்தாலும், என்னிடம் நீ கொண்டுள்ள அருளின் காரணத்திற்காகவேனும் இவளுடைய தோளில் தூங்குவதை இன்பமாக எண்ணிக்கொண்டு தலையளி (அருள்) செய்வாயாக. என் தோழியோ உன் அடைக்கலமானவள். உன்னைத் தவிர வேறொரு களைகணுமுடையவளல்லள்.

[இப்பாடலில், தோழியும் தலைவனும் நண்பர்களாக உருவாக்கப் பட்டனர். நஞ்சு தலைவிக்கு உவமையாக்கப்பட்டது. எனவே தோழிக்

பாடல் உணர்த்தும் உணர்ச்சிக் கதையையும், குறட்கருத்தையும், இலக்கிய உவமையையும் 'செலச் சொல்லும்' மொழியமைப்பே வானளாவி வாழச்செய்கிறது; ஆழ்ந்த உணர்ச்சியோடு என்பது உளங்கொள்ளத் தக்கது.

## 7. கலிப்பாவின் மொழியழகு

கலிப்பாடல்கள் துள்ளல் ஓசை இனிமையிலும், யாப்பழ _ )ம, துள்ளும நடைமவகததிலும சிறநது விளஙகுவன. கலிப்பாவுள், ஒத்தாழிசைக் கலியை ஒருசார் வகுத்த சான்றோரின் அறிவாற்றல் வியக்கத்தக்கதாக உளது. ஒரே கருத்தை மூன்று வகையில், மூவகை நயத்தில் பாகுபாடு செய்து, மூவகைச் சுவையும், நுண்பொருளும், உவமை நலமும் அமையும் வண்ணம் தாழிசைகள் இசைப்பது மிக விருப்பத்தை விளைவிக்கிறது. கருத்தைத் தெளிவாக விளக்கவும், மனத்தில் செய்தியை ஆழப் பதியவைக்கவும், அதே நேரத்தில் உள்ளத்திற்குக் குறைவில்லா நிறை பேரின்பம் பயக்கவும் கலிப்பாவினுள் ஒத்தாழிசைகள் உதவுகின்றன. இஃது கல்விமுறை அமைப்புள் மிகச் சீரியது.

ஓர் இளம் பெண் காதலனொடு உடன்போக்கில் சென்று விட்டாள். செவிலித்தாய்க்கு மகளின் பிரிவு பொறுக்கமுடியாத துன்பம் தந்தது. மகளைத் தேடிக் கண்டுபிடிக்க எண்ணிக், காட்டு வழியில் தனியாகக் கிளம்பி விட்டாள். நெடுந்தொலைவு நடந்து களைப்புற்றாள். எதிரில் வந்த அந்தணரைக் கண்டு, "என் மகள் ஒருத்தியும், பிறள் மகன் ஒருவனும் தம்முளே புணர்ந்தவர் சென்றதைக் கண்டீரோ?" என வினவினாள். அதற்கு அந்தணர், செவிலித்தாய்க்கு விடை கூறுகின்றனர். அந்த விடையில் உலக இயற்கையின் உண்மையை அழகிய உவமைகளால் விளக்கிக் கூறுகின்றனர். அந்த ஆறுதல் மொழிகள் செவிலியின் உள்ளத்தை அமைதியாக்குகின்றன.

[1]"பலவுறு நறுஞ்சாந்தம் படுப்பவர்க் கல்லதை
மலையுளே பிறப்பினு மலைக்கவைதாம் என் செய்யும்?
நினையுங்கால் நும்மகள் நுமக்கு மாங் கனையளே.

காகத தலைவ'யை வேண்டும்
வுறுத்தினாள்.]

1. "நறுமணம் கமழும் சந்தனம், பூசிக்கொள்ளுபவர்க்கே பயன் படுமேயன்றி, அம்மரம் தோன்றும் மலைக்குச் சந்தனத்தால் பயனுண்டோ? ஆராயும்போது, உம் மகளும் பிறனுக்குத் துணையாவது தவிர, உமக்கு உதவமாட்டாள். வெண்மையான முத்து, மாலையாக்கி அணிகின்றவர்க்குப் பயன்படுவதல்லாமல், _, தோன்றும் கடலுக்கு அதனால் என்னபயன்? ஏதுமில்லை. ஆராயும் போது, நும்மகளும் பயன்படும் பருவத்தில் நுமக்குப் பயன்படாள்.

சீர்கெழு வெண்முத்தம் அணிபவர்க் கல்லதை
நீருளே பிறப்பினும் நீர்க்கவைதாம் என்செய்யும்?
தேருங்கால் நும்மகள் நுமக்குமாங் கனையளே.

ஏழ்புணர் இன்னிசை முரல்பவர்க் கல்லதை
யாழுளே பிறப்பினும் யாழ்க்கவைதாம் என்செய்யும்?
சூழுங்கால் நும்மகள் நுமக்குமாங் கனையளே." (பாலைக்கலி: கூ

இப்பாடலில் எத்துணை அழகிய மொழியமைப்பு, கருத் தோட்டத்திற்கு உயிரூட்டுகிறது? இனிய சுவைநயம் மிக்க கலிப்பா அடிகள் கற்குந்தோறும் இன்பம் தருவன.

மற்றொரு பாடலில், காதலியைவிடச் 'செல்வம்' சிறப் பானதா? இன்றியமையாததா? என்ற வினாவை எழுப்பிக் கொண்டு; புலவர், "காதலியை விடச் செல்வம் தாழ்ந்தது; தீயது" எனத் தீர்ப்பளிக்கிறார். அப்பாடலில் முதலில் காதலன், காதலியைப் பலபடப் பாராட்டிப் புகழ்கிறான். அவளழகு நலன்களையெல்லாம் சுவை ததும்பத் ததும்பப் பாடுகிறான்;

[1]"அணை மருள் இன்துயில் அம்பணைத் தடமென்றோள்,
துணைமலர் எழில்நீலத் தேந்தெழில் மலருண்கண்,
மணமவ்வல் முகையன்ன மாவீழ்வா ணிரைவெண்பல்,
மணநாறு நறுநுதல், மாரிவீழ் இருங்கூந்தல்
அலர்முலை யாகத் தகன்ற அல்குல்
சிலநிரை வால்வளைச் செய்யாயோ........" (பாலைக்கலி: கஉ)

எனப் பலப்பல பாராட்டியவன் அக்காதலன். ஆனால் பின்னர்ப் பொருள்மேல் காதல் கொண்டு, தலைவியைப் பிரிந்து வேற்றுநாடு களுக்குப் போக விரும்புகிறான். அச் செய்தியால் காதலி மிக வருந்துகிறாள். ஆகவே தோழி, காதலனை வெளிநாடு செல்லாமல் தடுக்கப் பொருளின் இழிவையும், காதலின் புகழையும் முறைப் படுத்திப் பேசுகிறாள்:

---

ஏழு நரம்பாற் கூட்டிய இன்னிசை பாடுவார்க்குப் பயன் கொடுக் குமே தவிர அவ்விசை யாழினிடம் பிறந்தாலும், யாழுக்கு இசையால் பயனுண்டோ? இல்லை. நினைக்கும்போது உம்மகளும் பருவகாலத்தில் பிறர்க்கே பயன்படுவாள்."

1. "இனிய தூக்கத்தை அளிக்கும் பஞ்சணையை ஒத்த, மூங்கில் போல் திரண்ட உருவும், பெருமையும் உடைய மென்மையான தோளை யும்; நீல மலர்போன்ற அழகுடைய அகன்ற மை பூசப்பட்ட இருகண் களையும், மணங்கமழும் முல்லை மொட்டைப் போன்ற வண்டுகள் விரும்பும் நேரான ஒழுங்குள்ள வெண்மையான பற்களையும், மணம்வீசும் நறிய நெற்றியையும், மாரி விரும்பக்கூடிய கரிய கூந்தலையும், மார்பில் மிகப் பெருத்த இரு முலைகளையும், அகன்ற அல்குலையும் உடைய வெண்மையான சில வளையல் அணிந்த சிவந்த நிறத்தினளே......"

[1]"பொருளல்லாற் பொருளுமுண் டோவென யாழநின்
மருளிகொண் மடநோக்க மயக்கப்பட் டயர்த்தாயோ ;
காதலா ரெவன் செய்ப பொருளில்லா தார்க்கென
வேதிலார் கூறுஞ்சொற் பொருளாக மதித்தாயோ ;
செம்மையின் இகந்தொரீஇப் பொருள்செய்வார்க் கப்பொருள்
இம்மையும் மறுமையும் பகையாவ தறியாயோ?"

(பாலைக்கலி : ௧௪)

இவ்வாறு ஒரு பொருள்மேல் மும்முறை
ஓர் அழகிய மொழியமைப்பாக விளங்குகிறது.

கலிப்பாவுள்ளும், சிந்தியல் வெண்பாவுள்ளும், (வெள்ளொத் தாழிசை), ஆசிரியத் தாழிசையுள்ளும், கலித்தாழிசையுள்ளும், வஞ்சித் தாழிசையுள்ளும் இம்முறையில் ஒருபொருண்மேல் மூன்று பா அடுக்கி வருதலைக் காண்கிறோம். இவ்வகைப் பாடல்கள் தற்காலத்தில் அருகிவிட்டது மிக வருந்தத் தக்கது. வருங்காலக் கவிஞர்களேனும் இவ் வழகிய யாப்பு முறையைக் கைபாண்டு தமிழ் வளர்ச்சிக்கு உதவி செய்தல் வேண்டும்.

சங்ககால மக்களின் பேச்சு நடையின் மொழியமைப்பை ஒரோவழி சங்கத்தொகை நூல்களினும், கலி, பரி பாடல் களாலும் உணர முடிகிறது. வழக்குப் பேச்சில் இலக்கணச் சிதைவு, சொற்சிதைவு, எழுத்துச் சிதைவு ஆகியவை இயல்பே. கொச்சை மொழிகளும், முறைமாறிய சொற்றொடர் அமைப்பும் பேச்சு மொழியில் இடம் பெறுகிறது. இத்தகைய மொழி யமைப்பை மேல் நூல்கள் நமக்குச் சுட்டுகின்றன.

---

1. செல்வத்தைவிடச் சிறந்த பொருள் இல்லையென்று மயக்கம் கொண்ட அறியாமையான நின்அறிவு எண்ணிக் காதலனை மறந் தாயோ?

கையில் பொருள் இல்லாதவர்க்கு அவர்கள் காதலர் என்ன காரியத்தைச் செய்வரென்று உறவினர் போல இருந்து உறுதியில்லாத மொழிகளைக் கூறும் ஏதிலாரின் மொழியைப் பொருளாக மதித்தாயோ?

உண்மையான பொருளைத் தேடாமல், அம் முறையிலிருந்து நீங்கி, நிலையில்லாத பொருட் செல்வத்தைத் தேடுகின்றவர்க்கு, அவர்கள் எண்ணியபடி அப்பொருளை அடைந்தபின்னும் அச்செல்வமே இம்மைக் கும், மறுமைக்கும் பகையாவதை நீ அறியாயோ?

[இப் பகுதிகளில் நாடகப் பண்பும், வழக்கறிஞரைப் போல, கருத் துக்களின் தகுதிகளை அணுவணுவாக ஆராய்ந்து உறுதியானவற்றை அழுத்தமாக விளக்குவதும் மிகப் போற்றத்தக்க வகையில் அமைந் துள்ளன.]

[1]"ஏ ஏ இஃதொத்தன் நாணிலன்! தன்னோடு
மேவேம் என்பாரையும் மேவினன் கைப்பற்றும்
மேவினும் மேவாக் கடையும் அஃதெல்லாம்
நீயறிதி யான்அஃது அறிகல்லேன் பூவமன்ற
மெல்லிணர் செல்லாக் கொடியன்னாய்! நின்னையான்
புல்லினி தாகலிற் புல்லினென எல்லா!
தமக்கு இனிதென்று வலிதிற் பிறர்க்கின்னா
செய்வது நன்றாமோ? மற்று;
சுடர்த்தொடீஇ, போற்றாய் களைநின் முதுக்குறைமை போற்றிக்கேள்;
வேட்டார்க்கு இனிதாயின் அல்லது நீர்க்கு இனிதென்று
உண்பவோ நீர் உண்பவர்." (குறிஞ்சிக்கலி : சுஉ)

எத்துணை எளிய - இனிய - பேச்சு வழக்கு அப்படியே பாட்டில் இடம் பெற்றிருக்கிறது! இது மிகப் போற்றத் தக்க மொழியமைப்பாகும். சிக்கலற்ற, ஆற்றொழுக்கான நடையும், உணர்ச்சி நயமும் பாட்டில் சிரிக்கிறதே!

## 8. முடிபுரை

சங்க இலக்கியங்களால் நாம் உணரும் நுண்ணிய பொருள்களின் மதிப்பு 'இவ்வளவு அவ்வளவு' என ஒரு வரையறைப்

---

1. **பொருள்:** தலைவி: ஏ! ஏ! இவன் ஒருத்தன்! புணர்ச்சி ஆவல் இல்லாமல் நிற்பவரையும் தான் புணரும் குறிப்போடு கையால் வலியப் பிடித்துக் கொள்கிறானே! நாணமற்றவன்!

தலைவன்: புணர்ச்சிக் குறியின் எல்லாப் பகுதியாகிய மெய்ப்பாடெல்லாம் உன்னிடத்தில் பொருந்தினும், பொருந்தாத இடத்திலும் உள்ள நன்மை-தீமையை நீ அறிவாயாக. நான் புணர்ச்சிக் குறிப்பை நன்கு அறியேன். பூங்கொடியே! நின் உடல் அணைவதற்கு இனியதாக இருப்பதாலே உன்னை யான் அணைந்தேன்!...

தலைவி: ஏடா! தமக்கு இனியதாக இருக்கும் என்று எண்ணிப் பிறர்க்கு இன்னல் தருவதை வலிதில் செய்வது பிறர்க்கு இன்பத்தைத் தருமோ?

தலைவன்: சுடர்த் தொடீஇ! நீ உன் கிழட்டுப் பருவத்தில் வாழ வேண்டிய நிலைமையை இப்போது ஏன் கைக்கொள்கிறாய்? காதலைப் புறக்கணிப்பது இளம் பருவத்தினர்க்கு இயலாது. நான் கூறுவதைப் பேணிக் கேள். தண்ணீரைக் குடிக்க விரும்புபவர்க்கு 'அந்நீர் இனியதாக உள்ளது' என்று உண்ணுகின்றார்களே அவிர, நீர்க்கு இனிதாக இருக்குமென்று கருதியா அந்நீரை உண்ணுகின்றனர்? அது போல, எனக்கு இன்பம் வேண்டியிருப்பதால் உன்னைப் புணர்வேன்!

[இவ்வுரையாடலில் ஆடவனும் பெண்ணும் ஆகிய இருபாலரும் எத்தகைய பேச்சுத்திறமை உடையவர்களாக இருந்தனர் என்பதை உணரலாம். திறமையான பேச்சைச் - சொற்போரைப் - பசி, கூடத் தோன்றாத வண்ணம் கேட்டுச் சுவைக்க மக்கள் காத்திருக்கின்றனர் அல்லவா? பேசசுத்திறமை, சீரிய மொழியமைப்பு நுணுக்கத்தாலேயே சிறப்பும் வெற்றியும் அடைகிறது.]

படுத்தும் அளவினதோ? அன்று. சங்கப் பாடலின் பொருள் விரிவும், கருத்தாழமும், எண்ணச் சீர்மையும், நுட்பமும், திட்பமும், ஒட்பமும் வியக்கத்தக்கது. சங்க இலக்கிய மொழியமைப்பு மரபை மீண்டும் புதுப்பித்து மறுமலர்ச்சித் தமிழிலக்கியத்திற்குப் பயன்படுமாறு ஆக்குதல் வேண்டும். இன்றேல், உயிரிலக்கியமும், உயிர்வேகமுள்ள மொழி நடையும் தமிழுக்குக் குன்றிவிடும்.

பல்வகைச் சொல்லாட்சிகள், அவற்றின் வேற்றுமை - வேற்றுமைகள், வேர்ச்சொற்களின் வளர்ச்சி நிலைகள், நடையமைப்பின் மாண்பு, புலமையின் பல்வேறு வகைமைகள் ஆகியவைகளில் நன்கு துறைபோய புலவர்கள் தனித்துத் தனித்துச் சங்கத்தமிழை ஆராய்ந்தால், அதன் மொழியமைப்பின் ஒட்ப நுட்பங்கள், செப்ப திட்பங்கள் புலனாகும். இவ்வாராய்ச்சியால் நுண்ணருங் கருத்துக்களும், புலனாகா வரலாற்றுண்மைகளும், புலவரின் உண்மை உள்ளக் கிடக்கைகளும், புலமையின் மேன்மை உணர்ச்சிகளும் நமக்கு விருந்தாகும்.

## சிலேடை வெண்பா

[மேட்டூர்—தேன்மழை]

### பெண்ணுக்கும், ஆற்றுக்கும்

[1]இடையிலே காண்க எழிற்சேலை; மற்றும்
இடையிற் கலங்கள் இலங்கும்—படியவே
நாணலையும் காணும் நயமுணர்ந்து, நல்லாற்றை
மாணல்ல பெண்ணாய் மதி!

1. இடையிற் எழிற்சேலை காண்க — இடையில் அழகிய சேலையைக் காண்க; ஆற்றின் கரையில் அழகிய செந்நெல் வயலைக் காண்க.
இடையிற் கலங்கள் இலங்கும் — பெண்ணின் இடையில் அணிகலம் மிளிரும்; ஆற்றின் இடையில் மரக்கலங்கள் திகழும்.
நாணல்: பெண்ணுக்கு நாணும் இயல்பு, ஆற்றங்கரையில் நாணற்புல்.

# மணிவாசகர் திருப்பள்ளியெழுச்சி

[வித்துவான், திரு. சொ. சிங்காரவேலன், பி. ஏ.]

செந்தமி ழாகிய சீருடைக் கதிரே
    செழும்புவிக் கின்னருள் செறித்திடு மதியே
முந்திடு நல்லருள் தந்திடு முனியே
    முழுமனத் தடியவர் பரவிடுங் கதியே
சிந்தனை ஓங்கிடச் செய்திடுங் குருவே
    சிவபத மடைந்தருள் சிவகதி நிதியே
எந்தமை யாண்டருள் புரிமணி வாசக
    எம்பெரு மான்பள்ளி எழுந்தரு ளாயே. (௧)

பாடிடும் அடியவர் பந்தம தறுத்துப்
    பைங்கனி யொத்தவர்க் கன்பினைச் சொரிந்து
ஆடிடும் பரவச அநுபவம் அருளி
    அருணெறி காட்டிடும் அண்ணலென் றுன்னை
நாடிடும் மனத்தால் நாட்டினிற் கூடி
    நலம்பெற வாழ்த்தியிங் கனைவரும் நின்றோம்
கூடிடும் அருணெறி கொடுத்தருள் புரியும்
    கொற்றவ னேபள்ளி எழுந்தரு ளாயே. (௨)

உடல்பொரு ளாவியெல் லாமுடை யவற்கே
    உரித்தென உணர்த்திடும் உயர்வுடை மையினால்,
மிடலுடை ஞானியர் மிகுத்துரைத் திடவே
    மிளிர்ந்திடுந் தகவுடை மெய்யரு ளதனால்
விடலரி தாமென வெருட்டிடுந் துயரில்
    விழுந்துநின் றயர்ந்திருள் வெருவிடு மெமக்கே
கெடலருந் திருவருள் காட்டிடும் ஞானக்
    கெழுதகை யோய்பள்ளி எழுந்தரு ளாயே. (௩)

கிழக்குவெ ளுத்தது கிளர்ந்தடி யோங்கள்
    கேண்மையி னால்வினைக் கேட்டறிந் தவராய்ச்
சழக்கறுத் துயர்நெறி சார்ந்தரு ணீரில்
    தனித்தினி தாடியிங் கினித்துநிற் பேமால்
பழக்குமிப் பாங்கினிற் பரிந்தெமை மயக்கும்
    பரிசினை அருளுகென் றிருகழல் தொழுகோம்
உழக்குமெந் துயரினை ஒளித்தரு ளியும்
    ஒருதுணை யேபள்ளி எழுந்தரு ளாயே. (௪)

கற்றவர் உளத்தினிற் கனிதருந் தேனும்
    கனிவுடை வாசகத் தமிழ்பொழி முகிலே!
உற்றவர் தமக்கிங் குள்ளொளி பெருக்கும்
    ஓரொளி யேநவில் சீரொளி யேயென
மற்றவ ரும்முணர்ந் தேத்திடு மலையே
    மலிதமிழ்க் குறுநிதி யாமெனுந் தவமே
முற்றவத் தார்க்கினி துணர்ந்திடு மொழிசொல்
    முன்னவ னேபள்ளி எழுந்தரு ளாயே. (௫)

சிவனது பழைமை திருவருட் புகழ்ச்சி
செறிந்திடு மிருவகைத் திருவுடை மேனி
அவனியி னெழுச்சி அன்பகத் துறுதி
அதனிடை நீத்திடும் விளக்கமும் அருளி
நவநிலைச் சத்தியர் நல்லருள் காட்டி
நவிலுமா னந்தத் தினிற்களிப் பாட்டிச்
சிவநிலை யளித்திடுஞ் செறிவினிற் கூட்டும்
செந்நெறி யோய்பள்ளி எழுந்தரு ளாயே. (௬)

றவனெ டொன்றலும் அடைவுமாங் கருளி
எழிற்கரு ணையினை எடுத்தியம் பியபின்
உறையுமா யையினை நீக்கிநல் ஞான
உயரருள் வெற்றியிங் கோதியிவ் வுலக
மறைமிகு சுத்தியும் அருட் சுத்தி யாமென
மலிந்துயிர்ப் பூரண இரக்கமும் அருளி
மறைத்திடு மாயையின் சுத்தியும் அருளும்
மாதவ னேபள்ளி எழுந்தரு ளாயே. (௭)

தேனெனப் பாலெனத் தித்தித் திருக்கும்
தெளிசுவை யாமெனத் தேக்கெறிந் திடுஞ்சீர்
வானமு தாமென வையமிங் கறியும்
வடிவமும் பெரிதெனச் சிறிதென அணுவாய்
நானென அன்றென என்னுளி னிக்கும்
நாயகன் ருனென வாசகந்தோறும்
ஊனினு ளுயிரும் உருகிட உரைக்கும்
ஒருமுனி வாபள்ளி எழுந்தரு ளாயே. (௮)

உலகவர் கண்டுள முருகியிந் நூலே
ஒப்பரும் பனுவல் உயர்தமி ழாமெனப்
புலத்துரை கல்வினிற் போக்கிடும் உரையால்
பூதலத் துயர்ந்திடும் புண்ணிய மொழியால்
தலத்தெழு நாயகன் திருக்கரத் தெழுதும்
தவநிலை யாலருள் தண்மையி னுயர்ந்தோய்
நலத்துறை தரவரும் ஞானநன் மலையே
நம்பெருமான் பள்ளி எழுந்தரு ளாயே. (௯)

பிறவி யறுத்திடும் பெரியவ ஆரணப்
பெரும்பொருள் பேசிடும் வித்தக வாழ்வில்
அறவழி காட்டிடும் அண்ணலே எங்கள்
ஆத்தும நெறிக்குயர் ஐயனே அறிவாம்
திறவழி நின்றருள் தேக்கிடும் குரவ
திகழ்மணி வாசகத் திருவுடைக் கடவுள்
நறவவிழ் திருவடித் தாமரை தொழுகோம்
நாவல னேபள்ளி எழுந்தரு ளாயே. (௧0)

# நான் கண்ட செய்கோன்

[திரு. சித. அழகப்பன், செய்கோன்]

இரண்டாவது உலகப் பெரும் போருக்கு முன்பு பாரிஸ் வெள்ளையர்களால் ஆளப்பட்டு வந்த இந்தோசைனா என்னும் நாடு போருக்குப்பின் சீனப் பொதுவுடைமைக்காரர்களால் படையெடுக்கப்பட்டு வடபகுதி கைப்பற்றப்பட்ட பொழுது வெள்ளையர்களால் வெல்ல முடியாமலும் ஆள முடியாமலும் இருந்தநிலையில் போர் அமைதி என்ற போர்வையில் நாட்டை ஆண்ட வெள்ளையர்கள் நாட்டை நான்காகப் பிரித்துத் தெற்கு வியத்நாம், வடக்கு வியத்நாம், லாவோஸ், கம்போடியா, எனப் பெயர் சூட்டிக் கம்போடியாவை அரச குடும்பத்தினரின் ஆளுகைக்கும் வடக்கு வியத்நாமைப் பொதுவுடைமைக்காரர்களின் ஆளுகைக்கும் விட்டு விட்டுத் தெற்கு வியத்நாமைத் தங்களின் கீழ் இருந்தவர்களிடம் கொடுத்து விட்டு வெளியேறிச் சென்று லாவோஸில் தங்கள் பிடிப்பை விடாமல் வைத்துக் கொண்டிருக்கிறார்கள். ...னும் அதுவும் ஓர் உரிமை நாடு என்னும் பெயரில் இயங்கி

இவைகளில் வளம் மிகுந்த பகுதி தெற்கு வியத்நாம். அதன் தலைநகரம் செய் கோன். இந்நகரின் மக்கட் தொகைப் பெருக்கம் இருபது நூறாயிரங்கள் ஆகும். தெற்கு வியத்நாமில் வாழும் மக்களின் முழு எண்ணிக்கை ஒன்றரைக்கோடி ஆகும். இவற்றுள் சீனர்கள் இருபது நூறாயிரம் பேர்கள் வசிக்கின்றார்கள். அவர்கள் அனைவரும் வியத்நாமியக் குடிகளாக மாற்றப்பட்டுவிட்டார்கள். இங்கு வாழும் இந்தியர்களின் கூடுதல் எண்ணிக்கை இரண்டாயிரத்துக்குள் அடங்கும். அவர்களில், இந்திய முகமதியர்கள், தமிழர்கள், நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள், சிந்திக்காரர்கள், சீக்கியர்கள் என்னும் வகுப்பினர்கள் வாழ்ந்து வருகின்றார்கள். இவர்களில் முகமதியர்களும் சிந்திக்காரர்களும் வணிகர்களாகவும், தமிழர்களும் செட்டியார்களும், நிலம், வீடு, பொருள் உடைமைக்காரர்களாகவும் சீக்கியர்களில் சிலர் வணிகர்களாகவும் மற்றும் சிலர் பாதுகாவலர்களாகவும் இருந்து வருகிறார்கள்.

வியத்நாமிய மக்கள் நல்ல சுறு சுறுப்பும் அறிவுக் கூர்மையும் உள்ளவர்கள். அவர்களின் வாழ்க்கை முறைகள் போற்றத் தக்க வகையில் அமைந்திருக்கின்றன என்று சொல்லலாம். தங்களின் வளர்ச்சியிலும் நாட்டின் முன்னேற்றத்திலும் மிகுந்த விழிப்புக் கொண்டுள்ளார்கள். வியத்நாமியச் சிறுவர்களும் சிறுமிகளும்

தங்கள் தாய் மொழியோடு ஆங்கிலத்தையும் கற்று வருகிறார்கள். முன்பு பிரெஞ்சு மொழியைக் கற்று வந்தார்கள். இப்பொழுதும் அதற்குத் தனிமதிப்புண்டு.

வியத்நாமிய மக்களின் இல்லங்கள் மிகத் தூய்மையாகவும் அழகுள்ளவைகளாகவும் மனதைக் கவரும் தன்மையிலும் சிறப்புடன் இருக்கின்றன. பெண்களும் மிகத் தூய்மையாகவும் அழகிய உடையணிந்தும் கண்கவர்வனப்புடன் காணப்படுகின்றார்கள். அவர்களின் உடலழகும் உடையழகும் இடையழகும் நடையழகும் கண்டுகளிக்கத் தக்கனவாகும். அழகைப் பற்றிச் சுருக்கமாகச் சொல்வதாயின் காவியத் தலைவிகளை ஒப்பிட்டுக் கூறலாம். "மானினம் வருவபோன்றும் மயிலினம் திரிவபோன்றும்" என்று கம்பர் கூறிய நயம் இவர்களிடம் காணக்கிடைக்கிறது. மென்மையைப் பற்றிச் சொல்வதானால் "செங்காந்தள் மெல்விரலால் சேக்கை தடவந்தேன்" என்று முத்தொள்ளாயிரமும், "தையல் தளிர்க்கரங்கள்" என்று புகழேந்தியும்,

"நன்னீரை வாழி அனிச்சமே நின்னினும்
மென்னீரள் யாம் வீழ் பவள்"

"அனிச்சமும் அன்னத்தின் தூவியும் மாதர்
அடிக்கு நெருஞ்சிப் பழம்"

என்று வள்ளுவரும் கூறிய நயங்கள் நிரம்ப உடையவர்கள். இங்கு எனது மதிப்பிற்குரிய பெரியார், பலவான்குடி. திரு. மெ. வெ. வேலப்ப செட்டியார் இயற்றிய வெண்பாவும் நினைவிற்கு வருகிறது.

"வானமிர்தம் பொங்கும் வளமிகுந்த செய்கோனைத்
தேனப்ப! நீ கண்டு தேர்ந்தனையோ — மானொத்த
பெண்கள் மதிநலத்தின் பெட்பு மிகுபொற்பு
கண்களவு கொள்ளுமே காண்."

நிலவளம் நீர்வளம் மலைவளம் நிறைந்த நாடு தெற்கு வியத்நாம். பெரும்பகுதி ஆற்றுப்பிரிவால் செழிப்பாயிருக்கிறது. பர்மாவில் ஐராவதி யாற்றைப்போல இங்கு மீகோங் என்னும் காணபபட இந்நாட்டின் விளைபொருள்கள் நெல், மரம், இரப்பர், காப்பி, தேயிலை முதலியன. காய்கறிகளும் பழவகைகளும் நிறையப் பயிரிடுகிறார்கள். சைவ உணவு உட்கொள்பவர்கள் மிக மிகக் குறைவு. பன்றி இறைச்சியும் மாட்டு இறைச்சியும் சாப்பிடுகிறார்கள். வியத்நாமியர்களின் ஒவ்வோர் இல்லத்திலும் ரேடியோ, சைக்கிள், தையல் யந்திரம், ஆகியவைகள் பெரும்பாலும் இருக்கும். ஒவ்வொரு சிறுவனும் சிறுமியும் சைக்கிள் ஓட்டுவார்

கள். எந்தப்பொருளைப் பார்க்கிறார்களோ அதை அப்படியே செய்து விடும் ஆற்றல் உடையவர்கள். எவ்வளவு ஏழையாக இருப்பினும் காலில் கட்டையும் படுப்பதற்குக் கட்டிலும் கொசு வலையும் இல்லாமல் இருக்க மாட்டார்கள். பெண்கள் கணவருக்கு அன்புடன் பணி செய்யும் குணம் உடையவர்கள். வீட்டுக்கு வருபவர்களை மரியாதையோடு வரவேற்று இன்சொல்லால் மகிழ் விப்பார்கள். அலுவலகங்களில் பெரும்பாலும் இளம் பெண்கள் பணிபுரிகின்றார்கள். வணிகத் துறையிலும் மிகுதியாகப் பெண் கள் ஈடுபட்டிருக்கிறார்கள். வீடுகளில் ஆடவர்களுக்கு அமைச்சர் களாகவும் பொருள் காப்பாளராகவும் பெண்களே விளங்கி வருகிறார்கள். ஒழுக்கம் கட்டுப்பாடு இவைகளில் ஆண்களை விடப் பெண்களே சிறந்து காணப்படுகிறார்கள். பிறருக்கு அடிபணிந்து கைகட்டி வாழும் குணம் படைத்தவர்கள் அல்லர். ஒவ்வொரு வரும் உரிமை மனப்பான்மையோடு வாழ்கிறார்கள். நிறையப் பொருளைத்தேடி வைத்துக் காப்பாற்ற வேண்டுமே என்று யாரும் கவலைப்பட வில்லை. நாள்தோறும் வாழ்க்கை மகிழ்ச்சியாகவும் இன்பமாகவும் இருக்க வேண்டும் என்று விரும்புகிறார்கள். இங்கு வகுப்புப் பிரிவினை, தொழில் வேற்றுமை இல்லை. திருமண முறையில் காதல் மணமே பெரும்பாலோர் கையாளும் முறை யாகக் காணப்படுகிறது. மணமுறிவும் நடைபெறுகின்றன. நான் கைந்து குழந்தைகளைப் பெற்ற பிறகு கூட மணமுறிவு செய்து கொள்ளுகிறார்கள். இந்நாட்டு மக்கள் பிள்ளைப் பேற்றுக்குப் பஞ்ச மில்லாதவர்கள்.

இந்த உலகத்தில் எத்தனை விதமான மோட்டார்கள்உண்டோ அத்தனை விதமான மோட்டார்களையும் இங்கே காணலாம். இது போல் இந்தியாவில் காண்பது அரிது. வாடகை வீட்டில் குடியிருப்பவர்கள் கூட விலையுயர்ந்த கார்கள் வாங்கி வைத்துக் கொண்டிருக்கிறார்கள். அகன்று நீண்ட தெருக்களின் இருமருங் கிலும் அழகுற அமைக்கப்பட்ட பத்திகளில் வரிசையாக வானை நோக்கி வளர்ந்து நிற்கும் மரங்கள் இந்நகரை மிகவும் அழகு செய்கின்றன. இவ்வனப்புமிக்க நகரத்தில் அழகிய மோட் டாரில் ஊர்ந்து செல்வது ஆனந்தமாக இருக்கிறது.

இப்பொழுது மக்களால் தேர்ந்தெடுக்கப் பெற்ற மக்கள் தலைவரால் அரசாங்கம் நடத்தப் பெற்று வருகிறது. என்றாலும் மக்களுக்குப் பேச்சுரிமையோ எழுத்துரிமையோ இல்லை. காரணம் பக்கத்தில் பொதுவுடைமை பரவி நிற்பது தான் என்று நான் நினைக்கிறேன்.

அரசாங்க அலுவலகங்களில் வேலை நேரம் காலை 7-30 மணி யிலிருந்து பகல் 12 மணி வரையிலும் பிற்பகல் 2-30 மணியி

விருந்து மாலை 5-30 மணி வரையிலும் நடைபெறுகிற [illegible]ந நாட்டுமக்கள் பகல் உணவிற்குப்பின் படுத்து உறங்குவ[illegible]ம் பழக்கம் உடையவர்களாதலால் எல்லா வேலைகளுமே [illegible]ந்த நேரத்தில் தூங்குகின்றன. பொதுவாக அரசாங்க ஊழியர்கள் எல்லோருக்குமே நல்ல ஊதியம் கிடைக்கிறது. அரசாங்க அலுவல கங்களில் வேலை பார்ப்பவர்களுக்கு மிகக் குறைந்த சம்பளம் 1500 பியாஸ்தராகும். அஃதாவது இந்திய நாணயப்படி நூறு ரூபாய் கள் ஆகும். இதர தொழிலாளர்களில் பெரியவர்களுக்கு நாள் ஒன்றுக்கு 100 பியாஸ்தர்களும் சிறிய வேலைக்காரர்களுக்கு 50 பியாஸ்தர்களும் கூலியாகக் கிடைக்கிறது. அஃதாவது பெரியவர் களுக்கு நாள் ஒன்றுக்கு ஆறு ரூபாய்களும் சிறியவர்களுக்கு நாள் ஒன்றுக்கு மூன்று ரூபாய்களும் [illegible]

நகரில் பஸ் வசதியும் டாக்ஸி வசதியும் நிறைய உண்டு. நகரின் எந்தப் பகுதிக்கு வேண்டுமானாலும் இவ்விரண்டிலும் சென்று வருவது எளிதாக இருக்கிறது. இவ்வளவு வசதி, சென்னை, கல்கத்தா போன்ற நகரங்களில் கூட இல்லை. காரிலே பயணம் செய்யும் பழக்கம் மக்களிடம் அதிகமாகக் காணப்படு கிறது. கால்நடையாகச் செல்பவர்களைக் காண்பது அரிது. சினிமாவுக்குச் செல்வது என்றாலும் பஸ், டாக்ஸி, அல்லது ரிக்ஷாவில்தான் செல்லுகிறார்கள். நன்கு செலவு செய்யும் பழக்க மிருப்பதால் பணப்பழக்கம் நன்றாக விருக்கிறது. அதனால்தான் வாணிகங்களும் போக்குவரத்துக்களும் நன்றாகச் செழித்துக் காணப்படுகின்றன. எந்த வொரு நூதனமான பொருளைக் கண்டாலும் விலையைப் பாராமல் வாங்கிச் சுகிக்கும் பழக்கம் எல்லோரிடமும் பரவலாகக் காணப்படுகிறது. நகரப் பஸ் நகரின் நடுப்பாகத்திலிருந்து புறப்படுகிறது. ஒவ்வொரு பக்கமும் இறுதியாகச் சென்று நிற்கும் இடம் வரையில் கட்டணம் 3 பியாஸ்தர்கள்தாம். டாக்ஸி வண்டி சுமார் ஆறாயிரத்துக்குமேல் எப்பொழுதும் நகரில் சுற்றிக்கொண்டே வருகின்றன. எந்த இடத்தில் வேண்டுமானாலும் டாக்ஸி கிடைக்கிறது மிக உதவி யாக இருப்பதோடு வெளி வேலைகளையும் விரைவாகப் பார்த்துக் கொண்டு வரமுடிகிறது. வெளியூர்களுக்குச் செல்வதற்கும் பஸ் வசதிகள் நிறைய இருக்கின்றன. சுமார் 100 கிலோ மீட்டரை அஃதாவது 60மைல் தொலைவை ஒன்றரை மணிநேரத்தில் கடந்து விடலாம். (தென் இந்தியாவில் காரைக்குடியிலிருந்து மதுரைக்கு 52 மைல் தொலைவைக் கடப்பதற்கு மூன்றே கால் மணி நேரம் பிடிக்கிறது.) எந்த நெடுஞ்சாலையும் தார்பூசப்பட்டதாகத் தான் காணப்படுகிறது. இரயில் வழி மிகப்பொதுவாகத் தான் இருக் கிறது. அதில் எவ்வித முன்னேற்றமும் காண்பதற் கில்லை. அது

செல்லும் தொலைவும் மிகச் சுருக்கமானது தான். இரயிலில் பிரயாணம் செய்வதை யாரும் விருப்பமாகக் கொள்ளவில்லை.

நகரில் சுமார் ஒரு நூறு படக்காட்சிக் கொட்டகைகள் இருக்கின்றன. சனிக்கிழமை ஞாயிற்றுக்கிழமைகளில் காலை 9 மணியிலிருந்து இரவு 12 மணி வரையிலும் படம் ஓடிக்கொண்டே இருக்கும். இதர நாட்களில் பகல் 12 மணி முதல் இரவு 12 மணி வரையிலும் படம் ஓடிக்கொண்டிருக்கிறது. இரவு 9 மணிக் காட்சிக்குமட்டும் கட்டணம் கூடுதலாகும். சனி, ஞாயிறு இரண்டு நாட்களிலும் எந்தப் படக்காட்சிக் கொட்டகைக்குச் சென்றாலும் இடம் கிடைக்காமல் நின்று கொண்டு பார்க்கும்படி நேரிடும். அலுவலகங்கள் முழுதும் சனிக்கிழமை பிற்பகலும் ஞாயிற்றுக் கிழமையும் விடுமுறை நாளாகும். இந்த ஒன்றரை நாளை மக்கள் மனமகிழ்ச்சியோடு கழிக்கிறார்கள். மக்களைக் களிப்புறச் செய்யும் ஒரே இடம் படக்காட்சிக் கொட்டகையாகத் தான் இருக்கிறது. படக்காட்சிக் கொட்டகைகளில் தரைச் சீட்டு என்பது இல்லை. மூன்று அல்லது நான்கு வகுப்புக்கள் உண்டு. எல்லா வகுப்புக்களுக்கும் ஒரே மாதிரியான இருக்கைகள் தாம் அமைத்திருக்கிறார்கள். பல கொட்டகைகளில் குளிர்சாதனப் பெட்டி அமைத்திருக்கிறார்கள். இந்த வகையில் இந்தியப் படக்காட்சிக் கொட்டகைகள் பிற் போக்கில் இருக்கின்றன.

வியத்நாமிய மக்கள் தென்னிந்தியக் கலையை நன்றாக அனுபவிக்கிறார்கள். தமிழ்ப்படங்கள் பார்ப்பதில் நிறைந்த ஆர்வம் கொண்டுள்ளார்கள். தமிழ்ப்பண்புக்கு ஏற்ற முறையில் வெளிவரும் நல்ல கதைப் போக்குள்ள படங்களை மிகவும் போற்றுகிறார்கள். தமிழ்ச் சினிமாவில் வரும் இசை நிகழ்ச்சிக்கு இதயத்தைப் பறி கொடுக்கிறார்கள். பரத நாட்டியத்தைக் கண்டு பரவசமடைகிறார்கள். நாட்டியம், காதல், வீரம் நிறைந்த படங்களையே அவர்கள் அதிகம் விரும்புகிறார்கள். கற்பின் பெருமையை உணருகிறார்கள். கடவுளின் தன்மையைப் புரிந்து கொள்ளுகிறார்கள். இங்குப் பள்ளிகள் எல்லாம் காலை நேரப் பள்ளி மாலை நேரப்பள்ளி என நடைபெற்று வருகின்றன. குழந்தைகள் ஒரு வேளை தான் பள்ளிக்குச் செல்லுகின்றனர். இதர நேரங்களில் வீட்டு வேலைகள் முதலியவைகளைச் செய்கின்றனர். (சென்னை மாகாணத்தில் ொம்முறை வருவதாகவிருந்தது எதிர்ப்பின் காரணமாகக் -ப்பட்டது.)

(தொடரும்)

# தமிழர் திருநாள்

## [அன்பர் பொது - மது]

திருமண வோதை திருவிழ வோதை
பெருமானா டோதையைப் பேசில் - பெருநாளாம்
பொங்கலு என்றெமர் பொங்கலோஓ பொங்கலெனுஞ்
சங்கத் தமிழொலிக்குத் தாள். (க)

தாளாண்மை யாலே தரணி திருத்தியதில்
வேளாண்மை செய்துலகை மேல்தாங்குங் - கோளார்க்கும்
கூட வுழைப்பார்க்குங் கும்பிட்டுச் செல்வார்க்கும்
மாடா டெவைக்குமின்று மாண்பு. (உ)

மாண்பான நெற்பொலிமுன் வந்தொளிர மாட்டாது
ஏண்பொலியாற் பொங்குமா ரின்னொலியைக் - கேண்மாண்பிங்
கில்லாது மேங்கி மதியு மிணர்மீனு
மல்லாடுந் தேய்ந்தொசிந் தற்று. (ங)

அன்றைய நாளி லனைத்தி லயமாபுண்
மற்றைய யாவு மகிழ்வுறுமால்-நற்றமிழர்
நீராட்டிப் பொட்டிட்டு நீண்டமணி மாலையிட்டுச்
சீராட்டிச் சோறூட்டத் தின்று. (ச)

தின்றுவள ரெப்பொருளுஞ் செங்கதிர்வான் தந்ததனுன்
முன்றின் முதனுளிற் பொங்கலிட்டு-இன்றெம்மா
ரேது பொருட்கிட் டெதிர்நாளி லேறுதழீஇ
மாது மணத்த றமிழ்ப் பண்பு. (ரு)

பண்புடையான் பக்கலிலே பைங்கிளியாள் பொங்கலினைக்
கண்புடையா னேக்கித்தன் கைப்பொங்க-நண்புடைய
பொன்னுடைச் சேய்கள் புடைகொட்டி யாடவிழ
விங்நாடே பெற்றதென்று மேத்து. (சு)

ஏத்துபுக ழில்லறத்தார் இன்புடனே பார்க்கூட்டப்
பார்த்திருந்த பெண்டிர் பதிக்கூட்ட-காத்துவளர்
செங்கீரைச் செல்வங்கள் தாதையர்க்குச் சேர்ந்தூட்டும்
நங்காதல் பொங்கலால் நன்று. (எ)

நன்றிந்த நாள்வாழ்க நாட்டிற் கணியாகும்
இன்மாட்டு வெள்ளையால் இன்மாட்டுப்-பொன்மஞ்சள்
சேய்மாட்டுத் தேங்கன்னல் செய்தாற்கோர் பூரிப்பு
வாய்மாட் டியார்க்கு முணு. (அ)

உணுப் பொங்கல் நன்றேயால் காத லுலையில்
இணையி லறவரிசி யிட்டுக்-கணக்கோடு
வீரவுப்பிட்டு விருப்பமுடன் பொங்கிநமக்
கார வளிப்பதா லார்த்து. (கூ)

ஆர்த்து மகிழ்மினோ வந்தமிழ்ச் சொல்லாலே
நீர்த்துறை யான தமிழ்நாடு-சீர்த்தியொடு
பொங்குமித் தைநாளில் பொங்கலோஓ பொங்கலென
எங்கும் விளங்கத் திரு. (க0)

(செல்வி சிலம்பு, ௩௫, பரல் ௪, ௧௭௬-ஆம் பக்கத் தொடர்ச்சி)

## 4. தமிழ்-தமிழ் அகராதிகள்

இதுவரை முதல் தமிழ்-தமிழ் அகராதி, முதல் தமிழ்-ஆங்கில அகராதி, முதல் ஆங்கிலம்-தமிழ் அகராதி ஆகியவற்றைப் பற்றிய குறிப்புக்கள் தரப்பட்டன. இவை கால முறைப்படி தரப்பெற்றன. இனி, தமிழ் மொழியில் இதுவரை வெளியாகி மறைமலையடிகள் நூல்நிலையத்தில் உள்ள அகராதிகளைத் தமிழ்-தமிழ் அகராதிகள், தமிழ்-ஆங்கில அகராதிகள், ஆங்கிலம்-தமிழ் அகராதிகள் என்று மூவகையாகப் பிரித்துக் கால முறைப்படி அகராதிகளின் குறிப்பு வெளியிடப்பெறும். வீரமாமுனிவர் இயற்றிய சதுரகராதிக்குப் பின்னர் வெளியான தமிழ்-தமிழ் அகராதி யாழ்ப்பாண அகராதியாகும்.

## 4 அ. யாழ்ப்பாண அகராதி (1842)

யாழ்ப்பாண அகராதி எனப்படும் இதன் தலைப்பு 'A Manual Dictionary of the Tamil Language' என்பதாகும். இதை 'மானிப்பாய் அகராதி' எனவும் வழங்குவர். இது யாழ்ப்பாணப் புத்தகக் கழகத்தாரால் வெளியிடப்பட்டது. மறைத்திரு. லெவிஸ்பால்டிங் என்பவர் இதை வெளியிட்டார்.

இவ் வகராதியை இயற்றியவரின் பெயர் சந்திரசேகரர் என இந் நூலில் காணப்படும் சிறப்புப் பாயிரத்தால் தெரிய வருகின்றது. இப் பாயிரம் அளவையம்பதி தமிழ்ப் புலவன் வேலுப் பிள்ளை குமாரன் கனகசபா பிள்ளை இயற்றியது. உடுவை நகர் முத்துக் குமார சிதம்பரப் பிள்ளை என்பவரும் சிறப்புப் பாயிரம் ஒன்று இயற்றியுள்ளார். அதில் "இவ்வகராதியின் பின் இணைப்பை இயற்றியவர் வேதகிரி முதலியார்" எனக் குறிப்பிட்டுள்ளார். "சதுரகராதியில் நூல் வழக்கிலும் பேச்சு வழக்கிலும் காணப் படும் எல்லாச் சொற்களும் பொருளுரைக்கப்படாமையின் எல்லாச் சொற்களும் அமைந்த சீரகராதி ஒன்றை நீ அமைக்க வேண்டும்" என்று சந்திரசேகரரை யாழ்ப்பாணக் கிறித்துவ மடத்தைச் சார்ந்த மறைத்திரு. ஜோசப் நைட் என்பவர் கேட்டுக் கொண்டதற்கிணங்க இவ் வகராதி இயற்றப்பட்டதாகத் தெரிய வருகின்றது. நைட் என்பவர் தமிழ்-ஆங்கில அகராதி ஒன்றை யும் தொடக்கியுள்ளார்.

ரியர் சந்திரசேகரர் முத்தமிழ்ப் புலமை வாய்ந்தவர். அம்பலவாணவேள் என்பவரின் அருந்தவத்தால் அவருக்குப் புதல்வனாய்த் தோன்றினர். சதுரகராதி, நிகண்டு, சங்க நூல்கள், பாசுரங்கள், ஐம்பெருங்காப்பியங்கள், உலக வழக்கு, வடமொழி நூல்கள் ஆகப் பலதுறை நூல்களின் துணை கொண்டு இவ் வகராதியை இயற்றியதாகப் பாயிரம் பகர்கின்றது.

இவ் வகராதி சதுரகராதியின் அமைப்பைப் பின்பற்றியது. சதுரகராதியின் நான்கு பகுதிகளில் முதல் மூன்று பகுதிகளாய பெயரகராதி, பொருளகராதி, தொகையகராதி என்பவை இவ் வகராதியில் உள்ளன. நான்காம் பகுதியாகிய தொடையகராதி இதில் இடம் பெறவில்லை. எனினும் சதுரகராதியை விட இவ் வகராதியில் அதிகச் சொற்களும் சிறந்த சொற்களும் இடம் பெற்றுள்ளன. "தமிழ் மொழியிலேயே இதுதான் முதல் முழு அகராதி. சதுரகராதியில் உள்ள சொற்களைப் போல நான்கு மடங்கு சொற்கள் இதில் உள்ளன." ஏறத்தாழ 58,500 சொற்கள் இதில் உள்ளன என்று அதன் முகவுரையில் குறிக்கப்பட்டுள்ளது. சொற்களின் பொருள்கள் அகர வரிசை முறையில் கொடுக்கப்பட்டுள்ளன.

இந் நூல் யாழ்ப்பாணத்தைச் சேர்ந்த மானிப்பாய் அமெரிக்க மிசியோன் அச்சுக்கூடத்தில் 1842 இல் அச்சிடப் பட்டது. $19\frac{1}{2} \times 12$ செ. மீ. அளவுள்ளது. பெயரகராதி 794 பக்கங்களும் பொருளகராதி 70 பக்கங்களும் தொகையகராதி 31 பக்கங்களும் உடையன. சிலசில குறைபாடுகளிருப்பினும் இவ் வகராதியின் பல பதிப்புக்கள் வெளியாயின. பல சொற்கள் இடையிடையில் சேர்க்கப்பட்டுப் 'பேரகராதி' 'விரிவகராதி' என்று பல பெயர்களில் வெளியிடப்பட்டிருக்கின்றது. இவ்வாறு பல பதிப்பாளர்கள் பல சொற்களைப் புகுத்திவிட்டமையின் ஒவ் வொரு பதிப்பும் வெளிவரவரத் தவறுகளும் சொற் பிழைகளும் மலிந்து காணலாயின. இப்போக்கைச் சற்று மாற்றியமைத்தவர் யாழ்ப்பாணத்தைச் சார்ந்த நா. கதிரைவேற் பிள்ளை அவர்கள்.

---

## தமிழ் நாள்

[திரு. த. பரிபூரணம்]

மனைவளர் அன்னை மொழியாய் மந்திரச் சடங்கு மொழியாய்
புனைக்கலைக் கோயில் தன்னில் புனைந்திறை போற்றும் மொழியாய்
அனைத்துநற் கலையைப் பயிற்றும் அறிவியற் சிறப்பைத் தாங்கி
வினைபுரி அரச மொழியாய் விளங்குமிந் நாளே தமிழ்நாள்!

## தமிழ் இசைச் சங்கத்தின்
## ப னட்டாம் ஆண்டு விழா 24-12-60



தொடங்கி வைப்பவர் : சென்னை உள்நாட்டமைச்சர் திரு. எம். பக்தவத்சலம் அவர்கள்
விழாத் தலைவர் : அரியக்குடி, திரு. டி. இராமாநுச அய்யங்கார் அவர்கள்

## பண் ஆராய்ச்சிக் கூட்டம் 25-12-60



தொடங்கி வைப்பவர்: சென்னை உயர்நீதி மன்றத்துத் தலைமை நடுவர்,
திரு. பி. வி. இராசமன்னர் அவர்கள்

# தமிழிசைச் சங்க நிகழ்ச்சிகள்

சென்னை தமிழிசைச் சங்கத்தின் பதினெட்டாவது ஆண்டு விழா இராசா அண்ணாமலை மன்றத்தில் 23-12-60 அன்று நடைபெற்றது. அப்பொழுது துவக்க உரையாற்றிய தமிழக அகத்துறை அமைச்சர் திரு. எம். பக்தவத்சலம் அவர்கள் பின் வரும் கருத்துக்களை வெளியிட்டார்கள். அவை வருமாறு :

"இசையை அனுபவிக்காதவர்கள் மனிதர்களில் இருக்க முடியாது. இசை எல்லோரையும் கட்டுப்படுத்துவது. அறிவு நிரம்பப் பெறாத குழந்தையும் இசையிலே கட்டுப்பட்டு நிற்பதைக் காண்கிறோம். எல்லா உயிரினங்களையும் இசை கட்டுப் படுத்துகின்றது.

"நாம் பேசுவதும், உணர்வதும், புரிந்து கொள்வதும் தமிழ். தமிழிலேயே பாடி அந்த இசையை அனுபவிப்பதைவிட, வேறு எவ்வகையிலும் நாம் அனுபவிக்க முடியாது. இசை மக்களுடைய வாழ்க்கையுடன் ஒன்றிக் கலந்து இருப்பது. இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன் எழுந்த சங்க இலக்கியங்கள்கூட நம் கலைச் சிறப்பைப் பறைசாற்றுகின்றன. இசை நம்மை ஆட்கொள்ளு கிறது. காது, மனம் எனும் இரண்டையும் இசை தொட்டு மகிழ்விக்கும்பொழுது நாம் பெருமகிழ் வெய்துகிறோம். நம் முடைய கலை, ஒப்புயர்வற்ற இலக்கியங்கள், ஆழ்ந்த பத்தி அனைத்தும் ஒன்றுடன் ஒன்று இணைக்கப்பட்டவைதாம் நம் முடைய சிறந்த கலை.

"பத்தியின் அடிப்படையில்தான் ஆழ்வார்களும், நாயன்மார் களும், அடியவர்களும் இறைவனைப் பாடி நாம் உணரும் நிலையில் பத்திப் பாடல்களை அளித்துள்ளனர். இறைவனைப் பற்றிப் பாடப் பெற்ற சிறந்த பாமாலைகளே சிறந்த இலக்கியங்களாக உள்ளன.

"சிறந்த இசை அம்மொழியிலேயே பாடக்கேட்டு அனுபவிப் பது போல் தாய்மொழியல்லாத பிற மொழிகளிலே கேட்டு அவ் வளவாக அனுபவிக்கமுடியாது. வாயினால் பாடி அப்பாட்டை யும் நாம் புரிந்துகொண்டு நாம் மகிழ்வதுபோல் வெறும் நாதத்தை மட்டும் கேட்டு மகிழ்ந்துவிட முடியாது.

"தமிழ் என்றாலே இசை ஆய்வு தேவைப்படுகின்றது. அவ் ஆய்வை உணர்ந்து தமிழிசைச் சங்கம் தேவாரப் பண் ஆய்வில் ஈடுபட்டுள்ளதைப் பெரிதும் பாராட்டுகின்றேன்.

"ஆழ்வாராதியர்களின் பாடல்கள் முதலியன மரபிற்கு ஊறின்றி மனனம் செய்யும் நிலை தோன்றவேண்டும். நல்ல

இசையுடன் அப்பாடல்கள் பாடப்பெற வேண்டும் என்பது என் எண்ணம்.

"மாஸ்கோவிலேயே தமிழ் ஒலிபரப்பப் படுகிறது எனில் நமக்குப் பிற மொழிகள் மேல் வெறுப்பு எதற்கு? தமிழிசையை நன்கு நாம் அனுபவிக்கவேண்டு மென்றே தமிழிசைச் சங்கம் பணியாற்றி வருகிறது."

தலைமையுரையாற்றிய அரியக்குடி திரு. இராமாநுச ஐயங்கார் அவர்கள்,

"இசையை இறையாகப் போற்றுவது நம் முன்னோர்களின் மரபு. 'ஏழிசையாய் இசைப் பயனாய்' என்றார் சுந்தரர். 'யாழின் இசையே! அமுதே!' என்றார் ஆழ்வார். 'ஓசை ஒலியெலாம் ஆனாய் நீயே' என்றார் நாவுக்கரையர். ஓசை இயற்கையாக உண்டாவது. ஒலி மனித முயற்சியால் உண்டாக்கப்படுவது. ஒலிகளின் கூட்டப் பாகுபாடுதான் இசையாகிறது.

"வாய்ப்பாட்டுப் பகுதி நம் இசைக்கலையில் தனியிடம் கொண்டது. ஒலியின் உருவம் வாய்ப்பாட்டில் எழுத்துக்கள் சேர்ந்த சொற்களோடு நிறைந்த பாடல்களாக வெளிப்படும் பொழுதுதான் எல்லாப்பகுதிகளும் இசையைப் பற்றிய அளவி லும் கலையாகிவிடுகிறது. இந்நிலையில்தான் எளிய பாடல்கள் எழுகின்றன. அவை விருத்தப்பாக்களின் வகைகளான பிள்ளைத் தமிழ், தாயுமானார் பாடல்கள், இராமலிங்கசுவாமிகள் பாடல் போன்றவைகள்.

"விந்திய மலைக்குத் தெற்கே விளங்குவன எல்லாம் தென்னிந்திய சங்கீதம் என்று இசைக் கலையைப் பொறுத்த மட்டில் பொதுவாகக் கூறினும், கலையின் பிறப்பிடம் தமிழ் நாடுதான் என்பதை நம் முன்னோர்களின் வரலாறும், அவர் களுடைய இசைப் புலமையும் நன்றாகக் காட்டிக்கொண்டே இருக்கின்றன. என்போன்ற தொழிற்காரர்களுக்கு இதன் நுட்பம் நன்கு தெரியும்" என்று பல கருத்துரைகளையும் கூறிச் செட்டி நாட்டரசரின் பணிகளைப் பாராட்டினர்.

மறுநாள் 25-12-60 அன்று நடைபெற்ற பதினென்றாவது பண ஆராய்ச்சிக் கூட்டத்திற்கு வரவேற்புரை அளித்த அண்ணமலைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர், திரு. டி. எம். நாராயணசாமிப் பிள்ளை அவர்கள்,

"பதினேழு ஆண்டுகட்குமுன் துவக்கப்பெற்ற தமிழிசைச் சங்கப் பணியால் இன்று தமிழக வீடுகள் தோறும் தமிழிசை முழங்கப்பட்டு வருகின்றது" என்று குறிப்பிட்டார். அடுத்துத் துவக்க வுரையாற்றிய உயர்நீதி மன்றத்தலைமை நடுவராய கனம்

திரு. பி. வி ராசமன்னார் அவர்களின் சொற்பொழிவின் சுருக்கம் வருமாறு :

"கிறித்து ஆண்டின் துவக்கத்திற்கு முன்பே தமிழகத்தில் மிக உயரிய நிலையில் பழந்தமிழிசை தனித்து இயங்கி வந்ததென்பதற்குச் சற்றும் ஐயமே இல்லை. கி. பி. முதல் நூற்றாண்டைச் சார்ந்த பரிபாடல் சில சுரங்களின் பெயர்களைத் தருகின்றது; பழைய இசை முறையான ஏழு பாலைகளின் பெயர்களையும் குறிப்பிடுகின்றது. இக்கால வீணையை ஒத்ததே யாழாகும். யாழ், வீணையினும் வேறுபட்டதேயாயினும் தமிழகத்திற்கே சிறப்பாக உரியது. பலவேறு நரம்புகள் கட்டப்பட்ட பலவகை யாழ்கள் இருந்தன என்பது வெளிப்படை. புறநானூறு, பத்துப்பாட்டு, சீவக சிந்தாமணி முதலிய நூல்கள் தமிழ் இசையைப் பற்றிய பல குறிப்புக்களைத் தருகின்றன. இரண்டாயிரம் யாண்டுகட்கு முற்பட்ட தமிழிசை நாட்டியம் முதலிய பழைய மரபுகளைக் கொண்ட பொருட் சுரங்கம் சிலப்பதிகாரம் ஆகும். சிலம்பிலுள்ள மூன்றும் காதையே பழந்தமிழிசையைப் பற்றிய சிறுநூல். அக்காதையில், பண்டைய இசைக் கணக்கு முறையையும், பல இராகங்களின் இசை அமைப்பையும் காண்கிறோம்.

"ச, ரி, க, ம, ப, த, நி என இற்றை ஞான்று தென்னகத்தில் வழக்காற்றிலுள்ள சுரங்களின் பெயர்கள் பண்டைக் காலத்தவை அல்ல. அவற்றின் பண்டைய தமிழ்ப் பெயர்கள் குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்பன. இவை சரிகம முதலிய ஏழு சுரங்களுக்கும் நேரிடையான நிலையின வல்ல. ஐயமின்றிச் சிலப்பதிகாரத்தைச் சார்ந்த சமண நிகண்டு, சுரங்களின் தமிழ்ப் பெயர்களையும், ஏழு திராவிட இசை அமைப்புக்களாகிய பாலைகளையும் பல யாழ்வகைகளையும் 29 பண்களின் பெயர்களையும் குறிப்பிடுகின்றது.

"இசையின் விஞ்ஞானமுறை, மிடற்றுப் பாடல், வாச்சிய இசை, இசைக் கருவிகள் என்பனவற்றைத் தமிழ் நூல்கள் குறிப்பிடுவது, தென் இந்திய திராவிட மக்களிடையே, கிறித்து தோன்றுவதற்கு முன்பே மிக உயரிய நிலையில் இசைப் பயிற்சி அடைந்திருந்தது என்பதைத் தெளிவாகத் தெரிவிக்கிறது, எனப் பாப்ளி அவர்கள் கூறுகின்றார்.

"கி. பி. ஆறு, ஏழு நூற்றாண்டு முதல் சைவ மெய்யடியார்களும், வைணவ ஆழ்வாராதியர்களும் அழகு ததும்பும் பாடல்களில் பத்தியை ஊற்றி வைத்தனர். இறையருள் பெற்ற பாடல்களாகின்றமையால், அப்பாடல்களில் மிக உயரிய கருத்துக்களும், உணர்ச்சிகளும் நிரம்பியுள்ளன. அப்பாடல்களனைத்தும் மிகச் சிறந்த இசைப் பாடல்கள். புகழ்பெற்ற மூவர் - சம்பந்தர், அப்பர்,

சுந்தரர் - முதலில் தோன்றிப் பத்திப் பாடல்களைப் பாடினர். இப் பாடல்களுக்குப் பின்பு அருணகிரிநாதரின் திருப்புகழ்ப் பாடல்களே நமக்குக் கிடைத்துள்ளன. இவை போலவே ஆழ்வார்களின் நாலாயிரப் பாடல்களும் நமக்குக் கிடைத்துள்ளன. பண்கள், பொதுவாகத் தேவாரத்தில் கையாளப்பட்டவை. பண்கள் என்பவை ஏழிசை கொண்ட இசை அமைப்புக்கள் என்று சொல்லலாம். நூற்றுக்கணக்கான பண்கள் இருந்தன. இலக்கியங்களிலும் அகராதிகளிலும் இவற்றின் பெயர்கள் காணப்படுகின்றன. பல பண்கள் இக்காலத்தில் பாடப்பெறும் இராகங்களையே பெரும்பாலும் ஒப்பவை என நான் நம்புகிறேன்.

"சங்கித ரத்ந கரத்தின் ஆசிரியர் சாரங்கதேவர் தேவாரவர்த்தினி எனக்கூறுவதிலிருந்து இப்பண்கள் இராகத்தின் இயைபுள்ளவை என்பது திண்ணமாகின்றது. பரதர், சாரங்கதேவர் முதலிய வடமொழி இசையாசிரியர்கள் கூறும் இசை அமைப்புக்களோடு இவை இயைபு இல்லாதவை என ஆராய்ச்சி செய்வதோ அல்லது ஆபிரகாம் பண்டிதர் கூறுவதைப்போல்......பரதர் முதலான இசையாசிரியர்கள் தமிழ் இசையைக் கடன் கொண்டனரா என ஆராய்ச்சி செய்வதோ தேவையற்றவை; பயனற்றவையுங் கூட. இருவகைக் கருத்துக்களுக்கும் இடையே உண்மையும் புலனாகலாம். பிற்கால இசைநூல்கள் எல்லாம் வடமொழியிலேயே எழுதபபட்ட போதிலும், நேரிடையான சான்றுகள் இல்லை எனினும், மெய்படியார்களின் பாடல்களும், ஆழ்வாராதியர்களின் பாடல்களும் கர்நாடக இசை முறைகளை இறுதியாக நிறுவ உதவியிருக்க இயலும்.



"பதினெட்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த ஒரு மெய்யடியவரால் மீண்டும் தேவாரம் ஓதும் முறை உயிர் பெற்றது. அங்ஙனம் ஓதுவாரற்றுக் கிடந்த வறிய நிலையினின்றும் மீண்டும் இசைகளை உயிர்பெறச் செய்த பெருமைக்கு உரியவர் நெல்லையில் வாழ்ந்த சுந்தரமூர்த்தி ஓதுவார் என்பவர். இசை ஆராய்ச்சிக்குப் பல இடையூறுகள் உறுதியாக உள்ளன. உழைபபும் பொறுமையும் பெரிதும் தேவைப்படுவன. எல்லாக் கோவில்களிலும் பாடப் பெறும் தேவாரங்களையும் திருவாய் மொழிகளையும் மிகுதியாக "நாடாப்பதிவுப் பொறியில்" பதிவு செய்ய வேண்டும்.

இசைகளைப் பற்றிய சிறந்த குறிப்புக்களைக் கூறவல்ல முதியவர்கள் இன்றும் இருத்தல் கூடும். இம் முறைகளால் பழைய பாடல்களை மீண்டும்பெற இயலுமா என அறுதியிட்டுக் கூற இயலாது. ஆனால் இன்று பாடுவதைவிட, பழைய முறைப் பாடல்களை இவ்வகைகளில் மிகுதியும் பெறலாம்.

"பாண்டிய, சோழ நாடுகளைப் போலப் பழைய தமிழ்ப் பண்பாடுகள் இருந்த இடமாகிய கேரள நாட்டில் இவ்விசை முறைகள் காப்பாற்றப் பட்டிருக்கலாம. இந்நாட்டின்கண் தகுந்த ஆராய்ச்சிகளை நடத்தலாம். செயதேவரின் அஷ்டபதி எவ்வாறு கேரளத்திலுள்ள கோவில்களில் பாடப்படுகிறது என்பதை நோக்க, பழைய உண்மையான முறையில் பாடப்படலாம் எனத் தீர்மானிக்கப் பட்டது.

"தஞ்சை 'சரஸ்வதி மகா'லில் வெளியிடப் பெறாத பல கையெழுத்துச்சுவடிகள் உள்ளன. அவைகளிற் சில நமக்கு விளக்கந் தரக் கூடும்.

"தகுந்த விவரங்களைத் தொகுத்த பின்பு, புலவர்களும் இசைவல்லுநர்களும் கூடி, இசையினை எவ்வாறு பாடவேண்டும் என்பதை முடிவு செய்ய வேண்டும். இம் முடிவு செய்த பின்பு ஒவ்வொரு இசைப் பயிற்சி நிலையங்களுக்கும் இவற்றை 'நாடாப் பதிவுக்கருவி' வழிப் பதிவு செய்து அனுப்ப வேண்டும்."

நடுவரவர்களின் துவக்க உரைக்குப் பின்பு தலைமையுரையாற்றிய சங்கீத கலா நிதி அரியக்குடி **திரு. இராமாநுச ஐயங்கார்** அவர்கள்,

"'பாவோடு அணைதல் இசைஎன்றார் பண்என்றார்
மேவார் பெருந்தானம் எட்டானும்—பாவாய்
எடுத்தல் முதலாக இருநான்கும் பண்ணிப்
படுத்தமையாற் பண்ணென்று பார்'

என்று கூறப்படுவதையும் கேட்கும்பொழுது பண் என்பது ஓர் இசைப் புலவரால் (கண்டப்பாட்டு) வாய்ப்பாட்டுப் பாடும் போது மூலாதாரம் துவங்கி எழுப்பிய ஒலி ஆளத்தியாய் நெஞ்சு, மிடறு, நா, நாசி, அண்ணக்கு, உதடு, பல், தலை என்கின்ற பெரிய இடங்கள் எட்டாலும், இசைத் தொழிலின் செயல்களான எடுத்தல், படுத்தல், நலிதல், கம்பிதம், குடிலம், ஒலி, உருட்டு, தாக்கு என்ற எண்வகைத் தொழிலாலும் ஆலாபன முறையில் கையாளப் பெறுவது எனவும் தெரிய வருகிறது.

"ஆலாபனம் என்பதைத் தமிழ்நூல்கள் ஆளத்தி என்று கூறுகின்றன. இதுவும் மூன்று வகைப் படுமாம். அவை காட்டாளத்தி, நிறவாளத்தி, பண்ணாளத்தி என்பன. பழங்காலத்தில்

எழுத்துக்களை வைத்தே பண்ணை ஆளத்தி செய்ந் எனத் தெரிகிறது.

தமிழில் இசை என்பதையே பிற்காலத்தில் சுவரம் என்றார் கள். இசை ஏழு என்பது எக்காலத்திலுமே பொதுவாகக் கூறப் படும்.

"'பல இயற்பாக்களுடனே நிறத்தைத இசைத்தலால் இசை என்று பெயராம்' 'பாவோடு அணைதல் இசை என்றார் பண் என்றார்' என்றெல்லாம் கூறப் படுவது கொண்டு பண்டைய இசைத் தமிழில் இசையை உறுதி செய்து, பின்பு அதனைப் பண் ஆக்கி, எழுத்துக்களோடு சேர்த்து அந்த எழுத்துக்கொண்ட சொற்களைக் கொண்டு பாடல்களாகப் பாடி, அதன்பிறகு இசைப் பாடல்களாக அமைத்துப் பாடியிருக்கின்றார்கள் என்றே உறுதி யாக நினைக்க வேண்டியுள்ளது.

"நமது திருவாய் மொழியில், முதிர்ந்த குறிஞ்சி, நட்ட பாடை, செருந்தி, வியந்தம், இந்தளம், கொல்லி, தக்கராகம், புற நீர்மை, நாட்டம், சீகாமரம், பழந்தக்கராகம், தக்கேசி, பஞ்சமம், குறிஞ்சி, கௌசிகம் (கைசிகம்), காந்தாரம், நட்டராகம், பழஞ் சுரம், நாட்டராகம், பாலையாழ், முதிர்ந்த இந்தளம் எனும் இரு பத்தொரு பண்கள் பெயரளவில் காணப்படுகின்றன. இவைபற்றிய ஆய்வுக்குத் தமிழிசைச் சங்கம் ஆவன செய்து வருகின்றது.

"இதுவரை நடந்த பண் ஆராய்ச்சியில் திட்டமாக 103 பண் கள் பெயர் தெரிவதாகவும் அது பற்றிய ஆராய்ச்சிக் கருத்துக் களும் இங்கே பேசப்பட்டதாயும் அறிகின்றேன். கூடிய வரையில் நம் பண்களுக் கெல்லாம் இலக்கணம் தெரிந்து சுரநிலையை உறுதி செய்து முடிவு காண்பதே நல்லது" என்று குறிப்பிட்டுப்பேசினர்.

நிகழ்ச்சி நிரலிற்கண்ட எல்லா நிகழ்ச்சிகளும் இனிது நிறை வேறி, அண்ணாமலை மன்றமே கலை மன்றமாகக் காட்சி யளித்தது. அனைவரும் பாராட்டியது போல் தமிழிசைச் சங்கத்தைத் தோற்று வித்து, சிறப்புற விழாக்களை நடத்தி வரும் செட்டிநாட்டரசர் தம் குடும்பத்தினரை எவ்வளவு பாராட்டினாலும் தகும். அப்பாராட்டு ரைகள் பண்டைத் தமிழிசையைப் பாராட்டுவதாகும்.

# வரதாரெட்டியார் மணிவிழா

காட்டரண்பாக்கம் திருவாளர் **கே. வரதா ரெட்டியார்**, திருவாட்டி **செயலட்சுமியம்மையார்** இவர் தம் வாழ்க்கைத் திருவூர் திருவரசிலியை அடுத்துள்ளது. நம் ரெட்டியாரவர்கள் குடும்பம் வழிவழியாகச் சிவவழிபாடும் முருகவழிபாடும் மிக்கது. சிவனடியார்களுக்கு அமுதூட்டல், சிவகதை கேட்டல், பதி நடை என்னும் தலயாத்திரை புரிதல் முதலிய பல நல்லறங்கள் புரிந்து வருகின்றனர். அரசிலிப் பெருமான் திருக் கோவிலில் வைகாசி ஏழாந்திருநாளும் மயிலத்தில் சித்திரை மூன்றாந்திருநாளும் சிறக்கச் செய்து வருகின்றனர். வடலூர் தைப்பூசக் காட்சியும், புரட்டாசி அருட்பிரகாச வள்ளலார் பிறந்தநாட்காட்சியும் கண்டு வருகின்றனர். பல நல்லறக் கட்டளைகள் ஏறத்தாழ ரூபா அறுபதினாயிரத்துக்குமேல் ஆற்றி யுள்ளனர். நிலங்களாகப் பதினெட்டு ஏக்கருக்குமேல் எழுதி வைத்துள்ளார்கள்.

திருமுறையினிடத்து மிக்க பேரன்புடையவர்கள். சிவஞான பாலையசாமிகள், மாம்பாக்கம் குருகுலம், காஞ்சிபுரம் மெய் கண்டார் கழகம், சென்னைச் சிவனடியார் திருக்கூட்டம் முதலிய வற்றுடன் நெருங்கிய தொடர்பு கொண்டு அவ்வவற்றுக்கு வேண்டும் பொருளுதவிகளும், அவ்வப்போது ஆங்காங்கு உணவூட்டுதலும் புரிந்து வருகின்றனர். திருவதிகையின்கண் நூறாயிரந் திருவிளக்கும், நூறாயிரம் மலர்தூவிப் போற்றலும், சிறந்த சொற்பொழிவுகளும் ஆற்றுவித்து வழிபாடியற்றினர். அதனால் **'திருமுறைச்செல்வி' 'வழிபாட்டரசி'** என்னும் பட்டங்கள் பெற்றுள்ளனர்.

இப்பெரும் சிவபத்திமிக்க இவர்கட்கு 26-12-1960 இல் இவர் தம் வளமனைக்கண் அறுபதாண்டு நிறைவாகிய மணிவிழா மிக்க சிறப்பாக நிகழ்ந்துள்ளது.

பலர் வாழ்த்துக்கள் கட்டுரைகள் அடங்கிய மணிவிழா மலர் வெளியிடப்பட்டது. சிவபெருமான் திருவருளால் அவர்கள் நீடுவாழ்ந்து நல்லறங்கள் பலவும் மேன்மேற் புரிந்து சிவனெறி யினையும் செந்தமிழ்மொழியினையும் பேணிவர அவன் திரு வடியினை வழுத்துகின்றோம். இவர் முத்து வயிரம் முதலிய பல விழாக்கள் பெற்று நீடுவாழ வாழ்த்துகின்றோம்.

# வாழ்வோரே!

[கவிஞர். ச. சீத்தாராம்]

(கட்டளைக் கலித்துறை)

பொங்கும் மகிழ்ச்சி மலர்பூத்தே இன்பம் பொழிந்திடுசீர்ப்
பொங்கல் திருநாட் பொலிவில் திளைத்திடும் பூந்தமிழீர்!
துங்கத் தமிழ்க்குத் தொடர்ந்து பணிசெயச் சூளுரைத்தே
தங்கும் புகழைத் தகைசால் வினையினால் தாங்குகவே.

மானத் தமிழின் மரபினைச், சான்றோர் வடித்தெடுத்த
ஞானப் பழச்சாற்றை, நல்லறப் பண்பை, நடுவுநிலை
தானச் சிறப்பினை, வீரத்தைக், கற்பைத் தமிழுயிர்ப்பைத்
தேனின் சுவைப்பொங்கல் நன்னாளில் எண்ணுவீர் சிந்தையிலே.

சொல்லைச் சுருக்கிச் செயலைப் பெருக்கும் துணிவுடைய
வல்லார் நலமார்ந்து வாழை மரபாய் வளர்ச்சியுறின்
தொல்லை, வறுமை, பிணிகள், துயரம் தொகையுடனே
எல்லையில் லாமல் புறங்காட்டி யோடும் இழிவுடனே.

உழைப்பெனும் சக்தி உலகின் உயிராம்; ஒருசிமிடம்
அழுக்கிலாச் சிந்தனைக் கண்கொண்டு பார்ப்பீர் அதுபுலனாம்;
தழைத்திடும் தாய்மொழி நாட்டுப்பற் றாக்கம்; தளர்வகற்றி
உழைப்பீர்; எதிர்ப்பைச் சிதைப்பீர்; செழிப்பீர் ஒளியுடனே.

நெருஞ்சிப்பூப் போலச் சிரித்தே, அதன்முள்போல் நெஞ்சினிலே
பெருந்தீங் கிழைத்திடு மெண்ணம் இருப்பிற் பெறும்பயனென்?
உருவில் மனிதர் உணர்வில் விலங்காய் உலகினிலே
மருவியெரிக்குண வாகி யிறுதியின் மாய்வதுவே.

சிற்றெறும் பொன்றாகச் செய்யும் செயலைச் சிறிதறிந்தால்
ஒற்றுமை ஊக்கம் உழைப்புச் சுறுசுறுப் போங்குணர்வைத்
தெற்றெனக் காண்போம்; இதைப்போல் உலகிற் சிறுபொருளும்
உற்றுநோக் கிட்டால் உயர்பாடம் காட்டும் உணர்பவர்க்கே.

எண்ணம்சொல் செய்கை இவைமூன்றில் மாசிலை யேலெவர்க்கும்
திண்ணம், மனத்தினில் அன்பும் அருளும் செழித்துறையும்
மண்ணில் மனிதர் புனிதராய்ப் பண்பின் மணிவிளக்காய்
விண்ணிற் சுடராய்த், தமிழாய்ப், புகழாய் விளங்குவரே!




கழகத்தின் திருமந்திர நூல் கட்டடத்திற்கு மைய அரசினர் 24-12-60 இல் வழங்கிய செம்பொன்னேடாம் சிறப்புறு பரிசில்

கழகத்தின் திருமந்திர நூல் கட்டடத்திற்கு
மைய அரசினரின் பரிசு



மைய அரசின் உள்நாட்டுத்துறை அமைச்சர், திரு. கோவிந்த் வல்லப பந்த் அவர்களால் வழங்கப்பெறும் முதற் பரிசினைத் திரு. தி. வைரமுத்து, எம். ஏ., 24-12-60 அன்று புதுதில்லியில் பெறுதல்.

# மத்திய அரசினர் கழகத்துக்கு வழங்கிய பரிசு
## (24—12—1960)

மத்திய அரசினர் அமைத்துள்ள ஆறுவது பரிசுத்திட்டப்படி அழகிய நூற்கட்டடத்துக்கும், அச்சுக்கும் வழங்கும் பரிசுப் பொருட்டுக் கழகத்தார், திருமந்திரம் - கதர்ப்பட்டுக் கட்டட நூலொன்று அனுப்பி வைத்திருந்தனர். அந்நூலின் கட்டடச் சிறப்பு நோக்கி மைய அரசினர் ரூ நூற்பரிசு வழங்குவாராயினர். பரிசுவிளக்கச்சொல் இந்திமொழியிலே பொறித்த செம்பொன்னே டாதலால் அதன் மொழிபெயர்ப்பை தமிழிலும் ஆங்கிலத்திலும் அடுத்துவரும் பக்கங்களில் வெளியிட்டுள்ளோம்.

அப்பயன்மிகு பரிசினை 24-12-1960 சனிக்கிழமை மாலை மைய அரசின் இந்திய அகத்துறை அமைச்சர் திரு. கோவிந்த வல்லப பந்த் அவர்கள் தந்திருக்கையால் அளித்தனர். அதனைக் கழக முன்னாள் அமைச்சர் திரு. வ. திருவரங்கம் பிள்ளையவர்களின் திருமகனார் தி. வயிரமுத்து, எம். ஏ. இயல்பாகவே தில்லிக்குச் சென்றிருந்தமையால் நேரிற் பெறும் வாய்ப்புக் கிடைத்தது.

இத்தகைய சிறந்த கட்டடத்திற்காகவுள்ள முதற் பரிசை இதுகாறும் வடஇந்தியாவில் குறிப்பாகக் கல்கத்தாவிலுள்ள பதிப்பாளர்களே பெற்றுள்ளனர். இம்முறை நம் கழகத்திற்குக் கிடைக்கப் பெற்றுள்ளது. இது பொதுவாகத் தென்னிந்தியாவுக்கும் சிறப்பாக நம் கழகத்திற்கும் மிக்கபெருமை தருவதொன்றாகும்.

1956 இல் கழகவழி வெளிவரும் கையடக்கப் பதிப்புத் திருக்குறள் (2 × 2½") வனப்புக் கட்டட மாண்புக்கும் மிகச்சிறிய அளவில் கவர்ச்சியோடு அச்சிட்டதற்கும், இவற்றிற்கு மேலாக ரெக்சைன் கட்டடவுயர்வுக்குமாகப் பாராட்டி மைய அரசு ஒரு நற்சான்றிதழ் வழங்கியுள்ளது. மத்திய குடியரசுத் துணைத் தலைவர் திரு. டாக்டர் எஸ். இராதாகிருட்டிணனவர்கள் அதனை வழங்கியுள்ளனர். அனைத்திந்திய அச்சகத்தார் மாநாடுகளில் கழகநூற் கட்டடச் சிறப்புக்காக அடியிற் கண்ட விவரப்படி மூன்று முறை பரிசுகள் கிடைத்திருக்கின்றன.

1956 — அலகாபாத் — வெள்ளிக்கோப்பை
1957 — தில்லி — பொற் பதக்கம்
1960 — பெங்களூர் — வெள்ளிக்கே யம்

இத்தகைய பரிசுகள் பெறுமாறு திறமையோடு நீண்ட நாட்களாகக் கழகத்தின் கட்டடப் பகுதியில் தலைமைப் பணிபுரிந்து வரும் திரு. ஆர். மாணிக்கசாமியைக் கழகம் வாழ்த்துகிறது.

# GOVERNMENT OF INDIA
இந்திய அரசு

## Information and Publicity Department
அறிவிப்பு விளம்பரத் துறை

## STATE AWARD ON PRINTING AND BINDING
அச்சுக் கட்டடத்திற்காக அரசினர் பரிசு

# FIRST PRIZE
முதற் பரிசு

**1960**

The Most Beautiful Bound Book

*மிக அழகிய கட்டடஞ் செய்யப்பெற்ற புத்தகம்*

Thirumanthiram (Tamil)

திருமந்திரம் (*தமிழ்*)

**To Sri R. Manikkaswami, Madras.**

ஸ்ரீ. ஆர். மாணிக்கசாமி, சென்னை.

[Head binder of the Saiva Siddhanta works
Publishing Society, Tinnevelly, Ltd.]

Prize awarded by

Sri Govinda Ballabh Pant

*Union Minister for Home Affairs, at New Delhi*

*on 24—12—1960.*

# பாரத் சர்க்கார்

சூசனு ஔர் ப்ரசாரண் மந்திராலய

சபாயி ஔர் சஜாவட் பர் ராஜபுரஸ்கார்

## ப்ரதம் புரஸ்கார்

1960

சப்ஸே, அச்சி ஜில்த் பந்தீ கிதாப்

'திருமந்திரம்' (தமிழ்) பர்

**ஸ்ரீ. ஆர். மாணிக்கசாமி, மதராஸ் கோ**

[*சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின்*
*கட்டடப் பகுதியின் முதன்மையர்*]

24-12-1960 *இல் மத்திய அரசு உள்நாட்டுத் துறையமைச்சர்*
ஸ்ரீ கோவிந்த் வல்லப பந்த்
*அவர்களால் புது தில்லியில் பரிசு வழங்கப்பெற்றது.*

சிவநேசன் இராமசாமி செட்டியார்

# சிவனடி நீழலெய்தல்

பலவான்குடி சிவநேசன் ராம. கு. ராம. இராமசாமி செட்டியாரவர்கள் சார்வரி கார்த்திகை 15ஆம் நாள் (30-11-1960) புதன்கிழமை காலை 7 மணிக்குச் சிவனடி நீழல் எய்தினார் எனக் கேட்டு மிகவும் வருந்துகின்றோம்.

இச்சிவப் பெருந்திருவினர் இராமநாதபுரம் மாவட்டம் பலவான் குடியில் சுபானு வைகாசி 24ஆம் நாள் (5-6-1883) ராம. கு. குமரப்ப செட்டியார்க்கும் வள்ளியம்மை ஆச்சிக்கும் நன்மகவாகத் தோன்றினர். சீராட்டி வளர்க்கப் பெற்றனர். திண்ணைப் பள்ளிப்படிப்பு முடிந்ததும் தொலைநாடு சென்று உலையா முயற்சியுடன் அளவிலாப் பொருளீட்டினர். பொருளீட்டுங் காலத்தும் செந்தமிழ்ப்பற்றும் சிவநெறிப் பற்றும் மிக்கிருந்தன. அதனால் அண்ணன் சுப்பிரமணியன் செட்டியார் தம்பி இலக்குமணன் செட்டியாரவர்கட்கும் தமக்கும் பொதுவாகக் 'குமார விநாயகர், நடராசர் திருக்கோயில்கள், அம்மன் சேங்கைத் திருக்குளம், திருவாசகப் பாடசாலை, திருநந்தனவனம் முதலிய சிவபுண்ணியங்கள் பல புரிந்தனர்.

திருத் தென்குடித் திட்டையில் மிகவும் பழுதுற்றிருந்த பாடல் பெற்ற திருக்கோவிலை ஏறத்தாழ ஐந்து லட்சம் வெண்பொன் செலவில் அடிமுதல் முடிவரை கருங்கற்றிருத்தளியாக்குவித்தனர். நகரத்தாரின் தொண்ணூற்றுறார் கூட்டத்தை மிகத் திறம்படக் கூட்டுவித்துப் பல தொண்டாற்றினர்.

சிவநேசர் திருக்கூட்ட நிறுவனரி லொருவர் இராமசாமி செட்டியார் அவர்களின் விருப்பப்படி 'சிவநேசன்' என்னும் திங்கள் வெளியீட்டைச் சீர்பெற நடத்திவந்தனர். சிவநேசர் திருக்கூட்ட ஊரூர் விழாவும் நிகழ்த்தி வந்தனர். பெருவள்ளலாய்த் திகழ்ந்த புலவர் பலர் புகழப் புரவலராய்ப் பொலிந்தனர். தென்குடித் திட்டையில் இருபதாண்டுகளுக்குமேல் வதிந்து சிவவழிபாடும் திருமுறை போதுதல் முதலிய நற்றவங்கள் புரிந்தும் வந்தனர்.

அன்னார் நல்லுயிர் சிவன் திருவடி நீழலில் என்றும் பொன்றா இன்புற்று வாழுமாறு அன்னவன் பொன்னடியை வழுத்துகின்றோம். அப்பெரியாரின் குடும்பத்தார்க்கு எங்கள் உள நிறைந்த பரிவுரை உரித்தாகுக.

## 'தமிழகப் புலவர்குழு' ஏழாவது கூட்டம்

இது கோயம்புத்தூரில் (14, 15, 16-1-61) திருவள்ளுவராண்டு 1992 தைத்திங்கள் க. உ. ங நாட்களில் அறிவியற் பேரறிஞர் கோ. து. நாயுடு (G. D. நாயுடு) அவர்களுடைய 'தலைவர்' மன்றத்தில் பெரிய அளவில் நடைபெற இருக்கின்றதெனத் தெரிகின்றது. இப் புலவர் பெருமக்களின் செயற்கருஞ் செயல்கள் நனிமிகப் போற்றற் குரியன. இவர்களால் கொண்டுவரப்படும் ஆக்க வேலைகளனைத்தும் தமிழ்ப்பெரு மக்களாலும், ஆட்சியினராலும் விரைவில் நிறைவேற்றப்பட்டுத் தமிழ் வளர்ச்சிக்குப் பெருந்துணை புரிவதாக. இதன் அமைப்பாளரும் பொரு ளாளரும் ஆகிய முத்தமிழ்க் காவலர் திரு. கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்களின் அரும்பெருந்தமிழ்த் தொண்டு என்றும் சிறப்பதாக.

## டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளை அவர்களின் பல்கலைக் கழகத் தொண்டிற்குப் பாராட்டு

சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறைத் தலைவர், சொல்லின் செல்வர், பேராசிரியர் டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளை பி.ஏ., பி.எல்., டி. லிட்., அவர்களின் சீரிய செந்தமிழ்த் தொண்டினைப் பற்றி அறியா தார் நம்மில் எவருமிலர். நாடும் மக்களும் அவர் தம்மை நாளும் போற்றி வருதல் கண்கூடு. அவருடைய இருபத்தைந்தாண்டுக்காலப் பல்கலைக் கழகப் பணியினைப் பாராட்டுவதற்காகப் பேராசிரியரின் நலம் விழை வாரும், நண்பர்களும் விழாவொன்றை தமிழ்ப் புத்தாண்டு நாளில் (ஏப்ரல் 1961) நடத்தக் குழு வொன்றமைத்துள்ளனர்.

விழாவின்போது, இந்தியாவிலும் வெளிநாடுகளிலுமுள்ள பல கற்றறிந்த சான்றோர்களின் கவின்மிகு எழுத்தோவியங்கள் நிறைந்த 'பாராட்டு மலர்' வெளியிடுதலும், சென்னைப் பல்கலைக் கழகத்திற்குப் பேராசிரியரின் முழுஉருவ வண்ணப் படம் ஒன்றை நன்கொடையாக வழங்குதலும், பேராசிரியரின் பெயர் என்றும் புகழோடு நிலைத்து நிற்கும் வண்ணம் 'அறக்கொடை' ஒன்றைப் பல்கலைக் கழகத்தில் நிறுவுதலும் விழாக் குழுவினரின் விழுமிய நோக்கங்களாகும்.

## தெ. பொ. மீ. மணிவிழா

பன்மொழிப்புலவர், திருவாளர் தெ. பொ. மீனாட்சிசுந்தரனாரவர் கட்குச் சார்வரி ஆண்டு மார்கழித்திங்கள் 23 ஆம் நாள் (6-1-61) வெள் ளிக்கிழமையன்று அண்ணாமலை நகரில் மணிவிழா மிக்க சிறப்பாக நடந் தேறியது. அவர்கள் கைம்மாறு கருதாது தமிழ்மொழிக்கு ஆற்றி வருந்தொண்டு அளப்பில. இப்பொழுது அண்ணாமலைப் பல்கலைக்கழகத் தில் தமிழ்த்துறைத்தலைவராயிருந்து தமிழோம்பிவரும் தலைசிறந்த பணியினை மேற்கொண்டுள்ளார்கள். இவர்கள் இம்மணிவிழாப்போன்று முத்து வயிர முதலிய பல விழாக்கள் பெற்றுச் சிறந்து வாழ வாழ்த்து கின்றோம். (மணிவிழாபற்றிய விரிவான செய்திகள் அடுத்த இதழில் வெளிவரும்.)

# மதிப்புரை

**"கார்த்திகைத் திருவிழா வெளியீடு"**

இவ்வெளியீடு விகாரி ஆண்டு கார்த்திகை முதல் சார்வரி ஆண்டு கார்த்திகைவரை பதினொன்கு கார்த்திகைகளின் வெளியீடாகும். பொள்ளாசசி அடியார் குழாத்தின் அருஞ் செயலாகும். பாமாலை, பாடியவர் பொள்ளாச்சி ஆசிரியர் திருவாளர் ப. மாரியப்ப செட்டியாராவர். பாமாலைகள் சிறந்தவை; திருமுருகனைப் பற்றியவை. கூட்டு வழிபாட்டால் தோன்றியவை. இவை பிறர்க்கு வழிகாட்டத் தக்கவை. இனிய நல்ல பாடல்கள். முருகனருள் பெருகுக!

இதன் ஆசிரியர் திருவாளர் **புலவர் அரசு.** விலை 75 ந. பை. விற்பனை உரிமை 'லோட்டஸ் பப்ளிஷர்ஸ்' 2, கொண்டி செட்டித் தெரு சென்னை-1. ஆசிரியரவர்களின் அறுபதாண்டு நினைவுக் கதிராக வெளி வருவது. ஆசிரியரவர்களின் தமிழ்ப் பற்றும், தமிழ்த் தெய்வமாம் திருமுருகக் கடவுட் பற்றும், தமிழ்மக்களின் முன்னேற்ற நன்னிலைப் பற்றும் பிறவும் ஒன்றுகூடி அவர்தம் தூயவுள்ளத்து, அவ்வப்போது தோன்றிய கருத்துக்கள் செய்யுட்களாக வெளிவந்துள்ளன. அவர்கள் நற்கருத்துக்களுக்கு அரணாகவும் வித்தாகவும் பல நல்லறிஞர் கருத்துக்களும், போதனைகளும், செய்யுட்களும், நூல்களும் விளங்குகின்றன. இதன்கண் முருகு முதல் அருளுள்ளம் வரை 32 தலைப்புக்கள் காணப் படுகின்றன. ஒவ்வொன்றின் விளக்கமும் பல பெரு நூல்களுக்கு வித்தாக மிளிர்கின்றன. செய்யுட்கள் செம்பாகமாய்ப் பொலிகின்றன. ஆற்றொழுக்கு, இன்னோசை, திட்பநுட்பசெறிவு, சுருக்க விளக்கம், பொருளெளிமை முதலிய நயங்கள் மிக்குள்ளன. அனைவருங் கற்றுப் பயன் எய்துவார்களாக.

**"திருக்குறள் உரைவிளக்கம்"**

ஆசிரியர் வித்துவான், நெல்லை **க. சுப்பிரமணியன்** ஆவர். (பேரன் புரூக் உயர்நிலைப்பள்ளி, சுரண்டை) விலை 50 காசு. இதன்கண் பற்பல அதிகாரங்களிலிருந்து நூறு திருக்குறளைப் பொறுக்கி எடுத்துச் செவ்விய சொற்பொருளும், இலக்கணக் குறிப்பும், கருத்துரையும் தரப்பட்டுள்ளன. எளிய இனிய நடை. இளமாணவர்களும் எளிதிற்புரிந்து கொள்ளுமாறு விளங்குகின்றது. யாவர்களும் கற்றுப் பயனெய்துவார்களாக.

**"பாரதி"**

இம்மலர் 1960, அக்டோபர்த் திங்கள் 15, 16ஆம் நாட்களில் சென்னை மாநகரில் நடைபெற்ற தமிழ் எழுத்தாளர் எட்டாவது மாநாட்டையொட்டி வெளிவந்ததாகும். விலை ரூபா ஒன்று. இதன்கண் பெரும்புலமை வாய்ந்த பெரியோர்கள், பேராசிரியர்கள் பலரின் சிறந்த கட்டுரைகள் வெளிவந்துள்ளன. கடல்கடந்த நாடுகளிலும் தமிழ் எவ்வாறு போற்றப்படுகின்றதென்பதும் விளக்கமாகத் தரப்பட்டுள்ளது. யாவரும் இன்றியமையாது கற்றுப் பயன்பெறுதற்குரியது.

# செய்திகளும் குறிப்புக்களும்

**டால்ஸ்டாயும் திருக்குறளும்**

பத்தொன்பதாம் நூற்றாண்டின் பெருஞ் சிந்தனையாளரான டால்ஸ்டாய் அவர்களின் 50 ஆவது ஆண்டு நினைவுவிழாவில் சென்னை மாநிலக் கவர்னர் உயர்திரு. விஷ்ணுராம்மேதி அவர்கள் செய்த சொற்பொழிவின் சுருக்கம் வருமாறு :

"திருக்குறளைப் படித்த டால்ஸ்டாய், வாழ்க்கையின் அடிப்படை அன்பு கண்டார். இந்து ஒருவருக்கு எழுதிய கடிதமொன்றில் டால்ஸ்டாய், 'இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர்நாண நன்னயம் செய்து விடல்' என்று எழுதியுள்ளார். உலகனைத்திலுமுள்ள பெருந் தத்துவ நூல்களனைத்தையும் டால்ஸ்டாய் கற்றவர். வேதம், பகவத் கீதை, குரான், பைபிள் ஆகியவற்றையும் அவர் நன்கு கற்றிருந்தார்."

உலக இலக்கியங்களையெல்லாம் கற்றுத் தேர்ந்த ஒருவர் உலகப் பொதுமறையாம் திருக்குறளிலிருந்து எடுத்துக் காட்டுக்கள் தருவது இயல்பேயாம். தம்முடைய மொழியின் தனிச்சிறப்பை உணரமறுக்கும், தமிழரெனப் பேர்படைத்து வாழும் பெருமக்களுக்கு இச்செய்தி புத்துணர்ச்சியும் புத்தெழுச்சியும் ஊட்டுமென நினைப்பதில் தவறில்லை.

**நாவலர் பாரதியாரைப் போன்று பலர் தோன்ற வேண்டும்!**

டாக்டர் ச. சோமசுந்தர பாரதியாரின் முதலாண்டு நினைவு விழா மதுரை, திருவள்ளுவர் கழகத்தினரால் கொண்டாடப் பெற்றபோது 'முத்தமிழ்க் காவலர்', திரு. கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்கள் தலைமை தாங்கிப் பேசிய பேச்சின் பிழிவு வருமாறு :

"சோமசுந்தர பாரதியாரைப் போன்று நெஞ்சுறுதியும் ஆழ்ந்த புலமையும் தொண்டாற்றும் தன்மையும் படைத்த பல பெரியார்களைத் தமிழ்மக்கள் உருவாக்க வேண்டும். அழிவுப் பாதையில் சென்று கொண்டிருக்கும் தமிழை, தமிழரை, தமிழகத்தை அவர்களால்தான் காத்து வாழ்விக்க இயலும்.

"இன்று பழந்தமிழ் நூல்கள் பேணிப் பாதுகாப்பாரற்று அழிந்து கொண்டே வருகின்றன. அவற்றைக் கற்பவர்களின் தொகை சுருங்கிக் கொண்டே வருகின்றது. அறிவமைதி பெற்ற சான்றோர்களும் தமிழகத்தில் அழிந்து கொண்டு வருகின்றனர். இந்த அழிவுகளைத் தடுக்காவிடில் நாடு அழியும்; இனம் அழியும்; மொழி அழியும்.

"தமிழராகிய நம்மிடம் எல்லா வளங்களும் உள்ளன; ஆனால் ஒன்று மட்டும் இல்லை—அதுதான் உணர்ச்சி. தமிழன் என்ற உணர்ச்சி தமிழர்களிடம் அடியோடு மறைந்து விட்டது. இந்த உணர்ச்சி வளர்ந்தால்தான் நாம் நலம்பெற முடியும்."

தமிழகத்தின் இன்றைய நிலையை மிக அழகாகப் படம் பிடித்துக் காட்டியுள்ளார் விசுவநாதம். தமிழருக்குத் தமிழுணர்ச்சி யின்மையினால்தான் தமிழர்தம் உயிர்நாடியான பிரச்சினைகளில்கூட நீதி கிடைக்காத அவல நிலை இருந்து வருகின்றது. தமிழன் என்ற உணர்ச்சியொன்றே தமிழ்மக்களை ஒற்றுமைப் படுத்தும். ஒற்றுமை உயர்வைத் தருதல் ஒருதலை. இதனைத் தமிழரனைவரும் உன்னி உழைத்து உயர்வார்களாக!

**சமயக் கல்வி தேவை**

"தகுந்த ஆன்மீகப் பின்னணியில் முறையான சமயக் கல்வியை மாணவர்க்குப் புகட்டவேண்டும். இப்பொழுது இந்த நாட்டின் முதற் பெருந்தேவை இது. ஒருவர் எந்தச சமயத்தைச் சேர்ந்தவராக இருந் தாலும் சரி—இந்துவானாலும், கிறித்துவரானாலும், யூதரானாலும், மக மதியரானாலும்—அவர் தம்முடைய சமயத்தின் மீது பத்தி செலுத்த வேண்டும்; அப்பொழுதுதான் அவர் நல்ல மனிதராக விளங்க முடியும்."

இவ்வுயரிய கருத்தினை அண்மையில் கேரள மாநிலத்தைச் சேர்ந்த மண்டலத்தில் நாயர் சேவா கழகத்தினர் நிறுவியுள்ள கல்லூரி, பள்ளிகளைத் திறந்து வைத்துப் பேசிய இந்தியத் தலைமை நீதிமன்றத் தலைமை நடுவர் உயர்திரு. பி. பி. சின்கா அவர்கள் தெரிவித்துள்ளார். சமயமின்றேல் வாழ்வில்லை யென்பது தமிழர் கொள்கை. ஒழுக்கமும் உயர்வும் சமயத்தால் அடைதல் கண்கூடு. பிஞ்சுப்பருவத்திலேயே பிள்ளைகளின் நெஞ்சில் சமயவுணர்வை யூட்டிவிடுவோமாயின் பிற் காலத்தில் அவர்களுடைய வாழ்வு அன்பும் அறனும் அமைந்தவொன்றாக மலர வழியுண்டு. மாணவர்களுக்கு ஒழுக்கத்தையும் சமயப் பண்பாட்டு நெறியையும் புகட்டவல்ல தகுதியான பாடநூல்களைத் தயாரிக்குமாறு சமய ஒழுக்க ஆலோசனைக்குழுவை இந்தியக்கல்வி அமைச்சுத்துறை கோரிவிடுத்துள்ள அறிக்கை நமக்கு மகிழ்ச்சியை யூட்டுகின்றது. வாய்ப்பினை இத்துறை வல்லார் நன்கு பயன்படுத்திக் கொண்டு மக்கள் வாழ்வு சிறக்க வழிவகைகள் காண்பார்களாக!

**டாக்டர் சி. வி. இராமன் அவர்களின் புதிய கண்டுபிடிப்பு**

சென்னைப் பல்கலைக் கழகச் செனட் மண்டபத்தில் நடைபெற்ற இந்திய விஞ்ஞானக் கழகக் கூட்டத்தில், டாக்டர் சி. வி. இராமன், நம் கண்களில் உள்ள விழித்திரை இயங்கும் முறையை நாமே காண்பதற் குரிய புதியமுறை யொன்றைப்பற்றிய தம்முடைய கண்டுபிடிப்பை விளக்கிப் பேசிய பேச்சு வருமாறு:

"நல்ல வெளிச்சமுள்ள அறையில் பொருத்தப் பட்டுள்ள வர்ணக் கண்ணாடிகள் வழியாகத் தூய வெண்திரையைப் பார்த்துக் கொண் டிருக்கவேண்டும். பார்வை சரியானபடி அமைந்தவுடன் வர்ணக் கண்ணாடியை நீக்கி விடவேண்டும். திரையில் நம்முடைய விழித்திரை யின் பிரதிமையைக் காணலாம். இது சுய அளவைவிடப் பெரியதாக இருக்கும். பிரதிமையின் அளவு பயன்படுத்தப்படும் வர்ணக் கண்ணாடியைப் பொறுத்துத் துல்லியமாக இருக்கும்."

அறிவு நலமும் ஆன்மிக ஞானமும் வாய்க்கப் பெற்ற திரு. இராமன் அவர்கள் தம்முடைய அறிவியற் புலமையை ஆக்க வழிகளிலேயே பயன் படுத்தி வருதல் உலகத்தின் அறிவியல் வல்லுநர்களுக்கு ஓர் எடுத்துக் காட்டாகும். அறிவியற்றுறையில் பாரதம் சிறந்து விளங்க இவர் போன்றோர் பலர் தோன்றல் வேண்டும்.



திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை, 2-140, பிராட்வே,
அப்பா ல். வ. சுப்பையா அவர்களால்
அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர்: வ. சுப்பையா.

## மறைமலையடிகள் நூல்நிலையம், சென்னை-1

கல்வி, நூலகத் துறைகளின் இயக்குநர்

பத்மஸ்ரீ நெ. து. சுந்தரவடிவேலு அவர்களுக்குப் பாராட்டு (6-2-1961)



செயலர் வ. சுப்பையா, டாக்டர் பா. நடராசன், டாக்டர் அ. சிதம்பரநாதன், நீதிபதி திரு. சு. கணபதியா பிள்ளை, திருமதி சௌந்தரம் கைலாசம், நீதிபதி திரு. பி. எஸ். கைலாசம், திரு. நெ. து. சுந்தரவடிவேலு.



செயலர் திரு. வ சுப்பையா பிள்ளை, திரு. வி. என். சுப்பராயன், டாக்டர் பா. நடராசன், நீதிபதி திரு. சு. கணபதியா பிள்ளை, திரு. நெ. து. சுந்தரவடிவேலு



நீதிபதி திரு. சு. கணபதியா பிள்ளை தலைமையுரை யாற்றுதல்.





| சிலம்பு | திருவள்ளுவர் ஆண்டு ௧௯௯௨, தை | பரல் |
| --- | --- | --- |
| ௩௫ | பிப்ரவரி, 1961 | ௬ |


## சென்னை கல்வி, நூலகத்துறைகளின் இயக்குநர் திரு நெ. து. சுந்தரவடிவேலு அவர்களுக்குப்

# பாராட்டு

சென்னை, மறைமலையடிகள் நூல் நிலையத்தில் 6-2-61 திங்களன்று மாலை சென்னை மாநிலக் கல்வி, நூலகத் துறைகளின் இயக்குநரான திரு. நெ. து. சுந்தரவடிவேலு, எம். ஏ., எல். டி. அவர்கள் அண்மையில் குடியரசு நாளையொட்டி இந்திய அரசு வழங்கிய 'பத்மஸ்ரீ' என்ற சிறந்த பட்டம் பெற்றதைப் பாராட்டத் தேநீர் விருந்தொன்று நடந்தது. இவ் விழாவிற்குச் சென்னை உயர்நீதிமன்ற நீதிபதி திரு. சு. கணபதியா பிள்ளை அவர்கள் தலைமை தாங்கினார்கள். கழக ஆட்சிப் பொறுப்பாளர் திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்கள் வரவேற்புரை நிகழ்த்தினார்கள்.

### வரவேற்புரை: வ. சுப்பையா பிள்ளை

இந்தப் பாராட்டு விழாவுக்குத் தலைமை தாங்க வந்திருக்கும் உயர்நீதிமன்ற நடுவர் திரு. சு. கணபதியா பிள்ளை அவர்களே! பாராட்டினைப் பெறுமாறு வந்திருக்கும் கல்வி, நூலகத் துறைகளின் இயக்குநரான திரு. சுந்தரவடிவேலு அவர்களே! மற்றும் குழுமியுள்ள நண்பர்களே! உங்களை இந் நூலகத்தின் சார்பிலே வரவேற்கிறேன். இவ்விழாத் தனிப்பெரும் விழா, 'உண்டி கொடுத்தோர் உயிர்கொடுத்தோரே' என்பது புறநானூற்று வரி. மனித உயிர் வாழ்வுக்கு இன்றியமையாது வேண்டியவை மூன்று உகரங்கள். அவை உணவு, உடை, உறையுள். திரு. சுந்தர

வடிவேலு அவர்கள் கல்வியைப் பரப்புவதற்காக வேண்டி முதன் முதல் பள்ளிகளில் நண்பகல் உணவுத் திட்டத்தைக் கொண்டு வந்தார்கள். அடுத்துப் பள்ளிச் சீரமைப்புத் திட்டத்தைக் கொண்டுவந்து உடை வசதி செய்து வெற்றி பெற்றுள்ளார்கள்.

பண்டித நேரு அவர்கள் தமிழ்நாட்டைப் பின்பற்றி மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் பிற மாநிலத்திலுள்ள பள்ளிகட்கெல்லாம் பகலுணவுத் திட்டத்தைக் கொண்டுவர வகை செய்திருப்பதாக நேற்றுக் கூறியுள்ளதைச் செய்தித் தாளால் அறிவீர்கள். தமிழ்நாடு பொதுவாக எல்லாத் துறைகளிலுமே பிற மாநிலங்களுக்கு வழிகாட்டியாக விளங்குகிறது என்றால் மிகையாகாது. பொருளாதாரத் துறையில் டாக்டர் பா. நடராசன் அவர்களும், தொழிற் றுறையில் திரு டி. கே. பழனியப்பன் ஐ. ஏ. எஸ் அவர்களும் செய்துள்ள அரும்பெருஞ் செயல்கள் தமிழ்நாடு வழிகாட்டியாக விளங்குகிறது என்பதைக் காட்டும்.

'வள்ளுவன் தனை உலகினுக்கே தந்து வான்புகழ் கொண்ட தமிழ்நாடு' என்றார் கவி பாரதியார். நம் இயக்குநர் அவர்களுக்குத் திருவள்ளுவர்மீது அளவற்ற பற்றுண்டு. இவருடைய மைந்தனின் திருப்பெயர் திருவள்ளுவன். வீட்டின் பெயர், வள்ளுவன் இல்லம்! 'வள்ளுவன் தன்னை (சுந்தர) வடிவேலுக்கே தந்து வான்புகழ் கொண்ட தமிழ்நாடு' என்று சொன்னால் யார் தான் மகிழார். இப்பொழுது இவர்களுடைய தொண்டையும் புகழையும் பார்க்கும்போது, '(சுந்தர) வடிவேல் தன்னை உலகினுக்கே தந்து வான்புகழ் கொண்ட தமிழ்நாடு' என்று கூறத்

இவர்கள் ஆற்றிய தொண்டைப் பாராட்டி இந்திய அரசு 'பத்மஸ்ரீ' என்ற குடியரசுநாட் பட்டத்தை வழங்கியுள்ளது. 'பத்மஸ்ரீ' என்ற சொல்லுக்கு என்ன பொருள்? ஸ்ரீ என்றால் திரு. பத்மம் என்றால் தாமரை. 'தாமரைத் திரு' என்று சொல்லலாம். ஆனால் இதில் சிறப்பில்லை. முற்காலத்தில் ஆங்கிலேயர் 'ராவ்சாகிப்' 'ராவ்பகதூர்' 'திவான்பகதூர்' என்ற பட்டங்களை வழங்கி வந்தனர். அவற்றிற்கெல்லாம் பொருள் ஆராயாததுபோல் இந்தப் பட்டத்தையும் பொருள் ஆராயாது அரசு தந்த பட்டமாதலால் சிறப்புடன் ஏற்றுக்கொள்ளுவோம்.

இவ் விழாவிற்குத் தலைமை தாங்கும் நடுவரவர்களின் பெயர் கணபதியா பிள்ளை. பாராட்டுப் பெறுபவர் திரு சுந்தரவடிமேலு. கணபதி அண்ணனாவர். சுந்தரவடிவேலு தம்பியாராவர். அண்ணனார் தம்பியைத் தலைமை தாங்கிப் பாராட்டுதல் மிகச் சிறப்புடையதே. அடுத்துப் பாராட்டுபவர்

மூவரும் நடராசன், சிதம்பரநாதன், சௌந்தரம் கைலாசம் என்ற பெயர்களை முறையே தாங்கி அம்மை அப்பராக நம் இயக்குநரைப் பாராட்டுகின்றனர். மேலும் செயலர், நூலகர் பெயர்களும் முருகன் பெயராய் அமைந்திருக்கின்றன. எனவே இவ்விழா மிகவும் தெய்வப் பொருத்தமுடையதாகும்

கல்வி நூலகத் துறைகளின் இயக்குநரை மறைமலையடிகளார் நூலகத்திலே பாராட்டுவது தனிப்பெருஞ் சிறப்பாகும். மறைத் திரு மறைமலையடிகளாரும் மற்றும் பெரும் பெரும் புலவர்களும் கட்புலனுக் கெட்டா நிலையினின்று பாராட்டுகின்றனர் என்பதில் வியப்பில்லை, மெய்ம்மையே எனத் துணிந்து கூறுகின்றேன். இத்தகைய விழுப்பம் நிறைந்த விழாவிற்குத் தலைமை தாங்கிச் சிறப்பாக நடத்தித் தருமாறு உயர்நீதிமன்ற நீதிபதி திரு கணபதியா பிள்ளை அவர்களைக் கேட்டுக் கொள்கிறேன்.

## தலைமையுரை : நீதிபதி, சு. கணபதியா பிள்ளை

பெரியோர்களே ! நண்பர்களே !!

மிகச் சிறந்த பண்புடை மக்களிடையே ஒரு நற்குணமுண்டு. எதையும் மிகைபடக் கூறுவதில்லை. தகுதி இருந்தும் வாய் விட்டுப் புகழ்வதில்லை. தமிழர்களிடை இந்த நற்பண்பு உண்டு. தென்னாட்டு மக்கள் அரிய செயல் செய்தாலும் வாய்விட்டுப் புகழமாட்டார்கள். இதை நான் ஏன் கூறுகின்றேன் என்றால் நம் சுந்தரவடிவேலு அவர்கள் இங்கு ஆற்றியுள்ள பணியை வட நாட்டிலே ஆற்றியிருந்தால் எத்தனையோ பெயர் கிட்டியிருக்கும்.

சுந்தரவடிவேலு கல்வித்துறையில் பெருந் தொண்டாற்றி யுள்ளனர். மக்களுக்கு இத்துறையில் விழிப்பு ஏற்பட்டுள்ளதற்குக் காரணம் இவர்கள் ஊன்றிய வித்து. நண்பகலுணவு வயிறாரக் கொடுக்கிறோம் என்று கூறித் திட்டம் வகுத்து, படிக்க வைப்பதற்கு வசதியில்லாத பெற்றோர்களையெல்லாம் தம் சிறுவர்களைப் பள்ளிக்கு அனுப்பச் செய்து பள்ளியில் சேராத இலட்சக் கணக்கான பிள்ளைகளுக்குக் கல்வி சொல்லிக்கொடுக்கச் செய்த இப்பெரியாருடைய நுண் அறிவிற்கு நாம் என்றும் கடப்பாடுடையோம். இவர் செய்தது புரட்சிகரமான செயல்.

இவர் எல்லாத் துறைகளிலும் புரட்சி செய்தவர். நூல் நிலையத் துறையை எடுத்துக்கொண்டால் படிப்பவருடைய தொகையும் நூலகங்களின் எண்ணிக்கையும் முன்னைப்போல் முப்பது மடங்கு பெருகியுள்ளன. அதேபோல் புத்தகங்களின் வெளியீட்டுப் பணியும் பெருகியுள்ளது. இத்தனைக்கும் காரணம்

எல்லோருக்கும் படிக்கும் வசதி செய்துகொடுத்ததுதான். அத்தகைய பெரிய பணியைச் செய்த சுந்தரவடிவேலு அவர்களைத் தமிழ்நாடே போற்றும்.

## பாராட்டுரை: டாக்டர். பா. நடராசன் அவர்கள்

தலைவரவர்கள் மிகுந்த நுட்பமான கருத்தாகிய பண்பாட்டைப் பற்றி விளக்கம் தந்தார்கள். தமிழராகிய நாம் முகத்துக்கு நேர் புகழ்வதற்குப் பயிலவில்லை. சங்க காலந்தொட்டே தகுதி பற்றி நாம் பாராட்டித்தான் வந்திருக்கின்றோம். இப் பாராட்டு சுந்தரவடிவேலு அவர்களைப் புகழுவதற்கு அல்ல. நம்மையே நாம் பாராட்டிக் கொள்ளத்தான்.

சுந்தரவடிவேலு அவர்கள் கல்வித்துறையில் செயற்கருஞ் செயல் செய்துள்ளனர். சுதந்திர இந்தியாவில் ஓர் அலுவலர் எப்படி இருக்கவேண்டும் என்பதை இவர் மூலம் காணலாம். இதற்காகவே இவர்கட்குப் பட்டம் கொடுத்தார்கள் என்று நான் சொல்லுவேன். மக்களுக்குத் தொண்டு செய்ய வேண்டுமானல் அரசாங்க அலுவலர் அத் தொண்டில் மக்களுக்கும் பங்கு உண்டு என்பதைக் காட்டவேண்டும். சுந்தரவடிவேலு அவர்கள் ஊர் ஊராய்ப் போய் அவர்கள் திட்டத்தை மக்களுக்கு எடுத்துக் கூறி அவர் வெற்றி பெற்றார்.

'பத்மஸ்ரீ' என்ற சொல்லுக்கு 'தாமரைத்திரு' என்று கூறினார்கள். இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னரேயே திருவள்ளுவர் "மடியிலான் தாளுளாள் தாமரையினாள்" என்று கூறியுள்ளார். 'பத்மஸ்ரீ' என்பதைத் 'தாமரையினாள்' என்று கூறலாமே. இதைப்போல இன்னும் பல பட்டங்களை அரசாங்கம் அவருக்கு அளிக்கவேண்டும். அவருக்கு மேலும் ஊக்கத்தை அளிப்பதற்குப் பல கூட்டங்களை நடத்தவேண்டும்.

## திருமதி. செளந்தரம் கைலாசம் அம்மையார்

இவர்கள் பாராட்டுரை வழங்குமுன் இயக்குநருக்குச் செந்தாமரைப் பூவொன்றை அன்பளிப்பாக அளித்தார்.

மதிப்புக்கும் பெருமைக்குமுரிய அவைத்தலைவரவர்களே, பெரியோர்களே வணக்கம். உயர்வுகண்டு பாராட்டுவது உத்தமப் பண்பு. வாழ்வும் கலையும் வளர்ந்து பெருகுவது பாராட்டும் பண்பைப் பொறுத்துத்தான் இருக்கிறது. தேனுள்ள மலரைத் தான் வண்டு நாடும். நன்றி பாராட்டும் நெஞ்சைத்தான் மனித வாழ்வு விரும்பி வரவேற்கின்றது. அந்த நல்ல பண்பாட்டின்

அடிப்படையில் இப்பாராட்டு விழாவை ஏற்பாடு செய்துள்ள திரு. சுப்பையா பிள்ளை அவர்களை முதலில் பாராட்டுகின்றேன்.

திரு. சுந்தரவடிவேலு நயம் நிறைந்த பேச்சாளர். செந்தமிழ் இனிமை திரண்டுவரும் தேனும் அவர்தம் பேச்சு. திருக்குறளைக் கையாளுவதில் திறமை வாய்ந்தவர். 'விரைந்து தொழில்கேட்கும் ஞாலம் நிரந்தினிது, சொல்லுதல் வல்லார்ப் பெறின்' என்பதற்கேற்ற சொல்வன்மையுடையவர்.

அவர்கட்குப் 'பத்மஸ்ரீ' பட்டம் வழங்குவித்தது கல்வித் துறை. அவர் தலைமையில் கல்வித்துறை வளம்பெற்று வருகின்றது. தாமின்புற்றது உலகின்புறக் கண்டு மகிழ்ந்தவர். அவர்கள் மாணவர்க்கு வழங்கியது கேடில்விழுச் செல்வமாம் கல்விச் செல்வம். இச்செல்வம் வாரி வழங்க வழங்க அணுஅளவும் குறையாது. வெள்ளத்தில் போய் விடுவதில்லை. வெந்தணலில் வெந்து விடுவதில்லை. இத்தகைய அரிய செயலாற்றிய அவருக்கு அரசு இன்னும் பல பட்டங்களை வழங்கி அவரை நன்கு பயன் படுத்திக் கொள்ள வேண்டுமென்பது என் அவா.

## டாக்டர். அ. சிதம்பரநாதன்

நம் மாநிலக் கல்வித்துறை இயக்குநர் தமிழ் மக்களின் மதிப்புக்கும் ஈடுபாட்டுக்கும் உரியவராய் இருக்கிறார் என்பது அனைவரும் அறிந்த செய்தி. தமிழ்மொழியில் தேர்ச்சிபெற்றுத் தமிழ் மக்களுக்குத் தொண்டாற்றியது மட்டுமல்லாது தமிழனின் பெருமையைப் பிற நாட்டினரும் அறிந்துகொள்ளச் செய்துள்ளார்.

சுந்தரவடிவேலு அவர்கள் இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டத்தின் எய்குறியை (Target) அந்த ஐந்தாண்டில் முதல் இரண்டு ஆண்டுகளிலேயே அடைந்துவிட்டார். வேறு எந்த மாநிலத்திலும் இத்தகைய முன்னேற்றம் இல்லை. இவருடைய சிறந்த தொண்டை இந்தியக் குடியரசுத் தலைவர் வேலூர் மாநாட்டில் புகழ்ந்துள்ளார். பண்டித நேரு அவர்களும் பல இடங்களில் இவரைப் பாராட்டிப் பேசியுள்ளார்.

நம் நாட்டில் கொடுக்கக் கூசுவோர் இல்லை. அவர் முன் தக்கமுறையில் எடுத்துக் கூறுவோர் குறைவு. அம்முறையில் எடுத்துக் கூறிய சுந்தரவடிவேலு பாராட்டுதற்குரியவர். தமிழ் ஆக்கத்திற்காக உழைத்து வருபவர். நல்ல தமிழ் பேசவேண்டும் எழுதவேண்டும் என்று வற்புறுத்தி வருகின்றவர். இவருக்கு உள்ளன்புடன் என் வாழ்த்தைத்

தாகிவிட்டதை உணர்ந்தேன். அதனால்தான் அன்பர் சுப்பையா பிள்ளை அவர்கள் இவ்விருந்துக்குக் கேட்டவுடன் ஒத்துக்கொண்டேன். அத்துடன் தமிழுக்குத் தனிப்பெருந் தொண்டாற்றிய மறைமலையடிகளாரின் பெயரில் நிறுவப்பட்டிருக்கும் இந்நூலகத்தின் சார்பில் பாராட்டு நடைபெறும் என்றதனால் தடை கூற முடியவில்லை. இந்நூல் நிலையக் கட்டிடத்தில்தான் முதன் முதல் இராமலிங்க வள்ளலார் தம் அருமைத் தமையனார் செய்து போந்த பெரியபுராணச் சொற்பொழிவை அன்னவர் வர வாய்ப்பில்லாத காரணத்தால் தாம் ஆற்றியதாகக் கேள்விப்பட்டேன். இஃது எனக்கு நிறைந்த மகிழ்வைத்தருகிறது. ஏனெனில் நான் சொல்லும் கருத்தெலாம் வள்ளலார் கூறிய கருத்தே. என்னைப் பாராட்டிய பெரியோர்கள் கூறிய வாழ்த்துக்களுக்குத் தகுதியுடையவனாக வாழ முயற்சி செய்வேன் எனக் கூறி முடித்துக் கொள்கிறேன்.

பின்னர் நூலகரான திரு இரா. முத்துக்குமாரசாமி நன்றி கூறக் கூட்டம் இனிது முடிந்தது.

## பாராட்டு விழாவுக்கு வந்திருந்த
# வாழ்த்துக்கள்

தக்காரைத் தக்கவகையில் பாராட்டும் விழா சிறப்பதாக.

—பேராசிரியர், அ. மு. பரமசிவானந்தம்

கல்வி இயக்குநருக்கு என் அன்பார்ந்த பாராட்டுதலைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

—காங்கிரசு குழுத்தலைவர், ஓ. வி. அளகேசன்

... ...........திரு. நெ. து. சுந்தரவடிவேலு அவர்களுக்கு மேலும் பல விருதுகள் கிடைக்க வேண்டுமென்று இறைவனை இறைஞ்சுகின்றேன்.

—கோவை, ஜி. ஆர். தாமோதரன்

கல்வித்துறையிலே வரலாறு கண்டிராத பெருவெற்றியை மாநில அரசுக்குத் தேடித்தந்த அறிஞர் சுந்தரவடிவேலனார் மேலும் பல்லாண்டுகள் வாழ்ந்து பெறற்கரிய சிறப்புக்களைப் பெற்றுச் சிறந்தொளிர வாழ்த்துகின்றேன்.

—பேராசிரியர், மயிலை சிவமுத்து

விழா சிறப்புற நடக்க வாழ்த்துகிறேன்.

—நாகர்கோவில், கல்வியதிகாரி, சிவன்பிள்ளை

# காணுவுலகத் துறைவோர் காட்டும் நல்வழி

பண்டை நாட்டொட்டு நம் நாட்டகத்து ஆவிக்குப் படைத்தலும், அவ்வாவி தான் இயக்க இயங்கும் இயல்பு வாய்ந்த ஒரு வரைச் சார்ந்து அப்படையல் முதலிய வழிபாட்டினை ஏற்றமை இயம்பலும், குண குற்றம் கூறலும், வருங்கால நிகழ்வு கூறலும் முதலியன நிகழ்ந்து வந்தன; வருகின்றன. இவை பெரும்பாலும் அன்பொடு நிகழ்வதற்கு மாறாக அச்சத்தோடே நிகழ்கின்றன. அதனால் அத்துறையில் அறிய வேண்டுவன அறிதற்கோ அது மேலும் வளர்ச்சியுற்றுப் பயன் பல அளித்தற்கோ வழியில்லா மற் போயின.

இந்நாளில் மேனாட்டார் கூட்டுறவாலும், அத்துறையில் அவர்கள் பன்னாட்பயின்று உண்மை கண்டு உலக நன்மையின் பொருட்டு யாத்து வெளிப்படுத்து வழங்கிவரும் பற்பல நூல் களாலும் நம்மவர்களும் உண்மை தெளிந்து; அவ்வழியில் பல நன்மை எய்தி வருகின்றனர். இத்தகைய அரிய பெருஞ் செய்கை களில் தொடக்கத்தில் எல்லார்க்கும் நம்பிக்கையும் தெளிவும் ஏற் படுவது சிறிது அருமையாகவே இருக்கும். அதுபற்றி அவற் றைப் பொருட்படுத்தாது இகழ்வாரையும், போற்றாதவரையும் குறை கூறுதல் எவ்வாற்றானும் பொருந்தாததாகும். இயங்கும் இயல்புவாய்ந்த ஆற்றலினர் ஆங்காங்கு ஒரு சிலரே காணப்படுத லால் காணுவுலகத்தோர் அனைவர்களோடும் வேண்டியவாறு எல்லாரும் தொடர்பு வைத்துக் கொள்ளுதல் முடியாதாகின்றது. அம்மட்டுமன்று அவ்வாவிகளும் தங்கள் மனம்போல் வருதற்கும், உரையாடுதற்கும், வரைதற்கும் வாயிலில்லாமல் ஆங்குள்ள தலை வர்களின் ஆணைவழியே இயங்க வேண்டிய கட்டுப்பாட்டினுள் அடங்கியிருக்கின்றன எனவுந் தெரிகின்றது.

அவ்வாவிகள் தத்தம் தொடர்புடையாரனைவரும் நன்னிலை எய்துதல் வேண்டும் என்னும் மாறாப் பெருங்காதல் கொண்டிருப் பதாகவும் தெரிகிறது. நம்முடைய எண்ணம், சொல், செயல் களை யெல்லாம் காணுந் தன்மையுடையனவாகவும் இருக்கின்றன. நாம் செய்யும், நன்மையைக் கண்டு மகிழ்வதும், தின்மையைக் கண்டு வருந்துவதும் செய்கின்றன. நம் பொருட்டு இறைவன் மாட்டு வேண்டுகோளும் செய்கின்றன. நம்மையும் இறைவனை இடையறாது வழிபடும்படியும், வேண்டிக் கொள்ளும்படியும் அவற்றால் இன்னல்கள் நீங்கி நன்னல வாழ்வுகள் ஓங்குமெனவும் வற்புறுத்துகின்றன. இம் முறையால் உலகில் கடவுள் நம்பிக்கை பெருகுவதற்கும், தீமையினை எண்ணவும், சொல்லவும்,

இயற்றவும் அஞ்சுதற்கும், நன்மையினை விழைந்து செய்தற்கும் வாயில்கள் ஏற்படுகின்றன. ஆவிகளுக்கும் அவ்வாவிகளின் தொடர்புடையார்கட்கு மட்டுமே தெரிந்த சிலவுண்மைகள் வெளிப்படுதலானும், அவ்வாவிகள் இந்நிலவுலகத்தில் வாழ்ந்த காலத்தில் எவ்வெவரோடு எவ்வெம்முறையில் பழகியும் பேசியும் வந்தனவோ அவ்வவரோடு அவ்வவ்வாறே பேசுகின்றமையானும், பிறர்க்குத் தெரியாத புனைபெயர் கூறி அழைக்கின்றமையானும் ஆவிகளின் மெய்ம்மையில் ஐயுறுவதற்கு ஒரு சிறிதும் இடமில்லை.

ஈண்டுள்ளார் செய்யும் நன்மைகளைக் கண்டு மகிழ்ச்சி எய்து கின்ற அவ்வாவிகள் அந்நன்மைகள் மேன்மேலும் பெருக நிகழ்தல் வேண்டு மென்னும் பெருவேட்கையும், செய்வாரை ஊக்கித் துணை புரிதல் வேண்டு மென்னும் பெருங்கடப்பாடுங் கொண்டு அவ்வப் போது முன் வந்து தத்தம் இயல்புகளுக்கு ஏற்றவாறு சொல்லவோ இயற்றவோ செய்கின்றன. அம்முறையில் பெரும் புலமை சான்ற பேராசிரியன்மார் உரை நடையாகவும், பாட்டாக வும், கட்டுரையாகவும், நாடகமாகவும் பல நன்மைகளை நமக்கு அவ்வப்போது அறிவுறுத்தி வருகின்றனர். அக்காணுவுலகத்தி லும் புலவர் பெருமக்கள் ஒருங்குகூடி அளவளாவி மகிழ் கின்றனர். அம்மகிழ்ச்சிப் பெருக்கால் ஒருவர் ஒருவரைத் தூண்டி நற்செய்திகள் விடுக்கச் செய்கின்றனர். நமக்கு ஏதே னும் ஐயங்கள் ஏற்பட்டு அறிவித்தாலும் அவற்றை அகமுவந்து ஏற்று அவ்வப்போது அகற்றித் தருகின்றனர். இத்தகைய அருஞ்செயல்களை ஐயுறுதேற்று அத்துறையினை வளர்ச்சியுறச் செய்ய வேண்டுவது நம்மனோர் கடமையே என்பது சொல்லா மலே யமையும். இதுகாறும் வந்துள்ள குறிப்புக்களில் அப் புலவர் பெருமக்கள் தங்கள் பொருட்டு ஏதும் விழைந்திலர். அவர் தமக்கு வாயிலாக அமைந்துள்ள இயக்குநரும் ஏதும் பெறும் வேட்கையில் இது செய்திலர். இந்நிலையில் இவற்றின் கண் ஐயுறுவதற்குச் சிறிதும் இடமில்லை என்பது துணிவு.

அம்மட்டுமன்று; காணுவுலகத்துறையுங் கற்றறிவல்ல சான்றோர், தம்மறிவும் நாட்டமும் கேடில்விழுச் செல்வமாங் கல்வி வாயிலாகத் தாங்கள் உலகத்து வாழ்ந்த காலத்து நம்ம னோர்க்கு நயமுறப் பயன்பட்டமை போன்று இஞ்ஞான்றும் பயன்பட்டு வருதல் வேண்டும் என்னும் பெருங் காதலுடன் இருக்கின்றார்கள் என்பதும் புலனாகின்றது. அவர்தம் பெரு வேட்கையினை நிறைவுறுத்தி நிலவுலகிற்குப் பயன்பெறச் செய்து கொள்ளுவதற்குத் தக்க வாயில்கள் வேண்டும். வாயில்கள் அமைந்தாலும் அவற்றைச் செம்மையுறச் செய்து வெளியிட் டுதவும் வெளியீட்டாளர் வேண்டும். இத்தனையும் பொருந்தி

வெளிவருமாயின் அவர்கள் பெருவேட்கை
வ அவர்கட்கு நம்மனோரால் செய்யத்தக்க
கொண்டாட்டமாகும்.

காணாவுலகப் பெரும்புலவர் குழுவுக்கு நம் சிவத்திரு, தமிழ்க் கடல் மறைமலையடிகளார் தலைமையாகத் திகழ்கின்றனர். அதனால் பலருடைய நன்மொழிகளும் நாம் பெற்று மகிழ்வதற்கும், அவ் வழி யொழுகுதற்கும் வாய்ப்புக்கள் ஏற்பட்டுள்ளன. இவை நம் பெரும்பேறேயாகும். அம்முறையில் கழக நலங்கருதி இடையறா துழைத்து வருங் கடப் பாட்டினமாகிய எமக்கு, அக்கழக நல விழைவுடனே காணாவுலகப் பெருமக்கள் பலரும் பொங்கல் வாழ்த்துக்களும், கடிதங்களும் நெல்லை ஆவியுலகத் தொடர்பாளர் ரா. ந. குற்றாலிங்கம் பிள்ளையவர்கள் வழி யெழுதி அப்பெருமக்கள் திருப்பெயர்கள் வருமாறு:

அருட்டிரு மறைமலையடிகள், பண்டிதமணி மு. கதிரேசன் செட்டியாரவர்கள், பேராசிரியர் சுந்தரம் பிள்ளையவர்கள், நாவலர் ந. மு. வேங்கடசாமி நாட்டாரவர்கள், சிவத்திரு, ஞானியாரடிகள், தேசிய கவி சுப்பிரமணியப் பாரதியார், மாயூரம் நீதி வள்ளல் வேதநாயகம் பிள்ளை என்பன. இவற்றுள் இவ்விதழில் இடம் பெற்றுவருவன மறைமலையடிகளார், பண்டிதமணியார், பாரதியார், ஞானியாரடிகள் ஆகிய நால்வர்களின் வாழ்த் துக்களுங் கடிதங்களுமேயாகும். இம் மூன்றனுள் மறைமலையடி களாரின் வாழ்த்துப்பாக்களுக்கு விளக்கம் வேண்டியிருந்தனம். அடிகளாரும் அவ்வேண்டுகோளை அருளுள்ளத்துடன் ஏற்று அவற்றிற்குச் சிற்றுரையும் பேருரையுமாக இருவேறு விளக்க வுரைகள் விடுத்துள்ளனர். அப்பாட்டுக்களும் அவ்விளக்கவுரை களும் சேர்ந்து அழகிய ஒரு நூல்வடிவில் வெளியிடுதற்காம் எழிலோடும் இயல்போடும் அமைந்துள்ளன. அவ்வுரைகள் இரண்டனுள் சிற்றுரை மட்டும் பாட்டுக்களுடன் இயைந்து வெளிவருகின்றது. இச் சீரியவுரை ஆசிரியர் மறைமலையடிகளா ரல்லாமல் வேறெவராலும் ஆக்கமுடியா தென்பது அகக் கண்ணுறுவா ரனைவர்க்கும் நன்கு புலனாம் என்பது அதனையும் இணைத்து வெளிப்படுத்தினம்.

காணாவுலக வாசிகளாய் நின்று நம் நலத்தில் நாட்டமுற்றுப் பொங்கல் வாழ்த்துக்கள் விடுத்தருளிய அப்புலவர் பெருமக்கள் அனைவர்கட்கும் நம்முடைய உளமிகு நன்றியும் தலைதாழ்ந்த வணக்கமும் என்றென்றும் உரியவாகுக. வாழ்க அப்புலவர் பெருமக்கள்! வாழ்க செந்தமிழ்! வாழ்க சிவநெறி! வாழ்க வையகம்!

அம்மை அம்பலவாணர் பொன்னடி போற்றும்
மறைமலை அடிகள்,
சார்வரி தைத் திங்கள் தலைநாள் பொங்கல்
விழாவில் வழங்கிய

# வாழ்த்து

மண்ணுலகில் வாழ்வார்கள் பிழைத்தாலும் வந்தடையிற்
கண்ணுதலான் பெருங்கருணை கைக்கொள்ளுமெனச்
செழுந்தமிழர் செப்பனிட்ட செம்மொழியாஞ் செந்தமிழைச்
சீருறவே வளர்த்திட்ட கடமுனிதன்
எண்ணமெலாந் தமிழ்மொழியே தேமொழியா யெண்டிசையும்
புகழோங்கப் பொற்பிட்ட பொன்னம்பலத்துக்
கண்ணுதலார் கறைமிடற்றர் கருணைபொழித் திருவுளத்துத்
தென்புலத்துத் தென்மலைவாழ் தென்முனியின்
தெண்மையுடைக் கருத்திலெழு கன்னியாந் தமிழன்னை
திருவதுவுந் தன்னகத்து மதலையர்கள்
கரந்துறைகோள் காயக்கம் கேதுதலால் குன்றிட்ட
குறியெனவே தெரித்திட்ட திருவுளமே
திண்மையுடைத் திருமையெழு அன்னையவள் காந்திமதி
அம்மையுடன் கலந்தருளுங் கற்பகமே!
நெல்லையிலே தமிழன்னை புகழுடையத் தானீந்த
அருட்கனிவே சித்தாந்தக் கழகமதே! (க)

நெல்லைக் கழகமதாம் சைவசித் தாந்த
நூற்பதிப்புத் தமிழ்க் கழகம்
தரணியதிற் றழைத்தோங்கத் திருக்கூத்தர் திருவுளத்துத்
திறனுடையான் திருவரங்க மெனநினைந்து
எல்லையில எழிலுடனே இயக்கி வைத்துத்
தன்னடியின் திருவறியச் சேர்த்திட்டுப்
பின்னவனும் சுப்பையா செவ்வுடையா னெனக்கண்டு
நீள்நிலத்து முத்தமிழை முழக்கிடவே
தொல்லையில் சீரளித்துச் சுப்பையா கருத்தெலாங்
கன்னித் தமிழதுவே கலித்திடத்தான்
திண்மையாந் திருவளித்துத் தருக்குடனே தன்கழகஞ்
சிறந்திடவே அருளளித்த அம்பலவா!
ஒல்லையுடை உன்புகழாந் தைத்தலைநாளிற் றிருவளிக்கத்
தமிழகத்து மன்றுளாடும் மணியே!
மருவணி யும்நின் மலரடிகள் மணத்திடவே
நின்னடிமை மறைமலையேன் மன்றுதலே. (உ)

*சார்வரி,*
*தைத்திங்கள் க - ஆம் நாள்.*

மறைமலை அடிகள்
நெல்லை

## சிற்றுரை

மண்ணுலகில் வாழ்வார்கள் பிழைத்தாலும் - விரிகடல் சூழ்ந்த பூமிக்கண் தூல உடல் தாங்கி வாழும் ஆறறிவுடையவர்கள் இறைவனின் படைப்பே உலகென அறிந்து இறைவழிபாடியற்றாது நீதிநூல்கள் காட்டும் நெறி நின்று ஒழுக்குடன் ஒழுகாது தவறினும்,

வந்தடையிற் கண்ணுதலான் பெருங்கருணை கைக் கொள்ளுமென - தூல உடல்களைந்து, பூமிக்கண் இறந்துபட்டனரென்ற தன்மையை யெய்தினும், படைப்பிற்குரிய நெற்றிக்கண்ணுடைய சிவபெருமானின் பேரிரக்கம் அலையுமென,

செழுந்தமிழர் செப்பனிட்ட செம்மொழியாஞ் செந்தமிழை - செழுமை மிகுந்த மொழியாந் தமிழ்மொழியினைக் கசடறக் கற்றுத் துறைபோய திறனுடைய தமிழராகிய சேக்கிழார் பெருமான் ஒப்பனை செய்த (திருத்தொண்டர் புராணத்தெழும்) செந்தமிழை,

சீருறவே வளர்த்திட்ட கடமுனிதன் - இறைமொழியெனப் போற்றி வளர்த்து வருகின்ற அகத்திய முனிவனின்,

எண்ணமெலாந் தமிழ் மொழியே தேமொழியா யெண்டிசையும் புகழோங்கப் பொற்பிட்ட - நினைவு முழுமையும் தமிழ்மொழி யாகிய இறைமொழியெனவே வளர்த்து எங்கணும் புகழ் நிறுவிடத் தகுதியாக்கிய,

பொன்னம்பலத்துக் கண்ணுதலார் கறைமிடற்றார் கருணை பொழித் திருவுளத்து - பொன்போல் மிளிர்கின்ற வெளியாகிய திருக்கயிலையுறை அன்னை உமையுடன் திருவீற்றிருக்கும் நெற்றிக் கண்ணுடையவரும், நீலகண்டமுடையவருமாகிய சிவபெருமானின் கருணை மிக்குடைப் பேரிதயத்து,

தென்புலத்துத் தென்மலை வாழ் தென்முனியின் தெண்மையுடைக் கருத்திலெழு - தன் இறையார் இன்றமிழ் வளர்த்திடத் தென்பாண்டி நாட்டுத் திருப்பொதிகை யேகி வளர்த்திடென ஆணை யருளியதைத் தலைக்கொண் டேகிய தெளிந்த கருத்துடன் தம்மொழியை அன்னைமையின் அருளுருவெனவே நினைந்து செயல்படுங் கருத்திலெழு

கன்னியாந்தமிழன்னை - என்றும் மாறா நிலையுடைய கன்னித் தன்மையை அரணாகக் கொண்டொழுகும் தமிழன்னையின்,

திருவதுவும் - மொழியென்ற அழகின் மென்தன்மையும்.

தன்னகத்து மதலையர்கள் கரந்துறைகோள் காயக்கம் கேதுதலால் - தன் நாடாகிய தென்தமிழ் நாட்டுத் திருவினர்கள், வானில் மறைத்தல் தன்மையுடைய இராகு கேதுக்கள் போன்ற பிறமொழிப்பால் கொண்ட விருப்பு அவர்களைக் கதறியழைத்துத் தம் நிலை பிறழச் செய்தலே,

குன்றிட்ட குறியெனவே - மென்தன்மையாகிய மென்றமிழ்க் கன்னியின் திரு வாடுதற்குச் சான்றெனெ,

தெரித்திட்ட திருவுளமே - விளக்கிய பேரிதயத்தின் பொலிவுடைப் பேரிரக்கமே (அருளே),

திண்மையுடைத் திருமையெழு அன்னையவள் காந்திமதி அம்மையுடன் - கலங்கா நிலையுடைய, என்றும் ஒரே தன்மைபெற்ற அன்னையாகிய காந்திமதி யென்ற உமைப்பிராட்டியாருடன்,

கலந்தருளுங் கற்பகமே - கூடி நெல்லையப்பர் என்ற அணி கொண்டு அருளளிக்கும் கற்பகத்தருவே! நெல்லையப்பரே!

நெல்லையிலே - நின்புகழ்மிகு பதியாகிய திருநெல்வேலியே அதற்குத் தகுதியெனப் பொதிகைத் தென்றல் வீசிடும் நெல்லையே சிறப்பென,

தமிழன்னை புகழுடைய - நின் அருளுடை அன்னையென அகத்தியனும், குரவர்களும் நன்கறிந்து செந்தமிழ்த் தாரணிந்து பாடும் புகழினைச் செவிமடுத்து மகிழ்வடைந்த நின்மொழியாகிய தமிழ் எம் மொழியாகிய, எம்மைப் பயிற்றுவித்த தமிழன்னையின் புகழ் மீண்டும் பெருகிட,

தானீந்த அருட்கனிவே சித்தாந்தக் கழகமதே - நீயருளிய அருட் சிறப்பே திருநெல்வேலி சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம். (க)

நெல்லைக் கழகமதாம் சைவ சித்தாந்த நூற்பதிப்புத் தமிழ்க் கழகம் - திருநெல்வேலி சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,

தரணியதிற் றமிழைத் தோங்க திருக்கூத்தர் திருவுளத்து - ஆர்கலி சூழில் வையத்துச் சிறப்புடைத் தமிழ் மொழி பேணிப்புகழுடன்,

திறனுடையான் திருவரங்கமென நினைந்து - தமிழரின் பேருதவியால் தனனருள் காட்டிட நிறுவிய கழகத்தைத் திறனுடன் நடாத்திச் செல்ல வலிமையும் அறிவுமுடையவனாகிய திருவரங்கனாரே, தன் பெயர் கொண்ட தலைவரின் கீழிருந்து செயல்படத் தகுதியுடையானென நினைந்து,

எல்லையில் எழிலுடனே இயக்கி வைத்துத் - திருவரங்கனாரென் பாரையே வரம்புடன் செயலாற்ற அருள் செய்து செயல்படச்செய்து,

தன்னடியின் திருவடியச் சேர்த்திட்டு - தன் அருட்கடலில் திளைத்திட மண்ணுலகினை விட்டகற்றி,

பின்னவனும் சுப்பையா செவ்வுடையானெனக் கண்டு - திருவரங்கனார் பின்னவனும், தந்திருவினெழு புதல்வனின் பெயர் கொண்ட சுப்பையாவென்பார் அதனை இயக்கத் திறனுடையானெனத் திருவுளங் கொண்டு,

நீள் நிலத்து முத்தமிழை முழக்கிடவே - நீண்ட இவ்வுலகில் முத்தமிழாம் தந்தமிழைப் பரப்பிட,

தொல்லையில் சீரளித்து - முன்னவன் பின், பின்னவனென்ற உரிமை நல்கி வேண்டும் அருளளித்து,

சுப்பையா கருத்தெலாம் - தன் பெயர் கொண்ட தலைவனாகிய திரு காசிவிசுவநாதனென்பாரின் கீழ் அமைச்சராயமர்த்திச் சுப்பையா வென்ற கழக அமைச்சரின் நினைவு முழுமையும்,

கன்னித் தமிழதுவே கலித்திடத்தான் திண்மையாந் திருவளித்து - தன் மொழியாகிய தமிழ்மொழி பெருகிட, புகழுடன் மீண்டும் நிலைத்திட வலிமையுடைய நின்கருணையை நல்கி,

தருக்குடனே தன்கழகஞ் சிறந்திடவே - ஊக்க மிகுதியுடன் நின் கழகம் உழைத்துப் புகழுடன் விளங்கிட,

அருளளித்த அம்பலவா - அருள் நல்கிய அம்பலவாணராம் அம்மையப்பராம் நெல்லைத் திருவே,

ஒல்லையுடை யுன் புகழாந் தைத் தலைநாளில் - ஒலிக்குறிப்புடைய உன்புகழாமித் தமிழக விழாநாளாம் தைத் துவக்க நாளில்,

நிருவளிக்க - தமிழர் கழகமாகிய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகக் குரயர்தலைவர் கூட்டணி, பேரவை முழுமையும் நீள்வாழ்வுடன் வாழ்ந்து நின்மொழிக்காய் ஆற்றும் பணியது ஆற்றிட,

தமிழகத்து மன்றுளாடும் - தமிழகமாகிய தன் நாட்டில் உனக்காக நிறுவியிருக்குந் திருக்கோயிலிற் கண்ணமை திருவோலக்கத்தாடும்

மணியே ! - கண்ணின்மணி போன்றவனே !

மருவணியும் நின்மலரடிகள் - மருவென்ற நறுமணப்புல்லை நின்னை வழிபடும் நின்னடியார் சூட்டுகின்ற மலரடிகளாகிய நின்திருவடியை,

மணத்திடவே

நின்னடிமை மறைமலையேன் மன்றுதலே - நின்னடிமையாகிய தூலவுடலுடன் பல்லாவரத்தில் நின் திருவுருவையே கண்டு களித்தவனாகிய தமிழன் மறைமலை அன்பு மலரிட்டு இறைஞ்சுகின்றேன். (உ)

மறைமலையடிகள்
நெல்லை.

திருவருட்டுணை சிறந்திடத் தகையுடன் சென்னைத் தகைப்பில் வாழ் எம்மன்பிற்குரிய, நெல்லை சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழக அமைச்சராந் திரு. சுப்பையா பிள்ளை அவர்களே !

தமிழர் திருநாள் ; தைப்பெருநாள் ; சார்வரித் தைத் தலைநாளாமிச்சிறப்புடைச் சங்கரன விழாவில், தம்மில்லில் எம்மகள் மங்கை ஆக்கும் ஆக்கப் பொங்கலின்பால் பழந்தமிழ்ப் பண்ணொலி யெழுப்பியே பொங்குக ! பால் பொங்குக ! என்றுமே ! பொங்குகவெனவும், பாங்குடன் தம்மில்லறஞ் சிறந்திட அருளவும், ஊழிமுதற் சிந்தாத நன்மணி அம்மை அம்பலவாணர் அருளடி அன்பிடை அண்டியே ந்சுவம்.

அன்பன்,
மறைமலை அடிகள்
நெல்லை.

சார்வரி,
தை. க.

# அரனே அருள்க

வாரிய குரும்பை வண்ணம் வாய்த்த
வண்டமிழ் நாட்டு வண்ணத் தெங்குடைச்
சோலைத் தென்னவன் தொல்புகழ் நெல்லைப்
பெரும்பதி பேணும் பேரருட் சிவனார்
உமையின் உள்ளக் குறிப்பிடை யெழுப்பிய
எண்டிசை முழக்கும் இன்றமிழ் தழைக்க
இயக்கிய 'இயக்காம் திருநெல்வேலிச் சைவ
சித்தாந்த நூற்பதிப்புக் கழகக் காவின்
கனிகொள் கன்னித் தமிழின் மென்வள
மறியும் கருத்துடை, சென்னைக் கிளையுறு
கழகக் குரவ! தலைவ! அறிமின்!
உதுக்காண்! உதுக்காண்! கண்டு மகிழ்மின்!
எதுக்காணென்ன நினையின் கதிர்மணிக் கழறல்
இன்றமிழ் நாட்டு ஏதமில் அரனார்
உமையவள் உள்ளக் களிப்பிடை உழுதுண்
கையரின் உறுவளம் உற்றருள உவந்திடும்
நற்றமிழ் நாட்டுப் பொங்கல் நன்னா
ளிதுவென, உவமையில் பருதி யொளியது
காட்டுந் "தை"இத் திங்கட் டலைநாள்
அன்பும் மடனுஞ் சாயலும் இயல்பும்
என்பும் நெகிழ்க்குங் கிளவியும் பிறவும்
ஒன்றுபடு கொள்கை ஓராங்கு முயங்கும்
முத்தமிழ் முறுவல் கொழிக்குங் கன்னித்
தமிழகக் கற்புடை மங்கல மகளிர்
விடியல் வந்த வெள்ளத் திறங்கிப்
பூப்புனை புயலென ஒலிவருந் தாழிருங்
கூந்தல், செறிதொடி முன்கை யணைந்திட
மூழ்கி, மாசில் மணப்பொடி மஞ்சள்
திளைந்து, மாசகல் மேனி மிளிரத்
தண்டமிழ் நாட்டுத் தண்புன லாடி,
மட்குட நன்னீர் துளும்பத் தம்மனை
யேகி, செந்தமிழ் நாட்டுச் சேணியர்
செய்திறன் கலைவளங் காட்டும் புதினக்
கலிங்கம தணிந்து, விரிகுழல் பொருந்திடப்
புனைந்து, வண்டமிழ் நாட்டு வண்ண
நறுமலர் சூடி' பிறைநுதல் மங்கலக்
குங்குமந் தரித்து, பொன்னணி பூண்டு,
கொண்டவர் கருத்துளங் களித்துக் குழைந்திட
நன்மனை முதியவர் நற்றமிழ் கூறி

# ஓம் சக்தி

ஓர்ப்புடைத் தமிழகமே! ஒளியுடைத் தமிழே! வாழ்க!

ஒளிவளர் தமிழை உலகம் உவந்திடத் தம்பணியாற்றும் நெல்லை நகர் வளர் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத் தந்திரி!

அன்னை பராசக்தி அருள்வளச் சிறப்பால் செந்தமிழ் போற்றும் வாய்ப்புக் கிட்டியமை கருத்திற் பொருத்துக! தெள்தமிழுரைத்த சேக்கிழார்! வலிவுடை அறநெறி காட்டிய வள்ளுவர்! கருத்தீர் கவிநயங் காட்டிய கல்விக் கோமான் கம்பன்! வாழ்ந்த தாய்த்தமிழ் நாட்டில் வாழ்கின்றீர்.

தமிழகஞ் சிறக்க, தமிழ்மொழி போற்றும் பண்பது பெருகிட, தமிழர் தன்வலி காத்திட, நன்மொழித் தூய்மை எழுகடல் கடந்து உயர்நிலை நாட்டிட, தமிழன்னையின் அடிமை யறுத்து அன்னாள் சுதந்திரப் புள்ளாய்த் தமிழ்க்கொடி தாங்கி உலகெங்கணும் உல்லாசப் பவனிவர உழைத்தல் உம் கடனென உமக்கு உணர்வூட்டி அருளிட, உழவர் களித்திடும் உழவரின் குடிமை உயர்ந்திடும் தாய்த்திருநாட்டின், தமிழகத் தைப்பொங்கல் பொங்கொளி நன்னாள் சார்வரி தை முதல்நாளின்றென அறிந்தே, பாரதி அன்னை பராசக்தியின் அருளடி பணிந்தேன்.

நம்மொழிச் சிறப்பே வாழ்க! தமிழே வாழ்க! தமிழகம் வாழ்கவெனக் கும்பிடடி பாப்பா! என விரும்பும்,

சார்வரி. தை க-ஆம்நாள்]

சுப்பிரமணியபாரதி.

## செவ்வேள் துணை

செந்தமிழ் வளர்க்குஞ் சிவவேள் சிறப்புடை அருளால் செந்தமிழ் மொழியது சிறப்புற்ற செந்தமிழ் நாட்டுப் பெருநிலத்து அவ்வேளருளுடை அருந்தமிழ்மொழி பேணும் ஆறு படைவீடுடையான் கோயில் கொண்டெழுந்தருளும் தனித்தமிழகத்து வளர்கின்ற திருநெல்வேலி சைவசித்தாந்த நூற்பதிப்புத் தமிழர் கழக அமைச்ச!

தம் கழகக் கருத்தெல்லாம் கன்னித் தமிழ் கவினிடைக் காண்பார் களிக்க, கேட்பார் வியக்க, தென்தமிழ்மொழியாய தேமொழி சிறப்புற உழைத்திட, உம்மனோருலகில் தமிழராந் தனி இனம் திருவருள் போற்றிக் களிப்படை இச் சார்வரி தை முதல் நாளில் எல்லா நலனு மளித்து இன்புடன் தொண்டாற்ற அருள்சுரக்க, அருவமும் உருவமும் ஆகி அனாதியாய்ப் பலவாய் ஒன்றாய்ப் பிரமமாய் நிற்குஞ் செவ்வேள் சிறப்புடன் போற்றுவோம். செம்மொழிச் செந்தமிழ்த் தேமொழி வாழ்க! கழகம் வாழ்க! தமிழகம் தழைக்கத் தம்பணி வாழ்க.

அன்பன்,

சார்வரி, தை க.]

ஞானியாரடிகள், நெல்லை.

வாழ்த்த, தம்மனைத் தலையில் திருவுருக்
காட்டுந் திருவிளக் கேற்றிச் சங்கரன்
திருவுருச் சமைத்துப் பக்கலிற் பொருத்தி,
வெண்ணிறக் கோல மெழுதி, வெண்மை
நறுமலர் சூட்டி, அவ்விடைத் தம்முயிர்
மங்கலச் சரட்டில் மலரது பொருத்தி,
தம்மவர் உயரிய உழைப்பின் வளப்பொருள்
பலபல படைத்து, வல்லியர் வாழ்த்த
வைகறை நல்கதிர் ; மணிக்கதிர்த் தாளரி
கீண்புக் கவினுயப் பக்கலில் நிறுத்தி,
மண்ணக மடந்தையர் மண்பொருள் தான்பிணைந்
திறுக்கிய பரணிய தமைத்து, மங்கலப்
பொருட்கள் பின்னிய பொன்இழைச் சரடது
இறுக்கிய புதுமை மட்கல மேத்தி,
தெளிக்குந் திறமுடை நெல்மணி நல்லரி
நன்னீர் பிணைந்து, அந்நீர் கலமதி
லாக்கிச்செந் தீயிட்டுச் சாறுதல் கண்டு,
களிப்புடன் கெக்கலி காட்டிக் காணீர்
காணீர் ! பொங்கும் பாலது காணீர் !
என்னக் குரவை முழக்கி, நல்லரி
இட்டு வெண்ணமு தாக்கி, பக்கல்
பரணில் பாலுந் தேனுங் கலந்த
வெல்லத் திரளின் இன்னமு தாக்கித்
திருமுன் னிறக்கி, அருச்சனை புரிய,
தம்மில் பெரியோர் மக்கள் தாளுறப்
பணிந்து இவ்வள மென்றுந் தமிழகந்
தழைத்திட அருளென வேண்டுஞ் சங்கரன்
திருநாள் தைஇப் பொங்கல் பெருநாள்
இதுவென அறிதற் பொருட்டே அன்பன்
கதிரேசப் புலவன் உதுக்காண் ! உதுக்காண் !
எனவு ரைத்தமை எதுவென அறிமின்.

எம்மன் பிற்குரிய கழகக்குரவராந் திரு. சுப்பையாபிள்ளையவர்களே!

"தை"ச் சங்கரன் திருநாள் விழாவில், தம்மில்லில் இன்புறு இல்லக்கிழத்தி இன்னுடனுக்கும் தைப் பொங்கல் "பால்" பொங்குக! பொங்குக! வெனவே, பல்லாண்டு ஆக்கம் பெருகிடப் பொன்னம்பலத் தரசன் பொற்றுள் வேண்டுவம், தாமறி தமிழ்க் கிழடு.

1136 தை க.
திருநெல்வேலி நகர்.

மு. கதிரேசன்.

# நான் கண்ட செய்கோன்

[திரு. சித. அழகப்பன், செய்கோன்]

(செல்வி சிலம்பு, ௯௫, பரல் ௫, ௨௧௧ ஆம் பக்கத் தொடர்ச்சி)

இங்கு ஆணும் பெண்ணும் அழகாக எழுதுகிறார்கள். அவர்கள் எழுத்து மிகமிகப் போற்றத்தக்கதாக இருக்கிறது. காலையில் பெண்கள் தங்களை அழகு செய்து கொண்டு காய்கறிச் சந்தைக்குச் சென்று வரும் காட்சி அருமையாக விருக்கிறது. யாருமே பார்வைக்கு அழகில்லாமல் தோன்ற மாட்டார்கள். அவ்வளவு நல்ல முறையில் உடையணிந்து கொள்ளுகிறார்கள்.

இவ்வழகிய நகரில் பெரிய பூந்தோட்டம் சிறிய பூந்தோட்டம் என்று சொல்லப்படுகிற நந்தவனங்கள் இரண்டு உள்ளன. அவற்றுள் சிறிய பூந்தோட்டம் நகரின் நடுப்பகுதியில் உயர்ந்து வளர்ந்த மரங்களாலும் அடர்ந்து நீண்ட செடிகொடிகளாலும் பசும்புற்றரைகளாலும் நீர் நிலையங்களாலும் செழுமையும் குளுமையும் பெற்று மனமகிழ்ச்சிப் பூங்காவாக அமைந்திருக்கிறது. அப்பூங்காவிற்கு உபமானம்கூற வேண்டுமாயின். கம்பர் கூறிய அசோகவனத்தைத் தான் சொல்ல வேண்டும்.

"வேலையுள் இலங்கை என்னும்
விரிநகர் ஒருசார் விண்தோய்.
காலையும் மாலை தானும்
இல்லதோர் கனகக் கற்பச்,
சோலையங் கதனி னும்பி
புல்லினாற் றொடுத்த தூய,
சாலையி னிருந்தா ளைய
தவம்செய்த தவமாம் தையல்"

என்பது கம்பர்பாட்டு. அந்தத் தவமே தவமிருந்து பெற்ற தையலாகிய சீதாபிராட்டி சிறையிருந்த அசோகவனத்துக்கு ஒப்பான காலை நேரமா மாலை நேரமா என்று அறிய முடியாத அழகிய கற்பகப்பூஞ்சோலையிற் புகுந்து இதயம் கலந்து இன்மொழி பேசுகின்ற இளம் தம்பதிகளின் இன்ப எண்ணங்களை அத்தகைய எண்ணமில்லாதவர்கள் அறிய முடியாது.

பெரிய பூந்தோட்டம் நகரின் புறப்பகுதியில் ஆற்றங் கரையினில் அமைந்துள்ளது. அங்கும் செழுமையான செடி கொடிகளும் வான் நோக்கி வளரும் மரங்களும் பெரிய நீர்த்தடாகமும்

பல விதமான விலங்குகளும் பறவைகளும் பாம்புகளும் காட்சிப் பொருள்களாக வைத்து வளர்க்கப்பட்டு வருகின்றன. இரண்டு பெரிய கட்டடங்கள் கட்டப் பெற்றிருக்கின்றன. அவற்றுள் ஒன்று பழம்பெரு வரலாற்றுப் பொருள்களைக் காட்சிப்பொருள்களாக தன்னகத்தே கொண்டுள்ளது. அதில் வியத்நாமிய அரசரின் ஆடை அணிகலன்களும் உடைவாள் முதலிய ஆயுதங்களும் காணப்படுவதோடு தென்இந்தியக் கலைப் பொருள்களும் சைவ, வைணவக்கோயில்களில் உள்ள தெய்வச் சிலைகளில் சிவலிங்கம், விஷ்ணு, விநாயகர், உமாதேவி, மகாலெட்சுமி, துவாரபாலகர்கள் முதலான கற்சிலைகளும் காணக் கிடைக்கின்றன. அரிச்சந்திர மன்னன் காட்டு வாழ்க்கை நடத்தியது இப்பகுதியில்தான் என்று இங்குள்ள இரண்டு கல்வெட்டுக்களால் அறிய முடிகிறது. இந்தச் சிலைகளெல்லாம் இப்பகுதிகளில் நிலத்திலிருந்து எடுக்கப்பட்டதாக அதனதன் அடியில் பொறித்து வைத்திருக்கிறார்கள் அது பிரெஞ்சுமொழியில் எழுதப்பட்டிருக்கிறது.

இந்த நாடு புத்த சமயத்தைச் சார்ந்த நாடு என்றாலும் இதை ஆண்டவர்கள் கிறித்துவ சமயத்தைச் சார்ந்தவர்களாக இருந்ததால் நகரின் நடுவில் மிகப்பெரிய மாதாகோயில் ஒன்று கட்டுவித்தும் இன்னும் பல பெரிய சிறிய மாதா கோயில்களையும் கட்டியிருப்பதோடு இந்நாட்டு மக்களில் பலரையும் கிறித்துவ சமயத்தவர்களாக மாற்றியிருக்கிறார்கள். இப்பொழுதும் கிறித்துவ சமயவாதிகள் தாம் இந்நாட்டின் ஆட்சிப் பீடத்தை அலங்கரிக்கிறார்கள். அந்தச் சமயத்தைச் சார்ந்த மக்களுக்குப் பெருமையும் கொடுத்து வருகிறார்கள். புத்தர் கோயில்கள் புறத்தே காணப்பட்டாலும் அவ்வளவு சிறப்புடையதாகச் சொல்வதற்கில்லை. இரண்டொரு கோயில்கள் அண்மைக்காலத்தில் நல்ல முறையிலே அழகாகக் கட்டப் பெற்றுச் சிறப்பாக நடை பெற்று வருகின்றன. தியாஸாபிகல் சொசைட்டி ஒன்று நல்ல முறையில் பணிபுரிந்து வருகிறது. அதன் தலைவராக இருப்பவர் ஒரு வியத்நாமியப் பெண்மணி. அவ்வம்மையார், சென்னை சென்று அடையாற்றிலுள்ள தியாஸாபிகல் சொசைட்டியில் ஓராண்டுக் காலம் இருந்திருக்கிறார்கள். புத்தர் கோயில் நிர்வாகிகளும் சொசைட்டியின் நிர்வாகிகளும் சமய பேதமில்லாத மனப்பான்மையுடையவர்களாக இருப்பதோடு இந்தியாவிலிருந்து வருகிற பெரிய அறிவாளிகளை எல்லாம் வரவேற்றுப்போற்றி அவர்கள் கோயிலிலும் சொசைட்டியிலும் நல்லுரை நவிலச் செய்கிறார்கள். இந்தியாவினிடத்தில் பெருமதிப்பு வைத்துள்ளார்கள். புத்தரைப்பெற்ற நாடு இந்தியா என்பதால் பாரதத்தின் பெருமை

உயர்ந்

இங்கு சீனர்களின் கோயில்கள் பல உள்ளன. அவைகள் நன்கு நடைபெற்று வருகின்றன. முஸ்லிம்களால் கட்டப்பெற்ற பெரிய மசூதி ஒன்றும் சிறிய மசூதி ஒன்றும் நல்ல முறையில் நிர்வகிக்கப்பட்டு வருகிறது. நாட்டுக் கோட்டைச் செட்டியார்களால் சுமார் எண்பது ஆண்டுகளுக்கு முன்பு மிக அழகாகக் கட்டப் பெற்ற தண்டாயுதபாணி கோயில் சீரிய முறையில் கண்காணிக்கப் பெற்று தமிழ்நாட்டுப் பண்பு சிறிதும் வழுவாது பூசைகள் நடைபெறுவதோடு திருவிழாக்களும் சிறப்பான முறையில் கொண்டாடப்பெற்று வருகின்றன. சுமார் 30 ஆண்டுகளுக்கு முன்பு செட்டிமார் நாட்டிலிருந்து செய்து கொண்டுவரப் பட்ட பெரிய வெள்ளி இரதத்தில் ஆண்டுதோறும் தைப்பூசவிழாவிற்கு சுவாமி நகர்வலம் வருவது நலந்தரும் காட்சியாகும்,

சுப்பிரமணியர் கோயில் என்னும் ஒன்றும் உண்டு. அதுவும் மாரியம்மன் கோயிலும் தமிழர்களால் பல ஆண்டுகளுக்கு முன்பு கட்டப்பெற்றது. சில ஆண்டுகளுக்கு முன்பு சுப்பிரமணியர் கோயில் புதுப்பிக்கப் பெற்றிருக்கிறது. மாரியம்மன் கோயில் 1960ஆம் வருடத்தில் முற்றும் புதுப்பிக்கப்பெற்று தமிழ் நாட்டிலிருந்து வரவழைக்கப்பெற்ற சிற்பிகளால் உயர்ந்த முறையில் அடித்தளம் முதல் பெரிய கோபுரம் வரையில் கட்டப்பெற்றுச் சிறப்பாகக் குடமுழுக்கும் செய்யப் பெற்றிருக்கிறது. இரண்டு கோயில்களிலும் நாள்வழிபாடுகள் நடைபெற்று வருவதோடு மகார் நோன்பு, பங்குனி உத்தரத் திருவிழாக்களும் மேலான முறையில் நடைபெற்று வருகின்றன. தண்டாயுதபாணிகோயில், சுப்பிரமணியர் கோயில், மகாமாரியம்மன் கோயில் இவற்றுள் சென்றிருக்கும்பொழுது தமிழ் நாட்டிலே இருப்பதாகத்தான் தோன்றுகிறதே தவிர வெளி நாட்டிலிருப்பதாகத் தோன்றுவதில்லை. அவ்வளவு நல்ல முறையில் அமைந்திருப்பது தமிழர்கள் எல்லோரும் பெருமைப்படக் கூடியதாகும்.

சிந்திக்காரர்களுக்கும் சீக்கியர்களுக்கும். தனித்தனியே "குருநானக்" கோயில்கள் உண்டு.

இங்குவாழும் இந்தியர்கள் ஐந்து பிரிவினரும் தனித் தனி சங்கங்கள் வைத்துக் கொண்டிருக்கிறார்கள். அவைகளாவன முஸ்லிம்கள் சங்கம், இந்தோ சைனு நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் சங்கம், தமிழ் ஜன சங்கம், பாம்பே பட்டு வியாபாரிகள் சங்கம், சீக்கியர்கள் சங்கம், இவற்றுள் கட்டுப்பாடும் ஒழுங்கும் ஒற்றுமையும் கொண்டது நாட்டுக் கோட்டைச் செட்டியார்கள் சங்கம். இவ்வைந்து சங்கத்தினரும் சேர்ந்து இந்தியப் பொதுச் சங்கம் என ஒன்று நிறுவியிருந்தார்கள். ஒற்றுமைக் குறைவின் காரணமாக அச்சங்கம் கலைந்து போயிற்று.

இந்தியாவிலும் இலங்கையிலும் மலேயாவிலுமிருந்து வருகிற அறிவு நிறைந்த பெரியோர்களையும் ஞானிகளையும வரவேற்று நல்லுரை பகரச்செய்யும் நற்பணியில் இவ்விரண்டு சங்கத்தாரும் நற்றொண்டு புரிந்து வருவது போற்றுதற்குரியதாகும்.

தேமதுரத்தமிழோசை உலகமெலாம் பரவும் வகைசெய்தல் வேண்டும். என்று கூறிய பாரதியாரின் வாக்குப்படி நாட்டுக் கோட்டைச் செட்டியார்கள் சங்கத்தாரும் தமிழ் ஜன சங்கத் தாரும் தமிழ் அறிஞர்களின் சொற்பொழிவுகளை இரண்டுகோயில் களிலும் நடைபெறச் செய்து வருகிறார்கள். சிறப்பாகத் தமிழ் ஜன சங்கத்தார், தமிழ்மறை தந்த பெரியார் திருவள்ளுவருக்கு உயர்ந்த முறையில் ஆண்டுதோறும் விழாக் கொண்டாடிவருவது தமிழ் நாட்டுக்கே பெருமை தருவதாகும்.

அண்ணல் காந்தியடிகளுக்கு நிறுவிய நினைவுச் சின்னம் இந்தியர்களின் ஒற்றுமைக் குறைவினால் கண்ணியமான முறை யில் அமையப் பெறவில்லை, என்பது மிகமிக வருந்துதற்குரிய தாகும். யாராவது ஒரு நல்ல மனிதர் இதில் தலையிட்டுச் சிறந்த முறையில் அமையச் செய்தால் அவர்களுக்குக் கோடி புண்ணிய முண்டாகும்.

கடல், வான் வழியாகச் சர்வதேசங்களுடனும் இணைந்து நிற்கின்ற துறைமுகப்பட்டினம் சைகோன். பல நாட்டுப் பொருள்களும் இங்கு வந்து இறக்குமதியாகின்றன என்றாலும் குறிப்பாக முன்பு பிரஞ்சு சாமான்களே மிகுந்து இறக்குமதி யாகிவந்தன. இப்பொழுது அமெரிக்கச் சாமான்களும் ஜப்பான் சாமான்களும் அதிகமாக இறக்குமதியாகின்றன. அமெரிக்கப் பொருளாதார உதவிபெறும் நாடாகையால் அவ் வமெரிக்க உதவிபெறும் நாடுகளிலிருந்தும் இறக்குமதிப் பொருள்கள் வரு கின்றன. இந்நாட்டில் பெரிய தொழிற்சாலைகள் எதுவும் இல்லை சிறு கைத்தொழில்கள் குடிசைத்தொழில்களாக வளர்ந்து காணப்படுகின்றன. அவைகள் பெரும்பாலும் சீனர்களின் தொழில்களாகத்தான் இருக்கின்றன. வியத்நாமியர்கள் பயிர்த் தொழிலாளர்களாகவும் பெரிய சிறிய வணிகர்களாகவும் இருந்து வருகிறார்கள். சீனர்களும் வணிகர்களாகவும் இறக்குமதி ஏற்று மதி செய்பவர்களாகவு மிருக்கிறார்கள். அந்நிய ஆட்சியிலே தூங்கிக் கொண்டிருந்த வியத்நாமியர்கள் இப்பொழுது விழித்துக் கொண்டு எல்லாத் துறைகளிலும் முன்னேறி வருகிறார்கள். வணிக நிலையங்களும் உணவு விடுதிகளும் மிக அழகிய கட்டடங் களில் தூய்மையான முறையில் கண்கவர் வனப்புடன் காணப் படுகின்றன. சீனர்களின் வீடுகளோ அவர்கள் வசிக்கும் பகுதி களோ அவ்வளவு சுத்தமாக இல்லை.

வியத்நாமிய மக்கள் நாள்தோறுஞ் செய்தித்தாள் படிப்பதில் மிக விருப்பமுள்ளவர்கள். அன்றாடக் கூலிவேலை பார்ப்பவர்களும் காசு கொடுத்துப் பத்திரிகை வாங்கிப்படிக்கிறார்கள். யாரும் ஓசி வாங்கிப்படிப்பதில்லை. இரண்டு வெள்ளி கொடுத்துத் தினத்தாள் வாங்கிப் பார்த்துவிட்டுத் தாள்விலைக்கு (ஒரு வெள்ளிக்கு) விற்று விடுபவர்களும் உண்டு. தமிழ் நாட்டுக்காரர்கள் இந்நாட்டு நாணயத்தை வெள்ளி என்று சொல்லுகிறார்கள். இப் பழக்கம் மலாயாவை ஒட்டிவந்ததென்று தெரிகிறது. இராணுவம், கடற்படை, விமானப்படை வளர்ச்சியால் இந்நாடு பாதுகாக்கப்பட்டு வருகிறது. பொதுவுடைமையை மிகத் தீவிரமாக எதிர்க்கும் நாடுகளில் இதுவும் ஒன்று. பொதுவுடைமை பரவவிடாமல் தடுப்பதற்காக அமெரிக்கர்கள் இங்கு அரசியல் இராணுவ ஆலோசகர்களாக இருந்து நல்ல உதவி புரிந்து வருகிறார்கள். பொதுவுடைமை பரவ விடாமல் தடுக்க வேண்டியது மிகமிக இன்றியமையாததாகும் என்பதுவே எனக்கும் உடன்பாடாகும். பொதுவுடைமை மிகக் கொடுமையானது என்பதை நுண்ணறிவாளர்கள் உணரமுடியும். பொதுவுடைமைக்காரர்கள் இனிமையாகப் பேசுகிறார்கள் இணக்கமாகச் செயல்பட விரும்புகிறார்கள் என்று சிலர் நினைக்கலாம். அது வெறும் பசப்பு மொழி என்பதை நடைமுறையில் அறிந்து கொண்டோம். சீன இந்திய எல்லையில் நடந்து கொள்வதையும், ருஷ்யா சர்வதேச அரங்கில் செயல்படுவதையும் பார்த்தாலே இது புரியும். பொதுவுடைமைக்காரர்கள் எப்படிப் பட்டவர்கள் என்று சொல்ல வேண்டுமானால் வள்ளுவர் பெருமான் கூறிய,

"மக்களே போல்வர் கயவர் அவரன்ன
ஒப்பாரி யாங்கண்ட தில்"

என்னும் ஒரு குறளே சான்று தரும்.

ஆசியப் பண்பிலே வாழ்ந்த வியத்நாமிய மக்களை ஐரோப்பிய நாகரிகத்திலே வாழச் செய்தவர்கள் பிரெஞ்சுக்காரர்கள். இப் பூலோகத்திலே போகபூமி என்று சொல்லப்படுவது பாரிஸ் நகரம், அந்நகரின் பழக்க வழக்கங்கள் இங்கும் பரவி நிற்பதால் இன்பம் அநுபவிப்பதற்கு, இதுவும் ஓர் இந்திரலோகமாகக் காட்சிதருகிறது.

"தாம்வீழ்வார் மென்றோள் துயிலின் இனிதுகொல்,
தாமரைக் கண்ணான் உலகு"

"குற்றங் களைந்து குறைபெய்து வாசித்தல்
கற்றவர்கட் குள்ள கடன்."

# "பாரதம் இராமாயணம் வாசிப்பதற்கு அளிக்கப்பெற்ற நிவந்தம்"

[புலவர், திரு. ச. கணபதிராமன்]

அறமும் மறமும் செறிந்த தமிழகத்தில் அறவாழ்வே சிறப்பாகக் கருதப்பட்டது. மறங்காட்டிப் போர் செய்வதிலும் அறம் பிழையா முறையே கடைப்பிடிக்கப்பட்டது. மறத்திலும் அறங் காட்டிய தமிழர், தங்களின் வாழ்க்கைத் திறத்திலும் அறத்தினைக் கண்ணெனக் கருதி வந்தனர். வாழ்வில் அறஞ்சான்ற புகழ் வருமெனில் உயிரும் கொடுப்பர். பழியெனின் உலகம் கிட்டினும் வெட்டெனத் துறப்பர் என்று பூவேந்தரும் பாவேந்தருமான இளம்பெரும் வழுதி இயம்புகின்றார்,[1] கொலை கடிந்தும், களவு நீக்கியும், அமரர் பேணியும், ஆவுதி அருத்தியும் நல்லானொடு பகடு ஓம்பியும், நான்மறையோர் புகழ் பரப்பியும் பண்ணியம் அட்டியும் பசும்பதம் கொடுத்தும், புண்ணியம் முட்டாத் தண்நிழல் வாழ்வு வாழ்ந்தனர் அன்றைய தமிழ் மக்கள்.[2] சீரும் சிறப்பும் பெற்று வாழ்ந்த செந்தமிழர், ஏரும் எழுத்தாணியும் தங்களின் இரு கண்களெனக் கொண்டனர். உழுதுண்டு உயர்வாழ்வு வாழ்ந்தனர். உலகத்தைத் திருத்த உரை வளம் சான்ற நூல்கள் யாத்தளித்தனர்.

மன்னனும் நெறி வழுவாது செங்கோல் கோடாது செம்மையாக ஆண்டான். மன்னனின் ஆட்சிச் சிறப்பால் உரியகாலத்தில் மழை பொழியும். மான்கள் காட்டில் துள்ளியோடிப் பிணையுடன் குலவும். பறவைகளும் வண்டுகளும் பண்பாடிப் பறந்து செல்லும் என்று பதிற்றுப்பத்து பகர்கிறது. மன்னனும் குடிகளும் உளங்கலந்து ஒருவரை யொருவர் நன்கறிந்து வாழ்ந்தனர். அறநெறி வழுவாது அரசன் ஆண்டான். அறம் பிழைத்ததற்காக தன்னுயிரையே போக்கிக் கொண்டான் ஒரு தமிழ் மன்னன்.[3] மகன் தவறு இழைத்தான். அதனால் வெட்டி வீழ்த்தப்பட்டான் என்ற செய்தி மாற்றரசர் செவியில் விழுமுன்னே அப்பிணத்தை அடக்கம் பண்ணுக என்று ஆணையிட்டான் மற்றுமோர் தமிழ்மன்னன்.[4] தமிழக வேந்தர்களின் நெறிவழுவா ஆட்சியினை வேற்று நாட்டு அறிஞர்களும் வியந்து பாராட்டினர்.[5]

1. புறநானூறு, 182. 2. பட்டினப்பாலை, 199 - 201.

3. சிலப்பதிகாரம்.

4. மணிமேகலை, சி

5. Foreign notices of South India (Marco-polo) page. 169 by K. A. Nilakanda Sastri.

மன்னனும் மக்களும் செம்மையான வாழ்வுவாழப் புலவர் பெருமக்கள் அவ்வப்போது அறமுரைத்தனர். அறநூல்கள் யாத்து அறம் பிழைத்த மக்களுக்கு அறம் கூறி வாழவைத்தனர். மக்களைத் திருத்தவும், மக்களை முன்னேற்றவும், மக்களை மக்களாக வாழச் செய்யவும் தமிழில் எழுந்த நூல்கள் பலப்பல. அவைகளில் தலைமையானது திருக்குறள். திருக்குறளைப் பின்பற்றி, இன்னா நாற்பது, இனியவை நாற்பது, திரிகடுகம், ஆசாரக்கோவை, அறநெறிச்சாரம், கைந்நிலை முதலிய நூல்கள் எழுந்தன. இளமையிலே சிறுவர்களுக்கு அறநெறியினை உணரவைத்திட ஆத்திசூடியும் கொன்றைவேந்தனும் எழுந்தன. இளங்குழந்தைகளுக்கு "அறஞ்செய விரும்பு," "ஆறுவது சினம்" என்று எளியநடையில் அமைந்த நூல்கள் பயன்பட்டன. பெரியவர்களுக்கு திருக்குறள், நாலடியார் போன்ற பெருநூல்கள் உறுதுணையாயின. சிறியவர்களுக்கும் பெரியவர்களுக்கும் ஏற்ற முறையில் அமைக்கப்பட்ட இந்நூல்கள்போல் உலகில் வேறு எம்மொழி நூல்களும் இல்லை, என்று கூறியுள்ளார் பேரறிஞர் போப்பையர்[1] திருக்குறளையும் நாலடியாரையும், மன்னர்கள் கற்று அதன்படி வாழ்ந்து அரசியல் நடாத்தினர். திருமலை நாயக்க மன்னன் திருக்குறள் முழுமையும் கற்றுத் தெளிதல் அரிதென்றெண்ணி குமரகுருபரரை திருக்குறளின் சாரத்தைப் பிழிந்து பாடல்கள் புனையச் சொன்னான் என்றும், அதன்படியே அப்பெருமகனும், "நீதிநெறி விளக்கம்" என்ற அறநெறிநூல் யாத்தார் என்றும் ஒரு வரலாறு தமிழகத்தில் வழங்குகிறது. இங்ஙனமே புலவர் பெருமக்கள் அறமுரைத்து அரசர்களையும் மக்களையும் புரந்து வந்தனர்.

மேலும் அறவழியினைக் கதைகளின் மூலமும் மக்களுக்குப் புகட்டினர். கசப்பு மருந்தைக் கொடுக்கும் குழவிக்கு கருப்புக் கட்டியை மேற்பூசிக் கொடுக்குமாறு போல் அறத்தினையும், அறஞ்சான்ற நெறியினையும் மக்களுக்கு எடுத்துரைக்க வரலாறுகளைப் பயன்படுத்தினர். சிலப்பதிகாரம், சிந்தாமணி போன்ற காவியங்கள் சமயத்தைப் போதிக்க ஏற்பட்டதாயினும் நெறியினையும் அறத்தினையும் கூறியுள்ளன. பாரதமும் இராமாயணமும், இம்முறையிலேயே அமைந்துள்ளன. பாரதமும் இராமாயணமும் இந்தியா எங்கணும் தெரிந்த கதைகள். அவைகளில், அறநெறிக் கருத்துக்களும், ஒற்றுமையுணர்வும் அறிவுறுத்தப்பட்டுள்ளன. இவைகள் மக்களுக்கு நன்கு தெரிதல் வேண்டுமென்று கம்பர் பெருமான் கன்னித்தமிழில் இராமாயணத்தை வடித்தார்.

1. இறித்தவத் தமிழ்த்தொண்டர்கள். போப்பையர். by. டாக்டர். ரா. பி. சேதுப்பிள்ளை.

பாரதமும் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டது. இராமாயணத்தையும் பாரதத்தையும் மக்கள் தெரிதல் வேண்டும். அவைகளை அறிந்து உணர்தல் வேண்டும். உணர்ந்து அதன்படி நடக்க வேண்டும்.

இதற்காகத் தமிழக மன்னர்கள், இராமாயணத்தையும், பாரதத்தையும் எடுத்துரைக்கும் புலவர்களுக்கு நிவந்தம் அளித்த செயல்கள் செப்புப் பட்டயங்களாலும் கல்வெட்டுக்களாலும் தெரியவருகின்றன.

கி. பி. 717 முதல் கி. பி. 779 வரை ஆண்ட இரண்டாம் நந்திவர்மன் காலத்தில் எழுதப்பெற்ற தண்டத்தோட்டுப் பட்டயத்தில் "பாரதம் வாசிப்பானுக்குப் பங்கு ஒன்றும்" என்று

எனவே பாரதம் படித்துக் கூறுவோர்களுக்கு நிவந்தம் செய்தி இச் செப்புப் பட்டயத்தாலும்; "திங்களேர்தரு தொங்கல்வெண் குடைக்கீழ்" என்று தொடக்கமுள்ள மெய்க்கீர்த்தியையுடைய முதலாம் ராஜாதி ராஜதேவரின் முப்பதாவது ஆண்டில், பொறிக்கப் பெற்ற, திரிபுவனை[2] என்று இக்காலம் வழங்கப்பெறும் திரிபுவன மாதேவிச் சதுர்ப்பேதி மங்கல வீர நாராயண விண்ணகர் ஆழ்வார் திருக்கோயிலில் உள்ள கல்வெட்டில்," மாபாரதமும் ஸ்ரீராமாயணமும் வாசிப்பான் ஒருவனுக்கு நெல் இருதூணிக்கும்" என்ற கல்வெட்டுப் பகுதியாலும், பாரதம், இராமாயணம் வாசிப்பதற்கு நிவந்தம் அளிக்கப்பட்ட செய்திகள் புலனாகின்றன.

நாட்டை ஆளுவது மட்டுமின்றி,—

மாற்றரசர்களுடன் போரிட்டு வெற்றி பெற்றுத் திகழ்வது மட்டுமின்றி,—

மக்களும் அறத்தினைக் கடைப்பிடிக்க வேண்டும், அதன்படி ஒழுகவேண்டும் என்ற உயரிய எண்ணத்தைத் தமிழக மன்னர்கள் கொண்டிருந்தார்கள் என்பதை உன்ன உள்ளம் உவகையால் பொங்கித் ததும்புகிறதன்றோ ?

1. தண்டத்தோட்டத்துச் செப்பேடுகள். S. I. I; Vol II; Part V; Page 527; Line 198.

2. திரிபுவனை தென்ஆற்காடு மாவட்டத்தில் உள்ளது.

# ஐந்திணைப் பெயர்க்காரணம்

துவான், திரு. சு. குமாரஸ்வாமி ஆச்சாரி, எம். ஏ.]

இவ்வுலகில் முதன்முதல் மக்கள் தோற்றம் மலைப்பகுதியில் ஆதலின், மக்கள் தமக்கு வேண்டிய உணவுப் பொருள்களைச் சேகரிப்பதில் கருத்துடையவராய் வாழ்ந்தனர். பின்னர் காய், கனி முதலிய உணவுகளோடு விலங்குகளை வேட்டையாடிக் கொன்று உணவாகக் கொண்டு வாழ்ந்தனர். பின்னர், மலைப்பகுதியைச் சார்ந்த காடுகளில் வாழத்தொடங்கிய காலத்தில் ஆடுமாடுகளை மேய்த்து, அவற்றால் பயன்கொள்ளும் வாழ்க்கையுடையவராயினர். காடுகளை யடுத்த மருதநிலப் பகுதிகளில் வாழ்ந்த காலத்து, உழவுத்தொழிலே தங்களுக்கு வேண்டுவன—பெறுதற்கு ஏற்றது எனக் கொண்டனர். பல்வகைத் தொழில் வளர்ச்சி ஏற்பட்ட காலத்தில் கடல்கடந்து சென்று பொருளீட்டும் வழக்கம் உடையவராயினர்.

மலைப் பகுதிகளில் வாழத்தொடங்கிய காலத்தில் உணவுப் பொருள்களைப் பயிரிடும் தொழிலை மகளிர் மேற்கொண்டிருந்தனர். ஆடுமாடு மேய்த்தலையும் அவர்கள் மேற்கொண்டனர். இந்தக் காலந்தான் குடும்பம் என ஒன்று தோன்றிய காலம்; காதலனும் காதலியும் பிரியாது ஒருங்கிருந்து வாழவேண்டும் என்னும் கருத்துச் சிறந்து வளர்ந்த காலம்; ஆடவர் தமக்குரிய மனைவி மக்களோடு ஒருங்கு வாழ்ந்த காலம், ஓர் ஆடவன் பல மகளிரை மணம் புரிந்து வாழலாம் என்னும் கொள்கையும் நிலவியது. தந்தைக்குப் பின் தன் தந்தையாரின் காதலியரை மைந்தன் கொள்வதும், தன்னுடன் பிறந்த பெண்களைத் தான் மணம் கொள்வதும் வழக்கமாக இருந்தது. இத்தகைய வாழ்க்கையில் அவர்கட்குத் தோன்றும் சந்ததியார்களெல்லாம் ஒரே குடும்பமாக ஒருங்கு வாழ்ந்தனர். தந்தையே குடும்பத் தலைவன். இத்தகைய வாழ்க்கை வளர்ச்சியினால் ஒவ்வோர் ஊர்க்கும் ஒவ்வொரு தலைவன் அமையும் வழக்கம் உண்டாகியது. இக்காலத்து மக்கள் தம் முன்னோர்களை வழிபடுவதைத் தம் கடமையாகக் கொண்டனர்.

மலைப்பகுதிகளில் வேட்டைத் தொழில் மிகுந்த காலத்தில், மக்கள் தமக்கு வேண்டிய உணவுப் பொருள்களைப் பெற்று வாழ்ந்தனர். நெருப்பின் துணைகொண்டு உணவைப் பக்குவப் படுத்தும் தொழிலைப் பயின்றனர்; கூடை, படகு செய்யப் பயின்றனர்; விலங்குகளின் தோல்களை ஆடையாகக் கொண்டனர். மக்கள் கூட்டம் பெருகியது. ஆகையால், ஒவ்வொரு

குடும்பமும் பல கிளைகளாகப் பிரிந்தன. மீண்டும் அவை ஒவ்வொன்றும் பலவாகப் பிரியத் தொடங்கின. இக்காலத்துத்தான் சமூகம் - இனம் - என்னும் உணர்ச்சி எழுந்தது. ஒரு கிளையினர் மற்றொரு கிளையினுள்ளவர்களை மணந்து கொண்டனர். ஒரு குடும்பத்தைச் சார்ந்ததாக உள்ள கிளைகளைச் சார்ந்தவர்கள் ஒரே தாய் வயிற்றுப் பிறந்த உடன்பிறந்தவர்கள் என்ற எண்ணத்தோடு வாழ்ந்தனர். இக்காலத்து ஒருவன் தன்னுடன் பிறந்த பெண்களை மணம் கொள்ளும் வழக்கம் அருகியது. ஒரு குடும்பத்தைச் சார்ந்தோர் மற்றொரு குடும்பத்தைச் சேர்ந்தவர்களையே மணம் கொண்டனர். ஒருவன் தன் உடன் பிறந்தாளது கணவனோடு உடன் பிறந்தாளை மணக்கும் வழக்கம் ஏற்பட்டது.

மகளிரை மணம் செய்து கொள்ளுதற்குரிய உறவு உடையவர்கள், மணம் செய்து கொள்ளுதற்கு உரிமையில்லாத உறவுடையவர்கள் என ஒவ்வோர் இனத்திலும் பாகுபாடு எழுந்தது. ஒருவன் தன் அத்தை மகளையாவது அம்மான் மகளையாவது மணக்கும் வழக்கம் ஏற்பட்டது. ஒவ்வொருவரும் தன் தந்தையோடு உடன்பிறந்த ஆடவரது புதல்வியர்களையும், தன் தாயோடு உடன்பிறந்த மகளிரது புதல்வியர்களையும் தம் தாய்வயிற்றில் பிறந்தவர்களைப் போலவே கருதி வாழும் நிலை ஏற்பட்டது. நாளடைவில் அம்மான் மகளை மணக்கும் வழக்கம் வலுப்பெற்றது. ஒரு நங்கை தன் கணவனோடு வாழ்ந்திருப்பினும் மணம் செய்து கொள்ளும் உறவுடைய ஆடவரோடு காமப் புணர்ச்சி கொள்வது குற்றமானதாகக் கருதப்படவில்லை. ஒவ்வோர் இனப் பிரிவுக்கும் ஒவ்வொரு தலைவர் வேண்டும் என்னும் உணர்ச்சி மிக்கது. அத்தலைவர் மக்களால் தேர்ந்தெடுக்கப்படுவர்.

ஆடுமாடுகளை மேய்த்தலும், தங்கள் வீட்டுப் புறங்களில் தோட்டங்கள் அமைத்துப் பயிரிடுதலும் ஆகிய தொழில் (முல்லை நிலத்து வாழ்வு) வளர்ந்த காலத்தில் நல்ல உணவுப் பொருள்களைப் பெற்று மகிழ்ச்சியுடன் வாழ்ந்தனர். இக்காலத் தொடக்கம் சுமார் கி. மு. 1,60,000 ஆக இருக்கலாம் எனக் கருதுகின்றனர் ஆராய்ச்சியாளர்கள். அக்காலத்து ஒரே இரத்தக் கலப்பு உள்ளவர்களுக்குள் திருமணம் நிகழ்தல் ஆகாது என்னும் எண்ணம் வலுத்தது. மகளிர்கள் திருமணம் செய்து கொள்வதற்குமுன் காமப் புணர்ச்சி கொள்வதைத் தடை செய்யவில்லை. ஆனால் மணம் செய்துகொண்ட பிறகு தம் கணவரைத்தவிர வேறு ஆடவரோடு காமப் புணர்ச்சி கொள்ளலாகாது எனத் தடை எழுந்தது. ஒருவன் பல மனைவியரைக் கொள்ளும் வழக்கம் இருந்தது. நாளடைவில் ஒருவனுக்கு ஒருத்தி, ஒருத்

திக்கு ஒருவன் என்னும் கட்டுப்பாடு எழுந்தது. இக்கட்டுப் பாட்டிற்குக் காரணம் ஒருவன் ஒருத்தியைப் பாதுகாத்தற்கியலாது வறுமையோடிருப்பதும் பல மகளிரைப் பெற இயலாமையுமேயாம். ஒரு தாய் வயிற்றிற் பிறந்த ஆடவர்கள் தமக்குப் பொதுவாக ஒருத்தியை மணஞ்செய்து கொள்ளும் வழக்கமும் ஒருதாய் வயிற்றிற்பிறந்த மகளிர்கள் அங்ஙனமே தமக்குப் பொதுவாக ஒருவனை மணஞ்செய்து கொள்ளும் வழக்கமும் இருந்தன. உடன் பிறந்தவர்களாகிய மகளிருள் மூத்தவளை ஒருவன் மணம் கொண்டால், அவளது தங்கையர் மணமாகாது இருப்பின் அவர்களையும் அவன் மணந்து கொள்ளலாம். அங்ஙனமே உடன் பிறந்தவர்களாகிய ஆடவர்களுள் மூத்தவன் மனைவியாகக் கொண்டவளை அவனது தம்பியர் தம் மனைவியாகக் கொள்ளலாம். ஒருவன் தன் தமையனது மனைவியரைத் தன் மனைவியராகக் கொள்ளலாமேயன்றித் தன் தம்பியரது மனைவியரை அங்ஙனம் கொள்ளலாகாது என்று கருதியிருந்தனர் அம்மக்கள். அக்காலத்துக் குடும்பங்கள் பற்பல கிளைகளாகப் பிரிந்து வாழ்ந்தன. மக்கள் ஆடல் பாடல்களிலும் விருப்பமுள்ளவர்களாக இருந்தனர். மனிதரைக் கடவுளருக்குப் பலி கொடுக்கும் வழக்கம் எழுந்தது தாய் வழிச் சொத்துரிமை வளர்ச்சியடைந்தது. எனினும் மகளிருக்குக் கற்பொழுக்கம் சிறந்தது என்ற எண்ணம் மிக்கதனால் மகளிர்கள் அடிமைகளாக வாழும்நிலை ஏற்பட்டது. நிலத்தைக் குறிக்கும் முல்லை என்னும் சொல்லுக்குக் 'கற்பு' என்பதோர் பொருளும் உண்டு என்பதனை ஓர்ந்துணர்க. இறந்தவர்களைப் புதைக்கும் வழக்கம் தோன்றியது.

மக்கள் வயல்களும், ஆறுகளும் நிறைந்த பகுதியில் (மருத நிலத்தில்) வாழ்ந்த காலத்தில், மகளிர்கள் தமக்குரியதாகக் கொண்டிருந்த தோட்டவேலைகளை ஆடவர் மேற்கொண்டனர். நிலங்களைப் பண்படுத்தி உணவுப் பொருள்களைப் பயிரிடும் வழக்கம் மிகுந்தது. ஆதலின் ஆடவருக்கு மகளிர் அடங்கி வாழும் காலம் தொடங்கியது. உழவுத்தொழில் வளர்ச்சியினால் வாணிகத் தொழிலும் செழித்தது. கைத்தொழில்கள் தழைத்தன. ஓர் ஊரினர், ஒரு நாட்டினர் என்ற உணர்ச்சி மிக்கெழுந்தது. நாட்டின் பொருளாதாரம் தழைத்தது. நாட்டில் பலவகை வளங்களும் பெருகின. வாணிகம் தழைத்ததால் எழுத்திற்கு வரிவடிவம் தோன்றியது. மட்பாண்டம் செய்தல், நெசவுத் தொழில், கட்டடம் அமைத்தல் முதலிய தொழில்கள் மிகுந்தன. திருமணம் கொள்வது பற்றி, நெருங்கிய இரத்தக் கலப்பு உள்ளவர்களாக இருக்க வேண்டும் என்பது தவிர, வேறு எவ்விதக் கட்டுப்பாடும் இல்லை. ஒருவன் பலரை மணம் கொள்

ளலாம் என்ற வழக்கம் மிகுந்தது. ஒருவன் ஒருத்தியோடு வாழும் வழக்கமும் இருந்தது. பரத்தையர் என்றதோர் கூட்டமும் தோன்றி வளர்ந்தது. ஒருவன் தன் குடியைக் (கோத்திரத்தை)ச் சார்ந்தவர்களை மணம் கொள்ளும் வழக்கம் எழுந்தது. மணம் கொண்ட மகளிர்கள் தம் குடிக்குள் வேறு ஆடவரோடு காமப் புணர்ச்சி கொள்வது குற்றம் எனும் கட்டுப்பாடு அதிகமாக இல்லை. மக்கள் ஆவியுலகம் பற்றியும் மறுபிறப்புப் பற்றியும் நம்பிக்கையுடையவர்களாக வாழ்ந்தனர். மரங்களில் கடவுளை வணங்கினர். பல கடவுளர் வழக்கம் இருப்பினும் கடவுளர் யாவர்க்கும் மேலானதொரு கடவுள் (பரம்பொருள்) உண்டு என்னும் எண்ணம் வலுத்தது. குலதெய்வக் கொள்கையும், தந்தைக்குப்பின் மைந்தனுக்கு உரிமை என்னும் தாயக் கொள்கையும் வளர்ந்தன. சிற்றூர்கள் பேரூர்களாயின. பேரூர்கள் நகரங்களாயின. அரசியல் முறையும் தழைத்தது. நாட்டுப் பற்று மிகுந்தது.

இங்ஙனம், ஒவ்வொரு நிலமாக நோக்கிச் சென்றால், மக்கள் வாழ்க்கை வளர்ச்சியும், நிலத்துக்கும் மக்களுக்கும் உள்ள தொடர்பும் புலனும். மனிதன் தோற்றத்திலிருந்து சமூகமாகக் கூடிவாழும் நிலையை (Social development) இவ்வாறுதான் அடைந்தான் என உயிரியலும், வரலாறும் ஆய்ந்த ஆராய்ச்சியாளர்கள் கூறுகின்றனர். (Sex and Society by F. A. Brook) நம் தமிழ் நாட்டறிஞர்களும் பண்டைக் காலத்தேயே இவ்வுண்மையை—நிலத்திற்கும் மக்கள் வாழ்க்கைக்கும் தொடர்புண்டு என்னும் உண்மையை நன்கு அறிந்திருந்தனர். நம் வாழ்க்கைக்கு வேண்டிய பொருள்களை உணர்த்தப் புகுந்த இலக்கண நூலார் முதல், கரு, உரி எனப் பிரித்திருப்பதே சான்றாகும். முதற் பொருள் நிலமும் காலமும் எனக்கூறி அந்நிலம் முதலில் நால்வகையாக விளங்கியது எனவும், பின்னர் பாலை என ஒன்று கூட்டி நிலம் ஐந்து எனவும் குறித்தனர் முந்தையோர். தனக்கென நிலமில்லாப் பாலைத்திணை ஓர் நிலத்திணைப் பெற்றது. முல்லையும் குறிஞ்சியும் முறைமையின் திரிந்த நிலமே பாலையெனப்பட்டது. இருக்குவேதம் நிலம் ஐந்து வகையாகப் பிரிக்கப்பட்டது என்பதை உணர்த்துகிறது. "பஞ்ச பூமா" "பஞ்ச ஜனா" என வரும் தொடர்களை நோக்குக. நிலம் ஐந்தென உணர்த்தும் இருக்கு வேதத்தைவிட, நிலம் நான்கென உணர்த்தும் தொல்காப்பியம் காலத்தால் முந்தியது என்பதையும் நோக்குக.

'அந்நிலங்கள் முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் எனச் சொல்லிய முறையால் சொல்லவும் படும்' எனக் குறித்தார்

தொல்காப்பியர். நிலங்கள் அப்பெயர்களால் குறிக்கப்படுவானேன்? இவ்வினாவிற்கு விடையிறுக்கின்றார் இளம்பூரணர். "நெல்லொடு நாழிகொண்ட நறுவீமுல்லை அரும்பவிழ் அலரி தூஉய்" (முல்லைப் பாட்டு) என்றமையால் காடுறை யுலகிற்கு முல்லைப் பூச் சிறந்ததாகலானும், "கருங்கோற் குறிஞ்சிப் பூக் கொண்டு பெருந் தேனிழைக்கும் நாடனொடு நட்பே" (குறுந் தொகை) என்றவழி மைவரை யுலகிற்குக் குறிஞ்சிப்பூச் சிறந்தமையானும் "ஆலமுருந்திய சிறுசிரன் மருதின் தாழ்சினை யுறங்குந் தண்டுறை யூரல்" (அகம்) என்றவழி தீம்புனல் உலகிற்கு மருதுசிறந்தமையானும், "பாசடை நிவந்த கணைக்கால் நெய்தல் இனமீனிருங்கழி ஓதம் மல்குதொறும் கயமூழ்கு மகளிர் கண்ணின் மானும்" (குறுந்) என்றவழிப் பெருமணல் உலகிற்கு நெய்தல் சிறந்தமையானும் இந்நிலங்களை இவ்வாறு குறிப்பிட்டார் என்று கொள்ளப்படும். பாலை என்பதற்கு நிலம் இல்லையேனும் வேனிற் காலம்பற்றி வருதலின் அக்காலத்துத் தளிருஞ் சினையும் வாடுதலின்றி நிற்பது பாலை என்பதோர் மரம் உண்டாதலின் அச்சிறப்பு நோக்கிப் பாலை என்று குறிப்பிட்டார். இது இளம் பூரணர் கொள்கை.

இக் கொள்கையினை மறுக்கின்றார் நச்சினார்க்கினியர் "மாயோன் மேய" என்று தொடங்கும் தொல்காப்பியச் சூத்திர வுரையுள் "இவ்வொழுக்கம் நான்கானும் அந்நான்கு நிலத்தையும் நிரனிறை வகையால் கூறப்படும் என்றவாறு. எனவே ஒழுக்கம் நிகழ்தற்கு நிலம் இடமாயிற்று என்பதால் முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என்பன ஒழுக்கம் பற்றி வந்த பெயர்கள் என்பதாம். "இனி இவ்வாறன்றி முல்லை முதலிய பூக்களின் பெயர் பெற்றன இவ்வொழுக்கங்கள் எனின் அவ்வந் நிலங்கட்கு ஏனைப்பூக்களும் உரிய ஆகலின் அவற்றால் பெயர் கூறலும் உரிய எனக் கடாயினாற்கு விடையின்மை அறிக" என்றனர் நச்சினார்க்கினியர். இவ்விருவரது கொள்கைகளுள் எது ஏற்புடைத்து? எனின், ஆய்வாம்.

"கைக்கிளை முதலாப் பெருந்திணை யிறுவாய்" என ஒழுக்கங் குறித்த தொல்காப்பியர் முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என்பன உலகத்தை (நிலத்தை)க் குறித்தன என "மாயோன் மேய" என்ற சூத்திரத்தில் குறிக்கின்றார். அந்நிலங்களுக்குரிய உரிப் பொருளும் கூறுகின்றார். எனவே குறிஞ்சி முதலியன நிலம், ஒழுக்கம் என்னும் இரண்டையும் குறிக்கும் என்பது புலனும். ஒருசொல் பல பொருள்பட வரின், அதற்கு முதன் முதல் உரிய பொருள் ஆராயற் பாலதாம். ஆகவே, குறிஞ்சி முதலியன முதலில் நிலம் குறித்தனவா? ஒழுக்கம் குறித்தனவா?

இச்சொற்கள் முதலில் ஒழுக்கம் குறிக்க எழுந்தனவாயின், பின்னர் ஆகுபெயராக நிலத்தையும், அதன் பின்னர் நிலத்துள்ள பொருளையும் குறித்தனவாதல் வேண்டும். நச்சினார்க்கினியரே "முதல் கரு உரிப் பொருள்" என்ற சூத்திர உரையில் "முதல் கரு உரிப்பொருள் கொண்டே வருதலின் திணையாயிற்று" எனக் கூறுகின்றார். இளம்பூரணரும் "உரிப் பொருளை திணை என உணர்த்துவாராயின் முதற் பொருளும், கருப் பொருளும் திணையாதல் தோன்றுதாம். அவையெல்லாம் அடங்குதற் பொருட்டு முல்லை, குறிஞ்சி, பாலை, மருதம், நெய்தல் என்றார் என்பது" எனக் கூறுகின்றார். எனவே திணை என்னும் சொல் நிலம், பொருள், ஒழுக்கம் எனும் மூன்றையும் குறிக்கும் என்பது புலனும். "வெட்சி தானே குறிஞ்சியது புறனே" வஞ்சி தானே முல்லையது புறனே" எனப் புறத்திணையியலினும் குறிஞ்சி, முல்லை முதலியன ஒழுக்கம் குறித்தலினால் நச்சினார்க்கினியர் இங்ஙனம் கருதினார் போலும் என்க.

, இளம்பூரணர் கொள்கையை ஆய்வாம். இளம்பூரணர் அவ்வந் நிலத்துச் சிறந்து விளங்கிய கருப்பொருள் காரணமாக அவ்வந் நிலங்கள் பெயர் பெற்றன என்றார். மரப்பெயரால் நாட்டின் பெயர் அமைவதுண்டு என்பதனை ஏழ்தெங்க நாடு. ஏழ்பனை நாடு, நாவலந் தீவு என்பன போன்ற வழக்குண்மையின் உணர்க. ஒரு நிலத்து வாழும் மக்கள் ஆங்குக் காணப்படும் பொருள்களையே முதன் முதலில் உணர்வர் என்பதனை நாம் உணர்வோம். யாதாவதோர் இடத்தைச் சுட்டும் போதும் முதலில் ஒரு பொருளைச் சுட்டிக் காட்டியே உணர்த்துவது மரபாம். ஆதலின் முதலில் கருப்பொருள்களை யுணர்ந்த மக்கள் அப்பொருள்கள் தோன்றும் நிலத்துக்குப் பொருள்களால் பெயர் அமைத்தனர் என்பதே அமைவுடைத்தாம். ஒழுக்கம் காரணமாகப் பெயர் அமைந்தன எனலாகாதோ? எனின், ஆகாது. அவர்கள் அவ்வொழுக்கத்துச் சிறந்து, ஒழுக்கம் காரணமாக நிலத்துக்கும், அதன்பின்னர்ப் பொருளுக்கும் பெயரமைத்தனர் எனின் அவர்கள் அத்தகைய உயர்நிலை யடைவதற்கு முன் அப்பொருளை எச்சொல்லால் குறித்தனர்? என்னும் வினாவிற்கு விடையின்மை அறிக.

பொருளின் பெயர் நிலத்துக்கு ஆக அது மீண்டும் ஆகுபெயராய் ஒழுக்கத்துக்குப் பெயராயிற்று எனலாமோ? எனின், ஆம். நிலமும் காலமும் முதற் பொருள் எனக் குறித்த காரணத்தை நாம் ஆய்தல் வேண்டும் நிலத்தில் தோன்றும் தட்ப, வெப்பநிலைகளே உயிர்களது வாழ்க்கைக்கு முதற் காரணமாம். தட்ப வெப்பநிலை மாறுபாடு காரணமாக ஒவ்வொரு நிலத்தும்

வெவ்வேறு பொருள்கள் தோன்றி வளர்கின்றன. இத்தட்ப வெப்ப மாறுபாடே மக்களது நாகரீகத்துக்கும், பண்பாட்டிற்கும் காரணமாம். நாடுகள் தோறும் மக்களது வாழ்க்கை வேறுபடுவது பற்றி ஆராயின் அவ்வேறுபாட்டிற்கு நிலமும் காலமுமே என்பது நன்கு புலனும். இவ்வுண்மை இன்றைய விஞ்ஞான ஆராய்ச்சினல் நன்கு வலியுறுகிறது. ஒழுக்கத்துக் கிடமாக நிலமும் காலமும் அமைவதனுல் நிலத்தின் பெயரால் ஒழுக்கம் குறிக்கப்பட்டது என்பது ஏற்புடைத்தாம.

எனவே, திணை என்னும் சொல் முதலில் பொருளையும் பிறகு நிலத்தையும், பிறகு ஒழுக்கத்தையும் குறித்தது என்பதும் புலனும். நன்னூலார், "கிளை யெண் குழூஉ" என்னும் சூத்திரத்தில் "திணைதேம் ஊர்வான் அகம் புறம் முதல நிலன்" என்றதனுல் திணை என்னும் சொல் நிலவிசேடப் பொருளாகக் கொள்ளப்பட்டது என்பது புலனும். சேனு வரையரும் சொல் நிகழ்ச்சிக்குப் பொருள் இடமாதலின் "ஆயிருதிணையின் (கண்) இசைக்குமன சொல்லே" என்றூர் என உரைத்தனர். தெய்வச் சிலையாரும், மயிலைநாதரும் "திணை பொருள்" என உரையெழுதிச் சென்றனர். வடநூலார் நூற்பொருள்களையெல்லாம் விஷயம் என்று வழங்குவதுபோலத் தமிழிலும் திணை என்னும் சொல்லால் வழங்கினர் எனக் கொள்ளுதலே சாலும். "ஆயிருதிணையின் இசைக்குமன் சொல்லே" என்றவிடத்து "இச்சொல் இப்பொருளில் வழங்கப்படும்" எனும் உலக வழக்கை நோக்கின், திணை என்னும் சொல் பொருள் என்னும் பொருளில் அமைந்தது என்பது புலனும். எனவே, பொருளின் பெயரே நிலத்துக்கும் ஒழுக்கத்துக்கும் பெயராயிற்று என்னும் இளம்பூரணர் கொள்கை வலியுறுதல் காண்க.

கருப் பொருளின் பெயர் நிலத்திற்கு ஆக, அது மீண்டும் ஆகுபெயராக உரிப்பொருளுக்குப் பெயராயிற்று எனின் பொருந்துமா? வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை என்பனவும் முறையே குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்னும் நிலங்களுக்கு உரிய உரிப் பொருள்கள் அல்லவா? அவற்றை அவ்வந் நிலச்சொல்லால் குறிக்காமல் புணர்தல், இருத்தல், ஊடல், இரங்கல், பிரிதல் ஆகியவற்றை மாத்திரம் குறிஞ்சி, முல்லை முதலிய சொற்களால் குறிப்பானேன்? எனின் இவை அகப்பொருள் திணையை மாத்திரம் உணர்த்துவதற்கு இலக்கண நூலார் குறியீடாகக் கொண்டனர் என்பதே முந்தையோர் கொள்கை. புணர்தல், பிரிதல் ஆகிய அக ஒழுக்கங்களுக்கும், நிலத்துக்கும் தொடர்பு உண்டு என்பது உடல்நூல், நிலநூல் (Geology), இரசாயன நூல், உளநூல் ஆகியவைகளைத் துணை

கொண்டு ஆராய்ந்த அறிஞர்கள் கண்டதொரு முடிவாம். (Race, Sex and environment by J. R. De. La. H. Marett) காமர் மேனிக்கும் காம உணர்ச்சிக்கும் காரணமான பொருள்களுள் அயோடின் (Iodin) என்பது ஒன்று. மலைப்பகுதிகளில் அதிகம் அயோடின் கிடைக்கும் என்ப. மழை அதிகமாக உள்ள இடங்களில் அயோடின் அதிகமாகக் கிடைக்கும் என்ப. இமாலயப் பள்ளத்தாக்குகளிலும் அம்மலையை அடுத்துள்ள பகுதிகளிலும் ஒருத்திக்குப் பல காதலர்கள் (Polyandry) உண்டு என்பர். காம இன்பம் நுகர்தற்கு வைடமின் [உயிர்ச்சத்து] E வேண்டும் என்ப. மழை வளமுடைய காட்டுப் பகுதியில் அச்சத்துக் குறைந்துபடும் என்ப. முல்லை நிலத்துக்கு ஆற்றியிருத்தல் உரிப்பொருள் என்பதனை ஓர்க. ஆன்றோர்கள் வெங்காயத்தை உண்ணுதலாகாது என்றனர். காரணம் அதனில் அயோடின் இருப்பதுதான். முல்லை நிலத்து ஆடவருக்குப் பல மகளிரைக் கொள்ளும் விருப்பம் மிகும். ஆதலின் ஆற்றியிருத்தலாகிய ஒழுக்கம் கற்பெனப்பட்டது என்பதும் காண்க. நன்கு வளர்ந்த அழகிய கூந்தல் காம உணர்ச்சியை எழுப்புவதற்கோர் கருவியாம். அக்கூந்தல் வளர்ச்சியைத் தருவது அயோடின் என்னும் சத்தாகும். உடலில் உரோமம் மிகுந்திருப்பின் காமமும் மிகும் என்ப. அதனால் அறிவு வளர்ச்சி வேண்டி உடல் மயிர்களைதல் ஆகிய வழக்கம் எழுந்தது.

நிலத்திலுள்ள தாதுப் பொருள்கள் (Minerals) தாம் இங்கு வாழும் உயிர்களின் உடம்பிலும் அமையும். நிலத்தில் அப்பொருள்கள் இருப்பதற்கேற்ப அவ்வந் நிலத்து மக்களது காம ஒழுக்கம் அமைகிறது. ஆதலால் குறிஞ்சிக்குப் புணர்தலும், முல்லைக்கு இருத்தலும், மருதத்துக்கு ஊடலும், நெய்தலுக்கு இரங்கலும், பாலைக்குப் பிரிதலும் உரிப் பொருளாம் என்றனர். பொருள் மிகுதிபற்றி நிலத்திற்குப் பெயர் அமைந்தது என்பது போல ஒழுக்கம் பெரும்பான்மையாக நிகழ்தல்பற்றி ஒவ்வொன்றும் ஒவ்வொரு நிலத்துக்கும் உரியதாயிற்று.

இதுவரை கூறியவற்றால், திணை என்னும் சொல்லும், குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்னும் சொற்களும் முதலில் பொருள் குறித்துப் பின்னர் நிலத்துக்கும், ஒழுக்கத்துக்கும் பெயராயின என்பதும், குறிஞ்சி, முல்லை முதலிய சொற்களைக் காம ஒழுக்கம் குறிப்பதற்கே இலக்கண நூலார் ஆண்டனர் என்பதும் நன்கு புலனாதல் காண்க.

# தவத்திரு சம்பந்த சரணாலயத் தம்பிரான் சிவன்திருத்தாளெய்துதல்

தம்பிரானவர்களின் அன்பியல் வாழ்க்கை வரலாறு வருமாறு: இவர்கள் தொண்டை மண்டல முதலியார் மரபினர். இம்மரபினர் விழுமிய வேளாண் ஒழுக்கினர். இவர்தம் முன்னோர் திருவாலங்காட்டை யடுத்துள்ள மணவிற் கோட்டத்து வாழ்ந்தனர். இதனைச் சார்ந்த சில குடும்பங்கள் மாங்காட்டிலிருந்தன. அவற்றுள் ஒரு குடும்பம் சில நூற்றாண்டுகளுக்குமுன் கொங்கு நாட்டுக் கோயம்புத்தூரை வந்து சார்ந்தது. அக்குடும்பமே நம் முதலியாரவர்களின் முன்னோர் குடும்பம்.

இவர்தம் தந்தையார் பெயர் கந்தசாமி முதலியார். தாயார் பெயர் வடிவம்மையார். கந்தசாமி முதலியார் தமிழும் ஆங்கிலமும் தக்க ஆசிரியர்பால் நன்கு கற்றனர். காளைப்பருவம் வரை கிறித்துவ நெறியில் நின்றனர். சிவநெறியைப் பழித்தும் வந்தனர். பின் திருவருள் துணையால் சிவநெறியை மேற்கொண்டனர். பின் அவர்கள் சிவநெறிக்குச் செய்துள்ள தொண்டுகள் அளப்பில. இவர்களும் பெரும்புலவராய்த் திகழ்ந்தனர். உரை நடையிலும், செய்யுள் வடிவிலும் செந்நெறி மாண்பு தெரித்துப் பல நூல்களியற்றியுள்ளனர். வழக்குரைஞராகத் தொழில் புரிந்தனர்.

நம் முதலியாரவர்கள் 1878 ஆம் ஆண்டு பிப்பரவரித்திங்கள் 20 ஆம் நாள் தோன்றினர். சுப்பிரமணியன் எனப் பெயரிடப் பட்டனர். நன்கு பாராட்டி வளர்க்கப் பட்டனர். நல்லாசானால் கல்விகற்பிக்கப் பட்டனர். தந்தையார் நம் முதலியாரவர்களின் பதினோராம் அகவையில் சிவனடி எய்தினர். பள்ளிப்படிப்புடன் தமிழ்ப புலமைப்பாடமும் 1894 ஆண்டிலேயே பண்டிதர் திருச்சிற்றம்பலம்பிள்ளையவர்களிடம் பயிலத்துவங்கினர். நன்கு பயின்றனர். கோவைக் கல்லூரியில் 1897 இல் எப். ஏ. தேர்தலில் வெற்றி பெற்றனர். பின்பு சென்னை அரசினர் கல்லூரியிற் சேர்ந்து தத்துவநூல் பாடமெடுத்து 1899 டிசம்பரில் பி. ஏ. பட்டம் பெற்றனர். தேர்வுகளில் முதன்மையாவதுடன் பல பரிசுகளும் அவ்வப்போது பெற்றுள்ளனர்.

1898 இல் திருமணம் திருவருளால் நிகழ்ந்தது. கற்பும் பொற்பும் கடவுட்பற்றும் ஒருங்கமைந்த மனைவியார் பெயர் மீனாட்சியம்மையார். 1903ஆம் ஆண்டில் சட்டத்தில் தேர்ந்தனர் அவ்வாண்டிலேயே வழக்குரைஞர் வேலையை மேற்கொண்டனர்

முதலியாரவர்களின் வளமனை சைவப்பெருமனையாகத் திகழ்ந்தது. எப்பொழுதும் சிவனடியார் திருக்கூட்டமும், திருமுறை பயிற்றுவார் பயிலுவார் திருக்கூட்டங்களும், செந்தமிழ்ப் பெரும் புலவர் திருக்கூட்டங்களும் நிறைந்து முதலியார் திருமனை பெருங் கலைக்கூடமாகத் தோற்றமளிக்கும்.

1902 இல் கோவைத் தாலுக்கா இந்துத் தேவத்தான உறுப்பினராய்ச் சேர்ந்து பல்லாண்டு பணிபுரிந்தனர். 1916 இல் அன்புறுமனைவியார் இறைவனடி எய்தினர். 1917 இல் அவ்வம்மையாரின் தங்கையாரை இரண்டாம் மனைவியாராகத் திருமணம் புரிந்து கொண்டனர். அவ்வம்மையாரின் பெயரும் மீனாட்சியம்மையாரே. இவ்வம்மையாரின் அரும்பெருந் தொண்டினால் நம் முதலியாரவர்கள் ஆற்றும் அனைத்துப் பணிகளும் முட்டின்றி முழுவதும் எண்ணியாங்கு நிகழ்ந்து பெரும் புண்ணியமும், பெரும்புகழும் எய்துவித்தன.

1866 ஆம் ஆண்டில் நம் முதலியாரவர்களின் தந்தையாரால் ஏற்படுத்திய சைவப்பிரசங்க சாலையும், தந்தையாரின் ஆசிரியர் அமைத்த கோவைத் தமிழ்ச்சங்கமும் நிறுவினவர்கள் உள்ள காலம்வரை நன்கு செயல் புரிந்தன. பின் பலவாண்டுகள் செயல் புரியும் சீரியா ரின்மையால் செயலற்றுக் கிடந்தன. 1915 இல் கோவைகிழார் திரு. இராமச்சந்திரன் செட்டியாரும் நம் முதலியாரவர்களும் முதலியாரவர்களில் லத்துக் கலந்துரையாடி அவற்றை மீண்டும் மறுமலர்ச்சியுற்றுத் தொண்டாற்றச் செய்தனர். அவைகள் இன்றுகாறும் நன்கு செயலாற்றிவருகின்றன. இவற்றால் கோவை நகருக்கு ஏற்பட்ட செந்நெறித் தொண்டும் செந்தமிழ்த் தொண்டும் அளப்பில. இவற்றுள் சைவப்பிரசங்கச் சாலைக் கட்டிடம், கோவைநகர்வணிகர் திருவாளர் மருதாசலம் செட்டியார் மக்கள் மனமுவந்து வழங்கிய வெண்பொன் ஐயாயிரத்துடன் குறைபட்ட தொகைகளை நம் முதலியாரவர்கள் தம்கைப்பணத்திலிருந்து போட்டு நம் முதலியாரவர்களாலேயே கட்டி முடிப்பிக்கப்பட்டது.

மேலும் நம் முதலியாரவர்கள் தம் இல்லத்துச் 'சேக்கிழார் திருக்கூட்டம்' என்னும் பெயரான் ஒரு சைவசபையினை நிறுவி அதன் சார்பாகத் தேவாரப்பாடசாலை ஒன்றினைப் பல ஆண்டுகள் நிகழ்த்தி வந்தனர். இத்திருக்கூட்டச் சார்பில் பதிநடைகள் பல அவ்வப்போது நடந்து வருகின்றன. 1935 ஆம் ஆண்டு முதல் திருவஞ்சைக் களத்துப் பதிநடை ஆண்டுதோறும் சிறப்புற நிகழ்ந்து வருகின்றது. 1922 முதல் 1935 வரை நகரசபை உறுப்பினராகத் தொடர்ந்து பணியாற்றி வந்தனர். சென்னைப்

பல்கலைக் கழகத்திலும் பல ஆண்டுகள் உறுப்பினராயமர்ந்து பணியாற்றியுள்ளனர். சென்னைப் பல்கலைக்கழகத்தினர் வேண்டுகோளின்படி சேக்கிழாரடிகளைப் பற்றி மூன்று அரிய சொற்பொழிவுகளை 1930 இல் ஆற்றினர். அது 'சேக்கிழார்' என்னும் பெயரோடு நூல்வடிவில் நம் முதலியாரவர்களால் வெளியிடப்பட்டுள்ளது. இது போல் 'மாணிக்க வாசகர் அல்லது நீத்தார் பெருமை' என்ற ஆராய்ச்சிநூலும் வெளியிட்டுள்ளனர்.

சிவத்திரு கயப்பாக்கம் சதாசிவச் செட்டியார் பி. ஏ., அவர்களைக்கொண்டு மூன்று ஆண்டுகள் பெரியபுராண விரிவுரை நம் முதலியாரவர்கள் உடனிருந்து நடத்தினர். செட்டியாரவர்களின் அரிய பெரிய ஆராய்ச்சிகளை யெல்லாம் முதலியாரவர்கள் செவ்விய முறையில் ஒன்று விடாமல் குறிப்பெடுத்துக் கொண்டனர். அதுவே, பிற்காலத்து நம் முதலியாரவர்கள் பெரிய புராணத்துக்குத் தாம் இயற்றி வெளிப்படுத்தியுள்ள பேருரைப் பெருஞ்செந்தமிழ்க் களஞ்சியத்திற்குப் பெருந்துணையாக விருந்தது. 1935 இல் நம் முதலியாரவர்கள் பெரியபுராணப் பேருரையினைத் தொடங்குவதற்குத் தூண்டுகோலாகச் சென்னைப் பல்கலைக்கழகத்தார் வெண்பொன் ஆயிரம் வழங்கி ஆர்வமூட்டினர். நம் முதலியாரவர்கள் செயற்கருந்தவமாம் அச்சிவத்திருப்பணியைப் புரியத் துவங்கினர். முதலியாரவர்களின் ஐம்பத்தாறும் அகவையில் தொடங்கிய அத்திருப்பணி எழுபதாவதகவையில் இறையருளால் நிறைவுற்றது. இப்பெரும்பணி ஏறத்தாழப் பதினேந்தாண்டுகளாக நிகழ்ந்திருக்கின்றதென்பது உணர்ந்துணர்ந்து இன்புறுதற்குரிய பெரும்பேறாகும். இப்பேருரைப் பெருநூலொன்றே திருமுறை பன்னிரண்டினையும் சித்தாந்த நூல் பதினான்கினையும், ஏனைச் செந்நெறி நூல்களையும் ஐயந்திரிபறக் கற்றுணர்தற்குப் பெருவிளக்காகத் திகழ்கின்றது. அம்மட்டுமன்று அளவை நூல் நுணுக்கம், வரலாற்றுச் சிறப்பு, கல்வெட்டாய்வு, பிறநாட்டார் கொள்கையொப்பு, சங்கநூல் எடுத்துக்காட்டுக்கள் முதலியன ஆங்காங்குப் பொருத்தமுற அமைந்து பொலிவுறுகின்றன. இப்பேருரை நூல்களைத் திருமுறைத்திருக்கோவிலென்று போற்றித் திருத்தாண்டகம் ஓதி மலர்தூவி நாளும் வழிபட்டுக் கற்றுச் செந்நெறி யொழுக்கத்தில் தலைநின்று நல்வாழ்வெய்தி வாழ வேண்டுவது செந்நெறிச் செல்வர்களின் சீரிய கடனாகும்.

நம் முதலியாரவர்கள் தம் ஆசிரியர் சிவத்திரு சதாசிவச் செட்டியாரவர்களைப் போன்று திங்கட்கு ஒரு திருமுறையாக நாடொறும் வழிபாட்டுடன் ஓதி ஓராண்டில் பன்னிரு திருமுறைகளையும் ஓதிவரும் பயனுர் வழிபாட்டினைத் தனிப்பெரும் நற்றவ

மாகக் கைக்கொண்டொழுகிவந்தனர். அப்பெருந்தவம் ஏறக்தாழ ஐம்பதாண்டுகள் இடையறாது தொடர்ந்து நிகழ்ந்து வந்ததெனத் தெரிய வருகிறது. நம் முதலியாரவர்கள் தென்னாடு வடநாடு ஈழநாடு முதலிய பன்னாடுகளுக்கும் பல முறை பதிநடை புரிந்துள்ளார்கள். பதிநடை - தலயாத்திரை. தமிழகத்தும், ஈழ நாட்டகத்தும் இயங்கும் எல்லாச் சைவச்சபைகளிலும் நம் முதலியாரவர்களின் தலைமையும் சொற்பொழிவுகளும் இல்லாத அவைகளே இல்லை யென்னலாம். பல முறையும் இவர்கள் தலைமையினைப் பெற்றுத் திகழ்ந்தமையினை உன்னுவோர் இவர்கள் இடையறாது செய்துவந்த பயனார் சிவத்தொண்டினைப் பாங்குற வுணர்ந்து வழிபடுவரென்பது திண்ணம்.

திருக்கோவில்களில் அவ்வப்போது நிகழும் கடவுண் மங்கலம், திருக்குடமுழுக்கு, திருவிழா முதலிய எல்லாச் சிறப்புக்களிலும் நம் முதலியாரவர்களை முதன்மைப்படுத்தி அவர்கள் கருத்தின் வழியே யாவரும் நிகழ்த்துவர். இவர்கள் தொடர்பினால் திருமுறையே கேட்டறியாத சில திருக்கோவில்களில் அவ்வப்போது திருமுறை ஓதும் முழக்கத்திற்கும் ஓர் ஒதுக்கிடம் கிடைத்துளது. நம் முதலியாரவர்களும் குறித்த நூல்களின்றி வேறு பல நூல்களும் இயற்றியுள்ளார்கள். பேரூர் அரசம்பலவாணர் திருக்கோவிலில் பல திருப்பணிகள் புரிவித்துள்ளார்கள். காரைமடைப்பெருமாள் கோவிலுக்கும் வேண்டும் பணிகள் புரிந்துள்ளார்கள். தென்னகத்துச் சிறப்புற்றோங்கும் சைவத் திருமடங்கள் அனைத்திலும் நம் முதலியாரவர்களுக்குத் தொடர்பும் பெருமதிப்புமுண்டு. இவர்தம் பெரியபுராணப் பேருரை நிறைவுவிழாத் திருத்தில்லையின்கண் மிக்க சிறப்பாக நிகழ்ந்தது. பலரும் வாழ்த்திப் பாராட்டினர். ஒப்புரவு, ஈகை, வேளாண்மை, நல்லொழுக்கம், நடுவு நிலைமை, நாநயம், கடவுட்பற்று, கடமையினை வழுவாது நிறை வேற்றுதல், உயிர்க்கு உறுதி தருவன திருமுறைகளும் சித்தாந்த நூல்களுமே என்னும் உறைப்பு முதலிய நற்பண்புகளின் வடிவம் நம் முதலியாரென்பதே சாலப்பொருந்துவதாம். சென்னை மாகாணத் தமிழ்ச் சங்கத்தாரால் நம் முதலியாரவர்கட்குச் 'சிவக்கவிமணி' என்னும் சிறந்த பட்டம் சூட்டப் பெற்றுள்ளது. கடவுண் மங்கலம் - அட்டபந்தனம்.

நங் கழக ஆதரவிலுள்ள அறநிலையமாகிய தென்னிந்திய சைவசித்தாந்தச் சங்கத்தைச் சேர்ந்த திருநெல்வேலிக் கழக நிலையத்தில் 'சிவஞான முனிவர் நூல்நிலையம்' நம் முதலியாரவர்களால் திறந்து வைக்கப்பெற்றுச் சிறப்பாக நடைபெறுகிறது.

நம் முதலியாரவர்களின் அன்பியல் வாழ்க்கையில் இன்னும் பல நலங்கள் உள்ளன. அவற்றையெல்லாம் விரிவஞ்சி விடுக்

கின்றோம். இனி அவர்தம் அருளியல் வாழ்க்கையைப் பற்றிச் சிறிது கூறுவாம்.

நம் முதலியாரவர்கள் அன்பியல் வாழ்க்கையாம் இல்லறத்தும் அருளியல் வாழ்க்கையினையே மேற்கொண்டு அகத்துறவாய் நாயன்மார்களை யொத்து நல்வாழ்க்கை நடத்திவந்தமை நானிலமறிந்த தொன்றாம். அந்நிலைமை புறக்கோலத்தானும் புலப்படுத்தக்கருதிய நம் முதலியாரவர்கள் மதுரைத் திருஞானசம்பந்தர் திருமடத்தின் வாயிலாகத் துறவு நெறியினைச் சில ஆண்டுகளுக்கு முன் பெற்றுள்ளனர். அக்காலத்து அவர்கட்குத் துறவு நிலைத் திருப்பெயராகச் 'சம்பந்த சரணாலயத் தம்பிரான்' எனப் பெயர் சூட்டப் பெற்றது. இத்திருப்பெயர் நம் முதலியாரவர்கட்கு மிகப் பொருத்தமான தொன்றாகும். பண்டைச் சம்பந்தசரணாலயர் திருவருளால் திருஞானசம்பந்தப்பெருமானார் 'எனதுரை தனதுரையாக' என மெய்ம்மை வெளிப்படுத்தி ஓதியருளிய செந்தமிழ்த் திருமாமறையினை முற்றும் அவ்வப்போது எழுதிவரும் பேறுபெற்றுத் திகழ்ந்தனர். நம் முதலியாரவர்கள் அவ்வடிகளாரால் எழுதப்பெற்ற திருமுறைகளையும் ஏனைத் திருமுறைகளையும் ஓதிவரும் பேறுபெற்ற சிறப்பானும், திருமுறைகள் பதினொன்றனையும் பல்லாற்றானும் விளக்கும் பயனுடைப் பெருமறையாம் பன்னிரண்டாம் திருமுறையினுக்குப் பேருரை காணும் பேரார்வத்தால் அத்திருமுறையினை அளவிறந்த முறை படி யெடுத்தல் முதலிய தொண்டானும் அவ்வடிகளாரின் திருப்பெயர் பூணும் பேறு திருவருளால் பெற்றுள்ளனர்.

நம் அடிகளார் திருவள்ளுவராண்டு கசுகூஉ, தைத் திங்கள் கக ஆம் நாள் செவ்வாய்க்கிழமை (24-1-1961) பிற்பகல் சிவபெருமான் திருவடி நீழலை யடைந்தனர். இச்செய்தி கேட்டு மிகவும் துணுக்குற்றேம். சைவப் பேருலக முற்றும் அத்தகைய நிலையினையே எய்திற்று. அடிகளாரின் ஆவி சிவபெருமான் திருவடி நீழலில் முடிவிலாப் பேரின்பம் எய்திவாழும் முழு வாழ்வினை நினைக்க நினைக்க ஆறுதலும் இன்பமும் அளவிறப்ப வந்துறும்.

அடிகளார் பொன்னுடல் திருப்பேரூர் பட்டிவிநாயகர் ஆலயத்தின் பின்புறத்தில் குகைக் கோவிலமைத்து அதன் கண் வைக்கப்பட்டுள்ளது. அடிகளாரின் திருத்தோற்றம் 20-2-1878. திருவடி ஏற்றம் 24-1-1961. எனவே ஏறக்தாழ எண்பத்து மூன்றாண்டுகள் வாழ்ந்து சிவத்தொண்டு புரிந்துள்ளார்களெனத் தெரிகின்றது. அடிகளார் குருபூசை விழா மிகச் சிறப்பாக நிகழ ஆண்டவனை வழுத்துகின்றோம். அடிகளார் பொன்னடிகள் வாழ்க! திருமுறையும் செந்நெறியும் செந்தமிழும் வாழ்க! அடிகளார் ஆக்கியளித்துள்ள பெரியபுராணப் பேருரை வாழ்க!

# பேராசிரியர், திரு. தெ. பொ. மீ. அவர்களின் மணி விழா

பன்மொழிப் புலவர், திரு. தெ. பொ. மீனாட்சி சுந்தரனார், எம் ஏ., பி.எல்., எம்.ஓ.எல், அவர்களின் மணிவிழா (10-1-1961) அன்று நிகழ்ந்தேறியது. பேராசிரியரவர்களைத் தலைவராகக் கொண்டுள்ள சிந்தாதிரிப்பேட்டை உயர்நிலைப் பள்ளியில் காலையிலும், அண்ணாமலை மன்றத்தில் மாலையிலுமாகச் சிறப்புற மணிவிழா நிகழ்வுற்றது. பல அறிஞர் பெருமக்களிடமிருந்தும் வாழ்த்துரைகள் வந்திருந்தன,

அண்ணாமலைமன்றத்தில் நிகழ்ந்த விழா நிகழ்ச்சிகளுக்குத் தலைமை தாங்கிய செட்டிநாட்டரசர், டாக்டர், சர் முத்தையா செட்டியார் அவர்கள் பேராசிரியரவர்கட்குப் பொன்னாடை போர்த்திச் சிறப்பித்தார். அப்பொழுது, செட்டி நாட்டரசர்,

“ஒருபெரும் அறிஞருக்குச் சிறப்பு செய்வது, தமிழ் மக்கட்கே பெருமையளிப்பதாகும். 60 வது ஆண்டு நிறைவுவிழா கொண்டாடுதலைப் போல் 80 வது ஆண்டு நிறைவு விழாவும் கொண்டாட நான் பெரிதும் விழைகின்றேன்.

“இன்றைய நிலையில் ஆங்கிலத்தின் இன்றியமையாமையை நாம் உணர்ந்து நீடிக்குமாறு செய்யவேண்டும். இந்திமொழியையும் அகற்றவேண்டும். ஆங்கிலம் நீங்கினால் அவ்விடத்தை இந்திமொழி கைப்பற்றிக் கொள்ளும். தமிழொன்றனைக்கொண்டு இந்தியை ஓட்டி விடலாம் என எண்ணுதல் கூடாது.” என்றும் பல கருத்துரைகளைக் கூறி, தெ. பொ. மீ. அவர்களையும் பலபடப் பாராட்டினர்.

அடுத்துச் சொற்பெருக்காற்றிய திரு. ம. பொ. சிவஞான கிராமணியார் “தெ. பொ. மீ. அவர்களின் தமையனார் திரு. கிருட்டிணசாமிப் பாவலர் இலண்டன்மாநகர் சென்று மன்னர் பாராட்ட வள்ளி திருமணம் என்னும் நாடகத்தை நடித்து உயர்வு பெற்றவர். பேராசிரியரின் குடும்பமே கல்வியில் தலைசிறந்தது. நானும் பேராசிரியரும் நாட்டுத் தொண்டில் அந்நாளில் ஈடுபாடு கொண்டிருந்தோம். இன்றைய நிலையிலும் தனித்தமிழ்பயின்றவர்கள் அரசினர் அலுவலகங்களில் தனிச்சிறப்புப் பெறவில்லை. அங்ஙனம் சிறப்புறும் நன்னாளை தெ. பொ. மீ. அவர்களின் வாழ்நாளிலேயே காணவேண்டும். உலகத்துக்குத் தமிழ் நூல்களின் உயர்வைக் கூற அறிவு மொழியாகிய ஆங்கிலத்தை நாம் பயிலவேண்டும்” எனக் குறிப்பிட்டார்.

மற்றும் திரு. நாராயணசாமிப் பிள்ளை, திருமதி. சௌந்திரம் கைலாசம், திரு. அ. ச. ஞானசம்பந்தம், டாக்டர், துரை அரங்கனார் முதலியோர் வாழ்த்துரைகளை வழங்கினர்.

இங்ஙனம் பாமாலைகளும் பூமாலைகளும் பெற்று மணிவிழாக் கோலத்தை மாண்புறக் கொண்ட பேராசிரியர் அவர்கள் தமிழக அறிஞர் பெருமக்களின் பட்டியலில் தமக்கென ஓரிடத்தை ஈடு இணையற்ற நிலையில் வகுத்துக்கொண்டவர். அவர்களும், அவர்தம் அருமந்த மனைவியாரும், மக்களும் பல்லாண்டு பல்லாண்டு பாரினில் வாழ்ந்து மீனாட்சி சுந்தரேசனின் திருவருளால் வைரவிழாப்போன்ற பலவிழாக்களும் பெற்று வாழ்க வாழ்கவென வாழ்த்துகின்றோம்.

# சாமி சிதம்பரனர்

சோழவள நாட்டிலே திருப்பனந்தாளுக்கு அண்மையில் உள்ள சிறுகடம்பூர் என்னுஞ் சிற்றூரில் சார்வரியாண்டு கார்த்திகைத்திங்கள் பதின்மூன்றாம்நாள் (1900 டிசம்பர்) சாமி சிதம்பரனர் பிறந்தார். தந்தையார் பெயர் சாமிநாத உடையார். தாயார் பெயர் கமலம்பாள் அம்மையார். பெற்றோர்கட்கு இவர் கடைசிப் பிள்ளை. குடும்பம் மாயூரம் பிரிவில் உள்ள கடகம் என்னும் சிற்றூருக்குக் குடிபெயர்ந்தது.

இளமைப் பருவத்தில் கடகத்தில் வசித்திருந்தார். தொடக்கக் கல்வி அங்குத் தொடங்கியது. சிற்றூர்ப் பள்ளியில் படித்து முடிந்ததும் மாயூரத்தில் ஓராண்டு படித்தார். மேலே கல்விகற்க முடியாத சூழ்நிலையில் பள்ளிக் கல்வி முடிவுபெற்றது. தாமாகவே தமிழ் பயின்றார். சிறுபருவத்திலேயே தாயை இழந்து தந்தையின் ஆதரவில் வளர்ந்தார். கல்வியை நன்கு கற்கவேண்டும் என்னும் ஆர்வம் இவருக்கு மிகுதியாக இருத்தலைக் கண்ட சிலர் மதுரைத் தமிழ்ச்சங்கத்திற் சேர்ந்து கல்வி பயிலுமாறு கூறினர். அவ்வாறே சேர்ந்து பயின்றார். 1924ஆம் ஆண்டில் புலமைத் தேர்வில் வெற்றிபெற்றுக் கல்விப் பயிற்சியை முடித்தார்.

கரந்தைத் தமிழ்ச்சங்கத்தில் ஆசிரியராகப் பணியாற்றத் தொடங்கிப் பல ஆண்டுகள் வேலை செய்தார். அந்நாளில் கரந்தைக் கவியரசு வேங்கடாசலம் பிள்ளையும் அங்கு ஆசிரியராக இருந்தார். உமாமகேசுவரம் பிள்ளை கவியரசு ஆகியோர் இவருக்கு நண்பர்களாகவிருந்தனர். பிறகு இராசாமடம், ஒரத்தநாடு, பட்டுக்கோட்டை, திருவாரூர், பாபநாசம் முதலிய இடங்களில் பதினேழாண்டுகள் பணிபுரிந்தார்.

1930ஆம் ஆண்டில் திருமதி சிவகாமி அம்மையாரைத் திருமணஞ் செய்துகொண்டார். திருமணம் கலப்பு மறுமணமாக நிகழ்ந்தது.

ஆசிரியத்தொழிலை இவர் பல ஆண்டுகள் மேற்கொண்டிருந்தும் மனம் அதனில் பற்றுக்கொள்ளவில்லை. பத்திரிகைகள் நடத்துதல், நூல்கள் எழுதுதல் முதலியவைகளிலேயே இவருடைய உள்ளம் படிந்திருந்தது. அதனல் ஆசிரியத்தொழில் புரிந்த காலத்திலேயே ‘அறிவுக்கொடி’ என்னும் பெயருடைய இதழ் ஒன்றைத் தொடங்கி நடத்தினர். 1941ஆம் ஆண்டில் ஆசிரியத்தொழிலை விட்டுவிட்டுப் பத்திரிகைத் தொழிலில் புகுந்தார். சிலகாலம் ஈரோட்டில் பகுத்தறிவு ஆசிரியர் கூட்டத்தில்

சேர்ந்து பணிபுரிந்தார். முன்னேற்றம் என்னும் அச்சகத்தை ஏற்படுத்தினார்.

1948ஆம் ஆண்டில் சென்னை நகருக்கு வந்து குடியேறினார். லோகோபகாரியில் சிலகாலம் ஆசிரியராக இருந்தார். விடுதலையில் ஓராண்டு பணிபுரிந்தார். தமிழ் எழுத்தாளர் சங்கத்தில் தொடக்கமுதல் 1958 முடியவரை உதவித்தலைவராக இருந்தார். சென்னைப் பெருமக்கள் பேரவையில் (மகாசபை) மூன்று அறச் செயலாளர்களில் (தருமகர்த்தாக்கள்) ஒருவராக இறுதிவரை இருந்துவந்தார். சமாதான இயக்கம், சீன இந்திய நட்புறவுக் கழகம், சோவியத் நண்பர்கள் சங்கம் முதலிய பொது நன்மை நிலையங்களில் பணியாற்றினார்.

சிங்கப்பூரில் இருந்து வெளிவரும் தமிழ்முரசு நாளிதழில் இலக்கியக் கட்டுரைகள் பல தொடர்ச்சியாக எழுதிவந்தார். தமிழ்ப்பொழில் முதலிய திங்கள் வெளியீடுகளிலும் பல கட்டுரைகள் எழுதினார். இதழ்களில் கட்டுரைகள் எழுதியதன்றி நூல்களும் பல எழுதினார். இவரால் இயற்றப்பெற்ற நூல்கள் பெண்மக்கள் பெருமை, பெரியார் வாழ்க்கை வரலாறு, உமர் கய்யாம் கவிதைகள் மொழிபெயர்ப்பு, புதிய தமிழகம், வள்ளலார் காட்டிய வழி, வடலூரார் வாய்மொழி, வள்ளுவர் காட்டிய வைதீகம், கம்பன் கண்ட தமிழகம், தொல்காப்பியத் தமிழர், பத்துப் பாட்டும் பண்டைத் தமிழரும், எட்டுத்தொகையும் தமிழர் பண்பாடும், பதினெண்கீழ்க்கணக்கும் தமிழர் வாழ்வும், சிலப்பதிகாரத் தமிழகம், மணிமேகலை காட்டும் மனிதவாழ்வு, முன்சீப் வேதநாயகம் பிள்ளை, இலக்கியச் சோலை, திருக்குறளின் பொருள் விளக்கம், பழந்தமிழர் அரசியல், நாலடியார் உரை, தேவாரத் திருமொழிகள், ஆழ்வார்கள் அருள்மொழி, வள்ளுவர் வாழ்ந்த தமிழகம், பழந்தமிழர் வாழ்வும் வளர்ச்சியும் முதலியன.

இவர் பொறுமையையே வடிவமாகக் கொண்டவர். சாதி மதம் முதலியவற்றால் மக்களைத் தாழ்மையாக மதியார் பழங் காலப் பெருமையை விளக்கி இக்காலத் தமிழகத்திற்கு உயர்வு தேட வேண்டுமென்பது இவருடைய நோக்கம். சாதிப்பூசல், சமயப்பூசல் முதலியவைகளை அடியோடு வெறுத்தவர்.

சீரிய செந்தமிழ்க்கு நல்ல தொண்டு புரிந்திருந்த இவர் பாரிச வாயுவினால் பீடிக்கப்பட்டுச் சென்னைப் பெரிய மருத்துவ மனையில் சிலநாட்கள் உடல் நலமில்லாதிருந்து தம்முடைய அறுபத்தொன்றாம் அகவையில் 17—1—1961 ஆம் நாள், இவ்வுலக வாழ்வைத் துறந்து இறுதியை அடைந்தார்.

---

# தமிழகப் புலவர் குழு

# ஏழாவது கூட்ட நிகழ்ச்சிகள்

தமிழகப் புலவர் குழுவின் ஏழாவது கூட்டம் கோயமுத்தூரில், அறிவியற் பேரறிஞர் கோ. து. நாயுடு (G. D. நாயுடு) அவர்களின் 'தலைவர் மன்றக்' கட்டடத்தில் திருவள்ளுவர் ஆண்டு 1992 தைத்திங்கள் க. உ. ந. (சனவரி 1961-14, 15, 16) நாட்களில் பண்டித வித்துவான் தி. சங்குப்புலவர் தலைமையில் நடைபெற்றது.

வந்திருந்த புலவர்பெருமக்களுக்கும் ஏனையோர்க்கும் உணவும் உறையுளும் சீரியமுறையில் அளித்து, விருந்தோம்பும் வேளாண்மையை அனைவரும் பாராட்ட அறிவியற் பேரறிஞர் கோ. து. நாயுடு அவர்கள் புரிந்தனர். வரவேற்புக் குழுவினர் ஒல்லும் வகையால் யாவரும் உவக்கும் வகையில் வரவேற்பு ஏற்பாடுகளைச் செய்திருந்தனர்.

தை முதல்நாள் (14-1-61) காலையில் புலவர் குழுவினர் தொழில் வளம் கண்டு மகிழ்ந்தனர்; மாலையில் நான்கு மணிக்குத் தொடங்கித் தொல்காப்பியர், திருவள்ளுவர், இளங்கோ அடிகள் நாட்களைக் கொண்டாடினர். பன்னிரு புலவர், பண்டித வான் தி. சங்குப்புலவர் தலைமையில் பேசினர்.

தை இரண்டாம் நாட் காலை பத்து மணிக்குப் புலவர் குழுத் தொடக்கமும் வரவேற்பும் நடந்தன. பதினொரு மணிக்கு நகராட்சி மன்றத்தில் வரவேற்பு நிகழ்ந்தது. மாலை ஆறு மணிக்கு வ. உ. சி. அரங்கில் கோவை மக்கள் வரவேற்பும் புலவர் பெருமக்களின் சொற்பொழிவுகளும் நிகழ்ந்தன.

மூன்றாம் நாள் காலையில் தலைவர் மன்றத்தில் புலவர்கள் பதினறுவர் தாம் தாம் கண்ட மொழி, இலக்கிய இயல் உண்மைகளை எடுத்து மொழிந்தனர். மாலையில் பொதுமக்கள் கேட்ட ஐய வினாக்களுக்குப் புலவர் பெருமக்கள் விடையளித்தனர்.

இரண்டாம் நாள் பகல் இரண்டு மணிக்குப் புலவர் பெருமக்கள் தம்மில்கூடி மொழிநலம் பயக்கும் வழிதுறைகளை ஆராய்ந்து முடிபுகளை ஒருமனதாக நிறைவேற்றினர். அம்முடிபுகளிற் சில அடியில் வருவன.

**நிறைவெய்திய முடிபுகள் :**

1. தமிழகப் புலவர்குழு உறுப்பினர் பெயர்களும் முதலெழுத்துக்களும் பட்டங்களும் பொதுமக்களுக்கு முன் மாதிரியாகத் தமிழிலேயே கொள்ளவேண்டுமென்று முடிவு செய்கின்றது.

# அகராதிகள்

(செல்வி சிலம்பு, ந௫, பரல் ௫, உ௨௪ ஆம் பக்கத் தொடர்ச்சி)

யாழ்ப்பாண அகராதி 1842 இல் வெளியான பின்னர் சில ஆண்டுகளில் 'அகராதிச் சுருக்கம்' என்ற அகராதி 1883 இல் வெளியாகியது. இவ்வகராதியைத் தொகுத்தவர் திரு. சி. விஜயரங்க முதலியார் அவர்கள். அவர் தொகுத்ததைப் பார்வை யிட்டுத் திருத்தித் திரு. சி. இராசகோபால பிள்ளை வெளியிட்டார். இவ்வகராதியில் மூவாயிரத்திற்கு மேற்பட்ட சொற்களுக்குப் பொருள் தரப்பட்டுள்ளது. பெயராகவும் வினையாகவும் வழங் கும் ஒரே சொற்கள் இந்நூலின் பின்னிணைப்பில் தரப்பட் டுள்ளன. மாணவர்கட்கென இவ்வகராதி வெளியாகியது.

சொற்களுக்குப் பொருள்களை அகரவரிசை முறையில்தரும் பழக்கத்தை மேலை நாட்டினரிடமிருந்து பயின்ற தமிழர்கள் அகராதி வெளியிடுவதோடு நின்றுவிடவில்லை. அகராதி சொல் லுக்குப் பொருளை மட்டும் தருவது, ஆனால் விளக்கத்தைத் தராது. சொல்லுக்கு விளக்கத்தைத் தரும் நூல் 'கலைக்களஞ் சியம்' எனப் பெயர் பெறும். இம்முறை அகராதி முறையை யொட்டி எழுந்த முறையாகும். ஆதலின் தமிழில் இம்முறையில் வெளியான முதல் நூலைப்பற்றிய விளக்கம் அடுத்துக் கூறப்பட் டுள்ளது.

## 4 ஆ. அபிதானகோசம் (1902)

தமிழ் இலக்கியங்களையும் பிறதுறை நூல்களையும் படிப் போர்க்குத் தாம் படித்த சொல்லின் பொருள் தெரியாவிடில் அகராதியைப் பார்ப்பர். அகராதியில் சொல்லுக்குப் பொருள் தரப்பட்டிருக்குமே யல்லாது பெயர்களுக்கு விளக்கங்கள் காண முடியாது. இக் குறையைப் போக்கும் பொருட்டே கலைக்களஞ் சியம் எழுந்தது. ஆங்கிலத்தில் (Encyclopaedia) என்பர். தமிழில் முதன் முதலில் தோன்றிய கலைக்களஞ்சியம் 'அபிதான கோசம்' என்பதாகும். அபிதானகோசம் என்றால் சொற்களின் பொருளை அறிவிக்கும் நூல் என்று பொருளாகும்.

அபிதானகோசம் என்ற (The Tamil Classical Dictionary) நூல் யாழ்ப்பாணத்திலுள்ள மானிப்பாயில் வாழ்ந்த ஆ. முத்துத் தம்பிப் பிள்ளையால் இயற்றப்பெற்றது. இவர் கல்விபயின்றபின் சில ஆண்டுகள் தமிழாசிரியராகப் பணியாற்றினார். இந்தியா விற்கு வந்து சில ஆண்டுகள் தங்கிய பின் மீண்டும் யாழ்ப் பாணத்தை யடைந்தார். இவர் இவ்வகராதி மட்டுமல்லாது

ஆங்கில - ஆங்கிலத் தமிழ் அகராதி யொன்றும் வேறு சில நூல்களும் இயற்றியுள்ளார்.

வடமொழி, தென்மொழி ஆகிய இருமொழிகளிலும் இயற்றப்பட்ட வேதங்கள், புராணங்கள், இதிகாசங்கள், தரும நூல்கள் போன்ற நூல்களைப் படிக்கும்பொழுது ஒருநூலில் ஒருவர் பெயர் கேட்கும்பொழுது அவர் யார், எக்காலத்தவர், யாது செய்தார் என்ற இன்னபிற ஐயங்கள் எழுதல் இயற்கை. இத்தகைய ஐயங்களைத் தெளிதற் பொருட்டு வேத, ஆகம, இதிகாச, புராணங்களில் கூறப்பட்டுள்ள தெய்வங்கள், தேவர்கள், இருடிகள், முனிவர்கள், அசுரர் போன்றவர்களின் வரலாறுகளும், புண்ணியத் தலங்கள், ஆறுகள், மரங்கள், குளங்கள் ஆகியவற்றின் வரலாறுகளும், தமிழகத்தின் பண்டைக்கால அரசர், புலவர், புரவலர் போன்றோர்களின் வரலாறுகளும், நூல்களின் வரலாறுகளும் இந்நூலில் தொகுத்து அகரவரிசையில் தரப்பட்டுள்ளன.

இருமொழிகளிலுமுள்ள பல நூல்களைத் தேடித் தொகுத்து இந்நூலை எழுதப் பதினாறு ஆண்டுகள் ஆகியுள்ளன. மேலும், முதன் முறையாக இந்நூல் இயற்றப் பட்டிருத்தலின் பெரும் முயற்சி தேவைப் பட்டிருக்கின்றது.

இந்நூல் யாழ்ப்பாணத்திலுள்ள 'நாவலர்' அச்சகத்தில் 1902 இல் அச்சிடப்பட்டுள்ளது. 22 × 14 செ. மீ. அளவுடையது. 10;396;3(499)பக்கங்களை யுடையது.

இந்நூலில் ஏறத்தாழ ஆறாயிரத்துக்கு மேற்பட்ட பெயர்களுக்கு விளக்கம் தரப்பட்டுள்ளது.

## 4 இ. தமிழ்ச் சொல்லகராதி (1904)

"ஒரு நாட்டின் பெருமை அந்நாட்டு நூலாசிரியர்களால் ஓங்கிவளர்கிறது. எனவே அவ்வாசிரியர்களின் அரிய நூல்களைக் கற்க வேண்டுமாயின் ஒரு நல்ல அகராதி தேவை" என்று ஆங்கிலப் பேராசிரியர் டாக்டர் ஜான்சன் கூறுகிறார். அவ்வாறு தமிழ் நாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள் பலவற்றைக் கற்பதற்குத் துணையாகப் பல அகராதிகள் எழுந்தன. எனினும் எந்த அகராதியும் அதைப் பயன்படுத்துவோரின் தேவைகள் அனைத்தையும் நிறைவேற்றவில்லை. அகராதிகள் பல பிழைகள் மலிந்தனவாயும், சிறிய அளவினதாயும் அமைந்திருந்தன.

இவற்றிற்கு விதிவிலக்காக நல்லதொரு பெரிய அகராதியை வெளியிட வேண்டுமென்று யாழ்ப்பாணத்தைச் சார்ந்த திரு. கு. கதிரைவேற் பிள்ளையவர்கள் முயற்சி செய்தார்கள். இவர்

யாழ்ப்பாணத்து வண்ணையம்பதி திரு. க. குமாரசாமி முதலியாருடைய குமாரர் என்று இந்நூலின் முகப்புப் பக்கத்தால் தெரிய வருகின்றது. இலங்கை உயர் நீதிமன்ற வழக்கறிஞராக இருந்த இவர் நடுவராகச் சில காலம் பணியாற்றிய பின் ஓய்வு பெற்றார். தாம் ஓய்வு பெற்ற ஐந்தாண்டுகளில் இவர் இவ்வகராதியைத் தொகுத்துள்ளார்.

இவர் இந்நூலின் முன்னுரையில் 'தமிழ் மொழிக்கு வடமொழியினின்று பல சொற்களைக் கொணர்ந்து தமிழறிஞர்கள் நூல்களெழுதியுள்ளனர். வடமொழி நூல்களைத் தழுவி எழுதும் போதும் மொழிபெயர்க்கும்போதும் அம்மொழிச் சொற்களை அவ்வாறே எடுத்துத் தற்பவம், தற்சமம் என்ற இலக்கண அமைதிக்கேற்பக் கையாண்டுள்ளனர். இத்தகைய சொற்களை அகராதியில் சேர்ப்பதோடு மட்டுமல்லாது முன்னர் வந்த அகராதிகளில் காணப்படாத சொற்களை எவ்வளவு இயலுமோ அவ்வளவு சொற்களையும் சேர்த்துப் பெரிய அகராதியாக வெளியிட வேண்டும் என்பது என் அவா' என்று குறிப்பிட்டுள்ளார்.

எனவே இத் 'தமிழ்ச் சொல்லகராதி' மொத்தத்தில் சொற்கள் அதிகமாகப் பெற்றிருந்தாலும் 'யாழ்ப்பாண அகராதி'யைப் போலவும் அதை அடுத்து வந்த அகராதிகளைப் போலவும், அதற்கு முன்வந்த அகராதிகளை விட அதில் சொற்கள் அதிகமாக இருக்க வேண்டும் என்பதற்காக வடசொற்களைச் சேர்த்துக் கொண்டே போயின. இவ் வகராதியில் மேற்கூறிய குறை காணப்படினும் பல சிறப்புக்கள் இதில் உள்ளன.

முதலாவதாக இந்தியத் தத்துவம், மெய்யுணர்வு, சமயம், வைத்தியம், அளவை நூல், சோதிட நூல், வான நூல் போன்ற பல துறைகளில் வழங்கிய அருஞ்சொற்களுக்குப் பொருள்களை முதன் முதலாக இவ் வகராதி தருகின்றது. இது பல துறைகளில் பயிலும் பலர்க்கும் பயன் தருவதாய் அமைகின்றது.

அடுத்து, சொற்களுக்குப் பொருளைத் தரும்பொழுது அப் பொருள் இலக்கியங்களில் பயின்று வரும் இடத்தை மேற்கோளாக எடுத்துத் தருகின்றார். வடமொழிச் சொற்களாக இருப்பின் அவற்றின் மூலத்தைக் கண்டு பிடித்து அதன் அடிச் சொல்லைக் கிரந்த எழுத்துக்களில் தந்துள்ளார். பொருள் பயின்று வரும் இடத்தை மேற்கோளாக எடுத்துக் காட்டுவது அகராதி இயற்றுவோருடைய சிறந்த பண்பாகும்.

(தொடரும்)

# செய்திகளும் குறிப்புக்களும்

**'திருவாசகத்தேன் வெளியீட்டு விழா'**

இந்நூல் திரு. ராய. சொக்கலிங்கம் அவர்களால் எழுதப்பட்டது. கல்கத்தா பிரகாஷ் பதிப்பகத்தார் இதனை வெளியிட்டுள்ளனர். கல்கத்தா தமிழ் எழுத்தாளர் சங்கச் சார்பில் இவ்விழா நிகழ்ந்தது. விழாவிற்கு டாக்டர். சுனிதகுமார் சட்டர்ஜி (நன்னெறி முருகன்) விழாவைத் துவங்கிவைத்தார். இவர் ஆங்கிலம், வடமொழி, தமிழ் முதலிய பன்மொழிகளிலும் மிக்க பெரும்புலமை வாய்ந்தவர். இவற்றுள்ளும் செந்தமிழின் இயற்றனமையும், இனிமையும், தொன்மையும், தோமிலாப் பன்னூல் நன்மையும், நயமுநகண்டு நாளும் நவிலுதலும், நவில்விந்தலும், ஓதுதலும் உடைய ஒண்மையர். துவக்கவுரையின் சுருக்கம்.

"சமக்கிருதத்தைப் போன்று தமிழிலக்கியங்களும் கருவூலங்களாகும். தமிழிலக்கியங்கள் தமிழ்மக்களுக்கு மட்டுமல்ல நாடு முழுமைக்குமுரிய கருவூலங்களே. நாயன்மார் மூவரின் தேவாரமும், மாணிக்கவாசகரின் திருவாசகமும், ஆழ்வார் பிரபந்தமும் இந்நாட்டின் தேசிய சொத்துக்களாகும். தமிழர்களல்லாதோரும் இவற்றைப் படித்துப் பயன் பெறும்படி இதரமொழிகளில் இவற்றை மொழிபெயர்த்தல் செய்யத் தமிழர்கள் முயலுதல் வேண்டும்" எனவுங் கூறித் திருவாசகத்தேனின் ஆசிரியரையும் பாராட்டினர். பாராட்டித் தமிழ் எழுத்தாளர் சங்கச்சார்பில் ஆசிரியருக்குப் பொன்னுடை போர்த்தினர்.

விழாத்தலைவர் திரு. கே. சரவணையவர்கள் பதிப்பகத்தாரைப் பாராட்டினர். திரு. ராய. சொக்கலிங்கம் அவர்கள் "திருவாசகம் உலகந் தழுவிய இலக்கியம். தமிழ்வேதம்" என்றனர்.

**'வையத்துக்கு வழிகாட்டிய வள்ளுவர்'**

தில்லி தேசியப் பொருளாதார ஆராய்ச்சிக்கழக இயக்குநர் டாக்டர் பா. நடராசன் அவர்களாற்றிய சொற்பொழிவுச் சுருக்கம்: இச் சொற்பொழிவு சென்னைப் பல்கலைக் கழகச்சார்பில் 18, 19, 20-1-1961 ஆகிய மூன்று நாட்களிலும் நிகழ்ந்தது. டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளையவர்கள் ஏற்படுத்தியுள்ள 'சொர்ணம்மாள்' அறக்கொடைவைப்பின் ஆதரவில் இது நிகழ்ந்தது. நிகழ்ந்த இடம் பல்கலைக்கழகச் செனட் மண்டபம் ஆகும். சொற்பொழிவாளர், வள்ளுவரை மக்கட்கூட்ட அறிஞர் என வாழ்த்தினர். வையத்தார் வாழ்வாங்கு வாழ்வதற்கு வழி காட்டுவது வள்ளுவர் நூலே. அவர் மாநில வேந்தரையோ குறுநில மன்னரையோ அடுத்துப் பாடவில்லை. அவர் மூதறிஞர் மட்டுமன்றிச் சமயநெறியில் சமத்துவம் கண்ட சமரச ஞானி. இக் காலத்தில் வளர்ச்சியுற்றிருக்கும் பொருளாதாரத் துறையின் கருத்துக்களைத் திருக்குறளிற் காணலாம் என்றனர்.

அவர் எல்லாருங் கற்றுணரும் வகையில் மிகவும் குறைந்தவடியாகிய இரண்டடியில் தம்பெருநூலை யாத்துள்ளனர். அதுவும் எழு சீர்களானமைந்தது. மங்கையர் வாய்மொழியாகக் கூறும் பழமொழி போன்றது. எல்லாம் நிரம்பியது. இதனை எல்லாருங் கற்றுணர்ந்து அவ்வாறொழுகி நலமுடன் வாழ்வாராக என்றனர்.

**'அ. இ. தமிழ் எழுத்தாளர் பெருமன்றத் துவக்கவிழா'**

29-1-61 மாலையில் ராஜாஜி ஹாலில் நடந்தது. இதுவரை 11 எழுத்தாளர் சங்கங்கள் இணைந்துள்ளன. சென்னை மாநில முதலமைச்சர் திரு. காமராசர் விழாவைத் துவக்கி வைத்தார். துவக்கவுரைச் சுருக்கம்: "எழுத்தாளர்களின் எண்ணம் நன்றாகவிருந்தால் எழுத்தும் நன்றாகும். மொழி, சாதி, இன வேற்றுமைகளில்லாமல் மன்றம் தொழிற்படுதல் வேண்டும்" என்றனர்.

மத்திய தபால் தந்திப் போக்குவரத்துத் துறையமைச்சர் டாக்டர் சுப்பராயன் அவர்கள் விழாவிற்குத் தலைமை பூண்டனர். அவர்தம் தலைமையுரையின் சுருக்கம் "நமது தொழிலோ, நம்மிலக்கியங்களோ, நம்மக்களிடையேயும், மற்றைய நாட்டிலுள்ளவர்களிடையேயும் மிகுதியாகப் பரவ வேண்டுமானால் இலக்கிய மதிப்பீட்டுத் திறனாய்வறிஞர்கள் இன்றியமையாது தேவைப்படுகின்றனர். ஆனால் இவ்வெண்ணம் இன்னும் தமிழ் எழுத்தாளர்களிடையே வரவில்லை. அதை வளர்த்தல் வேண்டும்" என்றனர்.

**'தமிழ் நாடு' எனப் பெயரிடுக**

சென்னை மாநிலத்திற்குத் 'தமிழ்நாடு' எனப் பெயரிடுமாறு தமிழரசுக் கழகத் தலைவர் திரு. ம. பொ. சிவஞானம் அவர்கள் ஓர் அறப்போர் தொடங்கியுள்ளனர். இப்போருக்குத் தலைமையும் அவர்களே தாங்குகின்றனர். சென்னை மாநிலத்திலுள்ள 11 மாவட்டங்களிலும் இப்போர் அமைதியான முறையில் நடப்பதாகவுந் தெரிகிறது. மாநில மக்கள் அனைவர்களுடைய எண்ணமும் அதுவேயென்பதும், அம்முறையிலேயே ஏனை மாகாணங்கள் அழைக்கப்படுகின்றன என்னும் இயல்பும் ஆட்சித் துறையினர்க்கும் நன்கு தெரிந்த தொன்றாகும். காலங்கடவாது உற்ற காலத்துத் தமிழ்நாடு எனப் பெயரிட அவர்களே முன்வருவார்களென எல்லாரும் எதிர்பார்ப்பது இயற்கையேயாம்.

**எலிசபெத் அரசியார் வருகை**

21-1-1961 இல் புதுத்தில்லியில் பிரிட்டிஷ் இராணி '**எலிசபெத்**' அம்மையாரும், அவர்தம் அருமைக் கணவனார் எடின்பரோ கோமகனார்க்கும் இந்தியாவின் குடியரசுத் தலைவர் ராஜேந்திரப் பிரசாத் அவர்கள் சிறந்த விருந்தொன்றளித்தனர். இராணியாரவர்கள் முத்துக்கள், வைரங்கள் பதிக்கப்பட்ட வேலைப்பாட்டுடன் கூடிய ஆடைகளை அணிந்திருந்தனர். பன்மணிகளாலும், வைரங்களாலும் ஆகிய மாலையொன்றினையும் அதற்கேற்ற தோடுகள், கைவளையல்களையும் அணிந்திருந்தனர். தம் கணவனாருடன் அசோக அறைக்கு ஊர்வலமாக வந்தனர். அசோகா அறையென்பது பண்டைய வைசிராய்கள் பயன்படுத்திய நடன அறை.

இராணியும், குடியரசுத் தலைவரும், எடின்பரோக் கோமகனும் அறைக்குள் நுழைந்தபோது 130 விருந்தினர்களும் எழுந்து நிற்க பிரிட்டிஷ் தேசிய கீதத்தையும், இந்திய தேசிய கீதத்தையும் பாண்டுகள் முழங்கின. அரசாங்க விருந்து ராஷ்டிரபதி பவனத்தின் முதல்மாடியில் நடந்தது. இந்தியாவை ஆட்சிபுரிந்த 16 வைஸ்ராய்களின் உருவப்படமும், ராஷ்டிரபதியின் உருவப்படமும் இவ்வறையின்கண் தோற்ற

சகிப்புத்தன்மை, அன்பு, ஞானம் ஆகிய பழங்காலத்து இந்தியப் பண்பாட்டுடன், விஞ்ஞானம், தொழில் நுட்பங்களின் முன்னேற்றத்தை இணைத்து இந்தியா உலகிற்கு ஓர் உதாரணமாகத் திகழுமென்று நாம் உறுதியாக நம்புவதாக இராணியார் விருந்துச் சிறப்பிற்கு நன்றி கூறு முகத்தாற் கூறினர்.

அரசியாரும் எடின்பரோ கோமகனாரும் ராஜகட்டத்திலுள்ள 'காந்திஜி சமாதிக்'குச் சென்றனர். மகாத்மா காந்தியடிகளாரின் சமாதியின்மீது வெள்ளைரோசாப் பூக்கள் 450 ஆல் அமைக்கப்பட்ட ரோசாப்பூமாலையினைச் சாத்தி வணங்கினர். ராஜ்கட் சமாதிக் கமிட்டியின் சார்பில் கையினால் நூற்கப்பட்ட நூல், காந்திஜியின் நன் வரலாறுகள் அடங்கிய புத்தகங்கள் அரசியார்க்கு அளிக்கப்பட்டன.

22-1-1961 ல் அரசியாரும் அவர்தம் கணவனாரும் காலையில் கதீட்டரல் மாதாகோவிலில் பிரார்த்தனை புரிந்தனர். இம்மாதா கோவிலை முன்னாள் வைசிராய் ஹலிபாக்ஸ் பிரபு கட்டுவித்தனர் என்ப.

அண்மையில் அரசியார் சென்னைக்கு வரவிருக்கின்றனர். அவர்தம் நல் வரவைத் தமிழகம் அளவிறந்த அன்புடன் எதிர்நோக்குகிறது.

**தமிழர் குடிஇயல் கணக்கெடுப்பு**

8-2-61 புதன்கிழமை மாலை ஆறு மணிக்குச் சென்னைப் புரசைப் பாக்கம் நெடுஞ்சாலையிலுள்ள அன்னதான சமாசக் கட்டடத்தில் பேராசிரியர் மயிலை சிவமுத்து அவர்கள் தலைமையில் தமிழர் குடிஇயல் கணக்பெடுப்புப் பொதுக்கூட்டம் நிகழ்ந்தது. ஒன்பது பேரறிஞர்கள் சொற்பெருக்காற்றினர். தமிழ்ப் பெருமக்களே! நம் பண்டைப் புகழை நிலைபெறுத்த 10-2 61 முதல் 5-3-61 வரை எடுக்கப்படும் குடிஇயல் கணக்கில் தமிழ் மக்கள் ஒவ்வொருவரும் 'தமிழர்' எனத் தங்களைத் தவறாமல் பதிவு செய்து கொள்ளுதல் வேண்டும் என்று வற்புறுத்தினர்.

**செர்மன் பல்கலைக் கழகங்களில் தமிழ்க் கல்வி**

செர்மன் பல்கலைக் கழகங்களில் இந்தியப் பண்பாடு, வரலாறுபற்றிய பாடங்களை ஏராளமான செர்மன் மாணவர்கள் ஆர்வமுடன் முன்வந்து கற்கின்றார்கள். செர்மனியில் முன்பு சமக்கிருதம் மட்டுமே சொல்லிக் கொடுக்கப்பட்டு வந்தது. இப்போது தமிழ், இந்தி, வங்காளி, உருது ஆகிய மொழிகளும் கற்றுத் தரப்படுகின்றன.

**அமெரிக்காவில் தமிழ்ப் படிப்பு**

சிகாகோ பல்கலைக் கழகத்தில் தமிழ்மொழியைக் கற்றுத்தரும் திட்டத்தை விரிவுபடுத்துவது பற்றி இங்குள்ள தமிழ்த்துறைத் தலைவர் திரு. தெ. பொ. மீனாட்சிசுந்தரனாரையும், ஒலிஇயல்துறைப் பேராசிரியர் திரு. மு. சண்முகனாரையும் சிகாகோ பல்கலைக் கழகப் பேராசிரியர் டாக்டர் சிங்கர் சந்தித்துப் பேசினார்.

திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை, 2-140, பிராட்வே, அப்பர் அச்சகத்தில், திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர்: வ. சுப்பையா.

## எலிசபெத் அரசியின் குடும்பம்



ஸ்காட்லாந்து பால்மொரல் அரண்மனையில்
அளவளாவி வீற்றிருத்தல்



மணிமுடி அணிகலன்கள்

எலிசபெத் அரசிக்குக் கழகம் பேழையில் வைத்தளித்த போப் திருக்குறள்






| சிலம்பு ௩௫ | திருவள்ளுவர் ஆண்டு ௧௯௯௨, மாசி<br>மார்ச், **1961** | பரல் ௭ |
|---|---|---|

### பிரிட்டிசு அரசி எலிசபெத்தும் அவர்தங் கணவர் எடின்பரோ கோமகனும்

# தமிழக வருகைத் தனிமாண்பு

பண்பாடும் நாகரிகமும் மிக்குள்ள மக்கள் காட்சிக்கு இன்பமும், கருத்துக்கு இன்பமும், ஒழுக்கத்துக்கு உகந்த விழுத்துணையும் ஆகிய செயல்களைப் பொதுவும் சிறப்புமாகப் பண்டு தொட்டு இன்றுகாறும் கொண்டாடி வருகின்றனர். அவற்றுட் சிறந்தன திருக்கோவில்களில் நடைபெறும் நாள்விழாவும் சிறப்பு விழாவுமாகும். இவ்விரண்டும் வேந்தருள்ளிட்ட மாந்தர் அனைவர்க்கும் பொது. வேந்தன் - மன்னர் மன்னன்.

குடும்பத்தில் நடக்கும் கொண்டாட்டங்கள் அக் குடும்பத்தினர்க்கும் அதனைச் சார்ந்தவர்க்கும் இன்பம் அளிப்பன. ஒருவரோடொருவர் நேரிற்கண்டு பூண்ட அன்பினால் அளவளாவி இன்புறுதற்கும், புத்துறவுகள் அறிமுகஞ் செய்யப்பட்டு அறிந்து கொள்ளுதற்கும், இல்லங்களுந் தெருக்களும் தூய்மை செய்யப் பட்டு ஒப்பனைபுரிந்து அழகுறுத்தற்கும், மக்கள் திரளாக ஒரு காலத்து ஓரிடத்து ஒருங்கு கூடிக்களித்தற்கும், பெருஞ்சோற்று மிகுபதமுண்டு பேருவகை எய்துதற்கும், ஒவ்வொருவரும் ஆடை, யணி, பூசுதல், சூடுதல் முதலியவற்றால் தம்மை ஒப்பனை செய்து காணப்பட்டும் கண்டும் கழிமகிழ் வெய்துதற்கும் நடக்கின்றன. இன்னும் சான்றோரையும் பெரியாரையும் ஆங்குக் கண்டு வழிபட்டு நல்லறிவும் நல்லொழுக்கமும் பெற்று நலமுறு கின்றனர். முத்தமிழ் வளமும் கண்டு முதிர்ந்த இன்பமும் எய்துகின்றனர்.

இதுபோன்று நாட்டில், ஊரில், பேரூரில், நகரில் நடக்குங் கொண்டாட்டங்களும் மாந்தரனைவர்கட்கும் நல்வாழ்வும் நல்லின்பமுந் தருவனவேயாம். இக் கொண்டாட்டங்களனைத்தும் ஒரு காரணத்தை முன்னிட்டு நிகழ்வனவே. இவ் விழாக்களையே மக்கள் என்றும் விழைகின்றனர். மேலோரைக் கண்டு மேன்மையுறுகின்றனர்; இன்பம் எய்துகின்றனர். இவையே மண்ணிற் பிறந்தார் பெறும் பயன் ஆகும். சிறந்த பொதுக் கொண்டாட்டங்களனைத்திலும் ஒவ்வொருவர் இல்லமும் நல்ல வகையாக ஒப்பனை செய்யப்படுகின்றன. நல்விருந்தோம்பப்படுகின்றன. கண்ணுக்கு இன்பம், கருத்துக்கு இன்பம், கலந்துறவாடும் இன்பம், கைக்கொள்ளும் நன்மை முதலிய பலபேறுகள் ஒருங்கு கிடைத்தற்கு இடமாகின்றன. மேலும் தாயைக் கண்ட சேய் போலவும், மழையைக் கண்ட பயிர்போலவும் பெரியோரைக் கண்டு அனைவரும் இன்புறுகின்றனர். இவைகளை வீண் என்றோ, பெருமையின் பொருட்டென்றோ பேசுவதற்கு இடமில்லை. இவ்வுண்மைகளை உலகியல் வழக்கிலும் புலனெறி வழக்கிலும் பலபடக் காணலாம். புலனெறி வழக்கில் ஒன்றிரண்டு காட்டுதும்!

"பதிக ளெங்குந் தோரணங்கள் பாங்க ரெங்கும் பலவளங்கள்
வதிக ளெங்குங் குளிர்பந்தர் மனைக ளெங்கு மகிழ்புகைக்கார்
நதிக ளெங்கு மலர்ப்பிறங்கல் ஞாங்க ரெங்கு மோங்குவன
நிதிக ளெங்கு முழவினொலி நிலங்க ளெங்கும் பொலஞ்சுடர்ப்பூ."

"திசைக டோறும் வரும்பெருமை யமைச்சர் சேனைப் பெருவெள்ளம்
குசைகொள் வாசி நிரைவெள்ளம் கும்ப யானை யணிவெள்ள
மிசைகொள் பண்ணும் பிடிவெள்ள மேவுஞ் சோற்று வெள்ளங்கண்
டசைவி லின்பப் பெருவெள்ளத் தமர்ந்து கொடுங்கோ ளூரணைந்தார்."

"கொடுங்கோ ளூரின் மதில்வாயி லணிகோ டித்து மறுகிலுடுத்
தொடுங்கோ புரங்கண் மாளிகைகள் சூளி கரிசா லைகளெடுற்றி
நெடுங்கோ நகர்க ளாடரங்கு நிரந்த மணித்தா மங்கண்மது
விடுங்கோ தைப்பூந் தாமங்கள் நிரைத்து வெவ்வே றலங்கரித்து."

"நகர மாந்த ரெதிர்கொள்ள நண்ணி யெண்ணி லரங்குதொறு
மகரக் குழைமா தர்கள்பாடி யாட மணிவீ தியிலணைவார்
சிகர நெடுமா ளிகையணையார் சென்று திருவஞ் சைக்களத்து
நிகரி றொண்டர் தமைக்கொண்டு புகுந்தா ருதியர் நெடுந்தகையார்."

—கஉ. சேரமான் பெருமாள் நாயனார், கசஉ - கசரு.

"இனி, காத்தற்குப் பிரியுமென்பது, நலிவார் உளராக, நலிவு காத்தற்குப் பிரியும் என்பதன்று, நாட்டகத்து நின்றும் நகரகத்தும் தமக்கு உற்றது உரைக்கலாத மூத்தார்களும் பெண்டிர்களும் இருக்கை முடவரும் கூனரும் குருடரும் பிணி

யுடையாரும் என இத் தொடக்கத்தார் தம் முறைக்கருமம் கேட்டுத் திருத்துதற் பொருட்டாகவும், காட்டகத்து வாழும் உயிர்ச்சாதிகள் ஒன்றனை ஒன்று நலிவன உளவாயினவிடத்துத் தீதென்று அவற்றை முறை செய்தற்கும், கொடிவலைப்பட்டுக் கிடந்தனவற்றைத் துறை நீக்குதற்பொருட்டாகவும் வளன் இல்வழி வளம் தோற்றுவித்தற் பொருட்டாகவும், தேவகுலமே சாலையே அம்பலமே என்று இத் தொடக்கத்தனவற்றை ஆராய்தற்கும், அழிகுடி ஓம்புதற்கும் பிரியும் என்பது. அல்லதூஉம் பிறந்த உயிர் தாயைக் கண்டு இன்புறுவதுபோலத் தன்னால் காக்கப்படும் உயிர்வாழ் சாதிகள் தன்னைக் கண்டு இன்புறுதலின், தான் அவர்கட்குத் தன் உருக் காட்டுதற்கும், மாற்றரசர் ஒற்று வந்தவிடத்து அவர் முன்னர்த் தனது ஊக்கம் காட்டுதற் பொருட்டாகவும் பிரியும். அதனானே மாற்றரசரும் திறை கொடுப்பர் என்பது."

—இறையனாரகப்பொருள் - சூத்திரம் ௩௫ இன் உரை.

வேந்தர் மன்னர் முதலாயினாரின் வருகையின்போது கையுறையும் காணிக்கையும் கழிபெருங்காதலாற் செலுத்திக் கடமையாற்றிக் களிப்பெய்துகின்றனர் சார்குடியினர். இதனையும் இரு வகை வழக்கிலும் அளவிறப்பக் காணலாம். புலனெறி வழக்கில் ஒன்றிரண்டு காட்டுதும்:

"மலைபடு மணியும் பொன்னும் தரளமும் வரியின் றோலுங்
கொலைபுரி களிற்றின் கோடும் பீலியின் குவையும் தேனுந்
தொலைவில்பன் னறவு மூனும் பலங்களும் கிழங்குந் துன்றச்
சிலையுடை வேடர் கொண்டு திசைதொறு நெருங்க வந்தார்."

—௧௨. கண்ணப்பர், ௩௦.

"மாநீர் வேலிக் ... ...
யானைவெண் கோடும் அகிலின் குப்பையும்
மான்மயிர்க் கவரியும் மதுவின் குடங்களும்
சந்தனக் குறையுஞ் சிந்துரக் கட்டியும்
அஞ்சனத் திரளும் அணியரி தாரமும்
ஏல வல்லியும் இருங்கறி வல்லியும்
கூவை நூறுங் கொழுங்கொடிக் கவலையும்
தெங்கின் பழனும் தேமாங் கனியும்
பைங்கொடிப் படலையும் பலவின் பழங்களும்
காயமும் கரும்பும் பூமலி கொடியும்
கொழுந்தாட் கமுகின் செழுங்குலைத் தாறும்
பெருங்குலை வாழையின் இருங்கனித் தாறும்
ஆளியி னணங்கும் அரியின் குருளையும்
வாள்வரிப் பறழும் மதகரிக் களபமும்

குரங்கின் குட்டியுங் குடாவடி உளியமும்
வரையாடு வருடையும் மடமான் மறியும்
காசறைக் கருவும் மாசறு நகுலமும்
பீலி மஞ்ஞையும் நாவியின் பிள்ளையும்
கானக் கோழியும் தேன்மொழிக் கிள்ளையும்
மலைமிசை மாக்கள் தலைமிசைக் கொண்டாங்கு
ஏழ்பிறப் படியேம்[1] வாழ்கநின் கொற்றம்."
—சிலப்பதிகாரம், உரு. காட்சிக் காதை.

மன்னர் வருகையினைக் கண்டு குடிகளும் பிறரும் மகிழ்வர். மன்னர் மன்னனாகிய மாண்புமிகு வேந்தன் வருகையினைக் கண்டு குடிகளும் மன்னரும் பிறரும் கூடிமகிழ்வர். மெய்யடியார்களும் அவர்களை ஆட்கொண்டருளும் விழுமிய மெய்ப்பொருளாம் தெய்வமும் திருவுலாக் கொள்ளுங் காலத்து மெய்ந்நூலான்விட்ட அனைவரும் கூடிக் கண்டு வணங்கி இம்மையும் பெரும்பயன் எய்துவர். வேந்தன் அஞ்சி முறை செய்தற்கும் அம்மையும் தொழுது உய்தற்கும் இவையே துணையாவன. இவ்வுண்மை வரும் திருமாமறைகளான் உணரலாம்:

"மண்ணி னிற்பிறந் தார்பெறும் பயன்மதி சூடும்
அண்ண லாரடி யார்தமை யமுதுசெய் வித்தல்
கண்ணி னாலவர் நல்விழாப் பொலிவுகண் டார்தல்
உண்மை யாமெனி னுலகர்முன் வருகென வுரைப்பார்."
—கஉ. சம்பந்தர், கஎஅ.

"செல்வமிகு திருநாரை யூரின்மேயுஞ் சிவனளித்த
மதகரிக்குச் சிந்தைகூர்ந்து
நல்லபுக ழுடையநம்பி யாண்டார்நம்பி நண்பினொடு
நிவேதிப்பான் மதுரமிக்க
எல்லையில்வா ழைக்கனிதே னவலோடப்ப மெள்ளுண்டை
யிவ்வுலகோ ரொடுக்கவென்றே
மல்லன்மிகு சேனையுடன் இராசராச மன்னவனும்
மந்நகரில் வந்துசேர்ந்தான்."
—திருமுறை கண்ட புராணம், கூ.

இம்முறையில் தமிழகத் தலைநகராம் சென்னையில் 1961 பிப்பரவரி 19 ஆம் நாள் ஞாயிற்றுக்கிழமை மாலையில் பிரிட்டிஷ் அரசி எலிசபெத் அம்மையாருக்கும் அவர்தம் கணவனார் எடின்பரோ கோமகனார்க்கும் சிறந்த வரவேற்பும் ஊர்வலமும் நிகழ்ந்தன. இக் காட்சியினைக் கண்டவர்கள் பொய்யாநாவின் மேலோராகிய செந்நாப்புலவர்கள், தம்கூரிய புலமையால் செந்தமிழ் நூலகத்துக்

[1] குடிதழீஇக். திருக்குறள், ருச

கூறியுள்ளன அனைத்தும் அவர்கள் நேரிற் கண்டுகளித்த ஒப்பனைச் சிறப்புக்களை உலகுணர்ந்தின்புறப் பட்டாங்கு கூறியுள்ளனர் எனத் தெளிவர். சென்னை மாநகரிற் பல்வகைக் கொடிக்கம்பங் களும் வனப்புமிக்க வளைவுகளும் பல்லாயிரக்கணக்கில் பலவே றிடங்களில் வானளாவிப் பொலிந்தன. இவ்வளைவுகள் அடுக்கிய யானைமேல் அழகிய கொடிபிடித்து நிமிர்ந்து செல்லும் நீர்மைத் தாய் நனிமிகவுயர்ந்து காண்பார் கண்களைத் தங்கணீர்க்குந் தன்மைத்தாய்த் தலைசிறந்து திகழ்ந்தன. இவ்வுண்மையினை நெடுநல்வாடையில் வரும் அடியுடன் ஒப்புநோக்கி இன்புறற் பாலது :

"... ... ... ... ...
அஎ. வென்றெழு கொடியொடு வேழஞ் சென்றுபுகக்
குன்றுகுயின் றன்ன வோங்குநிலை வாயில்."

ஆட்சித்துறை, வணிகத்துறை, தொழில்துறை, கலைத்துறை, நாவாய்த்துறை முதலிய பல்வேறிடங்களில் பலவடுக்கு மாடங் களின் மீதும், கலங்களின் மீதும் தள்ளா விளையுளைச் செய்வாரும், தக்காரும், தாழ்விலாச் செல்வரும் வாழும் வளமனை மாடங்கள் மீதும் அளவிலா மின்விளக்குகளும் அழகிய கொடிகளும் சிறப் புறத் திகழ்ந்து, காண்பார் கண்ணுக்கும் கருத்துக்கும் கழிமகிழ் வூட்டின. தெருக்களும் மாடங்களும் பல்வகைத் தோரணங்களும், பூமாலைகளும், பொன்னரி மாலைகளும், வாழை முதலிய பசுத்த வனப்புமை பொருள்களும் பிறவும் நிறைந்து என்றுமில்லா எழி லுடன் திகழ்ந்தன. மாந்தர் பத்து நூறாயிரவர்க்குமேல் ஆடவ ரும், மகளிரும், மகார்களும், இளையரும், முதியரும் என்றுமில்லா ஆடையணி முதலியவற்றானும், அகமிகக்கொண்ட களிசார் மகிழ் வானும் மலர்ந்த வாட்டமில் முகப்பொலிவானும், கூட்டமிகுதிச் செறிவானும், நாட்டம் ஒன்றையே (அரசியின் வருகை) நாடும் நலத்தானும், பசி முதலியன தோன்றாமலும், வெயில் முதலியன வற்றிற்கு அஞ்சாமலும், நின்றவிடம் நீங்காமலும் நின்ற நிலைமை யானும் சொல்லொணாப் பேரின் பெய்தினரே யாயினர். மாந்தர் பெருங்கூட்டம் 19 கல்தொலைவுக்கு எள்ளிட இடமின்றி நெருங்கி இருந்ததென்றால் அதன் பெருமையினை எங்ஙனம் எடுத்தியம்பு வது? அரசியாரைக் காணுதல் வேண்டுமென்று பெருவேட்கை யினால் மக்கட் பெருங்கூட்டம் சாதி சமயங்களை மறந்து ஒருவரோ டொருவர் பிணக்கொழிந்து இணக்கம் பெரிதுடையராய் நின்ற நிலை என்றுங் காணொணாப் பெருநிலை யென்க.

அரசியாரின் வருகை முதலியவற்றின் பொதுவியல்பு சிறப் பியல்புகளை விரித்துக் கூறின் மிகவிரியுமாதலின் சுருக்கிக் கூறு கின்றாம். அரசியார் 19-2-61 மாலை 4 மணிக்கு மீனம்பாக்கம்

வானூர்தி நிலையத்தில் வந்திறங்கினர். இறங்கும்பொழுது மிகவும் புன்முறுவல் பூத்த முகப்பொலிவுடன் திகழ்ந்தனர். இவ்வானூர்தி கல்கத்தாவினின்றும் வந்தது. அரசியாரைக் கண்டதும் கூடியிருந்த பல்லாயிரக்கணக்கான மக்கள் கையொலி செய்து உள்ளத்துவகையினைத் தெள்ளிதிற் புலப்படுத்தி மகிழ்ச்சி எய்தினர். அரசியாரைப் பின்பற்றி அவர்தம் கணவனார் எடின்பரோ கோமகனாரும், பிரிட்டனிலுள்ள இந்தியத்தூதர் விசயலெட்சுமி பண்டிட்டும் வெளிவந்தனர். அப்பொழுது போலீசுப்பாண்டு இசைக்குழுவினர் பிரிட்டிசு நாட்டுப் பாடலையும், இந்திய நாட்டுப் பாடலையும் இசைத்து அரசியாரை வரவேற்று மரியாதை செய்தனர்.

வானூர்தி நிலையத்திற்கு வந்ததும் சென்னை மாநில ஆளுநர் திரு. விட்டுணுராம் மேதி அவர்கள் அரசியாரையும் அவர்தம் கணவனாரையும் எதிர்கொண்டு வரவேற்றனர். அவர் அரசியார்க்கு அழகிய பூச்செண்டொன்றை வழங்கினர். முதலமைச்சர் திரு. காமராசர் எடின்பரோ கோமகனுக்கு மலர்மாலை அணிவித்தனர். முதல் அமைச்சர்க்கு அருகில் சென்னையில் பிரிட்டனின் துணைத் தூதராகவுள்ள திரு. ஆலன், மலாயா அரசின் பிரதிநிதி திரு. யோகரத்தினம், பிரிட்டனின் வாணிகக் குழுப்பிரதிநிதி திரு. வார்டு, இலங்கையின் துணைத்தூதர் திரு. சயவீரா ஆகியோர் நின்று அரசியாரை வரவேற்றனர். இவர்களை ஆளுநர் அரசியாருக்கு அறிமுகப்படுத்தினர். பின் விமான நிலையத்தில் இந்திய விமானப் படைவீரர்கள் அணிவகுப்பு மரியாதை அளித்தனர். அரசியாரும் ஏற்றனர்.

பின்னர்த் தமிழ்நாட்டுத் தலைமை நீதிபதி திரு. பி. வி. இராசமன்னார், சென்னை மேல்சபைத் தலைவர் டாக்டர் பி. வி. செரியன், சட்டசபைத் தலைவர் டாக்டர் யூ. கிருட்டிணராவ், ஆகியோரையும் தமிழ்நாட்டமைச்சர்கள் திருவாளர்கள் சி. சுப்பிரமணியம், ஆர். வேங்கடராமன், எம். பக்தவத்சலம், பி. கக்கன், எம். ஏ. மாணிக்கவேலு, வி. இராமையா, திருமதி லூர்தம்மாள் சைமன் ஆகியோரையும் முதலமைச்சர் திரு. காமராசர் அரசியாருக்கு அறிமுகஞ் செய்துவைத்தனர். அவர்களுடன் அரசியார் கைகுலுக்கினர். மற்றும் தமக்கு வணக்கம் கூறி வாழ்த்துத் தெரிவித்தவர்களுக்கு அரசியார் நன்றி தெரிவித்தனர். மேலும் அங்குக் கூடியிருந்தோரை எடின்பரோ கோமகனார்க்கு உட்டுறையமைச்சர் திரு. எம். பக்தவத்சலம் அறிமுகம் செய்துவைத்தனர்.

மேலும் சென்னை மாநகராட்சி மன்றத்தலைவர் திரு. வி. முனுசாமியை முதலமைச்சர் அரசியார்க்கு அறிமுகம் செய்து

வைத்தனர். அரசியார் அவருடன் கைகுலுக்கினர். பின்பு சில நிமிடங்கள் உரையாடினர். பின் சென்னை மேல் சபையின் எதிர்க் கட்சித் தலைவர் டாக்டர் ஏ. இலட்சுமணசாமி முதலியார் முதலிய பலரும் அரசியாருக்கு அறிமுகம் செய்து வைக்கப்பட்டனர்.

அரசியாரும் அவர்தம் கணவனும் விமான நிலையத்திலிருந்து வனப்பமை உந்தூர்தியிலேறிக் கிண்டியிலுள்ள இராச பவனத்திற்குப் புறப்பட்டுச் சென்றனர். வழிநெடுக இருமருங்கிலும் கூடிநின்ற ஏராளமான பள்ளிக் குழந்தைகள் மகிழ்ச்சி ஆரவாரஞ்செய்து பெரும் வரவேற்பு அளித்தனர். விமான நிலைய ஒப்பனை மிகவும் சிறப்பாக இருந்தது. இந்தியத் தேசியக் கொடிகளும் இங்கிலாந்து நாட்டுத் தேசியக்கொடிகளும் கண்டார் வியப்பப் பட்டொளி வீசி மண்டிப்பறந்தன. 'வருக, வருக' என்னும் மொழிகள் பொறிக்கப்பட்ட பன்னிற அட்டைகள் யாண்டும் மன்னி மிளிர்ந்தன. அரசியாருடன் சென்னை ஆளுநர் காரில் அமர்ந்திருந்தனர். அதன் பின்னால் வந்த காரில் கோமகனும் முதலமைச்சர் திரு. காமராசரும் அமர்ந்து சென்றனர். விமான நிலயத்திலிருந்து கவர்னர் மாளிகைக்குச் செல்லும் 5 கல் தொலைவு முற்றும் மக்கள் வெள்ளம் மிக்கிருந்தன. அம் மக்கள் அரச வாழ்க்கைத் துணையரை (தம்பதிகளை) மிக்க கிளர்ச்சியுடன் வரவேற்றனர். அரசியாரின் கார் அழகு மிக்க நெடுவழி வரவேற்பு வளைவுகளில் செல்லும்போதெல்லாம் மக்கள் வெள்ளம் மூவண்ணக் கொடிகளையும், பிரிட்டன் கொடிகளையும் அசைத்து அகநிறை எழுச்சி வரவேற்பளித்தனர்.

பின் கவர்னர் மாளிகையில் சிறிதுநேரம் தங்கினர். தங்கிவிட்டுத் தமிழ்நாட்டின் தலைநகரும் வரலாற்றுப் பெரும்புகழ் வாய்ந்ததுமான சென்னை மாநகரைச் சுற்றிப்பார்க்கும் பொருட்டு அரசவாழ்க்கைத் துணையர் இருவரும் வேந்தூர்வலம் புறப்பட்டனர். திறந்த கார் ஒன்றில் அரசி எலிசபெத்தம்மையாரும், கவர்னர் திரு. மேதி அவர்களும் அமர்ந்திருந்தனர். அவர்களுக்குப் பின்புறம் வந்த காரில் கோமகன் பிலிப்பும், முதலமைச்சர் திரு. காமராசரும் அருகருகே அமர்ந்திருந்தனர். வழிநெடுக மக்கட்டிரள் இருந்ததோடு சாந்தோமிலும் இலட்சக் கணக்கான மக்கள் திரண்டு வரவேற்றனர். அடையாறிலிருந்து மயிலாப்பூர் வரையுள்ள இரண்டுகல் தொலைவு நெடுகலும் மிக்க மக்கள்கூட்டம் இருமருங்கிலும் நின்று வரவேற்றன. சிற்சில இடங்களில் மக்கள் கூட்டம் 20 வரிசைவரை நின்றன. மக்கள் கூட்டத்தையும் அவர்தம் அடங்கா ஆரவார மகிழ்ச்சியையும் அரசியார் கண்டு களிகூர்ந்து கையசைத்துப் புன்சிரிப்புக் காட்டினர்.

அரசவாழ்க்கைத்துணையார் ஊர்ந்துவந்த கார் மூன்றுகல் நீளமுள்ள மரீனா கடற்கரைச் சாலைவழியாகச் சென்றது. உலகிலேயே இரண்டாவதான சிறந்த அழகிய கடற்கரை எனப் புகழ்பெற்றோங்கியது இம் மரீனாக் கடற்கரையாகும். கார் வரும்போது மாலைத் தென்றற்காற்றும் என்றுமிலா இன்பம் அளித்து நின்றது. வரும்வழியில் இருவரும் சியார்ச்சுக் கோட்டையைக் கண்ணுற்றனர். இக்கோட்டை 350 ஆண்டுகளுக்கு முன் அரசியாரின் மூதாதையரால் கட்டப்பட்டது. இதனுள் இந்தியாவிலேயே மிகவும் தொன்மைவாய்ந்த ஆங்கில மாதாகோவிலான 'புனிதமேரி' மாதாகோவிலிருக்கிறது. இதில் தான் ராபர்ட் கிளைவுக்குத் திருமணம் நிகழ்ந்ததென்ப. இக் கோவிலில் 55 ஆண்டுகளுக்கு முன் அரசியாரின் பாட்டனா ரான ஐந்தாம் சியார்ச்சு மன்னர் வேல்சு இளவரசராக இருந்தகாலத்தில் வந்து வணங்கியுள்ளனர். தம் பாட்டனார் வருகைபுரிந்த 55 ஆண்டுகள் மூன்று கிழமைகளுக்குப் பின் இரண்டாம் எலிசபெத் அரசியார் தம் கணவருடன் இம் மாதா கோவிலுக்கு வந்தனர். இக் கோவிலின் பார்வையாளர் ஏட்டை அரசியாரும் கோமகனாரும் பார்வையிட்டனர். அதில் வேல்சு இளவரசரும் இளவரசி விக்டோரியாவும் 1906 ஆம் ஆண்டு சனவரி மாதம் 27 ஆம் நாள் கையெழுத்திட்டிருக்கின்றனர். இக் கையெழுத்தைக் கண்டு அரசியார் வியப்பெய்தினர். அரசியாரும் கோமகனாரும் பார்வையாளர் ஏட்டில் கையெழுத் திட்டனர். கோட்டைக்குள் அரசியாரும் கோமகனாரும் சென்ற வீதிகள் நெடுகிலும் தமிழக அரசுத் தலைமை அலுவலாளர்களும் அவர்தம் குடும்பத்தினருமாக ஏறத்தாழ (9000) ஒன்பதினாயிரவர் குழுமியிருந்து அரச வாழ்க்கைத்துணையரைக் கண்டு மகிழ்ந் தனர்.

கடற்கரைச் சாலையைக் கடந்து நகரின் முதன்மை வணிக வட்டாரச் சாலைவழியாக அரசவாழ்க்கைத் துணையரின் கார் நுழைந்ததும் பல்லாயிரக் கணக்கான மக்கள் மகிழ்ச்சி ஆரவாரஞ் செய்து வரவேற்றனர். ஆங்காங்கு மக்கள் மகிழ்ச்சியுடன் அளிக்கும் வாழ்த்தொலிகளுக்கு அரசியாரும் கோமகனாரும் தங்கள் கைகளை அசைத்து நன்றி தெரிவித்துக்கொண்டே வந்தனர்.

மாலை 6-20 மணி அளவில் எலிசபெத் அரசியார்க்கும் எடின்பரோ கோமகனார்க்கும் தமிழ்நாட்டு முதலமைச்சர் திரு. காமராசர் இராசாசி மண்டபத்தில் சிறப்பான வரவேற் பளித்தனர். அப்பொழுது சிற்றுண்டி விருந்தும் நல்கப்பெற்றது. தமிழ்நாட்டுச் சட்டமன்ற மேற்சபை உறுப்பினர்களும் அமைச்

சர்களும் இவ் வரவேற்பில் கலந்துகொண்டனர். நிதியமைச்சர் திரு. சி. சுப்பிரமணியம் அரசியாரையும், கோமகனாரையும் நன்கு வரவேற்றனர். சட்டமன்றத் தலைவர் மன்ற உறுப்பினர் சார்பில் அரசியார்க்குத் தந்தத்தால் செய்யப்பட்ட அம்பலவாணர் திருவுருவொன்றை வெள்ளிப் பேழையில் வைத்து நல்கினர். அதுபோல் கோமகனார்க்கு வெள்ளியாற் செய்த சிகரெட்டுப் பெட்டியொன்றை அளித்தனர்.

அரசியாரின் மூன்றாவது குழந்தையின் பெயர் ஆண்ட்ரூ. இப் பிள்ளையின் முதலாண்டு நிறைவு இந் நாளாகும். இப் பிறந்த நாளையொட்டி இராசாசி மண்டபத்தில் ஒரு பேருருவப் பிறந்த நாள் ரொட்டி தரப்பட்டது. அதனை அரசியார் தங் கையால் துண்டாக்கி மற்றையார்களுக்கு மனமகிழ்வுடன் வழங்கினர்.

தமிழக ஆளுநர் திரு. விட்டுணு மேதியவர்களால் தம் மாளிகையில் இரவு 10 மணிக்கு அரசவாழ்க்கைத் துணையர்க்குச் சிறந்தவொரு விருந்தளிக்கப்பட்டது. அவ் விருந்தின்போது 1200 பேர் கலந்து கொண்டனர், காருக்குறிச்சி அருணாசலத்தின் நாதசுர இன்னிசைச் செவியுணவும் வழங்கப்பட்டது.

அப்பொழுது ஆட்சித்துறையினரால் அன்படையாளமாகப் பரிசுகள் சில வழங்கப்பட்டன. அதுபோழ்து "**தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தாரால்**" அடியில்வருமாறு அன்பும் ஆர்வமும், பணிவும் இன்பும் என்றும் புலனும் எழிலடையாளமாக விழுமிய பரிசொன் றளிக்கப்பெற்றது :

"எல்லா வுலகமும் ஆளும் நீயே" என இறைவனை ப ட இடையறாது யாண்டும் எல்லாரும் அன்பினால் முறையுறத் தொழுது இன்புறுவர். அதுபோல் பிறிதொன்றனைக் காண்டலும் கேட்டலும் அரிதாகும். எனினும், தனக்குத்தானே ஒப்பாகிய மறைநூல் ஒன்றுளது. அதுவே உயர்வற உயர்ந்த உயர்நலமிக்க தனித்தமிழ் செயிராறு **திருக்குறளாகும்**. இதனை ஆக்கியருளிய ஆசிரியர் தனித்தமிழ் மெய்யடியார் **திருவள்ளுவநாயனாராவர்**. இத் திருப் பெயரினை நாயனாரெனத் தனிச் சிறப்பாகவும் வழங்குவர். இவர் செம்பொருட்டுணிவினர் ; தொன்மைச் செந்தமிழ்நாட்டுத் தோன்றி வழக்கு வீழாது இன்றுகாறும் நின்று நிலவி வழங்கி வரும் செந்நெறிக் கொள்கையர். மயல்சேர் அயன்மொழியாளரால் ஆக்கப்பெற்று ஆங்காங்கு, வழங்கப்பட்டு வரும் பின்னெறிப் பெற்றியைப் பின்தொடர்ந்தவரல்லர். வாய்மை பிழையாது நடுநின்றுய்வார்க்கு அவர் ஆக்கியருளிய நூலும் அதன்கண் ஓதப்பட்டுள்ள நெறியும் முறையே தமிழர் பொதுமறையும், தமிழர் பெருநெறியுமா மென்பது தானே பெறப்படும்.

இதுவே தமிழர் மதம்; தனித்தமிழர் மதம்; எல்லா வுலகினர்க்கும் பொதுவாமியல்பு வாய்ந்த இனித்த பொதுமதம். அவ் வுண்மை அப் பொதுமறை நூலினை இன்றும் எல்லா மொழியாளரும் எல்லா மதத்தினரும் தங்கள் தங்களுக்குரிய நூலென்று தலைமேற் கொண்டாடுதலான் விளங்கும்.

இந்நூல் தோன்றி ஏறத்தாழ இரண்டாயிர ஆண்டுகளுக்கு மேலாகின்றது. அங்ஙனமிருந்தும் கடந்த நூற்றாண்டிற்றான் அஃதுலகறி பெருமறையாய் விளங்கிற்று. அங்ஙனம் அது விளங்குவதற்குக் காரணமும் நம் மாண்புமிக்க அரசியார்க்குரிய ஆங்கில மொழியின்கண் மொழிபெயர்க்கப்பட்டு வெளி வந்தமையேயாகும். ஆங்கில மொழி இந்நாளில் உலகப் பொது மொழியாக நிலவுவதும் ஒரு காரணமாகும். அத்தகைய ஆங்கில மொழிபெயர்ப்பை ஆக்கியளித்த பெரியார் டாக்டர் ஜி. யு. போப்பையரவர்கள் ஆவர். அவர் ஆங்கிலநாட்டில் தோன்றினர். ஆங்கில மொழியில் முதுபெரும் புலவரானார். அத்தகைய பெரும்புலவரும் தம்மைத் 'தமிழ் மாணவன்' எனக் கூறுவித்துக் கொண்டதுமன்றித் தமது கல்லறையின்கண் அங்ஙனங் கல்லெழுத்துப்படுத்துவித்து நிலைநாட்டியுமுள்ளனர்.

அவர் கி. பி. 1820 இல் ஆங்கில நாட்டில் தோன்றினர். இளமைக்காலத்தில் கிறித்துவத் தொண்டினை மேற்கொண்டு செந்தமிழ்நாட்டிற்கு வந்தனர். சமயத்தொண்டும் அமைவுறப் புரிந்தனர். அப்பொழுது இயல்பாயமைந்த இனிமையுந் தெளிவும், எளிமையும், தொன்மையும், நன்மையும் மிக்குள்ள தேனினுமினிய நம் தமிழ்மொழியினை ஆர்வமொடு கற்றுவந்தனர். தமிழ் இலக்கண இலக்கியங்களில் நிறைந்த பெரும் புலமையுடையவராயினர். தனித்தமிழ் மெய்ந்நூல்களே உலக வொற்றுமைக்கும் உய்வுக்கும் தக்க துணையாம் மிக்க பெருநூலெனக் கண்டனர். கண்டு 'திருக்குறள், நாலடியார், திருவாசகம்' ஆகிய மூன்று சிறந்த நூல்களையும் ஆங்கிலத்தில் செய்யுள் வடிவிலே மொழிபெயர்த்து வெளியிட்டுள்ளார்.

மேலும் இங்கிலாந்து வரலாறு, இந்திய வரலாறு என்ற நூல்களைத் தமிழில் எழுதி வெளியிட்டனர். சைவசித்தாந்த மெய்ப்பொருள் நூல்களை (சாத்திரங்களை) நன்கு கற்று உண்மையுணர்ந்து அவற்றைப்பற்றிப் பெரிதும் பாராட்டிக் கட்டுரைகள் பல எழுதியுள்ளனர். ஆங்கிலமக்கள் தமிழைக் கற்றுக்கொள்ளுவதற்கு ஏற்றபடி தமிழ்ப்பாட நூல்களும், இலக்கண நூல்களும் எழுதி வெளியிட்டுள்ளார். இனிய இயல் என்றுந்திறம்பாத தனித்தமிழைப் படித்துணர வேண்டுமெனத் தூண்டியதுமட்டுமல்லாமல் தமிழ்மக்கட்கும் அவர் தம் சீரிய மொழியிடத்துப்

யும் ஊட்டினர். தெலுங்குமொழியினும் இன்னார்க்கு நல்ல பயிற்சியுண்டு. வேதாந்த நூலாகிய கைவல்லிய நவநீதத்தை எழுத்தெண்ணிப் படித்துள்ளனர்.

திக்கெலாம் புகழும் திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள சாயர்புரம் என்னும் அழகிய சிற்றூரிலே இவர் கல்விப்பணி யாற்றிக்கொண்டு சிலகாலம் தங்கியுள்ளனர். இவர் பெயரால் ஓர் உயர்நிலைப்பள்ளி ஆங்கு மிகச் செம்மையாக நடந்துகொண்டு வருகின்றது. இப்பெரியார் - 12-2-1908 இல் தம் அழியாப் புகழை இம்மைக்கண் நிறுத்திச் செம்மையுலகு சென்றெய்தினர்.

இத்தகைய பெரும் புலமையும் பெருந்தொண்டும் அரும் புகழும் எய்தியுள்ள டாக்டர் ஜி. யு. போப் துரைமகனாரால் மொழி பெயர்க்கப்பட்டுள்ள **'திருக்குறள் ஆங்கில மொழிபெயர்ப்பு நூல்'** ஒன்று வனப்புற வாய்ந்த உயர்ந்த கட்டடஞ் செய்யப்பெற்றுக் கண்கவர் புனை ஓவிய வேலைப்பாடுகள் நிறைந்த ஓர் அரிய மரப் பேழையில் வைக்கப்பெற்று அத்துடன் போப் துரைமகனாரின் பெருமைமிக்க வரலாற்றுக் குறிப்பும், அவரால் வெளியிடப்பட்டுள்ளதும், கழகத்தாரால் வெளியிடப்பட்டுள்ள சிறந்த ஆங்கில மொழிபெயர்ப்புத் தமிழ் நூல்களின் விளக்கங்களும் அமைந்துள்ள ஆங்கில அட்டவணைகளும் இணைக்கப்பெற்று, அப்பேழையின் முதுகுப்புறத்தில் அந் நூல் கழகத்தாரால் **எலிசபெத் அரசியார்க்கு** அளிக்கப்படும் விளக்கங்கள் வெண்பொற்றகட்டில் நன்கு பொறிக்கப்பட்டுக் குயிற்றித் தமிழ் மாநிலப் பொருளமைச்சர் திரு. **சி. சுப்பிரமணியம்** வாயிலாக அன்பளிப்பாக **வழங்கப்பெற்றுள்ளது.** இந் நிகழ்ச்சி சிறந்த செய்தித் தாள்களில் படத்துடன் வெளிவந்துமுள்ளது.

20-22-1961 திங்கட்கிழமை காலை அரசியார் பெரம்பூர் இரயில் வண்டித் தொழிற்சாலையைப் பார்வையிட்டார். அப்பொழுது எடின்பரோ கோமகன் பின்னி பக்கிங்காம் கர்நாடிக் நூலாலையைப் பார்வையிட்டனர். மாலையில் அரசியாரும் கோமகனாரும் சென்னை நகரப் பள்ளிகளைச் சேர்ந்த 45,000 பள்ளிக் குழந்தைகளின் மாபெரும் அணிவகுப்பைக் கண்டு களிகூர்ந்தனர். இவ்வணிவகுப்பு சென்னைமாநகராட்சி விளையாட்டரங்கில் நிகழ்ந்தது. இக் குழந்தைகள் தென்னக விளையாட்டுகளையும் நடனங்களையும் புரிந்தனர். இவற்றில் 2000 பள்ளிச் சிறுமியர் பங்குகொண்டனர்.

மாநகராட்சி மன்றத் தலைவர் திரு. வி. முனுசாமி ரிப்பன் கட்டிடத்தில் வரவேற்றுப் பூச்செண்டொன்றை அரசியார்க்கு வழங்கினர். கோமகனார்க்குத் துணைத்தலைவர் திரு. ஏ. செல்வராசு

மாலை அணிவித்தார். ரிப்பன் கட்டடம் போன்று 5,000 வெண்பொன் மதிப்பிற் செய்யப்பட்டதொன்றைப் பரிசாக நல்கினர். இளவரசர் ஆண்ட்ரூவிற்குத் தஞ்சாவூர்ப் பொய்க்கால் குதிரைகள் இரண்டு அன்பளிப்பாக அளிக்கப்பட்டன. அரசியின் பெண் குழந்தையான ஆனுக்கு வெள்ளியால் செய்யப்பட்ட வீணையொன்று கொடுக்கப்பட்டது. மூத்தமகன் சார்லஸுக்கு வெள்ளியாற் செய்த கோர்ட்ஸ்டாண்டு கொடுக்கப்பட்டது. இவைகளின் மதிப்பு வெண்பொன் 1700 ஆகும். மாநகராட்சி மன்றத் தலைவர் பார்வையாளர் புத்தகத்தில் அரசியாரிடம் கையெழுத்து வாங்கினர். எடின்பரோ கோமகனாரைக் கீழிறங்கி வந்து கையெழுத்திடும்படி துணைத்தலைவர் திரு. செல்வராசு செய்தனர்.

சென்னைப் பல்கலைக்கழகத்தார் அரசியார்க்கும் கோமகனார்க்கும் சிறந்த வரவேற்பளித்தனர். இதில் கல்வித்துறையில் முன்னணியிலுள்ளோர் திரளாகக் கலந்துகொண்டனர். சென்னைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் டாக்டர் ஏ. இலட்சுமணசாமி முதலியார் மிக்க சிறப்புடன் வரவேற்றனர். வரவேற்று சின்டிக்கேட் உறுப்பினர்களை அரசியார்க்கும் கோமகனார்க்கும் அறிமுகம் செய்து வைத்தனர். ஆளுநர் அமைச்சர்கள் உயர்நீதி மன்றத் தலைமை நடுவர் முதலிய சிறந்தோர் பலரும் கலந்து கொண்டனர். தேநீர் விருந்து நிகழ்ந்தது. அரசியாரின் வருகையை முன்னிட்டு வெளியிடப்பட்ட சென்னைப் பல்கலைக் கழகச் சிறப்பு மலரை அழகிய வெள்ளிப் பேழையுடன் துணை வேந்தர் அரசியார்க்கு வழங்கினர். தந்தத்தால் செய்யப்பட்ட அழகிய கலைமகள் உருவமொன்றும், பல்கலைக் கழகச் சிறப்புமலரொன்றும் கோமகனார்பால் டாக்டர் பி. வி. செரியனால் அளிக்கப் பட்டன. இருவரையும் தேசிய மாணவப் படையினரும், மாணவியப் படையினரும் இருபுறங்களிலும் அணிவகுத்து நின்று

அரசியார் புறப்படுவதற்கு முன் தமிழக முதலமைச்சர் திரு. காமராசர் வாயிலாக விடுத்த அன்பு மொழிகள் வருமாறு: "தமிழகத்தின் தலைநகரான சென்னைமாநகர் மக்கள் எங்களுக் களித்த மாபெரும் வரவேற்பு எங்கள் உள்ளத்தைத்தொட்டு விட்டது. இந்நகர மக்களின் மகிழ்ச்சிப் பெருக்கும், எழுச்சியும் என்றும் மறக்கொணா அன்பும், பண்பும் எங்கள் நெஞ்சத்து நீங்கா இடம் பெற்றுவிட்டன என்பதே"

வாழ்க எலிசபெத் அரசியார்!

வாழ்க எடின்பரோ கோமகனார்!

வாழ்க நாடு! வளர்க மாநில அரசு.

# மாட்சிமை தங்கிய எலிசபெத்தரசி வருகை

[வித்துவான். பெ. கோவிந்தன்]

வருக வருகென வளமலி பாரதப்
பெருநிலத் தலைவனும் பேரறி வமைச்சரும்
உள்ளந் தன்பா லுவகையா லழைக்கத்
தெள்ளுநீ ராடை யுடுத்துத் திகழ்தரு
உலக மங்கை நலமலி முகமென
விளங்கு மிங்கிலாந்து வளங்கெழு நாட்டுக்
கலைமலி செல்வி எலிசபெத் தரசி
மணம்புரிந் துவக்கும் கணவனோ டிணைந்து
வான வூர்தியி லேறி மகிழ்வொடு
விண்ணிழி யூர்தியில் வண்ணமெய் யிந்திரை
கொண்கனோ டிவர்ந்து மண்ணிழிந் தாங்கு
நல்லெழில் மாடத் தில்லிவந் தடைந்தனள்.
நாட்டுத் தலைவனும் நல்லறி வமைச்சரும்
ஆட்சிசெய் சட்ட மாக்கும்பே ரறிஞரும்
திண்டோ ளாடவரும் பெண்டிரும் சிறுவரும்
வருக வருக வாழ்க என்றனர் ;
மருமலர் புனைந்தனர்; விருந்தளித் துவந்தனர்;
நாட்டி. னியற்கைக் காட்சி தனையும்
பலநாள் வளர்த்த கலைகளின் மாண்பையும்
கண்டுபே ரரசி களிக்கக் காட்டினர்.
மின்னிலத் தாடல்போல் விளங்குமெய் யசைத்து
நன்னுதல் மகளிர் பண்ணிசைத் தாடினர்.
பாரத நாட்டின் பேரிசை கேட்டுளேன்.
இன்று மக்கள் நன்றியைக் கண்டேன்.
தலைவர்க ளன்பையும் கலைகளி னுயர்வையும்
வருவிருந் தோம்பும் பெருமையும் கண்டேன்.
மாண்டகு மெம்முன்னோர் மகிழ்வுற முறைமையின்
ஆண்டநம் நாடு விடுதலை யடைந்து
பாரில் விளங்கும் சீர்மையை யறிவேன்
இன்று மக்காள்! இருவேம் நாடும்

ஒன்றி மக்கள் வாழ்க்கைக் குதவும்
என்று மொழிந்த எலிசபெத் தரசி
நலமலி பற்பல தலைநகர் கண்டு
செந்தமிழ் நாடு காண வந்தனள்.
பொன்னின் விளங்கு சென்னைமா நகரிடை
வந்த அரசியை மலர்முகங் காட்டிச்
செந்தமிழ் நாட்டு மைந்தரும் மகளிரும்
அணியி னின்று மணமலர் தூவி
வருகென மொழிந்தனர்; வாழ்கென வாழ்த்தினர்.
கலையி னழகுறு பலபொரு ளளித்தனர்.
தொன்மையில் தோன்றிய நன்மொழி தமிழ்மொழி.
தமிழ்மொழி பகர்வார் தமிழ ராவார்.
வாழ்க்கையில் சிறக்க மக்களென் றிசைபெறத்
தண்டமிழ் மக்கள் கண்டனர் பலஅறம்.
பலநல் லறத்தையும் சொலுநூல் திருக்குறள்.
குறளினுக் கொப்பாம் அறநூல் பிறிதிலை.
திருக்குறள் நூலினை விருப்பினோ டெடுத்துக்
கற்பார் தமிழைக் காண்பார்; தமிழர்தம்
பற்பல அறங்களைக் காண்பார்; பாடிய
வள்ளுவன் திறமையைத் தெள்ளிதி னறிவர்.
ஆதலின் குறளை யோதுக என்றதற்(கு)
ஆங்கில மொழிபெயர்ப் பமைந்த நூலினை
மெய்ம்மை யுரைக்கும் **சைவசித் தாந்தநூற்**
**பதிப்புக் கழகம் உவப்பினோ டளித்தது.**
பெருமையிற் சிறந்த எலிசபெத் தரசி
கற்க குறளினை. கற்றபின்
நிற்க. புகழொடு நீடுவா ழுகவே.

# பண்டித பந்த் பரமனடி எய்தினர்

இந்தியப் பேரரசின் உள்நாட்டுத் துறையமைச்சர் பண்டித பந்த் அவர்கள் 7-2-1961 காலை 8-50 மணிக்குப் பேரா இயற்கைப் பெருநிலையுற்றனர். இதனையுணர்ந்த குமரிமுதல் வடபெருங்கல் ஈறுகவுள்ள பாரதநாடு முழுவதும் தாங்கொணுத் துன்பத்தி லாழ்ந்தது. இந்தியப் பேரரசினைத் தூணெனத் தாங்கி நிற்கும் சிலருள் இவரும் ஒருவர். 20-2-1961 இல் பந்த் அவர்கள் தம் நினைவற்றுப் படுத்த படுக்கையாகக் கிடந்தனர். சிறந்த மருத்து வர்கள் ஒரெழுவர் முழுமூச்சுடன் மருத்துவம் புரிந்தனர். பந்த் அவர்களின் மூளைப்பகுதியில் குருதிக்குழாய் வெடித்து விட்டது. திங்கட்கிழமை முதலே நாடித் துடிப்புக் குறைந்து கொண்டே வந்தது. கடந்த பதினைந்து நாட்களாக நினைவற்றுப் படுக்கையாகக் கிடந்தும் ஆவி நீங்காது நின்றதும் அவர்தம் உள்ளத்துறுதியையே காட்டுகின்றது. பலவுறுப்புக்கள் செய லற்றுப்போன இடத்தும் அது இத்தனை நாள் நீங்காதிருந்ததும் அவ்வுறுதியேயன்றிப் பிறிதில்லை. நினைவற்ற நிலையிலேயே வேறெவ்வகைத் துன்பமும் இன்றி ஆவி நீங்கிற்று.

பந்த் படுத்ததும் நேரு அவர்கள் தூண் அசைந்துகொண் டிருக்கின்றதென வருந்திக்கூறினர். ஆவி நீங்கின செய்தியை இலண்டன் மாநகர் செல்லும் வழியில் வானூர்தியிற் கேட்டுக் கண்ணீர் வடித்து வருந்தினர். நேருவோடு பந்த் விடுதலைப் போராட்டத்தில் தோளோடு தோள் சேர்ந்துழைத்து மண்டை யில் அடிபட்டு அதனால் தலையாட்ட முற்றுப் பலமுறை சிறை சென்று மீண்ட பன்னரும் வீரர். நேருவின் கருத்திக்கியைந்த அறிவும், ஆய்வும், ஆய்வுரை கூறும் திறனும், கூறியாங்குச் செய லாற்றும் உரனும் மிக்கவர். இவ்வுண்மை நேரு இலண்டன் மாநகர் இறங்கியதும் கவலை கூர்ந்தவுளத்துடனும் வாட்டமிக்க முகத்துடனும் செய்தியாளரிடம் கூறிய வருந்தொடர்களால் உணரலாம்: “அவர் என்னுடைய தோழர் - கூட்டாளி - 35 ஆண்டுகளாக என்னுடன் தோளொடு தோள் நின்ற நண்பர், ஏக்கழுத்த(கம்பீரம்)மான தோற்றமுடையவர், மிகப்பெரும் கூர்த்த மதிசேர் சூழ்ச்சித் துணைவர், துணிவு நிறையுளத்தர், பழகுதற்கு இனியர்” என்பதே.

புதுத் தில்லியில் மவுலானு ஆசாத் நெடுவழி எண் 6 இலுள்ள பந்த் அவர்கள் வளமனையின் முகப்பில் அவர்தம் பொன்னுடல் அரசுமுப்பு மரியாதைகளுடன் வைக்கப்பட்டிருந்தது. துன்பமே உருவான துணைவர்களும், திரளான நண்பர்களும், காங்கிர

சாரும், பொதுமக்களும், அரசியல் துறைச் சிறந்தோரும் அணிஅணியாக வந்து கடைசி மரியாதையைச் செலுத்திச் சென்றனர். நிகாம் போத் கட்டடத்தில் இறுதிச் சடங்குகள் நடைபெறுதற் பொருட்டுப் பிற்பகல் 12-30 மணிக்கு ஆவி நீத்தவுடல் ஊர்வலமாகக்கொண்டு செல்லப்பட்டது. அரசியலார் ஒருகிழமை துக்கம் கையாளும்படி கட்டளை பிறப்பித்துள்ளனர். தேசியக்கொடி எங்கும் தாழப் பறக்கவிடப்பட்டது. அரசியற்றுறை முழுவதும் ஒருநாள் விடுமுறை விடப்பட்டது.

பண்டித பந்த் அவர்களின் உடலை வைக்கப்பட்டிருந்த பீரங்கி வண்டி வீட்டிலிருந்து 12-30 மணிக்குப் புறப்பட்டுத் தேசியக் கொடியால் போர்த்தப்பட்டுக் கதர்மாலை பூமாலை முதலிய சிறப்புக்களுடன் முப்படையையுஞ் சேர்ந்த 500 வீரர்கள் புறஞ்சூழ வேறு சில படைவீரர்கள் தலைமை தாங்கச் சென்றது. அவ் வண்டியைத் தொடர்ந்து, பந்த் அவர்களின் குடும்பத்தினரும், குடியரசுத் தலைவர், தலைமைத்தலைவர், அமைச்சர் முதலியோரும் பின் வந்தனர். மாலை 5-30 மணிக்கு யமுனை ஆற்றங் கரையிலுள்ள நிகாம் போத்தென்னும் மட்டுங் கல் கொலனியிலுள்ள நன்காட்டிற்கு அவ்வுடலம் கொண்டு வரப்பட்டது. பந்த் அவர்களின் ஒரே மகனார் தம் தந்தையின் உடலுக்கு எரியூட்டினர். இறுதிச் சடங்குகள் இந்து சமய முறைப்படி செம்மையாக நடைபெற்றன. பந்த் அவர்களுக்கு இப்பொழுது அகவை 73. உத்தர பிரதேசத்தில் அல்மோரா மாவட்டத்தில் 1887 செப்டெம்பர் 10 ஆம் நாள் பிறந்தனர். அவர் தம் முழுப்பெயர் கோவிந்த வல்லப பந்த். இவர்க்கு ஓர் ஆண்மகனும் இரண்டு பெண்மகளும் மனைவியும் உளர்.

'ய அரசு கழகத்தின் திருமந்திரம் கதர்ப்பட்டுக் கட்டடச் சிறப்பு நோக்கி நல்கிய முதற் பரிசினை ஆண்மையும், ஆற்றலும், மாற்றுரையும் வயப்படுத்தும் மாண்பு மிக்க நம் பந்த் அவர்கள் 24-12-1960 இல் தந்திருக்கையால் வழங்கியுள்ளமையைச் செல்வி சிலம்பு ௩௫, பரல் ௫ பக்கம் ௨௩௩ இல் காணலாம். அத்தகைய பெரியாரை இழந்தமைபற்றிக் கழகம் பெரிதும் வ(

இவர் தம் இன்னுயிர் அமைதியும் இன்பமும் அடைந்துய்யுமாறு இறைவனை வேண்டுகின்றனம். இவர் தம் குடும்பத்தார்க்கு எங்களுடைய ஆழ்ந்த பரிவினையும் ஆறுதலையும் அறிவிக்கின்றோம்.

# நாயர்களின் தாலி கட்டுக் கலியாணம்

[திரு. வை. நட்சிறுமூர்த்தி, எம்.ஏ.,]

மலையாளிகளின் திருமணச் சடங்குகளைப்பற்றி ஆராயும் பொழுது தமிழரிடத்தில் உள்ள அத்தனை சடங்குகளும் அவர்களிடத்தில் உள்ளன என்று அறியலாம். தமிழரிடம் கலந்துள்ள வடமொழி தழுவிய சடங்குகளும் மலையாளிகளிடம் காணப்படுகின்றன. இவை அனைத்தையும் தொகுத்தும் வகுத்தும்[1] திரு. சி. ஏ. இன்னெஸ், ஐ.சி.எஸ். அவர்கள் எழுதி வெளியிட்டிருக்கிறார்கள். மலையாள மக்களில் நாயர் என்பவர் வீர மரபினர். அவர்களே மலையாள நாட்டு முதுகுடி மக்கள் எனப்படுகின்றனர். அவர்களிடத்தில் தாலி கட்டுக் கலியாணம் என ஒன்று இளம் பெண்கட்கு நடத்தப்படுகின்றது. இக்கலியாணத்திற்கும் உண்மைத் திருமணத்திற்கும் எவ்வகைத் தொடர்பும் கிடையாது.

[2]திருமணக் கட்டுப்பாடுகள் மலையாளத்தில் தவிர வேறு எங்கும் மிகுந்த கட்டுப்பாட்டோடும், கண்காணிப்போடும் நடத்தப்படுவதில்லை. மக்கள் அச்சத்தோடு மணச் சடங்குகளைச் செய்கிறார்கள். ஏதாவதொன்று நேர்ந்துவிட்டால் சமூகமே தவறு செய்தவரை எதிர்ப்பதுண்டு. தாலி கட்டுக்கலியாணம் பற்றிய முறைகள் பல்வேறு பகுதிகளில் வேறுபடுவதுண்டு. எனினும் சில இன்றியமையாச் சடங்குகளில் வேறுபாடின்றி எல்லா நாயர் பெண்களுக்கும் பெண்மை எய்துவதற்கு முன்னர் இச்சடங்கு செய்விக்கப்பெறும். பதினொரு வயதுக்குள் இக்கலியாணம் நடந்தாக வேண்டும். இன்றியமையாச் சில சமயங்களில் பெண்ணுக்கு வயது வந்தவுடன் செய்வதுமுண்டு. பெரும்பான்மையும் ஏழு, ஒன்பது, பதினொன்று போன்று ஒற்றைப்படையாக வரும் வயதில் இது நடப்பது உண்டு. இவ்வொற்றைப்படை வயதுக்குப் பெருமை தரும் பழக்கம் மலையாளிகளிடத்தில் தனிச் சிறப்படைந்துள்ளது. ஒரே நேரத்தில் சுமார் பன்னிரண்டுவரை எத்தனை பெண்கட்கு வேண்டுமானாலும் ஒரே இடத்தில் இக்கல்யாணம் நடைபெறுவது உண்டு. சிறு பெண் குழந்தைகளுக்குக்கூட இம்மாதிரித் திருமணம் நடைபெறும். பலரும் ஒத்துக்கொண்டு செலவைக் குறைப்பதற்காக இவ்வாறு செய்வது வழக்கம். ஒரே தரவாட்டில் இருக்கும் பெண்களின் திருமணத்தைப் பற்றிய பொறுப்பு காரணவானுக்குரியது. அவன் தவறும்பொழுது மூத்த சகோதரர் பொறுப்பேற்க நேரிடும்.

1. Gazetteer of the Malabar and Anjengo Districts Vol. I by—C. A. Innes, I. C. S.

2. Legan.

பெற்ற தங்கையின் பொறுப்புப் பெண்ணுக்கு மணம் செய்யும் பருவம் வந்துவிட்டது என்று கூறுவதோடு நின்றுவிடுகிறது. இத்திருமணங்களை முன்னின்று நடத்துவார்க்கு கட்டுமச்சம்பிகர் என்று பெயர். மச்சம்பிகர்கள் எந்தெந்தப் பெண்கட்கு யார் யார் தாலிகட்ட வேண்டும் என்பனவற்றை உறுதிப் படுத்துவார்கள். சோதிடர் சாதகங்களை ஒத்துப் பார்ப்பார். பதினெட்டு வயது இளைஞர்கள் தாலி கட்டத் தேர்ந்தெடுக்கப் படுகிறார்கள். கணியன் பனை ஓலையில் முகூர்த்தச் சாத்து எழுது வான். குறித்த நாளில் பந்தற்கால் நடப்படும். ஊரார் கூடிப் பந்தலிடுவர். பல்வகைக் கதிர்களாலும் மலர்களால் அழகு செய்யப்பட்டுக் கதிர் மண்டபம் என அழைக்கப்படும். திருமணத் தின் முதல்நாள் இரவு பிரமதேவனை வணங்கிப் பாட்டுப் பாடு வார்கள். பெண்ணின் வீட்டார் இளைஞர்கள் அனைவருக்கும் விருந்தளிப்பர். அவ்விருந்து ஆயினி ஊண் எனப்படும்.

மணச்சடங்கு தொடங்குமுன் மணமகன் தன் காலைக் கழுவிக் கொண்டு பந்தலில் வந்தமர்கிறான். பெண் நீராடிப், புத் தாடை புனைந்து, அணிபல அணிந்து குலதெய்வத்தை வணங்கு கிறாள். ஒரு பிராமணப் பெண் சுபத்திரையை அருச்சுனன் களவாகக் கொண்டு சென்ற வரலாற்றைக் குறிக்கும் பாட்டைப் பாடிப் பெண்ணின் இடது கையில் நூற்கயிற்றால் கங்கணம் கட்டுகிறாள். பெண்ணின் தாய் மணமகனுக்கு மாலையிட்டுத் தன்வீட்டுக்கு அழைப்பாள். மணமகன் யானைமீதோ நடந்தோ ஊர்வலமாக மணமகள் இல்லை அடைகிறான். பந்தல் வாயிலில் மணமகளின் சகோதரன் மணமகனை வரவேற்கக் காத்திருப் பான். நாட்டாண்மைக்காரருக்கு ஊர்ப்பணம் கொடுத்தவுடன் பெண் பந்தலில் கிழக்கு நோக்கித் தன் கண்ணை மூடிக்கொண்டு அமர்கிறாள். அவளின் இடப்பக்கத்தில் மணமகன் வந்து அமர் கிறான். பூசாரி தாலியைக் கொண்டுவந்து தருகிறான். ஒன்றுக்கு மேற்பட்ட மணப்பெண்கள் இருப்பின் அவர்களனைவரும் வரிசை யாக அமர்வார்கள். அம்மச்சா பாட்டு அல்லது தாய்மாமன் பாட்டு என்னும் பாட்டுப் பாடப்படும். எல்லாப் பெண்களும் தம் கையில் ஓர் அம்பும், முகம்பார்க்கும் கண்ணாடியும் வைத்திருப் பார்கள். அவர்களின் வயது வரிசைக்கேற்ப முறையாகத் தாலி கட்டப்படும். எத்தனை பெண்கள் இருந்தாலும் தாலிகட்டும் மணமகன் ஒருவனாக இருப்பதே பெரும்பான்மையான வழக்கம். மிகவும் ஏழையாக இருப்பவர்கள் இத்திருமணத்தைச் செய்ய வசதி இல்லாதபொழுது கோவிலிலாவது நாட்டாண்மைக்காரர் வீட்டிலாவது செய்துவிடுவது வழக்கம். திருவாங்கூரின் வட பகுதியில் வாழும் மக்கள் தாலியைக் கட்டிய அம்மனிதர் இறந்த

செய்தியைக் கேட்டவுடன் தாலியை அறுத்தெறிவதாகத் தெரிய வருகிறது. [1]திரு மதீர் அவர்கள் திருவாங்கூர்ப் பக்கத்தில் நாயர் பெண்கள் பதினொரு வயதுக்குள் தாலிகட்டுக் கல்யாணம் செய்து கொண்டபின், உண்மைத் திருமணமும் செய்து கொள்ள வேண்டும் என்ற நியதி இருப்பதாகக் கூறுகிறார். பெண்ணின் நண்பர்களோ, உறவினர்களோ அவளோடு பருவம் வந்தவுடன் உறவுகொள்ள இயலாதிருப்பதற்காக அக்காலத்திற்குள் திருமணம் செய்துவிட வேண்டும் என்ற நியதி ஏற்பட்டது. உண்மைத் திருமணத்திற்கு மணமகன் கிடைக்காத காலத்தில் வெறும் வாள் ஒன்றை வைத்து அதையே மணமகனாக மானசீகமாக எண்ணிக் கொண்டு திருமணம் செய்வார்கள்.[2] மிகவும் ஏழையாக இருந்தால் அப்பெண்ணின் தாய் களிமண் பொம்மையை மணமகனாகக் கொண்டு அப்பொம்மைக்கு மலர்மாலை சூட்டி மணம் செய்வாள்.

[3]கொச்சிப் பகுதியில் இத்திருமணத்திற்குச் செலவு மிகுதியாக ஆவதால் பத்துப் பன்னிரண்டாண்டுகட்கு ஒரு முறை ஒரு குடும்பத்திலுள்ள அத்தனைப் பெண்கட்கும் இத் தாலி கட்டுக் கலியாணம் செய்யும் வழக்கம் ஏற்பட்டுள்ளது. பெண்கட்குக் குறித்த வயது வரவேண்டும் என அவர்கள் இருப்பதில்லை.

தாலிகட்டுவதற்கு முன் பெண்ணின் தந்தை புத்தாடைகளை இருவருக்கும் தருகிறான். அவ்வாடை மந்திரவடி என அழைக்கப்படும். அதனை இருவரும் அணிந்து கொள்கின்றனர். பெண் கையில் ஒரு அம்பையும் முகக் கண்ணாடியையும் பிடித்துக் கொண்டமர்ந்திருப்பாள். மணமகன் தாலிகட்டி முடிந்தவுடன் இருவரையும் ஓர் அறைக்குக் கொண்டு செல்கின்றனர். அங்கு மூன்று நாட்கள் இருவரும் நோன்பு நிலையில் இருக்கிறார்கள். நான்காம் நாள் இருவரும் ஒருவர் கையை ஒருவர் கோத்துக்கொண்டு அருகிலுள்ள நீர்நிலையில் நீராடுவர். நீராடி ஆடை அணிந்தபின் ஊர்வலமாக வீடு திரும்புவர். வீடு திரும்பும்பொழுது வீட்டின் கதவுகள் மூடப்பட்டிருக்கும். மணமகன் அவற்றைத் தானே வலிந்து திறந்து கொண்டு உள் நுழைவான். உள்வந் தமர்ந்தவுடன் இருவருக்கும் தித்திப்புக்கள் பெண்ணின் அத்தையால் வழங்கப்படுகின்றன. பிறகு பெண் மணமகனுக்கு உணவு படைக்கிறாள். உண்டு முடிந்த பின் பலர் முன்னிலையில் ஒரு துணியை இரண்டாகக் கிழித்து மணமக

1. Mr. Mateer.

2. Ananthakrishna Aiyer, L. K. Cochin Tribes and Castes Vol. II. Page, 23-27.

3. Cochin Census Report 1901.

னுக்கும் மணமகளுக்கும் தருகின்றனர். மணமகன் தனக்குக் கொடுக்கப்பட்ட துணியில் ஒரு நூலை எடுத்து அறுத்தெறி கிறான். இது மணவிலக்குச் செய்ததற்கு அறிகுறியாம். அப் பொழுது முதல் அம்மணமகனுக்கும் பெண்ணுக்கும் எவ்வித உறவும் இல்லை.

தாலிகட்டுக் கல்யாணத்தில் கட்டப்பட்ட தாலியைப் பெண்கள் தம் விருப்பப்படி வாழ்நாள் முழுவதும் அணிந்திருப் பதும் நான்கைந்து நாட்களில் அறுத்தெறிவதுமாகச் செய்வர். வாழ்நாள் முழுவதும் அணிந்திருப்பவர் தாலியைக் கட்டியவன் செத்த செய்தி கேட்டவுடன் அறுத்தெறிய வேண்டும். திருமணச் சடங்கில் பங்கு கொள்வதைத் தவிர அம்மணமகனுக் கும் பெண்ணுக்கும் எவ்விதத் தொடர்பும் கிடையாது. அம் மணமகனுக்குத் தாலி கட்டுவதற்காக இரண்டு முதல் எட்டு ரூபாய் வரை கூலி கொடுத்து விடுகிறார்கள். சில குடும்பங்கள் தாலி கட்டுபவனே பின்னர் உண்மையான திருமணத்தின் போதும் மணமகனாக அமைவதும் உண்டு.

மலையாளிகளின் தாலிகட்டுக் கலியாணத்தைப் பற்றிப் பலர் பலவிதக் கருத்துக்களைத் தருகின்றனர். இது விசித்திரமான கதையாகவே தோன்றுகிறது. உண்மைத் திருமணமாகவும் இல்லை; கண்காணிப்பாகத் தவறாமலும் செய்யப்படுகிறது. சிலர் தாலிகட்டுக் கலியாணம் உண்மைத் திருமணமே என்கின்றனர். சிலர் விளையாட்டுக் கலியாணம் என்கின்றனர். சிலர் பொய்ச் சடங்கு என்கின்றனர். வயது வந்தவுடன் அப்பெண்ணுடன் உறவு கொள்ள ஓர் இளைஞனுக்குத் தரும் அனுமதியே இக் கலியாணம் என்கின்றனர். ஆனால் இத்திருமணம் இன்று கைவிடப்பட்டுவிட்டது. இன்றும் கோயில்களில் விலைமாதர் கட்குத் தாலிகட்டப்பட்டு அவர்கள் பல ஆண்களோடும் உறவு கொள்ள உரிமை தருவதுபோல் இது மலையாளிகளிடத்தில் ஒருவகை எனச் சிலர் கூறுகின்றனர். இம்மாதிரிக் கூற்றுக்களை எளிதில் நம்புதல் இயலாது. மலையாளச் சமுதாயத்தை ஆராயத் தக்க சான்றுகள் நமக்குக் கிடைப்பதில்லை. வீர வாழ்வினராய நாயர்கள் போர் செய்யும் தொழிலினர். வயதுவந்தவர் போர்க் களத்திற்குச் சென்று மடிந்து விடுவதால் இளமையிலேயே திருமணம் செய்திருக்கலாம். வாளையோ, பொம்மையையோ வைத்துச் செய்யும் பழக்கமும் சிந்திக்கத் தக்கது. மணமகன் ஊரில் இல்லாவிடில் அவனுடைய வாளையோ சிலையையோ வைத்துத் திருமணம் செய்து அப்பெண் அவனுக்கே உரியவள் என உறுதி செய்யப்பட்டிருக்கலாம். தென்திருவிதாங்கூரிலும் மற்றும் பலவிடங்களிலும் ஒரே இனத்தவரும் உறவினருமான

மணமகனே தாலிகட்டத் தேர்ந்தெடுக்கப் படுகிறான். தாலி கட்டுக் கலியாணம் பொய்க் கலியாணமாயிருந்தால் நெடுங்காலம் கடைப்பிடிக்கப் பட்டிருக்க முடியாது. தாலியைக் கட்டியவன் இறந்துவிட்டால் தாலியறுப்பதும், தொடர்ந்து மூன்று ஆண்டுகள் விதவைபோல் வாழ்வதுமான பழக்கங்கள் சில பகுதிகளில் இருக்கின்றன. பழங்காலத்தில் உண்மை மணமாகித் தாலி கட்டப்பட்ட பெண்ணின் கணவன் இறந்தவுடன் வேறொருவனுடன் தொடர்பு கொண்டு வாழ அனுமதிக்கப் பட்டிருப்பாள். போர்க் குடும்பங்களில் ஆண்கள் மிகுதியாகப் பிறக்கவேண்டும் என்ற ஆசை எழுந்ததால் பெண்கள் பல ஆண்களோடு உறவு கொள்ள அனுமதிக்கப்பட்டிருக்கிறார்கள். ஜன்மிகளான நம்பூதிரிகளின் ஆட்சியில் மலையாள நாடு வந்த காலத்தில் அவர்கள் வைத்தது சட்டமாயிற்று. தாம் பல பெண்களோடு உறவு கொள்வதற்காகவும், பிற காரணம் பற்றியும் அவர்கள் இதைப் பொய்க் கலியாணமாக்கிச் சம்பந்த முறையைக் கொண்டு வந்தார்கள்.

தமிழரின் உடன் பிறப்பாளராய மலையாளிகளிடம் பண்டைத் தமிழர்தம் திருமண முறையே தாலிகட்டும் மணம் என்னும் பெயருடன் பொய்க் கலியாணமாகிப் பிற்காலத்தில் பொருளற்றதாகிவிட்டது.

**சம்பந்தம்**

பொருளற்றதாய் அமைந்த தாலிகட்டுக் கலியாணத்தை முன்னேற்ற மெண்ணமுள்ள நாயர்கள் வெறுக்கத் தொடங்கினர். குடும்பத் தலைவனின் இசைவுப்படி நடைபெறும் வாழ்வு உடன்படிக்கையே இது. புடமுறி என்பதே சிறப்புச் சடங்கு. கி. பி. 1550 முதல் 1800 வரை இச்சடங்கு பற்றிய எவ்விதச் சான்றுகளும் கிடைக்கவில்லை. அரசியல் சட்டப்படி [1]கி. பி. 1896இல் சம்பந்தம் பதிவு செய்யப்பட்டது. கணவனுடன் மனைவியாக இருவர் கூடிவாழச் செய்து கொள்ளும் ஒப்பந்தமே இது.

மலையாள மக்களால் இச்சம்பந்தம் குணதோஷம், வஸ்திர தானம், புடைவைக் கொடை, உழம் பொறுக்கல் எனப் பல பெயர்களில் வெவ்வேறு இடங்களில் அழைக்கப்படுகிறது. சில குடும்பங்களில் இச்சடங்கைப் பலருமறிய விழாவாகக் கொண்டாடாது தமக்குள் செய்து கொள்வது முண்டு. மணமகனும் அவன் நண்பர்களும் ஒரு நாள் இரவில் பெண் வீட்டில் கூடுவர். உறவினர் முன்னிலையில் மணமகன் பெண்ணுக்குச் சில சலவை செய்யாத் துணிகளைத் தருவான். பெரும்பான்மையும் இவ்வாறு

1. Act IV Madras 1896.

பகுத்தறிவு பெற்று வாழநிற்கும் மனிதனை மாண்புபெறும் வழிகாண வழிகாட்ட வேண்டியது அவன் செயல். அதற்கெனவே ஆற்றலுடன் அருஞ்செயல் புரியும் அறிஞர்களை - உண்மை அறிவு கொண்ட அருளாளர்களை நம்மிடையில் வாழவைத்தான். அவனருளால் அவ்வறிஞர் தாம்பெற்ற ஆற்றல் கொண்டு அறிவுவழி வகுத்தனர். அவைதாமே அரும்பெரும் நூல்களாக நிலைபெற்று நம் பகுத்தறிவிற்கு நல்விருந்தாகி நற்பயனளிப்பனவாயின. அவனருளால் ஆற்றல் கொண்டு அருநூலாக்கித்தந்த அறிஞர் பலரும் தாம்தாம் வாழ்ந்த நாட்டின் பண்பாட்டினைத் தம்மவரின் வாழ்வினைச் சிறப்பிக்கும் திறமுடைய நூல்களையே ஆக்கிச் சென்றார்கள்.

தமிழனாய்த் தமிழகத்தில் தோன்றிய ஒருபுலவனும் வள்ளுவன் தமிழிலே நூல்தந்தான் - தன்மொழியில் நூலுரைத்தான். அவனுரை தமிழருக்கு மாத்திரம் தனி உரிமையுடையதாக அடங்கி நின்றதில்லை. உலகினர் அனைவருக்கும் அவனுரை உரிமையுடைத்தாயிற்று. ஒரு காலத்தவருக்கன்றி எக்காலத்தவரும் உரிமை கொண்டாடும் உயர்வுடைய நிலையுடைத்தாயிற்று. தெய்வம் அனைவருக்கும் உரிமையுடைத்தாய் அனைத்துயிரொடும் ஒன்றும்தானே கலந்துநின்று இயங்கவைப்பதுபோல் வள்ளுவன் தந்த குறள்நூலும் அனைவருக்கும் வாழும் வழிகாட்டி, என்றும் இறவாது புதுமை நிலைகொண்டு நிற்பதனைக் கருதியே இறவாத உரைதந்த அம்மூதறிவினனைத் தெய்வப்புலவன் என்று உயர்வு நிலையின் உண்மை தோன்ற உரைப்பாராயினர். அவனுரையின் மாண்புகண்ட உண்மைகண்டோர் உள்ளங்கள் இன்னும் எத்தனை பெயரிட்டு அழைக்க விழைந்தன! இன்னும் எத்தனை பெயரிட விரும்புவாருளரோ, என்று காண்போர்க்கும் புதியதாம் உரியதாம் கருத்தொடு விளங்கும் ஒருநூலைத் தந்தவனைப் போற்றாதோர் எங்குமுண்டோ?

இம்மை முதல் மூவுலக வாழ்வுநிலை உண்டெனக்கூறினர் அவற்றின் உண்மை நிலையுணர்ந்த நம்முன்னோர். இவ்வுலக வாழ்வு ஒன்றினையே - இம்மை வாழ்வினையே காணும் நாம் தேவ உலக வாழ்வும், தெய்வ உலக வாழ்வும் உண்டோ என ஐயுறுவதும் இயல்பே. உண்மையை முற்றும் உணர்ந்தோர் முன்னோர் கூறிய அனைத்தும் உண்டென்பதனைத் தம் அறிவினாற் கண்டனர். நாமும் உண்மையுணருங்கால் நமக்கு அறிவானது துன்பமற்ற இன்பவாழ்வையும், நிலைத்த இன்பவாழ்வையும் அறியத்தராது விடுவதில்லை. மூவுலக வாழ்வும் உண்டென்பதே நம்முன்னோரும் நாமும் அறிவின் வழிப்பட்டுக் காணும் உண்மையாகும்.

இவ்வுலகிலே மனிதரிடையே மனிதனாக வாழ்ந்து பெற்ற வள்ளுவன் ஆயிரத்து முந்நூற்று முப்பது குறள்களை உருவாக்கினான். வாழவந்த மக்கள் வாழ்வடைய வேண்டுமென்ற ஆவலால் நல்வாழ்வுவாழ வழிகாட்டுவன வாகத்தானே அமைந்தன அத்தனை குறள்களும்! மற்றுமுள்ள உயிரினத்தை விட மனிதன் சிறப்புறப் பெற்றுள்ள பகுத்தறிவு ஒன்றுதான் மனிதனை உண்மை மனிதனாக்குகிறது. அதனைத்தான் வள்ளுவர் அறிவென்றுரைக்கிறார். அவ்வறிவினைப் பெறும வாய்ப்பினைப் பெற்றுள்ள மனிதர் அத்தனைபேரும் தம்மை மற்றைய உயிரினம் அனைத்தையும்விட உயர்வுடையவர்களாக ஆக்கிக்கொள்ள அறிவு தரும் செயற்குரிய கடமையைப் புரியாவிட்டால் அவர் தாம் பெற்றுள்ள அறிவினாற் பயனெதுவுமில்லை. அறிவுபெற்ற அவரேயன்றி அறிவுதானும் பயனற்றதாகின்றது. மனிதன் வாழப்பிறக்கின்றான் எனக்கூறும் மனிதன் மற்றைய உயிரினங்களும் வாழவே பிறக்கின்றன என்பதனை உணர்தல் கடன். மற்றைய உயிரினங்கள் மனிதனுக்காகவே படைக்கப்பட்டன; அவை மனிதனால் மாளவே பிறந்தன என்று கூறுவோரை அறிவின் வழிப்பட்டு நிற்கும் மனிதர் என்று அழைப்பதற்கில்லை.

நாம் இன்பத்தை விரும்புவது போன்றே பிற உயிர்களனைத்

துன்பம் நமக்கு வெறுப்பினைத் தருவதுபோன்றே பிற உயிர்களுக்கும் வெறுப்பினையே தருவதாகும் என்ற உண்மைதனை அறிவு கொண்டு உணர்தல் வேண்டும். தனக்கு வரும் துன்பம் தன்னை வருத்துவது போன்றே பிற உயிர்க்கு வரும் துன்பமும் அவற்றிற்கு வருத்தத்தையே கொடுக்கும் என்பதனை உணர்ந்து பிற உயிர்கள் தம்மால் துன்பமடையாது காப்பவரே தம் அறிவினாற் பயன் பெற்றவராவர். நாம்பெற்ற அறிவு ஆக்கம் தருவதை அனுபவித்தல் கூடும்.

தம்வாழ்வால் பிற உயிர்க்கு எவ்விதத் துன்பமும் நேராதவாறு காத்தவன் இவ்வுலகவாழ்வில் நல்வாழ்வுபெற்று என்றும் புகழ் குன்றாது வாழ்வதால் அனைவரது உள்ளத்திலும் இடம் பெறும் அவன் இவ்வுலகை ஆளும் பெரியோனாகின்றான். தம் வாழ்வால் பிற உயிர்கள் எவ்விதத் துன்பமும் அடையாதவாறு வாழ்தலுடன் பிற உயிர்களின் இன்னல்தீர உதவும் செயல் தம் கடனே என எண்ணுவோர் அதனால் உண்டாம் புண்ணியப் பயனையும் பெற்று நின்று தேவ உலக வாழ்வுபெற்று என்றும் துன்பமிலா இன்பம் அனுபவித்து அவ்வுலகாளும் தேவராகின்றனர். தம்வாழ்வால் பிற உயிர்கள் இன்னலுறாது வாழ்ந்து பிற உயிர்கள் இன்னலுறுவது கண்டு அவற்றின் இன்னல் தீர்ப்

பான் உதவி நிற்போர் பிற உயிரின் இன்னல் நீக்கும் அச்செயல் இறைவன் செயலே என எண்ணித் தம் செயலென்பதொன்றில்லை என்ற மனநிலை பெறுவார்களானால் அவர்தாம் என்றும் முடிவிலா இன்பத்திற்காளாகும் வீடாளும் பேறடைதல் உண்டாம்.

"அறிவினா னாகுவ துண்டோ பிறிதினோய்
தந்நோய்போல் போற்றாக் கடை" (குறள் . ௩௧௫)

எனும் ஒருரை தந்த வள்ளுவர் ஒருகுறளால் மூவுலகாளும் மாட்சியுறும் வழி காட்டுகிறார். தன் அறிவைப் பயன் படுத்திப் பிறிதின்நோய் தன்நோய் போற் போற்றி வாழ்பவன் இவ்வுலகில் இன்பமன்றித் துன்பமுறுதலில்லை. ஓங்கும் புகழன்றி வசை பெறுதல் என்றுமில்லை. பிற உயிரைத் தன்உயிர்போல் போற்றும் பெருநிலையால் இவ்வுலகாளும் பெருமகனாகின்றான். அவன் பிறிதின் நோய் தன்நோய் போன்றதே எனப் போற்றிப் பிற உயிர்க்குத் துன்பம் வாராதவண்ணம் வாழ்வதுடன் துன்புறும் உயிர்கட்குத் துன்பம் நீங்கும் வண்ணம் தான் என்ற மனநிலையுடன் நின்று உதவிபுரிபவன் அதன் பயனால் பெறும் புண்ணியத்தால் துன்பமிலா இன்பவாழ்வுதரும் தேவ உலகாளும் பேறு பெறுகின்றான். பிறிதின் நோய் தன்நோய் போற் போற்றி வாழ்பவன் தான் என்பதனை மனதில் கொள்ளாது எல்லாம் தெய்வத்தாலாவது என்ற மனநிலையுடன் நின்று இன்னலுறும் உயிர்க்கு உதவும் பணிபுரிவானானால் அவன் ஈறிலா இன்பமுறும் வீடாளும் பெருநிலைக்கு ஆளாகின்றான். இவ்வுலகிலும் தேவஉலகிலும் நல் வாழ்வு பெறுவதுடன் மீளா ஒருநிலைதரும் வீடாளும் பேரின்பப் பெருநிலையும் அளிக்கின்ற பிறிதின் நோய் தன்நோய் போன்றதே எனப் போற்றி வாழும் பண்பினைத் தந்துநின்று அறிவுதன்னாலாகும் பயனை அடைவித்தல் வேண்டுமென உரைக்கின்ற வள்ளுவன்தன் ஒருகுறளே மூவுலகாளும் மாட்சி தருவது எனும் உண்மை உலகெங்கும் உயர்வுதந்து உறுதிபெறுதல் வேண்டும். அவ்வரும் குறளுரைத்த வள்ளுவன் அறிவு வையகமெங்கும் தெய்வநிலை பெற்றுத் திகழவைக்கும்.

வாழ்க வையகம். வளர்க தமிழினம்.

# "அன்றில்"

## (Night heron)

[திரு. பி. எல். சாமி, பி. எஸ். ஸி.]

அன்றில் என்றதொரு பறவை சங்க இலக்கியத்தில் அகநானூறு, நற்றிணை, குறுந்தொகை, முதலிய நூல்களில் கூறப்படுகின்றது. நெய்தற்றிணைக்குரிய கருப்பொருளாகப் பேசப்படுகின்றது. நெய்தற்குரிய பறவையாக இது கூறப்படுவதிலிருந்து இப்பறவை கடலுக்கருகாமையில் அமைந்த சூழ்நிலையில் (Littoral tract) வாழ்ந்ததாகத் தெரிகின்றது. சங்க இலக்கியத்தில் கூறப்படும் கடற்கரைச் சூழ்நிலை விளக்கம் அக்காலத்தில் இருந்ததை உள்ளபடியே கூறுவதாகும். சங்க இலக்கியத்தில் கூறப்படும் சில இயற்கை பற்றிய செய்திகள் தற்காலம்கூட உண்மையாக இருப்பதைக் காணலாம். அன்றில் எனும் பறவை பனைமரத்தில் வாழ்ந்ததாகச் சங்க நூல்களில் பல விடங்களில் புலவர்கள் கூறியுள்ளனர். பனைமரங்கள் கடற்கரையிலும், கடற்கரைச் சிற்றூர்களிலும் அக்காலத்தில் நிறைய இருந்திருக்கின்றன.

"... ... ... ... ... ...கானல்
ஆடரை புதைய கோடை யிட்ட
அடும்பிவர் மணற்கோடூர நெடும்பனை
குறிய வாகுந் துறைவனைப்
பெரிய கூறி யாயறிந் தனளே"

என்ற குறுந்தொகை(உ௪அ)ப் பாடலில் மேற்காற்று குவித்த மணல் மேட்டினால் பனைமரத்தின் அடிப்பாகம் மறைந்து குறும் பனையாகத் தோன்றுவதாகக் கூறப்பட்டிருப்பது இன்றும் கடற்கரையில் காணக்கூடிய காட்சியாகும். அடிமரம் மத்தளம் போற் பெருத்து, 'முழவுமுதலரைய தடவுநிலைப் பெண்ணை' யாகக் காணப்படுவது இன்றும் கடற்கரைச் சிற்றூர்களில் பார்க்கக் கூடியதாகும். கடற்கரையில் பனைமரத்தில் அன்றில் கூடுகட்டுவதாகப் பல சங்கப் புலவர்கள் பாடியுள்ளனர்.

"... ... ... ... ... ...எல்லி
மனைசேர் பெண்ணை மடல்வாய் அன்றில்
துணையொன்று பிரியினுந் துஞ்சா காணெனக்" —அகம். ருo.

"பெண்ணை ஓங்கிய வெண்மணற் படப்பை
அன்றில் அகவும் ஆங்கண்
சிறுகுரல் நெய்தலெம் பெருங்கழி நாட்டே" —அகம். கஉo.

" செக்கர் தோன்றத் துணைபுணர் அன்றில்
எக்கர்ப் பெண்ணை அகமடல் சேரக் " —அகம். ௨௬௦.

" பராரைப் பெண்ணை சேக்கும் கூர்வாய்
ஒருதனி அன்றில் உயவுக்குரல் கடைஇய " —அகம். ௩௦௫.

" கடவுள் மரத்த முள்மிடைக் குடம்பைச்
சேவலொடு புணராச் சிறுகரும் பேடை
இன்னாது உயங்குங் கங்குலும் " —அகம். ௨௭௦.

" தமியேன் கேட்குவென் கொல்லோ
பரியரைப் பெண்ணை அன்றிற் குரலே " —நற்றிணை. ௨௧௮.

" தொன்றுஉறை கடவுள் சேர்ந்த பராரை
மன்றப் பெண்ணை வாங்குமடற் குடம்பைத்
துணைபுணர் அன்றில் உயவுக்குரல் கேட்டொறும் "
—நற்றிணை. ௩௦௩.

" மையிரும் பனைமிசை பைதல உயவும்
அன்றிலும் மென்புறம் நரலும் " —நற்றிணை. ௩௩௫.

" முழவுமுத லரைய தடவுநிலைப் பெண்ணைக்
கொழுமட லிழைத்த சிறுகோற் குடம்பைக்
கருங்கா லன்றிற் காமர் கடுஞ்சூல்
வயவுப் பெடை யகவும் பானாட் கங்குல் "
—குறுந்தொகை. ௬௩௦௧.

" மன்றம் போழும் இனமணி நெடுந்தேர்
ஏங்குவயி ரிசைய கொடுவா யன்றில்
ஓங்கிரும் பெண்ணை யகமட லகவ "
—குறிஞ்சிப் பாட்டு. ௨௧௯-௨௦.

" மன்றவம் பெண்ணை மடல்சேர் வாழ்க்கை
அன்றிலும் பையென நரலும் " —குறுந்தொகை. ௧௭௭.

" நெருப்பி னன்ன செந்தலை யன்றில்
இறவி னன்ன கொடுவாய்ப் பெடையொடு
தடவி னோங்கு சினைக் கட்சியிற் பிரிந்தோர் "
—குறுந்தொகை. ௧௬௦.

மேலே காணும் பாடல்களில் அன்றில் வாழும் சூழ்நிலையைப் பற்றிச் சில செய்திகள் கூறப்பட்டிருக்கின்றன. இதில் முதன்மையானது அன்றில் பனைமரத்தில் வாழ்வதாகும். இப்பாடல்களில் வரும் பிறசெய்திகளையும் பறவை நூலறிவொடு (Ornithology) ஆராயுங்கால், அன்றிற் பறவை அந்நூலில் கூறப்படும் 'Night heron' என்பதே என்று தெளியலாம். பறவை நூலார் இப்

பறவை சிறு கோல்களால் அடர்ந்த மரங்களில், யாரும் எளிதில் காணமுடியாதபடி இலை, மட்டை முதலிய மறைவான சூழலில் கூடுகட்டுவதாகக் கூறுகின்றனர். இதையே 'பெண்ணைக் கொழு மடலிழைத்த சிறுகோற் குடம்பை' என்ற குறுந்தொகைச் செய்தியிலிருந்து உணரலாம்.

'பெண்ணை வாங்கு மடற் குடம்பை,' 'பெண்ணை மடல்வாய் அன்றில்' என்ற வரிகளில் மடலில் மறைவாக அன்றில் கூடுகட்டுவது கூறப்பட்டுள்ளது. இப்பறவை கடற்கரைக் கழிஓரங்களிலும், கடற்கரை ஊர்களிலும், மனிதர் இடையூறு செய்யாவிடில் உள்ளூர் மரங்களிலும் கூடுகட்டி வாழ்வதாகப் பறவை நூலார் கூறுவர். இதே இயற்கைச் சூழ்நிலையையே சங்கப்பாக்களும் கூறுகின்றன.

'சிறு கூரல் நெய்தலெம் பெருங்கழி நாட்டிலும்,' 'நெடுநீர் இருங்கழியிலும்' அன்றில் வாழ்வதாக அகம் - ௬௨0, ௫0-ஆம் பாடல்கள் பகருகின்றன. 'கடவுள் மராத்த முள்மிடைக் குடம்பை,' 'தொன்முறைக் கடவுள் சேர்ந்த பராரை மன்றப் பெண்ணை' என்று பேசப்படுவதிலிருந்தும் கடவுளுக்குரிய பனை மரத்திலும், பொதுமன்றத்திலிருந்த பனையிலும் இப்பறவை கூடுகட்டி வாழ்ந்ததாகத் தெரிகின்றது. கடவுள் உறையும் மரத்திலும், மன்றப்பனையிலும் மனிதர் இடையூறு இல்லையாதலால் அன்றில் அங்கே கூடுகட்டி வாழ்வதை வழக்கமாகக் கொண்டிருக்க வேண்டும். இது பறவை நூலில் காணப்படும் செய்தியொடு ஒத்திருக்கின்றது. பனை மரத்தில் இப்பறவை காணப்படுவதாகக் கூறப்பட்ட செய்தி சிறிது காலத்திற்கு முன் நாட்டுப்புற இயற்கைச் சூழ்நிலைபற்றி எழுதப்பெற்ற* ஒரு புத்தகத்திலும் காணப்படுகின்றது. ஏறக்குறைய இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன் கண்டு கூறப்பட்ட செய்தி இன்றும் ஓரளவு உண்மையாக இருப்பது வியப்பைத் தருவதாகும்

அன்றில் பனையிலிருக்குஞ் செய்தியைச் சங்கப்புலவர்கள் கூறியதைக் கண்ட பிற்காலப் புலவர்களும் அச்செய்தியைப் போற்றித் தங்கள் பாடல்களிலும் பயன்படுத்தினர். இலக்கண உரையாசிரியர்களும் இச்செய்தியை விடவில்லை. மயிலைநாதரும், சங்கர நமச்சிவாயரும் இச்செய்தியை எடுத்துக் காட்டாகக் கையாண்டிருக்கின்றனர். ஏழன் உருபான 'கண்' இருகிழமைப்

---

* Another useful bird is the night - heron, found nesting on palmyra and other tall trees. It has a black head with a crust on it.

—Rural Science

பொருளில் பொருளிடமாகி வருவதற்குப் 'பனையின் கணன்றில்' என்பதை உரையாசிரியர்கள் காட்டியிருக்கின்றனர்.

'பனையின்க ணன்றில்' என்பதில் பிறிதின் கிழமையைப் புரிந்து கொள்வது எளிது. ஆனால் தற்கிழமையை மேற் காட்டப்பட்ட சங்க நூற்பாடல் வரிகளோடு பகுத்தால்தான் தெளிவாகப் புரிந்துகொள்ள முடியும். தொல்காப்பியச் சொல்லதிகாரத்தில் சேனாவரையர் ஆறும் வேற்றுமைக்கண் பொருட் பிறிதின் கிழமைக்குக் 'காட்டதியானை'யைக் குறிப்பிருக் கின்றார். 'காட்டதியானை' வாழ்ச்சிக் கிழமையாகவும் கொள்ளப் படுகின்றது. இந்த வாழ்ச்சிக்கிழமை,

"ஆறன் மருங்கின் வாழ்ச்சிக் கிழமைக்கு
ஏழும் ஆகும் உறைநிலத் தான"

என்ற தொல்காப்பியச் சூத்திரப்படி 'காட்டின்கண் யானை' என்று ஏழாம் வேற்றுமை உருபுவிரிந்தும் அமையும். நற்றிணை ௨௧௮ ஆம் பாட்டில் வரும் 'பெண்ணை அன்றில்' என்பதை பெண்ணையதன்றில் என்றும் பெண்ணையின்கண் அன்றில் என்றும் இருவேற்றுமை உருபும் விரிந்துக் கூறியும் அமை வதைக் காணலாம். ஆதலின் 'பனையின்கணன்றில்' என்பது வாழ்ச்சிக் கிழமைக்கும் சிறந்த எடுத்துக் காட்டாகும். தற்கிழமை யென்றது தன்னோடொற்றுமையுடைய பொருள் என்று சேனா வரையர் கூறுகின்றார். பனைக்கு ஒற்றுமையுடைய பறவை அன்றில் என்பது நெடுங்காலமாகச் சங்கப் புலவர்களும், பிற புலவர்களும் கண்ட செய்தியாகும்.

அன்றில் பற்றிச் சங்க நூல்களில் கூறப்படும் பிறசெய்தி களும் பறவை நூலிற் சொல்லப்படுவனவோடு ஒத்தே காணப்படு கின்றன. பறவை நூலில் இப்பறவை பகலில் வெளியேபோகாது இரவில் இரைதேடப் போவதாகக் கூறப்படுகின்றது. பகலெல் லாம் வெளியே போகாதிருப்பதால் இரவில் துணையைப் பிரிந் திருக்க வேண்டியதாகின்றது. இதைப்பார்த்த சங்கப்புலவர்கள் இரவில் அன்றிற் பறவை தனித்திருப்பதாகவும், துணைக்கு ஏங்கிக் குரலிடுவதாகவும் கூறியிருக்கின்றனர். ஆனால் இப்பறவைகள் இரவில் குரலிடுவதற்குக் காரணம் துணையைப் பிரிவதால் ஏற்படும் துன்பமல்ல. இரவில் இரைதேடப்போகும்போது ஒன்றிற் கொன்று தொடர்பு வைத்துக்கொள்ளவே 'க்வாக், க்வாக்' என்று குரலிட்டுச் செல்லும்.

இதையே அன்றில் துணைக்கு ஏங்குவதாகக் கற்பனையாகக் கூறினர். நெய்தலில் தலைவி காத்திருந்து ஏங்குவதாகக் கூறுவதே

உரிப்பொருளாதலின், அதற்கேற்பக் கருப்பொருளில் நிகழும் உண்மைச் செய்தியில் கற்பனையை ஏற்றிக் கூறியிருக்கின்றனர். 'சிறுகருங்கால் பெடை' என்று அகம் - ௨௭௦ கூறும். சாம்பற்கருப்பு நிறமுடையதாகக் கூறுவர் பறவைநூலார். 'கருங்காலன்றில்' என்று குறுந்தொகை ௩௦௧ கூறும். முட்டையிட்டுக் குஞ்சு பொரிக்குங்காலத்தில் (Bearding season) பசுமை கலந்த மஞ்சள் நிறமான அன்றிலின் கால்கள் கருஞ்சிவப்பாக மாறிவிடும். அன்றில் 'சிறுகோற் குடம்பை' கட்டும் காலம் குஞ்சு பொரிக்கும் காலமானதால் 'கருங்காலன்றில்' என்று குறுந்தொகை கூறுவது உண்மையான செய்தியாகும். 'எங்குவயிரிசைய கொடுவாயன்றில்,' 'இறவினன்ன கொடுவாய் பெடையொடு' என்ற வரிகளில் அன்றிலின் வாய் விளக்கப்பட்டிருக்கின்றது. அன்றிலின் அலகு நீண்டு கூர்மையானதாகவும், சிறிது வளைந்தும் இருக்கும். அன்றிலைப்பற்றிக் கூறப்படும் மற்றொரு செய்தியும் ஆராயத்தக்கது. 'நெருப்பினன்ன செந்தலையன்றில்,' 'எரியகைந் தன்ன செந்தலையன்றில்' என்றுவரும் சங்கப் பாடல்களில் அன்றிலுக்குத் தலையில் செம்மை நிறமான சூட்டு இருப்பதாகவும், செம்பூப் போன்ற தலையிருப்பதாகவும் கூறப்படுகின்றது. சாம்பல் பழுப்பு நிறமுடைய இதன் தலையிலும், கழுத்திலும் பழுப்பு நிறக்கோடுகள் காணப்படுவதாகப் பறவை நூலில் கூறப்பட்டிருக்கின்றது. மற்றும் குஞ்சு பொரிக்குங் காலத்தில் அன்றிலின் அலகின் அடியிலிருந்து கண்வரை கருஞ்சிவப்பாக மாறி விடுவதாகவும் பறவை நூலார் கூறுவர். இதையே 'எரியகைந்தன்ன செந்தலை யன்றில்' என்று சங்கப்புலவரும், 'சேவலோடுறை செந்தலை அன்றில்' என்று கம்பரும் பாடியிருக்கின்றனர். இப்பறவைக்குத் தலையில் சில இறகுகள் சூட்டுபோலிருப்பதாகவும் சிலர் கூறுகின்றனர். இச்செய்தியை இன்னும் கூர்ந்து நுணுகி ஆராய்ந்தால் உண்மை தெரியவரும். இதில் உண்மையிருப்பதாகவே தெரிகிறது. மேற்கூறியவைகளிலிருந்து சங்க நூற்புலவர்கள் கூறிய பல செய்திகள் பறவை நூலார் கூறுபவையோடு ஒத்து இருப்பது தெரிகின்றது. இது சங்கப்புலவர்கள் இயற்கையோடியைந்து வாழ்ந்த வாழ்வையும், இயற்கைச் சூழ்நிலையை நுணுகி ஆராய்ந்த திறனையும் எடுத்துக்காட்டுகின்றது.

சங்க நூற்செய்திகளில் உண்மை எது, கற்பனை எது என்று தெளிந்துகொள்வது எளிதல்ல. அறிவியல் அறிவொடு, தமிழறிவும் இருந்தால் தெளிவது எளிதாகிவிடும். சங்க இலக்கியத்தில் விலங்குகளையும், பறவைகளையும் வாழ்க்கையொடு பிணைத்துப் பாடப்பட்ட அழகிய கற்பனைகளைப் படித்ததும் இச்செய்திகளை உண்மைக்குப் புறம்பானதாகவும், வெறும் கற்பனையாகவும் சிலர்

கருதி விடுகின்றனர். சங்கப் புலவர்கள் அறிவியற்செய்திகளைக் கண்டு பிடித்துக் கூறுவதற்காகப் பாடவில்லை. இயற்கையொடு இயைந்து வாழ்ந்து தங்களது நுண்மாணுழை புலத்தால் கண்ட இயற்கைச் செய்திகளைப் பாடற்கருத்திற்கேற்பக் கையாண்டிருக் கின்றனர். இதில் கற்பனையும் உண்டு, அறிவியலும் உண்டு. இவைகளைப் பிரித்துத் தெளிவதே அறிவுடையார் செயல். அன்றில் என்ற பறவையின் உண்மைச் செய்தியை அறியாத பிற்காலத்தார் அன்றில் என்பதற்குக் 'கிரவுஞ்சம்' என்ற வடமொழிப்பொருள் கொண்டு அதை ஒரு புராணப் பறவையாக்கினர். அன்றில் என்ற பெயர் இப்பறவைக்கு வந்த காரணம் ஓர் அழகிய கற்பனையே. பகலெல்லாம் துணையுடன் பனைமடலில் படிந்தி வாழ்ந்து இரவில் இரை தேடுங்கால் ஒன்றையொன்று விளிப் பதையே துணைக்கு ஏங்குவதாக சங்கப்புலவர் கருதிக் கொண்டனர் பழந்தமிழரும் இது போல் கருதியதால் துணை அன்றி வாழாதது என்ற பொருளில் (அன்று + இல்) அன்றில் என்று பெயரிட்டழைத்ததாகத் தெரிகின்றது. வெள் + இல் என்பது வெளிறு இல்லாதது, வயிரமுடையது என்ற பொருளில் வெள்ளில் என்றமைவது போல் அன்றில் என்ற பெயரும் தோன்றியிருக்கலாம். பகல் முழுவதும் துணையொடு ஒன்றியே யிருந்து இரவில் அன்றியிருக்காதது என்ற பொருளிலே அன்றில் என்ற பெயர் தோன்றியிருக்கலாம். இப்பொருளையே பிற்காலத் தில் பிரிந்து உயிர்வாழாதது என்றும், கிரவுஞ்சம் என்றும் கற் பித்துக் கொண்டனர். அன்றிற் பறவையைத் தற்காலத்தில் 'வக்கா' என்று அழைக்கின்றனர். இப்பெயர் இதன் குரலின் காரணமாக எழுந்திருக்கலாம்.

மேற்கோள் நூல்கள் :—

1. The book of Indian birds—Salim Ali.
2. A guide to the birds of Ceylon—G. M. Henry.
3. Rural Science for elementry training schools,
—M. R. Subramanyan. B.A., L.T

# திரு. நடேசச் செட்டியாரவர்களின் நல்வரலாறு

நம் செட்டியாரவர்கள் நல்லியல்பு பலவும் வாய்ந்த செல்வச் சீலர். தெய்வச் செந்நெறியாம் சிவநெறிக்குத் தவப்பேற்றால் தொண்டியற்றிவரும் நற்றொண்டர். தில்லைச் திருச்சிற்றம்பலத் துறை பெருமான் அம்மை அம்பலவாணர் திருவடிக்கண் நீங்காப் பெருங்காதலினர். திருவொற்றியூர்த் தியாகராயப் பெருமான் திருவடிக்கண்ணும் நீங்காப் பேரன்பினர். திருவெண்ணீற்றுப் பொலிவும் சிவ சிந்தனையும் நீங்காத் திருவினர். இவர்தம் வரலாறு சைவச் செந்நெறி வாய்மையினையும் மாண்பினையும் உலகினுக்கு உறுதியுற எடுத்துக்காட்டும் உண்மை வரலாறாகும்.

இவர்தந் தந்தையார் திருப்பெயர் நம்பன்குளம் அப்பா சாமிச் செட்டியாரென்ப. தாயார் திருப்பெயர் பூங்காவனத்தம் மாள். நம் செட்டியாருடன் பிறந்த மூத்தார் கோவிந்தராசச் செட்டியார், சுந்தரத்தம்மாள், தாயம்மாள் என்பவராவர். முன்னேற்ற ஒற்றுமைத் திண்ணைப் பள்ளியில் கல்விகற்கத் தொடங்கினர். செம்மையுறக் கற்றனர். இரண்டாம் படிவத் துடன் இவர்தங் கல்வி நின்றுவிட்டது. அக்காலத்து இவர்தம் அகவை பன்னிரண்டு. பின் தொழில் துறையினைக் கைமேற்றுத் தாமாகத் தம் தாளாற்றலால் உழைத்து ஊதியமீட்டத் தொடங் கினர். இறையருளாலும் நிறைபெருங்குணத்தோர் முறையுற அவ்வப்போது புரிந்துவந்த பேருதவியாலும் விழைதக்க உழைப் பும் ஊதியமும் நாளும் ஓங்கி வளர்ந்தன.

அந்நாளில் நம் செட்டியார்க்கு உறுதுணையாய் உயிரினும் மிக்காராய்த் திகழ்ந்தவர் 'கவுணியன் அச்சகத்' துரிமையாளர் காஞ்சி முருகேசச் செட்டியாரவர்களாவர். இவர்கள் செந்தமிழ்ப் பற்று, சிவனெறிப்பற்று, சிவனடியார்பற்று, திருமுறைப்பற்று, திருக்கோவிற்பற்று முதலியவற்றுடன் திருநந்தனவனம் பேணிப் 'பெரும்புலர் காலைமூழ்கிப் பித்தர்க்குப் பத்தராகி, அரும்பொடு மலர்கள் கொண்டு ஆர்வத்' தோடஞ்செழுத்தும் அகத்துட் கொண்டு பல்வகையாகத் தொடுத்துச் சிவபெருமானுக்குச் சாத்திக் காதலாகிக் கசிந்து கண்ணீர்மல்கி நாளுங் கைதொழுங் கடப்பாடு மிக்க நற்றவத்தர். மேலும் பதிநடையாகப் பாடல்பெற்ற திருவூர் முழுவதுக்கும் பிற பதிகட்கும் வாய்த்தபொழுதெல்லாம் சென்று வழிபட்டுவந்த விழுமியர். வடநாட்டின்கண்ணுள்ள

பல திருவூர்களுக்குஞ் சென்று வழிபட்டுள்ளனர். இடரினுந் தளரினும் நோயுறினும் திருமாலைத் திருப்பணியை இடையறாது இயற்றி வந்த எழிலினர். இப்பெரியார்தம் உறுதுணையால் பொருளீட்டுந்துறையில் முன்னேறியது போன்று அருளீட்டுந் துறையிலும் ஆர்வத்தோடு முன்னேற்றம் எய்தினர்.

நம் செட்டியாரவர்கள்தம் அகவை பதினாறில் தந்தையார் சிவனடி எய்தினர். சற்றேறத்தாழ இருபத்துநான்காவ தகவையில் தாயார் இறையடி எய்தினர். நம் செட்டியாரவர்கட்கு இருபத்தைந்தாம் அகவையில் திருமணம் நிகழ்ந்தது. இவர்தம் கற்பும் பொற்பும் கடவுட் பற்றும் மிக்குள்ள மனைவியார் திருப்பெயர் மங்கையர்க்கரசியம்மாள் என்ப. இவ்வம்மையாரின் தந்தையார் பெயர் மாணிக்கச் செட்டியார். தாயார் பெயர் கன்னியம்மாள். இருவரும் சிந்தையைச் சிவன்பால் வைத்து இல்லற வாழ்வை நல்லறமாக இயற்றிவந்தனர். சிவன் திருவருளால் முறையே குப்புசாமி, கோபாலன், சிவராமன், இராமலிங்கம் என ஆண்மக்கள் நால்வரையும் சரசுவதி, இலட்சுமி என்னும் பெண்மக்கள் இருவரையும் பெற்றெடுத்தனர்.

தம் அகவை முப்பதில் T. R. பிரசு (தியாகராய அச்சகம்) என்னும் அச்சகத்தைத் தொடங்கினர். அத்தொழில் திருவொற்றியூரான் திருவருளால் சிறப்பாக நடந்து வருகின்றது. அறுபான்மும்மை நாயன்மாருள் ஒருவராய்த் திருவருளால் இத்திருவொற்றியூரின்கண் தோன்றியருளிய செந்நெறித் திருவினர் கலியநாயனா ராவர். அவர் இடையறாது புரிந்துவந்த திருத்தொண்டு 'திருவொற்றி யூரமர்ந்த, கொல்லைமழ விடையார்தங் கோயிலினுள் ளும்புறம்பும், அல்லுநெடும் பகலுமிடுந் திருவிளக்கின் அணிவிளைத்த'லாகும். இந்நாயனார்க்கு நம் செட்டியாரவர்கள் தம்பொறுப்பில் திருவொற்றியூர்த் தியாகராசர் தேவத்தானத்தில் ஒரு கற்படிமம் செய்வித்துக் கடவுண்மங்கலமும் புரிவித்து நிலைநாட்டியுள்ளனர். கருவுவாவெனப்படும் அமாவாசை தோறும் திருவிளக்குப் பணியும் புரிந்து வருகின்றனர். பூத்தொடுத்துச் சாத்தும் பொருவில் திருத்தொண்டுஞ் செய்து வருகின்றனர். ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் திருவொற்றியூரில் திருவிழாக் கொண்டருளும் அம்மனுக்குத் திருமுழுக்கு, ஒப்பனை முதலியன சிறப்புறச் செய்வித்து வழிபாடியற்றி வருகின்றனர். திருமுழுக்கு - அபிசேகம், ஒப்பனை - அலங்காரம். அறுபான்மும்மை நாயன்மாருக்கு ஆண்டுதோறும் நிகழ்த்தி வரும் விடையாற்றுதற்றிருவிழாவினையும் திருமுழுக்கு ஒப்பனை முதலிய சிறப்புக்களுடன் மாலைவேளையில் சிறப்புறச் செய்வித்து வழிபாடியற்றி வருகின்றனர். இத்தகைய திருத்தொண்டுக

ளனைத்தும் ஏறத்தாழ ஐம்பத்தைந்து ஆண்டுகளுக்குமேல் ஆற்றி வருகின்றனர்.

திருவாளர் எம். சபாபதிச் செட்டியாரும் அவர்தம் கற்புறு வியர் சுந்தராம்மாளும் (இச்சுந்தராம்மாள் நம் நடேசச் செட்டியாரவர்கட்குத் தமக்கையாராவர்.) மிக்க சிவப்பற்றுடையவர்கள் முற்றவப் பேற்றால் சிவப்புண்ணியங்கள் பலவும் புரிந்த பகர்தற்கரிய பண்பினர். தம் வாழ்நாளில் தாமும் தங் கணவனாரும் தனிப்பெருங் காதலுடன் செய்து போதரும் சிவத் திருத்தொண்டுகளுந் தமக்குப்பின் தம்போன்று அகம்புறம் ஒத்து ஆர்வத்துடன் இடையறாது இயற்றிவரும் ஆற்றலும், நல்லியல்பும், நயனார் நடுநிலையும், வடுவஞ்சி வாய்மை குன்றாது வாழும் வாழ்க்கையும் உடைய நம் செட்டியாரே என உளங் கொண்டு உறுதியுடன் துணிந்து உவகையுற்றனர். திருவருளால் இவர்களுக்குரிய உடைமைகள் மூன்றுநூறாயிரத்துக்கு மிக்கனவாகும். மூன்றுநூறாயிரம்-மூன்றுலட்சம். அத்துணைப் பெறுமதியமைந்த பொன் மணி நிலம் முதலிய உடைமைகளாகிய பொருள்கட்கு அவ்வம்மையார் தலைமையாகவிருந்தது போன்று பின் தலைமையாக இருக்கும் பொறுப்பு திருவாளர், கந்தசாமிச் செட்டியாரவர்களின் மனைவி T. தாயம்மாளவர்களுக்கும் நம் செட்டியாரவர்களுக்குமே வந்தது.

இம்முதுகண்ணார் நிலையில் நம் செட்டியாரவர்கள் ஆற்றி வந்ததும், வருகின்றதும் ஆகிய திருத்தொண்டுகள் அளப்பில. அவற்றுட் சில வருமாறு: சைனாப்பசாரின்கணுள்ள குமர கோட்டம் சுப்பிரமணியர் திருக்கோவில் தேவத்தானத்தைச் சிறப்புற நடத்திவருதல். மேலும் நடராசப் பெருமானுக்கு ஆண்டுதோறும் நிகழும் திருமுழுக்கு ஆறினையும் சிறப்புற நடத்தல். நால்வர் திருநாள்களையும், வேனில் ஆறும்நாள் விழாவினையும், மார்கழி மாணிக்கவாசகர் திருவிழாவினையும் சிறப்புற நடத்தல், மாதப் படித்தரம் முப்பது வெண்பொன் வழங்கல், சென்னைப் பார்த்தசாரதி கோவில் ஒன்பதாம்நாள் விழா முதலியன நடத்தி வருகின்றனர். T. தாயம்மாளவர்கள் உள்ளகாலத்து அவருடன் துணையாக நின்று திருமயிலாப்பூரின்கண் அங்கம் பூம்பாவையார் திருவிழாக் கொண்டெழுந்தருளியிருக்கும் அழகமைந்த திருமண்டபம் கருங்கற்றிருப்பணியாக அமைப்பித்தனர். சம்பந்தப் பெருமானார் சிவநேசச் செட்டியார், அங்கம்பூம்பாவையம்மையார் ஆகிய மூவரும் அத்திருமண்டபத்திற்கெழுந்தருளி 'மட்டிட்ட புன்னையங் கானல்' என்னும் திருப்பதிகம் ஓதப்பெறும் சிறப்பும் நடந்து வருகின்றது. அம்மட்டுமன்று, ...றிய மண்டபம் அமைந்துள்ள அத்திருமயிலாப்பூர்த்

திருக்குளத்துப் படித்துறைகளுள் மூன்றினைக் கருங்கற்றிருப் பணியாக அமைப்பித்தனர். இவ்வனைத்திற்கும் ஏறத்தாழ வெண்பொன் பதினையாயிரத்துக்குமேற் செலவாகியுள்ளன. அன்றுதொட் டின்றுகாறும் ஆண்டுதோறும் அவ்வங்கம்பூம் பாவையாரின் திருவிழாவினைச் சிறப்புறச் செய்வித்து வருகின் றனர். திருப்பதிகம் ஓதி நிறைவுற்றதும் திருக்கோவிலார் நம் செட்டியாரவர்கட்குத் திருவெண்ணீறளித்து, மாலைமரியாதை முதலிய சிறப்புக்கள் இன்றும் செய்து வருகின்றனர்.

வட திருமுல்லைவாயிலில் திருக்கோவிற் றிருக்கொடிமரம் அமைப்பித்துள்ளனர். தங்கசாலைத்தெரு சுப்பிரமணியர் திருக் கோவிலிலுள்ள பழனியாண்டவர் மண்டபம் வெண்பொன் நாலாயிரத்துக்கு மேலாகச் செலவு செய்து அமைப்பித்துள்ள னர். மல்லீசுரன் திருக்கோவிற்கணுள்ள நால்வர் வீற்றிருந் தருளும் இருக்கையின் மேல்முகடாகிய விமானம் வெண்பொன் ஆயிரத்துக்கு மேலாகச் செலவு செய்து அமைப்பித்துள்ளனர். வால்டாஃசுப்பெருவழி (ரோடு) யில், எம். சபாபதிச் செட்டியார் தொடக்கப் (எலிமெண்டரி) பள்ளிக்கூடம் நிகழ்த்தி வரு றனர்.

நம் செட்டியாரவர்கள் திருத்தில்லை அம்மை அம்பலவாணர் பால் அளவிறந்த காதலுடையர். அக்காதல் வெள்ளம் ஆண்டு தோறும் மார்கழித் திருவாதிரைக்கும், ஆனித்திருமஞ்சனத்திற் கும் எத்துணை இடையூறுகளுக்கு இடையிலும் இழுத்துச்சென்று திருவருட் காட்சியளித்து வழிபடுவிப்பது சொல்லொணு வியப்பே யாம். இறைவன் தோன்றுத் துணைவன், தொண்டர்தம் தூய வுள்ளத்தன், அடியார்க்கு எளியன், அன்பார்க்குமுன் நிற்பவன் என அருள்நிறை ஆன்றோர் அடுத்தடுத்து எடுத்து அன்பொடு கூறுவதும், திருவருள் நூல்களாற் கேட்கப்படுவதும் மெய்ம் மையே என ஐயுறவின்றித் தெளிவதற்குக் கண்காணும் மெய்யடி யாராகத் திகழும் நம் செட்டியாரவர்களே போதிய சான்றுவர்.

நம்செட்டியாரவர்கள் திருத்தில்லைக்குப் போகத் தொடங்கும் காலங்கள் பலவற்றினும் தடைப்படுத்தும் நீக்கமுடியாத முட்டுக் களே பலப்பலவாம் அவையனைத்தும் அவ்வப்போது ஆண்டவ னருளால் மிக எளிமையி லகல்வதுங் காணலாம். அவற்றுள் ஒரு சிலவற்றை ஈண்டுக் கூறுவாம்:

எத்தனையோமுறை புகைவண்டித் துண்டுகள் எவ்வழி யாலும் கிடைக்கப் பெறுமல் பெரிதும் இன்னலுற்றுச் செய்வகை யறியாது உளந்தளர்ந்து, முகம்வாடி, உரையவிந்து; நிற்றலும் கிடத்தலும் பெறுது நிலைகலங்கி ஆண்டவன் திரு

வருளையே யுன்னி அலமருங்காலத்து எவ்வகைப் பழக்கமுமில்லாத முற்றும் புதியராகிய எவரேனும் ஒருவர் காரணம் ஏதும் புகலாது புகைவண்டித் துண்டினை நல்கிப் பொருள் பெற்றுத் துணை புரிவர். இங்ஙனம் நிகழ்ந்த இடங்கள் பலப்பலவாம்.

ஒருமுறை நம் செட்டியாரவர்கள் அனைவரும் நகருக்கு வெளியே உறையவேண்டிய அரசினர் கட்டுப்பாட்டுக் காலத்துத் தம் வீட்டிலமைந்துள்ள இறை திருவுருவப்படங்களைச் செவ்வையுறக் கட்டத் துவங்கினர். அப்படங்கள் மிகவுயரத்திலிருந்தமையால் மேசைமேல் சில நாற்காலியமைத்து ஏறிக் கட்டத் துவங்கினர். தம்மையறியாமலே கீழ்விழுந்து குருதி பாய்ந்து மயங்கிக் கிடந்தனர். அந்நாள் ஆனித்திருமஞ்சனத்திற்குச் செல்ல வேண்டிய நன்னாள். சென்னைக் கிறித்துவக் கல்லூரித் தமிழ்த் துறைத்தலைவர் திரு. பூ. ஆலாலசுந்தரஞ் செட்டியார் எம். ஏ. அவர்கள் இவர்களுடன் திருத்தில்லை செல்லும் நோக்கமாய் இவர்களை அழைக்க வந்தனர். இவர்கள் நிலையினைக் கண்டு மிகவும் வருந்தினர். வேண்டுவன புரிந்தனர். சிறிது மயக்கந் தெளிந்தனர். பொறுக்கலாற்றாத் தம் நோவினையும் பொருட்படுத்தாது திருத்தில்லைக்குப் புறப்படவே ஒருப்பட்டனர். அதுகண்ட ஆலாலசுந்தரஞ் செட்டியாரவர்களும் நனிமிக வஞ்சினர். நம் செட்டியாரவர்கள் இறைவன் துணைநிற்கும் இயல்பினைக் கூற இணங்கினர். கைத் தாங்குதலாக அழைத்துச் சென்று புகைவண்டியின் மேற்பகுதியிலுள்ள படுக்கையில் இடமமைத்துப் படுக்கவைத்தனர். நம் செட்டியாரவர்கள் திருவெண்ணீறணிந்து, திருவைந்தெழுத்தோதித் திருத்தில்லையம்பலவாணன் திருவடியினையே உள்கித் துயின்றனர். செட்டியாருக்கு நேர்ந்திருந்த அளவிலாக் காய்ச்சலும் நோவும் எப்படியோ சொல்லொணா வியப்பாய்த் திருவருட்டிறனால் நீங்கின. உடனிருந்த ஆலாலசுந்தரஞ் செட்டியாரும் அளவிறந்த வியப்புக் கொண்டு அருளையே நினைந்து அகமுருகினர். இந்நாளிலும் இத்தகைய மெய்த்தொண்டர் வரலாறுகளை நேரிற் காணும் பேறு வாய்க்கப்பெற்றோர் பண்டைய மெய்யடியார் திருவரலாறுகளிற் சிறிதும் ஐயங்கொள்ளார் என்பது துணிபு. அம்மட்டுமன்று, அவர்களும் அவ்வழியிற்சென்று நன்னெறி யொழுகி நன்மையடைவர். இத்தகைய திருத்தொண்டினை நம் செட்டியாரவர்கள் திருவருட்டுணையால் ஐம்பதாண்டுகளுக்கு மேலாக நடத்திக் கொண்டு வருகின்றனர். வாழ்க செட்டியார் மெய்த்தொண்டு! வளர்க செட்டியார் நன்னலம்! வாழ்க செந்நெறி.

# அகராதிகள்

(செல்வி சிலம்பு, ௩௫, பரல் ௬, ௨௮௫ ஆம் பக்கத் தொடர்ச்சி)

மேலை நாட்டினர் இம் முறையில் அமைந்த அகராதியைத் தான் ஒப்புக் கொள்வர். அத்தகைய முறையில் தமிழில் அகராதி இயற்றியவருள் இந் நூலாசிரியரே முதலானவர்.

இவ்வளவு சிறந்த முறையில் விரிவாக எழுதப்பட்ட அகராதியை ஆறு பகுதிகளாக வெளியிட ஆசிரியர் திட்டமிட்டார். ஆறு பகுதிகளில் முதற் பகுதி 1904 இல் இலங்கையைச் சார்ந்த வண்ணார் பண்ணை திரு. வி. சபாபதியையருடைய அச்சியந்திர சாலையில் அச்சிடப்பட்டது. இம் முதற்பகுதியில் அகரத்தை முதலாக உடைய 7967 சொற்கள் மட்டும் தான் உள்ளன. இதற்கு முன்னர் வெளியான அகராதியில் அகரத்தை முதனிலையாக உடைய சொற்களைவிட இவ் வகராதியில் 3127 சொற்கள் அதிகமாக இடம் பெற்றுள்ளன. அகரம் எழுத்துச் சொற்கள் மட்டும் ஒரு பகுதியை நிரப்பிவிடுகின்றன. ஒரு பகுதியை வெளியிட்ட ஆசிரியர் தாம் எண்ணியவாறு மற்ற ஐந்து பகுதிகளையும் வெளியிடுவதற்குள் இயற்கையெய்தி விட்டார். அச்சாகாத ஐந்து பகுதிகளும் மதுரைத் தமிழ்ச் சங்கத்தினரிடம் ஒப்புவிக்கப் பெற்றன.

இந்நூல் 27 × 21 செ. மீ. அளவுடையது. 10;335 (345) பக்கங்களையுடையது.

## 4 ௭. அபிதான சிந்தாமணி (1910)

இந்நூல் யாழ்ப்பாணத்தினின்று வெளியான அபிதான கோசத்தை யொத்தது. அபிதானகோசம் சிறிய அளவிலே இருந்ததால் விரிந்த முறையில் பெயர்களுக்கு அதில் விளக்கம் தரப்படவில்லை. இக் குறையை நீக்கும்பொருட்டுத் திரு. ஆ. சிங்காரவேலு முதலியார் அவர்கள் 'அபிதான சிந்தாமணி' என்னும் இந்நூலை இயற்றியுள்ளார்.

வேதப்பொருள் விளக்கம், புராணக் கதைகள், பல நாட்டு வழக்கங்கள், சமயகுரவர்களின் வாழ்க்கைக் குறிப்புக்கள், வரலாற்றுக் குறிப்புக்கள் போன்ற பல விளக்கங்கள் இந் நூலில் தரப்பட்டுள்ளன. இந் நூலாசிரியர் தாம் ஒருவரே இம் முயற்சியில் ஈடுபட்டு இத்தகையதொரு பெரிய நூலைத் திரட்டித் தந்துள்ளது மிகவும் பாராட்டற்குரியதாகும். ஏறத்தாழப் பதினைந்தா

யிரத்துக்கு மேற்பட்ட பெயர்களுக்கு விளக்கம் தந்துள்ளார். கடந்த சில ஆண்டுகளாகத் தமிழில் 'கலைக்களஞ்சியம்' பகுதி பகுதியாக உருவாகி வருகின்றது. இற்றைய நாள்வரை இக் கலைக்களஞ்சியம் செய்யக்கூடிய உதவியை அபிதான சிந்தாமணி செய்து வந்திருக்கின்றது. பெயர்கள் அகராதியில் உள்ளது போல் அகரவரிசை முறையில்தான் தரப்பெற்றுள்ளன.

இந் நூலாசிரியரான ஆ. சிங்காரவேலு முதலியார் சென்னையி லுள்ள கிருஷ்ணாம்பேட்டையில் வாழ்ந்து வந்தார். பச்சை யப்பன் கல்லூரியில் தமிழாசிரியராகப் பணியாற்றி ஓய்வுபெற்றார். கி. பி. 1890 ஆம் ஆண்டு இந் நூலை எழுதத் தொடங்கினார். இருபதாண்டுகள் அரும்பாடுபட்டு இந்நூலைத் தொகுத்து முடித்த வுடன் அச்சிட முடியாது வருந்திய வேளையில் மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் தலைமை தாங்கி நடத்தி வந்த திரு. பொ. பாண்டித் துரைசாமித் தேவரவர்கள் முன்வந்து இந்நூலை மதுரைத் தமிழ்ச் சங்க வெளியீடாகவே வெளியிட்டனர்.

மதுரைத் தமிழ்ச்சங்க ஒன்பதாவது வெளியீடான இந்நூல் சென்னை வைஜயந்தி அச்சுயந்திரசாலையில் அச்சிடப்பெற்றது. 1910 இல் வெளியானது. இது 25 × 17 செ. மீ. அளவுடையது. 3;1048;4 (1055) பக்கங்களையுடையது. இதன் விலை 7 ரூபாய் என்று அச்சிடப்பட்டுள்ளது.

## 4 உ. தமிழ்ச் சொல்லகராதி (1910)

மதுரைத் தமிழ்ச்சங்க வெளியீடான இவ்வகராதி அகராதி களுள் குறிப்பிடத்தக்கதொன்று. கதிரைவேற் பிள்ளை தாம் தொகுத்த அகராதியை ஆறு பகுதிகளாக வெளியிட வேண்டு மென்று திட்டமிட்டு அகரத்தை முதலாகவுடைய சொற்களை மட்டும் முதல் பகுதியாக வெளியிட்டார். பிற பகுதிகளை வெளி யிடுவதற்கு முன்னர் எதிர்பாராத வகையில் இறந்துவிட்ட காரணத்தினால் அப் பணி அவ்வளவிலேயே நின்றுவிட்டது. ஆனால் இவ்வாறு அகராதி முற்றுப்பெறாமல் இருப்பதை அறிந்த திரு. பாண்டித்துரைத் தேவரவர்கள் காலஞ்சென்ற கதிரைவேற் பிள்ளையவர்களுடைய குமாரரான க. பாலசிங்கம் என்பவர்க்கு அச்சிடாத பகுதிகளை அனுப்பி வைத்தால் அவற்றைத் தாமே செப்பனிட்டு மதுரைத் தமிழ்ச்சங்கத்தின் வாயிலாக வெளியிடுவ தாக எழுதினார். திரு. பாலசிங்கம் இதற்கிணங்கவே மதுரைத் தமிழ்ச்சங்கம் இதனை வெளியிடும் பணியை மேற்கொண்டது.

தமிழ்ச்சங்கம் இவ்வகராதியின் மூல ஆசிரியரின் எண்ணப் படி அகராதியை ஆறு பகுதிகளாக வெளியிடாது மூன்று பகுதி

7. இதற்குப் பழைய உரை :
"உலகத் தெல்லையுள் தமிழ்நாடு கேட்ப" —நச்சினார்க்கினியர்.

8. "இமிழ் கடல் வரைப்பில் தமிழகம் அறிய" —சிலப்பதிகாரம்

இதற்கு அடியார்க்கு நல்லார் உரை :

"ஆரவாரத்தை உடைய கடல் சூழ்ந்த நிலத்திலே
வடக்கும், தெற்கும், குணக்கும், குடக்கும் வேங்கடம்
குமரித் தீம்புனல் பௌவமெனத்
தமிழ் நாட்டிற்கு எல்லை கூறப்பட்டன"

9. 'சம்புத் தீவினுள் தமிழகமருங்கில்' —மணிமேகலை

10. பழைய உரை : 'தமிழ் நாட்டில்' —மணிமேகலை

11. 'தமிழ் நாடு', 'தென்தமிழ்நாடு' —கம்பராமாயணம்.

12. 'தெருள்பொழிவண்' "தமிழ் நாடு" —சேக்கிழார்.

13. 'விரிந்த தமிழ்நாடு' —குமரகுருபர அடிகள்

14. 'தமிழ் நாட்டில் போனார்' —பெரிய புராணம்

---

## மதிவலார் வம்மின்

திரு. கா. கணபதி

செங்கோற் சிறப்பும் செழுமையும் அருமையும்
பொங்கோத மணக்கும் பொலிவுறு பொருளும்
நடுவுநிலை திறம்பா நன்னல மக்களும்
முடிமன்ன ராட்சியே மூதறிவ னாட்சியென
மக்கள் போற்ற மன்னராண் டதூஉம்
மிக்க வளமுறு தக்கநம் நாடே !
அறிவும் ஆக்கமும் அன்பும் பெருக்கி
உற்றுழி உதவியும் உறுபொரு ளீந்தும்
பெற்றவை யனைத்தும் பிறர்பொருட் டாக்கியும்
கற்றவை யெல்லாம் கசடறக் கற்றும்
செற்றமும் கலாமும் சேராது நீக்கியும்
அற்றவர்க் கெல்லாம் அருள்மொழி வழங்கியும்
செந்தமிழ் மொழியைச் சொந்தமாப் பேணியும்
கொடைமடம் பட்டும் படைமடம் படாஅதும்
ஆட்சி செய்தன ரான்றோர்
மாட்சி சொல்ல மதிவலார் வம்மின் !

# செய்திகளும் குறிப்புக்களும்

## இலங்கைத் தமிழர் படும் இன்னல்

'அறப்போர் புரியும் இலங்கைத் தமிழருக்குத் தடியடி'

'பலருக்குக் காயம்;'

'படைவீரர்கள் தமிழ்த் தொண்டர்களைக் குத்திக் செய்கின்றனர்.'

குறிப்பு: என்று இங்ஙனம் கடந்த சிலநாட்களாகச் செய்தித் தாள்களில் வரும் செய்திகளைக் கண்டு வருந்துகிறோம். சிங்களத்தோடு எந்தமிழ் மொழிக்கும் ஒத்த உரிமை வழங்கல் வேண்டும் எனக் கோரி நல்ல முறையில்—மக்களாட்சிப் பண்போடு அறப்போர் தொடுத்துள்ள தமிழாமீது இத்தகைய கொடுமைகள் வீசப்படுவது கொடுமையிலும் கொடுமையாகும். இஃது எந்நாட்டாரும் கண்டிக்கத்தக்கதொன்றாகும்.

காடாகக் கிடந்த இலங்கையை நாடாக்கிய தமிழ்ப் பெருங்குடியினருக்கு இழைக்கப்படும் இந்த அநீதியை இந்திய மைய அரசினர் கண்டித்தல் வேண்டும். சென்னை அரசினரும் வாளாவிராமல் இதனை மைய அரசினர்க்கு வலியுறுத்துவார்கள் என நம்புகிறோம்.

## வரவு செலவுத் திட்டத்தில் கல்வி

"சாதி சமய வேறுபாடின்றி ஏழைக் குழந்தைகள் அனைவருக்கும் 11ஆவது வகுப்புவரை இலவசக் கல்வி அளிக்கப்படும்" என்று கடந்த 25-2-61இல் சட்ட மன்றத்தில் தமிழக அரசின் 1961—62 ஆம் ஆண்டு வரவு செலவுத் திட்டத்தை வெளியிட்டுப் பேசியகாலை நிதி அமைச்சர் திரு. சி. சுப்பிரமணியம் அவர்கள் குறிப்பிட்டார்கள்.

குறிப்பு: பொதுவாக அரசியல் வரவு செலவுத் திட்டங்களில் பல குறைபாடுகளும் நிறைபாடுகளும் விரவி இருத்தலும் அரசியல் கண் கொண்டு அதுபற்றிக் கருத்துரை வழங்கும் அரசியற் றலைவர்களும் பிறரும் இருத்தல் இயல்பு. எது எப்படியிருப்பினும் கல்வியைப் பொறுத்த அளவில் அரசியலார் இங்ஙனம் எல்லோருக்கும் கண்ணளிக்கும் வாழ்வு நல்கும் இந்த நல்ல திட்டத்தை நாம் உளமார வரவேற்கிறோம் - பாராட்டுகிறோம். அரசினர் இதனோடமையாது நூல்நிலையங்களையும் முதியோர் கல்வித் திட்டங்களையும் செயல் முறைக்குக் கொண்டு வந்து கற்றவர் தொகையை நாட்டில் பெருக்கி நலம் புரிதல் வேண்டும்.

## பள்ளிச் சீரமைப்புத் திட்டம்

"பள்ளிகள் வளர்சசித் திட்டத்தில் இதுவரை சேர்க்கப்பட்ட தொகை 3·99 கோடி ரூபாய்" என்று அண்மையில் சட்டமன்றத்தில் நிதியமைச்சர் தெரிவித்தார்.

மேலும் அவர் பேசியகாலை ஏறத்தாழ 6 கோடி ரூபாய் அளவுக்குப் பள்ளி வளர்ச்சித் திட்டத்துக்கு நன்கொடைகள் உறுதியளிக்கப்பட்டிருப்பதாகவும், இதுகாறும் 3·99 கோடி ரூபாய்க்குத் திட்டங்கள் செயல்படுத்தப்பட்டிருப்பதாகவும் குறிப்பிட்டார்.

குறிப்பு: கல்வித்துறை இயக்குநரின் இத்திட்டம் இந்த அளவுக்கு வளர்ச்சியுற்று நாட்டுக்கு நலம்பயந்து வருவது பெருமகிழ்ச்சிக்குரியதே. திட்டம் மேலும் செயல்படச் செல்வர்கள் முன்வருக.

**நல்ல முடிவு! ஆனால்......?**

"தமிழ் மக்களின் நீண்டநாள் கோரிக்கையான 'தமிழ் நாடு' என்ற பெயர் மாற்றத்தைச் சென்னை அரசு ஏற்றுக்கொண்டது. சென்னை மாநிலம் என்பதற்குப் பதிலாக, இனி அரசின் நடவடிக்கைகளிலும் சட்டமன்ற நடவடிக்கைகளிலும் 'தமிழ் நாடு' என்றே மாற்றி அழைக்கப்படும்.

அரசியல் சட்டத்தில் 'தமிழ் நாடு' என்ற பெயர் மாற்றம் இப்பொழுது செய்யவேண்டிய அவசியம் இல்லை. ஆங்கிலத்தில் சென்னை மாநிலம் 'மெட்ராஸ் ஸ்டேட்' என்றே அழைக்கப்படும். வெளிநாட்டில் சென்னை என்ற பெயருக்கு இருந்துவரும் செல்வாக்கை முன்னிட்டுப் பெயர் மாற்றத்தால் குழப்பம் ஏற்படாமலிருக்கவும், சிறுபான்மையோரின் மொழி உரிமையைப் பாதுகாக்கவும் ஆங்கிலத்தில் பெயர் மாற்றப்படவில்லை" என்று நிதி அமைச்சர் திரு. சி. சுப்பிரமணியம் அவர்கள், 24-2-61இல் சட்ட மன்றத்தில் அறிவித்துள்ளார்கள்.

குறிப்பு: தமிழகம் நெடுங்காலமாக எதிர்பார்த்திருந்த இந்த நல்ல முடிவை அறிவித்த அமைச்சர் அவர்களையும், சென்னை அரசினையும் பாராட்டுகிறோம். 'தமிழ்நாடு' என்னும் போதினிலே இன்பத்தேன் வந்து பாய்கிறது நம் காதினிலே. இது நல்ல முடிவேயெனினும் வெளிநாடுகளில் நம்நாடு இன்னும் மதராஸாகத்தானா இருக்கவேண்டும்! உள்நாட்டைவிட வெளிநாட்டில் 'தமிழ்நாடு' என்ற சொல் ஒலிக்கப்படுதல் தானே தமிழருக்கு மகிழ்ச்சியூட்டுதல் ஆகும். எனவே, இம்மாற்றத்தைச் செய்த அமைச்சரவை விரைவில் அம்மாற்றத்தையும் செய்து, அதனைச் சட்டமாக்கித் தமிழரின் ஏமாற்றத்தைப் போக்குமென நம்புகிறோம்.

**ஆங்கிலத்தை வெறுக்கவில்லை**

"நமது தமிழாசிரியர்கள், புலவர்கள் தமிழ் தமிழ் என்று அதிகம் வற்புறுத்திப் பிற மொழிகளான ஆங்கிலம் போன்றவைகள்மீது வெறுப்பு உண்டாகும்படி செய்துவிட்டார்கள்" என்று தமிழக முதலமைச்சர் திரு. காமராசர் அவர்கள் ஈரோடு கலைமகள் கல்வி நிலயத்தில்3-3-61 இல் பேசியகாலை குறிப்பிட்டார்கள்.

குறிப்பு: தமிழ் தமிழ் என்று புலவர் பெருமக்கள் பேசியதும் பேசிவருவதும் உண்மை. ஆனால் அவர்களெல்லாம் ஆங்கிலத்தை வெறுத்தொதுக்கினர் அல்லர். மாறாக, ஆங்கிலத்தின் துணைகொண்டு தமிழின் ஏற்றத்தை உலகறியச் செய்தனர். இதற்கோர் எடுத்துக்காட்டாக நின்றவர் மறைத்திரு. மறைமலையடிகளாவர். பின்னை எம்மொழிகளை இப் புலவர்கள் வெறுத்துரைத்தனர் எனின், தமிழ் வளர்ச்சிக்குத் தடையாக நிற்கும் வடமொழியையும் அதன் சார்பு மொழியையுமேயாகும். தற்போதுள்ள உண்மை நிலையும் அஃதே. ஏனெனில் வடமொழியும் இந்தியும் தமிழ்மொழிக்கு ஊறுதேடும் வகையில் வளரலாயின. எனவே தமிழ்ப்புலவர் உலகம் வெறுத்தது ஆங்கிலத்தை அன்று என்பதை அமைச்சர் போன்ற பெருமக்களுக்குத் தெரிவித்துக்

# மதிப்புரை

**'பிரதிபேத ஆராய்ச்சி'**

இந்நூலின் ஆசிரியர் திரு. மு. இராமகிருட்டினன் ஆவர், இவர் முதன்மைத்தமிழாசிரியராய் திரு. வ. வே. உயர்நிலைப்பள்ளியில் [வேங்கடாசலபுரம், (வழி தேனி)] பணியாற்றி வருகின்றனர். இதன் விலை ரூ. 1—75. இந்நூல் தமிழர் வாழ்வியல் நன்னூலாம் புறநானூற்றில் காணப்படும் பாட வேறுபாடுகளும், அவை அங்ஙனம் நேர்ந்தமைக்குரிய பொருத்தமான காரணங்களும், அவற்றை நனிமிகவுழைப்பெடுத்து ஆசிரியர் கண்டமைத்த வழிவகைகளும் இந்நூலின்கண் ஆசிரியர் அவர்களால் தெளிவுறக் காட்டப்பட்டுள்ளன. அளவிறந்த எடுத்துக்காட்டுக்களும், இலக்கணக் குறிப்புக்களும் இடமிடந்தோறும் தரப்பட்டுள்ளன. இந்நூல் பழம் பெருநூலைக் கற்பார்க்கும், ஆய்வார்க்கும், கற்பிப்பார்க்கும் பதிப்பித்து வெளியிடுவார்க்கும் பெருந்துணை புரிவதாகும்.

இந்நூல் புதிய நூற்கலையாய்வுத்திற விலக்கணம் போன்றமைந் துள்ளது. இஃதொரு புதியமுறைப் படைப்பாகும். இதனை ஆசிரியர் மாணவர் அனைவரும் வாங்கிக் கற்றுப் பயனெய்துவார்களாக.

**"வரலாறும் வாழ்வும்"**

ஆசிரியர் க. த. திருநாவுக்கரசு M.A. (தமிழ்) M A. (வரலாறு) விலை ரூபா. 2-50. (ரீ) ஞட்சி பதிப்பகம், புதுக்கோட்டை. இந்நூல் பண்டைச் செந்தமிழ்ச்சான்றோர் பட்டறிவால் கண்டு கைக்கொண்டு ஒழுகிய சீரிய நாகரிக வாழ்க்கையை நன்கெடுத்தியம்புகிறது. உலகத்தில் சிறந்த முதல் நாடும் முதல் மொழியும் தமிழ் நாடும் தமிழ் மொழியுமே என வலி யுறுத்துகிறது. உலகிற்கு நனிநாகரிகம் வழங்கிய நாடு தமிழ் நாடே என்று நவிலுகிறது. கி. பி. மூன்றாம் நூற்றாண்டு முதலுள்ள தமிழ் நாட்டுவரலாறுகள் தக்க சான்றுகளுடன் விளக்கப்பட்டுள்ளன. மூன்று பெருந்தலைப்புக்களும் பதினான்கு உட்டலைப்புக்களும் காணப்படுகின்றன. எனவே இந்நூல் உண்மை உணர்வார்க்கும் வரலாற்றாய்வினர்க்கும் பெருந்துணை புரிவதாகும். மாணவ ஆசிரியர்களும் பிறரும் இதனைப் பெரிதுங் கற்றுப் பயன் எய்துவார்களாக.

**"நீ சிரித்தால்?"**

[என்னும் இந்நூல் புலவர் வித்துவான் மு. **உலகநாதன்** ("தத்துவப் பிரச்சாரகர்" தமிழ்நாடு காந்தி நினைவு நிதி) அவர்களால் யாக்கப்பட்டது. காசு 80. பரிசுப் பதிப்பு விலை ரூபா ஒன்று.]

அவ்வப்போது தம் உள்ளத்துணர்ச்சியில் தோன்றிய உலகமக்கட்கு உதவத்தக்க உயர்ந்த கருத்துக்களை அழகிய கவிதை வடிவில் ஓசை நயமும், யாப்பொழுங்கும் பொருந்தப் பாடியுள்ளனர். வழிவழிப் புலவர் குடும்பத்துவந்த வாய்மையராதலின் செந்தமிழ் ஊற்றுச செய்யுட்கள் தோறும் சிறந்து திகழ்வதைக் காணலாம். 'அழகின் சிரிப்பு' முதல் இருபத்தாறு தலைப்புக்களில் நூறு பாட்டுக்குமேல் யாத்துள்ளனர்.

இன்னும் கவிதை நூல்கள் பல வெளிவரத்தக்க நிலையிலிருப்ப தாகவுந் தெரிகின்றது. செந்தமிழன்பர்கள் இந்நூலை வாங்கியும் வாங்கு வித்தும் ஆசிரியரவர்களை ஊக்கப்படுத்துவார்களாக.

**'கந்தன் மலர்'**

இவ்வரிய பெரிய தொகுப்பு நூல் ஸ்ரீகுமார குருவமர் திருக்கைத் திருப்புகழ்ச் சங்கம், (15, தணிகாசலம் பிள்ளை தெரு, திருவல்லிக்கேணி, சென்னை-5.) என்னும் சீரிய கழகத்தாரால் வெளியிடப்பெற்றது. இதன் விலை ரூபா. 3. இதன் தொகுப்பாசிரியர் திரு. ஈ. வே. வேங்கடசுப்பிரமணியம் ஆவர். இந்நூல் குறித்த சங்கத்தின் 43 ஆம் ஆண்டின் நிறைவு விழாவையும், தொகுப்பாசிரியரவர்களின் தந்தையார் திரு. ஈ. வே. வேஙகடராவ் அவர்களின் 80 ஆவது ஆண்டு நிறைவு விழாவையும் கொண்டாடும் நினைவு மலராக வெளிவந்துள்ளது. இருபத்தாறுக்கு மேற்பட்ட சிறந்த கட்டுரைகள் இதன் காணப்படு கின்றன. கட்டுரையாசிரியர்கள் அத்தனை பேரும் மெய்யான முருகனடியாராம் முழுதுணர்ந்தோராய்த் திகழும் பொலிவே ஒரு தனிச சிறப்பாகும். இந்நூல் புராணக்கதையின் புதை பொருளை நன்றாக வெளி எடுத்துக்காட்டுகின்றது; முருகன் வழிபாடு பண்டைத் தமிழ்சசொல்லே யென்பதும் இதன்கண் நன்றாக வலியுறுத்தப் பட்டுள்ளன. திருமுருகனடியார் பலர்தம் திருப்பெயரும், தனிச்சிறப்பும், தொண்டும் செந்தமிழ்ப்பாக்களால் அமைக்கப்பட்டுள்ளன. திருமுருகன் வழிபாட்டினை செய்தற்கு இது சிறந்ததாகும். இதனை யாவருங் கற்றுப் பயன் எய்துக.

**'மேல்மலை மக்கள்'**

[ஆசிரியர்: C. **அன்னகாமு** அவர்கள், **காந்தி** கிராமம் அஞ்சல், மதுரை மாவட்டம். விலை ரூபா 2 50.]

இந்நூல் 1,000 முதல் 6,060 அடிவரையுள்ள மலைமுகடுகளில் ஆதி வாசிகளின் வாழ்க்கை வரலாற்றுண்மைகளை நன்றாகப் படம் பிடித்துக் காட்டுகின்றது. அவர்களின் ஒற்றுமை, இன்ப துன்பங்களை எல்லாரும் பங்கிட்டு வாழ்வது. ஊராட்சி முறை, திருக்கோவில் வழிபாடு, மணச் சடங்கு, பிணச சடங்கு, களவு மணம், கற்புநிறை, ஆடல்பாடல், அருந் தமிழ்ப்பாட்டு, படைமறவர்கள், ஓடியொளிந்து இம்மக்களோடு கலந்து கொண்ட முறை, மருந்து மந்திர முறைகள், உடற்கட்டும், ஊக்க மிகுதியும், உழைப்பும், வேட்டையாடுதலும் பிறவும் நன்கு விளங்கப் பல மேனாட்டறிஞர் எழுதியுள்ள சான்றுகளுடன் விளக்குகின்றது. கடைத் தெரு, பகட்டு வாழ்க்கை, கள்ளங்கவடு, பகை, மனமாற்றம், ஆசை, அலைக்கழிவு, அச்சம், கவலை ஏதுமில்லா நல்வாழ்வு இவர்களிடம் தாண்டவமாடுவதையும், எளிய வாழ்க்கை, இன்ப வாழ்க்கை, கற்பு வாழ்க்கை, ஏற்றத்தாழ்வில்லா ஆண்பெண் சமவாழ்க்கையும் காட்டு கின்றது. நோன்பு மேற்கொண்டு, பால், பழம், ஒருவேளை யுணவு, புலால் நீக்கம் முதலிய தவவாழ்க்கை மேற்கொண்டு வாழும் மேலோரும் அவரை ஆங்குள்ளார் கண்காண் தெய்வமாகக் கொண்டாடுவதும் குறிக் கப்பட்டுள்ளன. இந்நூல் வரலாற்றாய்வுக்குப் பயன்படும். அனைவரும் வாங்கிக் கற்றுப் போற்றுவார்களாக.

---

திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக்
கழகத்திற்காக, சென்னை, 2-140, பிராட்வே,
அப்பர் அச்சகத்தில், திரு. வ. சுப்பையா அவர்களால்
அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர்: வ. சுப்பையா.

**Statement about ownership and other particulars about the journal--Senthamil Selvi—as required by rule 8 of the Registration of News papers (Central) Rules, 1956.**

FORM IV

| | | |
|---|---|---|
| 1. | Place of publication | 1/140, Broadway, Madras-1. |
| 2. | Periodicity of its publication | Monthly |
| 3. | Printer's name | Appar Achakam |
| | Nationality | |
| | Address | 2/140, Broadway, Madras-1. |
| 4. | Publisher's Name | The South India Saiva Siddhanta Works Publishing Society, Tinnevelly, Ltd., |
| | Nationality | |
| | Address | 1/140, Broadway, Madras-1. |
| 5. | Editor's Name | Sri. V. Subbiah Pillai |
| | Nationality | Indian |
| | Address | 1/140, Broadway, Madras-1. |

6. Names and addresses of individuals who own the news paper and partners of shareholders holding more than one percent of the total capital.

1. Sri P. Muthukaruppa Pillai,
**Thamaraikulam,**
(Kanyakumari Dist.)

2. Sri. T. S. Ramalingam Pillai.
M.A., B.L., Sub Judge,
**Nagercoil,**
(Kanyakumari Dist )

3. Sri. T. Vairamuthu,
,, T. Thirunavukkarasu
(Minors)
By Guardian:
Sri. V. Subbiah Pillai,
6, Coral Merchant Street,
**Madras-1.**

4. Sri. V. Subbiah Pillai,
6, Coral Merchant Street,
**Madras-1.**

5. Srimathi S. Mangayar-karasi Ammal
6, Coral Merchant Street,
**Madras-1.**

6. Sri. R. M. S. Gopalakrishna Pillai, Land Lord.
**Sathankulam,**
(Tirunelveli Dist.)

7. Sri. M. K. Sivaganinatha Pillai, Fourth Floor, Broche Buildings, Princess Street, **Bombay-2.**

8. Sri. N. S. Sundaram, Bar-at-Law, 134, South Raja Street, **Tuticorin,** (Tirunelveli Dist.)

9. Sri. M. Kasiviswanathan Chettiar, Banker. **Paganeri,** (Ramnad Dist.)

10. Srimathi, K. Lakshmi Achi, w/o. Sri. M. Kasiviswanathan Chettiar, **Paganeri,**

11. Sri. PR. AL. M. N. Narayanan Chettiar, Proprietor, Paari Achakam, 127, Broadway, **Madras-1.**

12. Dr. Alagappa Chettiar Educational Trust, **Karaikudi,** (Ramnad Dist.)

13. Sri. RM. K. RM. Ramaswamy Chettiar, **Thittai,** (Tanjore Dist.)

14. Messrs. V D. Nagappa Chettiar and N. Meenakshi Atchi **Valampuri,** (Tiruchi Dist.)

15. Sri. C. T. Chidambaram Chettiar, **Valampuri,** (Tiruchi Dist.)

16. Srimathi Valliammai Achi) w/o Sri Kannappa Chettiar, **Nattarasankottai,** (Ramnad Dist.)

17. Sri. T S. Viswanatha Pillai, c/o T. V. Lakshmanasami, B. E. Inspector of Factories **Coimbatore.**

18. Sri. C. M. Ramachandran Chettiar, B.A., B L., Advocate, Tiruchi Road, **Coimbatore.**

19. Sri. T. S. Jambulingam Chettiar, Tirupur House,, **Coimbatore,**

I, V. Subbiah Pillai, hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.

(*Sd.*) **V. SUBBIAH PILLAI,**
*Publisher,*

4—3—1961




| சிலம்பு ௩௫ | திருவள்ளுவர் ஆண்டு ௧௯௯௨, பங்குனி<br>ஏப்ரல், 1961 | பரல் ௮ |
| --- | --- | --- |

# பொருவரிய பொன்முழுக்கு[1]

அன்று தொட்டு இன்றுகாறும் அடியவர் கூட்டம் அளவிறந்த அன்பினால் ஆசானுக்கும் ஆண்டவனுக்கும் பூவாலும் பொன்னாலும் புகழ்சேர் பாவாலும் பல்பணிபூட்டிக் கண்ணாரக் கண்டு கழிமகிழ்வெய்தி வருகின்றது. அகநிறை அன்பின் சிறப்புத் தகவுடை ஒப்பனை செய்வித்தலாலும், தாளிணை விளக்கலாலும் தண்டமிழ் அருச்சனை புரிதலாலும், கண்டவர் வியப்ப அறுசுவை யுண்டி உண்பித்தலாலும், திருவுலாக் கொண்டருளச் செய்வித்தலாலும், பிற சிறப்புக்களாலும் புறத்துப் புலனாகும் பொற்பினதாகின்றது. இது கொண்டு இன்புறுவார் செய்வாரேயன்றிச் செயப்பட்டாரல்லர். இத்திருப்பணிகளே திருவிழாவின் திருக்குறிப்பாகும். இவற்றாற் செயப்பட்டார்க்கும் இன்பமுளதெனக் கொள்ளின் அவரும் இன்பக் குறைபாடுடையராய்ச் செய்தாரோடொத்த நிலையினராவர்.

குறைவிலா நிறைவும், கோதிலா அறிவும், யாதினும் பற்றிலாச் செறிவும், எல்லாரையும் இன்பொடு வாழ இடையறாது வழிகாட்டும் வண்மையும் உடையவர் ஆசான் ஆண்டான் ஆவர். கண்டு விரும்பிக் கேட்கும் பருவமல்லாத பச்சிளங் குழவிக்கு ஆடையணி பூட்டி அன்பு மிக்க இருமுது குரவரும் பிறரும் இன்புறுவது மேலதற்கொப்பாகும். அழகினைக் காண்பார் லா இன்பமுறுகின்றனர். அதனாலேயே அனைவரும்

1. தருமையாதீனம் 15 ஆவது மகாசன்னிதானம் ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகளுக்குப் பத்தி முதிர்ந்த பல்லோராலும் பணிவன்புடன் ஆற்றிய பொன்முழுக்கு.

அழகினை என்றும் விரும்புகின்றனர். திருவெண்ணீற்றினழகினை உவமை வாயிலாக விளக்கும் திருமாமறை வருமாறு:

" சேலுங் கயலுந் திளைக்குங்
கண்ணார்இளங் கொங்கையிற் செங்குங்குமம்
போலும் பொடியணி மார்பிலங்
குமென்று புண்ணியர் போற்றிசைப்ப
மாலும் அயனும் அறியா
நெறிதந்து வந்தென் மனத்தகத்தே
பாலும் அமுதமும் ஒத்துநின்
றானுக்கே பல்லாண்டு கூறுதுமே." —கூ. சேந்தனார்-அ.

இம்முறையில் திருத்தருமபுர ஆதீனம் 15ஆவது மகா சன்னிதானம் அவர்கட்கு 12—3—1961 ஞாயிறன்று காலை முதல் வைகறை வரை கண்டவர் மனமுங் கண்ணும் களிகூரப் பொன் முழுக்குப் பெருவிழா நிகழ்ந்தது. இவ்விழா இதற்கென அமைத்த குழுவினரால் நிகழ்த்தப்பட்டதாகும். அதன் சுருக்கம்:

இவ்விழாத் தருமபுரம் திருநெறிய தெய்வத் தமிழ் மன்றத்தின்கண் அளவிறந்த சிறப்புக்களுடன் நிகழ்ந்தது. காலையில் வைதீக முறைப்படி மிருத்தியுஞ்சய ஓமம், நவக்கிரக ஓமம் செய்யப்பட்டன. பின் ஆதீன முதல்வர்க்குத் திருப்பனந்தாள் திருக்காசி மடம் முதல்வர் அருட்டிரு காசிவாசி அருணந்தித் தம்பிரானடிகள் கலசத்தீர்த்தங்களால் திருமுழுக் காட்டினர்.

ஆதீன இசைப்பெரும் புலவர், இசையரசு திரு. எம். எம். தண்டபாணிதேசிகர் அவர்கள் திருமுறை ஓத விழாத் துவங்கியது. இந்திய அரசியல் அஞ்சற்றுறை அமைச்சர் டாக்டர் திரு. ப. சுப்பராயன், பி. டி. சாணுப்பிள்ளை. எம்.பி., கே. ஆர். சம்பந்தம், எம் பி., பி. டி. இராசன், எம்.எல்.சி., ஓய்வுபெற்ற உயர்நீதி மன்ற நடுவர் வி. சுப்பிரமணிய நாடார், திருமதி. சௌந்தரம் கயிலாசம், எஸ். எ. அய்யாசாமி செட்டியார், திருமதி. குழந்தையம்மாள், எம்.எல்.ஏ. முதலியோர் விழாவிற் கலந்து கொண்டனர்.

தனிப்பெருங் குழலிசைவல்லார் திருவிடை மருதூர் திரு. வீருசாமிப் பிள்ளை, திருவீழிமிழலை சுப்பிரமணிய பிள்ளை, சிதம்பரம் இராதாகிருட்டிண பிள்ளை, மதுரை திருமதி. பொன்னுத்தாய்க் குழுவினர்கள் முதலியோர் இயம் முழக்கினர். வேத, திருமுறைகள் ஓதப்பட்டன. திருப்பனந்தாள் காசி மடத்து முதல்வர் சிவத்திரு. அருணந்தித் தம்பிரானடிகள் அவர்கள் சிவத்திரு திருக்கயிலைமா சன்னிதானம் அவர்கட்குத் தக்கமுறையாக மிக்க பணிவன்புடன் ஈரெண் வகைச் சிறப்புக்

களையும் எழிலுடனியற்றி வழிபாடு புரிந்தனர். இவ் வழிபாட்டினைக் கண்டு கும்பிடும் பேறுபெற்ற செந்நெறிச் செல்வர்கள் மிக்க சிவபுண்ணியப் பேறுடையரேயாவர். அன்பர் கூட்டம் இருபாலருமாய் ஆயிரக்கணக்கில் திரண்டிருந்தது. பேரவை யொப்பனையும் சொல்லொணுப் பெருஞ்சிறப்பினதாய்க் கண்டாரேயன்றிக் கேட்டாரும் களிகூருந் தன்மைத்தாய் விளங்கிற்று. செந்தமிழ்த் திருமாமுறைகளில் கூறும் திருக் கயிலைக் காட்சியினைப் புலனெறி வழக்கில் கண்டுகளித்தோர் நிலனெறி வழக்கிற்காணும் நீர்மையதாய் மாப்பேரவையின் சிறப்பு வயங்கிற்றென்பது வாய்மையேயாகும். இதுபோல் அடியார்க்கும் ஆண்டாற்கும் வழிபாடு இன்னவாறு புரியவேண்டுமென்பதைப் புரிவார்க்குப் பயிற்றுவிக்கும் பாங்கிலமைந்திருந்தது. வழி பாட்டின் உயிர் திருவைந்தெழுத்து மறைமொழியாகும். உடல் போற்றித் தொடர் புகன்று மலர் தூவி வழிபடும் அருச்சனை யாகும் இவ்வுண்மை வரும் திருமாமறையானுணரலாம்:

“போற்றிசைத்துன் னடிபரவ நின்றாய் போற்றி
புண்ணியனே நண்ண லரியாய் போற்றி
ஏற்றிசைக்கும் வான்மே லிருந்தாய் போற்றி
எண்ணு யிரநூறு பெயராய் போற்றி
நாற்றிசைக்கும் விளக்காய நாதா போற்றி
நான்முகற்கு மாற்கு மரியாய் போற்றி
காற்றிசைக்குந் திசைக்கெல்லாம் வித்தே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி.”
—சு. போற்றித் திருத்தாண்டகம்—க0.

“எண்ணுயிரநூறு”: எண்-எட்டு. எண் + ஆயிரம்—ஆயிரத்தெட்டு. எண் + நூறு—நூற்றெட்டு. எண் + ஆயிரநூறு—நூறுயிரத்தெட்டு.

இம்முறையில் அருச்சனை துவங்கப்பெற்றது. பன்னிற நறுமலரும் பொற்காசுகளும் தனித்தனியாகக் குவிக்கப்பட் டிருந்தன. முதற்கண் மலர் வழிபாடு நிகழ்ந்தது. பின் மல ரொன்றும் பொற்காசு ஒன்றுமாகக் கலந்து ஆயிரத்தெட் டருச்சனை நிகழ்ந்தன. பொற்காசு ஒவ்வொன்றும் அரைச் சவரனுலமைந்தன. அதன்பின் அப் பொற்காசுகளைத் தனியாக எடுத்து மாசன்னிதானத்தின் முடிதொட்டு அடிகாறும் படும்படி பொன்முழுக்காட்டினர். பின் பொன்னுடை பூமாலை முதலியன அணிவித்துச் சிறப்புவழிபாடியற்றினர்.

பொன்முழுக்கின் பின் சிவத்திரு. கயிலை மாசன்னிதானம் அவர்கள் சிவத்திரு. காசிவாசி அடிகட்கும், டாக்டர் திரு. ப. சுப்பராயன் அவர்கட்கும் பொன்னுடை போர்த்தி வாழ்த்தி யருளினர். விழாவில் கலந்துகொண்ட மெய்யன்பர்களனைவர்

கட்கும் திருவருட்கொடை - சேடம் வழங்கியருளினர். அந் நேரத்துத் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழக ஆட்சிப் பொறுப்பாளர் திரு. வ. சுப்பையா பிள்ளையவர்கள் கழகச் சார்பில் உயர்ந்த கட்டடம் அமைந்த 'சிவஞான போதச் சிற்றுரை விளக்கம்' என்னும் நூலை மாசன்னிதானத்தின் திருமுன் பணிவன்போடு ஏற்பித்துத் திருச்சேடம் பெற்றனர். பின் அன்பர்கட்கு அறுசுவையமுது அளிக்கப்பட்டது.

பிற்பகலில் பாராட்டுக்கூட்டம் பல்லோர் புகழப் பண்புற நிகழ்ந்தது. சுருக்கம் வருமாறு: டாக்டர். ப. சுப்பராயன் அவர்கள் இப்பாராட்டு விழாவிற்குத் தலைமை பூண்டனர். பொன்முழுக்குக் குழுவின் சார்பில் சிதம்பரம் திரு. ஜி. சபாபதிப் பிள்ளை விழாத் தலைவர்க்குப் பொன்னுடை போர்த்தி வரவேற்றார். இசையரசு திரு. எம். எம். தண்டபாணி தேசிகர் திருமுறை ஓதினர். பின் காசிமட முதல்வர் விழாவினைத் துவக்கி வைத்துப் பொன்முழுக்கு மலரையும் வெளியிட்டனர்.

பொன்முழுக்குக் குழுவின் சார்பில் சிதம்பரம் டாக்டர் திரு. அரங்கசாமிப் பிள்ளையவர்கள் எல்லாரையும் வரவேற்று வரவேற்புரை நிகழ்த்தினர். திருச்சி திரு. வரதராச பிள்ளையவர்கள் பொன்முழுக்குக் குழுவின் பாராட்டிதழைப் படித்து மாசன்னிதானத்தின் பொன்னடிக்கு ஒப்புவித்தனர். திரு. பி. டி. இராசன் எம். எல். சி. விழாக்குழுவின் சார்பில் மாசன்னிதானத்துக்குப் பொன்னுடை போர்த்திப் பாராட்டினர். மாயூரம் நகராட்சிக் கழகத்தின் பாராட்டிதழும் படித்துச் சன்னிதானத்தின்பால் ஒப்புவிக்கப்பட்டது. இப் பாராட்டிதழில் நகராட்சிக் கழகத்திற்குச் சிவத்திரு. கயிலை மாசன்னிதானம் ஆண்டுதோறும் வழங்கிவரும் உதவித் தொகை வெண்பொன் 8500-ம் நிலையாக என்றென்றும் உதவிவரவேண்டுமெனவும் விண்ணப்பிக்கப்பட்டிருந்தது.

விழாத் தலைவரான டாக்டர் ப. சுப்பராயன் அவர்கள் தலைமையுரையின் சுருக்கம்: இந்நாள் உலகம் எஞ்சாமலழிக்கும் நஞ்சனைய அணுக்குண்டாட்சியின் முன் நிற்கின்றது. ஒருவரை யொருவர் எங்ஙனம் அழிப்பது எப்பொழுதழிப்பது என்பதே எண்ணமாக இருக்குங் கூற்றத்தின்முன் நீங்கா ஏக்கத்துடன் மாந்தரெல்லாரும் வாழ்கின்றனர். உருசிய நாட்டினர் புதி தொன்று கண்டால் உடனே அமெரிக்க நாட்டினருங் காண முற்பட்டுக் காண்கின்றனர். அவற்றிற்கு முற்றும் மாறாக நம் பிரதமர் நேருஜி அமைதி என்றும் எல்லாம் அன்புமயம் என்றும் கூறி வருகின்றார். நடுங்கத்தக்க அணுக்குண்டூழியான இந் நாளில் இத்தகைய சான்றோர் வாழ்க்கையினை நாம் பின்பற்றி

நடந்துவந்தாற்றான் நாம் நன்றாக வாழமுடியும். 'உண்மை, கடவுள் நம்பிக்கை, பக்தி' ஆகிய இம்மூன்றும் என்று நாட்டில் தோன்று கின்றனவோ அந் நாள்தான் நமக்கு நல்வாழ்நாள் ஆகும்.

பின் அடியிற்கண்ட பேரன்பர்கள் பலரும் பாராட்டுரை பகர்ந்தனர். திருவாளர்கள்: இலஞ்சி ஐ. ஏ. சிதம்பரம் பிள்ளை, எம்.எல்.சி., இராமநாதபுரம் சேதுபதி மன்னர் குடும்பத்தைச் சார்ந்த காசிநாத சேதுதுரை, அண்ணாமலைக் பல்கலைக்கழகப் பேராசிரியர் தெ. பொ. மீனாட்சிசுந்தரம் பிள்ளை, பேராசிரியர் எல். பி. கே. ஆர். இராமநாதன் செட்டியார், சென்னை ஐ. ஏ. அய்யாசாமிச் செட்டியார், டாக்டர் இரத்தினவேல் சுப்பிரமணியம், திருமதி. சௌந்தரம் கைலாசம், முன்னாள் மாவட்டத் தண்டலாளர் பாற்கரத்தொண்டைமான், திருமதி. குழந்தையம்மாள் எம்.எல்.ஏ., திருநெல்வேலி சி. அருணாசலம் பிள்ளை, கோவை இராசிச் செட்டியார், திருவில்லிப்புத்தூர் இராமசாமி இராசா, மதுரை திருமதி. புஷ்பம் நடராசன், ம. க. சுந்தரேசப்பட்டர், சென்னை கி. வா. சகந்நாதன், பொதுப்பணித் தேர்வுக்குழுத் தலைவர் இரத்தினம், பி. டி இராசன் எம்.எல்.சி. முதலியோர்கள்.

பெருமக்கள் பலர் அனுப்பிய வாழ்த்துக்கள் படிக்கப் பட்டன. சீலத்திரு கயிலை மாசன்னிதானம் வாழ்த்துரை வழங்கியதன் சுருக்கம்: வையத்துள் வாழ்வாங்கு வாழவேண்டுமாயின் சமய வாழ்க்கையினைக் கைக்கொள்ளுதல் வேண்டும். திருவருட்டுணையில்லாமல் எத்தகைய அரசியலாயினும், அறிவியலாயினும் வாழ்ந்து வருதல் முடியாது. இஃதுண்மை; ஆகவே நம் நாடும் நமது சமயமும் முன்னேற வேண்டுமானால் நாம் ஒன்றுசேர்ந்து தொண்டுகள் செய்தல் வேண்டும். அதற்கு நம்மை நாமே அணியமாக்கிக்கொள்ளுதல் வேண்டும் என்பதாகும்.

மேலும் மாசன்னிதானம் அவர்கள் பொன்முழுக்குப் பொற்காசுகளைத் தருமையில் ஏற்படவிருக்கும் சைவசித்தாந்தப் பயிற்சிக் கல்லூரிக்கு வழங்கிவிட்டதாகவும் மொழிந்தனர். மதுரை மீனாட்சியம்மன் திருக்கோவில் திருப்பணிக்கு வெண்பொன் இருபத்தையாயிரம் வழங்குவதாகவும் மொழிந்தனர்.

பொன்முழுக்குக் குழுவின் தலைவர் திரு. பி. திருஞானம் பிள்ளையவர்கள் நன்றி நவில விழா நிறைவுற்றது.

இரவு சிவத்திரு. கயிலை மாசன்னிதானம் அவர்கள் பொற் சிவிகையிலெழுந்தருளி மிக்க சிறப்புடன் நான்கு வீதியும் பல்லாயிரக்கணக்கான மக்கள் களிகூரத் திருவுலாக் கொண்டருளினர்.

நமச்சிவாய வாழ்க! நாதன்றாள் வாழ்க!

# ஆராய்ச்சி அறிஞர்
# மயிலை சீனி வேங்கடசாமி அவர்களின்
# மணிவிழா மாண்பு

நாடு மொழி இனம் ஆகிய மூன்றும் முறையே ஒருபுடை யொப்பாக உடை, உயிர், உடலாகக் கொள்ளுதல் ஒக்கும். இம் மூன்றனுள் நடுநிற்கும் உயிரனைய மொழி மிகமிகச் சிறந்ததாகும். அம் மொழி அவரவர்க்குரிய தாய்மொழியாகும். மொழியொன்றே புறவிழியொத்து அகவிழியாக நின்று ஆறு அறிவிப்பதாகும். அம்மட்டுமன்று, அது 'கேடில் விழுச்செல்வமு' மாகும். நாடும் இனமும் மற்றொரு பிறப்பில் மாறிவிடவுங் கூடும். அவை உடையும் உடலும் மாறுவன போன்றாகும். ஆனால் மொழி உயிர்போன்று மாறாது பிறப்புப் பிறப்புக்களி லெல்லாம் பின்தொடர்ந்து வரும் பெற்றியதாகும்.

ஒரு மொழியின் சிறப்பு அம் மொழிக்கண் காணப்படும் இலக்கணம், இலக்கியம், இசை, கூத்து, புகழ் (தோத்திரம்), பொருள் (சாத்திரம்), வரலாறு, ஆராய்ச்சி, நிலனூல், வானூல், கல்லெழுத்து, செப்புப்பட்டயம் முதலியவற்றின் சிறப்புக்களான் ஆகும். அம்மட்டுமன்று, அம் மொழியினைத் தம்முயிரினும் சிறப்பாகப் போற்றி வளர்த்துவரும் பண்பாடமைந்த நன் மக்களின் உண்மையினானுமாகும். நன்மக்களாவார் தெய்வ நாட்டமும் உய்வகை நல்லொழுக்கமும் உடைய உயர்ந்தோராவர். இவ் விரண்டும் முறையே உயிரும் உடலுமாகும். இவ்வகைய சிறப்பு நூல்களுள் ஆராய்ச்சி நூல் மிக்க விழுச்சீர் அமைந்த தொன்றாகும். அத்தகைய நூலாசிரியர்பால் பன்மொழிப் புலமையும், பன்னூலாய்வும், நன்னெறியொழுக்கமும், நாவன்மை யும், உள்ளத்துரனும், நடுநிலை பிறழா நயனும், நுண்ணறிவும், காய்தலுவத்திலின்றி ஆய்வுசெய்யும் திறனும், ஆய்ந்து கண்ட வுண்மைகளை முன்னொடு பின் மலைவின்றி முறைப்படத் தொகுத்து அறந்திறம்பாவாறமைத்து எளிமையும், இனிமையும், தெளிவும், திட்பமும் பொதுள நூல் யாக்கும் மாண்பும், நுணங்கிய கேள்வியும், எளிமையும், அவாவின்மையும், அன்பருளுண்மையும், அடக்கமும், அயராவுழைப்பும் இயல்பாக அமைந் வேண்டும்.

கைய நலங்கள் முற்றும் நன்கமைந்து திகழும் சீரியோர் நம் வேங்கடசாமி அவர். அவர்தம் மணிவிழா மாண்பும் வரலாற்றுச் சுருக்கமும் வருமாறு :

## மயிலை சீனி வேங்கடசாமியவர்கள் மணிவிழா



உயர்நீதி மன்ற நடுவர் திரு. எஸ். கணபதியா பிள்ளையவர்கள் 'ஆராய்ச்சி அறிஞர்' என்ற பட்டப் பதக்கம் அணிவித்துப் பொன்னுடை போர்த்துதல்.



பேராசிரியர் திரு. மயிலை சிவமுத்து அவர்கள் 'மணிவிழா மலரை' அளித்தல்.

17-3-1961 வெள்ளிக்கிழமை மாலை 4-30 மணிக்குச் சென்னை கோக்கலே மண்டபத்தில் ஆராய்ச்சியறிஞர்தம் மணி விழா மிக்க ஆர்வமுடன் துவங்கப்பட்டது. மண்டபத்தின் அகத்தும் புறத்தும் ஒப்பனைகள் நன்கு செய்யப்பட்டிருந்தன. இருபாலாரினும் சிறந்த பெரும்புலவர்கள், பேராசிரியன்மார், பெருஞ்செல்வர், மாணவர், பெருமக்கள் இடம் போதாதெனும் படி மிகத் திரளாகக் கூடியிருந்தனர்.

விழாவினுக்குச் சென்னை உயர்நீதிமன்ற நடுவர் திரு. எஸ். கணபதியா பிள்ளை அவர்கள் தலைமை பூண்டனர். ஆராய்ச்சி யறிஞர் மயிலை, சீனி வேங்கடசாமி, தலைவர் திரு. எஸ். கணபதியா பிள்ளை, வரவேற்புக்தலைவர் செந்தமிழ்க்காவலர் டாக்டர். அ. சிதம்பரநாதன் ஆகியோரைத் தொண்டர்படையினரும், மாணவக் கடற்படை மறவர்களும் இருமருங்கிலும் அணிவகுத்து நிற்க டாக்டர் தருமாம்பாள், பெண்கள் இலக்கிய வகுப்பு ஆசிரியர் திருமதி இரா. ச. பங்கயச்செல்வி, மாணவியர் நிறைகுடம் ஏந்தி இசைபாடி மலர்தூவி வரவேற்றனர். அதன்பின் சென்னைப் பல்கலைக் கழக இசைத்துறை மாணவிகள் செல்வி எம். எஸ். இலட்சுமி, செல்வி காயத்திரி ஆகிய இருவரும் தமிழ்வணக்கம் பாடினர்.

பின்னர் அனைவரையும் வரவேற்புக்குழுத் தலைவர் டாக்டர் அ. சிதம்பரநாதனவர்கள் பலபடப் பாராட்டிப் பல்லுரை பகர்ந்து வரவேற்றனர். நம் மணிவிழாவிற்குரிய மாண்பமை வேங்கடசாமியவர்களின் ஆராய்ச்சித்திறனை அகமுறப் பாராட்டி ஆர்வமொழி புகன்றனர். அறிஞர் சீனி வேங்கடசாமி அவர் களைப் பாராட்டி வந்துள்ள கடிதங்கள் பல படிக்கப்பட்டன. பின் வரவேற்புக்குழுவின் சார்பில் பாராட்டிதழ் ஒன்று படித் தளிக்கப்பட்டது. பின்பு தலைவர் திரு. எஸ். கணபதியா பிள்ளை யவர்கள் திரு. வேங்கடசாமியின் எழுத்தாற்றலையும் பண்பையும் விளக்கி இத்தகைய உயர்ந்த அறிஞர்களை மேலும் தமிழகம் நன்றாகப் போற்றுதல் வேண்டும்; பாராட்டுதல் வேண்டும்; எனக் கூறினர். மேலும் இப் பெருவிழாவினை இத்துணைச் சிறப்பாக எடுத்தமைக்குப் பாராட்டுவதாகவும் கூறினர். மணி விழாத் தலைவர்க்குப் புத்தாடை போர்த்தி **'ஆராய்ச்சி அறிஞர்'** என்ற பட்டம் பொறித்த பதக்கத்தையும் அணிவித்தார்.

பேராசிரியர் திரு. மயிலை சிவமுத்து மணிவிழா மலரைப் பாராட்டி அரங்கேற்றி அதனை நம் வேங்கடசாமியிடம் அளித்தனர். பின்னர்த் தமிழகச் சைன மக்கள் சார்பாகத் திரு. சிவபந்து டி. எஸ். ஸ்ரீபால் 'சமணமும் தமிழும்' என்ற நூலைப் பாராட்டி, அதன் இரண்டாந் தொகுதியை வெளியிட

அதன் அச்சுக் காகிதச் செலவுக்காக ரூபா. 2,000 பணமுடிப்பை யும் அளித்தனர். அடுத்துச் சென்னை மாணவர் மன்றம், தமிழ்நாடு சைன மாசங்கம், திரு. கோட்டிலிங்கம், கவிஞர் தனபாலன் முதலியோர் பாராட்டிதழ்கள் படித்தளித்தனர். பல சைன சங்கங் களும் பாராட்டிதழ்கள் அளித்தன. சென்னை நக்கீரர் கழகம், டாக்டர் தருமாம்பாள் பெண்கள் இலக்கிய வகுப்பினர், புலவர் கண்ணன், ஒய். எம். சி. ஏ. பட்டி மன்றம், தமிழ் எழுத்தாளர் சங்கம், மாகாணத் தமிழாசிரியர் சங்கம், இராயபுரம் இரயில்வே தமிழ் மன்றம், டி. கே. எஸ். சகோதரர்கள், நகர இளைஞர் மன்றத் தினர், திருத்தக்க தேவர் இலக்கிய மன்றத்தினர், சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், நடராசர் கல்விக்கழகம், சுகுமாரன், இரா. ச. பங்கயச் செல்வி முதலியோர் புத்தாடைகளும், பூமாலை களும் பொன்மாலைகளும் அணிவித்தனர்.

அதன்பின் பன்மொழிப் புலவர் கா. அப்பாத்துரையார், டாக்டர் இராசமாணிக்கனார், ஔவை. டி. கே. சண்முகம், கி. வா. சகன்னாதன், கவிஞர் முடியரசன், டாக்டர் மு. ஆரோக்கிய சாமி, ந. சஞ்சீவி, மீ. பா. சோமசுந்தரம், அழ. வள்ளியப்பா, நாவலர் இரா. நெடுஞ்செழியன் முதலியோர் நம் வேங்கடசாமி அவர்களின் ஆராய்ச்சித்திறன், எழுத்துத்திறன், உழைப்புத் திறன் முதலிய பல நலங்களைப்பற்றி நனிமிகப் பாராட்டி நவின் றனர். கவிஞர் முடியரசன் விழாச் சிறப்பினை நெடுஞ் செய்யு ளாகப் பாடி யரங்கேற்றினர்.

கடைசியாக ஆராய்ச்சி அறிஞர் மயிலை சீனி. வேங்கடசாமி அவர்கள் விழாக் குழுவினர்க்கும், தம் முன்னேற்றத்திற்கு உதவி புரிந்த உற்றார், உறவினர், அறிஞர், பெருமக்கள் முதலியோர்க் கும் நன்றி கூறினர். வரவேற்புக்குழுச் செயலாளர் சிறுவை மோகனசுந்தரம் நன்றி நவில விழா இனிது நிறைவுற்றது.

நம் மணிவிழாத் தலைவரின் வரலாற்றுச் சுருக்கம்: திரு மயிலாப்பூரின்கண் சித்த மருத்துவத் துறையில் மிக்க தேர்ச்சி யுற்றுத் தமிழ்ப் புலமையும் நிறைந்து மருத்துவத் தொழிலினை மேற்கொண்டு வாழ்ந்துவந்த தக்கார் ஒருவருளர். அவர்தந் திருப்பெயர் சீனிவாசக நாயகரென்ப. இவர்தம் குடும்பம் வழி வழியாக நாட்டு மருத்துவத்தை மேற்கொண்டு நற்பணி புரிந்து வந்தது. அதனால் அவர்கட்குப் பொன்னும் பொருளும் போகமும் புகழும் பெருக வந்து சேர்ந்தன. இவர் பல மருத்துவ நூற்களைக் கற்று அந் நூலின்படி பல புதிய புதிய சித்த மருந்துகளைத் தாமே உண்டாக்கியுள்ளார். அவற்றை நோயாளி களுக்கு வழங்கிப் பல அரிய நோய்களை மிக விரைவில் அகற்றி யுள்ளார். அவர்பால் ஓலைச் சுவடிகளும் புத்தகங்களும் ஏராள

மாகவிருந்தன. அப் பெரியாரின் மகனார் நம் சீனி வேங்கடசாமி யாவர். இவர் இளமையிலேயே தோற்றப்பொலிவும், கூர்ந்த நோக்கமும், ஆழ்ந்த அறிவும், சுறுசுறுப்பும், உழைப்பில் வேட்கையும் உடையராகக் காணப்பட்டார். ஆனால் தந்தையார் பார்த்துவந்த மருத்துவத்தொழிலில் ஈடுபாடு கொண்டிலர். அதனால் அவர்தம் அரிய மருத்துவமுறைகளும், அரும்பெரும் நூல்களும் உலகுக்குப் பயன் பெறாது பிற்காலத்து மறைந்தன.

சீனி. கோவிந்தராசன் என்பவர் நம் வேங்கடசாமியாருக்குத் தமையனாராவர். அவர் பெருந் தமிழ்ப்பற்றும் புலமையும் நிரம்பியவர். அவர்தம் சார்பினாலேயே நம் வேங்கடசாமியார்க்கு இளமையிலேயே தமிழினிடத்தில் தனியார்வம் உண்டாகியது. வேங்கடசாமியாரின் அகவை பதினாறாக விருந்தகாலத்தே தமிழ் நூல்களை ஆர்வமுடன் கற்றுச் சுவைகாணும் நன்னிலையிலிருந் தனர். 'செந்தமிழ்' முதலிய உயர்ந்த தமிழ் வெளியீடுகளை விடாது படித்துவந்தனர். ஓவியப் படிப்பிலும் ஓரளவு ஆர்வங் கொண்டு கற்றனர். நாலடியார் முதலிய கீழ்க்கணக்கு நூல்களை முறைப்படக் கற்றனர்.

நம் வேங்கடசாமியாரின் 22 ஆம் அகவையில் தன்னருமைத் தமையனார் இறந்தமை காரணமாகக் குடும்பச்சுமை அவர்பா லாயது. அதனால் மோட்டார்வண்டிச் சாமான்கள் விற்கும் ஒரு கடையில் எழுத்தராக வேலைபார்த்து வந்தார். அதனால் படிப்பதற்கு மிக்க ஓய்வுநேரம் கிட்டுவது அரிதாயிற்று. இருப் பினும் விடுமுறை நாளாகிய ஞாயிற்றுக்கிழமைகளில் விடாது படிப்பதும் ஆய்வதும், கற்றாரோடு கலந்து அளவளாவுவது மாகவே அந்நாட்களைக் கழிப்பர். சிந்தாமணி, சிலப்பதிகாரம் முதலிய பழந்தமிழ் நூல்களையுந் தாமாகவே கற்றுக் கருத்துட் கொள்வார். 'திராவிடன்' என்னும் நாளிதழ் ஆசிரியர் குழுவில் ஒருவராய்த் திகழ்ந்தனர். இதிலும் தமிழ் படிப்பதற்குப் போதிய ஓய்வு கிட்டவில்லை. இதனையும் விட்டொழித்து ஆசிரியராம் நிலையினை அவாவினர். இவர் புனித தோமையர் பள்ளியில் பள்ளி இறுதி வகுப்புவரை படித்திருந்தனர். அதனால் ஆசிரியப் பயிற்சிப் பள்ளியில் சேர்ந்து பயின்றார். நகராண்மைப் பள்ளியில் தொடக்க ஆசிரியராக அமர்ந்தார்.

தம் வாழ்நாள் முற்றையும் தமிழ்ப்பணிக்காகவே ஒப் படைத்த நம் பெரியார் மணமுடியாமலிருப்பதே குணமெ‌ன மேற்கொண்டனர். தாம் கண்ட வுண்மைகளைச் சிறுசிறு கட்டுரைகளாகத் திறம்பட வரைந்து 'திராவிடன், தமிழ்நாடு, குடி யரசு, ஈழகேசரி' முதலிய வெளியீடுகளில் அவ்வப்போது வெளி யிட்டு வந்தனர். இவற்றின் நுண்மைகளைப் படித்துணர்ந்த

சிறந்த அறிஞர்கள் அனைவரும் நம் பெரியாரைக் கண்டு அளவளாவ ஆர்வங்கொண்டனர். இம்முறையில் திருநெல்வேலி கா. சுப்பிரமணிய பிள்ளை (எம். ஏ., எம். எல்) அவர்களின் தொடர்பு நம் பெரியாருக்குக் கிட்டியது. பிள்ளையவர்களின் பெருந்துணையூக்கமே நம் பெரியாரை இத்துணை உயர்நிலைக்குக் கொண்டுவரப் பெருந்துணையாக விருந்ததென்ப.

விபுலானந்தவடிகள், மறைமலையடிகள், திரு. வி. க., தெ. பொ. மீனாட்சிசுந்தரனார் இவர்கள்தம் அருந்தொடர்பும் நம் பெரியாருக்குக் கிட்டியது. அவ்வவர் நூல்களையும் நன்கு பயின்றனர். தெ. பொ. மீ. அவர்களால் நிறுவப்பட்ட 'சென்னைத் தமிழ்ச்சங்கத்தின்' சார்பில் பல அரிய கூட்டங்கள் அடுத்தடுத்து நிகழ்வதுண்டு. அவையனைத்திற்கும் நம் பெரியார் தவறாது சென்று பங்குகொள்வதுண்டு. ஒருமுறை 'கிறித்தவமுந் தமிழும், சமணமுந் தமிழும், சைவமுந் தமிழும், வைணவமுந் தமிழும், இசுலாமியமுந் தமிழும்' என ஆறு சொற்பொழிவுகள் நிகழ்ந்தன. இக் கேள்விச் செல்வத்தின் பயனாகவே பின் நம் பெரியார் யாத்த 'கிறித்தவமுந் தமிழும்,', 'பௌத்தமும் தமிழும்,' 'சமணமுந் தமிழும்' என்னும் நூல்கள் உருவாகின.

திரு. ச. த. சற்குணர் அவர்கள் சென்னைக் கிறித்துவக் கல்லூரியில் தமிழ்ப்புலமை நடத்திய பெரியார். அவர்தம் தொடர்பும் நம் பெரியார்க்குண்டு. 'கிறித்துவமும் தமிழும்' என்ற நூலுக்குச் சற்குணர்தம் முன்னுரையுளது. ஆராய்ச்சிப் பேரறிஞர் திரு. சதாசிவப்பண்டாரத்தாரின் அரிய தொடர்பும் இருந்தது.

சீர்திருத்தக் கொள்கைகளில் நம் பெரியார்க்குப் பற்று அது காரணமாக ஈ. வே. ரா. பெரியாருடன் தொடர்பு ஏற்பட்டது. குடியரசுத்தாளில் பல கட்டுரைகள் எழுதி வந்தனர். பாரதிதாசன் தொடர்பும் ஏற்பட்டது. கன்னிமரா நூல் நிலையத்திற்கும், மத்திய ஏட்டுச்சுவடி நூல் நிலையத்திற்கும் விடாது சென்று பல நூல்களைக் கற்பதும் ஆய்வதும் பயனார் பணியெனக் கொண்டொழுகி வருகின்றனர். சமயங்களை அறிவுக்கண் கொண்டு காணவேண்டுமென்னுங் கொள்கை நம் பெரியாரது. அம் முறையில் 'இறைவன் ஆடிய எழுவகைத் தாண்டவங்கள்' என்னும் நூல் தோன்றிற்று. இதுபோல் சைன பௌத்த நூல்களும் தோன்றின.

ஜீவபந்து ஸ்ரீபால் அவர்களின் தொடர்பும் நம் பெரியார்க்கு ஏற்பட்டது. இதுபோல் பல சைனமதப் பெரியார்கள் தொடர்பும் ஏற்பட்டது. எழுமர் மாபோதி சங்கப் பொறுப்பாளர் நந்தீஸ்வர தேரோ தொடர்பும் ஏற்பட்டது. தரும்ரத்தின தேரோவின்

தொடர்பும் ஏற்பட்டது. இத் தருமரத்தினர் சிலப்பதிகாரத்தையும், மணிமேகலையையும் சிங்கள மொழியில் மொழிபெயர்த்துள்ளன ரென்ப. திருச்சி கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்களின் தொடர்பும் பன்மொழிப் புலவர் கா. அப்பாத்துரைப் பிள்ளையவர்கள் தொடர்பும் ஏற்பட்டன. இந்திய மத்திய அரசின் பொருளாதார ஆலோசகரான டாக்டர் பா. நடராசனார் அவர்கள் தொடர்பும் உளது. கிறித்துவக் கல்லூரித் தமிழ்த் துறைத்தலைவர் பூ. ஆலாலசுந்தரஞ் செட்டியார் தொடர்பும் அமைந்தது. யாழ்ப்பாணம் இராஜ. அரியரத்தினம், குல. சபாநாதன் முதலியோர் தொடர்புகளுமுள.

செக்கோஸ்லாவியா நாட்டிற் பிறந்து இயற்கை நுண்ணறிவால் பல மொழிகளைக் கற்றுத் தற்செயலாகத் தமிழின் அருமையையுணர்ந்து, அம்மொழியின்கண் நாமாகச் சிரிய புலமை எய்திவர் டாக்டர் கமில் சுவலபில் என்னும் இளைஞர். இவர்தம் தொடர்பும் நேரிற்கண்டு அளவளாவிய பேறும் நம் பெரியார்க்குக் கிட்டியது.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத் தொடர்பால், ‘கிறித்துவமும் தமிழும்,’ ‘பௌத்தமும் தமிழும்,’ ‘சமணமும் தமிழும்,’ ‘பௌத்தக் கதைகள்,’ ‘மகேந்திரவர்மன்,’ ‘நரசிம்மவர்மன்’ என்னும் நூல்கள் கழக வழி வெளிவந்துள்ளன. பாரி நிலையம், அருணா பப்ளிக்கேசன், ஸ்டார் பிரசுரம், சாந்தி நூலகம் முதலிய வெளியீட்டாளர் தொடர்பால் பல நூல் வெளிவந்துள்ளன. காஞ்சி மணிமொழியாரின் தொடர்பும் நம் பெரியார்க்குளது. எழுத்தாளர் சங்கம், நக்கீரர் கழகம், தமிழகப் புலவர் குழு முதலியவற்றின் தொடர்புகளும் உள.

நம் பெரியார் தந் தனிமுயற்சியால் யாத்த பதினாறு நூல்களும் தமிழ்த்தாய்க்கு நல்லணியாய் நின்று தமிழுலகிற்குப் பெரும் பயன் விளைத்து வருகின்றன.

நம் பெரியார் தம் அரும்பேருழைப்பும், ஒழுக்கமும், தாய் மொழிக்காதலும், உண்மை காணவேண்டுமென்னும் உணர்வும், கண்டதை எடுத்தியம்பும் உரனும், சமயப் பொதுமையும், அடக்கமும், எளிமையும், அன்பும் அருளும், இனிமையும், நட்பும் என்றென்றும் எல்லாராலும் பாராட்டிப் பின்பற்றுதற்குரிய.

வாழ்க நம் பெரியார்; வளர்க அவர்தம் தமிழ்த்தொண்டு; மணிவிழாப்போன்று வைரவிழா முத்துவிழா முதலிய பல் விழா அவர்க்கு அணிபெற நிகழ்வதாக. வாழ்க தமிழ்!

# இலக்கிய நடை

[திரு. மு. சதாசிவம் எம். ஏ.]

ஆங்கிலத்தில் நடை என்பதைக் குறிக்கும் சொல், Style என்பதன் வேர்ப் பொருள் எழுதுகருவி என்பதே. இலத்தீனில் 'ஸ்டைலஸ்' என்ற சொல் பொருள் விரிவு பெற்று 'எழுதும் முறையை' உணர்த்திற்று. ஆங்கிலத்திலும், பிரெஞ்சிலும் 'நடை' என்பதற்குப் பல பொருள்கள் ஏற்பட்டு விட்டன. நன்முறையில் எழுதப்படும் நூலே 'நடை' பெற்றிலங்குகிறது என்று கருதப் படுகிறது. 'நடையில்லாத நூல்' என்றால் படிந்தின்புறத் தகுதியில்லாத நூல் என்றே பொருள் ஏற்பட்டுவிட்டது. தமிழிலும் 'நடை' என்பது எழுதும் முறை, நன்முறையில் எழுதும் முறை என்ற இரு பொருள்களில் வழங்கப் பெறுகின்றது.

கருத்துக்களைத் தெளிவாகவும் சுருக்கமாகவும் தெரிவிப்பதற்காகவே உரைநடை பயன்படுகின்றதெனினும், அவற்றை எவ்வளவு சுவை படக் கூற முடியுமோ அவ்வளவு சுவைபட இன்பத்தைக் கலந்து தரவேண்டும். இல்லாவிடின் உரைநடை படிக்கத் தகுதியற்றுவிடும். உணர்ச்சிகளை வெளிப்படுத்துவதுடன் படிப்பவர்களின் உணர்ச்சிகளைத் தூண்டி விடவும் செய்வதுதான் நல்ல உரைநடை ஆகும். உணர்ச்சி வெளிப்பாடின்றேல் எந்த இலக்கியமுமில்லை; எந்தக் கலையுமில்லை. உணர்ச்சியை ஒதுக்கி வைத்துவிட்டு உண்மையையே கூறப்போந்த விஞ்ஞான, கணித, ஆராய்ச்சி நூல்களும் ஒரோவழிச் சொல்லின்பத்தில் ஈடுபட முயல்கின்றன. இலக்கியத்திற்கும் விஞ்ஞான நூலிற்கும் உள்ள முதன்மையான வேறுபாடு அவற்றின் சொல்லாட்சியைப் பற்றியதேயாம். அறிவியல் சாதனையால் வானில் பறக்கும் விஞ்ஞானியும் கற்பனை ராக்கெட்டில் பறக்கும் கலைஞனை வியந்து பாராட்டுகிறான் எனில் இலக்கியக் கலைஞரின் சொல்லாட்சியின் மாட்சிதான் என்னே!

உள்ளங்கையிலடங்கும் சிறிய நூலான திருக்குறளுக்குத்தான் எத்தனை உரையாசிரியர்கள் தோன்றியுள்ளனர்; இன்னும் தோன்றிக் கொண்டே இருக்கின்றனர். இது திருக்குறளின் சொல்லாட்சிச் சிறப்பு. தொல்காப்பியத்திற்கும் பற்பல உரையாசிரியர்கள் தோன்றித் தொல்காப்பியர் கருதியிருக்க முடியாத கருத்துக்களைக்கூடத் தொல்காப்பியம் உணர்த்துவதாக எடுத்துக் காட்டி நிலைநிறுத்தியிருக்கின்றார்கள்! கம்பராமாயண மூலத்தைக் காட்டிலும் பெரிதாகக் காணப்படும் கம்பராமாயண பாடபேதங்

களின் தொகுப்பும் கம்பரின் சொல்லாட்சிச் செல்வத்தின் சிறப்புக்கு அறிகுறியாக இலங்குகிறது. புலவர்கள் பேரிலக்கிய நூல்களுக்குப் பல்வேறு பொருள்களைக் காண்பதில் எவ்வளவு இன்பமடைகின்றார்கள்! ஒரு குறளுக்குப் புதிய உரை மனத்தில் பட்டுவிட்டாலும் களிப்புக் கொள்கிறது இலக்கிய மாணவனின் உள்ளம். புலவர்களின் வாக்குவாதங்களையும், இலக்கியச் சொற்பொழிவுகளையும், புராணச் சொற்பொழிவுகளையும், மன்னரும் மக்களும் மகிழ்ந்து கேட்டு வந்திருக்கின்றனர். பண்டைக் காலத்தில் பட்டி மண்டபங்கள் புலவர்களின் வாக்குவாதங்கள் நிகழ்வதற்காகவே ஏற்பட்டன. வழக்குரை மன்றங்களிலும், வழக்கறிஞரின் சொல்வன்மையால், வலுவிழந்த 'வழக்கும்' வெற்றி பெறுவதைப் பார்க்கிறோம். தேர்தல் காலங்களில் மக்கள் பல்வேறு கருத்துடையவர்களின் சொற்பொழிவுகளைக் கேட்டு எது உண்மை என்றறிய முடியாத குழப்ப நிலையிலும் சொற்பொழிவாளர்களின் திறமையைப் பாராட்ட முற்படுகின்றார்கள்.

நன்னடையில் எழுதச் சிறிதும் முயலாது மனம்போனபடியெல்லாம் எழுதுபவர் படித்தின்புறும்படி எதையும் எழுத முடியாது. ஓவியன் வண்ணங் குழைத்துத் தீட்டி அழகுறச் செய்வதுபோல் சொல்லோவியப் புலவரும் ஆய்ந்து தேர்ந்த அழகுச் சொற்களைக் கவினுறப் பின்னிக் கலையின்பம் ததும்பும்படி செய்ய வேண்டும். ஏனெனில் நல்ல கருத்துக்களை, அறநெறிகளையுணர்ந்து கொள்ளுவதற்காகவே படிப்பவர் உலகில் மிகச் சிலரே. பொழுது போக்கிற்காகவும், சொல்லின்பத்திற்காகவும், உணர்ச்சியின்பத்திற்காகவும் படிப்பவரே உலகில் பலராய் உள்ளனர். இதனாற்றான் உயர் பெருங் கருத்துக்களை யுணர்த்த வந்த கம்பர், திருத்தக்கதேவர், காளிதாசர், ஷேக்ஸ்பியர் போன்ற பெருங் கவிஞர்களும் உலகியற் சிற்றின்பத்தையும் குழைத்துக் காப்பியங்களையும், நாடகங்களையும் இயற்றிப் போந்தனர். சர்க்கரை பொதிந்து கசப்பு மருந்து கொடுப்பதுபோல, உயர் நீதிக் கருத்துக்களை உலகியற் சுவைகளுடன் கலந்தளிப்பதே கவிஞர்களின் மரபாய் இருக்கின்றது. கடுந்துறவியான திருத்தக்க தேவர் காமச் சுவையைக் குழைத்து இன்பப்பாக்களை யாக்கினும், துறவினை வற்புறுத்துவதே அவர் கருத்தாயிருத்தலை யறிந்து வியப்புறுகின்றோம். இளமையில் காமத்தில் செறிந்து விளையாடிய அனுபவத்தைப் பக்திரசத்துடன் கலந்து பாடும் அருணகிரிநாதர் தம் உள்ளத்தின் உணர்ச்சிகளைச் சந்த இனிமையுடன் பொழிந்து விடுகின்றார். திருப்புகழில் காமச்சுவை மலிந்திருப்பதற்கு அருணகிரிநாதரின் அனுபவநிலை மட்டுமன்றி அவர் காலத்

துச் சூழ்நிலையும் முக்கிய காரணமாகும். எனினும் திருப்புகழின் விஞ்சிய சுவையாகக் காணப்படுவது அடியவர்கட் கமுதமாகிய பக்திச் சுவையே.

நடை என்பது சிலருக்கு இயல்பாய் வந்து விடுதல் உண்டு. சிலருக்கு மிகவும் முயன்று பழகினல்தான் நடை படியும். கருவிலே திருப்பெற்ற கவிஞர்கள் கார்மழை யெனக் கவிதை பொழியும்போது அவர்கட்கு எனத் தனிநடை தானே யமைந்து விடுகிறது. பள்ளிக் கல்வி பெற்றிராத இராமலிங்க அடிகளின் எளிய இனிய அமுதூறுந் தீஞ்சுவைத் திருப்பாட்டுக்கள் தமக் கென ஒரு நடை பெற்றுத் திகழ்கின்றன.

'கல்லார்க்குங் கற்றவர்க்குங் களிப்பருளுங் களிப்பே'

என்று ஒருவர் பாடத் தொடங்கியதும் அவ்வினிய பாட்டு இராமலிங்க அடிகள் பாடியதுதான் என்பதை அதன் சொல்லாட்சி காட்டிவிடுகிறது.

'என்னனுய் என்னனுய் என்னி னல்லால்
ஏழையேன் என்சொல்லி ஏத்துகேனே'

என்ற தனித்திருத் தாண்டக வரி நாவுக்கரசரின் தொண்டுள்ளத்தின் அன்பினை எவ்வளவு நன்முக முத்திரையிட்டுக் காட்டி விடுகிறது! 'பால்நினைந்தூட்டும் தாயினும் சாலப்பரிந்து' என்ற தொடக்கமே மன முருக்கும் திருவாசகம் பாடிய மணிவாசகரின் உள்ளத்திற்கு நம்மை ஈர்த்துச் சென்றுவிடுகிறது. இறையருள் வெள்ளத்தில் திளைத்துப் பாடிய தமிழ்க் கவிஞர் எவரும் 'நடை'யைப் பற்றியோ, பாட்டின் அமைப்புப்பற்றியோ கவலைப் பட்டதாகத் தெரியவில்லை. ஆனல் காரிகை கற்றுக் கவிபாடும் புலவர்கள், கானமயிலாடக் கண்டு பாடலியற்ற முனையும்போது நடையைப் பற்றிக் கவலைப்படாமல் இருக்கமுடியாது.

சிறந்த ஆங்கில உரைநடையில் எழுதும் இயல்பு பெற்றிருந்த சதே (Southey) என்பவர் நடையைப் பற்றிய எண்ணமே எப்பொழுதும் தம் முள்ளத்தில் தோன்றியதில்லை என்று கூறுகிறார். எல்லாரும் எளிதில் புரிந்து கொள்ளும் சாதாரண ஆங்கிலத்தில் எழுதுவதே அவர் முயற்சியாக இருந்தது.

பொதுவாக, உரைநடையைப் பற்றிப் பேசும்போதுதான் நடையைப் பற்றிய பேச்சு எழுகின்றது; கவிதையின் நடையைப் பற்றித் திறனாய்வாளர்கள் அவ்வளவாகக் கருத்தைச் செலுத்துவதில்லை உரைநடை என்ற சொல்லிலேயே 'நடை'யமைந் திருப்பது இங்கு நோக்கத்தக்கது. சிறந்த திறனாய்வாளரும், உரைநடையைக் [illegible] ன தரத்துக்கு உயர்த்தியவருமான

சார்லஸ் லாம் என்பாரின் சுவைமிக்க கட்டுரைகளை (Essays of Elia)ப் படிக்கும் எவரும் அவருடைய நடையின் நயத்திலே நாட்டம் செலுத்தாமல் இருக்கமுடியாது. லாமின் உள்ளத்திற்கும் அவரது நடைக்கும் எவ்வளவு பொருத்தம் இருக்கிறது என்று திறனாய்வாளர்கள் கருதிக் கருதி இன்புறுகின்றனர். உரைநடையாளர்களுள் சிறந்த நடையாளர் என்ற பட்டத்தை லாமைப் போலவே டி க்வன்சி (De Quincey) பேடர், ஸ்விப்ட், ராபர்ட் லின்ட், மக்காலே, நியூமென் முதலியவர்களும் பெற்றிருக்கின்றனர்.

தமிழ் உரைநடை இலக்கியத்தில் தமக்கெனத் தனிநடை ஒன்றை வகுத்துக்கொண்டு, சலியுறத் தெளிந்து தண்ணென்றொழுக்கிற்றாகிய ஆற்றுவெள்ளம் போல் சொல்லோட்டமும், பொருள்வளமும் பொருந்திய இனிய நற்றமிழ் நடையில் நூல்களை எழுதிப் போந்தவர் மறைமலையடிகள் ஆவர். அறிஞர் சான்சன் என்பாரின் விழுமிய ஆங்கில நடைபோன்று தமிழில் உரைநடையாளராகத் திகழ்பவர் மறைமலையடிகளேயாவர். புலமை மிக்கோரானன்றி மற்றையோர் பின்பற்றமுடியாத உயர் தனிச் செந்நடையில் அடிகளாரின் எழுத்துக்கள் மிளிர்கின்றன. சங்க இலக்கியத்தை, குறிப்பாகப் பத்துப்பாட்டைப் பயில்வோர் அப்பாடல்களில் கருத்துக்கள் ஒன்றனோடொன்று அழகுறப் பின்னப்பட்டுக் கவின்மிகு சொன்மாலையாகக் காணப்படுவதை யுணர்வர்; அடிகளாரின் உரைநடையும் அத்தகு பெற்றியைப் பெற்றிருப்பதை அறிந்து இன்புறுகின்றோம். திரு. வி. க., டாக்டர் உ. வே. சாமிநாதையர் போன்ற தமிழ்ப்பெரும் புலவர் களும் இனிய உரைநடையில் தெள்ளிய தமிழ் நூல்களை இயற்றித் தமிழ் உரைநடையின் வளத்தைப் பெருக்கியிருக்கின்றனர். இக் காலத் தமிழறிஞர்கள் பலரும் நல்ல தமிழ்நடை கைவரப் பெற்றிருக்கின்றனர்.

வில்லேருழவரினும் சொல்லேருழவரே வன்மையுடையர் என்றும், வாளினும் பேனாமுனையே வலிமை வாய்ந்தது என்றும் கூறக் கேட்டிருக்கிறோம். பிரான்சு நாட்டு வால்டேரும், ஆங்கில நாட்டு பர்க்கும் ஐரோப்பியப் பெருஞ் சக்திகளாக விளங்கியது அவர்களின் எழுத்துவன்மையினால்தான். கருத்துக்களின் வேகத்தினும் அவர்களது எழுத்துநடையின் வேகமே அவர்களை முடிசூடா மன்னர்களாக்கியது. ஆங்கில விவிலிய நூலின் நடை எல்லா ஆங்கிலக் கவிஞர்களையும், புலவர்களையும், உரைநடையாசிரியர்களையும் கவர்ந்து அவர்களின் இலக்கியப் படைப்புக் களின் தரத்தை உயர்த்தியிருக்கின்றன. தமிழிலக்கியத்தில் திருக்குறளின் கருத்தையோ, சொல்லையோ எடுத்தாளாத புலவர்

அன்றுமில்லை; இன்றுமில்லை. தமிழிலக்கியம் முழுவதிலும் நீக்க மற நிறைந்திருக்கும் சக்தியைத் திருக்குறள் பெற்றிருப்பது அதன் ஒப்புயர்வில்லாத நடையின் சிறப்பால்தான் என்பதை எவரும் ஒப்புவர்.

நடையின் தனிப்பண்பு சொற்களின் முறைமாற்றத்தினால் மட்டும் காணப்படுவதில்லை; எண்ணங்கள் வெளிப்படுத்தப்பெறும் முறையொழுங்கினின்றே அது விளங்கப்பெறுகிறது. உள்ளத்தில் ஏற்படும் உணர்ச்சி வேகமும் உணர்ச்சிப் போக்கும் சொற்களில் பிரதிபலித்துத் ததும்பி நிற்பதைக் காட்டுவதே நடையின் சிறப்பியல்பாகும். தன்னேரிலாத தனிநடையைப் பெற்றிருக்கும் இலக்கிய ஆசிரியர்கள், கருத்துக்களைத் தன்னேரிலாத முறையில் வெளிப்படுத்தும் கலைப்பயிற்சி நிரம்பிய இலக்கியப் படைப்பாளர்களே யாவர். ஆங்கில அறிஞர் சான்சன் எக்கருத்தையும் தமக்கேயுரிய 'பாணி'யில் கூறும் இயல்புபடைத்தவர்; எளிய கருத்துக்களையும் சொல்லுகின்ற முறைமூலம் கம்பீரமுடையதாகக் காட்டும் வன்மை படைத்தவர். இத்தனிச் சிறப்புத்தான் சான்சனின் வாழ்க்கை வரலாற்றை உலகம் வியக்கத்தக்க வகையில் விரிவாக எழுதிப்போந்த பாஸ்வெல் என்பாரை அவரிடம் ஈர்த்து அவரை வியந்துவியந்து போற்றித் தம் ஆசிரியராகக் கருதி வழிபடும் பண்பையும் தந்தது. மனிதரின் பண்பை அவர்தம் கையெழுத்தே வெளிப்படுத்திவிடும் என்று கூறுவர். அவ்வாறாயின் அவர்தம் உரைநடை அதனினும் தெள்ளிதாய் அவர்தம் குணநலனைப் புலப்படுத்திவிடுகிறது என்பதில் ஐயமில்லை. இதனால்தான் 'நடையே மனிதன்' என்று பிரெஞ்சுப் பழமொழி ஒன்று கூறுகிறது. ஓர் ஆசிரியரின் நடை ஒருவர்க்குப் பிடித்திருக்குமானால் அவர்தம் கருத்துக்களும் அவர்க்குப் பிடித்திருக்கும் என்பதில் ஐயமில்லை.

இன்பந் துய்க்கப் புகுவோர் இலக்கியம் என்ன அறிவுறுத்துகிறது என்றறிவதினும் எடுத்துக்கொண்ட பொருளை எப்படிக் கூறுகிறது என்று அறிய முயல்வர். அதனால்தான் திறனாய்வாளர் உயர்ந்த இலக்கியத்தின் நடையைப் பற்றிப் புகழ்ந்து பேசுகின்றனர். ஆசிரியரின் எண்ணம், காட்சிநிலை, உணர்ச்சி, கருத்தோவியம் இவற்றை ஒருங்கே குழைத்து 'ஆசிரியர் கருதிய பொருள் இதுதான்' என்று தெளிவுறக் காட்டுவதுதான் நடையின் சிறப்பியல்பாகும். உரைநடையும் கவிதை நிலை எய்தவேண்டுமானால், படித்ததும் மனத்தில் பதிந்துவிடுமளவுக்குச் செஞ்சொற் சுவையின்பம் தருவதாயிருத்தல் வேண்டும்.

# திருக்குறளும் நற்றிணையும்

[வித்துவான் திரு. தி. பொ. நாராயணசாமி பாரதி]

திருக்குறள் கடைச்சங்க இலக்கியங்களுள் பதினெண் கீழ்க் கணக்கைச் சார்ந்தது; அறம் பொருள் இன்பம் என்ற முப்பால்களை உடையது; குறள் வெண்பாக்களால் ஆனது; நற்றிணையோ கடைச்சங்க இலக்கியங்களுள் எட்டுத் தொகையைச் சேர்ந்தது; இன்பத்தை மட்டும் கூறுவது; ஒன்பதடிச் சிறுமையும் பன்னீரடிப் பெருமையும் உடையது; அகவற்பாக்களால் ஆனது; இந்த இரண்டு நூல்களையும் இணைத்துக் காண்ட

## திருக்குறள்

திருக்குறள் ஓதற்கு எளிதாய் உணர்தற்கு அரிதாய் விளங்குவது; கற்குந்தோறும் கற்குந்தோறும் நெஞ்சை உருக்குவது; என்றும் வாடாதது; நெடுங் காலமாயினும் நிலைத்துநின்று தேனைச் சிந்துவது; அறம் பொருள் இன்பம் என்ற மூன்றையும் தெளியச் செப்புவது; அரசன் ஆணை இடுவது போல மக்களை நல்லறங்கள் செய்க என ஆணையிடுவது. சாதி, நிறம், மொழி முதலிய வேறுபாடின்றி மக்கள் அனைவரையும் பிறப்பால் ஒன்றெனக் கூறுவது; அவரவர் செய்யும் சிறப்புச் செயல்களால் மற்றவர்களினும் உயர்த்திக் கூறுவது; பசி, பிணி, பகை இன்றி மக்கள் வாழவேண்டும் எனக் கூறுவது; அன்புடையார் எலும்பும் பிறர்க்கு உரியது என்பது; ஒரு குலத்தார்க்கு ஒரு நீதி கூறாது ஒரு நீதியே அனைவர்க்கும் என்பது; ஆணும் பெண்ணும் அன்பால் பிணிக்கப்பட்டு ஒருவரை ஒருவர் எழுபிறப்பினும் தொடர்ந்து வாழவேண்டும் என்பது; ஒரு நாட்டினர் தங்களைத் தாங்களே ஆளவேண்டும் என்பது; 'கருணை காட்டுக' என்பது; ஒவ்வொருவரும் சோம்பேறியாயிராமல் நிலத்தை உழுது—தொழில் செய்து—பிழைக்க வேண்டும் என்பது; அனைவரும் கல்வி கற்க வேண்டும் என்பது; ஒவ்வொருவரும் அரசியல் தந்திரங்களை அறிய வேண்டும் என்பது; சொற்கள் வெளிப்படையாய் உணர்த்தும் பொருள்களைவிடக் குறிப்புப் பொருள் தரப் பேசுக என்பது; புகழை நிறுவுக என்பது; இவ்வாறு உலகியல் வாழ்க்கையில் அறம் பொருள் இன்பங்களை நன்கு நுகரவேண்டும் என்பதே திருக்குறளின் முதன்மையான கருத்தாகும்.

"பொருள்" என்ற பகுதியைத் தொல்காப்பியர் அகம், புறம் என்றார்; வள்ளுவரோ பொருளில் இருந்து அகத்தை—இன்பத்தைத் தனியாகக் கூறினர்; அப் பொருளிலிருந்து புறத்தை—அறத்தைத் தனியாக்கினர்; இவ்வாறு கூறியது, "பழையன கழிதலும் புதியன புகுதலும்" பற்றிப் போலும்!

அன்றியும் தொல்காப்பியர் காலத்தில் அகம், புறம் என்ற பிரிவிலே கூறினால் மக்கள், ஒழுக்கமாகிய அறம் பற்றி நடப்பர் என்ற நிலை இருந்தது; வள்ளுவர் காலத்தில் புறத்திலிருந்து அறத்தைத் தனியாகக் கூறினால்தான் மக்கள் மனத்தில் "உறைக்கும்" எனக் கருதி அவ்வாறு பிரித்துக் கூறினார் போலும்; இஃது உண்மை என்பதற்குத் தொல்காப்பியர் காலத்தே ஒழுக்கம் சிதைந்தது என்பதனை,

"பொய்யும் வழுவுந் தோன்றிய பின்னர்
ஐயர் யாத்தனர் கரணம் என்ப"

என்று தொல்காப்பியர் கூறுவதால் அறியலாம்.

உலக மொழிகள் பலவற்றிலும் குறள் மொழிபெயர்க்கப் பட்டுள்ளது; ஜெர்மெனிப் பேராசிரியர் "ஆல்விரட் சுவைட்சர்", "இந்தியாவின் சமயச் சிந்தனை" என்ற நூலில், "இந்தியப் பெருங் கருணைப் பெரியார்களின் எண்ணங்களுக்கு எல்லாம் மூல முதல் நூல் திருக்குறளே; மேல் நாட்டுப் பெரியார்களின் சிந்தனைகள் அனைத்திற்கும் திருக்குறள் மேம்பட்ட புது விளக்கமாகும்" எனக் கூறியுள்ளார். திருக்குறளின் சொல்லையும் பொருளையும் எடுத்தாளாத தமிழ் இலக்கியங்கள் இல்லையென்றே கூறலாம்; எக்காலத்திலும் திருக்குறள் அறிவொளி வீசித் தமிழ்ப் பண்பாடுகளை மிளிரச் செய்யும்.

பத்தொன்பதாம் நூற்றாண்டில் (12--5--1840) இலண்டன் மாநகரில் ஆங்கிலப் புலவர் தாமஸ் கார்லைல், "வீரரும் வணக்கமும்" என்பதுபற்றிச் சொற்பொழிவு ஆற்றுங்கால், "தாங்கள் இந்தியாவை விரும்புகிறீர்களா? அல்லது ஷேக்ஸ்பியரின் இலக்கியங்களை விரும்புகிறீர்களா?" என என்னைக் கேட்டால், "இந்தியா இன்றல்ல; என்றேனும் ஒருநாள் நம்மைவிட்டுப் பிரிந்தே செல்லும்; ஷேக்ஸ்பியரின் இலக்கியங்களோ வற்றா அறிவூற்றாய் இன்பப் பெட்டகமாய் நம் நலம் பேணும் இயல் புடையன; அவற்றையே நான் மிகுதியும் விரும்புவேன்" என்றார். ஷேக்ஸ்பியரின் நாடகங்களே ஆங்கிலேயர்க்கு அப்படியிருக்குமானால் பல நாடகங்களை எழுதுவதற்கு மூலமாயுள்ள [illegible]க்குறள் நமக்கு எத்துணை இன்றியமையாதது என்பதைக் [illegible]மா?

[illegible] என்ப[illegible] [illegible]ணை எனப் பிரியும். திணை—ஒழுக்கம்; இங்குக் கூறதலாகிய ஒழுக்கத்தை நல்முறையில் கூறுவதை 'நற்றிணை' என்றனர்; நல்—நன்மை; நன்மை என்ற பண்பால் நானூறு பாடல்களைத் தொகுத்தனர்; அன்பு நிறைந்த ஐந்திணைக் காமத்தையே விளங்கக் கூறுவது. நற்றிணை, ஒருகாலத்தில்

ஓரிடத்தில் ஒருவரால் பாடப்பட்டது அல்ல; பலகாலத்தில் பல இடங்களில் பலரால் பாடப்பட்டது; ஒன்பதடிச் சிறுமையும் பன்னிரண்டடிப் பெருமையும் உள்ள பாடல்களால் ஆனது; இயற்கைப் பொருள்களையும் உலகியல்புகளையும் தமிழர்களின் உயர்ந்த பண்பாடுகளையும் நன்கு எடுத்து இயம்புவது; பன்னாடு தந்த பாண்டியன் மாறன் வழுதியால் தொகுக்கப் பெற்றது. இத்தகைய பெருமை சான்ற நற்றிணையையும் திருக்குறளையும் இணைத்துக் காண்போம்:

'நட்புக்கொள்ள வருபவரைப்பற்றிய குணச் செயல்களின் நன்மையை ஆராய்ந்து யாரும் நட்புக்கொள்வர்; நட்புக்கொண்ட பின் அந்நண்பருடைய குணச் செயல்களை ஆராய்ந்து பாரார்; நீ ஆராய்ந்து மலைகிழவோனை நட்புக்கொள்ளவில்லை; முன்பு நட்புக்கொண்டு இப்பொழுது அத் தலைவனை வெறுத்தல் தகாது" என்று தோழி தலைவிக்குக் கூறுவதாகக் கபிலர் கூறிய பாட்டில்,

"நாடி நட்பின் அல்லது
நட்டு நாடார் தம்மொட்டியோர் திறத்தே"

எனவரும் அடிகளில்,

"நாடாது நட்டலிற் கேடில்லை; நட்டபின்
வீடு இல்லை நட்பாள் பவர்க்கு"

என்ற குறள் விளங்கக் காணலாம். ஒருவரை நண்பராகக் கொள்ளும் முன்பே அவரைப்பற்றிய குணம் செயல்களை ஆராய வேண்டும்; நட்புக் கொண்டபின் அவற்றை ஆராயக் கூடாது என்பது நட்பைப்பற்றிய பொது இலக்கணம்; இந்த இலக்கணம் தலைவிக்கும் தலைவனுக்கும் உள்ள நட்பு — காதலுக்கும் — பொருந்துவதை இரு நூல்களும் இயம்புவதால் அறியலாம்.

பக்கத்தில் நிற்கும் தோழியின் செவியில் படும்படி ஒரு தலைவன் நெஞ்சுக்குச் சொல்கிறான்:

"என் நெஞ்சைக் கவர்ந்த தலைவிதான் நானடைந்த காதல் நோய்க்கு மருந்து ஆவாள்; அவளல்லது வேறு மருந்து இல்லை' எனக் கூறும்,

"பெருந்தோள் குறுமகள் அல்லது
மருந்துபிறி தில்லை யான் உற்ற நோய்க்கே"

என்ற நற்றிணை மலரில்,

"பிணிக்கு மருந்து பிறமன்; அணியிழை
தன்நோய்க்குத் தானே மருந்து"

என்ற குறள் மணம் வீசுவதை முகரலாம். தலைவிமீது தலைவன் கொண்ட ஆராக் காதல் நோயைத் தீர்க்கும் மருந்து அத்

தலைவியே ; வேறில்லை; அதாவது மருந்தாகிய தலைவியைப் பூச—பருகவேண்டும் என்ற குறிப்பு, ஈரிடங்களிலும் விளங்குவது காண்க. இக் கருத்து நற்றிணை ௧௪௦ ஆம் பாடலிலும் உள்ளது.

மற்றொரு தலைவன், "என் தலைவியே! நான் கொண்ட காம நோயும் அதனாலான உடல் தளர்ச்சியும் நீங்கும்படி இன்பம் தரும் தோள்களை உடையவள் நீ; முருகனுடன் வள்ளி செல்வது போல என்னுடன் வருக!" எனக் கூறும்,

"நோயும் நெகிழ்ச்சியும் வீடச் சிறந்த
வேய்வனப் புற்ற தோளை நீயே!"

என்ற நற்றிணைப் பொய்கையில்,

"உறுதோறு உயிர்தளிர்ப்பத் தீண்டலால் பேதைக்கு
அமிழ்தின் இயன்றன தோள்"

என்ற குறள்மலர் தோன்றுவதைக் காணலாம். ஆருயிர்க் காதலியின் தோள்கள், தன் ஆருயிர்க் காதலனுடைய துன்பங்களை அகற்றுகின்றன; தோள் படும்போதெல்லாம் மனம் இன்பத்தால் பொங்குகிறது. தோள்களைத் தோயும் தோறும் ஆயுள் மிகுகிறது என்ற தோள்மீது கொண்ட ஆவல் கருத்தை இக் காதல் குருத்துக்களில் காண்கிறோம்.

இப் பேருலகில் மழை பொழிவதால் தொழில் பல உதவுகிறது எனும்,

"இருங்கண் ஞாலத்து ஈண்டு தொழில் உதவிப்
பெரும் பெயல்பு" (௧௫௭)

என்ற நற்றிணை மேகத்தில்,

"ஏரின் உழாஅர் உழவர் புயல்என்னும்
வாரி வளங்குன்றிக் கால்"

என்ற 'குறள் மின்னல்' பளிச்சிடுவதைப் பார்க்கலாம். உழவுத் தொழிலுக்கு மழை இன்றியமையாதது என்பதும் அம்மழையால் உழவுடன் பிற தொழில்களும் நடைபெறும் என்பதும் மேற்காட்டிய இரு நூல் ஒரு கருத்தால் அறியலாகும்.

ஒரு தலைவி கூறுகிறாள்: "தோழியே! நம் காதலன் நம்மிடம் பழகுவதாலும் பேசுவதாலும் இனியன்; சில சமயம் பிரிந்து போகிறான்; அப் பிரிவால் மிக்க வருத்தம் எனக்கு; பின்பு வந்து அவன் என்னைப் பணிந்து அவ்வருத்தம் எல்லாம் தொலைவிலே போகும்படி என் கோபத்தை நீக்குகிறான். அப்படி நீக்குவதை நான் மிகுதியும் விரும்புகிறேன். அவ்விருப்பத்தால் அவன்மீது வருத்தம் கொண்டவள் போல் ஊடுவேன் எனக் கூறும்:

"ஊடல் உறுவேன் தோழி நீடு
புலம்புசேண் அகல நீந்திப்
புலவி உணர்த்தல் வண்மை யானே" (உ௧௭)

என்ற 'நற்றிணை மலை'யில்

"இல்லை தவறுஅவர்க்கு ஆயினும் ஊடுதல்
வல்லது அவரளிக்கும் ஆறு"

என்ற 'குறள் அருவி' பாடுவதைக் கேட்கலாம். தலைவனிடம் தலைவி ஊடல்—சிறு கோபம்—கொள்வதால் அக் கோபத்தைத் தீர்க்கத் தலைவன் எவ்வளவோ அன்பு காட்டி—அந்த ஊடலைத் தீர்த்து விடுகிறான்; ஊடலை நீக்கத் தலைவியிடம் செய்யும் ஒவ்வொரு செயலும் சொல்லும் தலைவியின் நெஞ்சை இளகச் செய்கிறது; தன்னிடம் இவ்வளவு அன்பு தலைவன் வைத்திருக்கிறான் என வியந்து வியந்து பெரு மகிழ்ச்சி கொள்கிறாள்; "ஆதலால் மேலும் மேலும் தலைவனிடம் ஊடல் கொள்வேன்; முன் அனுபவம் எனக்கு அப்படிக் கூறுகிறது என்ற கருத்துப் பொருத்தங்களை இருநூல் அடிகளால் அறிகிறோம்.

ஒரு தோழி தலைவனிடம் கூறுகிறாள்: "தலைவனே! நண்பர்கள் கருணை உடையவர்க்கு எதிரே நின்று 'நஞ்சை உண்பீராக!' எனக் கொடுத்தாலும் கண்ணோட்டத்தை மறுக்க இயலாமையின் அதனை உண்டுபின்பும் அவரோடு நட்புக் நீ அத்தகைய கொள்வர்; நண்பன்; அப்படியிருந்தும் என்தோழியின் தோளிலே தூங்குவதை இன்பமாகக் கொள்ளவில்லை; போகட்டும்; நீ என்னிடம் காட்டும் தயவினுலாவது தலைவியிடம் அன்பு காட்டுக; உன்னைத் தவிரவேறு துணை இலள்" என்பதை,

"முந்தை இருந்து நட்டோர் கொடுப்பின்
நஞ்சும் உண்பர் நனிநா கரிகர்"

என்ற "நற்றிணைக் கடற் சிப்பி"யுள்,

"பெயக்கண்டும் நஞ்சுண் டமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர்"

என்ற 'குறள் முத்து' ஒளியிடுவதைப் பார்க்கிறோம். ஒருவரை ஒருவர் நட்புக் கொண்டு பழகியபின் நண்பர் இருவரில் ஒருவர் என்ன தீங்கு செய்தாலும் அதைப் பொறுத்துக் கொள்ளவேண்டும்; மேலும் நட்பையும் வளர்க்க வேண்டும்; என்ற கண்ணோட்டம் ஆன நாகரிகத்தை அறிந்து மகிழலாம்.

௰ல் உவமை நயம்

**இயற்கைக்குச் செயற்கை உவமை:** பகைவர் அஞ்சும்படி தலையாலங்கானத்திலே தங்கிய பாண்டியன் நெடுஞ்செழியன், தன்

பாசறையிலிருந்தான்; உடைவாளை உறையிலிருந்து எடுத்தான்; எடுத்த வாள் மின்னுவதைப்போல மேகம் மின்னுகிறது; அப்படியானால் அவ்வாள் எத்தகைய கூர்மையும் ஒளியும் அமைந்தது என வியப்பு உண்டாகிறது. (௩௮௭) மேகம் மின்னினால் மழை பெய்ய வேண்டும் அல்லவா? அஃதை ஔவையார் கூறுகிறார்: யானை குதிரைப்படைகளை உடைய அதியமான் அஞ்சி, குளிர்ந்த மனத்தால் ஆராய்ந்து தன்பெயர் விளங்க இரவலர்க்குத் தேர்களைப் பரிசு கொடுக்க இருக்கும் நாள் ஓலக்கம் போல மழை பெய்யத் தொடங்கியது. ஒரு தலைவி கையில் வைத்திருந்த தேன் கலந்த பாலைக் கலத்தொடு பற்றிக் குரங்கு சென்றதும் அவள் அழுதாள்; அழுத கண்கள் மழை நீரைப் பெற்ற நீல மலர் போன்றன; பால் போயிற்று என்று வயிற்றிலே அடித்தாள்; அக் கைவிரல்கள் சிவந்து பொதியில் மலையில் தோன்றிய காந்தள் மலர் போன்றன என வரும் உவமை நயம் இனியது; அத்துடன் ஒருவர் துன்பப்பட்டு அவல நிலையில் இருக்கும்போதுகூட அழகை நுகரும் ஔவையின் பாட்டுள்ளம்-கவியுள்ளம் புலனுகிறது (௩௭௯). கடல் அலை வந்து வந்து மீள்வது, நெடுநாள் புண்பட்டவர் புரண்டு புரண்டு உருள்வதைப் போல உள்ளது (௩௭௮). நீர்க் காக்கை 'கொட்டாவி' விடுவது போல ஆம்பல்-குமுதம்-மலர்கிறது. கம்மியர் செம்பினாலே செய்த தாமிரப் பானையைக் கடைந்தபோது ஏற்படும் மின்னலைப் போல மேகம் மின்னுகிறது (௧௫௩).

**நற்றிணை—பழக்க வழக்கம்:**

உப்பு விற்போர் தலைக்கு மேல் குடை பிடித்துச் செல்கின்றனர். கடலில் இரவில் மீன்பிடிக்கச் சென்றவர்களின் படகுகளை எண்ண அப்படகுகளிலே உள்ள விளக்குக்களைக் கரையிலுள்ள நுழைச்சியர் எண்ணுகின்றனர். காமம் மிக்க தலைவி, தன் தலைவனைக் கண்டுபிடிக்க அவனது "ஊரையும் பேரையும் ஊர்ப் பொது அம்பலத்தில் எழுதி வைத்திருப்பதைக் காண்பேன்" என்கிறாள். 'மக்கட் கணிப்பு' அக்காலத்திலே உள்ளதுபோலும்; பெண்ணும் படித்தவள்; கடலில் பேய் கெடுக்காவண்ணம், படகு புறப்படுமுன்பு அதற்கு நறும்புகை காட்டுவர்; பார்ப்பன மகளிர் மலர் சூடுவாராம்; ஏன் எனில் அவர்கள் தத்தம் கணவன்மார்களைப் பிரியமாட்டார்களாம் ஆதலால் (௮௦). தத்தம் காதலர்களைப் பெறவேண்டும் என்று விரும்புகிற பெண்கள், தை மாதத்தில் குளங்களில் படிந்து நீராடுவர். தைப்பிறப்பன்று நீராடியும் தைமாதம் முழுதும் நீராடியும் செய்யும் தவப்பயனை அடைவர் எனக் கலித்தொகையும் கூறுகிறது. கிணற்று நீரை 'மிடா'வில் ஊற்றி "வில் மூடி" போட்டிருந்தனர் (௯௩). கோரையில்

பொம்மை செய்து அதைத் தன் குழந்தை என்று முறைமை பாராட்டும் வழக்கம் மணக்காத இளம் பெண்களிடம் இருந்தது;
ஙக. நப்பது. "தலைவன், என்னைப் பிரிந்து வேறிடத்தி லிருந்த காலத்தில் ல
எனக்குத் தும்மல், புரையேறல்கள் தோன்றியிருக்குமே!" என்கிறாள் தலைவி. 'தலைவியைப் பிரியக் கருதிய நெஞ்சே! நீ நீரில்லாத வழியை அடைவாய்" என்றான் தலைவன்: இது 'மேலோர்க்கு ஒரு தீங்கு செய்தால் மூன்று நாளில் அத்தீங்கை அனுபவிப்பர்' என்ற வழக்குப் பற்றி வந்தது (கசுஎ). தனக்கு உணவாக அடிக்கும் விலங்குகளை வலப்பக்க விழும்படி கொல்லும்; மானின் நெஞ்சிலே தயங்காது குறி தவறிய அம்பின் போக்கைக் கண்டு வேடன், "இம்மலையில் தெய்வம் வெளிப்பட்டு நிற்கிறது. மழை பெய்தால் அத் தெய் வத்தின் கோப வீறு தணியும்" என்கிறான் (கசுரு). பல்லி சொல்வதை ஓர்த்து—கேட்டு வந்தனர்—சகுனம் பார்த்தல் அக்காலத்தில் இருந்தது. ஊரில் நடக்கும் திருவிழாவை ஊர்ப் பொது நிலத்தில் இருக்கும் அறிவுள்ள குலாலன், வீடுதோறும் சென்று, கூறிப் போவது ஓர் ஊரின் வழக்கம் எனத் தெரிகிறது (உ00). பௌர்ணமியும் கார்த்திகை நட்சத்திரமும் சேர்ந்து வரும் மாதத்தைக் 'கார்த்திகை' என்பதும் அந்நாள்—அத் திங்கள் முழுதும் நீராடி விளக்கேற்றி வைத்து அறம் செய்தனர் என்பதும் தெரிகின்றன (உ0உ).

மூங்கிலுக்குள் கள்ளை ஊற்றி வைத்து முற்றவைப்பர் (உஎசு). புன்னைக் காயிலிருந்து நெல் எடுக்கப்படும். தலைவனைச் சார்ந்து தலைவி மணம் முடிக்கும் காலத்துக் காலில் அணிந்திருந்த சிலம் பைக் கழற்றும் வழக்கம் இருந்தது.[1] காலாட் படையினர் தலையில் வெள்ளை உருமால் கட்டுவார்களாம். குலதெய்வத்தையும் ஊர்த் தெய்வத்தையும் பனை மரத்தில் ஏற்றுவித்து வணங்கி வரல் தொன்று தொட்டு வரும் நெய்தல் நில வழக்கு. பரத்தையைக் "கொண்டி" எனத் திட்டினர். வேங்கை மரம் மலர்ந்தவுடன் தினைக்கதிரை அறுத்தவர், தினைப்புனத்தின் காவலுக்கு இருந்த தலைவியை-கன்னியை வீட்டுக்கு அழைத்துச் செல்வர்.

ல் வரலாறு

கடை எழு வள்ளல்களில் ஒருவனை, "வல்வில் ஓரி"யைக் கொன்றவன் அந்த எழு வள்ளல்களில் மற்றொருவனை மலைய மான் திருமுடிக்காரிதான். இதைச் சிறுபாணாற்றுப் படையில்,

1. 'சிலம்புகழீஇ நோன்பு' என்பது பற்றிய விளக்கங்களை டாக்டர் நாவலர். ச. சோமசுந்தர பாரதி எழுதிய கட்டுரையில் காணலாம்.

"காரிக் குதிரைக் காரியொடு மலைந்த
ஓரிக் குதிரை ஓரியும்"

என வந்துளளது. புறநானூறறில.

"காரியூர்ந்து பேரமர்க் கடந்த
மாரியீகை மறப்போர் மலையனும்" (கஙஅ)

எனக் கூறப்பட்டுள்ளது, அகநானூற்றில்.

"முள்ளூர்........காரி

ஓரிக் கொன்று" (உ0க)

என வந்துள்ளது.

"மிஞிலி" என்ற வீரனால் காவல் செய்யப்பட்டது "பாரம்" என்ற ஊர்; இம் மிஞிலி நன்னனுக்குச் சேனாதிபதி. [1] "அன்னி மிஞிலி" என்ற பேர் அமைந்த ஒரு கன்னியைப் பற்றி முன்பு எழுதியுள்ளேன்; "மிஞிலி" ஆண் பெயர்; இரண்டுக்கும் தொடர்பு உண்டோ? ஆயவேண்டும்.

'ஆரேற்று' சோழனுடைய ஊர்களில் ஒன்று; கொல்லி மலை ஓரிக்கு உரியது. பிண்டன் முதலிய பகை அரசர்கள் போரிலே தோற்று ஓடும்படி செய்த நன்னன், அப்பகை அரசர்களின் மனைவியர்களின் கூந்தலை அறுத்துத் திரித்துச் செய்த 'கம்பளிக் கயிற்'றால் அப்பகை அரசர்களின் யானைகளைக் கட்டினான். பெண்களின் கூந்தல்களை அறுப்பது தகாது என்பதும், அறுபட்டால் பட்டவர்க்கு இழிவு என்பதும் இக்காலத்திலும் உள்ளன. நாடு வெற்றி பெறச் செய்யும் போரில் கூந்தல் அறுப்பது சாதாரணம் போலும்! பகையரசர்களின் பசுக்கூட்டங்களை விற்போரில் மலையமான் கவர்ந்தான். "விராசன்" என்ற வீரனுக்கு "இருப்பையூர்" உரியது; புண்ணால் அழகமை 'தழும்ப' னுக்கு "ஊணூர்" உரியது.

முடிவுரை :

'திருக்குறளும் நற்றிணையும்' என்ற தலைப்பிலே இரண்டுக்கும் பொதுவானவற்றையும் நற்றிணையிலே தெரிவன சிலவற்றையும் எழுதினேன்; திருக்குறளை ஓரளவு இணைத்துக் கொண்டேன். திருக்குறள் ஆராய்ச்சி தனியாக எழுதத் தக்கது. நற்றிணையில் ஆய்ந்தன, பழங்காலத் தமிழ் நாட்டின் பழக்க வழக்கங்களையும் நடை உடை பாவனைகளையும் விளக்குவனவாகும்.

1. சிலம்பு-கூ, பரல்-க. "கோசர்"

# அறம்

[புலவர், திரு. கமலிதாசன்]

வாழ்வியல் அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கு உறுப்புகளுடையது எனப் பண்டைத் தமிழர்கள் வரையறுத்திருந்தார்கள். பிறர்பால் வெகுளாது, பிறர் பொருளை வெஃகாது, புறங்கூறாது அறநெறி நின்று பொருளீட்டுதலும், ஈட்டிய பொருளால் அதனையே துணைக்காரணமாக உடையதான இன்பத்தைப் பெறுதலாகிய இன்னிலை நிற்றலும், அதனோடொன்றியே அறஞ்செய்தலும், அதனால் வீடு பேறடைதலும் ஆகிய இவற்றையே வாழ்வின் இலக்காகக் கொண்டிருந்தார்கள். அறம் செய்யும் மக்கள் தீதின்றி வரும் பொருளைத்தான் விரும்பினர். ஏனெனில் அப்பொருளொன்றே அறமும், இன்பமும் பயக்க வல்லது என்பதை நன்குணர்ந்திருந்தனர். இதனையே வள்ளுவரும்,

அறனீனு மின்பமு மீனும் திறனறிந்து
தீதின்றி வந்த பொருள்

எனச் சிறப்பித்தாரல்லரோ! இன்பந்துய்த்தற்குப் பொருள் இன்றியமையாதது; ஏன்? வாழ்தற்கே பொருள் இன்றியமையாதது. அங்ஙனமிருக்க அறச் செயல் பொருளின்றேல் எங்ஙனம் முடியும்? அவ்வறச் செயலுள்ளும் இன்னிலை நின்று அறஞ் செயலே சிறந்த தென்பது பண்டையோர் கொள்கை. அவர்கள் இயற்கையின் ஒரு கூறான பெண்ணுடன் தான் அறம் செய்ய வேண்டும் எனக்கருதினர். அவர்களையே அதற்குத் தூண்டுவித்தார்கள். இயற்கையின் ஒரு கூறான பெண்மைக்குச் சிறப்பீந்து அவர்களைப் போற்றினமையாற்றான் பண்டையோர் சிறந்து விளங்கினர் எனில் மிகையாகாது. அறத்திற்கு எவ்வளவு முதன்மை கொடுத்திருப்பராயின் கல்வி கற்பிக்கத் தொடங்கும்பொழுதே, 'அறஞ்செய விரும்பு;' என்பதை அறிவுறுத்தியிருப்பர் என்பதை உன்ன வேண்டும்.

தமிழ் மக்கள் எதனையும் தொக்க பிண்டமாக வைத்து அதன் சிறப்பினை அறியவோ, அன்றிச் சுவைக்கவோ என்றும் இசைந்தாரிலர். எதனையும் பகுத்துப் பகுத்து நோக்கும் சீரிய நோக்கம் உடையவராய் இருந்தார்கள். இவ்வகையிலேதான் தாம் கற்கவேண்டிய கலைகளை அறுபத்து நான்கு எனப்பகுத்தார் போலும். முப்பத்திரண்டு அறங்கள் உளவெனவும், ஒவ்வொரு

வரும், நாடொறும் தாமியன்ற அளவு செயல் வேண்டுமெனவும் கூறிச் சென்றுள்ளார்கள்.

இன்ன றுங்கலிச் சோலைகள் செய்தல்
இனிய நீர்த்தண் சுனைகள் இயற்றல்
அன்ன சத்திரம் ஆயிரம் வைத்தல்
ஆல யம்பதி னாயிரம் நாட்டல்
பின்ன ருள்ள தருமங்கள் யாவும்
பெயர்வி ளங்கி யொளிர நிறுத்தல்
அன்ன யாவினும் புண்ணியங் கோடி
ஆங்கோர் ஏழைக் கெழுத்தறி வித்தல்.

எனப் பாரதியாரும் அறங்களிற் சில கூறி அறியாமையாகிய அக விருளை நீக்கும் கல்வி யறிவூட்டுதலையே சிறந்த அறமாகக் கூறிப் போந்துள்ளார். கல்லாமையின் கேட்டினை நன்குணர்ந்த பாரதி, தீங்குகளெல்லாம் களைவதற்கு மக்கள் அறிவுபெற வேண்டு மென்ற முதலினைக் கண்டு கூறினார் எனில் அதுவே சாலும். பல் வேறு வகைப்பட்ட அறங்களைத் தனக்கு வடிவாக உடையவன் இறைவன். அவனைக் காண்டற்கு அறிவு பெறலே சிறந்த வழி யென்பதை நன்குணர்ந்தவர் நம் பாரதியார். அவரது இக் கருத்து,

'பயிற்றிப் பலகல்வி தந்து இந்தப்
பாரை யுயர்த்திட வேண்டும்'

எனப பினனும்மோர இடத்தில கூறுவதாலும் வலியுறும்.

இஃதின்றாக நம் முன்னோர்களோ உணவின் பிண்டமாவது உடல் என்பதனையும், அஃது உண்டிமுதற்று என்பதனையும் உணர்ந்து,

'மண்டிணி ஞாலத்து வாழ்வோர்க் கெல்லாம்
உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே'
(மணிமேகலை—௧௧, ௯௫-௯௬)

எனவும்,

'நீரின்றி மையா யாக்கைக் கெல்லாம்
உண்டி கொடுத்தார் உயிர் கொடுத்தோரே'
(புறம் ௧௮. ௧௮. ௧௧.)

எனவும் உண்டி கொடுத்து உயிரோம்பும் சிறப்பைக் கூறியிருக் கின்றார்கள். ஆயினும் இவர்கள் கல்வி பயிற்றலை வெறுத்தவ நல்லர் என்பதையும் நாம் அறிய முடிகிறது. 'ஆசானிடத்துத் தாழ்ந்தும், இடருற்றவழி உயிர் கொடுத்தும், பொருள் கொடுத் தும் கற்றல் வேண்டுமெனவும்; தன் மக்களைத் தாய் அன்பு

தொண்டு பேணுவளாயினும் கல்வியறிவால் மேம்படுவனேல் தாயும் மிக்கன்பு செய்வள் எனவும்; கற்றோரும் மற்றோரும் போற்றுவ தன்றியும் அரசு அவன் வழியே தானியங்கு மென வும்; கல்வி யறிவான் மேம்பட்டவன் நாற்பாலுள் கீழ்ப்பாலனு யினும் போற்றப் படுவான்' எனவும் ஆரியப் படை கடந்த நெடுஞ் செழியன் கூறுமாற்றையறிதல் வேண்டும். அன்றியும்,

"கற்கை நன்றே கற்கை நன்றே
பிச்சை புகினும் கற்கை நன்றே"

எனவும்,

"கற்க கசடறக் கற்பவை"

எனவும்,

"எண்ணென்ப வேனையெழுத் தென்ப இவ்
கண்ணென்ப வாழு முயிர்க்கு"

என்வும் கூறப்பட்டுள்ள வாற்றையுமறிக.

பண்டைத் தமிழர் தம் வாழ்விலேயே அறம் மிளிர வாழ்ந் தார்கள். அவர்கள் வாழ்வை அகவாழ்வு, புறவாழ்வு என இரு பகுதிகளாகப் பிரிக்கலாம். ஒருவனும் ஒருத்தியும் கலந்து வாழும் அகவாழ்விலேயும் அறம் மிளிர்ந்தது. அவர்களுக்குள் ஓதல், காவல் முதலிய பிரிவுகள் இருந்தன. அக்காலங்களில் ஆண்மக்கள் தங்கள் வினைவழிச் செல்லாது தங்காதலியரைக் கருமணியிற் காத்து அறம் வழுவினர் அல்லர். ஒருவருங்காணுத் தனிமையிற் கலந்ததனால் அவர்களை நீங்கியும் சென்றாரிலர். தொல்காப்பியர் காலத்தேதான் திருமணஞ் செய்தல் தோன்றி யுள்ளது.

"பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர்
ஐயர் யாத்தனர் கரண மென்ப"

எனத் தொல்காப்பியர் கூறுவதால் இதனை அறியலாம். காம வயப்பட்ட கயவர்கள் அறம் மறந்து இன்பமொன்றே பொரு ளெனக் கொண்டு சென்றவழி அவர்களைத் திருத்தவும், மகளிர் கற்பு நிலையைக் காக்கவும் சான்றோர்கள் கரணமாகிய திரு மணத்தை ஏற்படுத்தினர் என்பது புலனாகின்றது. இதனால் அக வாழ்வில் அறம் மிளிர்ந்தமையை அறியலாம்.

இனி, புறவாழ்வகத்தே செயலின் அவர் தம் வாழ்வு சுற்றத் தார்களுக்காகவும், நாட்டிற்காகவுமே அமைந்துள்ளமையை அறியலாம். புலவர் பெருமக்கள் வள்ளல்களைச் சென்று பாடிப் பெற்றுவரும் பரிசில்களை ஒருவர்க்கும் கொடாது தாம் மட்டுமே துய்க்க வேண்டு மென்றோ, சிலருக்குத்தான் கொடுக்க

மென்றே நினையாது எல்லோருக்கும் கொடுத்துப் பாதுகாத்து வந்தார்கள்; பண்டை நூல்கள் வாயிலாகப் பெறப்படுவது இது வாம். ஒன்று மட்டும் இங்கே காண்பாம்.

"நின்னயந் துறைநர்க்கும் நீநயந் துறைநர்க்கும்
பன்மாண் கற்பினின் கிளைமுத லோர்க்கும்
கடும்பின் கடும்பசி தீர யாழநின்
நெடுங்குறி யெதிர்ப்பை நல்கி யோர்க்கும்
இன்னோர்க் கென்னாது என்னொடுஞ் சூழாது
வல்லாங்கு வாழ்து மென்னாது நீயும்
எல்லோர்க்குங் கொடுமதி மனைகிழ வோயே!
பழந்தூங்கு முதிரத்துக் கிழவன்
திருந்துவேற் குமணன் நல்கிய வளனே."

ஈண்டு, குமணனைப் பாடிப் பரிசில் பெற்ற பெருஞ்சித்திரனார் அது கொண்டு தான்மட்டும் வாழ நினையாது எல்லோர்க்கும் கொடுத்து வாழ எண்ணுவதையும், அதற்குத் தம் மனையாளையே யேவுவதையும் நாம் எண்ணிப் பார்த்தல் வேண்டும். ஒருவன் தான் விரும்பி வாழுகின்றவர்களுக்குக் கொடுத்தலே இயல்பு. அவ்வாறு செய்யின் அது அவனது தன்னலங் கருதியதே யன்றி வேறொன்று மன்று. தான் செய்யும் செயல் தன்னலங்கருதாத தாக இருக்க வேண்டுமென்பதை அறிவுறுத்தவே கவிஞர், 'நின்னயந்துறைநர்க்கும்' எனத் தன்னை விரும்பி வாழுமவர் களுக்கு முதலில் கொடுக்கச் சொல்லுகின்றார். பிறர் நலம் பேணும் பெற்றிமை தோன்ற, 'நின்னயந்துறை நர்க்கும்' எனக் கூறியவர், இல்வாழ்வானின் கடமையை உணர்த்து மாற்றானும், செல்வத்துப் பயன் ஈதலே என்பதை உணர்த்து மாற்றானும் தன்னைச் சார்ந்தும், சாராதும் வாழுமவர்கட் கெல்லாம் கொடு வெனக் கூறுகிறார்.

அன்றியும் போர் நிகழுமுன் போரின்றியே அமைதியை நிலைநாட்டியும், போரே நேரின் அதனைக் களம் சென்றேனும் தடுத்தும் வாழ்ந்துள்ளமையை ஒளவையார், கோவூர் கிழார் போன்ற பெரும் புலவர்களின் செயல்களான் அறியலாம். பண்டை நாட்களில் பொதுமக்களனைவரும் போர் முறைகளிற் சிறந்திருக்குமாறு பயிற்சி யளிக்கப்பட்டிருந்தார்கள். போர்க் காலங்களில் எல்லோரும் போருக்குச் சென்றார்கள். போர் அற நெறியுடன் நிகழ்ந்தது. போர் தொடங்குவதற்கு முன் போர் செய்யவரும் அரசன் பகை நாட்டில் சென்று முதலில் பசுக்களைக் கவர்ந்து வருவான். பின்னர் 'பார்ப்பனரும், பெண்களும், நோயாளர்களும், தென்புலத்தார் கடனிறுத்தற்கு மக்களைப் பெறாதவர்களும் நாங்கள் விரைவில் போர் தொடங்குவதால்

உங்களுக்குப் பாதுகாப்பான இடத்தை அடையுங்கள்' எனப் பகைவர் நாட்டில் சென்று பறையறைந்த பிறகே போர் தொடங்குவான். இங்கே போரிலும் அறத்தைக்காண முடிகின்றது. போரில் பெற்ற பொருள்களைக் கவர்ந்து செல்லாது பாணர்களுக்கும், புலவர்களுக்கும் கொடுத்து அவர்களை மகிழ்வித்துள்ளார்கள்.

இவ்வாற்றான் பண்டைத் தமிழர் வாழ்வு அறங்கலந்த தொன்றாகவே இருந்துள்ளமை அறிந்தின்புறற் பாலது. இயற்கையிலேயே அவர்கள் வாழ்வில் அறம் தோய்ந்து கிடந்தது. ஆகவேதான் பண்டைத் தமிழர் வாழ்க்கையைப் பெரியோர்கள் அறவாழ்வாகக் குறித்தார்கள். வலக்கை கொடுப்பதை இடக்கை அறியக்கூடா தென்பது ஏசு தர்மம். ஆனால் ஈண்டோ நாடொறும் அறம் செய்யுமவர்கள்தாம் அறம் செய்கின்றார்களா? இல்லையா? என்பதை அறிய முடியாத வகையில் வாழ்க்கையொடு ஒன்றியுள்ளது அறம்.

இதுகாறும் அறம் செய்ய வேண்டுமெனவும், அறம் பல்வேறு வகைப்பட அமைந்துள்ளது எனவும், பண்டைத் தமிழர் அறவாழ்வே வாழ்ந்தார்கள் எனவும் கூறப்பட்டதல்லாமல் அறமாவது யாது எனக் கூறப்படவில்லை. 'அறநெறியான் வந்த பொருளைத் தக்கார்க்கு உவகையோடு கொடுத்தலே' அறமாகும் எனவும், 'பழியஞ்சிப் பகுத்துண்டலும், அறிவுடைமையும்' எனவும் கூறுநிற்பர் பரிமேலழகர். இவ்வாற்றான் நோக்கின் பொருளுடையான் மட்டுமே அறம் செய்யமுடியும் எனவும், அதுவும் அறநெறியான் வந்ததாயிருப்பின் மட்டுமே முடியுமெனவும், பொருளைக் கொடுப்பினும் அதனைப் பெறுவோர் தகுதியுடையவராய் இருப்பின் மட்டுமே அறமாகும் எனவும், விரும்பிக் கொடுத்தால்தான் அறமாகும் எனவும் ஏற்படுகின்றதல்லவா? ஆயின் எல்லோரும், பொருள் இல்லாதாரும் எங்ஙனம் அறம் செய்யமுடியும்? அதனையும் காண்போம். பிறர்க்குதவலே அறம் என்பதை உணர்ந்த பாரதி,

நிதிமிகுத்தவர் பொற்குவை தாரீர்!
நிதிகுறைந்தவர் காசுகள் தாரீர்!
அதுவு மற்றவர் வாய்ச்சொல் அருளீர்!
ஆண்மை யாளர் உழைப்பினை நல்கீர்!
மதுரத் தேமொழி மாதர்கள் எல்லாம்
வாணி பூசைக் குரியன பேசீர்!
எதுவும் நல்கியிங் கெவ்வகை யானும்
இப்பெருந் தொழில் நாட்டுவம் வாரீர்!

எனக் கூறிப் போந்தார். நல்லனவற்றைச் செய்க என வாயாற் கூறுவதே அறம் என்றார் அப்பெரியார்.

உயிரிகள் தம் வாழ்நாள் முழுவதும் இயங்கிக் கொண்டே இருத்தல் இயல்பு. அவ்வியக்கங்களால் நல்லனவும், தீயனவும் நேரலாம். நல்லன நேருமாறு இயங்குவதே பகுத்துணரும் ஆற்றல் படைத்த உயிர்களின் இயல்பாம். ஆயினும் மனித இயல்பு தவறு செய்தல் நிறைந்த தொன்றேயாம். ஆகவே நல்லன செய்தல் அரிதாகவும் அமையுமென்பது ஒருதலை. நல்லன செய்ய முடியாதவன் தீயன செய்யாமலாவது இருக்கலாமன்றோ? இதுவுமே அறமாகுமென்பது பண்டையோர் கொள்கை. இதனை,

> "நல்லது செய்தல் ஆற்றீ ராயினும்
> அல்லது செய்தல் ஓம்புமின் அதுதான்
> எல்லாரும் உவப்ப தன்றியும்
> நல்லாற் றுப்படூஉம் நெறியுமா றதுவே"

என நரிவெரூஉத் தலையார் என்ற ஒரு புலவர் கூறுகிறார். மக்கள் இறக்கும் பொழுது நல்லன செய்தோம் இலோமென்று வருந்ாது நல்லன செய்தல் வேண்டுமெனவும், அது செய்ய முடியாதார் நல்லன செய்வோர்க்கு உறுதுணையாயிருத்தல் வேண்டுமெனவும், அதுவும் செய்ய இயலாதார் அல்லன செய்தலையாயினும் நீக்க வேண்டுமெனவும், மற்றையோரெல்லாம் அதற்கு உவப்பது மட்டுமன்றி அதுதானே அறம் என்பதையும் உணருவார் எனக்கொளக் கூறியிருப்பது அறிந்தின் புறத்தக்கது.

பண்டைத் தமிழர் வாழ்வு அறவாழ்வாகவே இருந்தது எனக் கூறப்பட்டது. அவ்வாழ்வு நன்மை செய்ததாலமைந்ததா? அன்றித் தீமை செய்யாமலிருந்ததாலமைந்ததா? என வினவலாம். தீமை செய்யாமலிருந்ததால் அமைந்ததாயின் அது இழிந்த தொன்றே எனக்கூறிவிடலாம். நன்மை செய்ததால் அமைந்தது என்றால் தான் சிறந்தது. நாம் சிந்தித்துச் சிந்தித்துக் கொடுக்கும் பெருமையையும் கொள்ளத்தக்கது. அவர்கள் வாழ்வு நன்மை செய்த தாலமைந்ததே யென்பது அவர்களால் நாம் பெற்றிருக்கும், ஆயுந்தொறும், ஆயுந்தொறும் இன்பந்தரும் கருவூலங்களும்; அந்நாள் ஒழுங்கு, முறைமை இவற்றைத் தன்பால் கொண்டு மிளிரும் கலைச்செல்வங்களும் இன்று நம்மால் போற்றப்படுவதொன்றே சான்றாகும். அன்றியும் அவர்கள் வாழ்வு மாற்றார் அழிய வேண்டுமென்ற எண்ணமோ, தான் மட்டும் வாழ வேண்டும் என்ற எண்ணமோ இன்றி எல்லோரும் வாழ வேண்டுமென்ற மாசிலாத் தன்மையாலும் மலர்ந்திருந்தது. 'எல்லோரும் இன்புற்றிருக்க நினைப்பதுவே யல்லாமல் வேறொன்

. . ையன் பராபரமே’ என்றார் தாயுமானவரும். இம்மாசிலாத் தன்மையையே திருவள்ளுவர் அறமாக, அறத்தின் முதற்படியாகக் கூறுதல் மிகமிக உயர்ந்தது. மனத்தகத்தே மாசின்றிச் செய்யும் சிறு செயல்கூட அறமாகும் எனக் கூறுகின்றார். அன்றியும் மாட்சிமைப்பட நீராடிப் புறக்கோலம் செய்து மனத்தகத்தே மாசுகொண்டு செய்யும் அறங்களோ, அன்றி, புகழ் பெறுதற்காகச் செய்யப்பெறும் அறங்களோ பயனற்றன என்பதை, ‘ஆகுலநீரபிற’ - என அழகாகக் கூறுகின்றார். என்ன கூறியும் அமையாமையால் அவர் கூறுமாற்றையே கூற விழைகின்றேன்.

‘மனத்துக்கண் மாசில னாதல் அனைத்தறன்
ஆகுல நீர பிற’

அறஞ்செயற்குத் தனி முயற்சி வேண்டும், தனி இடம் வேண்டும், பெண்ணாசையை ஒழித்தல் வேண்டும் என்றெல்லாம் கூறுவோரிருக்க; தமிழ் மக்களாகிய நாமோ அறம் செயற்கு இல்நிலையொன்றே போதுமானது. ஏன்? பொருந்துவதானது எனக் கூறுகிறோம். பற்றுக் கோடின்றித் துறந்தார்க்கும், வாழ்தற்கு வேண்டும் பொருளற்ற வறியவர்க்கும், தன் பால் வந்து இறந்தார்க்கும் கைம்மாறு கருதாது உதவ முடிவது இல்லிருந்து வாழும் ஒன்றினால் தான். ஆகவே இல்லறம் என்னும் நல்லறம் நடாத்தத் தலைப்படுவான் இல்லிருந்து பேணும் மாண்புடையளான வாழ்க்கைத் துணையைப் பெறுகிறான். அந்நங்கையும் கடமையுணர்ந்து தன்னையும், தற்கொண்டானையும் பேணுதலன்றி, விருந்தினர்களையும் காத்து வருகிறாள். மனத்துக் கண் மாசு இலாமையே அறம் எனவும், குற்றமின்றி வரும் பொருளே அறத்தான் வரும் பொருள் எனவும் கருதுகின்றார்கள். இதுவே பண்டைத் தமிழர் வாழ்வு. இவ்வாறு வாழ்ந்திருந்தமையாற்றான் பண்டைத் தமிழர் சிறந்திருந்தார்கள். நாமும் வள்ளுவர் கூறியாங்கு வாழ்ந்து வாழ்வில் சிறப்போம்.

---

## ஒண்பொருள்

[நாஞ்சில், திரு. கா. கணபதி]

முறைமைசேர் கலைகள் கற்றல் மூதறி வுடையோர்ச் சேர்தல்
அறமுணர் சிந்தை கொண்டு அன்பினில் தோய்ந்த வாழ்வும்
திறமுணர் கல்வி கேள்வி தீதறு செல்வம் ஈகை
உறவின ருதவி யெல்லாம் ஒண்பொரு ளொன்று லேயாம்.

# பலநிலை உலகம்

[சாலை திரு. இளந்திரையன்]

உலகக் காட்சி உயர்பெருங் காட்சி !
கலகக் காட்சியாய்க் காண விழைந்தால்
கலகக் கலகக் காட்சியாய் விரியும் ;
நலமுறும் ஒற்றுமை நயமே விழைந்தால்
ஒற்றுமை யேஓர் உருவாய் விரியும் !
குற்றமே காணக் குறுகுவோர் கண்ணில்
குறைகளின் உறைவிட மாயே தோன்றும்
நிறைகளின் பெருமை நினைவோ டுறுகில்
உலகெலாம் நிறைந்த உயர்வாய்த் தோன்றும் ;
பலபல பண்புகள் கலகல நகைக்கும் !
வேதனை யேஇவ் உலகென நினைத்தால்
காதலின் முறிவும், கணவன் மனைவி
மோதலின் விளைவும், முழுப்பசி பிணியும்,
சாதலின் வாயிலில் தத்தளிக் கின்ற
கண்ணீர்க் காட்சியும், கனவின் வீழ்ச்சியும்
தண்ணீர் பட்ட பாடாய் விரியும் !
இன்பமே உலகென அன்புடன் நினைத்தால்
மன்பதை உயிராம் மாண்பெருந் தாய்மையும்,
தவழும் குழந்தைத் தனிப்பே ரழகும்,
உவகை விரிக்கும் உயர்பே ரொளியாம்
மனைவியின் கனிவும் மற்றவர் உறவும்
தினையெனத் தோன்றித் திரைக்கட லாகும் !
ஆதலால் எண்ணி அறிய தொன்றுள(து)
ஈதுதான் உலகென வரைத லியலாது:
நெஞ்சம் இனிதெனின் நிறைவே எல்லாம் ;
கொஞ்சம் கசந்தால் குறைவே எல்லாம் !
நினைவின் வழியோர் நெருக்கச் சிறுவழி
தினையின் அளவும் திரும்புத லாகா(து) !
இப்புறம் சாய்ந்தால் இடுகா(டு) இன்னல் ;
அப்புறம் வளைந்தால் அமுதமாத் தீங்கடல் !
இதுவும் அதுவும் இருபுறம் அணையப்
பொதுநல வழியில் பொறுமை நெறியில்
செல்வோர் வீழார் ; சீரும் சிறப்பும்
வெல்வோர் அவரே ! வீற்றிருந் துலகை
உணர்வோர் அவரே ! உறுதியில் நிற்போர்
குணமே உலகின் குறைநிறை எல்லாம்
சரியாய்க் காணும் ;—புகழின்
விரிவாய்ப் பெருகும் வியனுல கினிலே !

(செல்வி சிலம்பு, நடு, பரல் எ, நஉஅ ஆம் பக்கத் தொடர்ச்சி)

இத்தகைய குறைகள் நீங்கி இலக்கியம் படிப்போர்க்குப் பயன்பட வேண்டுமென்ற நோக்கத்துடன் எழுந்ததுதான் 'இலக்கியச் சொல்லகராதி'. இதைத் தொகுத்தவர் சுன்னாகம் அ. குமாரசுவாமிப் பிள்ளை அவர்களாகும். தமிழ்ச் சொற்களைப் பெயர், வினை, இடை, உரி என்ற நான்காகப் பிரிப்பர். அவற்றில் இவ்வகராதியில் இலக்கியத்தில் வரும் பெயர்ச்சொற்களே பெரும்பாலும் வந்துள்ளன. வினைச் சொற்களுக்கு ஈடாகத் தொழிற் பெயர்கள்தாம் தரப்பெற்றுள்ளன. இடைச் சொற்கள் தரப் பெறவில்லை. உரிச்சொற்களும் அரியனவாய திரிசொற்களும் சிலசில வந்துள்ளன.

நிகண்டு நூல்கள், அபிதானங்கள், பாரதம், இராமாயணம், கலித்தொகை, சிந்தாமணி முதலிய இலக்கியங்களிலுமிருந்து புதியனவாகப் பல சொற்கள் இவ்வகராதியில் சேர்க்கப்பட்டுள்ளன. இவ்வாறு ஆயிரத்தைந்நூற்றுக்கு மேற்பட்ட சொற்கள் சேர்க்கப்பட்டு அவற்றின் முதலிலே நட்சத்திரக்குறி கொடுத்து வேறுபடுத்திக் காட்டப்பட்டிருக்கின்றது. சுருங்கக் கூறின் இவ்வகராதி சிறந்த முறையில் பரிசோதிக்கப்பெற்றுத் தொகுக்கப் பெற்றிருக்கின்றது.

இது சென்னை வித்தியாநுபாலன யந்திரசாலையில் அச்சிற் பதிப்பிக்கப்பட்டது. இதனுடைய அளவு $20\frac{1}{2} \times 12\frac{1}{2}$ செ. மீ. 18;205;5 (228) பக்கங்களையுடையது. இதன் விலை ரூ. ஒன்று.

## 4 எ. சொற்பொருள் விளக்கம் (1924)

இச் 'சொற்பொருள் விளக்கம் என்னும் தமிழகராதி' என்ற நூலை இயற்றியவர் யாழ்ப்பாணம் பருத்தித்துறையைச் சார்ந்த பிரம்மஸ்ரீ ச. சுப்பிரமணிய சாஸ்திரிகள் ஆவர். அக்காலத்தில் வழங்கிய அகராதிகள் தமிழ்நடைக் கிணங்காத சொற்களையும் பொருள்களையும் மிகுதியாகக் கொண்டிருந்ததால் அவை உருவத்தால் அழகுள்ளனவாகவும் பெரியனவாகவும் விளங்கியனவே தவிரப் பயனுள்ளதாய் விளங்கவில்லை. எனவே, தமிழ், ஆரியம் என்னும் இரண்டையும் வளப்படுத்தும்பொருட்டு இப்புத்தகத்தை இயற்றி வெளியிட்டதாக முகவுரையில் ஆசிரியர் குறிப்பிடு

எனவே, இவ் வகராதி அதுவரை வெளிவந்த அகராதிக ளொன்றையும் பின்பற்றுது சூடாமணி, பிங்கலம் முதலிய நிகண்டு களையும் சங்கப் புலவர்களாற் செய்யப்பட்ட நூல்களையும் உரை களையும் காப்பியங்களையும் பின்பற்றலாயிற்று. இப் புத்தகம் உருவத்தாற் சிறியதாயினும் தமிழிலுள்ள சொற்களையும் தமிழில் வழங்கத்தக்க வடசொற்களையும் அவற்றிற்குரிய உண்மையான பொருளையும் அமைத்திருக்கின்றது. எவரும் உணர்ந்துகொள் ளுதற்கேற்ற செந்தமிழ் நடையி லெழுதப்பட்டது. ஐயந்தரக் கூடிய பல பொருள்களுக்கு ஆங்காங்கே எடுத்துக்காட்டுக்களும் மேற்கோட் குறிப்புக்களும் அமைந்துள்ளன. சுருங்கக் கூறின் இன்றியமையாத சொற்களுக்கு மட்டும் பொருள்கூறிப் பயன் பெரிதும் நல்குவதாய் விளங்கலாயிற்று.

இந்நூல் யாழ்ப்பாணம் கலாநிதி அச்சியந்திரச்சாலையில் 1924 இல் பதிப்பிக்கப்பட்டது. இதன் அளவு 22 × 14 செ. மீ. 6 + 288 (294) பக்கங்களையுடையது. இதன் விலை ரூபா மூன்று. இவ் வகராதியில ஏறத்தாழ 15,000 சொற்களுக்கு மேல் பொருள் விளக்கப்பட்டுள்ளன. சொற்களையும் பொருள்களையும் இனிது விளக்குதலாற் சொற்பொருள் விளக்கமென்னும் பெயர்த் தாயிற்று என்று கூறுகிறார் ஆசிரியர்.

## 4 ஏ. தற்கால தமிழ்ச்சொல் லகராதி (1925)

இத் தமிழகராதியை இயற்றியவர் பவானந்தம் பிள்ளை என்பவர். இவருடைய இயற்பெயர் சரவணபவானந்தம் பிள்ளை என்பதாகும். சென்னையில் பிறந்த இவர் தம் வாழ்நாளைக் காவல் துறையில் பணியாற்றுவதிலேயே கழித்தார். தமிழ்ப்பற்று மிக்கு உடைய இவர் தமிழ் இலக்கிய இலக்கண நூல்களைப் பதிப்பிக்க எண்ணிப் 'பவானந்தர் கழகம்' என்ற ஒன்றை நிறுவினுர். இவற்றுள் குறிப்பிடத்தக்கன தொல்காப்பியப் பொருளதிகாரம், யாப்பருங்கல விருத்தியுரை, இறையனுர் அகப்பொருள் உரை, பேரகத்தியத் திரட்டு, நன்னூல் காண்டிகை உரை என்பவை ஆகும். இவர் 1932 இல் இவ் வுலகவாழ்வை நீத்தார். இலக்கிய இலக்கணப் பயிற்சி மிக உடைய இவர் தமிழ்மொழியில் பற்பல அகராதிகள் இருப்பினும் அவையனைத்தும் பள்ளிப் பிள்ளை களுக்கும் பிறர்க்கும் எளிதில் பயன்தருவன அல்ல என்ற காரணத்தால் இவ் வகராதியை இயற்றினுர்.

பிற அகராதிகளின் விலை ஏற்றமும் உருவத் தோற்றமும் எல்லாரும் எளிதில் பெற்றுப் பயன்படுத்தக்கூடியனவாக அமைய வில்லை. எனவே வீணுக விரித்தும், மிகச் சுருக்கியும் பயனற்ற

தாக்காமல் யாவரும் நயமாக வாங்கிப் பயன்படுத்தும் பொருட்டு இவ் வகராதியைத் தயாரித்ததாக ஆசிரியர் கூறுகின்றார். இயன்றவரையில் சங்க இலக்கியச் சொற்களையும் வழக்கிலுள்ள சொற்களையும் சேர்த்துள்ளார். பொருள்களும் எளியமுறையில் நல்ல தமிழில் சிறுவர்கள் உணர்ந்துகொள்ளும் வகையில் கொடுக்கப்பட்டுள்ளன. அவை ஆசிரியரின் சொல் வளத்தைக் காட்டுகின்றன.

இவ் வகராதி சென்னை மாக்மில்லன் அண்டு கம்பெனியாரால் வெளியிடப்பெற்றது. முதற் பதிப்பு 1925 இல் வெளியாகியது. அதற்கடுத்த பதிப்புக்கள் 1934, 1938, 1943, 1952 ஆகிய ஆண்டுகளில் வெளிவந்துள்ளன. இதன் அளவு 19 × 13 செ. மீ. 4 + 377 (381) பக்கங்களையுடையது.

இவ் வகராதியில் இருபத்தையாயிரத்துக்கு மேற்பட்ட சொற்களுக்குப் பொருள் தரப்பட்டுள்ளன. இத்துடன் பின்னிணைப்பில் தமிழ் ஆண்டுகளின் பெயர்கள், திங்களின் பெயர்கள், இராகு, குளிகை முதலிய காலங்கள், நட்சத்திரங்களின் பெயர்கள், இலக்கினங்களின் பெயர்கள், நாணய முறை, அளவை முறை ஆகிய கொடுக்கப்பட்டுள்ளன. நல்ல முறையில் அச்சிடப்பெற்று நல்ல கட்டடமும் செய்யப்பெற்ற ஒரு நல்ல அகராதி என இதைக் கூறலாம். இதன் விலை ரூ 5. இது கிரேட் பிரிட்டனில் அச்சிடப்பட்டது.

## 4 ஐ. இளைஞர் தமிழ்க் கையகராதி (1928)

அகராதிகள், தெரியாத சொற்களைப் படிக்கும்பொழுது அவற்றின் பொருளைத் தெரிந்துகொள்வதற்காகவே ஆக்கப்பெறுகின்றன. ஆனால் அவை அளவிலும் தோற்றத்திலும் பெரியதாக இருந்தால் சிறுவர் முதல் பெரியோர் வரை யாராலும் கையில் எடுத்துச்செல்ல முடியாது. இந்நிலையை எளிதாக்கவே ஆங்கிலேயர்கள் கையகராதி என்ற ‘பாக்கட் டிக்சனரி’யை அச்சிடலாயினர். அதைச் சட்டைப்பையில் எடுத்துச்சென்று தேவையானபொழுது உடனே பயன்படுத்திக்கொள்ளலாம். தமிழிலும் பெரிய பெரிய அகராதிகள் வெளிவரலாயினவே தவிரக் கையகராதியைப்பற்றி யாரும் எண்ணாத காலத்தில் இந்த இளைஞர் தமிழ்க்கையகராதி 1928 இல் வெளிவந்துள்ளது. இது பருமனில் குறைவாகக் காணப்படுகின்றதே அல்லாது அளவில் பிற அகராதிகளை ஒத்தே இருக்கின்றது

இவ் வகராதியைத் தொகுத்தவர் திரு. மே. வீ. கோபாலப் பிள்ளை அவர்கள். வேப்பேரியிலுள்ள பெப்ரீசியசு

உயர்நிலைப் பள்ளியின் தலைமைத் தமிழாசிரியராகப் பணியாற்றிய பொழுது இதைத் தொகுத்துள்ளார். மாணவர் கற்கும் தமிழ் இலக்கியங்களில் வரும் கடின சொற்களின் பொருள்களை அவர்களே அகராதியினுதவிகொண்டு அவ்வப்போது அறிந்து கொள்ளும்படி சிறிய வடிவில், குறைந்த விலையில் இவ் வகராதியைத் தொகுத்து வெளியிட்டுள்ளார்.

சென்னை இந்தியன் பப்ளிஷிங் ஹவுஸ் லிமிடெட் இதை வெளியிட்டது. முதற்பதிப்பு 1928 இல் வெளிவந்தது. 17×13 செ. மீ. அளவுடையது. 4+160 (164) பக்கங்களையுடையது. இதில் பத்தாயிரத்துக்கு மேற்பட்ட சொற்களுக்குப் பொருள் காணப்படுகின்றன. சில இடங்களில் சொற்களின் பொருள்கள் ஆங்கிலத்திலும் தரப்பெற்றுள்ளன.

## 4 ஒ. மணி அகராதி (1934)

நிகண்டுகள் ஒவ்வொரு பொருளின் பல பெயர்களையும் பாட்டுவடிவத்தில் தந்தன. அகராதிகளின் ஒவ்வொரு சொல்லின் பொருள்களைக் கூறி, அச்சொற்கள் அகரவரிசை முறைப்படி வைக்கப்பெற்றன. வீரமா முனிவர்க்குப் பிறகு அகராதிகள் பெருகலாயின. அவை பெரும்பாலும் சொற்களுக்குப் பொருள் தருவதோடு அமைந்துவிட்டன. ஒரு சொல் தரும் பல பொருள்களை மட்டும் தெரிவித்தன. ஆனால் ஒரே பொருளுள்ள பல சொற்களை அறியவேண்டுமாயின் அவை பயன்படா. எனவே இக்குறையை ஓரளவு அகற்றுவதற்கு எழுந்ததுதான் மணி அகராதி.

இதை இயற்றியவர் திரு சா. வை. ஸ்வாமி ஐயர் ஆவர். இதில் ஒவ்வொரு சொற்களும் தலைப்புக்களாக எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளன. எடுத்துக்காட்டாக அம்பு, சங்கு, நீர், யானைபோன்ற தலைப்புக்கள் உள்ளன. இவை அகரவரிசை முறையில் வைக்கப்பெற்றுள்ளன. இவற்றின்கீழ் இப்பொருளை விளக்கக்கூடிய பல சொற்களும் அகரவரிசை முறையில் தரப் பட்டுள்ளன. இவ் வகராதியில் மொத்தம் 110 தலைப்புக்கள் உள்ளன. இதிலுள்ள தலைப்புக்களின் பெயர்கள் குறைந்தது 15 சொற்கள் முதல் 500 சொற்கள் வரை காணப்படுகின்றன.

(தொடரும்)

# சமயங்களின் இசைவுகளும் சுவேத முனிவரர் விளக்கமும்

[வித்துவான் மாவை. துரை. பழநி மகாதேவன்]

யாதாமொரு சமயச் சார்புடையோர் தம் சமயக்கடவுளே முழுமுதற் கடவுளெனவும், உண்மையானவர் எனவும், தம் சமயக் கோட்பாடுகளே சிறந்தவை எனவும் தருக்கிக் கூறல் அறிவுக்கொவ்வாக் கூற்றாகும். ஏனெனில், "ஒள்ளிய செம் பொருள் ஒன்றே; உண்மையும் ஒன்றே; ஆலயமும் ஒன்றே" எனப் பரந்த சமயநோக்குடையவர் எவரும் பகர்வர்.

சைவராம் நம்மவர் இறைவனைச் சத்து என்னும் செம் பொருள் என்று கூற, ஆருயித்துகள் அர் என் தின்ஏத் (Yr Hen Ddihenydd) என்னும் பழம்பொருள் என்று கூற, எகிப்தியர் நுக் பு நுக் (Nuk pu nuk) என்னும் 'என்றும் உள்ளதில் உள்ளது' என்றும் கூறுகின்றனர்.

அத்தீனிய மக்கள் தம் கடவுளைச் சூபிதர், மினர்வா, அப் போலன்[1] என முத்திறமாயும், எகிப்தியர் ஆசிரிசன், ஈசன், ஒருசன்[2] எனவும், இந்துக்கள் பிரமன், மால், உருத்திரன் எனவும், ஒன்று ஆக்கிய இரண்டு, இரண்டாலாய மூன்று எனச் சீனரும்; "முக்கூற்று மேம்பொருள்" எனப் பௌத்தரும் கூறு கின்றனர்.

இந்து சமயத்தினரும், எகிப்தியரும் இறைவனின் முக் கூற்றுத்திறனை ஆண் தத்துவம், பெண் தத்துவம், மகத்தத்துவம் எனப் பண்டைச் சீனநாட்டு மதக்கோட்பாட்டிற் காணப்படுவது போன்றே கூறினர். பித்தகோரசு (Pythogoras) என்னும் அத்தீனியத் தத்துவ அறிஞரும் முழுவல்லமையை உடைய ஒன்றை மோனத் (Monad) அல்லது தந்தைக்கூறு எனவும், அமைதியுடைய ஒன்றைத் தூயத் (Duad) அல்லது தாய்க்கூறு எனவும், பயன் அல்லது இருதிறக் கூற்றின் நன்மை எனவும் உரைத்தனர். சைவசித்தாந்தக் கொள்கையில் சோமாசுகந்த வடிவத்தைச் சிவன், அம்மை, முருகன் ஆகியோர் அடங்கியது என்கின்றோம். பண்டை மைய அமெரிக்க நாட்டினர் சுகிலா (Chuguila), காட்டிலா (Catuilla), இன்டிலாபா (Intyllapa) என மூன்றாக இறைத் தத்துவத்தைக் கூறினர். அவர்கள் டாங்கு டாங்கா என்ற உருவத்தை வழிபட்டனர் எனவும், அதை மூன்றமைந்த ஒன்று எனவும், ஒன்றில் அமைந்த மூன்று

1. Jupiter, Minerva, Appollo. 2. Osiris, Isis, Orus.

எனவுங் கூறினர். யுகாதனர் (Yucatans) என்னும் இனத்தினர் நம்நாட்டு மக்கள் வணங்கும் யானைமுகப் பிரானையொத்த வடிவ முடைய கடவுளை வணங்குகின்றனர்.

அறிஞர் சுவேத முனிவரர் (Swedenborg) நால்வகைச் சமயங்கள் பண்டு இவ்வுலகில் நிலவிவந்தன என்றும், அந்நான்கும் முறையே கிரேத, திரேத, துவாபர கலியுகங்களில் மேம்பாடடைந்திருந்தன என்றும் கூறுவர். விவிலிய நூலுள் ஆதியாகமத்தின் (Genesis) தொடக்கப் பகுதியில், பண்டைய மக்கள் தோற்றத்தின் வரலாறு கூறப்படுகின்றது. பூமியில் மனிதன் தோன்றிய வரலாறு மேற்கூறிய விவிலிய நூல் ஆதியாகமப் பகுதியை ஒத்த பல நாட்டுக் கதைகளால் விவரிக்கப்படுகின்றது. உருக்கு வேதத்தின்கண், ஆதியாகமப் பகுதியில் காணப்படும் படைப்பு வரலாற்றை ஒத்த கருத்துக்களைக் கொண்ட சில பாடல்களைக் காணலாம்.

மேலும் விவிலிய நூலுட் கூறப்படும் கடல்கோள் அல்லது வெள்ளச் செய்தி (Deluge)யே பல நாடுகளிலும் கூறப்படுகின்றது. கி. மு. 6ஆம் நூற்றாண்டினது எனக் கூறப்படும் சதபதப் பிராம்மணத்தில் முதன்முதலாகக் கடல்கோள் குறித்த செய்தியொன்று காணப்படுகின்றது. மாபாரதம், மச்சபுராணம், அக்கினி புராணம் ஆகிய நூல்களிலும் இச்செய்தி காணப்படுகிறது. பெருங் கடல்கோளில் பிழைத்தவனாய நோவாவும், மனுவும் ஒருவரேயாகல் வேண்டும். மனு, நு, நோவா ஆகிய மூன்றும் ஒருவரின் பெயர்களேயாம். இந்துக்களின் பாகவத புராணத்தில் கூறப்படும் வெள்ளச் செய்தி விவிலிய நூல் வெள்ளச் செய்தியைப் பெரும்பாலும் ஒத்துள்ளது.

பழங்காலங்களில், இடையிட்டனவாகச் சில கடல்கோள்கள் நிகழ்ந்து, தென்னிந்தியாவை அடுத்திருந்த பெருநாடொன்றினை விழுங்கியதாகத் தென்னிந்திய மக்கள் நம்புகின்றனர். இந் நம்பிக்கைக்குச் சான்றாகச் சிலப்பதிகாரம், இறையனார் அகப் பொருளுரை ஆகிய இலக்கிய நூல்கள் விளங்குகின்றன.

விவிலிய நூல் பழைய ஏற்பாட்டிற் காணப்பெறும் உயிர்ப் படைப்பு, மனிதன் வீழ்ச்சி, கடல்கோள் ஆகிய செய்திகளைப் பண்டைய பிரித்தன் நாட்டுத் துரூயித்துகளின் நூல்களும் கூறுகின்றன. பிரித்தானியா காட்சிச்சாலையில் உள்ளதாகிய "இறந்தார் வரலாறு" (Book of the Dead) கி. மு. 5000 இல் எழுதப்பெற்ற நூலாகும். விவிலிய நூலிற் கண்ட கடல்கோள் நிகழ்ச்சிகளைக் குறித்தும் அது பேசுகின்றது. வடஅமெரிக்கர்கள் யூதர்கள் சமயத்தை ஒத்த சமயமொன்றைப் பின்பற்றினர் எனவும், அச்

சமயத்தாரின் சடங்குகள், நியமங்கள் போன்றவற்றை அநுட்டித்தனர் எனவும், அவர்கள் சுன்னத்து செய்தல் போன்ற வழக்கங்களை மேற்கொண்டிருந்தனர் எனவும், யூதருக்குரிய சமய சட்டங்களுக்குக் கீழ்ப்படிந்து நடந்தனரெனவும், சிறு ஓடம்[1] மொன்றினைப் போர்க்களம் புகுமுன் கொண்டு சென்றனர் எனவும் கூறுப.

சர்ஃசேம்ஸ்ஃ சார்சு ஃபிரேசர் என்பாரியற்றிய "பழைய ஏற்பாட்டுக் கோட்பாடுகள்"[2] என்னும் நூலினை நுணுகி ஆய்வார், பலநாட்டு மக்களிடையே நிலவும் பழக்க வழக்கங்களிலும், சமய நம்பிக்கைகளிலும், சமய நியமங்களிலும் ஒருமைப்பாடுகள் காணப்படுவனவற்றை உணராமல் இரார். ஆசிய நாட்டு லிக்கோனிய மக்களுக்குச் சென்ற பால் முனிவர், "பண்டைக் காலத்தில் மக்களைத் தத்தம் சமய நெறியில் செவ்வனே ஒழுகுமாறு இறைவன் பணித்துள்ளார்," என்று ஒருகால் தம் சமயப் பேச்சிடையே கூறினார். இங்ஙனம் பலநாட்டு மக்களும் ஒரே இனத்திலிருந்து தோன்றியவராதல், ஒரே அடிப்படையினைக் கொண்ட சமயமொன்றினைப் பின்பற்றியவராதல் வேண்டும்.

சுவேத முனிவரர் இத்தகு சமய ஒருமைப்பாடுகளுக்குத் தக்க சான்றுகளுடன் விளக்கம் தருகின்றார். பண்டு, நான்கு அடிப்படைச் சமயங்கள் நிலவியிருத்தல் வேண்டும்; முதற் சமயம் மிகப் பழமையானது எனவும், அதனுண்மை மிகப் பழைய சொல் எனவும் கூறினார். இறைவன் ஆட்சியின் ஆன்ம நுணுக்கங்களை அச்சமயத்தினர் பெரிதும் அறிந்திருந்தனர் எனவும், அவர்கள் பெற்றிருந்த ஆன்மஞானக் காட்சியால் அங்ஙனம் அறிந்துகொள்ள அவராலியன்றது எனவும் அவர் கூறுவர். இரண்டாம் சமயமாவது மனுக்காலச் சமயம் எனப்படும். பண்டைய சமயச் சொல்லின் அடிப்படையில் ஏற்பட்ட புற வழிபாட்டு நியமத்தினை உடையது இச்சமயம். மூன்றாம் சமயம் இஸ்ரவேல் தொடர்புடையதாகும். நான்காவது கிறித்தவ சமயமாகும். பழைய மறைச்சொல், இஸ்ரவேல் மறைச்சொல் ஆகிய இரு சமயங்கள் பரவிய காலங்களில், இந்தியாவிலும் அதனையடுத்த தீவுகளிலும் சமயப் பிரகடனங்கள் நிகழ்ந்தன.

எகிப்து, எதியோப்பியா, ஆப்பிரிக்க நாடுகள், ஆசியக் கடற்கரை நாடுகளிலிருந்து மெல்ல மெல்லக் கிரேக்க நாடு, பண்டைய இத்தாலி நாடு ஆகிய நாடுகளுக்குச் சமயப் பிரச்சாரம் பரவியது. அக்கால மக்களிடை உயர் ஆன்ம வழிபாடு, குறியீட்டு அல்லது வெளிப்படை வழிபாட்டு முறையிலேயே நிகழ்ந்தன.

1. Ark.
2. Sir James George Frazer's Folklore in the old Testament

திரேதயுகத்தில் மனவழிபாடு அல்லது உள்வணக்கமே நடை பெற்றது எனவும், குறியீட்டு அல்லது வெளிப்படை வழிபாடு திரேதயுகத்திலேயே முதன்முதல் தோன்றினதாகல் வேண்டும் எனவும் சுவேத முனிவரர் கூறுகின்றார்.

இங்ஙனம் நால்வேறுகங்களில் தோன்றிய நாற்சமயங்களின் கோட்பாடுகளின் வீழ்ச்சிக்கு மக்களின் சமயப் பற்றின்மையும், நடத்தைக் குறைவுமே காரணங்களாகும் என மேற்கூறிய முனிவரர்

## பேராசிரியர் டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளை,
### பி. ஏ., பி. எல்., டி. லிட்., அவர்களின்

# வெள்ளி விழா

நம் பேராசிரியரவர்கள் தென்றல் வந்துலவும் திருநெல்வேலி மாவட்டத்து இராசவல்லிபுரம் என்னும் அழகிய திருவூர்க்கண் தமிழ் செய்தவத்தால் தோன்றிய தனிப்பெருஞ் செல்வர். வழக்குரைஞராகத் திகழ வாய்ப்புப் பெற்ற அவர்கள் பொய்யும் மெய்யுங் கலந்த மாந்தர் வழக்கினை மன்றத்து மன்றாடுவதினும் மெய்ம்மையும் மேலாம் நன்மையும் ஒருங்கமைந்த செந்தமிழ் மொழியின் சீரிய வழக்கினை இடையே கலந்த புன்மொழிக்களைகட்டு உலகமன்றத்தும், பேராசிரியர் பெருமாணவர் பேரறிஞர் முதலிய நல்லாருளத்தும் மாறாக் காதல் பெருகப் பதிய வைக்கும் பேராசிரியப் பெரும்பணியினை மேற்கொண்டு சீருஞ் சிறப்பும் பேரும் புகழும் பெருக ஆற்றியுள்ளமை உலகறிந்தவொன்றும். அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தும், சென்னைப் பல்கலைக் கழகத்தும் ஆற்றியுள்ள தொண்டுகள் அளப்பில. அவர்கள் சென்னைப் பல்கலைக் கழகத்து இருபத்தைந்தாண்டுகளாக அருந்தொண்டாற்றியமையைப் பாராட்டி 1961 ஏப்பிரல் 13ஆம் நாள் மாலை மணி 5-15க்குச் சென்னைப் பல்கலைக் கழகச் செனட் மன்றத்தில் அப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் உயர்திரு, டாக்டர் சர் ஆ. இலக்குமணசாமி முதலியார் அவர்கள் தலைமையில் வெள்ளி விழா நிகழும். அப்பொழுது பேராசிரியர்தம் படத் திறப்பும், வெள்ளிவிழா மலர் வெளியீடும், பேராசிரியரவர்கள் இயற்றிய 'ஆற்றங்கரையினிலே' என்னும் நூல் வெளியீடும் நிகழும்.

1961 ஏப்பிரல் 14 மாலை மணி 5-15க்குச் சென்னைத் 'தமிழ்க் கலைக் கழக'ச் சார்பில் உயர்நீதி மன்ற முதன்மை நடுவர் டாக்டர் பி. வி. இராசமன்னார் அவர்கள் தலைமையில் திருமயிலாப்பூர் புது உட்லண்டு ஓட்டலின்கண் மணிவிழாப் பாராட்டும் தேனீர் விருந்தும் றும்.

பேராசிரியரவர்கள் பெருநலத்துடன் பல்லாண்டு வாழ வாழ்த்து கின்றோம். மணிவிழா வாழ்க! வண்டமிழ் வாழ்க!

# வேதனை தரும் விளம்பரங்கள்

[புலவர் திரு. வி. பொ. பழனிவேலன், பி. ஓ. எல்.]

தமிழ் நாட்டின் சோழர் தலைநகரமாக விளங்கிய தஞ்சை மாவட்டத்திலுள்ள நகரக் கடைத்தெரு வொன்றில் "வள்ளுவர் சுருட்டுக்கள்" என்று ஒரு விளம்பரம் பெரிய எழுத்துக்களில் பொறிக்கப்பட்டு;

மக்களுக்குப் புற்றுநோய் என்னும் கொடிய நோயை உண்டாக்கும் பொருள் 'சுருட்டு' என்று அறிவியல் அறிஞர்களெல்லாம் பல்லாண்டுகளாகக் கூறி வருகின்றனர். தமிழ் நாட்டுச் சட்டமன்றில்கூடத் திரு. இராசகோபாலாச்சாரியார் முதலமைச்சராய் இருந்த ஞான்று திருமதி முத்துலட்சுமி அம்மையாரால் புகையிலைப் பொருள்களைப் பயன்படுத்துவதைத் தடைசெய்ய வேண்டுமென்று தீர்மானம் கொண்டுவரப்பெற்றது.

ஓராண்டுக்கு முன்னர்க்கூடப் பன்னிரண்டு அகவைக்குட்பட்ட இளைஞர்கள் இலைச்சுருட்டு (பீடி) கருஞ்சுருட்டு, வெண் சுருட்டு (Cigarette) முதலியவற்றைப் பயன்படுவத்துவதைத் தடுக்கச் சட்டம் கொண்டுவர வேண்டுமென்று பேசப்பட்டது. ஆனால் பிறகு அதைப்பற்றிப் பேசவே இல்லை.

இந்தச் சட்டம் வந்தாலும், திரைப்படக் காட்சிக் கொட்டகைகளில் புகை பிடிக்கக்கூடாது என்ற சட்டம்போலத்தான் பயனற்றுப்போகும்; தெய்வத்தின் பேரால் உயிர்க்கொலை செய்யக்கூடாது என்ற சட்டம்போல் உருக்குலைக்கப்பட்டுத்தான் போகும். எத்தனையோ சட்டங்கள் செய்யப்பெற்று நடைமுறையில் பின்பற்றப் பெறாததுபோன்றுதான் இதுவும் ஆகும் என்பது உறுதி.

புகையிலைப் பொருள்களால் உயிருக்கே கேடுண்டாகும் என்று அறிஞர்கள் ஆய்ந்து கூறியும் அவற்றைப் படித்தறிந்த அறிவாளிகள்கூடப் பயன்படுத்துவதைக் கைவிட்டாரல்லர்.

ஏன்? நோயாளிகட்குப் புகை பிடிக்கக் கூடாது என்று அறிவுரை கூறும் மருத்துவப் பேரறிஞர்கள்கூட (Doctors) புகை பிடித்துக்கொண்டேதான் கூறுகிறார்கள். கேட்டால் 'பழக்கம்' என்று செப்புகின்றனர். இத்தகைய கொடிய பொருளை விற்பனை செய்ய விளம்பரத்திற்குத் தெய்வங்களையும், தலைவர்களையும், பெரியோர்களையும் பயன்படுத்தும் தீயபழக்கம் நந்தமிழ் நாட்டைப்போல வேறெங்கும் காண்டலரிது. சிலர் தற்போது

முன்னணியில் உள்ள திரைப்பட நடிகர், நடிகைகளின் படங்களைப் பயன்படுத்துகின்றனர். அவர்கள் விளம்பரத்துக்கென்றே வெளிப்பட்டவர்கள்! அவர்களைச் செய்தித்தாள் நடத்துவோரும் ஏனையோரும் தங்கள் செய்தித் தாள்களை விற்பனை செய்வதற்கும், பிறபொருள்களை விற்பனைக்கு விளம்பரம் செய்வதற்கும் பயன்படுத்துவதில் வியப்பொன்றுமில்லை.

ஆனால், "மும்மூர்த்தி விநாயகர் சுருட்டு", "சிவன் 'மார்க்' சுருட்டு", 'அம்பாள் பொடி', 'தேவி பட்டணம் பொடி', 'பிர்மா புகையிலை', 'வள்ளுவர் சுருட்டு', 'அண்ணா பீடி' என்று உயர்ந்த நிலையில் வைத்து மதிக்கவேண்டிய தெய்வங்களையும், பெரியோர்களையும், கட்சித் தலைவர்களையும் மக்கட்குத் தீங்கு விளைக்கும் பொருள்களை விளம்பரப்படுத்தப் பயன்படுத்தும் செய்கை கொடிது! கொடிது!!

தெய்வங்களுக்காவது கேட்பாரில்லையெனலாம். தலைவர்கட்கும், பெரியோர்கட்கும் கூடவா ஒருவரும் இல்லை? மக்களுக்கு நன்மையளிக்கும் வகையில் பெரியோர்களைப் பயன்படுத்தினாலும் அவர்கள் குறிக்கோள் நிறைவேறுகிறதென்றாவது அமைதியுறலாம். மக்கள் உயிருக்கே ஊறுவிளைக்கும் உதவாப் பொருளாகிய 'புகையிலைப்' பொருள்களை விற்கும் விளம்பரத்திற்கா பயன்படுத்தவேண்டும்? மக்களுக்குத் தீங்கு பயக்கும் கள், காமம், சூது, புலாலுண்ணல், பொறாமை முதலிய தீய பழக்கங்களைக் கடியவேண்டுமென்று வற்புறுத்திக் கூறும் வள்ளுவப் பெருந்தகையைச் 'சுருட்டு' விளம்பரத்திற்குப் பயன்படுத்துவதை விட அறியாமை வேறொன்றுமில்லை.

வள்ளுவர் காலத்தில் இந்தக் கொடிய 'புகையிலை' இருந்திருந்தால் அதன் தீமை குறித்தும் ஓர் அதிகாரம் எழுதியிருப்பார் என்பதில் ஐயமில்லை.

புளி, மிளகாய், 'காபி', தேயிலை போன்று புகையிலையும் வெளிநாட்டிலிருந்து இறக்குமதியானதே. இஃது முதன்முதல் க்யூபாத் தீவில் கசசூஉ இல் மணப்பொருளாகப் பயன்படுத்தப் பெற்றது. தென்னமெரிக்கக் கடற்கரைப் பகுதியில் புகையிலை போடும் பழக்கம் இருந்ததை ஃச்பானியர் முதன்முதல் கரு0உ இல் கண்டதுண்டு. அமெரிக்கப் பழங்குடி மக்கள் புகையிலையைக் கடவுளின் 'மேலான அருள்' என்று நினைத்தனர். இதனைக் கொலம்பசு கண்டனர். அமெரிக்காவிலிருந்து ஐரோப்பா, இங்கிலாந்து முதலிய பிறநாடுகளிலும் பரவிற்று. கி. பி. கரு0அ இல் போர்ச்சுகீசியர் இந்தியாவுக்குக் கொணர்ந்தனர். பின்னர் நாளடைவில் எங்கும் பரவிவிட்டது.

புளி, மிளகாய், 'காபி', தேயிலை முதலியவற்றைவிடக் கொடிய, புற்றுநோயை (Cancer) உண்டுபண்ணும் புகையிலையை இந்நாட்டிற்குக் கொண்டுவந்தது மிக மிகக் கேடு பயப்பதாயிற்று. மற்றவற்றைப்போல இஃது ஓர் உணவுப்பொருளும் அன்று. சுறுசுறுப்பை உண்டாக்கும் ஒரு துணைப்பொருளே. திருவள்ளுவர் காலத்தும் இப்புகையிலை இருந்திருந்தால் நிச்சயமாகக் கண்டித்திருப்பார்.

மக்களிடையே மண்டிக்கிடக்கும் தீய பழக்கங்களையெல்லாம் வன்மையாகக் கண்டித்துள்ள வள்ளுவர், உயிருக்கே உலைவைக்கும் உருப்படாப் புகையிலைப் பொருள்களைக் கண்டிப்பதில் ஒரு சிறிதும் பின்னடைந்திரார் என்பது ஒருதலை. அத்தகைய வள்ளுவர் பெயரைச் சுருட்டு விளம்பரத்திற்குப் பயன்படுத்தியுள்ளது வியப்பும் வேதனையும் அளிக்கிறது.

உலகப் பொதுமறையை உருவாக்கிய உயர்ந்தோர்; உலகம் போற்றும் பெரியார்; தமிழ் நாட்டிற்கே தனிச்சிறப்புத் தந்த தனிப் பெரும்புலவர்! அவர் பெயரால் சுருட்டுக்கு விளம்பரமா? காந்தியார் "கள்ளுக்கடை", வினோபாபாவே "மாமிசக் கடை" என்று விளம்பரம் செய்வதுபோன்றதே "வள்ளுவர் சுருட்டுகள்" என்பதும். ஆனால் காந்தியார்க்கும், வினோபாபாவேக்கும் கடிந்து கேட்போர் உண்டு. தமிழ்நாட்டில் பிறந்ததனாலோ என்னவோ வள்ளுவர்க்குக் கேட்க ஞாதி இல்லைபோலும். தமிழ்ப்பெரியோர்கள், சான்றோர்களின் பெயர்களை விற்பனை விளம்பரத்திற்குப் பயன்படுத்தக் கூடாதென்று தமிழ்நாட்டு அரசாங்கம் சட்டமியற்றுவதுடன் கடைத்தெருவில் தொங்கும் "வள்ளுவர் சுருட்டுகள்" என்பனபோன்ற விளம்பரங்களை அகற்ற ஏற்பாடு செய்யுமாக.

---

## தாய்மொழி எவர்க்கும் தாயினும் பெரிதே

இந்நாள் யாழ்ப்பாணத்தின்கண் 'தமிழரசுக கட்சி'யார் தங்கள் தாய்மொழிபேணும் தலைமைத் தொண்டில் ஈடுபட்டு அமைதியான முறையில் அறப்போர் செய்து வருவதாகத் தெரிகிறது.

உலகிலேயே முதன் முதலாகப் பெண்பால் முதல் அமைச்சராகத் திகழும் பேறு இயல்பாகவே தாய்த்தன்மை வாய்ந்த இலங்கையமைச்சர் திருமதி. சிரிமா-பண்டாரநாயகா அவர்கட்கு அமைந்தது பெரும் பேறாகும். அத்தகைய தாய்மைநலஞ் சிறந்த அம்மையார்க்குத் தாய்மொழிச் சிறப்பும், அதனை ஆருயிர் கொடுத்தும் ஓம்புதல் வேண்டும் என்னும் அறமுறையும் பிறர் எடுத்துக் கூறுதல் கொல்லர் தெருவில் ஊசி விற்றலோடொக்கும். அதனால் அம்மையார் தமிழரசுக் கட்சியின் நியாயமுறையை ஏற்று யாவர்க்கும் இனிமையுற நன்முடிவு வழங்குவார்களென எதிர்பார்ப்போமாக.

# செய்திகளும் குறிப்புக்களும்

### (க) பட்டி மன்றம் 16ஆவது ஆண்டு நிறைவு விழா

7-3-61இல் சென்னைக் கிறித்துவ இளைஞர் சங்க (Y. M. C. A.) மண்டபத்தில் பட்டி மன்றத்தின் 16ஆம் ஆண்டு நிறைவு விழா நடைபெற்றது. டாக்டர் அ. சிதம்பரநாதன் எம்.ஏ., எம்.எல்.சி. அவர்கள் விழாவிற்குத் தலைமை தாங்கினார்கள். உயர்திரு. வி. இரத்தினமுதலியார் பி.ஏ., பி.எல். அவர்கள் விழாவினைத் துவக்கி வைத்தார்கள். மகா வித்துவான் மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை அவர்கட்கும், திரு. கீ. இராமலிங்கனார், எம்.ஏ. அவர்கட்கும் பாராட்டிதழ்கள் அளிக்கப் பெற்றன. மன்றச் சார்பில் நடைபெற்ற சொற்போர்ப் போட்டியில் வெற்றிபெற்ற மாணவர் மாணவிகளுக்குப் பரிசுகள் வழங்கப்பெற்றன. திரு. மா. இளஞ்செழியன் எம்.ஏ., பேராசிரியர் மயிலை சிவமுத்து, கு. கோதண்டபாணி பிள்ளை பி.ஏ., பேராசிரியர் ந. சஞ்சீவி எம்.ஏ. ஆகியோர் உரையாற்றினர்.

குறிப்பு: பட்டி மன்றத்தின் பணிச்சிறப்பு, தமிழகம் அறிந்ததே. இப்பணி மேலும் சிறக்கத் தமிழன்பர்கள் ஆதரவு தருவார்களாக.

### (உ) தேவநாகரி எழுத்தில் வட்டார மொழிகள்

கடந்த 17-3-61இல் மக்கள் மன்றத்தில், இந்தியாவிலுள்ள எல்லா வட்டார மொழிகளையும் தேவநாகரி எழுத்தில் அமைப்பது பற்றிய பேச்சு எழுந்தது. இதனால் விளையும் நன்மை தீமைகளைக் குறித்து உறுப்பினர் பலர் பேசினர் தமிழகத்தைச சேர்ந்த உறுப்பினர் இதனை வன்மையாகக் கண்டித்தனர்.

குறிப்பு: வடவரின் இந்திமொழி வெறி எந்தெந்த உருவில் தலை காட்டுகிறது என்பதற்கு இஃது ஓர் எடுத்துக்காட்டாகும். ஒலிவடிவில் இந்தியைப் பொதுமொழியாக்க முடியாவிடினும் வரிவடிவிலாவது அதனைச் செய்து பார்த்துவிடவேண்டும் என அவர்கள் எண்ணுகின்றனர் போலும்! எது எப்படியிருப்பினும் இந்தி பேசாத பகுதியினர் மீது இந்தியைப் புகுத்த இஃதொரு முயற்சியென்றே நாம் கொள்ளல் வேண்டும். இக்கருத்தை அதே மன்றத்தில் தமிழகத்தைச் சேர்ந்த காங்கிரசு உறுப்பினர் ஒருவர் சுட்டிக்காட்டியிருப்பதும், அடுத்து நடைபெற்ற கூட்டத்தில் திரு. ஈ. வி. கே. சம்பத் இதனைக் கண்டித்துப் பேசியிருப்பதும் கவனிக்கத்தக்கவையாகும்.

### (ங) மேலும் பல பணிமனைகளில் தமிழ் ஆட்சிமொழியாகிறது

“அரசின் கடிதப் போக்குவரத்துக்கள் பற்றிய அளவில், மாவட்டங்களில் இதுகாறும் 2,473 அலுவலகங்களில் தமிழ் ஆட்சிமொழியாக்கப் பட்டிருக்கிறது. 1961ஆம் ஆண்டில் மேலும் 1,003 அலுவலகங்களில் இம்முறை பின்பற்றப்படும்” என்று 18-3-61இல் சட்ட மன்றத்தில் அமைச்சர் திரு. சி. சுப்பிரமணியம் அவர்கள் குறிப்பிட்டார்கள்.

குறிப்பு: சென்னை அரசினரின் இம்முயற்சி பாராட்டத்தக்கதே. எனினும் தமிழை ஆட்சிமொழியாக்கும் இப்பணி இன்னும் விரைந்து நடைபெறவேண்டியதொன்றாகும்.

### (ச) சைவத்தின் மாண்புபற்றி மேனாட்டறிஞர் கருத்து

“நாம் எல்லா உயிர்களிடத்தும் நட்புடையவர்கள் என்பதைச் சைவ உணவையே கொள்ளுதல் மூலம் அறிவித்தல் வேண்டும். நான் இந்தியாவையும், காந்தியடிகளின் மெய்யுரைகளையும் பாராட்டுகிறேன். சைவக் கொள்கையை நான் பின்பற்றக் காரணமாயிருந்தது இந்தியா. இதற்கு நான் கடமைப்பட்டுள்ளேன்,” என்று கடந்த 20-3-61இல் சென்னையில் தமக்கு அளிக்கப்பட்ட விருந்தின்போது, அனைத்துலகச் சைவக் கழகத்தின் தலைவரான உட்லண்ட் காலர் டி. செயின்ட் ன செனட் என்பார் பேசியுள்ளார்.

குறிப்பு: மக்களின் அறிவு வளர்சசிக்கும், உறுதுணை புரிவது புலால் உண்ணாப் புனித வாழ்க்கை. ஃது அனைத் துலகும் உய்ய வழிகாட்டும் ஓரியக்கம். ருச் சார்ந்த மேனாட்டறிஞர்களைப் பாராட்டுகிறோம்.

### (ரு) தமிழில் 10 லட்சம் விவிலிய நூல்கள்

தென்னிந்தியாவில் 10 இலட்சம் விவிலிய நூல்களைத் தமிழில் அச்சிட்டு வெளியிடக் கானடா பைபிள் சங்கத்தின் பொதுக்குழு முடிவு செய்துள்ளது. இப்பணி ஐந்தாண்டுக் காலம் நடைபெறும். இதற்காக ஆண்டுதோறும் 20,000 டாலர் செலவிடப்படும். தென்னிந்தியாவி லுள்ள சிற்றூர்களுக்கும், இலங்கைக்கும் இந்நூல்கள் வழங்கப்படும்.

குறிப்பு: கிறித்துவ சமயப் பற்றாளர்களின் இம்முயற்சியைப் பின் பற்றி உலகப் பொதுமறையாகிய திருக்குறளை இங்ஙனம் அயல்நாடுகளில் பரப்பத் தமிழக அரசினரும் செல்வர்களும் வழிவகை காண்பார்களாக.

### (சு) புகை பிடிப்பது தற்கொலைக் கொப்பாகும்

“ஒரு நாளைக்கு ஒரு பெட்டி வீதம் ஒருவர் புகை குடித்தால், அவர் தமது மொத்த ஆயுளில் எட்டு ஆண்டுகளைப் பறிகொடுத்தவராகிறார். நாள் ஒன்றுக்கு ஊதித் தள்ளுவது இரண்டு பெட்டிகளானால் ஆயுட் காலத்தில் 18 ஆண்டுகள் சரிந்துவிடுகின்றன. எனவே புகை பிடித்தல் தற்கொலைக்கு ஒப்பாகும்” என்று டாக்டர் லினுஸ் பௌலிங் என்னும் அமெரிக்க விஞ்ஞானி ஒருவர் கூறுகிறார். இவர் இயைபியல் துறையில் (Chemistry) ‘நோபெல்’ பரிசு பெற்றவர்.

குறிப்பு: புகை பிடித்தலின் தீமை குறித்து இத்தகைய வுரைகளை அவ்வப்போது அறிஞர் உலகம் தந்துகொண்டுதான் வருகிறது. ‘புகை உயிரின் பகை’ என உணர்த்தும் இவ்வறிவுரையை யேனும் இளைஞர் உலகம் உணர்ந்து நடக்குமாக.

### (எ) தமிழகத்தின் மக்கள்தொகை

1961 ஆம் ஆண்டு மார்ச்சுத் திங்கள் முதல் நாளில் எடுக்கப்பட்ட மக்கட்டொகைக் கணக்கின்படி தமிழகத்தின் மக்கட்டொகை பின் வருமாறு:

ஆண்கள்: 1,69,15,454; பெண்கள்: 1,67,35,463. ஆகமொத்தம் 3,36,50,917. இது 1951ஆம் ஆண்டு எடுக்கப்பட்ட தொகையைவிட 11·7 சதவிகிதம் அதிகம் என அறிவிக்கப்பட்டுள்ளது.

**குறிப்பு :** மக்கட்டொகை உயர்ந்திருப்பதற்கேற்ப அவர்தம் பொருளாதாரம், சமுதாயம், அறிவியல் இன்னபிற உயரவும் அரசியலார் வழிகாண்பார்களாக.

### (அ) குழந்தை இலக்கியங்கட்குப் பரிசு

குழந்தைகள் இலக்கியப் பரிசுப் போட்டிக்காக, கையெழுத்துப் படிகளாவது, அச்சிட்ட நூல்களாவது அனுப்பலாமென இந்தியக் கல்வித்துறை அறிவித்துள்ளது. இவ்விலக்கியங்களுக்கு 30 பரிசுகள் வழங்கப்படும். நூலொன்றுக்கு ஆயிரம் ரூபாயாக 15 நூல்களுக்கும், நூலொன்றுக்கு ஐந்நூறு ரூபாயாக 15 நூல்களுக்கும் என இருவகைப் பரிசுகள் வழங்கப்படும். இப்பரிசுக்கென அனுப்பப்படும் நூல்கள் ஒவ்வொன்றிலும் 5 படிகள் அனுப்புதல் வேண்டுமெனவும், ஏப்ரல் 30 ஆம் நாளுக்குள் பரிசுக்கான நூல்களைத் தமிழகக் கல்வி இயக்குநர் வழி அனுப்புதல் வேண்டுமெனவும் அறிவிக்கப்பெற்றுள்ளது.

**குறிப்பு :** குழந்தை இலக்கியங்களை வளர்க்க அரசினர் மேற்கொள்ளும் இம்முயற்சி பாராட்டற்பாலது. இதனைப் பயன்படுத்திக் கொள்ளுதல் தமிழர் கடன்.

### (௯) இளம் எழுத்தாளர்கட்கு அமைச்சர் அறிவுரை

“இளம் எழுத்தாளர்கள் காலத்திற்கேற்ற புதுப்புது நூல்களை இயற்றல் வேண்டும். இக்காலக் குழந்தைகள் ‘ராக்கெட் ஊழி’ எனப்படும் விஞ்ஞான காலத்தில் வாழ்பவர்களாவர். எனவே, அவர்களின் அவாவை நிறைவேற்றுவதும், அறிவுப் பசியைத் தணிப்பதுமான புத்தகங்களை எழுதுதல் வேண்டும்” என்று 11-3-61இல் நடைபெற்ற இரண்டாவது குழந்தை இலக்கிய மாநாட்டைத் துவக்கிவைத்தகாலை அமைச்சர் சுப்பிரமணியம் அவர்கள் பேசினார். திரு. அழ வள்ளியப்பா மாநாட்டிற்குத் தலைமை தாங்கினார். அவர் பேசியகாலைத் தமிழகத்தில் 37 லட்சம் குழந்தைகள் உள்ளனர் எனவும், அவர்கள் படித்தற்கேற்ற குழந்தை இலக்கியங்களும், இதழ்களும் தேவை என்பதையும் வலியுறுத்தினார். டாக்டர் அ. சிதம்பரநாதன், பெரியசாமித் தூரன், பெ. ந. அப்புசாமி, பி. ஸ்ரீ. ஆச்சாரியர் ஆகியோரும் பேசினர்.

**குறிப்பு :** அமைச்சரவர்களின் அறிவுரைப்படி இளம் எழுத்தாளர்கள் புதுமை இலக்கியங்களைப் படைத்து, அதன் மூலம் தமிழ் மொழியும் நாடும் சிறப்புற வழிகாண்பார்களாக.

### (௧௦) வாலாசாபாத் இந்துமத பாடசாலை நிகழ்ச்சிகள்

19-3-61இல், வாலாசாபாத் இந்துமத பாடசாலையில் அப் பாடசாலையின் முன்னாள் மாணவரும், தற்போது பச்சையப்பன் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியராக இருப்பவருமான திரு. அ. மு. பரமசிவானந்தம் அவர்கள் ‘கவிதையும் வாழ்க்கையும்’ என்னும் சிறந்த நூல் எழுதியதைப் பாராட்டிச் சென்னை அரசினர் 1000 ரூபா பரிசு வழங்கியதை முன்னிட்டு ஒரு பாராட்டு விழா நடைபெற்றது. திரு. மு. ப. நாச்சிமுத்து அவர்கள் தலைமை வகித்தார். தமிழறிஞர்கள் பலர் பாராட்டுரை வழங்கினர்.

தமிழகக் கல்வித்துறை இயக்குநர் திரு. நெ. து. சுந்தரவடிவேலு அவர்கட்குப் பாரத அரசு ‘பத்மஸ்ரீ’ என்னும் பட்டம் அளித்தமையைப்

பாராட்டவும், திரு. சுந்தரவடிவேலு அவர்களின் பணிச்சிறப்பைப் பாராட்டவும் 26-3-61இல் ஒரு விழா நடைபெற்றது. உயர்நீதிமன்ற மூன்னாள் நடுவர் திரு. W. S. கிருஷ்ணசாமி நாயுடு அவர்கள் விழாவிற்குத் தலைமை தாங்கினார்.

**குறிப்பு:** இந்துமதப் பாடசாலையாரின் இத்தகைய பாராட்டுப் பணிகள் பயனுள்ளன. அதற்கு நம் பாராட்டுதல்களும் உரித்தாகுக.

**(கக) பேராசிரியர் அ. முத்தையா இரங்கற் கூட்டம்**

சென்னைப் பச்சையப்பன் கல்லூரிப் பொருளாதாரத்துறைத் தலைவராகத் திகழ்ந்து அரும்பணியாற்றிவந்த பேராசிரியர், அ. முத்தையா, எம். ஏ., அவர்களின் மறைவு குறித்து, 28-3-61இல் ஒய். எம். சி. எ. மண்டபத்தில் திரு. சொ. அமிர்தகணேச முதலியாரவர்கள் தலைமையில் ஓர் இரங்கற் கூட்டம் நடைபெற்றது. பேராசிரியர் எஸ். வேலாயுதம், எம்.ஏ., பி. காம், டி. செங்கல்வராயன், பி. ஏ. எல். எல். பி., டாக்டர், எம் ரோக்கியசாமி, எம். ஏ, அ. மு. பரமசிவானந்தம், எம். ஏ., எம் ., புலவர் அன்பு கணபதி, திரு. வ. சுப்பையா பிள்ளை, சா. , எம் எ., ஆர். அரங்கநாதன், எம். ஏ., மா. இளஞ்செழியன் எம். ஏ. ஆகியோர் இரங்கலுரையாற்றினர்.

**குறிப்பு:** பேராசிரியர் முத்தையா அவர்தம் குடும்பத்தார்க்கும், உற்றார், உறவினர், நண்பர்கட்கும் நமது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக்கொள்ளுகிறோம்.

**(கஉ) வருந்துகிறோம்**

சென்னை மாநகர் மன்றத் துணை ஆணையர் திரு. என். சங்கரன் எம்.ஏ. அவர்கள் 13 3 61 அன்று மாரடைப்பினால் இறையடி எய்தினார் என்னும் செய்தி யறிந்து வருந்துகிறோம். திரு. சங்கரன் அவர்கள் நல்லறிவும், தமிழ்ப் பண்பாடும், இறை அன்பும், சமயப்பற்றும் மிக்கவர். திரு. சங்கரன் அவர்களின் மறைவு குறித்துத் துயருறும அவர்தம் குடும்பத்தார்க்கும், நண்பர்கட்கும் எமது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக்கொள்ளுகிறோம். அவர் இன்னுயிர் இறையடியில் இன்புறுவதாக.

**(கங) தெ. பொ. மீனாட்சிசுந்தரனார்க்குப் பாராட்டு**

பன்மொழிப்புலவர் திரு. தெ. பொ. மீனாட்சிசுந்தரம் பிள்ளையின் மணிவிழாக் கொண்டாட்டம், அண்மையில் கோவை 'ஸ்டேன்சு' கல்யாண மண்டபத்தில் மிகச் சிறப்பாக நடைபெற்றது. இவ்விழாவுக்கு அண்ணாமலைப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் திரு. டி. எம். நாராயணசாமிப் பிள்ளை தலைமை தாங்கினார். மணிவிழா மலரின் வெளியீட்டை, சட்டமன்ற உறுப்பினர் திரு. என். மகாலிங்கம் நடத்தி வைத்தார். மேல்சபை உறுப்பினரும், பி. எஸ். ஜி. தொழில் நுணுக்கக் கல்லூரி முதல்வருமான திரு. ஜி. ஆர். தாமோதரன், டாக்டர் துரையரங்கனார், கோவைகிழார், திரு. இராமச்சந்திரன் செட்டியார், திருவாளர்கள் இராமநாதன் செட்டியார், ம. பொ. சிவஞானம், திருமதி சவுந்திரம்மாள் ஆகியோர் அவரது தொண்டினைப் பாராட்டிப் பேசினர். பி. எஸ். ஜி. கலைக் கல்லூரித் தலைவர் திரு. பி. ஆர். கிருஷ்ணமூர்த்தி நன்றி கூறினார். அந்தக் கல்லூரி மாணவர்களின் சார்பாக திரு. மீனாட்சி சுந்தரனாருக்கு ஒலிப்பதிவுக் கருவி ஒன்று அன்பளிப்பாக வழங்கப்பட்டது.

(௧௪) **தமிழ்ப் பகைஞர்**

தமிழின் தனிச்சிறப்பு, கன்னித் தன்மை, வளம் முதலியன அறிஞருலகம் அறிந்தனவே. எனினும் இன்னும் சில தமிழ்ப் பகைஞர் இருந்துகொண்டு தம் சொல்லாலும் எழுத்தாலும் தமிழுக்கு இழுக்குத் தேடி வருகின்றனர். அத்தகையோருள் ஒருவராகத் திரு. க. நா. சுப்பிரமணியம் என்பவர் இருந்து வருவதாக அறிகிறோம். அவர் சின்னாட்களுக்குமுன், கல்கத்தாவிலிருந்து வெளிவரும் 'ஸ்டேட்ஸ்மென்' (26-3-61) என்னும் ஆங்கிலச் செய்தித்தாளில் 'இந்தியாவிலுள்ள எழுத்தாளர்கள்' என்னும் ஒரு கட்டுரையில் தமிழ்மொழி 18 ஆம் நூற்றாண்டு வரை வளமுடையதாயிருந்ததாகவும் இப்போது அதனைப் பெரும்பாலும் இறந்த மொழி என்றே கொள்ளவேண்டும் என்றும் ஒரு நச்சுக் கருத்தினையும் வெளியிட்டுள்ளார். இது வருந்தத்தக்கதும் மிகவும் கண்டிக்கத் தக்கதுமாகும். இத்தகையோரைத் தமிழ்ப் பகைஞர் என்னாது, வேறு என்னென்று உரைப்பது!

(௧௫) **டாக்டர் கிருட்டினனுக்கு விருது**

தமிழ்நாட்டைச் சேர்ந்த பூத இயல் விஞ்ஞானி டாக்டர் கே. எஸ். கிருட்டினன் அவர்களின் அரிய பணியினைப் பாராட்டி, 24-3-61 இல் இந்திய விஞ்ஞான ஆராய்ச்சிக் குழு 10,000 ரூபா மதிப்புள்ள பரிசினை வழங்கிற்று. இப் பரிசு காலஞ் சென்ற 'சாந்தி சொரூப்' அவர்களின் நினைவாக, சாந்தி சொரூப் நினைவுப் பரிசு என்ற பெயரில் 1957 ஆம் ஆண்டில் ஏற்படுத்தப்பட்டது. ஆராய்ச்சிக் குழுவின் தலைவரான பண்டித நேரு அவர்கள் இப் பரிசினை வழங்கினர். திரு. கிருட்டினன் அவர்களின் அரிய தொண்டினைப் பாராட்டி அமைச்சர் ஹூமாயூன் கபீர், விஞ்ஞான ஆராய்ச்சிக் குழுவின் பொது இயக்குநர் திரு. எம். எஸ். தாககர் ஆகியோர் பேசினர்.

குறிப்பு: தமிழகத்தைச் சார்ந்த திரு. கிருட்டினன் அவர்கள் பெற்றிருக்கும் இப் பரிசு தமிழகத்துக்குத் தனிப் பெருமை அளிப்பதாகும். பரிசு பெற்ற அறிவியல் அறிஞருக்கு நம் வாழ்த்துக்கள் உரித்தாகுக.

(௧௬) **வ. வே. சு. ஐயர் நூல் வெளியீட்டு விழா**

காலஞ்சென்ற வ. வே. சு. ஐயர் அவர்களின் திருக்குறள் ஆங்கில மொழிபெயர்ப்பு நூலின் வெளியீட்டு விழா கடந்த 2-4-61 இல் இராசாசி மண்டபத்தில் நடைபெற்றது. ஓய்வு பெற்ற உயர்நீதிமன்ற நடுவர் திரு. வி. சுப்பிரமணிய நாடார் விழாவிற்குத் தலைமை தாங்கினார். அமைச்சர் வெங்கட்டராமன் அவர்கள் திருக்குறள் மொழிபெயர்ப்பு நூலை வெளியிட்டார். ராஜாஜி, ம. பொ. சி., பரலி. சு. நெல்லையப்பர், சுத்தானந்த பாரதியார், தி. ஜ. ரங்கநாதன், அகிலன், அப்பர் சுவாமி, டாக்டர் கிருட்டினசாமி, திருமதி சௌந்திரம் கைலாசம் ஆகியோர் பேசினர்.



திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை, 2-140, பிராட்வே,
அப்பர் அச்சகத்தில், திரு. வ. சுப்பையா அவர்களால்
அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர்: வ. சுப்பையா.



சொல்லின் செல்வர்,

டாக்டர், ரா. பி. சேதுப்பிள்ளை, பி.ஏ., பி.எல்., டி.லிட்.



பேராசிரியரின் "ஆற்றங்கரையிலே" என்ற நூலைப் பேராசிரியர் அ. சீனிவாசராகவன் வெளியிட்டுத் துணைவேந்தரிடம் அளித்தல்



தவத்திரு தனிநாயக அடிகள் வெள்ளி விழா மலரைப் பாராட்டிப் பேசுதல்



சென்னைப் பல்கலைக் கழகத்தில் டாக்டர் சேதுப்பிள்ளை படத்தைத்
துணைவேந்தர் இலக்குமணசாமி முதலியார் திறந்துவைத்தல்



டாக்டர்' பட்டம் வாங்கிய நிலை




| சிலம்பு | திருவள்ளுவர் ஆண்டு ௧௯௯௨, சித்திரை | பரல் |
|---|---|---|
| ௩௫ | மே, 1961 | ௬ |

டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளை அவர்கள்

# இறைநிறை வெய்துதல்

நல்லியல்பு பலவும் அமைந்த நம் சொல்லின் செல்வராம் பிள்ளையவர்கள் 25-4-1961 முற்பகல் 11-30 மணிக்குத் தம் பொன்னுடல் விடுத்துப் புகழுடல் நிறுத்து இறைநிறைவெய்தினர். அவர்கட்கு அகவை 66 ஆகின்றது. அவர் தம் தோற்றம் அண்மைவரையில் இளமை எழிலுடன் திகழ்ந்தது. அத்திகழ்வுக்குக் காரணம் இருபெருந்திருவும் ஒருங்குறவமைந்த உண்மை என்பர். அம்மட்டுமன்று, அவர்தம் எண்ணமும் சொல்லும் வண்ணச் செயலும் பண்ணமை தமிழின் பாலதாய் நண்ணியமையுமாம் என்க. செந்தமிழ்ப் பெரும்புலவராய்ப் பேராசிரியராய், நாவலர் பாவலராய், நன்கினிதுரைக்கும் நயத்தராய், நூலாசிரியராய், உரையாசிரியராய்ப் பிறவும் வல்லராய் நம்மிடையே இந் நூற்றாண்டில் வாழ்ந்து மறைந்தாரும் பலராவர். அதுபோல் இந்நாள் வாழ்கின்றாரும் பலராவர். இவரெல்லாருள்ளும் நம் பிள்ளையவர்கள் தனிப்பெருஞ் சிறப்புவாய்ந்த புலவர் பெருமகனாராவர்.

பிள்ளையவர்கள் சென்னைப் பச்சையப்பன் கல்லூரியில் இளங்கலைஞராய்ப் பயிலுங்காலத்தே இருமொழிவல்லவராய் இன்சொல் நல்லாராய், எழுத்தும் பேச்சும் பழுத்த முதுபெரும் புலவர்முதல் ஆசிரியர் மாணவர் பெருமக்கள் முதலிய அனைவரையும் தம்வயப்படுத்துந் தகைமை வாய்ந்த சால்பினராய்த் திகழ்ந்தனர். அக்காலத்தே அக்கல்லூரியின் முதல்வரும், தமிழ்த்துறைத் தலைவரும் ஆகிய இருவரும் இவர் வயப்பட்டுப்

பெரிதும் அன்பு பூண்டனர். நம் பிள்ளையவர்களின் பேச்சு வன்மை யொன்றே உடனடியாக அக்கல்லூரியின்கண் ஆசிரியப் எய.

பிள்ளையவர்களின் பேச்சும் எழுத்தும் பிறங்கு மூச்சும் செந்தமிழின் சீர் சிறப்பினைத் தெரிப்பன. மேலும் மோனை, எதுகை, மொழிவனப்பு, இருபொருளியைபு, பொருளணி, சொல்லணி, முன்னோர் மொழிபல எடுத்து மொழிதல், தலைப் பமைக்கும் தனிப்பெருமாட்சி, இனிக்க மொழியும் நனிமிகு ஏற்றம், எப்பொருள்பற்றியும் எடுத்துடனியம்பும் செப்பருந் தகைமை, அவையடக்கியல்பின் ஆற்றல், நவையினை நவிலுங் காலும் சுவைபட நவின்று நகைமுகங்காட்டிக் கேட்போர் மிக மகிழச் செய்தல், மணமுமதுவும் ஒருங்கமை மலரினைக் காணும் வண்டெனப் பிள்ளையவர்கள் பேசத்தொடங்கின் கேட்போர் தம்வயமிழந்து பேச்சின் இனிமைவயப்பட்டுப் பொழுதுகழிவதறி யாது பொலிவுற்றிருக்க வைத்தல் முதலிய பல நயங்கள் இயல்பா யமைந்த எழிலினவாகும்.

இந்நாளில் பரந்துபட்ட உலகெங்கணும் பொதுமறையெனப் பன்னாட்டவராலும், பன்மொழியாளராலும் முன்வந்து உச்சிமேற் கொள்ளப்பட்டுத் திகழும் ஒப்பில் தனிப்பெருநூலாந் திருக் குறளினை இற்றைக்கு முப்பத்தைந்து யாண்டுகளுக்குமுன் நம் நாட்டவரும் நயந்து கற்குமாறு நூல் வாயிலாகவும், சொற் பொழிவு வாயிலாகவும், வகுப்புக்கள் வாயிலாகவும், எடுத் தாளுதல் வாயிலாகவும் அனைவரும் பாராட்டப் பரப்பியுள்ளனர்.

மேலும் கம்பராமாயணம், கந்தபுராணம், சிலப்பதிகாரம் முதலிய பெருநூல்களைப் பல்லாண்டுகளாகச் சென்னைக்கண் பல்வேறிடங்களில் வகுப்புக்களாக நிகழ்த்தியுள்ளனர். அவ் வகுப்புக்களில் கலந்துகொண்ட பெருமக்கள், பெருஞ்செல்வர், ஆசிரியமாணவர்கள் முதலிய அனைவர்களும் விடாது அச் செல்வத்துட் செல்வமாம் செவிச் செல்வத்தினை நுகர்ந்து வந்தனர். ஆங்கிலப் பெரும் புலமை வாய்ந்த பலரும் பிள்ளை யவர்களின் வகுப்புக்களிற் கலந்து கொண்ட பெரும் பயனால் அளவிறந்த தமிழார்வமுற்றுத் தமிழ்ப் புலவருமாயினர். இது வன்றோ பிள்ளையவர்கள் நம் தமிழன்னைக்குச் செய்துபோந்த தனிப்பெருந் தொண்டில் முன்னிற்பது. வகுப்புக்களில் முன் னிடம் பெறுதற் பொருட்டுத் திரளான மக்கட் கூட்டந் துவங்கு வதற்குப் பலமணி நேரங்களுக்கு முன்னரே வந்து கூடிவிடும். வகுப்பு நடக்கும்போதும் ஆயிரக்கணக்கான மக்கள் ஒருங்கு கூடியிருக்கும் அவ்விடத்து மிக்க அமைதியே என்றும் நின்று

நிலவும். பிள்ளையவர்கள் பல்கலைக் கழக வாயிலாகச் செந்தமிழ் பரப்பிய சீர்மையும், வகுப்புக்கள், பேரவைகள் முதலியவற்றின் வாயிலாக அத்தமிழ் மொழியினை வழங்கி வளர்த்த வண்மைச் சிறப்பும் வரலாற்றில் பொன்னெழுத்துக்களாற் பொறிக்கப் படுப் பொலிவனவாகும். பிள்ளையவர்களின் பேச்சென்றால் பெருங் கூட்டம் கூடுவதும், பொழுது போவது தெரியாது அவர்தம் விழுமிய பேச்சில் ஈடுபட்டு முழு இன்பம் எய்தித் திளைப்பதும் எந்நாளும் ஒன்று போன்றே இருந்து வந்தது.

பிள்ளையவர்கள் பெரும் புலவராய்த் திகழ்ந்து நம் தமிழன் வாழ்நாள் முற்றும் பெருந் தொண்டாற்றி அவளைப் பேணியமை போன்று, தமக்குப் பின்னும் தொடர்ந்து நிலை பெற்ற பெருந் தொண்டாய் என்றென்றும் நிகழப் பேறக் கட்டளை இரண்டு நிறுவிப் பெரும் புரவலராகவுந் திகழ்ந்துள்ளனர். அஃதாவது தாம் பெரும்பணியாற்றிய 'அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தும்', 'சென்னைப் பல்கலைக் கழகத்தும்' தம் அருமை அன்னையார் சொர்ணத்தம்மாள் திருப்பெயரான் ஆண்டுதோறும் தமிழ் வளர்ச்சிக்குரிய ஆய்வுச் சொற்பொழிவுகள் தக்காரைக் கொண்டு நிகழ்த்துவிக்க முறையே இருபத்தையாயிரம், இருபத் தையாயிரமாக ஐம்பதினாயிரம் வெண்பொன் பண்புற வழங்கி யுள்ளமையாகும். இம்முறை திருநெல்வேலியுறை செல்வர்களுக்கு வழிவழியமையும் வண்மைப் பாங்கு போலும். அஃது ஏறத்தாழ இன்றைக்கு மூந்நூறுயாண்டுகளுக்கு முன் பெரும் புலவராயும், பேராசிரியராயும், பெரும் புரவலராயும் வீற்றிருந்து இரு பெரும் பணியும் ஒருங்கியற்றிய மெய்த்திருவினர் **மயிலேறும் பெருமாள் பிள்ளை** யவர்களாவர். அவர்கள் கல்லாடத்துக்கு அரிய பெரிய விரிவுரையொன்று இயற்றியுள்ளார்கள். அவர்கள் இலக்கணக் கொத்துச் சாமிநாத தேசிகர் முதலிய பெரும்புலவர் பல்லோர்க்கு ஊண், உடை, உறையுள், உறை முதலிய நல்லன பலவும் வல்ல வாறுதவித் தம்மில்லத்தமர்த்தித் தாமே கற்பித்தும், வேண்டு மிடத்துப் பிறர்பால் கற்கப் பெருந்துணை புரிந்தும் பேறமாற்றிப் பிறங்கியமையாகும். மேலும் கல்லாட வுரையொன்றே அவ்விரு பெருந்திருவினரின் ஆற்றலுக்கு ஏற்ற சான்றாகும்.

நம் பிள்ளையவர்கள் தமிழ் நூல் வாயிலாகத் தமிழைப் பாரெங்கும் பரப்பியதோடமையாது ஆங்கில நூல் வாயிலாகவும் அனைத்துலகும் பரப்பியுள்ளனர். அதுபோல் தமிழகத்துப் பல்வேறிடங்களில் கூடிய பலவேறு மாநாடுகள், பேரவைகள் முதலியவற்றில் பலமுறை தலைமை பூண்டும் சொற்பொழிவாளரா யிருந்தும் பற்பல பணிகள் பாங்குறப் புரிந்துள்ளனர். இது போல் இந்தியப் பெருநகரங்கள் பலவற்றிலும் நிகழும் தமிழ்ப்

பேரவைகளிலும், கடல் கடந்த யாழ்ப்பாணம் கொழும்பு முதலிய வெளியுலகங்களில் நிகழும் பேரவைகள் பலவற்றிலும் பயனுர் தமிழ்த்தொண்டு பண்புடன் ஆற்றியுள்ளனர்.

நம் பிள்ளையவர்களின் இறுதிச் சடங்கு பல் பெரும் புலவர்கள் பலர் ஆற்ருெணுத் துன்பொடு விழிமாரி பொழிய, மொழி தடுமாற, நாத்துளங்க, மெய்விதிர்ப்பக் கடமையினை மேற்கொண்டு பரிவுரை சிலவேனும் பகர வேண்டுமென முன்வந்து பகர்ந்துள்ள கையறு நிலையுரைகளோடு அவர்தம் தொலைவிலுள்ள உறவினரும் ஒன்றுவிட்ட பிறப்பினரின் மகனுருமான திரு. மணி என்பவர் எரியூட்ட நிறைவுற்றது.

நம் பிள்ளையவர்கள் இறைநிறைவில் எய்தி இன்புற வேண்டுமென்பதே நம் பேரார்வம். அவர்தம் அடங்காத் தமிழ்ப் பெருங்காதலால் மீண்டும் பிறப்புண்டேல் செந்தமிழும், பைந்தமிழ்ப் பொதிகையும், முந்து வந்துலவும் தென்றலும், நந்தாப் பொருநையும், செஞ்சாலி நெல்லும், சிவ வழிபாடும் எஞ்சா திலங்கும் திருநெல்வேலி நகர்க்கண் பிறந்து இப்பொழுதாற்றியதினும் பன்மடங்கு மிகுதியாக நற்றமிழ்த் தொண்டாற்றி நன்மகப்பேற்ருெடு நலமுற வாழ்ந்து பெரும் புகழெய்திப் பிறங்கல் வேண்டுமெனப் பெருமானடியிணையினைப் பெரிதும் வழுத்துதும்.

"சொல்லின் செல்வர் தமிழ்க்கெல்லைத் துணையாம் சேதுப்பிள்ளை
எல்லை யில்லாத் தமிழ்த்தொண்டே எவர்க்கும் இன்பம் பயப்பதெனச்
சொல்லால் எழுத்தால் தூமனத்தால் தொடர்ந்து பணிகள் பலவாற்றி
நல்லை நல்லை எனவுலகோர் நவில நற்ருள் நண்ணினரே.

நண்ணிப் பேறுபெற்றவர்தாம் நயந்து பின்னும் தமிழ்த்தொண்டு
மண்ணில் நிகழ மனங்கொண்டு மருவும் இரண்டு கலைக்கழகத்
தெண்ணி வெண்பொன் நன்கொடையா ஐம்பதாயிரம் மளித்தார்
புண்ணி யத்தால் இறைநிறைவில் பொருந்தி வாழ்க வாழியரோ."

எங்கள் கையறு நிலைப் பரிவுரையினைப் பிள்ளையவர்கள் குடும்பத்தார்க்குத் தெரிவித்துக் கொள்கின்ருேம். வாழ்க சொல்லின் செல்வர்! வாழ்க அவர்தம் நூற்கள்! வாழ்க பேரறக் கட்டளைகள்! வாழ்க வழிகாட்டிய அவர்தம் வண்மை மாண்பு! வாழ்க வண்டமிழ்! வாழ்க தமிழகம்! வாழ்க செந்நெறி!

## டாக்டர். ரா. பி. சேதுப் பிள்ளையவர்கள்

# மறைவு குறித்த இரங்கலுரைகள்

### தமிழ் நெஞ்சங்களில் நீங்கா இடம் பெற்றவர்!

தமிழ்மொழியின் வளர்ச்சிக்காகப் பாடுபட்ட பேரறிஞர் டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளை அவர்கள் குறிப்பிடத் தக்கவராவர். அவரின் சொற்பொழிவுகள் உணர்ச்சிக்கு உயிரூட்ட வல்லவை. பழந்தமிழ் இலக்கியங்களின் சுவையை அவர் எழுத்தோவியங்களில் காணலாம். தம்மிடமிருந்த சொற் செல்வத்தை வாரி வழங்கிய அப் பெருமகனார் செந்தமிழ்ப் புலவராக மட்டுமல்லாமல், தமிழின் புரவலராகவும் திகழ்ந்திருக்கிறார். சென்னைப் பல்கலைக் கழகத்திற்கும், அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திற்கும் தம் அன்னையாரின் பெயரால் இருபத்தையாயிரம் ரூபாய் தமிழ் வளர்ச்சிக்காக வழங்கியிருப்பதிலிருந்து அவரது நன்றி மணக்கும் நெஞ்சம் புலப்படுகிறது. இங்ஙனம், ஈன்ற அன்னைக்கும், வாழ்வளித்த தமிழுக்கும் பெருமை தேடித் தந்த அத்தகைய பெருமகனாரின் மறைவு தமிழுலகுக்குப் பேரிழப்பாகும். எனினும், அவரது நினைவு தமிழ்நெஞ்சங்களில் நீங்காத இடத்தைப் பெற்றுவிட்டது. தூய உள்ளத்தோடும் நெறி பிறழாத வகையிலும் தமிழ்த் தொண்டு ஆற்றுவதே அவருக்கு நாம் செய்யக் கூடிய கைம்மாறு ஆகும். அதற்குரிய நன்றி மறவாத நல்ல சூழ் நிலையை, செந்தமிழ்ச் செல்வி சேதுப் பிள்ளை நினைவு இதழ் நாட்டில் உண்டாக்கும் என்று நம்புகின்றேன்.

—சி. சுப்பிரமணியம், கல்வி, நிதியமைச்சர்.

### "சொல்லருமை"

தமிழ்ச் சொல்லின் அருமைபெருமைகளை அண்மைக் காலத்தில் உலகறிய எடுத்து விளம்பிய பெருமை பேராசிரியர் டாக்டர் சேதுப்பிள்ளை அவர்களுக்கு உண்டு. எல்லாச் சொற்களும் பொருள் குறித்தன என்றார் தொல்காப்பியர். ஆயினும், சொற்களின் அடிவேர்கள் யாவரும் அறியும்படி வெளிப்படையாகத் தோன்றமாட்டா. ஆழ்ந்தகன்ற அறிவினையுடைய யார்க்கே மொழிப் பொருட் காரணம் முற்றத் துண்மாண் நுழைபுலமுடைய பேராசிரியர் டாக்டர் சேதுப் பிள்ளை அவர்கள் தமிழ்ச்சொற்கள் பலவற்றின் அடிவேர்ப் பொருள்களையும் வரலாற்று வளர்ச்சிகளையும் ஆய்ந்து தொகுத்து நூலாக்கித் தந்துள்ளார். "தமிழ்ச்சொற்களும் அவற்றின்

, என்ற அவர்களுடைய ஆங்கில நூல் மொழி

யிலக்கண முறைப்படி தமிழ்ச்சொற்கள் பலவற்றை ஆராய்ந்து காட்டிய நூல். திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணத்தை முறைப்பட ஆராய்ந்து கற்பித்த பேராசிரியர் டாக்டர் சேதுப் பிள்ளை கால்டுவேலர் ஆங்கிலத்தில் எழுதிய ஒப்பிலக்கணத்தைத் தமிழிலக்கணத்தோடு தொடர்புபடுத்தி ஆராய்ந்து கற்பித்தும் கட்டுரை யெழுதியும் தமிழ் மாணவர் பலருக்கு வழிகாட்டியாக வாழ்ந்தார். "ஊரும் பேரும்" என்ற அவரது நூல் தமிழ்நாட்டிற் சிதைவுபட்டுக் கிடந்த ஊர்ப் பெயர்களைத் திருத்தி அமைக்க உதவுவதாயிற்று. சிதம்பரம் வட்டத்திலுள்ள "ஆரூர்" என்பதை "நர்த்தனபுரி" என வேறொரு மொழியில் ஆக்கி, அதற்கேற்ப ஒரு புராணம் கட்டிவிட்டனரே என அவர் புலம்பியுரைத் துள்ளார். இஃதோர் எடுத்துக்காட்டு.

சிலப்பதிகாரம், கம்பராமாயணம் ஆகிய காப்பியங்களையும், . . . றள் ஆகிய பேரிலக்கியத்தையும் இந்நூற்றாண்டில் மாண வரும் மற்றையோரும் எளிதிற் கற்று ஆர்வங்கொள்ளும்படி எழுச்சியூட்டியவர் திரு. சேதுப்பிள்ளை. எல்லாக் காலத்தார்க்கும் எல்லா நாட்டார்க்கும் எல்லாச் சமயத்தார்க்கும் ஒப்பமுடிந்த நூல் திருக்குறள் என்பதை நாற்பதாண்டுகளுக்கு முன்னரே எடுத்து நவின்றார் அவர். "நெஞ்சை அள்ளுஞ் சிலப்பதிகாரம்" என்று பாரதியார் உரைத்த பொன்மொழியை நன்மொழியெனக் காட்டியவர் அவர். கம்பன் தமிழைப் பேசுந்தொறும் எழுதுந் தொறும் நினைக்குந்தொறும் நெக்குருகிய வீரர் அவர். பாரதி யாரது "குயில் பாட்"டில் அவருக்குத் தனியான பற்றும் பெருமதிப்பும் உண்டு.

கவிஞர்களுடைய சொல்லோவியங்களை எடுத்து மக்கள் மன்றங்களிற் காட்டும்பொழுது, அவ்வக்கவிஞரேயாய், மெய்ப் பாடுற அவர் கூறி மகிழ்ந்தவைகளைக் கேட்டுப் பலர் வியந்த துண்டு. 'ழகரம்' தமிழ்நாட்டின் பல்வேறு பகுதிகளிற் படுகின்ற பாட்டை அவர் நயம்பட எடுத்துச் சொல்லி வந்த விதங்களைத் தமிழ்ச்செவிகள் இன்னும் மறக்கவில்லை.

அவர் பேச்சுக்களிலும் எழுத்துக்களிலும் பழகுதமிழ்ச் சொல்லருமையைக் காணலாம். நண்பர்களுடனிருந்து அவர் பேசுங்காலும் மோனையெதுகை நயம்படவும் சிலேடை நயம்பட வும் அவர் பேச வல்லவராய் இருந்தமை குறிப்பிடத்தக்கது.

சொல்லின் செல்வரது நடையைப் பின்பற்றிப் பேசியும் எழுதியும் புகழ்பெறுவோர் பலருண்டு. செந்தமிழ் உள்ளவரை சேதுப்பிள்ளை மறக்கப்படமாட்டார். அவர் பொன்றினும், அவர் புகழ் நின்று நிலவும்.

—டாக்டர் அ. சிதம்பரநாதன்.

## மறக்க இயலாத மாண்புடையவர்

ன் தவப்பெரும்புதல்வர் டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளையவர்கள் மறைவு தமிழறிஞர் உலகை அளப்பரிய துயரென்னும் ஆழ்கடலில் அமிழ்த்திவிட்டது! சொல்லின் செல்வரின் தூய தொண்டினால் தமிழன்னை தனிப்பெரு வனப்புடன் பேச்சு மேடைகளில் களிநடம் புரிந்தாள்! அவர் செந்நா வழங்கிய மோனைத் தமிழின்பம், கற்றார்க்குக் கழிபேருவகை விளைத்ததோடமையாது, கல்லாரையும் கன்னித் தமிழின்பால் ஆற்றுப்படுத்திக் கவின் பெறச்செய்தது. அவர் தீட்டிய எழுத்தோவியங்கள் ஏட்டில் இலங்கி நாட்டில் அவர் புகழை நிலைநாட்டி விட்டன.

பிள்ளையவர்களின வாயமை யும் அவரை அறிஞர் உள்ளங்களில் அரசு வீற்றிருக்கச் செய்து விட்டன. அவர் மறைவினால் கம்பநாடர் தம் கலைநலந்தெரிக்கும் நக விமரிசகரை இழந்தார்; திருவள்ளுவர் தம் வாளரை இழந்தார்; தமிழகம் மறக்க இயலாத மாண்புடையவரை இழந்தது.

உவப்பத் தலைக்கூடி உள்ளப் பிரிந்த பிள்ளையவர்கள் அமரராய், வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்து மறைந்த வான்புகழ்த் தமிழறிஞர் ‘வருக! வருக! வருக;’ என வரவேற்று மகிழ வானகமடைந்துவிட்டார். பிள்ளையவர்களின் புகழ் பூத்த பெரு வாழ்வு நமக்கு என்றும் வழிகாட்டும் வான்சுடர் விளக்கமாய்த் திகழ்வதாகுக!

—வித்துவான், மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை.

## பேராசிரியர் சேதுப்பிள்ளையவர்கள்

கடந்த 35 ஆண்டுகளாகத் தமிழ்த் தொண்டு செய்த பெரியாராவர். அவருக்கு இளமை முதலே தமிழ்மொழி மீது தனிப் பற்று இருந்து வந்தது. எவரும் பேசாத இனிய-எளிய செந்தமிழ் நடையில் பேசும் திறமை அவருக்கு இயல்பாகவே அமைந்திருந்தது. அவ்வினிய நடை அவர் சொற்பொழிவுகளைக் கேட்ட மக்களை அவர்பால் இழுத்தது. “நெல்லையிலிருந்து தில்லைக்கு வந்தேன்” என்றாற்போல அழகிய தொடர்களையும், “கங்கை வேடனும் காளத்தி வேடனும்”, “ஒருசடையும் திரிசடையும்” போன்ற கட்டுரைகளின் தலைப்புக்களையும் படித்தவரும் கேட்டவரும் தேனில் விழுந்த ஈக்களாயினர்.

டாக்டர் பிள்ளையவர்கள் செந்தமிழ் மணக்கும் தம் கட்டுரைகளாலும் சொற்பொழிவுகளாலும் தமிழர் உள்ளங்களைக்

கொள்ளை கொண்டார். கம்பராமாயணத்திற்குப் பொதுமக்களிடையே மதிப்பை உண்டாக்கிய பெருமை டாக்டர் பிள்ளையவர்களையே சாரும். சிலப்பதிகாரம், கம்பராமாயணம், திருக்குறள் ஆகிய முப்பெருந் தமிழ் நூல்களில் நம் பேராசிரியர் சிறந்த புலமை பெற்று விளங்கினார்; இம் மூன்றைப் பற்றியும் ஆராய்ச்சி நூல்கள் வரைந்து பெயர் பெற்றார்.

டாக்டர் பிள்ளையவர்கள் சிறந்த ஆராய்ச்சியாளர். "சிலப்பதிகார விளக்கம்", "திருவள்ளுவர் நூல்நயம்", "ஊரும் பேரும்", "சொல்லாராய்ச்சி" முதலிய நூல்கள் அவரது ஆராய்ச்சித் திறனை விளக்கும் சான்றுகளாகும்.

பிள்ளையவர்கள் எக்கட்சியையும் சாராதவர்; ஆயினும் எல்லாக் கட்சியினராலும் பாராட்டப்பெற்றவர். தமிழ்-தமிழர்-தமிழ்நாடு இம் மூன்றுமே அவர் உள்ளத்தைக் கொள்ளை கொண்டவை. அவர் தமிழ்நலத்திற்காகவே பாடுபட்ட பெரியார்; இனிய சொற்களையே பேசி வந்தவர்; நற்பண்புகள் ஒருங்கே வாய்க்கப்பெற்றவர். அப்பெரியார் மறைவு தமிழகத்திற்கு ஈடுசெய்ய முடியாத பேரிழப்பாகும். அவரது தமிழ்த் தொண்டினைப் பின்பற்றித் தமிழ் இளைஞர் ஆக்க வேலையில் ஈடுபடுவாராயின் அப்பெரியாரது ஆன்மா அமைதியுறும்.

—டாக்டர் மா.

## என் உள்ளம் கவர்ந்த உயர்ந்தோர்

பேராசிரியர் ரா. பி. சேதுப்பிள்ளை காலஞ்சென்றனர் என்று கேட்டதும் ஈழ நாட்டிலே அவர்களை யறிந்தவர்களும், அவர்களுடைய நூல்களைப் படித்தவர்களும் பெருந்துயரெய்

ஒரு கிழமைக்கு முன்புதான் நான் அவர்களை மருத்துவ இல்லத்திற் கண்டு பல செய்திகளைப் பற்றி அவருடன் உரையாடினேன். அவர்கள் அவ்வாறு உரையாடுவது உடல் நலத்திற்கு நன்றன்று என்று மருத்துவர் கூறிய பொழுதும் என்னுடன் பேசுவது தமக்கு மருந்தாகுமென்று தம்மியல்பிற்கேற்ற பண்புடன் கூறலானார். அவர்களிடம் விடைபெற்றுக்கொண்டு இலங்கை திரும்பும்போது அவர்களை மீண்டும் நான் காண்பேனோ வென்ற ஐயம் என்னுள்ளத்தில் தோன்றியது. எனவே அவர்களை மீண்டும் காணத் திருவருள் அமையாவிடின் என்னுள்ளம் அமைதி பெறுவதற்காக அவர் வலது கையைப் பற்றி, அவர்கள் தமிழ் மக்களுக்கும் தமிழுக்கும் எனக்கும் செய்த நன்றிக்கு நன்றி கூறி அவர்தன் கையினை முத்தமிட்டு விடைபெற்றுக்

கொண்டேன். பேராசிரியர் சேதுப்பிள்ளை என்பால் காட்டிய நட்பும் அன்பும், தமிழ்க் கலைகளில் ஈடுபடுவதற்கு எனக்கு ஒரு தனியாற்றலை யளித்தது. தமிழின் இனிமையை நான் நுகர விரும்புங்கால் அவர்களின் நூல்கள் சிலவற்றை வாய் விட்டுப் படிப்பேன். அவர்களுடைய பண்பும் பெருந்தன்மையும் நகைச் சுவையும், உரையாடலின் கவர்ச்சியும், சொல்லின் திறமையும் இலக்கிய நினைவும், செய்யுளைச் சுவைக்கும் பான்மையும், பல்லாண்டுகளாக என் வாழ்க்கைக்கு இன்பத்தையளித்தன. வருங்காலத்தில் சென்னைக்கு வரும்போது அன்பர் ஒருவரின் மறைவு என்னுள்ளத்தை வருத்தும். தமிழ் நாட்டின் கவர்ச்சி அவரில்லாமையால் குன்றிவிடும். சென்னைப் பல்கலைக்கழகம் அவரின் நினைவினை யென்றும் எனக்கு வற்புறுத்தும்.

—சே. தனிநாயக அடிகள், இலங்கை.

## பேச்சும் மூச்சும் தமிழெனவாழ்ந்த பெரியார்

பேராசிரியர் டாக்டர் சேதுப்பிள்ளை அவர்கள் நம்மிடை யிருந்து மறைந்துவிட்டார்கள். எனினும் அவரது இன்னுயிர் இன்னும் இனியும் தமிழ் மண்ணின் எல்லையை விட்டு நீங்காது என்பது உறுதி. இளமை முதற்கொண்டே தமிழில் பற்றும் அதன் இனிமையில் மயக்கமும் கொண்டு, தம்மை மறந்து தமிழ்ப் பணி செய்தவர் பிள்ளை அவர்களாவர். அண்ணாமலையிலும், சென்னையிலும் அவர்கள் தமிழைத் 'தமிழாகவே' வாழ வைத்த வர்கள். கற்றோர் மட்டுமன்றி மற்றோரும் சங்கத் தமிழையும் காப் பியத் தமிழையும் சுவைத்துத் துய்க்கலாம் என்ற உண்மையை நாட்டுக்கு உணர்த்தியவர் இவரே! சங்க இலக்கியங்களையும், கம்பராமாயணம், கந்த புராணம், சிலப்பதிகாரம் போன்ற காப்பி யங்களையும், பள்ளு குறவஞ்சி போன்ற சிற்றிலக்கியங்களையும் எல்லோரும் எளிதில் உணர்ந்து போற்றுமாறு இனிய எளிய நல்ல தமிழால் பேசியும் எழுதியும் நாட்டை உறக்கத்தினின்றும் மீட்டவர் பிள்ளை அவர்கள்.

ரு. பிள்ளை அவர்களிடம் பேசிக்கொண்டிருப்பதே இனிமை பயப்பதாகும். நான் அவர்களைக் காணச் செல்லும் போதெல் லாம் தாம்கண்ட தமிழ் இன்பத்தையும் அதன்வழி கிளைத்த ஆய்வு நுட்பங்களையும் விளக்கிக்கொண்டே இருப்பார்கள். மணிக் கணக்கில் நான் என்னை மறந்து அவர் வாய்மொழி கேட்டு மயங்கி நின்றது உண்டு.

தமிழ்நாட்டின் இயல்பும் பண்பாடும் பிற நிலைகளும் கெடாத வகையில் கட்டிக்காக்க வேண்டும் என்ற பெரு விருப்பு உடை

யவர் பிள்ளை அவர்கள். ஆம்! அவர் பேச்சு, மூச்சு, வாழ்வு, வளம் அனைத்தும் தமிழேதான். அன்னார் இன்று இல்லை. நில்லா உலகின் நிலைமை காட்டிச் சென்றுவிட்டார்கள். அவர்வழி மொழி நலம் போற்றும் நல்லவர்கள் அவர் விட்ட பணியை மேற் கொண்டு செய்தலே நல்ல கடமையாகும். அவருக்குச் செய்யும் நன்றியுமாகும். திரு. பிள்ளை அவர்கள் இன்னுயிர் இறை யருளால் இன்புறுமாக! அவர் வளர்த்த நல்ல தமிழ் மேலும் நலமுற்று ஓங்குவதாக!

—அ. மு. பரமசிவானந்தம், எம். ஏ., எம். லிட்.

## சேதுப்பிள்ளையும் செந்தமிழ் நடையும்

திரு. பிள்ளையவர்களின் அறிவைப் பலகண் கொண்டு கண்டு களிக்கலாம். அத்தகைய அறிவுக் கருவூலமாகத் திகழ்ந்தவர் நம் பிள்ளை அவர்கள். அவர்தம் அறிவால் முகிழ்த்த கலைகளில் ஒன்று அவர்க்கே உரிய செந்தமிழ் நடையாகும். செந்தமிழ் நடை என்பது பிறமொழி கலவாது எதுகை மோனை முதலான தொடைகள் அமைந்ததாக அமைவதாகும். இந் நடையினை யாண்டுப் பெற்றனர் நம் பிள்ளையவர்கள்? இதனை அவர், பல்லாற் றானும் இறையனார் அகப்பொருள் உரையினையும், சிலப்பதிகாரத் துள் இடையிடையேயுள்ள உரைநடைகளையும், அந்நூற்கு உரை கண்ட அடியார்க்கு நல்லார் உரைகளையும் நன்கு பயின்று பெற் றனர் எனில் அது மிகைஅன்று.

திரு. பிள்ளையவர்களின் செந்தமிழ் நடையில் வெறும் அடுக்கு மொழிகளும் அலங்காரச் சொற்களும் மட்டும் இரா. அவ்வடுக்கு மொழிகளும் அலங்காரச் சொற்களும் சொல் அழகிற்கும், பொருள் அழகிற்கும், தொடை அழகிற்கும் மற்றும் பல அழகிற்கும் நிலைக்களனாகத் திகழும். அவர் தம் செந்தமிழ் நடையில் அவர்க்கிருக்கும் அருந்தமிழ் ஆர்வமும், தமிழ் நாட்டுப் பற்றும் தண்டமிழ் ஆசிரியர்கள்பால் அவர் கொண்டுள்ள பெரு மதிப்பும், பொருந்திப் பொலிவுற்று இலகும். ஆர்வம், ஆத்திரம் முதலியன கொள்ளவேண்டிய இடங்களில் அவ்வந் நடை அமைந் திருக்கும்.

திரு. பிள்ளைஅவர்கள் தாம் எழுதும் நூற்களுக்குப் பெயர் அமைப்பதிலும் செந்தமிழ் நடையினையே மேற்கொண்டவர். அவ்வாறு அவர் தம் நூல்களுக்குப் பெயர்களைச் சூட்டி இருப்ப தால், கல்லாதாரும் அந்நூல்களைக் கற்க வேண்டும் என்ற கருத்தினை மேற்கொண்டு கற்கலாயினர் என்பதை எவரும் அறிவர். நூல்களுக்கு மட்டும் இம்முறை மேற்கொண்டவர் அல்லர். திரு. பிள்ளை அவர்கள் எழுதிய கட்டுரைகட்கும்

இவ்வாறே தலைப்புக்களைத் தந்து எழுதுவர். இவற்றிற்குரிய எடுத்துக்காட்டுக்களைத் திரு. பிள்ளை அவர்கள் பேசிய பேச்சுகளை நேரில் கேட்டவர்கள் நன்கு உணர்வர். கேளாதவர்கள் அவர் யாத்துள்ள நூல்களின்வழி படித்துப் பயன் எய்தியுள்ளனர். என்றாலும் அவர்தம் செந்தமிழ் நடைக்கு இங்கொன்று ஆங்கொன்றாக இரண்டோர் எடுத்துக்காட்டுகள் இங்கு எடுத்துக் காட்டுதல் இன்றியமையாதது. "அறிவுடை மாந்தர் அமர்க்களம் புகுந்து அடுபோர் புரிந்து குருதி சொரிவதை நினைக்கும்போது, அறிஞர் நெஞ்சம் குலைவது இயல்பே" என்னும் இவ்வாக்கியத்தில் பிறமொழி கலவாதிருத்தலைக் காண்க. "முத்தமிழ் வளர்த்த மூவேந்தர்களும்" "வேற்றரசர் ஆட்சி இந்நாட்டில் வேரூன்றிற்று" என்பனவும், "முன்னுரையும் பின்னுரையும் நிகழ்த்தும் பேறு" "தலையைச்சீவி முடித்தாள்; வேலைக் கையிலே கொடுத்தாள்" என்பன போன்ற தொடர்கள் மோனை எதுகை கட்குச் சிறந்த எடுத்துக்காட்டுகள் அல்லவோ? திரு. பிள்ளை அவர்கள் ஒன்றைக் குறித்துப் பேசுகையில் "அதனை அறியாதார் அறியாதாரே" என்றும், "காயும் கனியும் கரும்பும் அணிந்து" என்றும் கூறுவர். இவை அவர்தம் அடுக்கு மொழிக்கு அமைந்த சான்றுகள். "பூவும் தழையும் சூட்டுவர்;" "மணிகளைக் கழுத்தில் மாட்டுவர்" என்பன அலங்காரச் சொற்களுக்குச் சான்றுகளாக நிற்பவை. "வல்லரசு நீங்கிவிட்டது; நல்லரசு நிலவுகிறது" என்பனவற்றில் சொல்லழகும் பொருள் அழகுகளுங் காண்க.

"ஆங்கில மாது களிநடம் புரிந்த கல்விச்சாலைகளில் தமிழ்த்தாய் நிலைஇழந்து, தலைகவிழ்ந்து ஒடுங்கி ஒதுங்கி நிற்பாளாயினள். தமிழ் ஆசிரியர்களின் உள்ளம் இடிந்தது; ஊக்கம் மடிந்தது; புகை படிந்த ஓவியம் போல் புலவர் மணிகள் பொலிவிழந்தனர்" என்னும் தொடர்மொழிகளும், "தமிழ் அறிஞர்களே! தமிழ் நாடெங்கும் தமிழ்ச் சங்கம் நிறுவுங்கள்! தமிழ்ப் பாடம் சொல்லுங்கள். கலைச் செல்வத்தை வாரி வழங்குங்கள். தெருவெல்லாம் தமிழ் முழக்கம் செழிக்கச் செய்யுங்கள்" என்பன ஆத்திர ஆர்வ மொழிகட்கும் எடுத்துக்காட்டுகள்.

"வேலும் வில்லும்", "ஊரும் பேரும்" என்பனபோன்ற நூற்களின் பெயர்களும், "காதலும், கற்பும்", "பயிர் வண்டும் படர் கொடியும்" "உண்மையும் அருளும்" போன்ற கட்டுரைத் தலைப்புக்களும் அவரின் செந்தமிழ் நடைக்கு ஏற்ற சான்றுகள் என்பதோடு கூறி நிறுத்துகின்றேன்.

வாழ்க சேதுப்பிள்ளையின் செந்தமிழ்நடை!

**—பாலூர் கண்ணப்ப முதலியார்,** எம்.ஏ., பி.ஓ.எல். சென்னை.

# சொல்லின் நடையறிந்த சொல்லேருழவர்

வளமார் தமிழின் மாண்பெலாமறிந்து, சொல்லுக்கும் பொருளுக்குமுள்ள நீர்மையினை ஆழ்ந்துணர்ந்து நயந்தோன்ற வெளிப்படுத்தியவர் பேராசிரியர் சேதுப்பிள்ளை அவர்கள். அங்காடி, எழிலி, திருவல்லிக்கேணி, கலங்கரை விளக்கம், மயிலாடு துறை போன்ற சொற்களின் பொருளின்பத்தையும் செவியினிமையையும் சென்றவிடமெங்கும் விளக்கிக் காட்டினார்.

பிழைச்சொல் கேட்டுத் தலைநோவு கொண்ட சீத்தலைச் சாத்தனாரைப் போலவே, இன்பத்தேன் பொழியும் செந்தமிழ்ச் சொற்களுக்குப் பதிலாகப் பிறமொழிச் சொற்களைக் கேட்க நேரும் போது செவிநோவு கொண்டு மறுகினார். 'வானொலி'க்குப் பதிலாக 'ஆகாஷ்வாணி' வழங்கப்படுவதைக் கேட்டு நெஞ்சு பொறாத பேராசிரியர், "கரும்பிருக்க இரும்பு கடிக்க ஒருப் படலாமா? வானொலி என்ற வளஞ்சார்ந்த மொழியிருக்கச் செவிகைக்கும் பிறமொழிச் சொல்லைத் திணிக்கலாமா?" என மனம் நைந்தார்.

மாயவரத்தை மாயூரம் எனவும், மூர்மார்க்கட்டை மூர் அங்காடி எனவும் எழுதப்பட்டதற்குப் பேராசிரியரின் பெரு முயற்சியே காரணமாகும். 'ஹாமில்டன் வாராவதி' 'அம்பட் டன் வாராவதி' யெனச் சிதைந்த கொடுமையை எடுத்துக் காட்டிப் பழைய பெயரே பேருந்து வண்டியிலும் பொறிக்கப்படு மாறு செய்தார். இன்னும் தமிழகத்தின் அழகுப் பழம்பெயர் களின் பெருமைகளையெல்லாம் செவிகுளிரச் சிந்தைகுளிர எடுத் துக்காட்டி, வடசொற் பெயர்கள் மாறி வண்டமிழ்ப் பெயர்களே நிலைநிற்க வேண்டுமென்று வற்புறுத்திப் போந்தார்.

நண்பர்களோடும் புதியவர்களோடும் உரையாடும்போதும் செழுந்தமிழ்ச் சொற்களின் நயந்தோன்ற நகையாடி இன்ப உரை யாடல் நிகழ்த்தி உவப்பத் தலைக்கூடி உள்ளப்பிரியும்படி செய்தார்.

தமிழிலக்கியங்களின் சொன்னயங்களையெல்லாம் தேர்ந் தெடுத்துச் சொற்பொழிவு விருந்துகள் பல செய்துவந்த பேரா சிரியர் அவர்கள் தாம்படைத்த பைந்தமிழ் நூல்களின் மூலம் அச்சொல்விருந்துகளையெல்லாம் எல்லாரும் எக்காலத்திலும் பெற்றின்புறுமாறு செய்து அழியாப் பெரும்புகழ் அடைந்து விட்டார். தமிழின்பம் போல் சேதுப்பிள்ளையவர்களின் பெயரும் தமிழிலக்கியத்தில் நிலைத்து நிற்கும் என்பதில் ஐயமில்லை.

மு. சதாசிவம், எம். ஏ.

## வரலாற்றில் இடம்பெறத் தக்க பெரும்புலவர்

பேராசிரியர் டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளை அவர்கள் குணமென்னும் குன்றேறி நின்றவர்கள்; நேர்மை நெறியில் என்றும் உறுதியாக நின்றவர்கள். பிற துறைகளில் பணி செய்து கொண்டிருந்த இவர்களை அண்ணாமலைப் பல்கலைக் கழகத்துக்கு வரவழைத்துக் கல்விப் பணிக்கு ஆளாக்கிய பெருமை, அண்ணாமலைப் பல்கலைக் கழகம் நிறுவிய பெருங்கொடை வள்ளல் டாக்டர் ராஜா சர். அண்ணாமலைச் செட்டியார் அவர்களைச் சேர்ந்தது.

பேராசிரியர் அவர்கள் இலக்கியப் பொருள் நலங்களை ஆழ்ந்து நோக்கி அறிந்து தாம் இன்புறுவதோடு, பிறரும் அவற்றை உணர்ந்து இன்புறுமாறு எடுத்துச் சொல்லும் ஆற்றல் நிறையப் பெற்றவர்கள். தமிழ்ச் சொற்களின் வடிவங்களையும், தொடர்களின் வடிவங்களையும் நெடுங்காலம் பலவாறு ஆராய்ந்து, அவற்றின் உண்மை வடிவங்களையும், வேர்களையும் வளர்ச்சிகளையும் விளக்கிக் கூறும் ஒரு புது நெறியில், இவர்கள் வெற்றி கண்டதோடு, பிறருக்கு வழிகாட்டியாகவும் விளங்கினார்கள். இவர்கள் பெற்ற பேறுகளையும், புகழ்களையும், இவர்களின் தொண்டுகளையும் எண்ணிப் பார்த்தால், இவர்கள் பெயர், தமிழ்ப்புலவர் வரலாற்றில் பொன் எழுத்துக்களால் பொறிக்கத்தக்கது என்பது விளங்கும்.

—பண்டிதமணி, லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார்.

## இன்சொற் செல்வர் சேதுப்பிள்ளை

திருநெல்வேலிச் சீமையில் அண்மையில் வாழ்ந்து மறைந்த தமிழ்ப் பேரறிஞர்கள் மூவர்: டி. கே. சி; வையாபுரி பிள்ளை; சேதுப் பிள்ளை. இவருள் டி. கே. சி. அவர்கள் கவிதைச் சுவையினை நுகரும் நுண்ணுணர்வுக்கு வழிகாட்டியவர்கள். வையாபுரிப் பிள்ளையவர்கள் சொல்லாராய்ச்சி இலக்கிய இலக்கண ஆராய்ச்சித் துறைகளின் முன்னணியில் நின்றவர்கள். டாக்டர் சேதுப்பிள்ளையவர்கள் எழுத்துக்கும் பேச்சுக்கும் இணையற்ற இனிமையுடையது தமிழ்மொழியே என விளக்கிய சொல்லின் செல்வர். முன்னையோர் இருவர் தொண்டு பற்றியும் கருத்து வேறுபாடுகள் உண்டு. சொல்லின் செல்வர் தொண்டு அனைவர்க்கும் உடன்பாடான ஒன்று. யார் உள்ளமும் நோகாமல் இனிதாகப் பேசிப் பழகும் நல் நாகரிகமே அவர்கள் தமிழ்த் தொண்டிலும் மிளிர்கின்றது. அன்னார் புகழ் நீடு வாழும்.

—ஆ. செயரத்தினம், பாளையங்கோட்டை.

# செழுந்தமிழ்ச் செல்வர்

செழுந்தமிழ்ச்செல்வர் சேதுப்பிள்ளை அவர்களின் மறைவுச் செய்தி தமிழ்கூறு நல்லுலகெங்குமுள்ள மக்கள் யாவருக்கும் எல்லையற்ற துன்பத்தை விளைவிக்கும் செய்தியாகும்.

இந்தியத் தமிழகத்தையும் ஈழத் தமிழகத்தையும் முன்னர் இணைத்த சேது எனும் அணையைப்போல, இன்று இரு தமிழகத்தாரையும் தம் அன்பாலும் பண்பாலும் அருந்தொண்டாலும் இணைத்துப் பிணைத்துவைத்த பெரியார் சேதுப்பிள்ளை அவர்களுடைய பிரிவு, சிறப்பாக ஈழத் தமிழகத்தாருக்கு ஈடுசெய்ய முடியாத இழப்பாகும்.

திருக்குறளின் பெருமையினைத் தமிழர் யாவருக்கும் உணர்த்திய தனிப்பெருமை சேதுப்பிள்ளை அவர்களுக்குரியதெனலாம். திருவள்ளுவர் நூனயம் ஏறக்குறையப் பத்துமுறை பதிப்பிக்கப் பட்டமை அந்நூலின் ஒப்புயர்வில்லா மாண்பினை நன்கு விளக்கு ்து.

தமிழ்ப் புலவர்களிலே தனிச்சிறப்புடன் விளங்குபவர்கள் வள்ளுவரும் இளங்கோவும் கம்பரு மாவர். இந்த உண்மையினைத் தம் பாடல்களிற் பொதிந்து தமிழ் மக்களுக்கு உணர்த்திய பெருமைக்கு உரியவர் பாரதியார். இம் முப்பெருங் கவிஞரும் இயற்றிய திருக்குறளையும் சிலப்பதிகாரத்தையும் இராமாயணத்தையும் தம் எழுத்தாலும் உரையாலும் தமிழ் மக்கள் உள்ளத்திற் குடிகொள்ளச் செய்த பெருமைக்கு உரியவர் சேதுப்பிள்ளை அவர்கள். அவர்கள் பல இடங்களிற் பல்லாண்டுகளாக நிகழ்த்திய உரை விருந்துகளும், அவர்கள் எழுதிய திருவள்ளுவர் நூல்நயம், சிலப்பதிகார விளக்கம், வீரமாநகர் முதலிய நூல்களும் இதற்குச் சான்று பகரும்.

பயிலுதற்கினிய பண்புடையாளராகிய அவருடன் உரையாடுவது தனியின்பம் தரும். ஒருமுறை அவருடன் உரையாடியவர்கள் மீண்டும் மீண்டும் அவரோடு உரையாட விரும்புவார்கள். எப்பொழுதும் இன்முகத்துடன் எவ்விதச் சிக்கலையும் விடுவித்தற்கேற்ற வழிவகைகளைக் கூறும் ஆற்றல் வாய்ந்தவர் அவர்.

சொற்பொழிவாற்றுதலில் இன்று பலர் சிறந்து விளங்குகின்றனர். எனினும், சேதுப்பிள்ளை அவர்களைப்போலக் கருத்தாழமும் கற்பனை வளமும் பொலிய, நகைச்சுவை இழையோடத் தொடை அழகும் நடை அழகும் ததும்பக், கேட்போரைப் பிணிக்கும் முறையில் பேசுபவர்கள் இல்லை எனலாம். அவருடைய பொழிவு நடையும் உரைநடையும் தனிச்சிறப்புடையன.

ஈடும் எடுப்புமில்லா இச்சிறப்பை அவருக்கு உண்டாக்கியது அவருடைய தமிழின்ப நுகர்ச்சியேயாகும்.

தமிழின் சிறப்பியல்புகளிலே தம் நெஞ்சைப் பறிகொடுத்துத் தமிழின் இனிமையினைச் சுவைத்துத் தமிழின்பத்தில் அவர் திளைத்தார். இதனால் அவர் பேச்சும் எழுத்தும் இனிமை செறிந்து விளங்கின; செந்தமிழாக மட்டுமின்றிச் செழுந்தமிழாகவும் மிளிர்ந்தன; அவருடைய உள்ளமும் சொல்லும் செயலும் இனிமையின் இருப்பிடங்களாயின. யாவரையும் ஈர்க்கும் சொல்லின் செல்வராக அவர் போற்றப்பட்டார்.

இன்று தமிழ் மொழி பலதுறைகளில் முன்னேற்றம் அடைந்துளது. இந்த முன்னேற்றத்துக்கு உழைத்த பெரியார்களிற் சிறந்தவராகப் பேராசிரியர் சேதுப்பிள்ளை விளங்கினார். தமிழ் மொழி இந்த உலகில் வாழும் காலம் முழுதும் தமிழருடைய உள்ளத்திற் பேராசிரியர் சேதுப்பிள்ளை வாழ்வார்.

தமிழ்மொழி மீண்டும் தன் பண்டைப் பெருமையைப் பெற்றுச் சிறந்து விளங்கும் என்பதை அவர் உணர்ந்திருந்தார். இதை அவருடைய உரைகள் நன்கு விளக்குகின்றன.

தமிழ்மொழி உலக மொழியாக ஏற்றமுறும் பொற்காலத்தை மிக விரைவில் காணுதற்குத் தமிழர் யாவரும் ஒன்றுபட்டு உழைத்தலே தமிழர்கள் அவருக்குச் செய்யுங்கைம்மாறாகும். அவருடைய ஆருயிர் பேராவியற்கைப் பெரும் பேறெய்துக!

—க. பொ. இரத்தினம், எம்.ஏ., பி. ஓ. எல்., கொழும்பு.

## மறக்கமுடியாத தமிழ்த் தொண்டு

டாக்டர். ரா. பி. சேதுப் பிள்ளையோடு நான் பல்லாண்டுகளாக நெருங்கிப் பழகியிருக்கிறேன். திருக்கொள்ளம்புதூரில் நடைபெற்ற யாழ்நூல் அரங்கேற்ற விழாவில் சிறந்த ஆராய்ச்சிச் சொற்பொழிவைக்கேட்டு இன்புற்றேன்.

'இந்தி மொழி'—தமிழ் நாட்டில் புகுத்தப்படுவது பற்றிக் கேட்டதற்கு, "நான் ஒருவன் மட்டும் எதிர்த்துப் பேசியதில் பயன் ஏற்படவில்லை. என் எதிர்ப்பை விடாது கூறி வருகின்றேன். ஆனால் அவர்கள் ஏற்றுக்கொள்ளவில்லை" என்று மிகவும் வருந்திக் கூறினார்கள். அன்னார் தாய் மொழிக்குச் செய்திருக்கும் தொண்டினை என்றுமே நான் மறக்க முடியாது.

—ஆ. பழ. குமரப்பன், வேகுப்பட்டி.

## செந்தமிழ்ச் சைவச் செம்மல்

மறைந்த பேராசிரியர் சேதுப்பிள்ளையவர்களை உயர் தோழர் பெரு நண்பர் என்பர். ஒத்த அகவையினர், ஓங்கும் சீர்த்திப் பெருநாவர், இனிய தமிழ்ச் சொல்லின் செல்வர் என்பர்; அவர் பேசு தமிழ் கேட்ட பல்லோர் அயராத உழைப்பினால் உயர்ந்த பெருஞ்செல்வர் என்பர். உலகியலில் உயர்ந்த மேலோர்; கேட்டொறும் இன்பறிவுரை வழங்கும் பெறலரும் பேராசிரியர் என்பர். கலை பயிலும் இளைஞர் யாரும் எல்லாருக்கும் எப்பொழுதும் எவ்விடத்தும் இன்முகமும் நன்மொழியும் இனிய காட்சி எளிமையுமே உருவாக இலங்கிய பேராசிரியர் இரா. பி. சே. அவர்களை இனி என்று காண்போம் என்று தமிழ்நாடு கதறிப் புலம்புவது காண்மின். செந்தமிழ்ச் சைவச் செம்மலாகிய டாக்டர் பேராசிரியர் இரா. பி. சேதுப்பிள்ளையவர்கள், "நண்ணரிய சிவானந்த ஞான வடிவினராய்" உமையமர்ந்து விளங்கும் இமையாமுக்கண் அண்ணலார் சேவடி நீழலில் அயரா இன்பத்தில் திளைப்புறுக என் "ஞாலம் நின் புகழே மிக வேண்டும் தென் ஆலவாயில் உறையும் எம் ஆதியே" என வேண்டு

—ஔவை சு. துரைசாமிப் பிள்ளை.

## என்றுமுள தென்தமிழ் இயம்பி இசைகொண்டார்

எங்கள் ஆசிரியப் பெருந்தகை டாக்டர், ரா. பி. சேதுப் பிள்ளை அவர்களின் அன்பினையும் ஆசியினையும் கடந்த முப்பது ஆண்டுகளாக யான் பெற்றிருந்தேன். திரு. பிள்ளையவர்கள் மாணவரிடம் மிக்க அன்புடையவர்கள்.

அவர் பல சிறந்த சொற்பொழிவுகள் ஆற்றியும் அரிய நூல்கள் எழுதியும், சிறந்த மாணவர்களைத் தமிழ்நாட்டிற்கு அளித்தும், சமய உணர்ச்சியை ஊட்டி வந்தார்.

அவர் சைவராக இரு[illegible]ம் சமயத் துறையில் அவர்களுக்குப் பரந்த நோக்கம் உண்டு. "கால்டுவெல்ஐயர் சரித்திரம்", [illegible]ாண்டர்", "திருக்காவலூர்க் கோயில்" முதலிய அவருடைய நூல்கள் சமயத்துறையில் அவர்களுக்கிருந்த பரந்த நோக்கத்தைக் காட்டுவதாகும். கிருஷ்ணப் பிள்ளை அவர்களின் புலமை பற்றியும், வீரமாமுனிவரின் புலமை பற்றியும் பல சொற்பொழிவும் அவர் ஆற்றியுள்ளார். அவர் தம் வாழ்நாள் முழுவதும் தமிழ் அன்னைக்குத் தொண்டுபுரிந்து பொன்றாப் புகழ் பெற்றார். 1901 ஆம் ஆண்டு மார்ச்சுத் திங்கள் 2 ஆம் நாள் சென்னைப் பல்கலைக் கழகத்தினின்று ஓய்வு பெற்றார். ஓய்வு

பெற்றபின் திருக்குற்றாலத்தில் தாம் சில நாள் தங்கி ...ருக்கப் போவதாகத் தெரிவித்தார். ஆனால் இவ்வளவு விரைவில் அவர் நம்மை விட்டுப் பிரிந்துவிடுவார் என்று யாரும் நினைக்கவில்லை. இனி, அவரது தித்திக்கும் மணிவார்த்தைகளைக் கேட்கும் நாள் என்நாளோ! பரந்த நெற்றி புன்முறுவலோடு கூடிய திருமுகத்தைக் காணும் நாள் என்நாளோ!

பேராசிரியர் சேதுப்பிள்ளையவர்கள் பூதவுடல் மறைந்தாலும் அவர் தம் நூல்களின் வாயிலாக என்றும் நம்மிடையே இருப்பார். நாம் அவரின் அரிய புத்தகங்களைப் படித்து நம்மால் இயன்ற தொண்டினை நம் மொழிக்கும் நம் நாட்டிற்கும் நாம் செய்தல்வேண்டும். திரு. சேதுப்பிள்ளை அவர்கள் என்றும் உள தென்தமிழ் இயம்பி இசை கொண்டார். அவரது கொடைத் திறனையும் நம்மால் மறக்கமுடியாது. வாழ்க அவர்தம் புகழ்! வளர்க தமிழ் மொழி!

—பூ. ஆலாலசுந்தரன், தாம்பரம்.

## நான்கண்ட சொல்லின் செல்வர்

"முன்னம் அவனுடைய நாமம் கேட்டாள்
மூர்த்தி அவனிருக்கும் வண்ணம் கேட்டாள்
பின்னை அவனுடைய ஆரூர் கேட்டாள்........"

என்று வரும் திருத்தாண்டகத்தின் கருத்து எனக்கும் சொல்லின் செல்வர் சேதுப்பிள்ளை அவர்களுக்கும் உண்டான நட்பின் தொடர்பை ஒருவாறு விளக்கக்கூடும் என்று நான் எண்ணுகின்றேன். ஏறத்தாழ முப்பத்தைந்து ஆண்டுகளுக்கு முன்னர் நமது பிள்ளை அவர்கள் எழுதிய "திருவள்ளுவர் நூல் நயம்" என்னும் நூலை முதன் முதலில் வெளியிட்ட அன்பர் ஒருவர் மூலமாகத்தான் பிள்ளை அவர்களின் அறிவாற்றல்களை உணரலாயினேன். அந்த அன்பர் அப்போது எனக்கு ...ய அந்த நூலை ஒரு முறை படித்த போதே பிள்ளை ...ன் எழுத்து வன்மையும் ஆராய்ச்சித்திறனும் என்னைப் பெரிதும் கவர்ந்தன. அதன் பிறகு பேராசிரியர் ஆலால சுந்தரம், எம்.ஏ. அவர்கள் மூலம் நம் சொல்லின் செல்வரின் அருங்குண நலன்களையெல்லாம் கேட்டறிந்து பெரிதும் மகிழ்ந்தேன். பிறகு பல ஆண்டுகள் கழித்து அவர் தம் சொல்வன்மையை நேரில் கேட்டறிந்து வியப்புறலானேன்.

பேரறிஞர் சேதுப்பிள்ளை அவர்களிடம் நான் ...... ...டிருந்த அன்பு பிறை நுதலென்ன வளர்ந்த வண்ணமிருந்தது. பிள்ளை அவர்கள் என் அன்பைத் ...

எத்தகைய வாய்ப்பும் நேராமலிருந்தும் அந்தப் பெரியார் என் மீது கொண்டிருந்த பேரன்பு என்னை வியப்பிலாழ்த்தியது. அவர் என்னைக் கண்டால் உடன் பிறந்தான் ஒருவனைக் காண் பதற்கு ஒப்ப மிக்க மகிழ்ச்சியோடு கட்டித் தழுவிக்கொள்வார். இந்த உரிமை எங்கள் அன்பென்னும் கொடி பரவக் கொழு கொம்பாக அமைந்தது.

தமிழாசிரியர் கழகச் சார்பிலே சொல்லின் செல்வரைப் பாராட்டும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. அப்போது அவர்கள் புலவர்கள் நிலை குறித்து மிக்கஉணர்ச்சியோடு பேசிய பேச்சு இன்றும் என் உள்ளத்தில் பசுமையோடி நிற்கின்றது.

டாக்டர் அ. சிதம்பரநாதன் அவர்கள் என்னை ஒருமுறை "இவர் இக்காலப் பிசிராந்தையார்!" என்று அன்பும் நகைச் சுவையும் ததும்பக் கூறினார். நான் அத்தகைய பட்டத்திற்குச் சிறிதும் உரியவனல்லாதவனுயிருந்தாலும், டாக்டர் சேதுப் பிள்ளை அவர்களை நான் இறுதியாகக் காணும் வாய்ப்பினைப் பெற்ற நிகழ்ச்சி டாக்டர் A. C. செட்டியார் அவர்கள் கூற்று பிற ரிடம் அன்பு செலுத்தும் வகையிலேனும் பொருந்தும் என்றே எண்ணுகின்(

அவர் மறைவின் போது நான் தில்லையம்பதியிலே இருந் திருக்கின்றேன். எவ்விதமோ எனக்குள் ஓர் உணர்ச்சி தோன்ற அவர் மறைந்த அதே நேரத்தில் இரயில்பயணச் சீட்டுப் பெற்றுக் கொண்டு சென்னைக்குப் புறப்பட்டேன். பிசிராந்தையார் கோப் பெருஞ் சோழனை அவர் தம் இறுதிக் காலத்தே கண்டது போன்று நானும் எவ்விதமோ அந்தப் பெருந்தகையாரின் ஈமச் சடங்கின் போது ஓடோடியும் வந்து கலந்து கொண்டேன். "புணர்ச்சி பழகுதல் வேண்டா உணர்ச்சிதான் நட்பாங் கிழமை தரும்" என்னும் திருக்குறள் எனக்கு அப்போது நினைவிற்கு வந்தது.

மறைமலை அடிகளார் மறைந்தார். தமிழ்ப் பெரியார் வி. க. அவர்களும் தம் இன்னுயிரை நீத்தார். சொல்லின் செல்வரும் நாம் திடுக்கிடும் வகையிலே நம்மை விட்டு மறைந்தே போயினர். மறைந்த பெரியோர்களைப் போல் நாமும் அறிவாற் றல்களால் சிறந்து குணநலன்களால் உயர்ந்து அரிய பெரிய செயல்களைச் செய்து நமது மொழிக்கும் நாட்டுக்கும் மக்களுக்கும் பயன்படும் வகையில் வாழ உள்ள உறுதிகொள்ள வேண்டும் என்று நம்நாட்டு இளைஞர்களை நான் கேட்டுக்கொள்கிறேன்.

—**தமிழ்நெறிக் காவலர், பேராசிரியர் மயிலை சிவமுத்து.**

# இதழ்கள் தரும் இரங்கலுரைகள்

## தமிழ்ப் பொழில் சாய்ந்தது

ஆங்கிலம் ஆட்சிமொழியாக உயர்வும் பெருமையும் எய்தியிருந்த காரணத்தால் அமிழ்தினுமினிய நம் தாய் மொழி தாழ்மையும் சிறுமையும் உற்றுப் புறக்கணிக்கப்பட்டிருந்தபோதும், அறிஞர் சேதுப்பிள்ளையவர்கள் ஆங்கில மயக்கத்தில் அழுந்தாமல் தமிழ் இலக்கியப் பூங்காவில் திளைத்துக் கற்றறிந்த சான்றோராயினர்...........

சுருங்கக்கூறின் அவருடைய மறைவால் ஒரு தவப்புதல்வனை இழந்தாள். இலக்கியம் ஒரு புலவரேற்றைப் பறிகொடுத்தது. ஆசிரியரும் மாணவரும் ம் நல்லாசானைப் பிரிந்தனர்.

—தமிழ் நாடு.

## சொல்லின் செல்வர்

தமிழ் சம்பந்தமாக என்ன ஆக்க வேலை எங்கே நடந்தாலும் அங்கெல்லாம் தம்முடைய அறிவுரையும் தொண்டும் தேவைப்படுகிற விதத்திலே சொல்லாலும் செயலாலும் ஆற்றலாலும் ஈடு இணையற்று விளங்கினர். எல்லாருக்கும் புரிகிற தமிழிலே திருத்தமாக எழுதவும் பேசவும் தொடங்கினர். அத்தோடு சொற்களுக்கு உள்ள அழகையும் ஓசையின்பத்தையும் தம்முடைய தமிழ் நடையிலே கையாண்டு, மாணவர்களையெல்லாம் தமிழ் இன்பத்தில் திளைக்கும்படி செய்தார்! இது அவர் செய்த புரட்சி!

இனிய எளிய தமிழில் எழுதியும், இனிய எளிய தமிழில் பேசியும் தமிழிலுள்ள பழைய நூல்களை யெல்லாம் மாணவர்களுக்கும் பொதுமக்களுக்கும் எடுத்து விளக்க ஆரம்பித்தார் திரு. சேதுப்பிள்ளை! இதனால் தமிழ்நாட்டில் தமிழ் ஆசிரியர்களிடையேயும் மாணவர்களிடையேயும் ஒரு புதிய விழிப்பு ஏற்பட்டது. ஒரு புதிய மலர்ச்சி உண்டாயிற்று! பழமை, புதுமை இரண்டுக்கும் மத்தியில் ஒரு பாலமாக நின்று இத்தகைய அரிய தொண்டைச் செய்ததால், அவர் எங்கு பேசினாலும் அங்கு பண்டிதரும் பாமரரும் ஒன்று சேர்ந்து கூடினார்கள். அங்கே ஒரு கலகலப்பு நிலவியது.

—நவசக்தி.

## ஈடு செய்யமுடியாத பேரிழப்பு

பேராசிரியர் சேதுப்பிள்ளையவர்களின் மறைவு தமிழ் மொழிக்கும் தமிழ்மக்களுக்கும் ஏற்பட்டுவிட்ட ஈடு செய்ய முடியாத பேரிழப்பாகும்.

'தமிழ்ப்பகைவர்' கட்குத் திரு. சேதுப்பிள்ளையவர்களின் பேச்சும் எழுத்தும் அறைகூவலாக அமைந்திருந்தன. பிற மொழிக் கலப்பின்றித் தூயதமிழில் எக்கருத்தையும் எளிதில் அழகாக எடுத்து வைக்க முடியும் என்பதை மெய்ப்பித்துக் காட்டியவர்களில் திரு. சேதுப்பிள்ளையும் ஒருவராவர்.

தமிழ் மொழியிடம் எத்துணைப் பற்றுக்கொண்டிருந்தாரோ அத்துணைப்பற்று தமிழ்நாட்டின் மீதும் கொண்டிருந்தார். தமிழ்நாட்டில் இந்தி நுழைவதை அவர் வன்மையாகக் கண்டித்திருக்கிறார். தமிழர் தனியாட்சி பெற்றால்தான் தமிழ் வாழும் என்ற கருத்தை அவர் பலவிடங்களில் துணிந்து வலியுறுத்தியிருக்கிறார். —நம் நாடு.

## செல்வத்தை இழந்தோம்

அரசாங்க நிர்வாக மொழியாகவும் பாடமொழியாகவும் தமிழ் தழைத்து வரும் நேரத்தில் 'தமிழே மூச்சு' என்று வாழ்ந்த ஓர் அறிஞர் மறைந்தது மாபெரும் நட்டமாகும்.

இவ்விதம் இறுதிவரை தமிழே பேச்சு—தமிழே மூச்சு என்று வாழ்ந்த தமிழ்த்தாயின் தலைமகனுக்குத் தகுந்த நினைவுச் சின்னம் நிலைநிறுத்த வேண்டியது தமிழ்மக்களின் கடமையாகும். மாநிலக்கல்லூரியில் உ. வே. சாமிநாத ஐயர் சிலை இருப்பதுபோல, சென்னைப் பல்கலைக்கழகத்தில் சேதுப் பிள்ளையின் சிலை நிறுவுவது சிறப்புடையது ஆகும்.

—தினத்தந்தி.

## புகழ்பட வாழ்ந்த புலவர்

இரண்டு சர்வகலாசாலைகளில் தமிழ்ப்பணி புரிந்து, உயர் நிலை எய்தி விருதுகளும், பரிசுகளும் பெற்று நிறை வாழ்வு நடாத்தியவர் திரு. சேதுப்பிள்ளை. ஆராய்ச்சித் துறையில் குறிப்பாகத் திராவிட மொழிகளின் சொல்லாட்சி, கம்பராமாயணம் ஆகியவற்றில் நன்றாக உழைத்துப் பெருமையடைந்தவர். கல்வி வளர்ச்சிக்கு நன்கொடை வழங்கிப் புகழடைந்த தமிழ்ப் புலவர் என்று எல்லோரும் அவரை அறிவர்.

—தினமணி.

## தமிழின் அழகுவெள்ளத்தில் மூழ்கிய அறிஞர்

தமிழ்மொழியை வளர்ப்பதில் ஊக்கங்கொண்டு ஆராய்ச்சி கள் பல செய்து, பல நூல்களை எளியநடையில் அனைவரும் படிக்கத்தக்க முறையில் எழுதித் தமிழ் வளர்ச்சிக்கு ஆக்கம் செய்த ஆசான் அவர்.

அவருடைய ஆராய்ச்சி முழுதும் தமிழ்மொழி வளர்ச்சிக்கு மாத்திரமே பயன்பட்டது. மக்களின் பொதுஅறிவு வளர்ச் சிக்காக அவரது முயற்சி பயன்படுமுன் அவர் காலமெய்தி விட்டார். கம்பரின் கவிதைகளில் உள்ள சொல்நயம் அவரைத் தமிழின் அழகு வெள்ளத்தில் ஆழ்த்திவிட்டதால் இலக்கியங் களை எளிய நடையில் தரும் பணியில் மட்டுமே திளைக்கச் செய்து விட்டது.

—விடுதலை.

## மேதை மறைந்தார்

மேதை ஓங்கியுள்ள இடத்தில் செல்வம் குவிவது அரிது. ஆனால் திரு. சேதுப்பிள்ளை செல்வத்தையும் குவித்ததுமட்டு மில்லை; அதைத் தமிழ்ப் பணிக்காக வாரி வழங்கியது அவரது மற்றொரு தனிப்பெரும் சிறப்பு. அவர் நினைவு தமிழர் நெஞ்சில் நெடுநாள் பசுமையுடன் நீடிக்குமென்பதில் சந்தேகமில்லை.

—சுதேசமித்திரன்.

## பேராசிரியரை இழந்தோம்

டாக்டர். இரா. பி. சேதுப்பிள்ளை இயற்கை யெய்திவிட் டார். தவிர்க்க இயலாதவாயில், இறப்பு-அந்நெடுவாயிலினுள் நுழைந்து விட்டார் பேராசிரியர் சேதுப்பிள்ளை.

அவர் இன்று மண்ணுகி விட்டார். அவருடைய அருமை பெருமைகளைப் பலபடப் பேசுவதை விட, அவருக்குக் கைம்மாறாகச் செய்யத் தக்கது ஒன்று உண்டு. மண்டபம் எழுப்புவதோ? அன்று. சிலை நிறுத்துவதோ? அன்று. இவை செய்யினும் செய்யாது விடுப்பினும், சென்னை, அண்ணாமலைப் பல்கலைக் கழகங்களில் அன்னார் வழங்கியுள்ள நன்கொடை களும், அவற்றால் நடைபெற இருக்கும் நற்பணிகளும், அவர் புகழ் கூறும். ஆயின் செய்யத் தக்கது தான் என்ன? எங்கும் தமிழ் மணம் கமழச் செய்வதே அவருக்கு நாம் காட் டும் நன்றியறிதல். இதோ அவர் குரல்:

“இந்த நிலையிலே நம்முடைய சென்னை வானொலி நிலையம் ‘ஆகாஷ்வாணி’ என்று சொல்வதைக் கேட்டால் மிகவியப்பாக

இருக்கிறது. நம்முடைய இனிய தமிழ்ச்சொல் இருக்க, வேண்டாத ஒரு வடசொல்லை வழங்குவது கரும்பு இருக்க இரும்பைக் கடிப்பது ஒக்கும் என்பது என்னுடைய தாழ்மையான கருத்து....எங்கள் வானொலி என்ற சொல் மீண்டும் வழக்காற்றிலே வரவேண்டும்....வானொலி என்ற அழகான சொல் இருக்க, ஏன் ஆகாஷ்வாணி என்ற சொல்லைச் சொல்கிறீர்கள்? இது மெல்ல இந்தியைத் திணிக்கின்ற முறையல்லவா என்று உங்களைக் கேட்கின்றேன்.”

கோவையிலே கூடிய தமிழாசிரியர் மாநாட்டில், பேராசிரியர் முழங்கிய முழக்கம் இது. வாழ்க சேதுப்பிள்ளையவர்களின் தமிழ்த்தொண்டு. —திராவிட நாடு.

## சொல்லின் செல்வர்

“டாக்டர் பிள்ளையவர்களைத் தமிழுலகம் முழுவதும் சொல்லின் செல்வர் என்று போற்றியுள்ளது. அவருடைய சொற்பொழிவைக் கேட்டு உள்ளத்தைப் பறிகொடுத்தவர்கள் பல்லாயிரக்கணக்கானவர்கள். அவர் ஆற்றிய சொற்பொழிவுகள் இன்னும் பலருடைய செவிகளில் ஒலித்துக்கொண்டே இருக்கும்.

அவர் சொற்பொழிவு செய்கையில் பாடலை இசையோடு சொல்வதில்லை. ஆனால் சொற்பொழிவு முழுவதுமே இசையைப்போன்ற இனிமையுடையதாக இருக்கும். அவருடைய சொற்பெருக்கைக் கேட்ட பிறகு உண்டாகும் மனநிறைவு ஒரு சிறந்த இசைக் கச்சேரியைக் கேட்டால் உண்டாகும் மனநிறைவைப் போலவே இருக்கும். கொச்சை மொழிகள் இன்றி, மெல்லப் பேசினாலும் விரைவாகப் பேசினாலும் செந்தமிழ் நடை சிதறாமல் தெளிவு குறையாமல் இனிமை மேன்மேலும் ஏறிக்கொண்டேபோகும்படி பேசவல்லவர் அவர். அவர் பேசியதை அப்படியே எழுதிப்படிக்கலாம். நடையும் சரி, பொருளும் சரி, கச்சிதமாக அமைந்திருக்கும்.

பேராசிரியர் சேதுப்பிள்ளை உரையாடலிலும் வல்லவர். கேட்பவருக்குப் பொழுது போவதே தெரியாமல் சுவைபடப் பேசுபவர். பண்பால் உயர்ந்தவர். வள்ளன்மையிலும் சிறந்தவராக விளங்கினவர் பிள்ளையவர்கள்.

தமிழ்மக்கள் அனைவரும் அவருடைய பிரிவால் துயருறுகின்றனர். அவருடைய பெயர் தமிழ் இலக்கிய வரலாற்றில் ஒளி மணியாக நிலவும் என்பதை வருங்கால நிகழ்ச்சிகள் வெளிப்படுத்தும்.

—கலைமகள், மே, 1961.

## செந்தமிழ்ச் சேதுப்பிள்ளை

"பண்டிதர் தமிழுக்கும் பாமரர் தமிழுக்கும் பாலம் அமைத்தவர் திரு. சேதுப்பிள்ளை. இனிமையும், எளிமையும் அவர் எழுத்திலும் பேச்சிலும் இலங்கியது. எதுகையும் மோனையும் எளியோர்க்கு இல்லை என்ற அவலநிலை போக்கித் தமிழ்ச் செல்வத்தை எல்லோருக்கும் வாரிவழங்கிய செல்வர் அவர்.

கம்பன் புகழ்பாடிக் கன்னித்தமிழ் வளர்த்த அப்பெரியார், சங்க இலக்கியங்களில் ஆழ்ந்த ஆராய்ச்சி செய்தவர். அவரின் இலக்கியப் பனுவல்கள் தமிழன்னையின் சிறந்த செல்வங்கள்.

சீரிய சீலமும் பழகுதற்கு இனிமையும் பூண்டொழுகியவர் திரு. சேதுப்பிள்ளை. அவர் மறைவு தமிழ் இலக்கிய உலகில் ஈடுசெய்ய முடியாத ஓர் இழப்பாகும்." —புதுமை, மே, 1961.

## செந்தமிழுக்குச் சேதுப்பிள்ளை

"சொல்லின் செல்வர் காலமாகி விட்டார்கள்! மனம் தாங்கமுடியாத பேரிழப்பு இது. தமிழ்த்தாய் செங்குருதிக் கண்ணீர் வடித்து நிற்கிருள். இது தெய்வத்தின் திருவுளம்.

தமிழ் மாமேதைக்கு வணக்கம் சொல்லி, அன்னாரது துணைவியாருக்கு நம் ஆழ்ந்த அனுதாபங்களை வெளியிடுகிறோம்.

—உமா, மே, 1961.

## செந்தமிழ்ப் பிள்ளை மறைந்தார்

தமிழ்மொழியைத் தேனாக, தென்றலாக, இன்பமாக, இனிய சுவையாக, தமிழர்களுக்கு ஊட்டிவந்த மூதறிவாளர் டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளை அவர்கள்.

திரு. சேதுப்பிள்ளை அவர்களின் பேச்சில் எ, ல தமிழின் இனிமை எதுகை மோனை கூடி எழில் காட்டும்.

தம்மிடமிருந்த சொற்செல்வத்தை மற்றவர்களுக்கு வழங்கி வழங்கி இன்பங் கண்டதன்றி, தம்மிடம் குவிந்த பொருட் செல்வத்தையும் வழங்கித் திரு. சேதுப்பிள்ளை அவர்கள் இன்பம் கண்டார்கள். தன் அன்னைக்கும் தமிழ் அன்னைக்கும், பிறந்த இடத்துக்கும் பிறந்த நாட்டுக்கும் பெருமை தரும் வகையில் சொல்லாலும் செயலாலும் சொல்லின் செல்வர் சேதுப்பிள்ளை பணியாற்றினார்கள். தமிழ் வளர்ச்சிக்குப் பாடுபட்ட பெரியோர்களின் முதல்வரிசையில் வைத்து எண்ணப்படத்தக்க அவர்களின் மறைவு, தமிழுலகுக்குப் பேரிழப்பாகும். —மன்றம்.

## அன்னையின் கண்ணீர்

தமிழனை ஊரும் பேரும் உணரச் செய்தவர் அவர். 'இன்றைய நிலையை ஊட்டுவதே புலமை, வெறியை ஊட்டுவதல்ல' என்று நினைப்பாலும் உழைப்பாலும் சொல்லாலும் செயலாலும் வாழ்ந்து காட்டிய வள்ளல் அவர். அவரது எழுத்திலே சுவை சொட்டும். சொல்லிலே இன்பம் மணக்கும்.

வக்கீல் பட்டம் பெற்றவர் பேராசிரியர் சேதுப்பிள்ளை. வழக்காட ஒத்துழைப்பதைக்காட்டிலும், வாழும்வழி காட்ட உழைக்க எண்ணினார். 'மாணவர் திருந்திவிட்டால் மனிதன் உயர்ந்து வான்' எனக் கருதியவர்போல் வாத்தியார் தொழிலில்

ரியர்களுக்கும் மாணாக்கர்களுக்கும் ஏனைய தமிழ் மக்களுக்குமே ஓர் எடுத்துக் காட்டாக விளங்கிய அவர் மறைவால் தமிழன்னை கண்ணீர் வடிக்கின்றாள்.

## தமிழ் உள்ளவரையில் அவருக்கு மறைவு இல்லை.

டாக்டர் ரா. பி. சேதுப் பிள்ளை அவர்களுடைய பேச்சு, சுபாவம், தோற்றம் எல்லாமே இனிமையாகத்தான் இருக்கும். அவரது மேடைப் பேச்சு, தமிழைக் கற்றுணர்ந்தவர்கள்தான் அனுபவிக்கமுடியும் என்பதில்லை. தமிழே அறியாத வேற்று நாட்டவர்கூட அவரது சொல்வளத்திலே-அவற்றுடன் பிறக்கும் அழகு, குழைவு அலங்காரம் இவற்றிலே கட்டுண்டு பின்னர் அதன் காரணமாகத் தமிழ் மொழியினை ஆவலுடன் முறையாகப் பயின்றிருக்கிறார்கள்!

அவரது தோற்றத்தில் தென்படும் தூய்மையையும் எளிமையையும் அருளையும் கண்டவர்கள் நெருங்கிப் பழக முற்பட்டால் சுபாவத்திலுள்ள பண்பினையும் நன்கு புரிந்துகொள்வார்கள். உரையாடலை ஒரு கலையாகப் பயின்று சொல்லின் செல்வராய்த் திகழ்ந்த அவர் சினம் என்ற சொல்லை மட்டும் அறியாதவரோ என வியப்புறுவார்கள்.

திரு. வி. க. அவர்கள் ஒருசமயம் பேச்சாளர் சேதுப்பிள்ளையைச் சபையினருக்கு அறிமுகம் செய்து வைக்கும் வகையில், "தமிழ் பேசப் போகிறது" என்றார்கள். ஆம்! சேதுப்பிள்ளை அவர்களுடைய மூச்சுக் காற்றே தமிழ்தான்! அப்படி இருக்கையில் அவர் மறைந்துவிட்டார் என்பதை எப்படி ஒப்புக்கொள்வது! தமிழ் உள்ளளவும் அவருக்கு மறைவு இல்லைதான்.

## சேது மறைந்தனன்

இலக்கியம்தன் எழிலை யிழந்தது
இலக்கணம்தன் வடிவை யிழந்தது
விளக்கெனும்கவி ஒளியை யிழந்தது
வெற்றிவேல்தன் கூர்மை யிழந்தது
வளர்த்தஅன்னை மகனை யிழந்தனள்
வந்ததென்றல் குளிரை யிழந்தது
உளக்கலைதன் மெருகை யிழந்தது
உத்தமர்தம் நினைவை யிழந்தனர்.

நாகரீகம் மனையை யிழந்தது
நல்லபண்பு துணையை யிழந்தது
ஆகமின்று தீயி லெரிந்தது
அம்மாவோஎம் சேது மறைந்தனன்!
சோகமுற்ற எம்தமிழ்த் தாயினி
தூயபிள்ளையைக் காண்ப தெவ்விடம்?
வேகலாமவன் மேனி அவன்தமிழ்
தீயெதிர்க்கும் வெண்டமி ழல்லவோ?

-தென்றல்.

## மறைந்தாயோ சொல்லின் செல்வா!

ஆற்றுமோ நெஞ்சம் அருமைத் தமிழ்மாண்பு
போற்றுமோர் செஞ்சொற் புலவோனைக்—கூற்றுவன்
வஞ்சித் துயிர்குடிக்க வந்துற்ற தென்னுமொரு
வெஞ்சொல் செவிதாங்கு மோ?
நாட்டில் மொழியினில் நம்தமிழர் தம்நலத்தில்
வாட்டம் தவிர்த்திருந்த வள்ளலைப்—பாட்டிசைக்கும்
நீலக் கடல்போல் நிமிர்ந்தொலிக்கும் நெஞ்சனைக்
காலனோ கைக்கொண் டனன்?
சொல்லுஞ்சொல் தேர்ந்தான் சுவைத்தமிழின் காவலன்
வெல்லும்சொல் வல்ல விறற்புலவோன்—தொல்புகழ்க்கே
தொண்டாற்றித் தாயின் துயர்துடைத்துச் சோர்ந்தனனே!
கண்டாற்று தல்இனிஎக் கால்!

—தமிழ்ச் செல்வி, புதுவை.

# இரங்கற்பாக்கள்

என்றினிக் காண்போம்! எங்கினிக் காண்போம்!
சொல்லின் செல்வர்; சொற்பெருங் கொண்டல்;
நாவலர் போற்றும் நற்பெருந் தலைவர்;
சேது வென்னும் செந்தமிழ்ப் பாவலர்;
நூல்பல யாத்துள நுவலரும் சிறப்பினர்;
இனிய பண்பினர்; யாத்த நண்பினர்;
திருக்குறள் போற்றும் செந்தமிழ்க் காவலர்;
தமிழ்ப் பகை ஓட்டும் தண்டமிழ்ச் சான்றோர்;
மறைந்தனர் அந்தோ! வன்துயர் நம்மால்
பொறுத்தற் கரிதே! பொறுத்தற் கரிதே!
என்றினிக் காண்போம்; எங்கினிக் காண்போம்;
நன்றே அவர்தம் நற்றமிழ்ப் பணியை
என்றும் ஆற்றுவோம்! ஏத்துவோம் அவரை
சேதுவின் தமிழ்நெறி செல்லத் துணிவோம்
சேதுவின் செந்தமிழ் செழிக்கச் செய்வோம்
வாழ்க அவர் புகழ் வண்டமிழ் நாட்டில்
ஆழ்க தமிழ்ப்பகை அவருயிர் மகிழவே.

—சி. இலக்குவனார், எம். ஏ., எம். ஓ. எல், மதுரை.

எஞ்சேது திருமகனே, இனியதமிழ்ப் பெரும்புலவா,
செஞ்சொல்லால் விருந்தளித்துத் தீந்தமிழைக் காத்துவந்தாய்;
இஞ்ஞான்றும் தமிழ்க்காக்க இருந்திடுவாய் என்றிருந்தோம்;
பஞ்சாக்கிப் பறந்தனையே! பதறுகின்றோம்! இதுமுறையோ?

ஒருசமய வெறியின்றிச் சிறுமதியர் போலின்றி
அருந்தமிழின் பெருநெறியின் றகலாது தொண்டுசெய்தாய்;
பெருமகனே, எஞ்சேது திருமகனே, பறந்தனையே!
அருங்குணத்தை என்றென்றும் அவனியிலே யாம்மறவோம்!

கற்றிருத்தல் மட்டுமன்றிக் கனிவுகொளல் மட்டுமன்றி
உற்றநல்ல பண்பினுக்கும் உறைவிடமாய்த் திகழ்ந்தனையே!
நற்றமிழா, எஞ்சேது நன்மணியே, சொற்செல்வா,
பெற்றதமிழ் நாடென்றும் பெரிதுன்னைப் போற்றிடுமே!

நெல்லைநகர் தனிற்பிறந்து நல்லிருபல் கலைக்கழகம்
பல்வகையில் போற்றிடவே எஞ்சேது பணிபுரிந்து
நல்லபல தமிழ்க்கடமை நன்றாற்றி நினையடைந்தார்
அல்லலறுத் தாள்பவனே, அடைந்தவரை ஆண்டருள்வாய்!

—அ. கி. பரந்தாமனார், எம். ஏ., மதுரை.

ஆர்பிஎஸ் என்று கூறில் அனைவரும் அறியும் வண்ணம்
சீர்பெறு சேதுப் பேரோய் செகத்தினில் வாழ்ந்த நின்போல்
பேர்பெறு பெரியர் யாரே? பேசுமின் மொழியில் வல்லோய்!
கார்பெறு பயிரே போல்யாம் காத்திடக் கரந்து சென்றாய்!

பற்பல நூல்கள் செய்தாய்! பாரிலுன் றனையே போல
நற்பயன் பெற்றார் உண்டோ? நனிதமிழ்ப் புலவ! நின்பால்
உற்றவர்க் குய்தி காணும் உயர்நிதி மிகவும் கொண்டாய்!
எற்றியாம் நின்னைக் கண்டு இன்மொழி வினவக் கேட்போம்.

இரந்தவர்க் குதவும் வண்மை; இன்முகம் காட்டும் கண்கள்
சுரந்திடும் உணர்வி னோடும் தூயநூல் ஆயும் உள்ளம்
பரந்திடும் கடலைப் போலப் பயன்பெறு அறிவாம் இன்ன
கரந்திடத் தூலம் நீத்தாய்! கவின்பெறு சேதுப் பேரோய்!

இலக்கியப் பயன்ஆய் நின்றன் இனியபண் பாடு நோக்கித்
துலக்கிடும் டாக்டர் பட்டம் தோய்ந்திட அளித்த மேலோர்
கலக்குற இந்நாள் நீத்துக் கண்ணுதல் இறைதாள் சேர்ந்த
நலக்குணக் குன்றே! நின்னை யாங்களும் காணப் போமோ.

கேட்டவர்ப் பிணித்த லோடு கேளாத யாவர் உள்ளம்
வேட்புற மொழிதல் மேலாம் மேவுவள் ளுவன்சொல் லிற்குத்
தாட்டிகப் பொருளாய் வாழ்ந்த தயவுசேர் சேது வள்ளால்!
நாட்டுநாள் யாங்கள் போற்ற நல்லிறை தாளில் வாழி!

—வித்துவான், தி. மு. சங்கரலிங்கம், திருவாமாத்தூர்.

செந்தமிழ் இன்பம் இயம்பி இசைகொண்டு
நந்தம் தமிழுலகில் நண்ணியவர்—அந்தரத்தும்
பேர்சேர வேண்டியோ போந்தார்விண் ணுட்டினுக்குச்
சீர்சேதுப் பிள்ளையவர் சேர்ந்து.

—ஆ. சிவலிங்கனார், மயிலம்.

கல்லுங் கரையும் சொல்வல்லான்
கன்னித் தமிழின் காவலனும் !
அல்லும் பகலும் அருந்தமிழின்
ஆக்கம் காக்கும் நோக்குடையான் !
சொல்லின் செல்வன் உயிர்துறந்த
துயரம் சொல்லுந் தரமன்றே !
வல்லான் சேதுப் பிள்ளையவன்
மாபுக ழென்றும் மறையாதே !

—அ. சு. பாவலர், கோம்பை.

“ தமிழ்ச் சேது ” மறைந்ததுமன் ! ‘ தமிழின்பம் ’
தமிழர்க்குத் தளரா தீந்த
தமிழ்ச்செல்வம் ஒளித்ததுமன் ! தமிழிளைஞர்
கையினிலே சார்ந்தி லங்கத்
தமிழ்ப்படை ‘ வே லும்வில்லும் ’ தந்திட்ட
படைவீடு சரிந்த தந்தோ !
தமிழ்ப்பெருமை யணிகாட்டும் ஆடிநிலம்
சாய்ந்துடைந்து தகர்ந்த தந்தோ !

ஆங்கிலத்தில் வழக்கறிஞன் பட்டமது
பெற்றிட்டா யானாலும் நீ
பாங்குறுசெந் தமிழாலே வாழ்ந்திட்டாய்;
பகர்ந்தார்கள் ‘ டாக்டர் ’ என்றே
சங்கணுறத் தமிழ்வளர்ச்சிக் கைம்பதினா
யிரமளித்த இனிய வள்ளால் !
எங்களுற்றார் நின்னாலே பயனுற்ற
தமிழரெலாம் ! இனியென் செய்வார் !

பேச்செலாம் தமிழ்க்காக்கி எழுத்தெல்லாம்
தமிழ்நூலாய்ப் பிறங்கத் தீட்டி
மூச்செலாம் தமிழ்க்கென்றே சென்னைப்பல்
கலைக்கழகம் முற்றித் தொண்டு
மீச்செலவே இருபத்தை யாண்டுதமிழ்த்
துறையாய்ந்து வீற்றி ருந்தாய் !
ரிந்திட்டாய் !
யடிமலரில் அமைந்து வாழி !

—புலவர் ‘ அரசு ,’ சென்னை.

சீர்தவழும் சொற்சேது செல்வரா
யிராசவல்லி புரத்தில் தோன்றி
நார்தவழும் நல்லவராய் நற்றமிழ்நூ
லாராய்ந்து நயந்து போற்றப்
பேர்தவழும் குணக்குன்றாய்ப் பீடுடைய
நூல்பலவும் பின்னும்பதிப் பித்(து)
ஏர்தவழும் முறையில்விடுத் திறைவனடி
யெய்தமைகேட் டின்ன லுற்றேன்.

—தே. ந. இராசமாணிக்கம், கீழையூர்.

பொன்னி போல்வதோர் புகழினைப் புரியுநற் பொருனை
அன்னி நாட்டினிற் காமரு சேயென வுதித்தே
உன்னி யாடிய வுனதிருப் பதங்களைக் காண
என்ன மாதவஞ் செய்ததெம் மெழிற்றமி ழகமே.

மன்னு வானமிப் பல்கலைக் கழகமோ டாரும்
மின்னு தாரகை மாணவர் மிளிர்தரச் சூழ்ந்த
வன்ன மாமதி நீயுனை வாழ்த்திட வீண்டிங்
கென்ன மாதவஞ் செய்ததெம் மெழிற்றமி ழகமே.

அன்ன ராக்கிடு நற்றமிழ் தனிற்றனிச் செங்கோல்
மன்ன னாயொளிர்ந் தெம்முள மகிழ்ந்திடச் செய்த
உன்னை யீன்றுதன் னுளமெலா முவகையே பூக்க
என்ன மாதவஞ் செய்ததெம் மெழிற்றமி ழகமே.

பன்ன லாவதிற் சொற்சுவைப் பதமெலாங் கூட்டித்
தன்ன தாக்கியே தகவொடு தருசொலின் செல்வச்
சின்ன மாயொளிர் சேதுவாம் செழுமகற் சார
என்ன மாதவஞ் செய்ததெம் மெழிற்றமி ழகமே.

இந்திரா சோமசுந்தரம்,
எம். ஏ., பி. எஸ்சி., எம். லிட்., எல். டி.

தூய்மைத் தமிழ்நெஞ்சே! சொற்செல்வ! நற்றமிழின்
ஆய்வுத் துறைத்தலைவ! ஆண்டகையே!—போயினையோ!
செந்தமிழ்த்தா யின்மகனே! சேதுப்பிள் ளாயா! ஆ!
எந்தநாள் காண்போ மினி.

—ச. சீத்தாராம், கோம்பை.

மாமலர் நெடுங்கண் மாதவியும்,
　　மண்டோ தரியும், கண்ணகியும்,
தீமை செகுத்த திலகவதி,
　　திருமக ளேயாம் சீதையுமே,
காமங் கடந்த மேகலையும்
　　கலந்துன் நாவில் ஒளிபெற்றார்,
யாம் இனிச் சென்றி யார்மாட்டோ
　　எங்கள் பெருமை கேட்பதுவே ?

—வ. பா. தாமரைக்கண்ணியார்.

ஊரும் பேரும் தமிழாக்கி
　　உயர் நூல் தமிழில் உண்டாக்கி
யாரும் விரும்பித் தமிழ்மொழியை
　　இனிதாய்க் கற்க வழிசெய்தீர் !
பாருக்குள் நும் பணிபோலப்
　　பண்பா யெவரும் செய்திலரே !
யாரும் வருந்த மறைந்தீரே
　　என்று நும் தமிழைப் பயில்வோமே.

—வெண்பாவூர், பொ. திருஞானம்.

தோன்றிற் புகழொடு தோன்றவென்ற சொற்கேற்ப
ஆன்ற குடிப்பிறந்த அண்ணலவர் இருந்தமைந்தார் ;
சான்ற ஒழுக்குடையார்; சால்புமொழி கேட்பதற்கே
தோன்று உலகத்தோர் தூக்கியக மணைத்துவிட்டார் !

தமிழுக்குத் தந்தையவர்; தாரணிக்குப் பெருமையவர் ;
கமழ்கின்ற கருணைக்குக் காட்டவொண்ணு எல்லையவர் ;

உமிழ்கின்ற பேச்செல்லாம் ஊறுகின்ற தமிழ்ச்சாறே
அமிழ்தமெனத் தமிழன்பர் ஆருயிரை ஆக்கிவிடும்.

சொல்லுக்குச் செல்வரவர் ; சொர்ணத்தின் தோன்றலவர் ;
வில்லுக்குப் பெருமையரும் வீரன்தனிப் புகழ்பேசக்
கல்லுருகக் கவிபாடும் கம்பர்தனைச் சேர்ந்தாரோ !
நல்லுலகில் வாழவில்லை நம்முயிரில் வாழுகின்றார் !

K. V. தாட்சாயணி, M. A.,

# வெந்துயர்க் கடலில் வீழ்த்தார்

அன்பினால் எவர்க்கும் இன்ப
அமிழ்தெனும் தமிழை நல்கி
கண்பிலாப் பகைவர் கூட
நயந்திடும் வண்ணம் வாழ்ந்த
பண்புள சேதுப் பிள்ளை
பார்மகள் புலம்பிச் சோர
விண்ணுல கெய்தி நம்மை
வெந்துயர்க் கடலில் வீழ்த்தார்.

## தமிழகம் வரச் சென்றாரோ?

நகைச்சுவை வல்ல நல்ல
நாவுடைச் சேதுப் பிள்ளை
பகைச்சுவை வளர்த்துப் பாரைப்
போர்க்களம் ஆக்கும் பொல்லா
வகைக்கலை பயில்வா ரோடு
வாழ்தலை விட்டு வானோர்
தகைக்கலை கற்று மீண்டும்
தமிழகம் வரச்சென் றாரோ?

## விரிகடலாமோ சொல்லீர்?

வெள்ளம்போல் தமிழர் கூட்டம்
வெறியிலா நெறியின் றோங்கக்
கள்ளத்தை நீத்து நல்ல
கலைகளைக் காத்த பிள்ளை
உள்ளத்தோ டுடலைக் காண
துலைபவர் வடித்த கண்ணீர்
வெள்ளந்தான் மண்ணைக் காக்கும்
விரிகட லாமோ சொல்லீர்!

## அவரைக் காவாத அறமிருந்தென்?

கற்றவர் கழகத் தெங்கும்
கவின்நிலா வானைப் போல
உற்றுயர் சொல்லின் செல்வ
உரமிகு வேந்தைக் கூற்றுப்

பற்றியே சென்ற தென்றால்
பாரிடை யாரைக் காக்க
மற்றுள அறங்க ளெல்லாம்
மடிந்திடா திருந்த அம்மா!

அம்மா!

கண்கவரும் அவருடைய கட்டமைந்த உடலெங்கோ?
பண்ணுருவ மொழிபொழியும் அவர்பண்பு வாயெங்கோ?
பெண்ணுருவும் ஆணுருவும் பெற்றோங்கும் பெம்மானின்
பொன்னுருவில் விளங்குதிருப் பொடியுருவாய்ப் போயினவோ?

அந்தோ!

ஈட்டிய பொருளெல்லாம் கல்விக்கே ஈந்தளித்துக்
காட்டிய அவருடைய கைமழையும் கடுநெருப்பு
மூட்டிய பொன்னுருவ முதல்வன்தன் திருமேனித்
தீட்டிய திருநீறாய்ச் சென்றமைந்து கொண்டதுவோ?

ஆ! ஆ! கெட்டோமே!

நாட்டிடத்தும் மொழியிடத்தும் நல்லமுதத் தேனூறும்
பாட்டிடத்தும் கலையிடத்தும் அவர்க்கிருந்த பற்றெல்லாம்
கேட்டினிக்க வேட்டவரைக் கேடறியாப் பேரின்ப
வீட்டிடத்தோர் கொண்டேக விட்டிங்கே கெட்டோமே!

அறிந்திலமே!

இன்னுமொரு பத்தாண்டேல், இவ்வுலகில் அவரிருந்து
மன்னுபுகழ் தமிழ்வளர்த்து மனைவியுடன் மகிழ்ந்திருக்க
எந்நலமும் தருமிறைவன் இசைந்திருப்பின், அதற்குள்ளே
பொன்னுலகம் வறிதாகிப் போய்விடுமோ? அறிந்திலமே!

அகலுலகம் பாழாமே

பிறப்பித்த உயிர்க்கெல்லாம் பேரின்பம் தந்தருள
இறப்பிக்கும் அருளிறைவன் எண்ணில்லா விளையாட்டைச்
சிறப்பித்துப் பாராட்டும் தெள்ளறிவைப் பெற்றில்லா
அறப்பித்தர்க் கவரில்லா அகலுலகம் பாழாமே!

## நேற்றிருந்தார் இன்றிலையே!

முற்றாத மொழிக்கெல்லாம் முன்தோன்றி முந்நீர்போல்
வற்றாத நற்கலைகள் வளர்த்தோங்கும் வான்தமிழைப்
பற்றாகக் கொண்டேபல் கலைக்கழகத் தமிழ்த்துறையின்
நற்றாளாய் நேற்றிருந்த நம்புலவர் இன்றிலையே!

## இருந்தென்ன? போயென்ன?

ஊற்றிருக்கும் தமிழமுதை உலகுவப்பப் பொழிமுகிலைக்
கூற்றுவன்கைக் கொடுத்தந்தோ! குலைந்தலையும் நாமெல்லாம்
நேற்றிருந்தோர் இன்றில்லை என்றுரைக்கும் நெடும்புகழை
ஏற்றிருக்கும் இவ்வுலகில் இருந்தென்ன? போயென்ன?

அஞ்சாத நன்னெஞ்சால் அழியாத பெருந்தமிழை
எஞ்சாம லுணர்ந்தோதி எல்லார்க்கும் இன்பூட்டி
அஞ்ஞான இருள்கற்றும் அறிவொளியைக் காவாத
விஞ்ஞானம் இருந்தென்ன? விரைந்தழிந்து போயென்ன?

—திரு. க. பெருமாள், எம். ஏ.

இனித்தம் கனியும் பேச்சழகும்,
இன்பக் கோல நடையழகும்,
பனித்த சடையான் பாதமலர்
பற்றி நெகிழும் பண்பழகும்,
கனியும் தேனும் கன்னலுமே
கலந்து வழங்கும் தமிழ்அழகும்,
இனியான் காணப் பெறுவேனோ?
எங்கள் சேதுப் பெருமானே!

—வல்லை. பாலசுப்பிரமணியம்.

சொல்லின் செல்வர்நம் அல்லலின் பகைவர்
மேனாள் இருந்தவர் இந்நாள் இலரே!
ஐயகோ! கூற்றமே! சாதகத் தில்லாக்
கோதெனப் பிறரைக் கொண்டிலை கொல்லோ?

— நாஞ்சில். கா. கணபதி.

# செந்தமிழை மறந்தறியாச் சேதுப் பிள்ளை!

முத்தமிழ் தன்னையே நல்லுயிராய்—உயிர்
மூச்சது வாய்நறுந் தெள்ளமுதாய்
இத்தரை மீதினில் கொண்டவரை—அதற்
கென்றுயிர் வாழ்ந்தநம் உத்தமரை

புத்தணி செந்தமிழ்த் தாயினுக்கே—பல
பூட்டிம கிழ்ந்தநம் பிள்ளையினை
பித்தம னத்தினன் காலனவன்—தமிழ்
பேசிம யக்கிய ழைத்தனனோ?

கூற்றுவன் வந்துடல் தன்னிலிருந்—துயிர்
கூறுப டுத்தியே சென்றுவிட்டான்!
ஆற்றரும் வெந்துயர் உற்றவராய்—சிலை
ஆகியே மாந்தரும் நின்றுவிட்டார்!

தேற்றிட யாருளர் யாவருமே—இங்கு
தேம்பியே வாடிடும் போதினிலே?
மாற்றரும் வெந்துயர் மாற்றிடவே—ஒரு
மாமருந் துண்டுகொல் மாநிலத்தே?

பாலெனத் தேனெனப் பேசிடுவார்—அவர்
பண்புடை யார்மிக அன்புடையார்
"வேலென வில்லென"த் தீட்டிடுவார்—மன
வேதனை தன்னையே ஓட்டிடுவார்

"ஊரினைப் பேரினை"க் கூறிடுவார்—அதன்
உண்மையைக் கண்டுவி ளக்கிடுவார்
வாரிரெ னத்"தமிழ்" மாந்தரையே—மன
மார, "வி ருந்து"க்க ழைத்திடுவார்!

மன்னவர் மூவரும் போற்றிவந்த—உயர்
மாண்புறு தாய்மொழி செந்தமிழில்
அன்னவர் ஆக்கிய நூல்களெலாம்—அழி
யாது,நி லைத்திடும் நாமறிவோம்!

ஆழ்ந்தக ருத்துடன் பிள்ளையவர்—எழுந்
    தாற்றுவர் சொற்பொழி வார்வமுடன்!
ஆழ்கடல் பிள்ளையின் நெஞ்சமதோ? அதில்
    அற்புதச் செந்தமிழ் நல்லமுதோ?

வாழ்வினில் நல்லுணர் வெய்திடவே—ஒரு
    மாமருந் தோதமிழ்? என்றுருகி
வீழ்ந்துகி டந்திடும் உள்ளமெலாம்—தமிழ்
    மேன்மைய றிந்திடும், துள்ளியெழும்!

எந்தமிழ் எந்தமிழ் எந்தமிழ் என்றவர் வாய்திறப்பார்
வந்திடும் உள்ளிருந் தூறியே வண்டமிழ்த் தேனருவி
சிந்திடும் நன்மொழி கேட்பவர் சிந்தைமி கக்குளிர்ந்தே
செந்தமிழ் தானமிழ் தென்றொரு சத்தியம் செய்திடுவார்!

தாயினும் மேலெனும் பைந்தமிழ் தானுயர்ந் தோங்கிடவே
ஆயிரம் ஆயிரம் அள்ளிவ ழங்கிய வள்ளலவர்
காயமே பொய்யெனும் காசினி தன்னிலே நன்றியுள்ளோர்
வாயிலும் நெஞ்சிலும் வாழ்ந்திடு வார்நிதம் வாழ்ந்திடுவார்!

நோயின்றி ஆண்டுகள் நூறிருந் தன்னவர் வாழ்ந்திடவே
தாயின்றி நின்றிடும் சக்தியின் தண்ணருள் வேண்டிநின்றோம்
தாய்க்கொரு செந்தமிழ் தன்னிலே காதலும் தான்மிகவே
தாயவள் பொன்னடி தன்னிலே பிள்ளையைச் சேர்த்தனளே!

சிந்தனையைப் பேரறிஞர் மறந்திட் டாலும்
திரையதனை நீள்கடல்தான் மறந்திட்டாலும்
விந்தையிலும் விந்தையெனக் குழவிக்குத் தாய்
விருப்பமொரு பால்கொடுக்க மறந்திட்டாலும்

அந்தமிலாப் பேரொளியைப் பத்த ரெல்லாம்
அகங்குழைந்து நினைந்துருக மறந்திட் டாலும்
செந்தமிழை மறந்தறியாச் சேதுப் பிள்ளை
செய்தபெருந் தொண்டதனை மறவோம் நாமே!

—சௌந்தரா கைலாசம்

# எங்கே சொல்லின் செல்வர்?

அவர் எங்கே ஐயா
அவர் எங்கே

அவனி வாழ்தமிழர் அலறித் துடித்தேங்கிக்
கவலைக் கடல்வீழக் காற்றோடு காற்றான் (அவர்)

பெற்ற பொற்றாயைப் பேசுந் தமிழ்த் தாயைப்
பற்றார் உளம் பற்றிப் பாராட்டுச் செய்திடவே
உற்ற பொருளெல்லாம் ஓவா தளித்துயர்ந்து
கற்றாவின் மனம்போலக் கசிந்துருகி நின்றிட்ட (அவர்)

பாரோர் புகழ்ந்தேத்தும் பண்பிருந்தும் வாழ்வுற்ற
சீரார் செழுந்தமிழர் செம்மையுற வேண்டி
ஊரோடு பெயருணர்த்தி உள்ளுணர்வு கொளச்செய்து
யாராலும் வெலற்கரிய ஆற்றல் படைத்திருந்த (அவர்)

தவழும் குழவிதரும் தங்க மழலையெனக்
கவரும் தமிழ்ப்பேச்சால் களிப்புக் கடல் வீழ்த்திச்
சுவறு சுவையமிழ்து சோரா தளித்திருந்து
தவமாம் தமிழ்ப்பணியைத் தாழாது செய்திட்ட (அவர்)

பொதிகை மலைகாட்டிப் பொன்னூர் தமிழூட்டிக்
கதியாம் பரம்கூட்டிக் கம்பன் திறம்நாட்டி
மதியால் பகைபோட்டி வளரும் புகழ்மீட்டித்
துதியால் முருகாட்டிச் சொல்லின் வளங்காத்த (அவர்)

தென்றல் உணர்ந்தவரே தெம்மாங்கு கேட்டவரே
மன்றல் மணத்தையெலாம் மணிநாக்கில் நுகர்ந்தவரே
சென்றார் எனச்செப்பிச் சிந்தை மாய்க்கின்றார்
என்றன் உயிர் வாட்டி எங்கோ மறைந்திட்ட (அவர்)

—எஸ். சிவராமலிங்கம், பி. ஏ., (ஆனர்சு) சென்னை.

# இலக்கிய விளக்கு *

அன்னை சொர்ணம்மாள் அறுபத்தைந்து ஆண்டுகட்குமுன் ஏற்றிவைத்த இலக்கிய விளக்கு கண்ணொளிக்கு எட்டாக் கருத் தொளியில் கலந்துவிட்டது.

சொல்லின் செல்வர்-பேராசிரியர்-டாக்டர்-ரா. பி. சேதுப் பிள்ளை அவர்கள் இன்று காலை 11-50 க்கு இறைவன் திருவடி நீழலை அடைந்தார்கள். ஆம். அரை நூற்றாண்டுக் காலம் தமிழ்த்தாய்க்குத் தனிப்பெருந் தொண்டாற்றிய தமிழர் தலைவர் மறைந்துவிட்டார். ராசவல்லிபுரம் தந்த எங்கள் தமிழ் ராசா தமிழ்நாட்டின் தலைநகரில் தமது இறுதி ஊர்வலத்தை முடித்துக் கொண்டார்.

அவர்தம் மீளாப் பெரும்பிரிவால் மாளாத் துயரில் மூழ்கிக் கிடக்கும் நம் அன்னை ஜானகி அம்மையாருக்கு யார்தான் என்ன தான் ஆறுதல் கூற முடியும்?

பேராசிரியர் அவர்கள் தம்பால் கல்வி பயிலும் மாணவர்களை எல்லாம் தம் குழந்தைகளாகவே கருதி அன்பையும் அறிவையும் ஊட்டி வளர்த்து வந்தார். இன்று அந்த மாணவர் உலகம் தம் கண்கண்ட அருள் தெய்வத்தை இழந்து அநாதைகள்போல் [illegible]க்கிறது.

பேராசிரியர் அவர்கள் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் ஆறு ஆண்டுக் காலமும் சென்னைப் பல்கலைக் கழகத்தில் கால் நூற்றாண்டுக் காலமும் தலைசிறந்த தமிழ்ப்பணி ஆற்றினார்கள். இவ்விரு பல்கலைக் கழகங்களிடமும் அவர் கொண்டிருந்த நன்றியும் பக்தியும் கொஞ்சமன்று. இவ்விரு பல்கலைக் கழகங்களுக்கும் இருபத்தையாயிரம், இருபத்தையாயிரம் நன்கொடை தந்து முதன்முதலாகத் தமிழ்நாட்டுப் பல்கலைக் கழகங்களில் தமிழாராய்ச்சிச் சொற்பொழிவுகள் நிகழ வழிகண்ட புலவர் உலகப் புரவலர் அவர். அதுமட்டுமோ? இன்று காலை பொழுது புலர்ந்தது முதல் தாம் மூச்சு முடியுமட்டும் சென்னைப் பல்கலைக் கழகம் பற்றியும் அதன் துணைவேந்தரைப்பற்றியும் எண்ணி எண்ணிப் பித்தாய்ப் பிதற்றிக் கொண்டு இருந்தது சேவையில் ஊறிய அவர்தம் ஆவி.

பேராசிரியர் அவர்கள் தமது பெயருக்கு ஏற்பப் பழமைத் தமிழுக்கும் புதுமைத் தமிழுக்கும் "சேது" வாய் விளங்கிச்செய்த தொண்டே தொண்டு.

---

* இவ்வுரை சென்னை வானொலியில் 25-4-1961 இரவு 9-30 மணிக்கு ஒலி பரப்பப்பட்டது.

இன்றைய தமிழிலக்கியத்தின் மறுமலர்ச்சிக்குப் பதிப்பால் வழிகண்டார் சாமிநாத ஐயர்; பாட்டால் வழிகண்டார் பாரதியார்; பத்திரிகையால் வழி கண்டார் திரு. வி. க. இன்பமே வடிவெடுத்த எழுத்தாலும் பேச்சாலும் வழிகண்டார் சொல்லின் செல்வர்.

பேராசிரியர் அவர்கள் இன்று காலைவரை நம்மிடையே வாழும் உத்தமத் தமிழ்ப் புலவர்கட்கெல்லாம் ஒருபெருந் தலைவராய்-தலைமைப் புலவராய்-விளங்கினர். ஆனால் அவரிடம் குடிகொண்டிருந்த புலமையைக் காட்டிலும் அவரிடம் நிலைபெற்றிருந்த பண்பே பெரிது! அம்மா! அது மிகப் பெரிது.

பேராசிரியர் அவர்கள் உலகறியச் செய்த ஒப்பற்ற அறங்கள் ஒருசில. ஆனால் அவர்கள் ஓசைப்படாமல் நண்பர்கட்கும் மாணவர்கட்கும் செய்த நல்லறங்களோ மிகப்பல.

பேராசிரியர் அவர்கட்கு அணியாய் அமைந்த பண்புகளுள் தலையாயவை இரண்டு. ஒன்று குழந்தையையும் கூசவைக்கும் அடக்கம்; மற்றொன்று தெய்வத்தையும் பணிய வைக்கும் பணிவு.

என்ன சொல்லி என்ன பயன்? எங்கள் வளர்ப்புத்தந்தை போய்விட்டார். திருநீறே கதியென வாழ்ந்த தெய்வபத்தரின் திருவுடலம் திருநீற்றொளியில்-சுடலையில் ஆடும் சோதியின் யில் கலந்துவிட்டது.

ஆலயம் ஆலயமாகச் சுற்றிய திருவடிகள்-ஊர் ஊராகக் கேட்டார் செவியினிக்க-சிந்தை இனிக்க-உடலினிக்க-உயிரினிக்க-பேசிய திருவாய்-கடந்த முப்பத்தைந்தாண்டுக் காலத்தில் தனக்கு வந்த மாலையெல்லாம் தமிழுக்கு வந்த மாலையென்று சூடிச்சூடி மகிழ்ந்த திருமார்பு-அறிவொளி வீசி அருட்கதிர் பரப்பிய கலைக் கண்கள்-எல்லாம் பிடிசாம்பலாய்ப் போய்விட்டன. ஆனால் அப் பேராசிரியரின் - பெருந்தகையின் - புகழ் இன்றும் அழியாது; என்றும் அழியாது; "தமிழின்பமும்", "தமிழ் வீரமும்", உள்ள வரை அழியாது. ஆம் இது உண்மை. வெறும் புகழ்ச்சி

வாழ்க பேராசிரியர் சேதுப்பிள்ளை அவர்கள் பெரும்புகழ்! பெறுக அவர் ஆன்மா பேரமைதி!

ந. சஞ்சீவி, எம். ஏ.

# தீந்தமிழ்ச் செல்வர் சேதுப்பிள்ளை

## வெண்பா

க. கண்டைக் கவிர்த்தேனைக் கற்பகத்தின் நற்கனியைப்
பண்டைத் தமிழாப் பரிந்தளித்தான்—தொண்டைத்
திகழ்பொன்னும் பாத்திரத்தில் தேசமெங்கும் சேதுப்
புகழ்பொன்னு மம்படைத்தோன் போந்து.

உ. நல்ல உருவுடையான் நாவினிமை யாற்பலரை
வெல்ல வரும்திருவான் வேட்கையுடன்—சொல்லைத்
தனித்தமிழைத் தான்தொடங்கின் தாவில்மொழிச்சேது
கனித்தமிழாத் தோன்றிடுவான் காண்.

ங. ஆசைக் கவிகள்தமை ஆற்றலுட னேவிளக்க
ஓசைத் தமிழன் ஒலிச்சந்தம்—பாசெய்
வழிவகுத்தோர் போனை வளம்பெருகச் சொற்றான்
கொழிதமிழின் சேதுவெனும் கோன்.

ச. தான்பெற்ற இன்பமெலாம் தண்டமிழர் தாம்கொள்ள
வான்பெற்ற செல்வ வளத்தமிழைத்—தேன்பெற்ற
அற்புதநன் நூலால் அருங்கொடையால் சொற்பொழிவால்
நற்புனிதன் சேதுதந்தா னால்.

ரு. நற்றமிழர் கூட்டம் நனிமதித்த பண்டிதரின்
கற்றவரின் ஈட்டம் கலங்கிடவும்—மற்றதமிழ்
மக்களுமே ஏங்கிடவும் வானடைந்த சேதுவெனும்
தக்கவனுக் கேதுநிகர் தான்.

—திருவாசகமணி கே. எம். பாலசுப்பிரமணியம்.

## இனிக்காணும் நாளென்றோ?

கோது தமிழ்மொழியிற் கூடாமை யாய்க்தொதுக்கி
ஈது நமதுமொழி யென்றெடுத்துக் காட்டியெங்கும்
ஓது தமிழ்ப்பெருமை யோங்கல்போ லோங்கவைத்தாய்
சேது வெனுஞ்சொல்லின் செல்வா மறைந்தனையோ!

கனியோ சருக்கரையோ கற்கண்டோ செந்தமிழ்ச்சொல்
இனிதா யிருப்ப திவர்பேசும் போதெனவே
நனியா வரும்புகழ நாடெங்குஞ் சொல்விரித்தாய்
புனிதா வுயர்சேதுப் பிள்ளையெனும் பூமானே.

எத்துணையோ செந்தமிழ்நூ லெத்துணையோ கட்டுரைகள்
எத்துணையோ சொற்பொழிவு நீங்கியற்றி வாழ்ந்திருந்தாய்
அத்தனையும் நம்மொழியா மன்னையடித் தொண்டலவோ
வித்தகசே துப்பிள்ளை வள்ளானின் மெய்வாழ்வே.

மல்லற்சே துப்பிள்ளை மன்னுநின் வாண்முகமும்
கல்லு முருகும்வகை பேசுங் கனிவாயும்
சொல்லின் பொருள் விரித்துக் காட்டுந் துணைக்கரமும்
நல்லதமிழ் நாட்டா ரினிக்காணும் நாளென்றோ?

—பண்டித வித்துவான், தி. சங்குப் புலவர்.

## அன்புடை அண்ணல்

செந்தமிழின் உணர்ச்சி உருவாய்த்தோன்றியவர் நம் சேதுப்பிள்ளை அவர். சென்ற முப்பத்தைந்தாண்டுகளாக அவரை யான் நன்கறிவேன். அவருடன் மிகவும் நெருங்கிப் பழகியுள்ளேன். அதனால் அவரைப்பற்றி எண்ணும்போதெல்லாம் என் அகக் கண்முன் தோன்றிக் காட்சியளிப்பன அவர்தம் அன்புத் திருமுகமும், இன் சொல்லும், தம்மை எவ்வளவு கடிந்து பேசினும் அவ்வளவும் பொறுத்துக் கொண்டு (அவ்வாறு நமக்குத் தோன்றும்) அமைதியுடன் விடையுரைக்கும் அவர்தம் பொறுமைப் பண்புமேயாம். என்னைப்போல், நேருக்குநேர் அவரைக் கடிந்து—இகழ்ந்து—சினந்து பேசியவர்கள் உலகில் யாரும் இருக்க முடியாது. இத்தனைக்கும் எனக்குப் பன்னிரண்டாண்டுகட்கு மூத்தவராவர். அறிவு, செறிவு, புலமை, ஆற்றல், புகழ், தலைமை, பொருட் செல்வம் யாவற்றினும் அவர் என்னை நோக்க இமயம் போல்வார். யானோ கம்பம்பள்ளத்தாக்கு. ஆயினும், அவர்கள் என்னிடம் பணிவாய்—இனிமையாய்ப் பேசியது தவிர வேறொன்றறியேன். இறக்கும் அளவும் என்பாற் கழி பேரன்பு பாராட்டி எனக்குப் பல உதவிகளையுஞ் செய்துள்ளார். மேடையில், நந்தமிழ் தாழ்வுற்றது கண்டு பொங்கி எழுந்து சினமுடன் அவர் பேசுவதுண்டு. ஆனால், தனித் தன்மையில் அவர் சினமற்ற செம்மையராகவே விளங்கினார். அன்பு நிறைவாய்க் காட்சியளித்தார். அன்புடையண்ணலாகிய அவர் பிரிவை எப்படி ஆற்றுவோம். அவர் மிகப்போற்றிய அம்பலவன் சேவடியில் அவர் நல்லுயிர் இன்புறுவதாக என இறைஞ்சுகின்றேன்.

—மறை. திருநாவுக்கரசு.

# களிறன்று குளிறே

[வித்துவான், திரு. கோ. சி. சாமிநாதன்]

சங்க இலக்கியங்களில் ஒன்றாகிய குறுந்தொகை ௨௪ ஆவது பாடலில் உள்ள நான்காவது அடியில் "எழுகுளிறு" என்பதைப் பற்றி அறிஞர்கள் செந்தமிழ்ச் செல்வியில் எழுதிய கருத்துக்களைக் கண்டு மகிழ்கின்றேன். எனினும் இருவர் மாறுகோள் ஒருதலை துணிதல் வேண்டும்.

"எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"

என்பது நமது தமிழ்மறை. அதனால் அறிஞர்கள் எழுதினதை அப்படியே பொருத்த முடையதென்று கொள்வதற்கு எனது இடங்கொடுக்கவில்லை.

"எவ்வ துறைவ துலக முலகத்தோ
டவ்வ துறைவ தறிவு"

என்ற மறைமொழியை மனத்தில் எண்ணி அறிஞர் உலகம் போகும் போக்கிற்கு மாறாகத் தான் நினைத்தவாறே கூறிற் பழியும் பாவமுஞ் சேரும் என்று கருதினாலும்,

"உளரெனினும் இல்லாரோ டொப்பர் களனஞ்சிக்
கற்ற செலச்சொல்லா தார்"

என்பதற் கேற்ப அவைக்களத்தை அஞ்சித் தாம் கற்றவற்றை அதற்கேற்பச் சொல்லமாட்டாதார் உயிர் வாழ்கின்றாராயினும் உலகத்தாரால் எண்ணப்படாமையால், இறந்தவரே என்று கருதப் படுகிறபடியால், நான் என் மனத்தில் தோன்றியதை எழுதுகின்றேன்; ஏற்றவற்றைக் கொள்க!

"கருங்கால் வேம்பின் ஒண்பூ யாணர்
என்னை யின்றியுங் கழிவது கொல்லோ!
ஆற்றய லெழுந்த வெண்கோட் டதவத்து
எழுகுளிறு மிதித்த ஒருபழம் போலக்
குழையக் கொடியோர் நாவே!
காதலர் அகலக் கல்லென் றவ்வே!"

என்பது பாடல். இதைப் பாடியவர் பரணர் என்னும் புலவர் பெருமான். இதைத் தலைவி கூற்றாகக்கொண்டு இளவேனிற் காலத்தில் பூக்கும் வேம்பின் பூவானது புதுவருவாயை நாடிச் சென்ற என் தலைவன் இல்லாமல் யான் சூடாது கழியுமோ?

கழியாது. காதலராகிய அவர் என்னை விட்டுச்சென்ற மாத்திரத்தே, ஆற்றங்கரையில் முளைத்தெழுந்த அத்திமரத்தினது ஏழு களிறுகளால் மிதிக்கப்பட்ட ஒரு பழம் குழைந்து ஒழிவது போல, யான் குழைந்து கெடுமாறு கொடியோர் நாவெல்லாம் அலர் கூறிக் கல்லென்றன என்பது இப்பாடலின் பொருள் என்று அறிஞர்கள் கூறியுள்ளனர்.

இதற்கு முதலில் உரை செய்தவர் திருக்கண்ணபுரத் தலத்தான் திருமாளிகைச் சௌரிப் பெருமாளரங்கனார் அவர்கள். பின்னர் ஏடு பெயர்த்தெழுதிய பதிப்பாசிரியர் "ஐயர்" அவர்கள் இப்பாடலின் நான்காவது அடியில் "எழுகளிறு" என்றும் "எழுகுளிறு" என்றுஞ் சுவடிகளில் உள்ளன, எனினும் "குளிறு" என்னும் பாடமே சிறந்தது என்று கருதிக் "குளிறு" என்பதற்கு நண்டு என்றும் பொருள் கூறினார்கள்.

ஐயாற்றுப் புலவர் திரு. இராமானுசம் அவர்கள் "எழு குளிறு மிதித்த ஒரு பழம்" என்ற தலைப்பில் களிறு என்பதே சிறந்தது என எழுதினார்கள்.

அவரை மறுத்துக் "குளிரு களிரு ?" என்ற தலைப்பில் ஒரு கட்டுரை மாயூரம் திரு. சாமி. செல்வ விநாயகன் என்பவரால் எழுதப்பட்டது. திரு. இரா. இராகவையங்கார் அவர்கள் "குளிறு" என்பதற்கு நண்டு என்பது பொருளன்று, "குளிர்"க்கே நண்டு என்னும் பொருள் உண்டு. ஆகையால் குளிரென்ற பாடமே சிறக்கும் எனக் கொண்டார்கள்.

திரு. ஐயங்கார் அவர்களின் குறுந்தொகை விளக்கத்திற்கு ஆராய்ச்சி முகவுரை எழுதிய திரு. அ. சிதம்பரநாதன் செட்டியார் அவர்கள் "எழுகளிறு" என்ற பாடமே சிறந்ததெனக் கொண்டு "குழைதல்" வினையைத் தலைவியினுடைய தென்றுமல் கொடியோர் நாவினுடையதாக்கினார்கள்.

இவை எல்லாவற்றையுஞ் சீர்தூக்கி மயிலம் வித்துவான் திரு. ஆ. சிவலிங்கனார் அவர்கள் குழைதல் வினைத் தலைவியினுடையதாயின் வினையெச்சமாகவுங் கொடியோர் நாவிற்காயின் வியங்கோள் வினைமுற்றாகவுங் கொண்டு இவை இரண்டிற்குமுள்ள பாட மாறுதலையும் எடுத்துக்காட்டி "எழுகளிறு மிதித்தபழம் என்பது தலைவிக்குப் பொருந்தாது எனவும், "எழு குளிறு மிதித்த பழம்" என்பதே தலைவிக்குப் பொருந்தும் எனவும், எழு களிறெனப் பாடங் கொண்டால், குழைதல் வினை கொடியோர் நாவிற் காதலே் சிறந்ததெனச் சொன்ன குறுந்தொகை விளக்க ஆராய்ச்சி முகவுரையாளர் அவர்களின் கருத்துச் சிறப்புடைத்தாகும் எனவும் கூறினார்கள். எனினும்,

கொடியோர் நாக்குழைய என்பது கருத்தாயின். "குழையக் கொடியோர்" என்ற தொடரில் ககர வொற்று இரட்டித்தற்கு விதி கிடையாது என்பதையும் இலக்கண மேற்கோளுடன் எடுத்துக் காட்டினார்கள். எனவே "எழு குளிறு" எனப் பாடங் கொண்டால் "குழையக் கொடியோர்" என்னும் பாடமும் "எழு களிறு" எனப் பாடங் கொண்டால் "குழைய! கொடியோர்நா," என்று ஒற்று இரட்டிக்காது இருத்தல் வேண்டும் என்பதும் இவர்கள் கருத்து. எனினும் பாடலின் இயற்கை அமைப்பு "குழையக் கொடியோர் நாவே!" என்றிருப்பதை எடுத்துக் காட்டாமலும், ஒருதலை துணியாமலும், "களிறு" "குளிறு" என்ற இரண்டு பாடமுஞ் சிறந்தன என்றும் செந்தமிழ்ச் செல்வியில் எழுதியுள்ளார்கள்.

எங்ஙனமாயினும் "குளிறு" என்னும் பாடம் சிறந்ததெனக் கொண்ட பதிப்பாசிரியர் "ஐயர்" அவர்களின் கருத்தும், இதைத் தொடர்ந்து "குளிறு" என்ற பின்னவர்கள் கருத்தும், சிறந்தது என்பதை மயிலம் வித்துவான் அவர்கள் பாட மாறுதலின் மூலம் அறிஞர்களுக்கு உய்த்துணரும் வண்ணம் தமது சொல் வன்மையால் எடுத்துக் காட்டியுள்ளார்கள்.

எவ்வாறெனின் தற்போதுள்ள பாடம் "குழையக் கொடியோர் நாவே" என்பது. இப்படி இருப்பதால் குழைதல் வினை தலைவியினுடையதே ஆகும் என்பதை விளக்கியதுடன், குழைதல் வினையைக் கொடியோர் நாவிற்குக் கொள்ளவேண்டுமானால் இப்போதுள்ள பாடம் மாறுதலடைய வேண்டும் என்பதையுங் குறிப்பாகச் சொல்லியுள்ளார்கள். இதிலிருந்து இப்போதுள்ள பாடத்தின்படி இப் புலவர் அவர்கள சிறந்ததாகக் "குளிறு" என்பதும், குழைதல் வினை ஆகும்.

கற்புடையளாதலும், அறிவுடையளாதலும் உண்மையாயின் கொடியோர் நாவை ஏழு களிறுகளால் மிதிப்பித்து உருமாறி அழிந்துவிடச் சொன்னாள் என்பது பொருந்துமா? அப்படிப் பொருந்துமாயின்,

> "அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை
> இகழ்வார்ப் பொறுத்தல் தலை"

> "இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர்நாண
> நன்னயஞ் செய்து விடல்"

என்னுந் தமிழ்மறைக்கு முரணாகுமல்லவா? கற்புடைத் தலைவியின் குணநலங்களுக்கு இவ்விதங் கூறுதல் ஏற்குமா?

எனவே "ஏழு"களிறு என்பதும், "ஏழு" களிறு என்பதும் ஈண்டைக்கு ஆகா ; அன்றியும் ஆசிரியர் பரணர்,

" ஒருமைக்கட் டான்கற்ற கல்வி யொருவற்
கெழுமையும் ஏமாப் புடைத்து "

என்பதில் "ஒருமை" "எழுமை" என்பன சொற் சுவையும், பொருட் சுவையும் நிரம்பி அழகுபட விளங்குவது போல "ஏழு குளிறு" "ஒரு பழம்" என்பது தொடை நயமுஞ் சொற்சுவையுந் தோன்ற அமைத்தாரே அன்றி வேறன்று. "ஏழு குளிறு" என்றமையால் ஏழு குளிறுகள்தாம் என்று அறுதியிட்டுக் கூற, வேண்டும் என்பதும் இல்லை. ஒன்றல்லாதன "பல" என்பது இலக்கணமாதலின், பல குளிறுகள் ஏறி மிதித்தன என்று கொள் வதும் இழுக்காகாது.

இதனால் "குளிறு" என்பது மிகவுஞ் சிறப்புடைத்தாய் எனக்கு முன்னவர்கள் சொன்ன நண்டைச் சிறந்த முறையில் குறிப்பதாக இருக்கின்றது. மற்றும், "குழையக் கொடியோர்" என்பதில்,

" இயல்பினும் விதியினும் நின்ற வுயிர்முன்
கசதப மிகும்வித வாதன மன்னே " (நன்னூல், சூ: ௧௬௫)

என்றபடி வல்லொற்று மிகலே சொன்னடைக்குஞ் சிறந்ததாக விளங்குகின்றது.

"மிதித்த ஒருபழம் போல" எனத் தலைவி தன்னைக் கூறிக் கொண்டாள் என்பது சிறவாதெனின் அது [illegible]றபபதறகுரிய [illegible]கள் உள்ளன.

தலைவர் வருவதாகச் சொல்லிப்போன இளவேனிற் காலமும் வந்தது. (சித்திரை வைகாசி). கருங்கால் வேம்பின் ஒண்பூவும் யாணர் விளங்க மலர்ந்தது. இஃதறிந்த தலைவி, தான் சூடி மகிழ்தற்குரிய வேம்பின் ஒண்பூ மலர்ந்ததும், அவ் வொண் பூவைச் சூடாமையால் அதன் யாணர் தனியே கழிவதும், தன் யாணர் காதலர் இன்றித் தனியே கழிவதும், எண்ணி அம்மனை யாடாள், உணவினை நாடாள், ஆயத்தோடாடாள், தரையிற் படுப்பாள், தனியே இருப்பாள், சிறு துயில் கொள்வாள்.

இப்படித் தலைவியின் மாறுபட்ட செயல்களைக் கண்டு, அயலார் பலர் கூறும் அலர் மொழிகளையுந் தலைவி உணர்கின்றாள்; அதனாலும் மனம் நோகின்றாள்.

இப்படித் தலைவியின் செயல்களைக் கண்ட தோழி தலைவியின் வாடிய நிலையை மிதித்த ஒரு பழம் போலத் தலைவி குழைந்தாள்;

இவ்வாறு குழைவதற்குத் தலைவர் குறித்த காலத்தில் வராமல் இருப்பதே காரணமாகும். இப்படி இருப்பது கொடியார் செய்யுஞ் செயலாகும் என்று தோழி தலைவரை இயற்பழித் துரைக்கின்றாள்.

இவ்வாறு பழித்தலை மனம் பொறாத தலைவி தலைவர் கொடியார் அல்லர். "பழுத்த ஒரு பழம் போல" நான் குழையக் காரணம் அலர் கூறும் நாக்களை உடைய அவர்களே ஆவர். ஆகையால் அவர்களே கொடியோர் என்ற கருத்து விளங்கக் "குழையக் கொடியோர் நாவே!" என்கின்றாள்.

தோழியின் வாயிலாகச் சொல்லப்பட்ட ன மையைத் தலைவி கேட்டுத் தான் அந்நிலை அடைவதற்குரிய காரணம் தலைவர் இல்லை, என்கின்ற இடத்தில் தலைவி, தன்னை "மிதித்த ஒரு பழம் போலக் குழைய" என்ற தோழியின் வாய் மொழியைத்தான் இரண்டாம் முறை எடுத்துரைக்கின்றாள். இந்த நிலையில்தான் பரணர் இப் பாட்டைப் பாடி இருக்கின்றார். இதனாற் குறையொன்றும் இல்லை.

இன்னும் இதுபோல் வரும் இடங்களைக் கண்டு உண்மை அறிக!

> "கொடியார் கொடுமை யுரைக்குந் தொடியொடு
> தொல்கவின் வாடிய தோள்."

தலைவரின், தழுவுங்கை விலகினும் பொறாதவளுக்கு இப்படிக் கால நீட்டிப்பில் என்றுமென்று நினையாதபடி இருக்குங் கொடிய வரது பொல்லாங்கைச் சொல்லுகின்றன; வளைகளுங் கழன்று பழைய இயற்கை அழகும் இழந்த இத்தோள்கள்; இனி அதனை மறைக்கும் வழி யாது என்கின்றாள் தோழி.

இவ்வாறு, தான் ஆற்றுதற் பொருட்டு இயற்பழித்ததைத் தலைமகள் மனம் பொறாளாய்க்,

> "தொடியொடு தோணெகிழ நோவ லவரைக்
> கொடிய ரெனக்கூற னொந்து"

என்று சொல்கின்றாள். யான் பொறுக்கவும் என் வயப்படாமல் என் வளைகள் கழலும்படி தோள்கள் வாட அவற்றைக் கண்டு அவரைக் கொடியார் என்று சொல்லுதலைப் பொறாது யான் என்னுள்ளே நோவா நின்றேன் என்கின்றாள்.

இவற்றால் தலைவியும் உரிய இடங்களில் தனது நிலைமையைச் சொல்லுவது என்பது இலக்கியங்களில் பயின்று வருகின்ற தென்பது அறியக் கிடக்கின்றது.

இது நிற்க. எழு களிறு என்று பாடங்கொண்டு களிறு என்பதற்கு "யானை" என்னுங் கருத்தில் ஆசிரியர் அமைத்திருக்க வேண்டியதில்லை. களிறென்பது பல பொருள் குறித்த ஒரு சொல்லாகும்.

" களிறென்ப வத்தநாளே கறையடி சுறவு பன்றி "

என்பது சூடாமணி நிகண்டு. எகர வெதுகை அத்த விண்மீனை யும், யானை சுறு பன்றி இவற்றின் ஆணையுங் குறிப்பது ஆகும். [1]மற்றும் களிறு என்பது ஆண்பால் விலங்கினம் பலவற்றிற்கும் பொதுவாக உரைப்பது உண்டு.

எனவே, களிறெனப் பாடங் கொண்டாலும் இதற்கு யானை தான் என்று பொருள் கொள்ளவேண்டும் என்பதில்லை. மனத் துக்கு வந்தவாறு ஆண்விலங்கு எவற்றையுங் கூறிக் கொள்ளலாம். ஆகையால் இப் பாடலை இயற்றிய புலவர்பெருமானுக்கு இது கருத்தாக இருக்க முடியாது.

விலங்குகளில் சிறந்தது களிறு ஆகையால், மற்றைய ஆண் விலங்குகளினுங் களிறு சிறந்ததாகையால், களிறு பொருத்த முடைத்து என்றாலும், அப்படிப்பட்ட களிறு ஒன்றே ஒரு நாட்டையும் நகரையும் அழித்துவிடும் என்பதை வரலாறுகளின் மூலம் அறிகின்றோம்.

குற்றஞ் செய்தவர்களை யானைக்காலில் இடறச் செய்வது பழங்கால அரசர்களின் செயல். இவ்விதமிருக்க ஓர் அத்திப் பழத்தைக் குழையவைப்பதற்கு யானையின் வல்லமையைத் தொடர்பு படுத்திச் சொல்லுவது வியத்தற்குரியதாகும். இஃது அண்ணல் யானையின் அரிய ஆற்றலுக்கு இழுக்காகும் அல்லவா?

மற்றுங் குளிறு என்பதற்கு நண்டு பொருளன்று என்றும் குளீர: கற்கடக என்றும்,

" களவன் குளிர் ஞெண்டு கற்கடகம் அட்டை
செளுகம் கரையான் சிதல் "

(உரிச்சொல் நிகண்டு, விலங்கு. உ௬.)

என்றும் அமரகோசம் நிகண்டு முதலியவற்றைக் காட்டிக் குளிறு என்பதற்குப் பொருள் நண்டு அன்று என்று சொல்லிக் "குளிர்" என்பதே நண்டு எனக் கொள்ளுவார் கருத்து வலிந்திழுத்துப் பொருள் கொள்ளுமாறுள்ளது.

---

1. நவீனத் தமிழ் அகராதி பக்கம் கஙக. திரு. சி. கிருட்டிணசாமிப் பிள்ளை தொகுத்தது.

குளிர், குளீர என்னுஞ் சொற்கள் நண்டு என்னும் பொருள் தந்தால் குளிறு என்னுஞ் சொல்லுக்கு, நண்டு என்னும் பொருள் கொள்ளக்கூடாது என்பதற்கு விதியில்லை. ஒரு பொருள் குறித்த பல சொற்கள் நம் தாய்த்தமிழில் பல உள்ளன என்பதை அறிஞர்கள் அறிவார்கள். கடல் முழங்கு வதைக் குளிறு கடல் என்றும், முழங்கு புனல் என்றும், தமிழ்ச் சொற்கள் பயின்று வருகின்றன. அவ்வாறு குளிறு கடல் வாழும் நண்டுக்குக் குளிறு என்னுஞ் சொல் சாலச் சிறந்ததாய் அறிஞர் களால் எடுத்தாளப்படுவதும் இயற்கை. இப்படிப்பட்ட சொற் களைப் பிறமொழியில் எடுத்தாளுவார் அம்மொழியைச் சற்றுத் திரித்து மனத்துக்கு வந்தவாறு வழங்குவதால் அவை சிறப் புடைத்தாகா!

மேற்கண்டவற்றால் "குளிறு" என்பது மிகவுஞ் சிறப்புடைத் தாய் எனக்கு முன்னவர்கள் சொன்ன நண்டைச் சிறந்த முறை யில் குறிப்பதாக இருக்கின்றது. மற்றும் ஈண்டைக்கு ஏற்ற முறையில் நண்டல்லாத மற்றொரு பொருளும் குறிப்பதாகச் சிறந்த முறையில் அமைந்துள்ளது. அஃது பின்வருமாறு காண்க: ஆகையால், "காதலர் என்னை அகல, ஆற்றயலெழுந்த வெண்கோட்ட தவத்து எழு குளிறு மிதித்த ஒரு பழம் போலக் குழையக் கொடியோர் நாக்கள் கல்லென்றன" எனக் கொள்ளு தலே சிறப்புடைத்தாகும்.

இனிக் குளிறு என்ற பாடம் எவ்வாறு சிறக்கும் என்பதை ஆராய்வாம். குளிறு என்னும் நண்டு ஆற்றின் கரையில் நீர் சூழ்ந்த இடங்களில் ஊர்ந்து வருவது இயற்கை. கருங்கால் வேம்பின் ஒண்பூத் தோன்றும் காலத்து அத்திப் பழமும், உண்டாகும் காலம் என்பது ஆராய்ச்சியிற் கண்டது. இப்படிப் பட்ட வேனிற் காலத்தில், வெயிலால் வாடிய நம் புலவர் ஆற்றங்கரை ஓரத்தில் உள்ள அத்திமர நிழலில், மாலைப்பொழுதில் இயற்கை அழகுகளைக் கண்டு மகிழ எண்ணி வருகின்றார். ஆங்கோர் இடத்தில் உட்கார்ந்து உற்றுநோக்குகின்றார்.

அத்திமரத்தில் சற்று மேலே ஆற்றோரச் சாய்வில் நன்றாகப் பழுத்துச் சிவந்து உருண்டு திரண்ட ஓர் அழகிய அத்திப் பழம் [illegible]ன்றது. இப் பழம் புலவர்பெருமான் கண்களில் படுகின்றது. அத்திப்பழத்தின் அழகில் அவர் உள்ளஞ் செல் கின்றது. இவ்வமயத்தில் சற்று வேகமாக அடித்த காற்றின் விசையால் அத்திப்பழம் கீழே விழுகின்றது.

(தொடரும்)

# பாரதியின் உரைநடைகள்

வை. தட் எம். ஏ.]

மகாகவி பாரதியை மக்கள் பெருங்கவிஞனென்று அறிந்து போற்றுமளவு, உரைநடை எழுத்தாளர் என்று அறிந்து கொள்ள வில்லை. இங்கிலாந்தில் பதினைன்காம் நூற்றாண்டில் இலக்கிய உலகில் மறுமலர்ச்சி தோன்ற எண்ணிறந்த உரைநடை இலக்கியங்கள் மலர்ந்தன என்பதொத்துப் பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதி தொடங்கி இருபதாம் நூற்றாண்டுவரை தமிழ் இலக்கிய உலகிலும் மறுமலர்ச்சி ஏற்பட்டுள்ளது. இம் மறு மலர்ச்சிக்கால எழுத்தாளர்களுள் மகாகவி பாரதியார் மையப் புள்ளி போன்றவர் என்பதைக் கால நிலைப்படி இலக்கிய வரலாறறிந்த திறனாய்வாளர்கள் அனைவரும் ஒத்துக்கொள்ள வேண்டும்.

மக்களுள் விடுதலை வெறி மிக்க காலம்; வேத, புராண இதிகாசங்களின்மேல் மக்கட்கு நம்பிக்கை குறைந்தது. வைதீகப் பழக்க வழக்கங்கள், நாள்தோறும் கொண்டாடும் பண்டிகைகள் முதலியனவற்றை மக்கள் புரிந்துகொள்ளாது விளக்கம் செய்யத் தொடங்கினர். சமுதாயத்துள்ள மூடப்பழக்க வழக்கங்களைத் தகர்த்தெறியும் எண்ணத்தோடு நிறுவனங்கள் தோன்றுகின்றன. விரும்பியோர் விரும்பிய துறைகளில் தொண்டாற்றினர். பாரதி தம் பாட்டுத் திறத்தால் பண்பட்ட எழுத்துத் திறத்தால் சமுதாயம், சமயம், விடுதலை போன்ற அனைத்துப் பொருள் பற்றியும் பொருள் பொதிந்த உணர்ச்சியூட்டும் கவிதைகள், கட்டுரைகள் முதலியவற்றை ஆக்கித் தந்தார்.

பாரதியின் உரைநடைகளை ஊன்றிப் படிக்கும்போது பல் வேறு உண்மைகளை நாம் சிந்திக்க வேண்டும். பாரதிக்கும் பண்டைத் தமிழ் இலக்கிய இலக்கணங்கட்கும் உள்ள தொடர்பு, எதிர்கால இலக்கியங்கள் பற்றிய அவர் எண்ணம் இவை கருதத் தக்கன.

பாரதி நன்னூல், தொல்காப்பியம், தண்டி போன்ற நூல்களை உருப்போட்டவரோ, ஊன்றிப் படித்தவரோ என்று கூறுவதற்கு இல்லை. புறநானூறு போன்ற எட்டுத்தொகை, பத்துப்பாட்டு இலக்கியங்களில் அவர் ஊக்கம் காட்டவில்லை. குறள், சிலம்பு, கம்பன் என்ற மும்மணிகள் இடமும் அவருக்கு மிகுந்த பற்று இருந்துள்ளது. காளிதாசன் கவிதைகளையும், பகவத்கீதை, மற்றும் சில உபநிடதங்களையும் அவர் பயின்று உள்ளார். பாரதி தம்மைக் காளிதாசன் என்று அழைத்துக் கொள்வதும் உண்டு. காளிதாசன் என்ற பெயரில் கட்டுரை

பலவற்றை எழுதியுள்ளார். காளிதாசன் சக்திதாசன் என்ற இரு புனை பெயர்களும் பாரதியாருக்கு மிகப் பிடித்தமானவை. இந்தியா, சக்கரவர்த்தி, விஜயா, கர்மயோகி என்ற ப களை அவர் நடத்தியுள்ளார்.

பாரதி "கவிஞன் யார்?" என்ற வினவை எழுப்பி விடையாக—

"கவிதையே வாழ்க்கையாக உடையோன்
வாழ்க்கையே கவிதையாகச செய்தோன் அவனே கவி—
.........இயற்கையுடனே ஒன்றாக வாழ்பவனே கவி"

என்று எழுதுகினுரா. கவிதை புத்துணர்ச்சியை ஊட்ட வேண்டுமென்றால் உரைநடை கருத்தைத் தெளிவாக்கிக் கவர வேண்டும் என்பதே கருத்து. எளிய நடையில் தமிழ்நூல்கள் எழுத வேண்டும் என்ற கருத்தில் பேச்சு மொழி எழுத்து மொழி என வேற்றுமை பாராட்ட ஒண்ணாது இனிய எளிய தமிழில் அவர் கட்டுரை, கதை, மொழிபெயர்ப்பு ஆயவற்றை ஆக்கித் தந்துள்ளார். மொழிச் சிக்கலை உள்ளத்தே கொண்டு வலிந்து சொல்லுக்கலையும் வழக்கம் அவரிடம் கிடையாது. அவரின் உரைநடைகட்கிடையே நகைச்சுவை கலந்திருக்கும். எண்வகைச் சுவைகளும் தனித்தனியே சுடர்விட்டு ஒளிர்வன. பாரதியின் பெருமையை அவர் உரைநடைகளின் வாயிலாக வெளிப்படுத்திய பெருமை சுதேசமித்திரனையே சாரும். இராமலிங்க அடிகளும், 'சுதேசமித்திரன்' சுப்பிரமணி அய்யரும் தமிழ்நாட்டின் விழிப்புக்குக் காரணமானவர்களுள் இருவர் என்பதை ஒரு கட்டுரையில் அவர் குறிப்பிட்டுள்ளார்.

"முதலாவது நீ எழுதப்போகிற விஷயத்தை இங்கிலீஷ் தெரியாத ஒரு தமிழனிடம் வாயினால் சொல்லிக்காட்டு. அவனுக்கு நன்றாக அர்த்தம் விளங்குகிறதா என்று பார்த்துக் கொண்டு பிறகு எழுது அப்போதுதான் நீ எழுதுகிற எழுத்து தமிழ்நாட்டிற்குப் பயன்படும்" என்பது பாரதியின் கருத்து.

பண்டைத் தமிழ்ச் சமய நூல்கள் இன்று ஏளனப் பொருள்களாக மாறியதற்குக் காரணம் புரியாத் தன்மையே. இலக்கியங்களின் தன்மையும் ஒருவாறு அவ்வாறே. பாரதியார் சமயக் கருத்துக்களை எழுதும் முறையில் சில எடுத்துக் காட்டுக்களை கீழே காண்போம்:

"சிவன் நீ; சக்தி உன் மனைவி.
விஷ்ணு நீ; லக்ஷ்மி உன் மனைவி.
பிரம்மா நீ; சரஎ

இதைக் காட்டி மிருக நிலையிலிருந்து மனிதரை தேவநிலை யிற் கொண்டுசேர்க்கும் பொருட்டாக ஏற்பட்ட தேவப்பள்ளிக் கூடங்களே கோயில்களாகும்.”

“தெய்வத்தைக் கும்பிட்டாலும் சரி; கும்பிடாவிட்டாலும் சரி; பிறரை ஏமாற்றுவதை நிறுத்தினால் தெய்வம் அருள்புரியும்.”

“மூட பக்திகளெல்லாம் படிப்பில்லாமையால் ஏற்பட்டிருக் கின்றன.”

“உலகம் முழுதும் செய்கை மயமாக இருக்கிறது. விரும்பு தல், அறிதல், நடத்துதல் என்ற மூவகையான சக்தி இவ்வுலகத்தை ஆளுகின்றது. இதை பூர்வ சாஸ்திரங்கள் இச்சா சக்தி, ஞான சக்தி, கிரியா சக்தி என்று சொல்லும்.

“பழைய புராணங்களில் பிற்காலத்தாரால் நுழைக்கப்பட்ட பொய்க்கதைகளேயன்றி வேறில்லை.”

மேற்கண்ட சில எடுத்துக்காட்டுகளில் செயல்முறையில் சமயக்கருத்துக்களைப் பாரதியார் விளக்குவதைக் காண்கிறோம்.

“பழைய காலத்திலிருந்து வந்ததென்று கருதி ஒரு மதம் உண்மையென்பதாக நிச்சயித்துவிடலாகாது. உண்மை இதற்கு நேர்மாறானது. மனிதஜாதி நாளாக நாளாக வாழ்க்கையின் உண்மை விதிகளை நன்றாகத் தெரிந்துகொள்கிறது. நமது பாட்டன்மாரும் பூட்டன்மாரும் நம்பிய விஷயங்களையே நாமும் நம்பவேண்டும் என்ற விஷயமானது குழந்தையாக இருக்கும் போது தைத்த உடுப்புக்களையே பெரியவனானபோதும் போட்டுக் கொள்ளவேண்டும் என்பதற்கு ஒப்பாகும்,” என்று பாரதியார் எழுதுவதில் எளிய சாரமான நடை, உடனே புரியும்படியான எடுத்துக்காட்டு, அளவான நகைச்சுவை ஆய மூன்றும் கலந் திருப்பதைக் காணலாம்.

மலையாளத்தில் நம்பூதிரி தீண்டாமைக் கொடுமையைக் கூறும்போது பாரதியார் சமுதாயத்தை வெளிப்படையாகக் கிண்டல் செய்கிறார்.

“நூறு கஜமுள்ள ஒரு பாலத்தின் இந்த ஓரத்தை ஒரு தீயன் தொட்டால் அந்த ஓரத்திலுள்ள நம்பூதிரி பிராமண னுக்குத் தீண்டல் வந்துவிடுகிறதாம்; மூடநம்பிக்கை அங்கே மிகவும் அதிகம்,” என்று அவர் எழுதுவதைப் படிக்கும்பொழுது பாரதியார் எதிரிலேயே நின்று பேசுவதை நாம் கேட்பதுபோன்ற உணர்ச்சி தோன்றுகிறது. இத்தகைய பாரதியின் நடையை மந்திர நடை என்றுகூடக் கூறலாம்.

பாரதி ன "ஞானரதம்" உரைநடைக் கலையின் முதிர்ச்சி எனலாம்.

"நீல ஏரிகள்! கரும்பூதங்கள்! எத்தனைவகை நீலம்! எத்தனைவகைச் செம்மை! எத்தனைவகைப் பசுமை! எத்தனை வகைக் கருமை! நீல ஏரியின்மீது மிதக்கும் தங்கத் தோணிகள்; எரிகின்ற தங்கஜரிகைக் கரைபோட்ட கரிய சிகரங்கள்! தங்கத் திமிலங்கள் மிதக்கும் கருங்கடல்! எங்குபார்த்தாலும் ஒளித் திரள், வர்ணக் களஞ்சியம், போ, போ, என்னால் அதை வர்ணிக்க முடியாது," என்று எழுதும்போது ஞானம் கொழுந்து விட்டெரியும் வருணனை ஓட்டத்தைக் காணமுடிகிறது.

'தராசு' கட்டுரைகளை உரையாடல் முறையில் எழுதுகிறார். விடை போன்று அது அமைவது பானைச்சோற்றுக்கு சோறு பதமல்லவா? அம்முறையில் ஒன்றைப் பார்ப்போம்.

**வக்கீல்:** "நமது தேசத்துக் காருண்யக் கவர்ன்மெண்டார் நமக்கு எப்போது ஸ்வராஜ்யம் கொடுப்பார்கள்?"

**தராசு:** "ஒவ்வொரு கிராமத்திலும் ஜனத் தலைவர் பள்ளிக் கூடங்கள் வைத்து, தேச பாஷைகளிலே புதிய படிப்புச் சொல்லிக்கொடுக்க ஏற்பாடு செய்தால் உடனே கொடுத்து விடுவார்கள்."

**வக்கீல்:** அது எப்போது முடியும்?

**தராசு:** நீர் போய் நான்கு கிராமங்களில் நான் சொல்லிய படி பள்ளிக்கூடங்கள் ஏற்பாடு செய்துவிட்டுப் பிறகு வந்து கேளும், சொல்லுகிறேன்.

**வக்கீல்:** அதுசரி, மற்றொரு கேள்வி கேட்கிறேன்: செத்துப் போன பிறகு மறுஜென்ம முண்டா?

**தராசு:** உண்டு. மனோதைரியமில்லாத பேடிகள் புழுக்க ளாகப் பிறப்பார்கள். பிறர் துன்பங்களை அறியாமல் தம தின்பத்தை விரும்பினோர் பன்றிகளாகப் பிறப்பார்கள். சொந்த பாஷை கற்றுக்கொள்ளாதவர் குரங்குகளாகப் பிறப்பார்கள்.

சித்தக்கடல் என்ற தலைப்பில் நாட்குறிப்புப் போன்று பாரதியார் எழுதியதில் குறுகிய சொற்கள் நிறைந்த பொருளைப் பார்க்கலாம்.

ஜூலை 1. 1915.

காலை கண்விழிக்கும்பொழுதே 'பணம்' என்ற ஞாபகம். எழுந்து Bourgoine வீட்டுக்குப் போதல். போகையில் மனக் கிளர்ச்சி. இடையில் துருக்கன் அவனுக்கு வழிவிட்டதைப் ப,

மனநோதல். மரணபயம். அதன் மடமையுணர்ச்சி. கடற்கரையில் தனியே யிருத்தல். அங்கு சாரர். மனவெறுப்பு. உதாவீனம்.

செ. "மாலை" என்ற வார்த்தை—ஒரு பொய்.

பாரதியார் தம் குமாரி தங்கம்மாவிற்குப் பெண் விடுதலை பற்றி ஒரு கூட்டத்தில் படிக்க எழுதிக்கொடுத்த கட்டுரையில்,

"சகோதரிகளே! ஔவையார் பிறந்த தமிழ்நாட்டில்; மதுரை மீனாக்ஷியும் அல்லி அரசாணியும் நேற்று மங்கம்மாளும் அரசுபுரிந்த தமிழ்நாட்டிலே நம்முடைய நிலைமை—"

என்று பீடிகைபோட்டு வீரக்கனல் வீச எழுதுகிறார்.

பத்திரிகைளில் அவர் வெளியிட்டுள்ள விண்ணப்பங்களில் விநயம், அடக்கம் முதலியவற்றைக் காண்கிறோம். அவருடைய கடிதங்கள்கூடக் கவித்வம் நிறைந்தவையாகக் காண்கிறோம்.

நெல்லையப்பருக்கு எழுதிய கடிதம் ஒன்றில் "தம்பி, மாதத்துக்கு மாதம், நாளுக்கு நாள், நினதறிவு மலர்ச்சிபெற்று வருவதைக் காண்கிறேன். நினது உள்ளக் கலத்திலே பேரறி வாகிய உள்—ஞாயிற்றின் கதிர்கள் விரைவிலே தாக்கி நினக்கு நல்இன்பம் உண்டாக்குமென்றே கருதுகிறேன்"

என்று வாழ்த்துகிறார். இக் கடிதத்தில் அறிவு முதிர்ச்சியாலும் அனுபவப் பழுப்பாலும் உதிரும் வாழ்த்தொலி அமரத்வம் பெற்றவரின் ஆவியொலியாக இன்றும் ஒலிக்கிறது.

"இயன்றவரை தமிழே பேசுவேன், தமிழே எழுதுவேன் சிந்தனை செய்வது தமிழிலே செய்வேன். எப்போதும் பராசக்தி—முழு உலகின் முதற்பொருள்—அதனையே தியானஞ்செய்து கொண்டிருக்க முயல்வேன். அதனைக் குறித்தே ஓயாமல் எழுதிக் கொண்டிருக்க முயல்வேன்"

என்றெழுதிய பாரதியின் உரைநடைகளில் தெளிவு, எளிமை, இனிமை, வருணனை நயம், எண்சுவைகள், கற்பனைத் திறன், கருத்தாழம், தனித்தமிழ்குறைவெனினும் ஆய கவிதைப் பண்புகள் அனைத்துமே அடங்கியுள்ளன எனில் மிகையாகாது. தமிழ் மக்கள் பாரதியின் கவிதைகளில் காணும் இன்பத்தைவிட உரை நடைகளில் மிகுதியான இன்பத்தைக் கண்பார்களாக.

"கவிதைகள் கதைகள் மற்றும் கவின்பெறு கலைகள் யாவும்
புவிதனில் பூத்து நிற்கப் புதுமைகள் காட்டி நின்றான்
அவிசொரி வேள்வி யாற்றி ஆயிரம் முனிவர் யாத்த
புவிபுகழ் வேதப் பொருளைப் புலமையால் எளிதாய்ச் சொன்னான்."

# இராமலிங்கர் பெற்ற அருமறை

[சமயபுரம், ந. இரா. ஊரன்]

திருவளர் திருஅம் பலத்திலே அந்நாள்
　　செப்பிய மெய்ம்மொழிப் பொருளும்
உருவளர் திருமந் திரத்திரு முறையால்
　　உணர்த்திய மெய்ம்மொழிப் பொருளும்
கருவளர் அடியேன் உளத்திலே நின்று
　　காட்டிய மெய்ம்மொழிப் பொருளும்
மருவியென் னுளத்தே நம்பிரான் இருக்கும்
　　வண்ணமும் திருவுளம் அறியும்.

—திருவருட்பா; பிள்ளைப்பெரு விண்ணப்பம்.

பிரகாச வள்ளற் பெருமான் இராமலிங்க அடிகளாரின் அருட் பாடல்களுள் இது ஒன்று. இதனுள் அடிகளார் மூன்று மெய்ம்மொழிப் பொருள்களைக் குறித்துள்ளார்கள். பாடலின் முதன் மூன்றடிகளில் அவை இடம் பெற்றுள்ளன. அம் மூன்று மெய்ம்மொழிப் பொருள்களாவன:—

க. திருவம்பலத்திலே அந்நாள் செப்பிய மெய்ம்மொழிப் பொருள்

உ. திருமாந் யால் உணர்த்திய மெய்ம்மொழிப் பொருள்

ந. தமது உள்ளத்திலே நின்று காட்டிய மெய்ம்மொழிப் பொருள்

முதல் மெய்ம்மொழிப் பொருள்: திருவம்பலத்திலே அந்நாள் செப்பியது. இஃது அருட் பொதுவின் கண்ணே சேக்கிழார்க்கு இறைவன் ‘உலகெலாம் உணர்ந்தோதற் கரியவன்’ என்று அடியெடுத்துக் கொடுத்ததாகும்.

மெய்ம்மொழிப் பொருள் விளக்கம் என்னும் உரைநடை ஒன்றையும் அடிகளார் செய்தார்கள். மேற் பாடலிற் கூறப்பட்ட மூன்று மெய்ம்மொழிப் பொருள்களையும் விளக்குவதே அந் நூலாகும். அந் நூல் முழுவதும் இப்போது நமக்குக் கிடைக்கவில்லை. ஒரு பகுதியே கிடைக்கப்பெற்று வழங்கி வருகிறது. கிடைத்த அப்பகுதி முழுவதும் திருவம்பலத்திலே அந்நாள் செப்பியதாகிய உலகெலாம் உணர்ந்தோதற்கரியவன் என்னும் மெய்ம்மொழிப் பொருளின் முதற் சொல்லாகிய ‘உலகெலாம்’ என்பதனை விளக்குவதாயுள்ளது. உலகெலாம்

என்னும் மெய்ம்மொழிப் பொருள் விளக்கம் என வழங்கப்பட்டு வருகிறது. மற்ற இரண்டு மெய்ம்மொழிப் பொருள்களையும் விளக்கும் பகுதிகள் அடிகளாரால் செய்யப்பட்டுப், பிற்காலத்தில் கிடைக்காது போயினவா, அல்லது செய்யப்படாமலே தவிர்ந்து போயினவா என்பது அறியக்கூடவில்லை. அப்பகுதிகளும் செய்யப்பட்டிருந்து இன்று கிடைக்கப்பெறின் தமிழகம் அதனு லெய்தும் பயன் பெரிதாகும்.

இரண்டாவது மெய்ம்மொழிப் பொருள்: திருமந்திரத் திருமுறையால் உணர்த்தியது. இங்ஙனம் அடிகளார் கூறுவதி னின்றும் இறைவன் அவர்களுக்குத் திருமந்திரத் திருமுறையால் உணர்த்திய ஒரு மெய்ம்மொழிப் பொருள் உண்டு என்பது விளங்கும். அது இன்னதெனத் தெரிவதுதான் அருமையா யுள்ளது அங்ஙனம் தெரிவதற்குரிய ஆதாரங்கள் அடிகளாரின் உரைநடை நூல்களுள்ளும் பாடல்களுள்ளும் காணக்கிடைக்க வில்லை. மிகவுயர்ந்த ஞான நூலாகிய திருமந்திரத்தில் அருளனுபவத்தாலுணரத்தக்க எத்துணையோ அரும்பொருள்க ளுள்ளன. அவற்றுள் ஒன்றையோ, பலவற்றையோ அடிகளார்க்கு இறைவன் உணர்த்தினனாக — உபதேசித்தனனாக — அவர்கள் உணர்ந்தார்களாகலாம். இறைவன் இராமலிங்க அடிகளார்க்குத் திருமந்திரத் திருமுறையினின்றும் உணர்த்தினன்—உபதேசித் தான் — எனின் திருமந்திரத்தின் பெருமைதான் என்னே! அதனைச் செய்த திருமூலரின் பெருமைதான் என்னே !!

மூன்றாவது மெய்ம்மொழிப் பொருள்: தமது உள்ளத் திலே நின்று காட்டியது. இறைவன் தமது உள்ளத்திலே நின்று காட்டியதாக இங்குச் சுட்டப்படுகின்ற பொருள் இன்னது தான் எனக் குறித்து அறிவதற்கில்லை. ஆயினும் இறைவன் தம் உள்ளத்திருந்து பற்பல பொருள்களை உணர்த்தினன் என்றும் வழிதுறைகளைக் காட்டியருளினன் என்றும் அடிகளாரின் பாடல்கள் பலவற்றுள் வரக் காண்கிறோம்.

“கருணையும் சிவமே பொருள் எனக்காணும்
காட்சியும் பெறுகமற் றெல்லாம்
மருணெறி யென நீஎனக் கறிவித்த
வண்ணமே பெற்றிருக் கின்றேன்”

என்றது போன்ற பாடல்களைக் காண்க.

நமந்திரத்தைக் குறித்தே இக் கட்டுரை தோன்றிற் பின் அதுபற்றிச் சிறிது கூறியமைவாம். முன்பெல்லா மிருந்ததைவிடச் சென்ற சில ஆண்டுகளாகத் திருமந்திரப் பதிப்புக்களும், உரைகளும், ஆராய்ச்சிகளும் பெருகி வருகின்றன.

கழகத்தார் தாம் திருக்குறள், திருமந்திரம் இரண்டையும் ஆராயும் வகையில் முதலில் அவற்றிற்கு ஒரு Bibliography தயாரிக்க முயற்சிப்பதாயும் அந் நூல்களின் சார்பாகத் தம்மிடமுள்ளவற்றைத் தமிழ் மக்கள் தந்து ஆக்க மளிக்க வேண்டுமென்றும் 1956 இல் Hindu நாளிதழில் வேண்டு கோளொன்றை விடுத்திருந்தார்கள். செந்தமிழ்ச் செல்வி முப்ப தாம் சிலம்பு எட்டாம் பரலிலும் (ஏப்ரல்'56) அது வெளியா கிற்று.

திருவாவடுதுறை ஆதீனத்தார் ஆண்டுதோறும் திருமந்திர மாநாடு நடத்துவதோடு திருமந்திரத்தை ஒவ்வொரு தந்திரமாக பஞ்சாக்கர தீபம் என்னும் எளிய தெளிவுரையுடன் இலவச வெளியீடாக வெளியிட்டு வருகின்றார்கள். இதுவரை முதல் மூன்று தந்திரங்கள் உரையுடன் வெளிவந்துள்ளன. இதனோ டன்றித் திருமந்திரத்தைக் கட்டுரை வடிவில் பகுதி பகுதியாகத் 'திருமந்திரக் கட்டுரை' என்ற பெயருடன் வெளியிடும் முயற்சி யையும் மேற்கொண்டு இதுவரை பாயிரப் பகுதியும் முதற்றந்திர மும் இலவச வெளியீடுகளாகவே வெளிவந்துள்ளன.

திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார் திருமந்திரத்தை, துடிசைகிழார் சிதம்பரனாரின் குறிப் புரை, கழகப் புலவர் இராமநாத பிள்ளையவர்களின் விளக்கவுரை இவற்றுடன் இரண்டு பகுதிகளாக (2 Vols) ௧௯௫௪ இல் வெளி யிட்டுள்ளார்கள். இப் பதிப்பு அழகிய முறையில் நூலின் பெருமையை விளக்கி நிற்கிறது.

திருப்பனந்தாள் காசிமடத்தின் ஆதரவில் ஸ்ரீவைகுண்டத்தி லிருந்து வெளிவரும் 'குமரகுருபரன்' திங்களிதழில் திருமந்திரத் தின் ஆங்கில மொழிபெயர்ப்பு Dr. B. நடராசன் M.A., D. LITT அவர்களால் செய்யப்பட்டுச் சிறிது சிறிதாக வெளிவந்து தற்போது சில இதழ்களாக நின்றிருக்கிறது.

சைவசித்தாந்த மகா சமாசத்தின் மாத இதழாகிய 'சித்தாந்தம்' ௧௯௬௦ மார்ச் இதழில் தருமபுர ஆதீன வித்துவான் உயர்திரு முத்து-சு. மாணிக்கவாசக முதலியாரவர்கள் திருமந் திரச் செய்யுட்களின் பாடபேதங்களைக் குறித்துக் கட்டுரை யொன்று வரைந்துள்ளார்கள். தொடர்ந்து எழுதுவார்க ம்

கணட　　யாவும் நல்ல பயனுள்ளனவாகும். இத்தகைய ஆராய்ச்சிகளை மேன்மேலும் வளர்ப்பது அறிஞர் களின் கடனாம்.

இறைவன் இராமலிங்கர்க்குத் திருமந்திரத் திருமுறையால் உணர்த்தினன் — உபதேசித்தனன் — என்பதொன்றே அதன் பெருமைக்குச் சான்றாகும். அடிகளார் தம் அன்பர்களுக்குச் சன்மார்க்க உபதேசஞ் செய்யும்போது 'இந்த மார்க்கத்தின் உண்மை திருமந்திரத்தைக் கவனிக்கில் விளங்கும்' எனக் கூறியுள்ளதனை அவர்களது உபதேசக் குறிப்புக்களிற் காணலாம். அத்தகைய திருமந்திரத்துக்குப் பல்கலைக் கழகமும் ஆதீனமும் அறிஞர்களும் தொண்டு செய்ய முன்வந்து நிற்கும் இந்நாளில் தமிழ்மக்கள் அதனைப் பயன்படுத்திக் கொண்டு பயனெய்தி வாழ்தல் கடனாகும்.

திருமந்திரம் திக்கெலாம் பரவுக

## பொங்குக தனித்தமிழ்!

[திரு. த. சிங்காரவேலன்]

பொங்குக தனித்தமிழ்! பொங்குக தனித்தமிழ்!
பொல்லா வடசொலும் பொருந்தா மொழிகளும்
நில்லா தொழிந்திட நீள்புகழ் நாட்டில்
பொங்குக தனித்தமிழ்! பொங்குக தனித்தமிழ்!
இத்தமிழ் நாட்டின் இழிநிலை அகன்று
புத்தெழில் எங்கணும் பூத்திடல் வேண்டின்
ஏட்டிலும் எழுத்திலும் வீட்டிலும் நாட்டிலும்
பேச்சிலும் மூச்சிலும் பெருவழக் காகப்
பொங்குக தனித்தமிழ்! பொங்குக தனித்தமிழ்!
பொங்கலென் றிங்கே புகல்வது யாதெனின்
திங்கள் அனைய தீந்தமிழ் தன்னொடு
இயலிசை கூத்தெனும் இன்சுவை கூட்டிப்
பைந்தமிழ் தன்னைப் பாலெனச் சேர்த்துச்
செந்தமிழ் என்னுஞ் செந்தேன் சொரிந்து
அறிவின் ஆற்றலை அழலென மூட்டி
அருந்தமிழ் அடிசில் ஆக்கிட நாளும்
எங்கும் பொங்குக ஏர்தனித் தமிழே!

# திருநெல்வேலித் தமிழ்த் திருநாளில்
# நான்காவது சிற்றிலக்கிய மாநாடு

திருநெல்வேலிச் சந்திப்பு, தருமபுர மடாலயத்தில் நெல்லை ணகிரி இசைக்கழகத்தார் 29—4—61 முதல் நடத்திய தமிழ்த் திருநாளில் 30—4—61 ஞாயிறு காலை 9-30 மணிக்குச் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகச் சார்பில் 4 ஆவது சிற்றிலக்கிய மாநாடு தொடங்கியது. கழக ஆட்சியாளர் திரு. வ. சுப்பையா பிள்ளையின் வரவேற்புரைக்குப் பின், நெல்லை நகர் மன்றத் தலைவர் திரு. எஸ். குற்றாலிங்கம் செட்டியார் வாழ்த்துரை வழங்கினார். அவர் தம் வாழ்த்துரையில் அருணகிரி இசைக் கழகம், சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகங்களின் தமிழ்ப்பணி சமயப் பணிகளை மிகவும் பாராட்டினார்.

மாநாட்டுத் தலைவர் காரைக்குடி அழகப்பா கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர் டாக்டர் வ. சுப. மாணிக்கம், தம் தலைமையுரையில் மாநாட்டில் பேசவிருக்கும் அகத்துறை இலக்கியங்களாகிய கோவை நூல்களைப் பற்றி அறிமுகம் செய்தார். தமிழில் பிறமொழிச் சொற்கள் எத்தனை கலந்தாலும் ஒலி அடிப்படையில் எந்த மாற்றமும் ஏற்படக்கூடாது என்றார். கோவை நூல்களில் முதன்மையான திருக்கோவையாரைப் பாடிய மாணிக்கவாசகர் திருவாசகத்தைப் பாடிய பின்பே அதனைப் பாடியிருப்பார் என்றும் அதற்குக் காரணம் திருவாசகத்தின் நெஞ்சுருக்கும் தன்மையே என்றும் குறிப்பிட்டார். கோவை ஆசிரியர்கள் புதிய சொற்களை உருவாக்கியிருக்கிறார்கள்; அதுபோல் நாமும் கருத்துடைய புதிய சொற்களை உருவாக்க

...ரக்குப் பின் திருக்கோவையாரைப் பற்றி, தேவகோட்டை திரு. வே. இராமநாதன் செட்டியாரும், தஞ்சைவாணன் கோவையைப் பற்றி விருதுநகர் திரு. அ. இராசகோட்டியப்பனும், பாண்டிக்கோவையைப் பற்றித் திரு. சொ. சிங்காரவேலனும், குலோத்துங்கன் கோவையைப்பற்றித் திரு. ஆ. அருளப்பனும் பேசினார்கள். இத்துடன் மாநாட்டின் காலை நிகழ்ச்சி முடிந்தது.

மீண்டும் மாலை 6-மணிக்கு மாநாடு தொடங்கியது. மேலப்பாளையம் நகர்மன்றத் தலைவர் திரு. லெ. கா. மு. அப்துல் ரகுமான், B. A., B. L. மாநாட்டுச் சொற்பொழிவு நூலைப்

பாராட்டிப் பேசி வெளியிட்டார். பின்பு திருவாரூர்க் கோவையைப் பற்றித் திரு. தி. வைரமுத்துவும், திருவெங்கைக் கோவையைப் பற்றித் திரு சிவ. திருநாவுக்கரசும், மாறன் கோவையைப் பற்றிச் சிவகங்கை திரு. தி. இராமனுச ஐயங்காரும், அம்பிகாபதி கோவையைப் பற்றித் திரு. அ. ரா. பொன்னையாவும், குளத்தூர்க் கோவையைப் பற்றித் திரு. மறை. திருநாவுக்கரசும், ஒருதுறைக் கோவையைப் பற்றி மதுரை திரு. அ. கி. பரந்தாமனாரும் பேசினார்கள்.

இடையில், 25—4—61 அன்று சென்னையில் மறைந்த சொல்லின் செல்வர் டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளையின் மறைவுக்கு இரங்கல் தீர்மானம் ஒன்றைக் கழக ஆட்சியாளர் கொண்டு வந்தார். சேதுப்பிள்ளையின் செந்தமிழ்த் தொண்டைப் பாராட்டிப் பேசி, அத்தீர்மானத்தை நிறைவேற்றினர். சென்னை மாகாணத் தமிழ்ச் சங்க அமைச்சர் திரு. இ. மு. சுப்பிரமணிய பிள்ளை சேதுப் பிள்ளையின் உருவப்படத்தைத் திறந்துவைத்து, அவரின் தமிழ்ப்பணி கலைப்பணிகளைப் பாராட்டிப் பேசினர். இரவு 10 மணிக்குச் செல்வியர் : இராசலட்சுமி, ஹேமலதா, சந்திரிகா ஆகிய மூன்று உடன்பிறவிகளின் இசையரங்கும், 11 மணிக்கு மேல் திருமதி. ருக்மணி மகராசன் இசையரங்கும் நடைபெற்றன. இரவு 12-30 மணிக்கு இசையரங்கு முடிவுற்றது. கழக ஆட்சியாளர் திரு வ. சுப்பையா பிள்ளை எல்லோருக்கும் நன்றி கூறினர்.

## கழக நூற்கட்டமைப்புக்கு முதற் பரிசு

சிறந்த முறையில் கட்டடம் செய்யப்பட்ட நூற்களுக்குப் பரிசு வழங்குவதென அனைத்திந்திய அச்சகக் குழுவினர் செய்துள்ள முடிவுப்படி, இவ்வாண்டு ஏப்ரல் திங்கள் 28, 29, 30 ஆம் நாட்களில் புரோடாவில் நடைபெற்ற அனைத்திந்திய அச்சகத்தாரின் ஒன்பதாவது மாநாட்டில், நம் கழக வெளியீடுகளான திருக்குறள், நாலடியார் முதலிய நூல்களின் கட்டட அமைப்பின் சிறப்பினைப் பாராட்டி முதற் பரிசு வழங்கப்பட்டுள்ளது. இதுபற்றிய விவரம் பின்னர் வெளியிடப் பெறும். முன்னர் மும் முறை இத்தகைய பரிசினை நம் கழகம் பெற்றிருப்பது ஈண்டு குறிப்பிடத்தக்கது.

# தென்னிந்திய தமிழ்ச்சங்கம், திருநெல்வேலி

# தமிழ்ப்புலவர் மாணவர் தேர்வு

1961 பிப்ரவரித் திங்களில் சென்னை மாநிலத்திலுள்ள பல புலவர் கல்லூரிகளிலும் சென்னைப் பல்கலைக் கழக வித்துவான் பட்டத் தேர்வு வகைக்குப் பயின்றுவரும் மாணவர்களை ஊக்கும் வகையில் 1951 முதல் இச்சங்கத்தார் நடத்திவரும் தமிழ்ப் புலவர் மாணவர் தேர்வில் இவ்வாண்டு,

| | விண்ணப்பித்தவர் | எழுதியவர் | தேறியவர் |
|---|---|---|---|
| வித்துவான் இறுதிநிலை | 35 | 33 | 28 |
| ,, முதனிலை | 31 | 27 | 25 |
| ,, புகுமுகம் | 2 | 2 | 1 |

இவர்களில் ஒவ்வொரு வகுப்பிலும் முதற்றகுதியில் தேர்ந்த முதல் மூவருக்கும் ரொக்கப் பரிசுகள் குறித்தபடி வழங்கப் பெறும். இவர்களுக்கும் மற்றும் தேர்ந்தவர்களுக்கும் தகுதித் தாள்கள் வழங்கப்பெறும்.

### வித்துவான் புகுமுகம்

301. பெருமாள், ஆம்பூர். முதற் பரிசு ரூ. 20.

### வித்துவான் முதனிலை

599. K. சுப்பிரமணியன், K. V. S. S. கல்லூரி, திருப்பனந்தாள்.
முதற் பரிசு ரூ. 40.

614. G. எதிராசன், அரசர் கல்லூரி, திருவையாறு.
2-ஆம் பரிசு ரூ. 30.

605. R. சந்திரா, K. V. S. S. கல்லூரி, திருப்பனந்தாள்.
3-ஆம் பரிசு ரூ. 20.

### வித்துவான் இறுதிநிலை

416. L. S. கந்தசாமி, பல்கலைக் கல்லூரி, தருமபுரம்.
முதற் பரிசு ரூ. 50.

406. மா. கு. ராமன், அரசர் கல்லூரி, திருவையாறு.
2-ஆம் பரிசு ரூ. 35.

404. மா. அய்யாச்சாமி, அரசர் கல்லூரி, திருவையாறு.
3-ஆம் பரிசு ரூ. 25.

### வித்துவான் முதனிலை

இரண்டாந் தகுதி

623. இரா. தமிழ்ச்செல்வி, பல்கலைக் கல்லூரி, தருமபுரம்.

622. இராதா. ஜெயலட்சுமி, ,,

601. M. பாலசுப்பிரமணியம், K. V. S. S. கல்லூரி, திருப்பனந்தாள்.
604. R. இந்திரா ,,
613. P. K. தியாகராசன், அரசர் கல்லூரி, திருவையாறு.
607. S. இராசேசுவரி, கரந்தைப்புலவர் கல்லூரி, கரந்தை.
597. G. V. நடராசன், K. V. S. S. கல்லூரி, திருப்பனந்தாள்.
600. M. விசுவநாதன், ,, ,,
603. சண்முகானந்தம் ,, ,,
616. பேச்சிமுத்து, அரசர் கல்லூரி, திருவையாறு.

மூன்றாந் தகுதி

602. S முத்தையன், K. V. S. S. கல்லூரி, திருப்பனந்தாள்.
621. S. சுவாமிநாதன், திருவள்ளுவர் செந்தமிழ்ப்புலவர் கல்லூரி, திருநெல்வேலி.
596. R. லெட்சுமணன், K. V. S. S. கல்லூரி, திருபபனந்தாள்.
612. சு. முருகன், அரசர் கல்லூரி, திருவையாறு.
620. S. M. ஜெபமணி, திருவள்ளுவர் செந்தமிழ்ப் புலவர் கல்லூரி, திருநெல்வேலி.
595. R. சின்னதுரை, K. V. S. S. கல்லூரி, திருப்பனந்தாள்.
618. A. ஔவையகம், ஆம்பூர்.
598. முத்துக்குமாரசாமி, K. V. S. S. கல்லூரி, திருப்பனந்தாள்.
624. ஆ. பழனியாண்டி, திருவள்ளுவர் செந்தமிழ்ப்புலவர் கல்லூரி, திருநெல்வேலி.
611. அப்துல் ரஸாக், அரசர் கல்லூரி, திருவையாறு.
615. ச. இராமச்சந்திரன், ,,
619. வேலுச்சாமி, செட்டிக்குறிச்சி.

## வித்துவான் இறுதிநிலை

இரண்டாந் தகுதி

407. R. P. அருணகிரி, அரசர் கல்லூரி, திருவையாறு.
399. R. செயராமன், கரந்தைப்புலவர் கல்லூரி, கரந்தை.
398. P. பொன்னம்பலம், ,, ,,
409. R. சிராசுதீன், அரசர் கல்லூரி, திருவையாறு.
397. P. S. T. பாலசுப்பிரமணியன், கரந்தைப்புலவர் கல்லூரி, கரந்தை.
392. M. விஜயலக்ஷ்மி, K. V. S. S. கல்லூரி, திருப்பனந்தாள்.
413. பா. ஆனந்தராசு, ஆம்பூர்.
412. M. முகம்மது சுல்தான், அரசர் கல்லூரி, திருவையாறு.

மூன்றாந் தகுதி

395. K. அத்தியப்பன், கரந்தைப்புலவர் கல்லூரி, கரந்தை.
408. கொ. மி. இராயர், அரசர் கல்லூரி, திருவையாறு.
11. கி. நாகராசன், ,, ,,

402. M. சண்முகம், கரந்தைப்புலவர் கல்லூரி, கரந்தை.
417. வை. இராசேசுவரி, பல்கலைக் கல்லூரி, தருமபுரம்.
394. S. கமலா, K. V. S. S. கல்லூரி, திருப்பனந்தாள்.
390. P. தங்கத்துரை, ,,
403. இரா. மதிவாணன், கரந்தைப் புலவர் கல்லூரி, கரந்தை.
401. R. குமாரசாமி, ,,
400. P. இராயப்பன், ,,
393. மங்கையர்க்கரசி, K. V. S. S. கல்லூரி, திருப்பனந்தாள்.
405. கு. கோவிந்தசாமி, அரசர் கல்லூரி, திருவையாறு.
387. T. பாலகிருஷ்ணன், K. V. S. S. கல்லூரி, திருப்பனந்தாள்.
384. K. மருதகாசி, ,, ,,
385 R. கலியபெருமாள், ,, ,,
386. K. அழகர், ,, ,,
410. கோ. தயாராம், அரசர் கல்லூரி, திருவையாறு.

திருநெல்வேலி,
26 4 61.

பு. சி. புன்னைவனநாதன்,
புலவர்குழுத் தலைவர்,
தென்னிந்திய தமிழ்ச்சங்கம்.

## கவியரசர் தாகூர்

[திருமதி பரிபூரணம்]

பாரதத்தின் பண்பாட்டைப் பாரோர் போற்றப்
பாகொக்கும் தீஞ்சொல்லாற் பாட்டைப் பாடி
சாரதமா முனிவோரின் நியமம் தோன்ற
தாரணியிற் பெருங்கவியாய் நாளும் தாகூர்
பாரதமுதல் நற்கலைகள் பலவும் போற்றி
பண்பட்ட தொண்டாலே உலகை ஆண்டார்
விரதமதாய்க் கலைப்பணியே புரிந்த வீரர்
வித்தகர்தம் நூற்றாண்டு விழாவே இன்று. (க)

ரயால் வாழ்த்திடுவோம் கவிஞர் ஏற்றை
வங்கத்தின் நன்கொடையே வாழ்க வாழ்க
சிந்தனையால் செயலாலே சிறப்பைப்
சிற்றில்லாய் இவ்வுலகை விடுத்(
முந்தையர்கள் ஆயிரமாய் முயங்கி வாழும
மூதூர்க்குச் சென்றுவிட்டாய் முதல்வோய் வாழி
அந்தணரே அருங்குருவே அமர வாழி
அனைத்துலகும் பின்பற்றும் நெறியே வாழி. (உ)

# செய்திகளும் குறிப்புக்களும்

## (க) மொழிப்பற்று ஆபத்தானதாம்!

தமிழ்ப்பற்று, குசராத்தி மொழிப்பற்று, வங்காள மொழிப்பற்று முதலிய வட்டார மொழிப்பற்றுகளால் நாட்டில் ஒற்றுமையே போராபத்தில் முடியும் என்று அண்மையில் நடைபெற்ற பாரத் சேவா சங்கத்தின் ஏழாவது அனைத்திந்திய மாநாட்டைத் தொடங்கிவைத்துப் பேசுகையிலேயே முதலமைச்சர் நேரு மேற்கண்டவாறு கூறினார்.

குறிப்பு: மொழிப்பற்றும் அதனை அடிப்படையாகக் கொண்ட நாட்டுப்பற்றும் மக்களுக்கு மிகமிக இன்றியமையாதவை. இதைக் கண்டு அஞ்சுவது மக்களாட்சிப் பண்புக்கு உகந்ததன்று. மொழிப்பற்றால் ஒற்றுமை கெடுமெனின், மொழிப்பற்றின்மையால் நாட்டின் பண்பாடு, கலை, நாகரிகம் இன்னபிற கெடும், எனல் குற்றமாகாது.

## (உ) வான்வெளிப் பயணம்

ராக்கெட்டில்வைத்து ருசியா அனுப்பியிருந்த வான்வெளி மனிதன் பூமியைச் சுற்றிய பின்னர் ஏற்கெனவே முடிவு செய்யப்பட்டிருந்த, ருசியாவில் உள்ள ஓர் இடத்தில் பத்திரமாக இறங்கிவிட்டார். இதே போல் மே 5 ஆம் நாள் அமெரிக்கக் கடற்படைத் தளபதி ஒருவரும் விண்வெளி சென்று மீண்டுள்ளார்.

ராக்கெட்டில் சென்ற உருசிய வான்வெளி ஆராய்ச்சி வல்லுநரான யூரி அலெக்சேவிச் காகரினுக்கு 27வயதாகிறது. இவர் திருமணமானவர். இவருக்கு இரண்டு பெண் குழந்தைகள் இருக்கின்றன.

குறிப்பு: இங்ஙனம் உருசியாவும் அமெரிக்காவும் போட்டி போட்டுக்கொண்டு விண்வெளி சென்று மீள்வது பாராட்டத்தக்கதே. இதன் விளைவு மிகப் பயனுள்ளதாக—மக்கட் சமுதாயம் நல்வாழ்வு வாழ வழி கோலுவதாக அமையவேண்டும் என விழைகிறோம்.

## (ங) வாழ்த்துகிறோம்

சென்னை பச்சையப்பன் கல்லூரித் தமிழ்த்துறைப் பேராசிரியரான டாக்டர் மு. வரதராசனார் அவர்கள் இப்போது சென்னைப் பல்கலைக் கழகத்தின் தமிழ்த் துறைத் தலைவராக அமர்த்தப்பெற்றனர்.

இக்காலத்துச் சிறந்த எழுத்தாளரும், மொழி நூலறிஞருமாய்த் திகழும் டாக்டர் மு. வரதராசனார் அவர்கள் புதிய பணியில் நலமுறப் பீடுறத் தொண்டாற்றுவார்களாக என வாழ்த்துகிறோம்.

## (ச) திருப்புகழமிர்த வெள்ளி விழா

இவ்விழா 7-5-1961 ஞாயிறன்று சென்னை பூக்கடை திரு. சென்ன மல்லீசுரர் திருக்கோவில் அனுபூதி மண்டபத்தின்கண் தக்க தலைமையில் மிக்க சிறப்புடன் நிகழ்ந்ததுணர்ந்து பெரிதும் மகிழ்கின்றோம். 'வெள்ளி விழா மல'ரொன்றும் வெளியிட்டுள்ளமை பாராட்டற்குரியதாகும். திருப்புகழமிர்தம் நாட்டுக்கும் மொழிக்கும் நன்னெறிக்கும் கடந்த

இருபத்தைந்தாண்டுகளாக நற்றொண்டாற்றி வருகிறது. அது மேலும் சிறந்து சீர்மைப்பணிகள் பல புரிந்து செழித்தோங்க இறைவனை வழுத்துகின்றோம். வாழ்க திருப்புகழமிர்தம்! வாழ்க வெள்ளி விழா!

## (ரு) இலங்கைத் தமிழர் நிலை : சென்னையில் கண்டன ஊர்வலம்

இலங்கை அரசினர் தமிழ் மக்களுக்கு மேலும் மேலும் அநீதி இழைத்து வருகின்றனர். மொழிப்போராட்டத்தில் ஈடுபட்டுள்ள தமிழர்களைச் சிறைப்படுத்துவதும், அடித்துத் துன்புறுத்துவதுமான நிலை நீடித்துக்கொண்டே போகிறது. இதனைக் கண்டித்து, இலங்கை அரசினர்க்கு அறிவுரையும் அறவுரையும் வழங்குமுகத்தான், கடந்த 9-5-61 இல் தி. மு. கழகத்தினர் மாபெரும் கண்டன ஊர்வலம் ஒன்று நடத்தினர். நுங்கம்பாக்கத்திலுள்ள இலங்கை அரசினர் தூதுவராலயம் சென்று, தி. மு. க. தலைவர்கள்—தமது வேண்டுகோளை அத்தூதுவரிடம் கொடுத்தனர். அதில் இலங்கைத் தமிழருக்கு அவ் வரசினர் நீதி வழங்க வேண்டியது பற்றியும் தமிழர்—சிங்களவர் ஒற்றுமையை வலியுறுத்தியும் கூறியிருந்தனர்.

குறிப்பு: இங்ஙனம் தமிழ்ப்பெருங்குடியினர் தெரிவிக்கும் அறிவுரைகளையும் அறவுரைகளையும், கண்டனக் குறிப்புக்களையும் அறிந்த பிறகேனும் இலங்கை அரசினர் மனம் மாறும் என நம்புகிறோம்.

## (௬) டாக்டர் ரா பி. சேதுப்பிள்ளையவர்கட்குச் சென்னைப் பல்கலைக் கழகப் பாராட்டு

சென்னைப் பல்கலைக் கழகத்தில் கடந்த 25 ஆண்டுகளாகத் தமிழ்ப் பணி ஆற்றிய பேராசிரியர் டாக்டர் ரா. பி. சேதுப் பிள்ளையைப் பாராட்டும் விழா 13 4 61 மாலை சென்னைப் பல்கலைக் கழக 'செனட்' மன்றத்தில் நடைபெற்றது.

சென்னைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் டாக்டர் ஏ. இட்சுமணசாமி முதலியார் விழாவுக்குத் தலைமை தாங்கினார். தமிழ் அறிஞர்களும் பேராசிரியர்களும் மாணவர்களும் பொதுமக்களும் திரளாக இவ் விழாவில் பங்குகொண்டனர்

வெள்ளி விழாக் குழுத் தலைவரும் அண்ணாமலைப் பல்கலைக் கழகத் துணை வேந்தருமான டாக்டர் டி. எம். நாராயணசாமிப் பிள்ளை விழாவிற்கு வந்திருந்தோரை வரவேற்றார்.

"இன்று தமிழகத்தில் ஏற்பட்டுள்ள மறுமலர்ச்சிக்கு உறுதுணையாக இருந்தவர்களில் டாக்டர் சேதுப்பிள்ளை முன்னிலையில் விளங்கினார்" என்று சேதுப்பிள்ளையை அவர் பாராட்டினார்.

விழாவிற்குத் தலைமை தாங்கிய சென்னைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் டாக்டர் ஏ. இலட்சுமணசாமி முதலியார் தமது உரையில், "சென்னைப் பல்கலைக் கழகத்தில் முதன் முதலாகத் தமிழ்ப்பேராசிரியராகப் பணிபுரிந்த பெருமை டாக்டர் சேதுப்பிள்ளைக்கு உரியதாகும். கடந்த 25 ஆண்டுகளாகச் சீரிய தமிழ்ப்பணி புரிந்துள்ளார்" என்று பாராட்டி திரு. பிள்ளையவர்கள் உருவப்படத்தைத் திறந்துவைத்தார். இவ்விழாவினையொட்டி வெள்ளி விழா மலரொன்றும் வெளியிடப் பெற்றது.

# மதிப்புரை

['சேய்த்தொண்டர் புராணம்' (முருகவேள் பன்னிரு திருமுறையின் 12 ஆம் திருமுறை) ஆசிரியர்: தேனூர் வரகவி வே. செ. சொக்கலிங்கனாரவர்கள். கிடைக்குமிடம்; சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம். விலை ரூ. 8-00 ]

இவ்வாசிரியர் தேனூர் உமாதேவியம்மையின் திருவருள் கைவரப் பெற்ற வரகவியாவர். பன்னிரு திருமுறைபோன்று முருகவேளுக்கும் அமைத்தல் வேண்டுமெனத் திருவுளங்கொண்டவர் செந்நெறிப் பெரியார் தணிகைமணி வ. சு. செங்கல்வராய பிள்ளை, எம்.ஏ., அவர்கள் ஆவர். அவர்கள் நம்பியாண்டார் நம்பிபோன்று திருப்புகழ் முதலிய சேய்ப்புகழ் மாலைகளைப் பதினொரு திருமுறைகளாகத் தொகுத்துள்ளனர். சேய்த்தொண்டர் திருவரலாறுகள், பன்னிரண்டாந் திருமுறையாக வெளிவருதல் வேண்டுமெனத் திருத்தணிகேசனை உருக்கமுடன் வேண்டி நின்றனர். அதன் விளைவாகத் திருவருளால் வெளிவந்த அருள்நூல் இதுவாகும்.

இதன்கண் எழுபத்தெண்மர் திருவரலாறுகளும் சேய்த்தொண்டத் தொகை, சேய்த்தொண்டர் திருவந்தாதி முதலியவுமுள்ளன. பாடல்கள் பண்ணமை பத்திப்பாடல்கள். இவை ஏறத்தாழ நாலாயிரத்துக்கு மேலாகும். அழகிய நல்ல பதிப்பு. செந்தமிழன்பர்களும், செந்நெறிச் செல்வர்களும் வாங்கி ஓதி எல்லா வாழ்வும் எய்துவார்களாக.

['சிவபோக சிந்தாமணி' என்னும் 'ஸ்ரீரமணாநுபூதி' (முதற்பாகம்) இதன் ஆசிரியர் பாரத்வாஜி முகவைக் கண்ண முருகனாரவர் விலை ரூபா 2-00 கிடைக்குமிடம் 'சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், அஞ்சற்பெட்டி எண் 85'.]

ஆசிரியர் தம் சிவகுரவனாகிய ரமணமுனிவர் அளவிறந்த பத்திப் பேராளராவர். மெய்யுணர்வு கைவந்த பெருந்தவத்தோர் ஆசானையும் ஆண்டானையும் வெவ்வேறாகக் கருதார். உடலும் உயிரும், மலரும் மணமும் போன்று ஒன்றாகவே கருதுவர். அம்முறையில் இந்நூலாசிரியர் ரமணமுனிவர் திருவடிக்கு 'ரமண சந்நிதிமுறை' முதலிய பல நூல் யாத்து அணிவித்துள்ளார். அவற்றுள் ஒன்றே இந்நூல். இந்நூலின்கண் அரிய பெரிய தலைப்புக்கள் பத்தும் 755 அருட்பாக்களும் காணப்படுகின்றன. பாக்கள் பல்வகை யாப்புக்களான் அமைந்துள்ளன. ஒவ்வொரு திருப்பாட்டின் கருத்தும் அவ்வப்பாட்டின் தலைப்பில் செவ்வையாக யாக்கப்பட்டுள்ளன.

மேலும் அனுபந்தமாகப் பல நூற்றுக்கணக்கான பாடல்கள் காணப்படுகின்றன. இவையனைத்தும் பத்திப் பெரியார்கட்குப் பேரமுதமாகவுள்ளன. தீந்தமிழ்ச் சுவை விஞ்சியுள்ளன. இதனை வாங்குவதும் தமிழ்ப்பெரு மக்களின் தலையாய கடமையாகும். அம்மட்டுமன்று; கடவுள் மெய்ம்மையினையும் குருபத்தியினையும் அங்கை நெல்லியெனக் காட்டுவதற்கு இத்தகைய நூல்களே சாலச்சிறந்தனவாகும். இதனை மெய்யன்பர்களனைவரும் வாங்கிக் கற்று நன்மை எய்துவார்களாக.

---

திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை, 2-140, பிராட்வே,
அப்பர் அச்சகத்தில், திரு. வ. சுப்பையா அவர்களால்
அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர் : வ. சுப்பையா.

# கொங்குநாட்டுக் கல்வெட்டும், ஆய்வுக் குழுவினரும்



அரசலூர் மலைக்குகையிற் காணும் பிராமி எழுத்துக்கள்



அரசலூர் மலைச்சார் ஆண்டிப்பாறைக் குகையில் 26-5-61 இல் சென்ற ஆராய்ச்சிக் குழுவினர் :

இடமிருந்து வலம் : வித்துவான், செ. இராசு, வித்துவான், சென்னியப்பன், மயிலை சீனி. வேங்கடசாமி (குழுத்தலைவர்), T. S. ஸ்ரீபால், வித்துவான், பச்சையப்பன்.

[சஅ-அ ஆம் பக்கம் பார்க்க






| சிலம்பு | திருவள்ளுவர் ஆண்டு ௧௯௯௨, வைகாசி | பரல் |
|---|---|---|
| ௩௫ | ஜூன், 1961 | ௧௦ |



## பல்லாவரத்திலுள்ள மறைமலை அடிகளார் மாளிகையை வாங்கி நினைவு மன்றமாக அமைக்கும்படி அரசினருக்குச் செய்துகொள்ளும்

# வேண்டுகோள்

ஒரு நாட்டின் நன்மதிப்பினை உலகினுக்கு எடுத்துக் காட்டுவன அந்நாட்டு மொழியில் வழங்கிவரும் சீரிய இலக்கண இலக்கியங்களாகும். அந்நூல்களின் வாயிலாக அந்நூலாசிரியர் களை யுணருகின்றோம். அந்நூலாசிரியர்களின் பூதவுடல் எப் பொழுதும் நிலைத்திருப்பதில்லை. ஆனால் அவர்களின் புகழுடல் என்றும் நின்று நிலவும். அங்ஙனம் நிலவுவதற்குக் காரணமா வார் அந்நூல்களைக் கற்றும் கற்பித்தும் வரும் நல்லார்களேயாவர்.

அப்புகழுரை கற்ற ஒரு சிலரான் உணரப்பட்டு அவரான் களிப்பெய்துதற்குரியதாக நிற்கும். பெருமக்கள் அனைவராலும் உணரப்படும் வாய்ப்பினை அது தருவதற்கில்லை. இஃது இறை வன் நூல் ஓதியுணர்ந்தார்மாட்டு இறையுண்மையும் அவன்றன் புகழ்மையும் நிலைத்து நிற்பதனோடொக்கும். ஆனால் அவ்விறை வனுக்கொரு திருப்படிமமும், அப்படிமம் உறைவதற்கொரு திருக் கோவிலும் அத்திருக்கோவிலினைச்சார்ந்து திகழும் திருமண்டபங் களும், திருமுற்றங்களும், ஏனைத் திருப்படிமங்களும், கொடிமரம் முதலியவும், உயர்ந்த சுற்றுமதில்களும், வானளாவ நிமிர்ந்து நிற்கும் திருக்கோபுரங்களும், திருநந்தனவனங்களும், திருக் குளங்களும், திருத்தளிகளும், திருமடங்களும், திருமாளிகை களும், திருத்தேர்களும், திருவீதிகளும், நாள்வழிபாடுகளும், திருவிழாக்களும், பொழுது அறிவிக்கும் பெருமணி முழக்கங்

களும், பேரியங்களும் பிறவும் அவ்விறையுண்மையையும் அவன்றன் புகழ்மையையும் எல்லாக் காலத்தும் எல்லா மாந்தர்க்கும் ஒருங்கெடுத்துக் காட்டுவனவாகும். அதுபோல் புலவர் பெருமக்களின் புகழினை மாந்தரனைவரும் கண்டும் கேட்டும் கனிந்து களிகூர்வதற்கு அப்புலவர் திருப்பெயரால் ஒரு நினைவு மன்றம் எழுப்புதல் நனிமிக இன்றியமையாததாகும்.

பண்டும் இன்றும் நாட்டுக்கும், மொழிக்கும், நன்னெறிக்கும் ஈடும் எடுப்புமின்றிப் பாடுபட்டுப் பயன்மிக வளர்த்த பண்பார் புலவர் பெருமக்கள் பெயரால், திருமடம், கல்லூரி, மருத்துவமனை, படிப்பகம், கழகம், இல்லம், வணிக நிலையம், புழங்கும் பொருள்கள், நாவாய், நீர்க்கடப்புக்கள், சாலைகள், தெருக்கள், பூங்கா, ஊர்முதலியன வழங்கி வருகின்றன. மூவேந்தர் காலத்தும் திருக்கோவில்களைச் சாரப் பல திருமண்டபங்கள் புலவர் பெருமக்கள் பெயரால் அமைத்துள்ளனர் என்பது கல்வெட்டுக்களாலும், ஆங்காக்குக் காணப்படும் சிற்சில மண்டபங்களாலுமுணரலாம்.

இந்த நூற்றாண்டில் நம்மிடையே வாழ்ந்து நற்றமிழுக்கும் நன்னெறிக்கும் ஆங்கில மயலும் ஆரியமருளும் அகம் புறமாய் மக்களை ஈர்த்துத் தங்கள் தாய்மொழியாம் தமிழ்மொழியினை அறவே மறந்து அதன்கண் எழுதவும் பேசவும் தெரியாதெனவாய் கூசாது மேடையேறிக் கூறுவதனையும் வழுவென ஒருசிறிதும் எண்ணாது அதுவே விழுமிதென எண்ணிப் பெருமிதத்துடன் கூறிவந்தார் பலரிடையே தனித்துநின்று நற்றொண்டு பல புரிந்து மறைந்த பெரியார் ஆசிரியர் மறைமலையடிகளாராவர். அவர்தம் செயற்கருஞ்செயல்கள் பலவற்றையும் அவர்தம் திருப்பெயரான் நிகழும் நூல் நிலையத்தாரும் பிறரும் அரசினர்க்கு விடுத்துள்ள அடியில்வரும் 'நினைவு மன்ற வேண்டுகோளால்' நன்குணரலாம்.

தமிழ்நாட்டரசு நிதியமைச்சரவர்களே!

நாட்டிற்கு நன்மைசெய்த புலவர்களை மக்கள் மறப்பதில்லை. அப்புலவர்கள் உலகைவிட்டு மறையினும் மக்கள் மனத்தைவிட்டு மறைவதில்லை. அவர்கள் கையாண்ட பொருள்கள், அவர்கள் இருந்து, வாழ்ந்து, நூல்கள் இயற்றிப் புனிதமாக்கிய இடங்கள் அரும்பெறல் பொருள்களாகக் காப்பாற்றப்படுகின்றன, போற்றப்படுகின்றன. இவ்வாறு காத்தலும் போற்றலும் மேலை நாடுகளில் மிகச் சிறந்த முறையில் நடைபெறுவதைக் காணலாம். இவை மறைவெய்திய அப் புலவர்களுக்குப் பெருமை சேர்ப்பவை அல்ல; அவர்கள் வாழ்ந்த நாட்டிற்கே பெருமை சேர்ப்பன. அத்தகு பொருள்களைக் காணுந்தோறும் காணுந்தொறும் மக்கள் உள்ளம் கனிகின்றது, ஆர்வம் பெருகுகின்றது, ஊக்கமும் உள்ளத்தே ஊன்றப்படுகின்றது.

நாட்டுக்கு நலம்பல புரிந்த பெரியார், புலவர் பெருந்தகை, அண்மையில் மறைவெய்திய **மறைமலை அடிகள்** ஆவார். இக் காலத்தே தமிழ் மக்களிடையே காணும் எழுச்சிக்கும் தமிழ் ஆர்வத் திற்கும் வித்திட்டவரும் அடிகளே ஆவர். தமிழ் மொழிக்கும், தமிழ் இலக்கியத்திற்கும், சமயத்திற்கும் அரிய தொண்டாற்றியவர் அடிகளார் என்பதைத் தமிழ்நாடு நன்கு அறியும். தொன்மைத் தமிழ்ச் சான்றோர் போன்று தமிழ்மொழியைத் தூயதாய் வளர்த் தவரும், வழங்கியவரும் அடிகளாரே. பெரும் பாலோர் தமிழைப் புறக்கணித்த அக்காலத்தே, ஆங்கிலம் கற்பதும் பேசுவதும் எழுதுவதுமே அழகெனக் கருதிய அக்காலத்தே அடிகளார் தூய தமிழ் நடையை நிலைநாட்டியது செயற்கரிய செயலாகும். எழுந்த எதிர்ப்பையும் மறுப்பையும் பொருட்படுத்தாது உரங்கொண்டு எழுந்து அடிகளார் காட்டிய செந்தமிழ் நெறியிலே மரபு வழாமல், தூய்மை கெடாமல் இன்று புது மலர்ச்சி மலர்கின்றது. அடிகளார் இயற்றிய தொண்டின் பயனை, அவர்பட்ட அரும்பாடு தந்த பயனை, இன்று தமிழ்நாடு நுகர்ந்து நலம் பெறுகின்றது. தமிழ் மொழி ஆட்சிமொழியாக அரியணை அமர்ந்தது; பல்கலைக்கழகப் பாடமொழி யாகிப் பல நலம் பயக்கின்றது.

உயரிய செந்தமிழ்நடைக்கு இலக்கியமாய்த் திகழும் உரை நடை நூல்கள் பலவற்றை அடிகளார் எழுதிப் போந்தார். வட மொழியிலும், ஆங்கிலத்திலும், தமிழிலும் வித்தகப் புலமை எய்திப் புலவரெல்லாம் போற்றும் புலவர் மன்னரான அடிகளார் சிறந்த மொழிபெயர்ப்பு நூல்களும், திறனாய்வு நூல்களும், புதினங் களும் எழுதியுள்ளார். 'சாகுந்தல நாடக ஆராய்ச்சி' வடமொழி நாடகத்திற்கு ஷேக்ஸ்பியர் நாடகத் திறனாய்வைப்போல எழுதப் பட்ட தமிழ்த் திறனாய்வு நூலாகும். சங்ககாலப் புலவர்களின் கவிதைநயங்கள் எல்லாம் பெற்றிலகுவது அடிகளார் இயற்றிய 'திருவொற்றியூர் மும்மணிக் கோவை'யாகும். திருவாசகத்தின் முதல் நான்கு அகவல்களுக்கும், திருவொற்றியூர் மும்மணிக் கோவைக்கும் அகலவுரை எழுதித் தொல்காப்பிய உரையாசிரியர் களைப் போலப் பெரும்புகழ் எய்தியுள்ளனர்.

பத்துப்பாட்டில் முல்லைப்பாட்டு, பட்டினப்பாலை முதலிய பாடல்களைப் பற்றி அரிய ஆராய்ச்சிகள் செய்து திறனாய்வு நூல்களைப் படைத்துள்ளார். மொழி பெயர்ப்புக் கலைக்கு இலக் கணமாய் விளங்கும் சில உரைநடை நூல்களை இயற்றியுள்ளார். தமது சொற்பொழிவு செய்யும் முறைகளைப் பல்லோரும் பின்பற்று மாறு அழகுறச் சொற்பொழிவுகள் செய்து தமிழ்த் தொண் டாற்றினார். தமது வாழ்வு முழுதும் தமிழ்த்தொண்டிற்காகவும், தமிழர் நலத்திற்காகவும் பயன்படும்படி வாழ்ந்து வந்தார். தொலைவிலுணர்தல், மரணத்தின்பின் மனிதர் நிலை, மனிதவசியம், அறிதுயில் போன்ற மறைபொருள் ஆய்வு நூல்களைத் தம் பயிற்சியறிவோடு ஒட்டி முதன் முதலாகத் தமிழில் எழுதியுள்ளார். பல்வேறு துறைகளில் அடிகளார் இயற்றிய நாற்பதுக்கு மேற் பட்ட நூல்கள் என்றுமுள தென்றமிழ் உள்ளளவும் கலைக் கருவூலங்களாய் நின்று நிலவும் பெருமையுடையன.

அடிகளாரோ அவர்காலத்தே தம்மைப் புறக்கணித்த, எதிர்த்த மக்கள் நாணுமாறு அவர்களுக்கு நல் நயம் ஒன்றைச் செய்துவிட்டுச் சென்றார். தாம் பெரும்பொருள் செலவிட்டு, அரிதில் தேடிய நாலாயிரத்திற்கு மேற்பட்ட நூல்களைத் தம் இறுதி விருப்ப ஆவணத்தின்படி தமிழ்மக்களின் பொது உடைமையாக்கிச் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தாரிடம் ஒப்புவித்துச் சென்றார். அக் கழகத்தார் தாம் ஈட்டிய பொருளைக் கொண்டு பல நூற்றுக்கணக்கான அரிய நூல்களையும் சேர்த்து, அடிகளார் பெயரால் "மறைமலை அடிகள் நூல்நிலையம்" என ஒரு நூல்நிலையத்தைச் சென்னையில் சிறந்த முறையில் தமிழ் மக்கள் பயன் துய்க்குமாறு நடத்தி வருகின்றனர்.

ஆதலின் தமிழ்நாடு அடிகளார் தொண்டின் பயனைத் துய்ப்பதோடு, அவர் பொருளின் பயனையும் துய்த்து வருகின்றது. இவ்வாறு அரும்பெருந் தொண்டாற்றிய அடிகளாருக்கு, மறுத்தார்க்கும் எதிர்த்தார்க்கும் நன்மையே செய்து சென்ற பெருந்தகையாருக்கு நினைவு அடையாளமாக **ஒரு நினைவுமன்றம்** அமைத்தல் தமிழ்மக்கள் கடனாகும். அவர் செய்த நன்றியை நாம் மறத்தல் கூடுமோ?

அடிகளார் இருந்து, வாழ்ந்து, பாப் பல புனைந்து, நூல் பல எழுதிப் புனிதமாக்கிய மாளிகை ஒன்று பல்லாவரத்தில் இருப்பதைத் தமிழ்மக்கள் அறிவர். அவர் மாளிகையே அவர் நினைவு மன்றமாக-தமிழ் மக்களின் கலைக்கூடமாக-அமைப்பது மிகமிகப் பொருத்தமுடையதாகும். இம்மாளிகையை விற்று அதன் விற்பனைத் தொகையை அடிகளார் மக்களுக்கும், நால்வர், அம்பலவாணர் வழிபாட்டிற்கும் பங்கீடு செய்யவேண்டுமென்பது அடிகளார் விருப்ப ஆவணத்தின்படி ஏற்படுவது. அதன்படி அம் மாளிகையை விற்பதற்குச் சட்டமன்றத்தினரால் அமர்த்தப்பெற்ற ஆணையர் (அட்வகேட்) ஒருவர் ஏற்பாடு செய்துவருகின்றனர். அதன் மதிப்புச் சற்றேறக்குறைய ரூ. 30,000 ஆகும். இம் மாளிகை பிறர் கைப்படின் அடிகளாரால் புனிதமாக்கிய கலை நிலையம் கண்ணிற் காணுதற்கும் கண்டு மகிழ்தற்கும் இன்றிக் கை மாறும், அழிந்துபடும் என்பது திண்ணம்.

ஆதலின், நிதியமைச்சரவர்களே! பல்லாவரம் சாவடித் தெருவிலுள்ள இம்மாளிகையை அரசினர் விலைகொடுத்து வாங்கி அடிகள் நினைவுமன்றமாக்குமாறு வேண்டிக் கொள்ளுகிறோம். இதுவே அடிகளார் இயற்றிய அரும்பெருந் தொண்டிற்கு இயற்றக்கூடிய சிறிய, சீரிய கைம்மாறாகும்.

இப்படிக்கு,

மறைமலையடிகள் நூல்நிலையத்தார், முன்னாள் நகராண்மைக் கழகத் தலைவர் டி. செங்கல்வராயன், ம. பொ. சிவஞான கிராமணியார், டாக்டர். எஸ். ஸி. மணவாள இராமாநுசம், டி. கே. சண்முகம், சி. சச்சிதாநந்தம் பிள்ளை, பி.ஏ., எல்.டி., கே. பாலசுப்பிரமணிய ஐயர் பி.ஏ., பி.எல்., டாக்டர். அ. சிதம்பரநாதன் செட்டியார் எம். எல். சி., கா. அப்பாத்துரை எம்.ஏ., எல்.டி., வ. சுப்பையா பிள்ளை.

அடிகளார்க்கு எழுப்பும் நினைவு மன்றம் விலை கொடுத்து வாங்கப்படும் வேற்றிடத்திலமையாது, அடிகளார் பல்லாண்டு களாக வாழ்ந்து வந்த அவர்தம் நல்ல மாளிகையில் அமைய நேர்ந் திருப்பது ஒரு தனிச்சிறப்பாகும். மேலும் அடிகளார் வாழ்ந்து வந்த மாளிகையில் சிறந்ததோரிடம திருக்கோவிலாக 'அம்மை அம்பல வாணர்க்கும் நால்வர்க்கும்' அமைக்கப்பட்டு அவ்வத் திருப்படிமங்கள் எழுந்தருளப் பண்ணிக் கடவுண்மங்கலமும் குடமுழுக்கும் ஏறத்தாழ முப்பதாண்டுகளுக்கு முன் அடிகளா ரால் சிறப்புற நிகழ்த்தப்பட்டு அடிகளாரால் அவர்தம் மறைவு நாள் வரையும் இடையறாது வழிபாடியற்றப்பட்டு வந்துள்ள தேவ கோட்டம் ஒன்றுமுள்ளது. அக்கோட்டத்து வழிபாடு அடி களாருக்குப்பின் அவர்தம் ஆவணப்படி இன்றுகாறும் எழி லுடன் நடந்து வருகின்றது. அத்தேவ கோட்டத்தினைப் பொருள் நிலை குறித்து அடிகளார் மாற்றியமைக்க ஒருவாறு உன்னியுள்ளாரெனினும் அவர்பால் பேரன்பும் பேரார்வமும் மிக்குள்ள நம்மனோரால் அதனை எங்ஙனம் ஏற்றுக்கொள்ளுதல் முடியும். அதனால் எந்த வகையாலும் அம்மாளிகையினைப் பிறர் கைப்பட விடுவது பொருந்துவதன்றாம்.

அம்மாளிகையினைத் தனிப்பட்டாரேனும், சிலர் பலர் கூடி யேனும்,கழகங்கள் வாயிலாகவேனும், இனம்,குழு, கட்சி முதலிய சார்பாகவேனும் விலைகொடுத்துப்பெற்று நினைவுமன்றமாக நிறுவு வது ஒன்றினொன்றுயர்ந்து நிலவும் சிறப்புடைய தாகுமே யன்றி முற்ற முடிந்த சிறப்பினையுடையதாகாது. அத்தகைய சிறப்பு அரசினரால் அமைக்கப்பட்டாலன்றி உண்டாவதற்கில்லை. அரசி னர்க்கும் எல்லாவகையானும் சிறந்த தக்க பெரியாரொருவருக்கு நினைவுமன்றம் எழுப்புவது மிக்க சிறப்புடையதொன்றாகும்.

அரசினர் அவ்வாறு செய்வதற்குப் பலரும் பல்லாற்றானும் தூண்டுதல் புரிவது பயனுடைத்தாகும். அம்முறையில் சிறந்த ஆங்கிலம், தமிழ் ஆகிய இரண்டிலும் வெளிவரும் நாளிதழ் களிலும், கிழமை திங்கள் முதலியனவாக வெளிவரும் இதழ் களிலும் அவ்வேண்டுகோள் அவ்வவ்வாசிரியர்களால் ஆர்வமுடன் வரவேற்கப்பட்டு அப்படியே வெளி வந்துள்ளது. சில ஆசிரியர் கள் தங்கள் சீரிய உடன் பாட்டுக் கருத்தினையும் வெளியிட்டுள் ளார்கள். இது போல் பெருமக்களும், கழகங்களும், மன்றங் களும், ஆசிரிய மாணவர்களும், பொதுநலப்புலவர்களும் பிறருந் தூண்டுதல் புரியின் நன்றாகும் என நாடுகின்றோம்.

# இலங்கைமொழி இணக்கத்தின் இன்றியமையாமை

பண்டு தொட்டு இன்றுகாறும் பரந்துபட்ட உலகியலில் நிகழ்ந்து வரும் நடைமுறையினையும் வரலாற்று வாய்மைகளையும் நடு நிலையோடு உற்று நோக்கின் நாகரிகச் சிறப்பு வாய்ந்த எந்த நாட்டிலும் ஒரு மொழி பேசும் மக்களாகவே வாழ்ந்து வந்தனர், வருகின்றனர் எனக் கூறுவதற்கில்லை யென்பது தெள்ளிதிற் புலனாகும். பன்மொழி பேசும் மக்களாகவே எல்லா நாட்டினும் இருந்து வருகின்றனர். அங்ஙனமின்றி ஒருமொழி பேசும் கூட்டத்தாராகமட்டும் இருப்பதாக எங்கேனும் அரிதிற் கேட்கப்படின் அவர்கள் நாகரிகமற்றவராகவே காணப்படுவர். என்னை? அவர்கள் பிறமொழி மக்களுடன் அளவளாவிக் கலந்து வாழும் சீரிய மனப்பான்மை இல்லாமையா னென்க. இவர்கள் பிறமொழி மக்களுடன் கூடிக்கலந்து உற வாடும் பெற்றியினை இழந்தமையால், இருளில் வாழும் இழி நிலையினருமாவர். இவ்வுண்மை வரும் செந்தமிழ்ப் பொது மறையானுணரலாம்.

> "நகல்வல்லர் அல்லார்க்கு மாயிரு ஞாலம்
> பகலும்பாற் பட்டன் றிருள்." (திருக்குறள். ௯௯௯.)

பல மொழி பேசும் மக்கள் ஒருங்கு கூடி வாழும் ஒரு நாட்டினிடையே ஏதாவது ஒரு மொழியாளர் பெரும்பான்மை யினராயிருப்பது இயல்பே. அப்பெரும்பான்மையோர் ஏனைச் சிறுபான்மையோரைத் தங்களின் மிக்காராகக் கருதி நன்கு மதித்து எல்லா வுரிமைகளையும் தமக்கொப்ப இனிமையொடு நல்கி வாழ்தல் வேண்டும். அங்ஙனம் வாழின் அச் சிறு பான்மையோர் மிக்க மனமகிழ்வுடையராய் அப்பெரும்பான்மை யோரை விட்டகலாது ஒட்டி உறவாடி வாழ்வதே தமக்கு உறுதி யெனக் கொண்டு உளங்குளிரக் கூடிவாழ்வர்.

மேலும் சிறுபான்மையோர் முறையாகச் சிலவுரிமைகளைப் பெரும்பான்மையரிடம் கேட்குங்கால் அம்பெரும்பான்மையோர் தாமே இவ்வுரிமைகளை முன்னறிந்து வலிய வழங்கி யிருத்தல் வேண்டும். அங்ஙனம் செய்யாமையால் இந்நிலை நேர்ந்தது என எண்ணியும், இது நினைப்பூட்டுதலே யன்றிப் போர்மூட்டுதலன்று எனக் கொண்டும் வழங்குவது சால்புடைமையாகும். இது சேயின் பசியறிந்து உணவு கொடுத்தலே தாயின் கடமையாகும்.

அதற்குமேல் சேய் பசிக்கின்றதெனக் கேட்டபின் கொடுத்தல் அத்துணைச் சிறப்பின்று எனினுங் குற்றமுடைத்தாகாது. கேட்டுக் கொடுப்பின் பணிந்து விட்டதாகத் தாய் நினைப்பின் அது தாய்த்தன்மையினை அறவே மாற்றி வேற்று நிலையினை அவளுக்கு எய்துவிக்கும். இதனைத் தோல்வியெனப் பிறர் அறியாது கூறினும் அது சால்புடையார்க்கு ஏற்புடைத்தென்றே மதியமைச்சர் போல்வார் மனங்கொள்ளுதல் வேண்டும். அம்முறையினைவரும் தனித்தமிழ்ப் பொதுமறையானுணரலாம் :

> "சால்பிற்குக் கட்டளை யாதெனின் தோல்வி
> துலையல்லார் கண்ணும் கொளல்." (திருக்குறள், ௯௮௬.)

இப்பொழுது இலங்கையிலேற்பட்டிருக்கும் நெருக்கடியான நிலைமையினை உற்று நோக்கின் மேற்போந்தவற்றோடு பொருந்துவதென்பது எவருக்குந் தெள்ளிதிற் புலனும். இலங்கையின் வரலாற்றினை இலங்கை மகாவமிசத்தின்படியும் பிற நூல்களின்படியும் நடு நிலை வழாது உய்த்துணாரின் சிங்கள இனமும் மொழியும் முறையே தமிழினத்தோடும், தமிழ் மொழியோடும் கலந்த பின் தோன்றியனவேயாகும். இவ்வுண்மையினை வரும் சிறு குறிப்புக்களான் நன்குணரலாம் :

இலங்கைவாழ் பழங்குடிகள் காடுறையும் வேடர்களாயிருந்தனர். அவர்கள் குறைந்த தொகையினராகவும் உள்ளனர். செம்மையும் நாகரிகமும் நிரம்பப் பெறாத நாடு நகரங்களும் ஆட்சிகளும் உடையராயிருந்தனர். அந்நிலையில் ஏறத்தாழக் கி. மு. ஐந்தாம் நூற்றாண்டில் நாவலந்தீவின் வடபாலுள்ள இலாடதேசத்து மராட்டிய மன்னன் மகன் விசயன் என்னும் இந்து இளங்கோ எழுநூற்றுவருடன் இலங்கை வந்தனன். வந்து வேடர்குலப் பெண்ணாகிய குவேணியை மணந்து வேடரொடு பொருது வென்று ஆட்சியைக் கைப்பற்றினன், பாண்டியமன்னனுக்குத் திறை கொடுத்தும் வந்தனன்.

தனக்கு முடிசூட்டிக்கொள்ள விழைந்தனன்; அரசியலுறுப்போடு சூழ்ந்தனன். அவர்கள் ஓர் அரசகுலப் பெண்ணினை மணந்துகொண்டாலன்றி முடிசூடிக் கொள்ளுவது ஏற்புடைத்தாகாதென் றியம்பினர். அம்மன்னனும் அதற்கிணங்கிப் பாண்டிய மன்னன் மகளை மணந்துகொள்ள விழைந்தனன். பாண்டிய மன்னனிடமும் விண்ணப்பித்துக் கொண்டனன். பாண்டிய மன்னனும் அதற்கிணங்கித் தன் அருமை மகளையும் அவளுடன் எழுநூறு தோழிப் பெண்களையும், பல்வகைத் தொழில் திறம்படைத்த குடும்பங்கள் பலவற்றையும், பிற பொருள்களையும் விடுத்து வைத்தனன். விசய மன்னன்

பாண்டிய மன்னன் மகளையும், அம்மன்னனுடன் வந்த எழுநூறு போர்மள்ளரும் அரசியொடு வந்த தோழிப்பெண்கள் எழுநூற்று வரையும் மணந்து கொண்டனர். இம்முறையில் பலர் சிங்களவ ராகவும், பலர் தமிழராகவும் அந்நாட்டில் இருபெரும் பிரிவுகளாகப் பிரிவுபட்டு வாழ நேர்ந்தனர் என்ப. அந்நாளில் தமிழகத்துத் திணை நிலைத் தெய்வங்களும் கொள்கைகளுமே அந்நாட்டு நெறி முறைகளாயினர். பற்பல காலங்களில் இலங்கை மன்னவர்களுக் குப் புகலிடங்கொடுத்துப் போர்த்துணை புரிந்து தமிழகம் உதவி யமையும் வரலாற்றானறிகின்றோம். இம்முறையான் நோக்கின் இலங்கைவளமனைத்தும் தமிழர் தம் தனிப் பெரும்பாட்டுழைப்பி னால் நேர்ந்தன என்பது மறுக்கொணா வுண்மையாகும்.

கி. மு. மூன்றாம் நூற்றாண்டில் அசோகப் பெருமன்னன் தன் அருமை மக்கள் மகேந்திரன் சங்கமித்திரை என்பவர்களை இலங்கைக்கு அனுப்பிப் புத்த சமயத்தைப் பரவச் செய்தனன் என்பதை வரலாற்றானுணருகின்றோம். புத்தம் பரவிய காலத் தும் முன்னிருந்த தமிழகத்தின் நெறியும் நிலைத்து வளர்ந்து கொண்டுதானிருந்ததெனவும் அறிகின்றோம். அதுவே சிவ நெறி யென்னும் பெயரான் இப்பொழுது வழங்கி வருவதாகும்.

இப்பொழுது தமிழர் மொழிச்சிக்கலை அமைதியான உடம் பாட்டு முறையில் தீர்த்துவைப்பதற்கு இலங்கை அரசினர் ஒரு குழு அமைத்திருக்கின்ற தென்பதுணர்ந்து மகிழ்கின்றோம். சிங்கள வட்டாரத்து அரசியல் மொழி சிங்களமாகவும் தமிழர் வட்டாரத்து அரசியல் மொழி தமிழாகவும் அமைந்து ஒரு வட்டார ஆட்சிக்கும் மற்றொரு வட்டார ஆட்சிக்கும் இடையே நிகழவேண்டி எழுத்துப்போக்குவரத்துக்களுக்கு, ஆங்கிலமொழி இஞ்ஞான்று பரந்துபட்ட உலகப் பொது மொழியாய் வெளி யுலகஞ் செல்வார்க்கு மிக இன்றியமையாததொன்றாய் அவ்வொரு மொழியினால் உலகத்தில் எப்பகுதிக்கும் சென்று எவ்வெவ ரோடும் உரையாடித் தத்தங்கருமம் முடிக்கும் தகுதிவாய்ந்த தாய்த் திகழ்கின்றது. உலகிடைச் சிறந்த நூல்கள் எம்மொழியில் வரினும் அவை உடனடியாக ஆங்கிலத்தின்கண் மொழிபெயர்க்கப் படுகின்றன. அத்தகைய சிறந்த ஆங்கிலத்தைப் பொது மொழி யாகவும் அமைத்துக் கொள்வது சாலப்பொருத்தமுடையதாகும். இத்தகைய சிறந்த ஒற்றுமை முடிவு நனிமிகு விரைவில் ஏற்பட வேண்டுமென எல்லாம்வல்ல இறைவனை மனமொழி மெய்களான் வழுத்தி வாழ்த்தி வணங்குவாம். அரசினர் குழு வமைத்துள்ள வண்மைபோன்று விழுமிய ஒற்றுமை முடிபுங் கண்டு பெரும் புகழும் எய்துவார்களாக.

# பாட்டில் உணர்ச்சி

[திரு. தி. நா. அறிவுஒளி]

உணர்ச்சி என்ற அன்னையின் வயிற்றின்கண் தோன்றும் குழவியே பாட்டு. தன்னை மறந்த உணர்ச்சியில் தோன்றும் பாட்டு ஒரு வகை. தன்னை நினைந்த உணர்ச்சியில் தோன்றும் பாட்டு பிறிதொரு வகை.

உயர்ந்த சில பாட்டுக்களின் தகுதி ஒரே ஒரு முறை பார்க்கும்போதே, புலனாகிவிடும். சில பாட்டுக்களில் ஆழ்ந்து ஈடுபட்டுப் பயிலப் பயிலவே அவற்றினருமை புலனாகும். உணர்ச்சிப் பிழம்புகளாக விளங்கும் புலவர்கள் தங்களின் ஆழ்ந்த உணர்ச்சிகளின் சிறு சிறு கதிர்களையே பாட்டின் வழி வெளி விடுகின்றனர். கவிஞன் உள்ளத்தே தோன்றும் முழு உணர்ச்சி வேகத்தையும் அப்படியே பாட்டில் கொட்டி விடுகிறான் என்று கூற முடியாது. அவ்வாறு முழு வேகத்தையுங் கொட்டினால் அது பாட்டும் ஆகாமல், உரையும் ஆகாமல் சொல்லணியாகவும் ஆகாமல் வெற்றுமையாகவே முடியும்! பாட்டு உணர்ச்சியால் விளைவதாயினும் அறிவால் ஒழுங்கு பெற அமைவது. யாப்பிலக்கண அமைதிக்கு உட்பட்டே பாட்டு விளைகின்றமையின் அறிவின் ஆட்சிக்கு உணர்ச்சியே உருவாகிய பாட்டு உட்பட்டே அமைகிறது. ஆகவேதான் முழு உணர்ச்சி வேகம் பாட்டில் இடம் பெற முடிவதில்லை. கவிஞர்கள் பாட்டில் பல்வகை உணர்ச்சி நிலைகளை அமைக்கின்றனர். பலவகைப் புதுப்புது உணர்ச்சிகளையும் அவர்கள் ஊட்டுகின்றனர். காதல் உணர்ச்சியில் ஆயிரம் வேறுபாடுகளைக் காட்டுவர்! மற உணர்விலும், அமைதி உணர்விலும், இரக்க உணர்விலும், அன்பு, அருள், ஆண்மை ஆகிய பல்வகை உணர்விலும் பலப்பல உட் பிரிவுகளைக் காட்டுவர்.

மன ஆறுதலை விளக்கும் பாடல்கள் மிக அருமையானவை. மன ஆறுதல் காரணமாக ஒரு வகை இனிய செருக்கு உள்ளத்தில் தோன்றும். சினம், வெறி, முனிவு, மறம், அருளின்மை ஏயவை காரணமாக அமையும் செருக்கு காழ்ப்புடைய ஆறுதல் காரணமாக அமையும் செருக்கு இனிமையானது; வெறுப்பு விளைக்காதது; விரும்பத்தக்கது. இத்தகு புது உணர்வை வாழ்க்கையில் யாவரும் சில போது துய்க்கிறோம். ஆனால், கவிஞன் அதை உணர்ந்து சுவைத்துப் பாட்டில் அவ்வுணர்ச்சியை வாழச் செய்யும்போது, அச் செருக்குக்கே ஒரு தனி ஆற்றல் உண்டாகி விடுகிறது! இவ்

வுணர்வைப் பாண்டியன் பன்னாடு தந்தான், குறுந்தொகை உஎ0-ஆம் பாட்டில் மிக அழகாக விளக்கி அமைகிறார்:

"தாழிருள் துமிய மின்னித் தண்ணென
வீழுறை யினிய சிதறி ஊழிற்
கடிப்பிடு முரசின் முழங்கி இடித்திடித்துப்
பெய்தினி வாழியோ பெருவான் யாமே
செய்வினை முடித்த செம்மல் உள்ளமோ(டு)
இவளின் மேவின மாகிக் குவளைக்
குறுந்தாள் நாள்மலர் நாறும்
நறுமென் கூந்தல் மெல்லணை யேமே." (குறுந்தொகை : உஎ0)

பிரிந்து சென்றிருந்த தலைவன் வினைமுடித்து வீடு திரும்பி வந்து விட்டான். பிரிவாற்றாமையால் வருந்திக் கிடந்த தலைவியும் மகிழ்ந்தாள். அவளுடைய குவளை மலர் மணம் வீசக்கூடிய கூந்தலையே மெத்தென்ற படுக்கையாகக்கொண்டு மகிழ்ந்திருக்கிறான் தலைவன். அந்த ஆறுதலின் அடிப்படியிலே இனிமைச் செருக்குணர்வுக்கு ஆட்படுகிறான். உடனே வானத்தை விளித்துப் பேசுகிறான். "பெருமையுடைய விண்முகிலே! நான் மேற்கொண்ட செய்வினையை வெற்றியோடு முடித்துத் திரும்பி விட்டேன். என் செம்மல் உள்ளம் மகிழ்ந்தாடுகிறது, தலைவியை மேவி அவளின் கூந்தலாகிய மெல்லணையில் ஓய்வெடுக்கிறேன். இப்பொழுது, இருளானது கிழியும் வண்ணம் மின்னலை மின்னச் செய்க. குளிர்ச்சி வீசும் மழைத் துளிகளை வீசுக. 'முரசு முழங்குவது போல இடை இடையே இடியையும் முழக்குக! இது போலப் பெருமழை பெய்து நீ வாழ்க!"

ஆறுதல் செருக்கினால் பிறந்த இப்பாட்டு நுண்ணிய உணர்ச்சியை அழகொழுக விளக்குகிறது!

இதே ஆறுதலின் அடிப்படையில் பிறந்த வியப்புணர்ச்சியை வள்ளுவப் பெருந்தகை,

"தம்மில் இருந்து தமதுபாத் துண்டற்றால்
அம்மா அரிவை முயக்கு" (கக0எ)

எனப் பாடுகிறார்.

தனக்குரிய வீட்டிலே வாழும் ஒருவன் தன் உழைப்பின் பயனாக ஈட்டிய உணவை உண்ணுங்கால் எத்தகைய ஆறுதலமைதி அடைவானே, அத்தகைய ஆறுதலின்பம் காதலியின் முயக்கத்தில் உள்ளது என்னும் வள்ளுவர், 'அம்மா!' என்ற வியப்புச் சொல்லை மிகப் பொருத்தமான இடத்தில் எடுத்தாண்டு செருக்கின் வியப்புணர்ச்சியை ஊட்டுகிறார்!

தாய்மை உணர்வைத் தலைதாழ்த்தி அகம் குளிர்ந்து வழி படும் நாடு தமிழ் நாடு. அத் தாய்மை உணர்ச்சியில் செருக் குணர்வு தோன்றும் நிலையும் உண்டு. காழ்ப்பே அறியாது கனிந்துருகும் தூய உணர்வுதான் தாய் உணர்வு. நெக்கு நெக்குள்ளுருகி உருகி நின்றும் இருந்தும் கிடந்தும் எழுந்தும் நக்கும் அழுதும் தொழுதும் வாழ்த்தி, நானா வகையால் கூத்து நவிற்றும் துறவியர் உள்ளம்போல் தூய்மையும், செருக்கற்ற பண்பும் உடைய தாய்மை உணர்வில் தீதற்ற செருக்குணர்வு சிறப்பதைப் புறநானூற்றில் பொன்முடியார் ஓவியமாகத் தீட்டிக் காட்டுகிறார்.

ஒரு மறத் தாய்க்கு ஒரு மகன் பிறந்தான். குழந்தைப் பருவத்தில் கிண்ணத்தில பாலை எடுத்துக்கொண்டு வலிந்து உண்பிக்க முயலும்போதும் உண்ண மறுப்பான் அம்மகன். அதனால் சினமுற்ற அத்தாய் (உள்ளத்தில் சினம் கிடையாது; சினந்தது போல நடிப்பு!—(அவ்வளவுதான்) கையில் ஒரு சிறு கோல் எடுத்துக் கொண்டு அச்சுறுத்த, அக் கோலுக்கு அஞ்சிப் பாலை உட்கொண்டான் அவ்விள மகன். அத்தகையவன் இப் பொழுது அரும்புமீசை உடைய இளைஞனாகி விட்டான்.

இரு வேந்தர்களுக்குள் இகல் உண்டாகிப் போர் மூண்டது தும்பை சூடிப் போர் புரிந்தனர். அப்போது அந்த மகனின் தந்தை தன் மன்னன் சார்பில் போர்புரிந்து இறந்துபட்டான். மறுநாள், மகன் போர்க்களம் சென்றான். புள்ளிகள்கொண்ட புகர் நிற யானைகள் பலவற்றை அம்மகன் கொன்றான். அது மட்டுமா? அவன் போரிடும் போது யாரோ ஒரு பகைவன், இளைஞனின் மார்பில் அம்பெய்து விட்டான். போர் புரியும் ஆர்வ வெறியில் அந்த அம்பு மார்பில் தைத்ததைக் கூடக் கவனிக்கவில்லை அவ்விளைஞன். அத்தகைய மறஉணர்ச்சி மிக்கவ னாகப் போரிடுகிறான். இம் மாபெரும் மறவனைப் பகைவர் எவ் வாறோ வீழ்த்தி விட்டனர். அவன் போர்க்களத்தில் கேடகங்க ளின்மீது விழுந்துவிட்டான். மகன் விழுப்புண்பட்டுக் களத்தில் வீழ்ந்த செய்தியைத் தாய் கேட்டாள். உடனே, ஆற்றாமை கொண்டு மகனைக் காணப் போர்க்களம் புகுந்தாள். கண்டாள் மகனை! தாய் உள்ளம் அல்லவா?....மகன் மார்பில் பட்ட புண்ணை அவளகத்தை உறுத்தியது. "முன்னாள் வீழ்ந்த உர வோர் மகனே! குதிரையின் உளைமயிர் போன்ற குடுமியோடும், பாசறை வாழ்க்கையின் காரணமாக மழிக்காத தாடியோடும் உடைய மகனே! உன் மார்பில் அம்பு பாய்ந்திருக்கிறதே!" எனக் கேட்டாள் தாய். அப்போதுதான் அவ்விளைஞன் மார்பில் தைத்த அம்பை உணர்ந்தான். "அம்மா! அம்பு தைத்ததைத்

நான் அறியேனே!" என்றான் மகன். உடனே தாய் மனம் விம்மியது! பெருமிதமுற்றது! குழந்தைப் பருவ மகனா, இன்று போர்முகத்திலே புண்பட்டும் அப்புண்ணை எண்ணிப்பாராத அத்தகைய பேராண்மை விளைத்த பெருமைக்குரியோன்? இரண்டு வாழ்க்கை நிலைகளையும் அத்தாய் தன் மகன் வாழ்வில் கண்டாள். சிறு கோலுக்கு அஞ்சிய மகன் அம்புப் புண்ணறியாத பெருமறவனாகி விட்டதுணர்ந்து தாய்மைச்செருக்கு அடைகிறாள் அப்புறநானூற்றுத்தாய். இத்தகைய நயம்மிக்க உணர்ச்சியை அழகிய தமிழ் நடையில் அரிய சொல்லாட்சி நலங்களோடு பொன் முடியார் பாடுவதைப் படித்துப் படித்துச் சுவைக்க வேண்டும்!

"பால் கொண்டு மடுப்பவும் உண்ணா னாகலிற்
செறாஅ தோச்சிய சிறுகோல் அஞ்சியொ
டுயவொடு வருந்து மனனே யினியே
புகர்நிறங் கொண்ட களிறட் டானான்
முன்னாள் வீழ்ந்த உறவோர் மகனே
உன்னிலெ னென்னும் புண்ணொன் றம்பு
மானுளை யன்ன குடுமித்
தோள்மிசைக் கிடந்த புல்அண வோனே.
(புறம் : ௩௧0. பொன்முடியார்)

இதே காட்சியின் தொடர் நாடகம் போல் வள்ளுவனாரும் அழகிய குறளொன்று யாதுள்ளத்தை இவ்விடத்து எண்ணி மகிழ்தல் வேண்டும்.

"கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்
மெய்வேல் பறியா நகும்." (௭௭௪)

தன் மெய்யில் தைத்த வேலை உணராமல் யானைமீது வேலெறிந்த மறவன் பிறிதொரு யானையைத் தாக்கத் தன் மார்பில் தைத்த வேலையே பறித்தெடுக்கும் வியக்கத்தக்க மறச் செருக்குணர்வை இலக்கியச் சிறப்போடு காட்டுவதை எண்ணி உணர்தல் வேண்டும்.

கூடச்

[illegible]

முற்றும் துறந்து முதிர்ந்த நிலை அடைந்து விட்டோம் என்ற தூய செருக்குணர்வாகும் அது. குறிப்பிட்ட மன நிலையை அவ்வடியார்கள் எய்தியபின் துறவுச் செருக்கு அடைகின்றனர். அப்போது அவர்கள் பாட்டில் உண்டாகும் உணர்ச்சி வேகம் வியக்கத்தக்கதாக இருக்கக் காண்கிறோம். திருநாவுக்கரசர் பாட்டில் இச் செருக்கின் தூய அழகைக் காணலாம்:

"நாமார்க்கும் குடியல்லோம் நமனையஞ்சோம்
நரகத்தில் இடர்ப்படோம் நடலையில்லோம்
ஏமாப்போம் பிணியறியோம் பணிவோமல்லோம்
இன்பமே எந்நாளும் துன்பமில்லை.
நாமார்க்கும் குடியல்லாத் தன்மையான
சங்கரன் நற் சங்கவெண் குழையோர் காதில்
கோமாற்கே நாமென்றும் மீளா ஆளாய்க்
கொய்ம்மலர்ச் சேவடி யிணையே குறுகினோமே."

"சுண்ணவெண் சந்தனச் சாந்துஞ் சுடர்திங்கட் சூளாமணியும்
வண்ண அரிவை உடையும் வளரும் பவள நிறமும்
திண்ணன் கெடிலப் புனலும் உடையார் ஒருவர் தமர்நாம்
அஞ்சுவது யாதொன்றும் இல்லை அஞ்ச வருவதும் இல்லை.

அப்பரைப்போலவே தம் முதிர்ந்த துறவுச் செருக்கை வடலூராரும் திரு அருட்பாவில் மிக அழுத்தமாகப் பாடுகிறார்:

"படமாட்டேன் துயர்சிறிதும் படமாட்டேன் இனிநான்
பயப்படவு மாட்டேன் உன் பதத்துணையே பிடித்தேன்
விடமாட்டேன் ஏமாந்து விடமாட்டேன் கண்டீர்
மெய்ம்மை இது நும்ஆணை விளம்பினன் உம்அடியேன்
கெடமாட்டேன் பிறர்மொழிகள் கேட்டிடவு மாட்டேன்
கிளரொளி அம்பலத்தாடல் வளரொளி நும்மல்லால்
நடமாட்டேன் என்னுள்ளத்தே நான்சாக மாட்டேன்
நல்லதிரு அருளாலே நான்றுறனேனே."

சான்றோர்கள் உணர்வைப் பாட்டில் மிக நுணித்து உணர்த்துகின்ற முறையே தனிச் சீர்மை உடையது. உணர்வில் தான் எத்துணை எத்துணை நயங்கள்! சுவைகள்! தெளிவுகள்! ஒரே உணர்வுக்கு எத்தனை மெருகும், வண்ணமும் திறனும் உண்டாக்கி விடுகின்றனர்! தீய உணர்வென நல்லோர் பழிக்கும் நக்குணர்வையும் பாட்டில் பண்பாட்டுச் சிறப்பால் நல்ல செருக்குணர்வாக அமைத்து விட்ட தமிழ்ப் புலவர்களின் தனிப் பெரும் மேதையை எவ்வாறு புகழ்தல் சாலும்?

பாட்டின் பொருளாழம், கருத்துவளம், நயம் ஆகியவைகளை ஆராய்வதோடு உணர்வு நலன்களை ஆராய்வது மிக வேண்டற் பாற்று. உணர்ச்சித் தன்மைகளின் வேறுபாட்டின் வழியாகப் பல உண்மைகளைப் புலவர்கள் மறைமுகமாக வெளியிடுகின்றனர். அந்த நுண்ணிய கருத்துக்களை உணர்வதற்குப் பாட்டின் உணர்ச்சி நலத்தை நுண்மையாக ஆராயவேண்டும்.

# கொங்கு நாட்டில் பிராஃமி எழுத்துக்கள்

[மயிலை. திரு. சீனி. வேங்கடசாமி.]

பிலவ ஆண்டு வைகாசித் திங்கள் 13-ஆம் நாள் வெள்ளிக் கிழமை (26-5-1961) பகல் இரண்டுமணிக்கு நாங்கள் கொங்கு நாட்டு அரசலூரையடைந்தோம். நாங்கள் என்றால் இக் கட்டுரையாளரும், சிவபந்து ஸ்ரீபால், வித்துவான் செ. இராசு, வித்துவான் பச்சையப்பன், வித்துவான் சென்னியப்பன், அவர்களும் ஆகும். அரசலூர் ஈரோடிலிருந்து பழைய கோட்டை வழியாக 12 ஆவது கல்லில் இருக்கிறது. வெயில் எரிக்கும் பகல் வேளையில் அவ்வூர் மலையடிவாரத்தை ஒட்டிய காட்டுவழியாக ஒருமைல் தூரம் நடந்தோம். பாதை இல்லாத காட்டுவழியாகையால் முட்செடி கொடிகளால் இடர்ப்பாடுகள் விளைந்தன. எப்படியோ தட்டித்தடுமாறி மலையின் மற்றொரு புறத்திலிருக்கிற **ஆண்டிப் பாறை** என்னும் இடத்துக்கு வந்துசேர்ந்தோம். ஆண்டிப் பாறை என்னும் இடம், மலையின் மேலே உள்ள ஒரு பாழி. அதாவது, பொடவு என்று கூறப்படுகிற இயற்கையாக அமைந்த குகை.

இந்தக் குகையிலே மேடுபள்ளமாக இருக்கிற பாறையிலே ஐந்து கற்படுக்கைகளும், மூன்று பிராஃமி எழுத்துச் சாசனங்களும் இருப்பதைக் கண்டோம். கற்படுக்கைகள், இக் குகையிலே முனிவர்கள் வசித்திருந்தார்கள் என்பதைத் தெரிவிக்கின்றன. அந்த முனிவர்கள் பௌத்த முனிவர்களாகவோ, ஜைன முனிவர்களாகவோ இருக்கவேண்டும்.

இந்தக் கற்படுக்கைகளிலே மூன்று சாசனங்கள் பிராஃமி எழுத்தினால் எழுதப்பட்டுள்ளன. சாசனங்கள் சுருக்கமாக இரண்டுவரி, மூன்றுவரிகளில் எழுதப்பட்டுள்ளன. இரண்டு சாசனங்களின் எழுத்துக்கள் சிதைந்து காணப்படுகின்றன. ஒரு சாசனம் சிதையாமல் நல்லநிலையில் இருக்கின்றது. இதிலும் மூன்று நான்கு எழுத்துக்கள் சிறிது சிதைந்துள்ளன. சாசன எழுத்துக்கள் பிராஃமி எழுத்தினால் எழுதப்பட்டிருப்பதனால், ஏறக்குறைய இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு இந்தச் சாசனங்கள் எழுதப்பட்டிருக்கவேண்டும். பிராஃமி எழுத்துக்கள் தமிழ்நாட்டிலே வழங்கப்பட்டது அசோக சக்கரவர்த்தி காலத்தில் ஆகும். கி. மு. மூன்றாம் நூற்றாண்டின் தொடக்கத்திலே அசோக சக்கரவர்த்தி காலத்திலே பௌத்த பிக்ஷுக்கள் தமிழ் நாட்டுக்கு வந்தார்கள். அவர்கள் பிராஃமி எழுத்துக்களைத்

தமிழ்நாட்டில் புகுத்தினார்கள். பிராஃமி எழுத்துக்கள் தமிழ் நாட்டிலே கி. மு. 2ஆம் நூற்றாண்டு முதல் கி. பி. முதல் நூற்றாண்டு வரையில் வழங்கிவந்தன. எனவே, இந்தக் குகையில் பிராஃமி எழுத்துக்கள் காணப்படுவதனாலே, ஏறக்குறைய 2000 ஆண்டுகளுக்கு முன்பு இவ்வெழுத்துக்கள் எழுதப்பட்டிருக்க வேண்டும் என்று கருதலாம். படுக்கைகளில் ஓரிடத்தில், ஓர் ஆள் நின்றுகொண்டு கைகளை மார்பில்வைத்து வணங்குவது போலக் கோட்டுச் சித்திரம் வரையப்பட்டிருக்கிறது. இன்னோர் இடத்தில் சூலம் போன்ற வடிவம் செதுக்கப்பட்டிருக்கிறது. குகைக்கு வெளியேயுள்ள பெரிய பாறைக் கல்லில் கமண்டலம் போன்ற ஓர் உருவம் செதுக்கப்பட்டிருக்கிறது. அரசாங்க சாசன இலாகாவும், பழம்பொருள் ஆராய்ச்சி இலாகாவும் (எபிகிராபி, ஆர்க்கியாலஜி இலாகாக்கள்) இதுவரையில் இந்த இடத்தைக் கண்டுபிடிக்கவும் இல்லை. எழுத்துக்களைப் படிஎடுக்கவும் இல்லை.

இந்த இடத்துக்குப் போக நல்லபாதை அமைத்து, இந்தக் குகையையும் இதிலுள்ள எழுத்துக்களையும் பாதுகாப்புப் பழம் பொருள்கள் என்று அரசாங்கத்தார் தெரிவிக்கவேண்டும். இந்தப் பிராஃமி எழுத்துக்களில் என்ன சொல்லப்பட்டிருக்கிறது என்பது இன்னும் படிக்கப்படவில்லை. இத்துறையில் வல்லவர்கள் இதனைச் செய்வார்கள் என்று நம்புகிறோம்.

இந்த ஆண்டிபாறைக்குச் சற்றுத் தூரத்தில் இதே மலையில் இன்னொரு குகையும் அதில் எழுத்துக்களும் இருக்கின்றனவாம். அந்தக் குகை மிகவும் ஆபத்தான இடத்தில் இருப்பதனால் நாங்கள் அங்குப் போகவில்லை. சமயம் வாய்க்கும்போது மற்றொரு சமயம் போகக்கூடும்.

பாண்டிநாட்டு மலைகளிலே பிராஃமி எழுத்துச் சாசனங்கள் சில முன்னமே கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. ஆனால், கொங்கு நாட்டிலே பிராஃமி எழுத்துச் சாசனம் இப்போதுதான் முதன் முதலாகக் கண்டுபிடிக்கப்பட்டது. இந்தச் சாசன எழுத்தையும் குகையையும் பாதுகாப்புச் சட்டத்தின்படி அரசாங்கத்தார் பாதுகாக்கும்படி கேட்டுக்கொள்கிறோம்.

அடுத்த நாள் (27-5-61) நாங்கள் ஈரோடு நகரத்தில் ஒரு பழைய கோவிலைக் கண்டுபிடித்தோம். இந்தக் கோவில் பல்லவ அரசர் காலத்துக் கட்டட அமைப்புப்படி கட்டப்பட்டிருக்கிறது. மண்மூடிப் புதைந்துகிடந்த இந்தக் கோவில் சில காலத்துக்கு முன்பு தோண்டி எடுக்கப்பட்டதாம். மகிமாலீசுவரர் கோவில் என்பது இதற்குப் பெயர். இந்தக் கோவில் இருப்பது இதற்கு

முன் பலர் அறிந்திருந்தாலும், இக் கோவில் பல்லவ அரசர் காலச் சிற்ப முறைப்படி அமைந்த பழைய கட்டடம் என்பதை ஒருவரும் இதுவரையில் அறியவில்லை.

நாங்கள் சென்று பார்த்தபோது, பல்லவர் காலத்துச் சிற்ப முறைப்படி அமைந்த பழைய கோவில் என்பதைத் தெளிவாக அறிந்தோம். மகாபலிபுரத்துத் "தர்மராச இரதம்" என்னும் கோவிலின் விமானம் போன்றது இந்தக் கோவிலின் விமானம். எட்டுப்பட்டை விமானம். விமானத்தில் அமைந்துள்ள சாலை, பஞ்சரம், கர்ணகூடு முதலிய உறுப்புகளும் பல்லவர் காலத்துச் சிற்ப முறைப்படி அமைந்துள்ளன. துவாரபாலகர் திருவுருவங்களும் பல்லவர் காலத்துச் சிற்ப முறைப்படி அமைந்துள்ளன. பல்லவர் காலத்துக் கோவில்களைப் போலவே இந்தக் கோவில் சுவர்களும் நான்கு அடி அகலமுள்ளவையாக உள்ளன. திருவுண்ணாழிகையில் (கர்ப்பக்கிருகத்தில்) உள்ள சிவலிங்கத் திருவுருவம் மகேந்திரவர்ம பல்லவ அரசன் காலத்துச் சிவலிங்கம் போன்றும் பெரியதாகவும் இருக்கின்றது.

இந்தக் கோவில் கர்ப்பக்கிருகமும் (திருவுண்ணாழிகையும்) விமானமும் பல்லவர்காலத்துக் கட்டடமாகும். இப்போதுள்ள மகாமண்டபம், முகமண்டபம் அம்மன் கோவில் ஆகியவை பிற்காலத்தில் அமைக்கப்பட்டவை. சுவாமியுள்ள திருவுண்ணாழிகையின் வெளிப்புறத்தில் இருந்த துவாரபாலகர் உருவங்களைப் பிற்காலத்தில் மகாமண்டபத்து வாயில் பக்கத்தில் வைத்திருக்கிறார்கள். கொங்கு நாட்டிலே பல்லவ அரசர் ஆட்சி பரவியதாகத் தெரியவில்லை. ஆனால், பல்லவ சிற்பக்கலை அங்கும் பரவியிருந்தது என்பது இந்தக் கட்டடத்தினால் தெரிகிறது.

ஈரோட்டிலுள்ள இந்த மகிமாலீசுவரர் கோவிலையும் பழம்பொருள் பாதுகாப்புச் சட்டத்தின்படி அரசாங்கத்தார் பாதுகாக்கவேண்டுகிறோம்.

---

## என் செய்கோம்

[சு. அன்புமலர், பி. ஏ. (ஆனர்சு.)]

மேதினியிற் செந்தமிழை மேன்மை யுறவளர்த்தாய்
வேதமொழியும் தமிழே வெல்லும் வகையுழைத்தாய்
சேதுப்பிள் ளைஎன்னும் செல்வா மறைந்தனை நீ
ஏதுசெய்ய யாங்களிருந் தேம்.

# சேதுப் பிள்ளையின் செந்தமிழ் நூல்கள்

[திரு. மு. சதாசிவம், எம். ஏ.]

'செந்தமிழுக்குச் சேதுப் பிள்ளை' என்ற தொடர் பேராசிரியர் சேதுப் பிள்ளை யவர்களின் செவிக்கமுதாகிய சொற்பொழிவின் இனிமை குறித்தும், தமிழ்மணக்கும் உரைநடை நூல்களின் கட்டுரைவன்மை குறித்தும் எழுந்ததோர் மொழியாகும். வெண்பாவிற்குப் புகழேந்தி, பரணிக்குச் செயங்கொண்டார், விருத்தத்திற்குக் கம்பர் எனப் புலவர்கள் போற்றியது போலவே, தமிழ் இலக்கிய மலர்களின் தேனெல்லாம் நுகர்ந்து அச் செந் தமிழ்த் தேனை எல்லாருடைய செவியிலும் நாவிலும் பாய்ச்சிய கலைவல்லாரை-தமிழின்பம் முழுதறிந்த பெருமகனாரைச் - செந் தமிழுக்கே உரியவராகச் செப்புவது ஏற்றமுடைத்தே.

பதினேழாம் நூற்றாண்டில் பிரெஞ்சு நாட்டில் வாழ்ந்த மாந்தேன் (Montaigne) என்ற அறிஞர் கவினுறு கட்டுரைகளை எழுதிப் பிரெஞ்சு இலக்கியத்தை வளர்த்தார். இவரைக் கட்டுரை இலக்கியத்தின் தந்தை என்று ஐரோப்பா போற்றுகின்றது. இவரைப் பின்பற்றியே இத்தாலி, ஆங்கிலம் போன்ற பிற மொழி களிலும் கட்டுரைகள் எழுதப்பட்டுவந்தன. இங்கிலாந்தில் பதி னெட்டாம் நூற்றாண்டில் அடிசன், ஸ்டீல் (Steele) என்போர் எழுதிய ஆங்கிலக் கட்டுரைகள் இலக்கியச் சிறப்பைப் பெறத் தொடங்கின. அவர்காலத்திற்குப் பின்னரே கட்டுரை இலக்கியம் பொதுமக்களுக்கு இன்பந்தரும் வகையில் அமைந்து பல்கி வளர்ந்து வரலாயிற்று. இக்காலத்தில் உலகின் எம்மொழியிலும் உரைநடை யிலக்கியத்தில் கட்டுரைகளே சிறப்பிடம் பெற் றுள்ளன.

தமிழில் மறைமலையடிகள், திரு. வி. க. இவர்களுக்கு அடுத்த படியாகக் கட்டுரைகளை இலக்கியச்சுவை கனிசொட்டச் சொட்ட எழுதியவருள் மிகவும் குறிப்பிடத்தக்கவர் சேதுப் பிள்ளையவர்களே ஆவர். எளிமையும் இனிமையும் வாய்ந்த இவர் தம் கட்டுரைகளில் பேச்சுத்தமிழின் கற்பனைவன்மையும், மேடைத் தமிழின் சொல்லாண்மை வளனும், இலக்கியத் தமிழின் கவிதை யின்பமும் ஒருங்கே இயைந்து நவில்தொறும் நூனயம் பயக்கின்றன. இவர்தம் இலக்கியப் படைப்புக்களில் பெரும்பாலானவை கட்டுரை வடிவிலமைந்தவையே.

"னை திருவருட் குணங்களையே

காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கும் அடியார்களைப் போலத்

தமிழின் சீர்மையெல்லாம் எடுத்து ஓதி ஓதி இன்புற்ற தமிழ் ஆழ்வார் சேதுப் பிள்ளையவர்கள் தாம் பெற்ற இன்பத்தை வையகமும் பெறுவான் தமிழ்மாலைகளை உரைநடையில் புனைந் துள்ளார். என்றுமுள தென்றமிழை இயம்பி இசைகொண்ட இவர்தம் நூல்கள் யாவும் தமிழ்த்தாயின் மணியாரங்களாய்த்

தமிழ்மயமான பேராசிரியரின் உள்ளத்தினிமையே ஆற் றொழுக்கான அழகுநடையாக வெளிப்படுகிறது. இந்நடையில் எதுகை மோனை இயைந்த இன்றமிழ்ச் சொற்கள் ஏற்ற இடத்தில் தாமே வந்து இயல்பாய் அமர்கின்றன. பேராசிரியரின் கருத்துக் கேற்ற அணிசொற்கள் உரைநடையில் அமைந்து களிநடம் புரி கின்றன. இடையிடையே பழமொழிகளும், மேற்கோள் வரி களும் கலந்து தமிழ்மணம் வீசும் இவர்தம் உரைநடை பாட்டின் நலமெலாம் பெற்றுப் படிக்குந்தோறும் நாவினிப்பதாய்த் திகழ்

பேராசிரியரின் நூல்கள் யாவற்றினும் பேரிலக்கியமாய் (Masterpiece)த் திகழ்வது **தமிழகம் ஊரும் பேரும்** என்ற நூலாகும். இந்நூல் நம் முன்னோர் தமிழகத்தின் ஊர்களுக்கு அழகுப் பெயர்களிடுவதில் மேற்கொண்ட கொள்கைகளை விளக்கு வதோடு, அவ்வூர்களின் பெருமைகளையும், வரலாற்றுச் சிறப் பினையும், இயற்கைச் சூழலையும் எடுத்தியம்புகின்றது. தமிழ்ப் பண்பாட்டு வரலாற்று நூல் என்றே இதைக் கூறிவிடலாம். பிள்ளையவர்களின் பேரைத் தமிழகத்தின் ஊர்கள் எல்லாம் அறிந்து கொள்ளச் செய்தது இந்நூலே.

தமிழிலக்கியத்தின் இதய விளக்காய் விளங்கும் திருக்குறட் பாக்களின் தொடர்களையும் கருத்துக்களையும், சிலம்பு, மணி மேகலை, சிந்தாமணி, கம்பராமாயணம், பாரதியார் பாடல் இவைகள் பொன்னேபோல் போற்றிப் பொதிந்து கொண்டிருப் பதை எடுத்துக்காட்டி அவற்றின் பொருத்தங்களையும் நயங்களை யும் நன்கு விளக்கி யெழுதப்பட்டது **வழிவழி வள்ளுவர்** என்ற வளமார் நூலாகும்.

நெஞ்சையள்ளும் சிலப்பதிகாரத்தைக் கற்றுத் தம் நெஞ் சைப் பறிகொடுத்த பேராசிரியர், **சிலப்பதிகாரக் கதையை** நற்றமிழ் உரைநடையில் வரைந்து தந்துள்ளார். **சிலப்பதிகார விளக்கம்** என்ற வேறு நூல் சேர மன்னனின் இளவல் செய்த குடிமக்கட் காப்பியத்தைப் பேராசிரியர் கற்றுச் சுவைத்த பான் மையினைக் காட்டுகிறது.

சிலப்பதிகாரத்தைப் படிக்க ஆர்வங் கொள்வார்க்குக் கலங்கரை விளக்கமாயமைந்த 'சிலப்பதிகார விளக்கம்' போன்றே, திருக்குறளின் கவிதையின்ப நயங்களைத் துய்க்க விரும்புவார்க்குப் பேராசிரியர் எழுதிய திருவள்ளுவர் நூல்நயம் என்ற நூல் அறிவு விருந்தாய் அமைந்திருக்கின்றது. இத் திறனாய்வு நூல்களிரண்டும் 'ஆழ்ந்த கவியுளம் கண்டு' எழுதப்பெற்றதாகலின் கருத்துச் சுவைக் கருவூலங்களாய்க் காட்சியளித்துத் தமிழிலக்கிய மணிமுடிகளான திருக்குறள், சிலப்பதிகாரம் இவற்றின் காட்சிகளைப் புலவரல்லாதாரும் அறிந்து இன்புறத் துணைபுரிகின்றன.

கல்வியிற் பெரிய கம்பர் பெருமான்மீதும் பேராசிரியர்க்குத் தணியாக் காதலுண்டு. சட்டத்தின்வாயில் நுழைந்த பேராசிரியரைத் தடுத்தாட்கொண்டது கம்பராமாயணமே எனலாம். கம்பராமாயணத்தால் பேராசிரியர் உயர்ந்ததுபோலவே, பேராசிரியரால் கம்பராமாயணமும் பெருமையுற்றது. கம்பரின் கற்பனையிலே மலர்ந்த இலங்கைநகரின் வளமெல்லாம் கம்பராமாயணம் காட்டக் கண்டுணர்ந்த பேராசிரியர் அவ் வீரமா நகர்க்குத் தம்முடன் மகிழ்ச்சியுலா வரும்படி எல்லாரையும் அழைக்கின்றார்.

கம்பராமாயணத்தைப் போன்று நூற்பரப்பும், பாநலமும் கொண்ட கந்தபுராணக் காப்பியத்தைப் பன்முறை பயின்றின்புற்ற பேராசிரியர் இன்சுவை மிகுத்த பாக்களையெல்லாம் கதைப் போக்கின் இயைபு தோன்றத் தொகுத்துக் கந்தபுராணத் திரட்டு என்ற தலைப்பில் மூன்று பகுதிகளாக வெளியிட்டார். வேலின் வெற்றி என்ற நூல் கந்தபுராணச் சுவையினை வடித்துத்தரும் கட்டுரைகளைக் கொண்டு மிளிர்கின்றது.

பிள்ளையவர்களின் சொற்பொழி வினிமைகளையெல்லாம் கருக்கொண்டு செம்மாந்து திகழ்வது கடற்கரையினிலே என்ற சிறு நூலாகும். தாம் போற்றும் திருவள்ளுவர் இளங்கோவடிகள் நக்கீரர் திருநாவுக்கரசர் கம்பர் சிதம்பரனார் பாரதியார் முதலியவர்களையும், மார்க்கப்போலா, ஆனந்தரங்கர், கால்டுவெல் முதலியோரையும் தம் கற்பனைவன்மையால் இந்நூலில் சொற்பொழிவாற்றச் செய்திருக்கிறார். மறைந்த புலவர் பெருமக்களிடம் பேசும் மாண்பு பெற்ற பேராசிரியர் தாம் அவர்களிடம் நுழைபுலச் செவிவழியே கேட்ட மொழிகளை இன்றமிழில் வடித்துக் கொடுத்துள்ளார். மேடைப் பேச்சுக் கலையைப் பயில விரும்புவார்க்கு நற்றுணைவனாய் இந்நூல் இலங்குகிறது.

தமிழ்நாட்டின் கலைச் சிறப்பினையும், கலைவளர்த்த நகரங்களின் சிறப்பினையும் எடுத்துக்காட்டுவது அலையும் கலையும் என்ற ...ய நூலாகும். இதில் அமைந்துள்ள வள்ளுவரும் பாரதியும்,

எல்லீசர், கொச்சைத்தமிழ், ஒலிச்சித்திரம் முதலிய பல ஆராய்ச்சிக் கட்டுரைகளும் படிப்பார்க்கு இன்பம் பயக்கின்றன.

அண்மையில் வெளியிடப்பட்ட **ஆற்றங்கரையினிலே** என்ற பேராசிரியரின் நூல் ஆற்றங்கரையில் புலவர் நிகழ்த்தியதுபோலப் பேச்சுக்களைக் கூறுது, தமிழகத்தின் எல்லா ஆறுகளின் செழுமையையும், ஆற்றங்கரையிலமைந்த சீர்நிறை ஊர்களின் சிறப்புக்களையும் ஒருங்கே கூறுவதாய், இலக்கியச் சுவையும் வரலாற்றுச் சிறப்பும், பொருள இயற்றப்பெற்றுளது. நாற்பத்தெட்டு ஊர்களின் பெருமையைப் பேசும் இந்நூலில் வடநாட்டு ஊர்கள் சிலவும், ஈழநாட்டுப் பதிகள் சிலவும் இடம்பெற்றிருப்பது தமிழ்ப் பண்பாட்டின் ஏற்றத்திற்கு அடையாளமாகும்.

முத்தமிழின் வித்தகத் திறனெல்லாம் விளக்கிக் காட்டும் பைந்தமிழ்க் கட்டுரைகளடங்கிய **தமிழ் இன்பம்** என்ற இவர்தம் மணிநூல் பாரத அரசாங்கத்தின் இலக்கியப் பெரும்பரிசைப் பெற்றுள்ளது.

புறநானூற்றுக் காலத்திலும், பல்லவர் காலத்திலும், பிற் காலச் சோழர் காலத்திலும் வாழ்ந்த நற்றமிழ் முன்னோரின் வீரச் சிறப்பை யெல்லாம் விளக்கித் **தமிழர் வீரம்** என்ற வென்றி நூலாக வெளிப்படுத்தியுள்ளார்.

பாரதியாரைப்பற்றிப் பேராசிரியர் பேசாத இலக்கிய மேடையில்லை. செல்லுமிட மெங்கும் இக்காலக் கவி மன்னரின் கவிதை நலங்களை யெல்லாம் அள்ளி யளித்த பேராசிரியர், தில்லிச் சாகித்திய அக்கடமியின் வேண்டுகோட் கிணங்கச் சுவைகெழுமிய பாடல்களை யெல்லாம் தொகுத்துப் **பாரதியார் இன்கவித் திரட்டு** என்ற தலைப்பில் வெளியிட்டார். அதே அக்கடமியின் வேண்டுதலால் பரந்த தமிழ் இலக்கியங்களின் மணிக் கவிதைகளைத் தேர்ந்தெடுத்துத் **தமிழ்க் கவிதைக களஞ்சியம்** என்ற பேரால் வெளியிட்டுள்ளார். இஃது பால்கிராவ் (Palgrave) என்பார் ஆங்கில இலக்கியங்களிற் சிறந்த பகுதிகளைப் 'பொற்களஞ்சியம்' என்ற பேரால் தொகுத்துப் புகழ்பெற்றது போன்ற பெருமையுடையது எனலாம். தமிழின்பத்தைப் புதிதாகத் துய்க்க விழைவார்க்காகச் **செஞ்சொற் கவிக்கோவை** என்ற சிறு தொகுப்பு நூலையும் பேராசிரியர் வெளியிட்டுள்ளார்.

[illegible] கிறித்துவர்கள் செய்த தொண்டினையும் [illegible]லாமியர்கள் செய்த தொண்டினையும் பாராட்டுவதன்மூலம் தமிழை எம்மதத்தவரும் வேறுபாடின்றிக் கற்கும் வாய்ப்பை ஏற்படுத்தினர். **கிறித்துவத் தமிழ்த் தொண்டர், கால்டுவெல் ஐயர்**

என்ற நூல்கள் தமிழைத் தாய்மொழியாகப் பெற்ற நமக்கு ஊக்கமும் உணர்ச்சியும் காட்டுவதாயும அமைந்துள்ளன. இவர் மேலை நாட்டறிஞரின் கலைத்தொண்டுகளை யாராய்ந்து பாராட்டி யிருக்கிருர். போப்பையர், கால்டுவெல், வின்சுலோ, வீரமாமுனிவர் முதலியவர்களின் தமிழ்ப் பணிகளை எடுத்து உலகுக்குக் கறிவுறுத்தியதோடு அவ்வறிஞர்களின் வழியே ஆராய்ச்சிகளைத் தொடர்ந்து செய்யுமாறு பல ஆராய்ச்சி மாணவர்கட்கு வழிகாட்டியாயும் அமைந்தார்.

திருக்குறளுக்கு முற்றுப்பெருத, ஆனல் அழகிய உரையெழுதிய மேனுட்டறிஞர் எல்லீசரின் (Ellis) உரையைப் போற்றிப் பாராட்டியதோடு அதைப் பதிப்பித்துப் பல்கலைக் கழகத்தின் மூலமாக வெளியிடவும் செய்தார்.

**சொற்களும் அவற்றின் சிறப்பும்** (Words and their significance) என்ற இவர்தம் ஆங்கில நூல், மொழிவழி நின்று தமிழ்ச் சொற்களின் வரலாற்றை யாராய்ந்து, என்று பிறந்தவள் என்றறிய வியலாத மூதிளமைத் தமிழ்த் தாயின் புதுமைப் பொலிவினைக் கட்டுரைக்கின்றது. Tamil literary and colloquial என்ற நூல் இலக்கியத் தமிழுக்கும், கொச்சைத் தமிழுக்கும் உள்ள வேறுபாடுகளை இனிது புலப்படுத்தித் தமிழின் இயல்புச்
[illegible]புக்கட் எ[illegible]

சென்னைப் பல்கலைக் கழகத்தின் ஆராய்ச்சி வெளியீடான **திராவிட மொழிகளின் ஒப்புமைச் சொல்லகரவரிசை** (Comparative Dravidian Vocabulary) என்ற நூலுக்குத் தந்தை பேராசிரியர் அவர்களே. பேராசிரியரின் இடையருமுயற்சியால்தான் திராவிட மொழியாராய்ச்சியாளர்க்கு அருந்துணையாயமைந்த அந்நூல் வெளிப்போந்துளது. தமிழ் லெக்சிகன் (Lexicon) உருவாகும் போதும் பேராசிரியர் அப்பணியில் தலைநின்றுர் என்பதும் இங்கே குறிப்பிடல் தகும்.

**தமிழ்நாட்டு நவமணிகள், காளத்தி வேடனும் கங்கைவேடனும், வேலும் வில்லும், தமிழ் விருந்து, திருக்காவலூர்க் கோவில்** என்பன பேராசிரியர் எழுதிய பிற நூல்களாகும். தமிழ் என்று நினைக்கும் போதே பேராசிரியரின் உள்ளத்திலே இனிமை அள்ளூறும். அவ்வினிமை செவிக்கினிய பேச்சாக மலரும். ஆங்கிலப் பேச்சே இனிக்கு மியல்பினது என்று மக்கள் கருதி யிருந்த காலத்தில் தேனினும் இனிக்கும் செந்தமிழின்பத்தைப் பருக வாரீர் என்று பன்முறை அழைத்துத் தேமதுரத் தமிழோசையைத் தமிழகமெங்கும் பரப்பினர். இவர்தம் பேச்சின்பத்தை மாந்தியவர்கள் தமிழிலக்கிய இன்பத்தையும் இவர்தம் நூல்வழியே நுகரக்

தலைப்பட்டனர். பேராசிரியரின் தமிழ் உள்ளம் இவரியற்றிய தேன்தமிழ் நூல்களின் வழியே என்றும் உயிரோடிருக்கும் என்பதில் ஐயமில்லை. இவர் நூல்களைப் படிப்பார் பேராசிரியரே நேரில் நின்று பேசுவது போன்ற உணர்ச்சியை அடைவர். தமிழ் இலக்கியக் கடலில் மகிழ்வுப் பயணம் செல்ல விரும்புபவர்களுக்கு இவர் நூல்களே நற்கலமாய் அமைந்துள்ளன.

வெற்றாரவாரமில்லா விழுமிய நடையை விரும்புவார் அடிசனின் கட்டுரைகளை இரவுபகலாகப் படிக்கக் கடவர் என்று ஆங்கில அறிஞர் சான்சன் கூறிய கருத்துரை சேதுப்பிள்ளை யவர்களின் செந்தமிழ்க் கட்டுரைகளுக்கும் ஒக்கும். மேடைத் தமிழ்ப் பேச்சு நடையை விரும்புவார்க்குத் திரு. வி. க.வின் நூல் களேயன்றிச் சேதுப் பிள்ளை யவர்களின் நூல்களும் உறுதுணை யாகும்.

கட்டுரையின் தந்தையான பிரெஞ்சு அறிஞர் மாங்தேனின் கட்டுரைகளனைத்தும் ஆங்கிலம் முதலிய பிறமொழிகளில் பெயர்க்கப்பட்டுப் படித்துச் சுவைக்கப்படுவது போலச் சேதுப் பிள்ளை யவர்களின் செந்தமிழ்க் கட்டுரைகள் அனைத்தும் பாரத மொழிகளில் பெயர்க்கப்பட்டால் அவை தமிழின் இன்பத்தையும், தமிழ்ப் பண்பாட்டையும், மொழிச் சிறப்பையும் பாரத மக்களனை வரும் அறிந்தின்புறச் செய்யும் என்பதில் ஐயமில்லை. ஆரிய வரசன் பிரகத்தனுக்குக் குறிஞ்சிப் பாட்டின்மூலம் தமிழறிவுறுத் திய கபிலரைப் போலப் பிற மொழியினருக்குத் தமிழின்பத்தை யூட்டிய சேதுப் பிள்ளை யவர்களின் புகழ் என்றும் நின்று நிலவுவதாக!

## மன்பதை போற்றுமின்!

[நாஞ்சில், திரு. கா. கணபதி]

சிந்தையின் நிறைவால் செல்வம் பெற்று
நொந்தவர் தமக்குச் சந்ததம் அளிமின்!
கலைபல கற்றும் நிலைபல உற்றும்
சொலவல சொற்றும் துன்பம் தவிர்மின்!
அறத்தைப் புரிந்தும் மறத்தைச் சாய்த்தும்
புறத்தைப் பொசிந்தும் புவியில் திகழ்மின்!
எளியரைக் காத்தும் இல்லறம் துலக்கியும்
அளிமிகச் சொரிந்து மன்பதை போற்றுமின்!

# வருடை[1]

[திரு. பி. எல். சாமி, பி. எஸ். ஸி.]

'வருடை' என்றொரு விலங்கு பற்றிய செய்திகள் சங்க இலக்கியத்தில் காணப்படுகின்றன. திவாகர நிகண்டு "வருடை சரபம் வரையாடாம்" என்று கூறும். இந்த விலங்கை 'வரையாடு' என்றும் அழைப்பர். கன்னடத்தில் 'காட்டு ஆடு' என்றும், மலையமொழியில் 'மலை ஆடு' என்றும் அழைக்கப்படுகின்றது. ஆங்கிலத்தில் 'நீலகிரித்தகர்' (Nilgris Tahr) என்று அழைக்கப்படும். 'தகர்' என்ற தமிழ்ச் சொல்லை ஆங்கிலத்தில் கையாண்டிருக்கின்றனர். இவ்விலங்கு நீலகிரி மலையில் மிகுதியாகக் காணப்படுவதால் இப்பெயர் வந்தது. வருடை மிகவும் அரிதாக மலையுச்சிகளிலும், செங்குத்தான மலைச்சரிவுகளிலும் காணப்படும் விலங்காகும். இத்தகைய அரிதாகக் காணப்படும் விலங்கைப்பற்றிச் சங்க நூல்கள் உண்மையான செய்திகளைக் கூறுவது வியப்பூட்டுவதாகும் பிற்கால நூல்களும், உரைகளும் இதைப்பற்றிப் பொருத்தமற்ற, உண்மைக்குப் புறம்பான புராணச் செய்திகளைக் கூறுகின்றன. பிற்காலப்புலவர்கள் இயற்கையோடு இயைந்து வாழ்ந்து, நுணுக்கமாகச் சூழ்நிலையை ஆராய்ந்து எழுதவில்லை. ஆதலின் சங்ககாலப் புலவர்கள் கூறிய செய்திகளைத் தவறாகப் புரிந்துகொண்டு தங்கள் கற்பனைப்படி பொருள்கூறிச் சென்றனர். இவ்விலங்கு பற்றிய செய்திகள் — குறுந்தொகை, பத்துப்பாட்டு, நற்றிணை, அகநானூறு, ஐங்குறுநூறு முதலிய நூல்களில் காணப்படுகின்றன.

"செவ்வரைச் சேக்கை வருடை, மான்மறி
சுரைபொழி தீம்பா லார மாந்திப்
பெருவரை நீழ லுகளு நாடன்" —குறுந்தொகை-௧அ௭

"நெடுவரை மிசையது குறுங்கால் வருடை
தினைபாய் கிள்ளை வெரூஉ நாட" —ஐங்குறு நூறு. ௨அ௭.

"மீமிசைக் கொண்ட கவர்பரிக் கொடுந்தாள்
வரைவாழ் வருடை வன்றலை மாத்தகர்"—மலைபடுகடாம். ௫௦௨-௩.

"......................................அவன் மலைப்
போருடை வருடையும் பாயாச்
சூருடை அடுக்கத்து கொயற்கருந் தழையே" —நற்றிணை. ௩௫௯.

"வேறுவே றினத்த வரைவாழ் வருடைக்
கோடுமுற் றிளந்தகர் பாடுவிறந் தியல" —அகம். ௩௭௩.

---

1. **Nilgris Tahr.**

"வழைவளர் சாரல் வருடை, நன்மான்
குழவி வளர்ப்பவர் போலப் பாராட்டி" —கலி. ௫௦.

"பொதி மூடைப் போரேறி
மழையாடு சிமைய மால்வரைக் கவாஅன்
வரையாடு வருடைத் தோற்றம் போலக்
கூருகிர் ஞமலிக் கொடுந்தா ளேற்றை
ஏழகத் தகரோ டுகளு முன்றில்" —பட்டினப்பாலை.

விலங்கு நூலார் வருடைபற்றிக் கூறும் செய்திகளை அடிப்படையாகக் கொண்டு சங்கநூற்செய்திகளை ஆராய்ந்தால் சங்கப்புலவர்களின் நுண்மாணுழை புலம் விளங்கும். வருடைகள் ஆட்டினத்தைச் சேர்ந்தவை. அவை நீலகிரியிலிருந்து ஆனைமலை வரையுள்ள மலையடுக்கத்தில் வாழ்கின்றன. மலைகளில் காடுகளுக்கு மேலுள்ள மலையுச்சிகளிலும், செங்குத்தான சரிவுகளிலும் வாழ்கின்றன. சில சமயங்களில் மேட்டு நிலங்களில் புல்மேய இறங்குவதுண்டு. பொதுவாக ஆறு அல்லது ஏழு ஆடுகள் மந்தையாக மேயும். கூரிய பார்வையும், மிகுந்த விரைவும் கொண்டவை. செங்குத்தான மலைப்பாறைகளிலும், சரிவுகளிலும் நிலத்தை வன்மையாகப் பற்றி நடக்கக்கூடிய கால்களை உடையன. இவைகள் இளைப்பாறும்போது ஒன்று அல்லது இரண்டு பெண் ஆடுகள் காவல் காக்கும்.

"வரைவாழ் வருடை", "வரையாடு வருடை", "வரைபாய் வருடை" என்று மலையில் வாழுந்தன்மையைச் சங்கப்புலவர்கள் கூறுவர். "சிலம்புபாய் வருடை", "குன்றின் மேல் வருடை பாய்ந்துழக்கலின்" என்று சீவகசிந்தாமணி கூறும். "மழையாடு சிமையமால்வரைக் கவானில்" வாழ்வதாக அகநானூறு கூறும். மேகங்கள் தவழும் உச்சியில் வாழ்வதாக அகம் கூறுவது விலங்குநூலார் செய்தியொடு ஒத்திருக்கின்றது. "நெடுவரை மிசையது" என்றும் கூறப்படுகின்றது. செங்குத்தான பாறைகளில் வாழ்வதைச் 'செவ்வரைச் சேக்கை வருடை' என்ற வரி தெளிவாகக் கூறுகின்றது.

வருடையாடுகளைக் காண்பது மிகவும் அரிது என்று கூறுவர். சிறிது ஓசையேற்பட்டாலும் செங்குத்தான பாறைகளில் தாவிக்குதித்து மறைந்துவிடும் "நெடுவரை மிசைய்து குறுங்கால் வருடை தினைபாய் கிள்ளை வெரூஉ நாட" என்ற ஐங்குறுநூற்று வரிகள் கவனிக்கத்தக்கன. இந்த ஆடுகள் கற்குவியலின் மேலும், பாறைகளின் மேலும் ஏறிக்கொண்டு விளையாடும் ஒரு விளையாட்டை விலங்கு நூலறிஞர்கள் பார்த்திருக்கின்றனர். இவ்விளையாட்டை 'King of the Castle game' என்று ஆங்கிலத்

தில் கூறுவர். நாட்டுப்புறத்தில் வெள்ளாடுகள்கூட இந்த விளையாட்டை ஆடுவதைப் பார்த்திருக்கலாம். ஒரு பாறையிலோ, கற்குவியலிலோ ஓர் ஆடு ஏறிக்கொண்டு மற்ற ஆடுகளை மேலேற விடாது முட்டித்தள்ளும். கீழேயிருக்கும் ஆடுகளில் எது வெற்றி காண்கிறதோ அது அடுத்து மேலேறிக்கொண்டு மேலிடத்தை விடாது. கீழிருக்கும் ஆடுகள் அதை முட்டித்தள்ள முயலும். வரையாடும் இம்முறையில் மேலேறி விளையாடுவதைச் சங்கப்புலவர்கள் பார்த்திருப்பர்.

"அவன்மலைப் போருடை
வருடையும் பாயா..............."

என்று நற்றிணைப் புலவர் வருடைப்போரைக் கூறியுள்ளார்.

'பொதிமூடைப் போரேறி
மழையாடு சிமைய மால்வரைக் கவாஅன்
வரையாடு வருடைத் தோற்றம் போலக்
கூருகிர் ஞமலிக் கொடுந்தா ளேற்றை
ஏழகத் தகரோ டுகளு முன்றில். —பட்டினப்பாலை.

பண்டமேற்றுமிடத்தில் மூட்டைகளை
தால் வெள்ளாடுகள் மூட்டைக்குவியலின்மேல் ஏறிக் குதிப்பதைப் பலர் பார்த்திருக்கலாம். இந்தக் காட்சியைக் காவிரிப்பூம்பட்டினத்தில் கண்ட புலவர், முகில்கள் உலாவும் குவடுகளுடைய செங்குத்தான மலைகளிலே குதிக்கும் வருடைமானின் தோற்றம் போல ஆட்டுக்கிடாய்களும், ஏற்றை நாய்களும், மூட்டைக் குவியலின் மீது ஏறிக்குதிக்கும் என்று கூறுவதைக் கூர்ந்து கவனிக்கவேண்டும்.

நன்னனின் கோபுரவாயிலில் காணப்படும் கையுறைப் பொருள்களாக வந்த ஆமானின்கன்று, யானைக்கன்று, கரடிக்குட்டி, கீரிப்பிள்ளை, மரையான்குழவி, உடும்பு, வருடைமான் ஆகிய ஒவ்வொரு விலங்கின் சிறப்பையும் அடைமொழியால் மலைபடுகடாம் விளக்குகிறது. "மீமிசைக்கொண்ட கவர்பரிக் கொடுந்தாள் வரைவாழ் வருடை வன்தலை மாத்தகர்" என்று வருடையைப்பற்றிக் கூறப்பட்டிருக்கின்றது. 'மீமிசைக்கொண்ட' என்ற தொடருக்கு நச்சினார்க்கினியர் 'முதுகிடத்தே கொண்ட கால்கள்' என்று பொருள் கொள்ளுகிறார். இது நேரிய பொருளன்று; புராணச்செய்தியைப் புகுத்துவதாகும். மேட்டுப்பாங்கான இடத்தைப்பற்றிக் கவர்ந்துகொள்வது போன்ற செலவினையுடைய, வளைந்த கால்களையுடைய மலைவாழ் வருடை என்று பொருள் கொள்ளவேண்டும். வருடைகள் உயர்ந்த மேட்டிடத்தைக் கெட்டியாகக் கால்களால் வளைத்துப் பிடித்துக் கொண்டு

பிற வருடைகளுடன் போர்புரியக்கூடியவை. 'போருடை வருடை' என்று கூறுவதை நோக்குக. மேட்டுப்பாங்கான இடத்தை இறுக்கமாகப் பற்றிப் போரிடக்கூடிய வன்மையான தலையை யுடைய பெரிய தகரை நன்னனுக்குக் கையுறையாகக் கொடுத்தது சாலவும் பொருத்தமாகும்.

தமிழக வேந்தர்களின் பொழுதுபோக்குகளில் 'தகர் வென்றி'யும் கூறப்பட்டிருக்கின்றது. அகநானூற்றில் வருடை 'கோடுமுற் றிளந்தகர் பாடுவிறந் தியல' என்று வரும் வரியில் வருடைகளின் போர்ச்செய்தி கூறப்படுகின்றது. வேறு வேறு இனமான வருடைகளின் கொம்புகளால் இளந்தகர்கள் செய்யும் ஒலியைக் கேட்டஞ்சி மயில் இரிவதாகப் பொருள்கொள்ள வேண்டும். ஆறு அல்லது ஏழு வருடைகள் மந்தையாகக் காணப்படுவதால் 'வேறு வேறு இனத்த' என்று கூறப்பட்டுள்ளது. மந்தைகளில் இளந்தகர்கள் கொம்புகளால் போரிட்டு ஒலி செய்கின்றன.

பிற்காலப்புலவர்கள் வருடையின் உண்மைச் செய்தியை உணராது, கற்பனைச்செய்திகளைப் புகுத்தினர். பேராசிரியர் தாம் முதலில் 'எண்கால் வருடை' என்று குறிப்பிடுகிறார். தொல்காப்பிய மரபியலில் 'மாவும், மாக்களும்' என்னுஞ் சூத்திரத்தில் 'கிளையென்பன எண்கால் வருடையும், குரங்கும்போல்வன, எண்காலவாயினும் மாவெனப்படுதலின் வருடை கிளையாயிற்று' என்று கூறுகிறார். பேராசிரியர் எட்டுக் காலுடைய வருடை என்று கூறினார். நச்சினார்க்கினியரோ முதுகிடத்தே கொண்ட எண்காலுடைய வருடை என்று கூறிச்சென்றார். நீலகேசி உரையிலும் 'எட்டுக்காலுடையன வருடை, ஆறுகாலுடைய கழிப்பாம்பு' என்று கூறப்படுகின்றது.

சங்கநூற்பாக்களில் இச்செய்திகளுக்கு யாதொரு சான்றும் இல்லை. எளிதிற் காணப்படாத சூழ்நிலையில் அரிதாகக் காணப்படுவதால் இதைப்பற்றித் தவறான செய்திகள் தோன்றியிருக்கக்கூடும். இவ்விலங்கு மிக மிக அரிதாகக் காணப்பட்டதால் அரசர்க்குரிய அரியகையுறைப் பொருளாக மக்கள் கருதினர். நன்னனுக்கும், சேரன்செங்குட்டுவனுக்கும் வருடையை வேட்டுவர் கையுறைப்பொருளாக வழங்கினர்.

"குரங்கின் குட்டியும் குடாவடி யுளியமும்
வரையாடு வருடையும் மடமான் மறியும்"

சேரன் செங்குட்டுவனுக்கு வேட்டுவர் கொணர்ந்ததாகச் சிலப்பதிகாரம் கூறும். பதிற்றுப்பத்தில் ஆறும்பத்தில் பதிகத்

திலும் இவ்வருடை பற்றிய ஒரு செய்தி காணப்படு ‘தண்டகாரணியத்துக் கோட்பட்ட வருடையைத் தொண்டியுட் டந்து கொடுப்பித்ததாக’க் கூறப்பட்டிருக்கின்றது. தண்டகாரணியத்தில் அரிதாகவும், எளிதில் அகப்படாததாகவும் இருந்த வருடையைச் சேரலாதன் பிடித்துத் தொண்டியிற் சேர்ப்பித்ததால் அவன் ‘ஆடுகோட்பாட்டு’ச் சேரலாதன் என்று பெயர் பெற்றதாகத் தெரிகிறது. பகைவர் ஆட்டுநிரைகளைக் கவர்ந்ததால் இப்பெயர் பெற்றான் என்று கூறுவர். ஆட்டுநிரை கவர்வது அரசர்க்கு எளிய செயலாகும். அதனால் பெயர் பெற்றான் என்று கூறுவதில் சிறப்பில்லை. பதிகச் செய்திக்குப் பொருந்துவதாகவும் இல்லை. ஆகலின் இங்கு ஆடு என்பது அரிதாகக் காணப்பட்ட தண்டகாரணிய வரையாடாகும். இதைப் பிடித்துத் தொண்டியில் கொண்டுவந்ததால் “ஆடு கோட்பாட்டு சேரலாதன்” என்று சிறப்புப் பெயரால் அழைக்கப்பட்டான். வருடையைக் கையுறைப்பொருளாக அரசர்க்கு அளிக்கும் வழக்கமும், வருடைமான்குட்டியைப் போற்றி வளர்க்கும் வழக்கமும் இது சார்பாகக் கவனிக்கவேண்டும்.

“வழைவளர் சாரல் வருடை நன்மான்
குழவி வளர்ப்பவர் போலப் பாராட்டி” —குறிஞ்சிக்கலி. ௫0.

‘வருடை மான் குழவி’, ‘வருடை மடமறி’ வளர்ப்பதைப் பிற கலிப்பாடல்களும் கூறும். பழந்தமிழர்கள் மலைஉச்சிகளிலும், காடுகளிலும் அரிதாகக் காணப்பட்ட வருடையை நன்றாக அறிந்திருந்ததோடு, வருடைக்குட்டிகளைப் போற்றி வளர்த்து, கொம்பு முற்றிய தகர்களைக் கையுறைப் பொருளாக வழங்கி வந்திருக்கின்றனர். அரசர்களும் வருடைத்தகர்களைத் ‘தகர் வென்றி’ விளையாட்டுக்காக வளர்த்திருக்கினரென்று தெரிகிறது. பிற்காலத்தில் மக்களிடையேயும், புலவர்களிடையேயும் பறவை, விலங்குகள் பற்றிய அறிவு குறைந்திருந்ததால் வருடையையும் ஒரு பகுத்தறிவுக் கொவ்வாத புராண விலங்காக்கிவிட்டனர்.

மேற்கோள் நூல் :

The book of Indian Animals—H. S. Prater.

(செல்வி சிலம்பு, ௩௫, பரல் ௮, ௩௭௨ ஆம் பக்கத் தொடர்ச்சி)

சூடாமணி நிகண்டில் காணப்படுவதைவிட இவ் வகராதியில் ஒரு பொருள் பல பெயர்கள் அதிகமாகக் காணப்படுகின்றன. எடுத்துக்காட்டாக அம்பு என்ற சொல்லுக்குச் சூடாமணி நிகண்டில் 21 பெயர்கள் கொடுக்கப்பட்டுள்ளன. இவ் வகராதியில் 99 பெயர்கள் கொடுக்கப்பட்டுள்ளன. யானை என்ற சொல்லுக்கு நிகண்டில் 24 பெயர்கள் கொடுக்கப்பட்டிருக்க இவ் வகராதியில் 215 பெயர்கள் கொடுக்கப்பட்டுள்ளன. இவ் வகராதியில் காணப் படும் சொற்களுள் பல வடமொழிச் சொற்களாக இருப்பினும் நிகண்டிலும் வடமொழிச் சொற்கள் இல்லாமலில்லை. எனவே இவ் வகராதியை நல்லதொரு முயற்சியுடன் தொகுக்கப்பட்ட அகராதி எனலாம்.

இவ் வகராதி கும்பகோணம் லெக்ஷ்மி மில் ஸ்டோர்ஸாரால் 1934 இல் வெளியிடப்பட்டது. கும்பகோணம் ஸ்டார் அச்சகத்தில் அச்சிடப்பட்டுள்ளது. இதன் அளவு $21 \times 13$ செ. மீ. $4+176$ (180) பக்கங்களையுடையது. இதில் மொத்தம் 110 சொற்களுக்குக் கிட்டத்தட்ட 7000 பெயர்கள் கொடுக்கப்பட்டுள்ளன. இதில் மிக முக்கியமான சொற்களைமட்டும் சேர்த்திருப்பதாகவும் இதுபோன்ற சொற்களைத் தனிப் பகுதியாக வெளியிட விரும்புவதாகவும் ஆசிரியர் கூறியுள்ளார். ஆனால் இதைப்போன்ற வேறு பகுதி வெளிவந்ததாகத் தெரியவில்லை. இப் பகுதியின் விலையும் தெரியவில்லை.

## 4 ஓ. வடசொற்றமிழ் அகரவரிசை (1937)

தமிழ் அகராதிகளின் வளர்ச்சியைக் குறிப்பிடும்போது முன்னர்ப் பல இடங்களில் பல அகராதிகள் பெரிய அளவில் வரவேண்டுமென்ற ஒரே நோக்கோடு வடசொற்களைத் தம்மகத்தே அள்ளிப் பெய்துள்ளன. மற்றும் மக்களுடைய அன்றாடப் பேச்சிலும வடசொற்கள் மலிந்து காணப்படுகின்றன. இவ்வாறு பிறமொழிச் சொற்கள் தமிழில் கலந்தமையால் தமிழின் தூய்மையும் தனித் தன்மையும் அழிந்துபோகின்றது. அத்தோடு பல அரிய தமிழ்ச் சொற்கள் வழங்காதொழிந்தன. இதற்கு இன்னும் இடந்தரின் தமிழ்ச் சொற்கள் போய்ப் பிறமொழிச் சொற்கள் மிக்கு மொழியே மாறிவிடும் என்ற அச்சம் தமிழகத்தில் இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் எழுந்தது. எனவே

தூய தமிழைக் கைக்கொள்ள வேண்டுமென்ற உணர்ச்சி ஏற்பட்டுப் பேச்சிலும் எழுத்திலும் தூய தமிழ்ச் சொற்களைக் கையாள வேண்டுமென்ற இயக்கம் எழுந்தது. தம் பெயரையே மாற்றிவைக்குமளவிற்கு இவ்வியக்கம் வீறுகொண்டது. சுவாமி வேதாசலம் என்ற பெயர் மறைத்திரு மறைமலையடிகள் என்ருயிற்று. சூரியநாராயண சாஸ்திரி பரிதிமாற் கலைஞர் என்று உருவெடுத்தது. இந்த இயக்கம் எழுந்து பரவி வெற்றிக்கொடி நாட்டிவரும் இந்நாளில் பரிதிமாற் கலைஞர் பரம்பரையிலேயே வந்த ஒரு சிலர் தூய்மையாவது தமிழாவது! என்று பேசித் ...ர்.

இந்த வடசொற்றமிழ் அகரவரிசையை நமக்குத் தொகுத்துத் தந்தவர் திருவாட்டி நீலாம்பிகையம்மையார் அவர்கள். இவர்கள் மறைத்திரு மறைமலையடிகளாரின் மகளாராவர். இவ்வம்மையார் திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தை நிறுவிய பெரியார் திரு. வ. திருவரங்கம் பிள்ளையவர்களின் மனைவியாராவர். சென்னை நார்த்விக் மகளிர் கல்லூரித் தலைமைத் தமிழாசிரியராயிருந்து ஓய்வு பெற்றவர். தனித்தமிழ் நடையில் பல அரிய கட்டுரைகளை இயற்றியுள்ளார். 1945-இல் இறைவனடி சேர்ந்தார்.

தூய தமிழ் எழுதவேண்டும், பேசவேண்டும் என்றபொழுது பல வடசொற்களுக்கு என்ன தமிழ்ச்சொல் என்றே தெரியாது மக்கள் தடுமாறுவதைக் கண்டு வழக்கிலுள்ள வடசொற்களுக்குத் தமிழில் இருந்ததும் இருக்கவேண்டியதுமான தமிழ்ச் சொற்களை அகரவரிசைப் படுத்தித் தந்துள்ளார்கள். இவ்வகரவரிசையைத் தாம் தொகுத்த காரணத்தை தொகுப்பாசிரியர் முகவுரையில் தந்துள்ளார்கள். அதை யாவரும் படித்தால் பயன்தருமாதலின் கீழே முகவுரையின் ஒரு பகுதிமட்டும் கொடுக்கப்பட்டுள்ளது.

"இக்காலத்துத் தமிழ் மக்களிற் பெருந்தொகையினர், வடசொற்களையுந் தமிழ்ச்சொற்களையும் பிரித்தறிய முடியாதவர்களாகித் தாமெழுதுங் கட்டுரைகளிலும் நூல்களிலும் வடசொற்களைச் சேர்த்தெழுதியும் அவற்றைத் தமிழ்ச் சொற்களாகவே பிழைபடக் கருதியும் தமிழின் தூய்மையையும் இனிமையையும் பழமையையுங் கெடுத்துவிடுகின்றார்கள். வடசொற் கலப்பால் தமிழ் தன்னிலை திரிந்து கேடுறுவதை எனது பதின்மூன்ருவதாண்டில் அறியலானேன்."

அடுத்துத் தமிழகத்தில் தனித்தமிழியக்கம் தோன்றுவதற்கும் அவ்வியக்கத்தைத் தோற்றுவிக்க வேண்டுமென்று அடிகளாரை எண்ணவைத்தற்கும் அமைந்த சிறு நிகழ்ச்சியை

அம்மையார் குறிப்பிடுகின்றார். "1916-ஆம் ஆண்டில் ஒருநாட் சாய்ங்காலம் என் தந்தையாருடன் தோட்டத்தில் உலாவிக் கொண்டு வருகையில் தந்தையார் இராமலிங்க அடிகள் அருளிச் செய்த திருவருட் பாவிலுள்ள,

"பெற்ற தாய்தனை மகமறந் தாலும்
பிள்ளையைப் பெறுந் தாய்மறந் தாலும்
உற்ற தேகத்தை உயிர் மறந்தாலும்"

என்னும் பாட்டைப் பாடினார்கள். அப் பாட்டின் இரண்டாம் அடியாகிய 'உற்ற தேகத்தை உயிர் மறந்தாலும்' என்பதனைச் சொன்னபோது என் தந்தையாரவர்கள் என்னை நோக்கி, "அம்மா! இப்போது நான் பாடிய பாட்டைத் தூய தமிழில் இராமலிங்க அடிகள் எவ்வளவு அழகாகப் பாடியிருக்கின்றார்கள்! ஆனால், அப் பாட்டின் இரண்டாமடியிலுள்ள 'தேகம்' என்னும் வடசொல்லை நீக்கி 'யாக்கை' என்னுந் தனித் தமிழ்ச் சொல்லை அவர்கள் அங்கே அமைத்துப் பாடியிருந்தால் இன்னும் எவ்வளவு நன்றாயிருக்கும்? தமிழில் பிறமொழிச் சொற்களைச் சேர்ப்பதால் தமிழ் தன் இனிமை இழந்துபோவதோடு, பல தமிழ்ச் சொற்களும் வழக்கில் இல்லாமல் இறந்துபோகின்றன" என்றார்கள். இது கேட்ட அன்று முதல் தனித் தமிழிலேயே பேசவும் எழுதவும் வேண்டுமென்று தந்தையாரும் யானும் உறுதி கொண்டோம்."

அது முதல் அம்மையார் வடசொற்றமிழ்ச் சொற்களை யாராய்ந்து பல கட்டுரைகளை எழுதித் 'திராவிடன்' 'தமிழ்நாடு' போன்ற இதழ்களில் வெளியிட்டுள்ளனர். பின் வடசொற்களுக்கு நேரான தமிழ்ச் சொற்களடங்கிய 'அகரவரிசை' ஒன்று எழுதி 'வடசொற்றமிழ் அகரவரிசை' என்ற பெயரிலேயே 'திராவிடன்' இதழில் வெளியிட்டிருக்கின்றனர். இது பல்லோர்க்கும் பல காலத்தும் பயன்படுதற் பொருட்டு 1937-ஆம் ஆண்டு ஆகஃச்டுத் திங்களில் நூல் வடிவில் வெளிவந்துள்ளது. இதன் இரண்டாம் பதிப்பு 1952 இல் வெளிவந்துள்ளது. இதில் ஏழாயிரம் சொற்களுக்கு மேல் பொருள் தரப்பட்டுள்ளது.

இந் நூல் 17 × 11 செ. மீ. அளவுடையது. 6 + 281 (287) பக்கங்களையுடையது. இதை ஆசிரியரே வெளியிட்டுள்ளார். இது கிடைக்குமிடம் திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் ஆகும்.

(தொடரும்)

# களிறன்று குளிறே

[வித்துவான், திரு. கொ. சி. சாமிநாதன்]

(செல்வி சிலம்பு ௫௫, பரல் ௯, ௪0௭ ஆம் பக்கத் தொடர்ச்சி)

இடம் நீர்க்கரை. அங்கு கரையிலுள்ள அளையிலிருந்தோ அல்லது மடுவிலிருந்தோ நண்டு ஒன்று எழுந்து ஊர்ந்து வருகின்றது. இவ்விரு நிகழ்ச்சிகளையும் நம் புலவர் பெருமான் கண்டு களிக்கின்றார். மரத்தின் மேலிருந்து காற்றின் விசையால் விழுந்த தாக்குதலினால் அத்திப்பழம் குழைந்த நிலையி லிருந்தது. ஊர்ந்து வந்த நண்டு அத்திப்பழத்தின் மேல் ஏறிச்சென்றது. அந்த அத்திப்பழத்தின் அழகிய உருவம் நண்டின் கூரிய கால்கள் பட்டு அதனால் கீறல்கள் தோன்றி முன்னிருந்த அழகுங் கெட்டுச் சற்று மிகுதியாகக் குழைந்து காணப்பட்டது.

கீழே விழுந்ததால் புழுதியும் படிந்து இருந்தது. இந்நிலையில் இன்னும் பல நண்டுகள் அங்கு வந்து அப்பழத்தின்மேல் ஏறிச் சென்றன. இவற்றை யெல்லாங் கண்ட பரணனார்க்கு ஒரு கற்பனை மனத்தில் எழுந்தது.

நன்றாகப் பழுத்துச் சிவந்து அழகிய உருவுடன் மரத்தின் மேல் அத்திப்பழம் இருந்த நிலைமையையும் கற்புடைப் பெண்ணொருத்தி தன் காதலனுடன் கூடி மகிழ்ந்திருந்தபோது அவளது அழகினையும் ஒப்பிட்டுப் பார்க்கின்றார்.

பிறகு அத்திப்பழம் கீழே விழுந்ததும் அப்பழத்திற்கு ஏற்பட்ட மேலிடத்துப் பிரிவால் வாடியதையும் புழுதி படிந்ததையும் அதன் இயற்கை அழகு குன்றியதையும், காதலன் அகலாக் கருத்துக் கலங்கி வேம்பின் ஒண்பூ முதலியவற்றையுஞ் சூடாது புழுதியிற் படுத்து வாட்டமடைந்த அக்கற்புடைய தலைவியின் உருவத்தையும் ஒப்பிட்டுப் பார்க்கின்றார்.

மரத்தின் பிரிவால் நிறங்குன்றிப் புழுதி படிந்து விழுந்த வேகத்தால் குழைந்து நண்டுகளின் கால்களால் உரு வேறுபட்டு மேலுங் குழைந்த அப்பழத்தின் நிலைமையையும், அஃதேபோல் காதலன் பிரிவால் மனது வருந்திக் கூந்தல் குலைந்து அழகுங் குன்றி இருக்க அலர் கூறுவோரால் மேலும் வாட்டமுற்ற நிலையில் தலைவி இருந்ததையும் எண்ணுகின்றார்.

அத்திப்பழம் வாட அதன் மரத்திலிருந்து ஏற்பட்ட பிரிவையும் ஒப்பிட்டுத் தோழி இயற்பழித்துத் தலைவனைக் கொடியோர் என்று சொல்லுகின்றதாக எண்ணுகின்றார். அதன் பிறகு நண்டுகளின் செயலையும் அலர் கூறுவாரையும் ஒப்பிட்டுத் தலைவி

அதை மறுத்துத் தனது வாட்டத்திற்குக் கொடியோர் நாவே காரணம் என்று சொல்லுவதாக எண்ணுகின்றார்.

தனது உள்ளத்தில் எழுந்த இந்தக் கற்பனையை அப்படியே பாடல் உருவாகச் சித்திரிக்கின்றார். அவ்வாறு சித்திரித்த பாடல் குறுந்தொகை ௨௪ ஆம் பாடல்.

எனவே குளிறெனப் பாடங் கொண்டாலும் இப்பாடலில் குளிறு என்பதற்கு நண்டு என்னும் பொருள்தான் கொள்ள வேண்டும். நண்டைக் கண்ட அறிஞர்கள் பொருத்திய கருத்தும் உண்மையில் ஒப்புதற் குரியதே என்பதற்காக இதை எழுதினேன்.

## களிறும் குளிறும் கண்டவர்கள்

குறுந்தொகைப் பதிப்பாசிரியர் உயர்திரு ஐயர் அவர்கள் ஓலைப்படிவங்களில் கண்டதைக் கண்டவாறே "எழுகளிறு" என் பதும் "எழுகுளிறு" என்பதும், ஓலைப்படிவங்களில் காணப் படுவனவாம் என்று எடுத்துக்காட்டித் தமது கருத்தின்படி "எழுகுளிறு மிதித்த பழம்" என்பதே சிறந்த பாடம் எனச் சொல்லி இராவிட்டால் இத்தனை ஆராய்ச்சிகளும் ஐயங்களும் அறிஞர்களுக்கு உண்டாக வேண்டி இராது. அவர்கள் தமிழுல கிற்குச் செய்த நன்றி என்றும் மறத்தற் கியலாதது.

பின்பற்றி மாயூரம் திரு-சாமி செல்வ விநாயகன் என்பவர், "களிறு குளிறு" என்ற தலைப்பில் "குளிறு" என்ற பாடமே சிறக்கும் என்று கொண்டு, யானையின் காலிற் பட்ட அத்திப்பழம் நசுங்கி உருமாறிக் கண்டுபிடிக்க முடியாதபடி மண்ணுக ஒன்றிவிடும். அது இயல்பு. இப்பாடலிற் அத்திப்பழமாகக் கூறப்பட்டாள்; அலரும், பிரிவுங் களிறுகள் எனக் கொண்டால், தலைவி அழிந்துவிட்டாள் என் பதே பொருள். ஆனால், அவள் இன்னும் வாழ்கிறாள்; குழைந்து வாழ்கிறாள். அது எவ்வாறு முடியும்? யானையின் அடியில்பட்ட அத்திப்பழம் அழிந்தன்றோ போகும்? எனவே களிறு அன் றெனத் தெளிக என்று எழுதிய அவர் கருத்துக்கள் சாலச் சிறந்ததாகும். இஃது களிறு என்று எழுதிய பாடமே சிறக்கும் எனக் கொண்டவர்களின் கருத்தை மறுத்து எழுதியதாகும். இது எனது கருத்துக்கு ஒற்றுமை உடையதாய் மேலும் ஆராய்ச்சிக் கிடந்தந்தது

இதிலிருந்து, எவவகை ஆராயசசியிலும, முதலவா சொன்ன "குளிறு" என்னும் பாடமே சாலச்சிறந்ததாகக் கருதப்படுவதை அன்பர்கள் ஆராய்ந்து உரைத்தவைகளிலிருந்து அறிகிறோம்.

# ‘இலம்பாடு நாணுத் தரும்’

[திரு. துரை. சிங்காரவேலன், M. A.]

கண்ணகியைப் பலவாண்டுகள் விட்டுப் பிரிந்திருந்த கோவலன் மீண்டும் அவளிடம் செல்கின்றான்; அவள் வாடிய மேனியின் வருத்தத்தைக் காண்கின்றான். அவன் சொற்களை மேற்போக்காகக் காண்போர்க்குக் கண்ணகியைப் பிரிந்ததற்கு வருந்தியதாக அச்சொற்கள் காட்டவில்லை.

‘வாடிய மேனி வருத்தங்கண் டியாவுஞ்
சலம்புணர் கொள்கைச் சலதியோ டாடிக்
குலந்தரு வான்பொருட் குன்றந் தொலைந்த;
இலம்பாடு நாணுத் தருமெனக்கு’

எனபவை அவன் கூறியவை. அவன் வருந்தியதெல்லாம் “குலந்தருவான்பொருட் குன்றந் தொலைந்த” என்பதற்கே என்று அவன் சொற்கள் வெளிப்படையாகக் காட்டுகின்றன.

இங்கு, இளங்கோவடிகள் ஆளும் சொற்களை, அவர் தம் சொல்லாட்சியை, நாம் ஆழ்ந்து கருதுதல் வேண்டும். குலந்தரு வான் பொருள் தொலைந்தன ஆதலால் ஏற்பட்ட வறுமைக்கே நாணுகின்றான். “தொலைந்த” என்ற சொல், பொருளின் தன் வினையாகும். இளங்கோவடிகள் “வான்பொருள் தொலைத்த” என்று கூறினரிலர். அப்பொருளைத் தானே தொலைத்தாகக் கோவலன் ஏற்றுக்கொண்டானல்லன். இளங்கோவடிகள் வான் பொருள் தொலைத்தான் என்று கோவலன் மீது குற்றம் சாட்டினாரல்லர். கோவலனே வான் பொருளைத் தொலைத்தான் என்று கூற அவர் கருதியிருப்பின், “தொலைந்த” என்னும் சொல் லிற்குப் பதிலாகத் “தொலைத்த” என்று கூறுவது மிக எளியது. யாப்பிற்கும் இம்மாற்றம் முரணாகாது.

இங்கு இளங்கோவடிகள் குறிப்பது, “வான்பொருள்” சிறந்த அல்லது அரிய பொருள், குலந்தரு வான்பொருள். மாதவிக்கு அளித்த பொன்னை, தன் மகளுக்கு மணிமேகலை என்று பெயரிட்ட அந்நாள் மாதவியுடன் வாரி வழங்கிய செம் பொன்னை வான்பொருள் என்று கூறத்தகுமா என்பதைப்பற்றிக் கருதுதல் வேண்டும்.

இனி, “இலம்பாடு” என்று கூறிய கோவலனுக்குச் “சிலம்புள கொண்ம்” என்று கூறிய கண்ணகியின் சொற்களையும் ஆழ்ந்து கருதுவோமாக.

"சிலம்பினைக் கொண்ம்" என்று கூறுதலே போதியதாகும். ஆசிரியர் "சிலம்புள கொண்ம்" என்று கூறியதன் காரணத்தையும் காணுதல் வேண்டும். 'சிலம்பு உள' என்று கூறியதால் 'இலவாயின பல' என்று கொள்ள இடமுண்டு. உரையாசிரியர்களும் "சிலம்புள என்றாள், இவையொழிந்த கலனெல்லாந் தொலைதல்லால்", என்று கூறியுள்ளனர். இக்கலன்கள் எவ்வாறு தொலைந்தன ?

கோவலன் மாதவியின் மணமனை புகுந்தபின், அவளை விடுதலறியா விருப்பினன் ஆயினன் ; மனையகம் மறந்தான் ; மனைவியை மறந்தான். இக்காலத்தில் கோவலன் மனையகம் திரும்பியதாகவோ, கண்ணகியிடம் இக்கலன்களைப் பெற்றுச் சென்றதாகவோ இளங்கோவடிகள் யாண்டும் குறித்திலர். தானே வாங்கிக்கொண்டு செல்லாவிடினும், கண்ணகியின் கலன்களை ஏவலாளர் மூலம் பெற்றான் என்று எண்ணவும் இடமில்லை.

இங்குக் குறிப்பிடுவது குலந்தரு வான்பொருள். வான் பொருள் என்பது சிறந்த பொருள் அல்லது அரிய பொருள் என்று பொருள்படும். பொன்னையோ, மக்கள் கையாளும் சாதாரணப் பொருளையோ, வான்பொருள் என்னும் சொற்கள் குறிப்பதாகத் தோன்றவில்லை. வான்பொருளையும், குலந்தரு பொருளையும் இளங்கோவடிகள் வான்பொருள் என்ற சொற்களால் குறிப்பிடுகின்றார். அது தன் குலத்துதித்த முன்னோர் தலைமுறை தலைமுறையாக, அரிதிற்றேடிய அல்லது தேடுதற்கரிய கலன்களையே குறிக்கும். அத்தகைய கலன்களுள் ஒன்று சிலம்பு. அது வான்பொருள்களுள் ஒன்றாகும் என்பது அதன் அமைப்பினால் உணரப்படும். மாணிக்கப்பரல்களைப் பெற்றது அச்சிலம்பு. அரச மகளிரும் இத்தகைய பரல்களைப் பெற்ற சிலம்பினை அணிந்தாரல்லர். பாண்டிமாதேவியின் சிலம்பும் முத்தையே பரலாகக் கொண்டிருந்தது. மாணிக்கங்கள் தேடற்கரியன. அக்காலத்தே அரிதிற் றேடிப்பெறப்பட்டன. கண்ணகியின் தந்தை மாநாய்கன் நாகநாடு முதல் புகார் வரை அனைவரும போற்றும் வண்ணம் சிறந்த செல்வமும் வாணிபமும் பெற்றிருந்த செல்வாக்குடையவன். மாசாத்துவானும் அரசனுக்குச் சமமான செல்வ வளம் உடையவன். ஆதலின், கண்ணகியின் சிலம்பு இவ்வணிகப் பெருமக்கள் அரிதிற்றேடிய மாணிக்கங்களைக் கொண்டு இயற்றியதாய் இருக்க வேண்டும். முத்துடைத்துப் பாண்டி வளநாடு. முத்தைப் பரலாகக் கொள்ளுதல் எளிது. மாநாய்கனும் மாசாத்துவானும் அவன் முன்னோரும் அரிதிற்றேடிய சிலம்பு முதலிய அருங்கலன்களைக் கண்ணகி பெற்றிருந்தாள் என்பது தெரி

கின்றது. ஆதலின், இளங்கோ வடிகள் அவற்றையே "குலந்தரு வான்பொருள்" என்று குறித்திருத்தல் வேண்டும்.

மாதவிக்குக் கொடுக்கும் பொருட்குறைபாட்டால் தளர்ந்தே கோவலன் "இலம்பாடு நாணுத் தரும்" என்று கூறியதாகக் கண்ணகி கருதியே, "சிலம்புள கொண்ம்" என்று கூறினளாயினும், மாதவிக்கும் கோவலனுக்கும் ஏற்பட்ட தொடர்பு பொருள் பற்றியதன்று என்பது வெளிப்படை. இத்தொடர்பு கலைவளம் பற்றியது. கோவலனும் சிறந்த கலைஞன்; இசை வல்லான்; ஆடற்கலை நுணுக்க மறிந்து நுகரவல்லான். இது, கானல்வரியில் தெளிவாகக் காணப்படுகின்றது.

'கோவலன் கையாழ் நீட்ட அவனும்
காவிரியை நோக்கினவுங் கடற்கானல் வரிப்பாணியும்
மாதவிதன் மனமகிழ வாசித்தல் தொடங்குமன்.'

என்னும் அடிகளே கோவலனது கலைத்திறனை நன்கு காட்டும். இசைக்கலையில் மாதவிக்குக் கோவலன் ஒரு சிறிதும் குறைந்தவனல்லன்; அக்கலையில் அவளை விஞ்சியே விளங்குகின்றான். தனது கருத்தைத் தெளிவாக யாழில் வெளிப்படுத்திப் பாடும் பேராற்றலைப் பெற்றிருந்தான் எனில், அவனது கலைத் திறமைக்கு வேறு சான்றும் வேண்டுமோ?

கோவலன் மாதவி இவர்கள் நட்பு, கலையில் தொடங்கியது; கலையால் வளர்ந்தது; பொருளால் வளர்ந்ததன்று. கலை நலம் நிரம்பிய கோவலனது அறிவும் உணர்வும், கண்ணகியிடம் இக் கலைகளின் நுகர்வைப்பெற, இன்பத்தைப்பெற வாய்ப்பைத்தந்தில. கோவலனுக்கு மகிழ்ச்சி தருவது கலைமேம்பட்ட பெண்மையே. கண்ணகியின் மேம்பாடோ கலைகளால் உயர்ந்த மேம்பாடன்று; கற்பால் உயர்ந்தமேம்பாடு; தெய்வக்காதலால் உயர்ந்த மேம்பாடு. இவள் பொலிவை, இவள் குணத்தை,

'மாதரார் தொழுதேத்த வயங்கிய பெருங்குணத்துக்
காதலாள் புகழ்மன்னுங் கண்ணகி"

என்று இளங்கோவடிகளே குறிப்பிடுகின்றார். கௌந்தி அடிகளோ, இவளை வானுறையும் தெய்வமாக இவ்வுலகில் காண்கின்றார். கோவலனும் அவ்வாறே, 'கண்ணகியின்பால் தெய்வமாகப் போற்றும் நிலை உளது, இவள் தொழத்தக்கவள்,' என்று கருதினான் என்பதை அவன் குறியாக் கட்டுரை குறிக்கின்றது.

குறியாக் கட்டுரை என்பது தன்னை அறியாமல் தான் உணர்ந்த உண்மைப் பொருளைக் கூறுவது. கண்ணகியின் பெருந் தோற்றப் பொலிவு கோவலன்பால் தொழத்தகு உணர்ச்சியையே

உண்டாக்கியது. அவள் நுதலை நோக்கி அவன் கூறும் குறியாகக் கட்டுரை,

'குழவித் திங்கள் இமையவர் ஏத்த
அழகொடு முடித்த அருமைத் தாயினும்
உரிதின் நின்னோ டுடன்பிறப் புண்மையிற்
பெரியோன் தருக திருநுத லாகென !'

என்னும் அடிகளால் இவள் நுதல் இமையோ ரேத்தும் தன்மையைப் பெற்றதே அன்றி, காமன் ஏத்தும் பெருமையைப் பெற்றதன்று; காமுகர் போற்றும் பெருமையும் பெற்றதன்று. கண்ணகியின் நுதல், கலைவளம் சிறந்து, நோக்கெனும் பாசத்தால் பிணித்து, கணவனைத் தன்னை அகலவிடாது என்றும் தன்னைச் சுற்றித் திரியச்செய்யும் ஆற்றல் உடையதன்று. அவள் ஒண்ணு தற்கு உடையதன்று கோவலன் பீடு. அவன் கூறிய ஏனைய குறியாகக் கட்டுரைகளும் கண்ணகியின் புருவமும் கண்ணும் நோக்கும் கண்டாரை மருட்டுவனவல்ல; காமனையும் தோற்று ஓடச்செய்தன.

'அடையார் முனையகத் தமர்மேம் படுநர்க்குப்
படைவழங் குவதோர் பண்புண் டாகலின்
உருவி லாளன் ஒருபெருங் கருப்பு வில்
இருகரும் புருவ மாக ஈக்க'

என்றான் கோவலன். காமத்தை உண்டாக்கும் காமக் கடவுள் இவளிடம் அக்காமத் தோற்றத்தை உண்டாக்க முடியாமையால் தோற்றான்; பயனற்றுப் போன தனது வில்லையே ஒடித்தான்; இரண்டு புருவமாக அளித்தான்,' என்பதால், காமக் கடவுளின் வில் இவள் முன்னர்ப் பயனற்றுப் போயிற்று என்பது தெளிவு. அவ்வாறே முருகனும் தான் பெறுமுறை ஒன்றின்றியும் தன் வேலை இரண்டாகப் பிளந்து ஈத்தான். பிளந்த வேல் பாயுந்தன்மை அற்றது. இது போன்றே ஏனைய நலம் பாராட்டுரைகளிலும் கண்ணகியின் பெருந்தோற்றப் பொலிவு— காமனைவென்ற பொலிவு விளங்குகின்றது. இக்குறியாக் கட்டுரை விரித்தெழுதின் பெருகுமாதலின் ஈண்டு விரிவஞ்சி விடப்பட்டது.

ஆதலின், கோவலனுக்கு விருப்பமுள்ள கலை வளத்தைக் கண்ணகியின் அழகில்— நுதலில், புருவத்தமைப்பில்—கோவலன் காண இயலவில்லை. இவை திருவின் தோற்றத்தையும், தெய்வ ஒளியையும் காட்டினவே அன்றிக் கோவலன் விரும்பும் கலைவளத் தைக் காட்ட

கோவலன் விரும்பும் தான் பெறாதவள்
என்பனிதக ம், கோவலனிடம் கொண்ட

காதல் மாறினாளல்லள். இவள் கற்பு ஒரு தனி நிலை உற்ற கற்பு. இவள் கணவன்பால் தான் இன்பம் துய்க்க விரும்பினாளல்லள். தனக்கு அவன் இன்பந்தரவில்லையென்று வருந்திக் கூறினாரு மல்லள். கோவலன் எவ்வாறாவது அவன் விரும்பிய இன்பத்தைப் பெற வேண்டும். அவன் பெறும் இன்பமே தான்பெறும் இன்பம் என்று கருதியவள் கண்ணகி. கோவலன் ஒழுக்கம் போற்றா ஒழுக்கம் என்பதை அவள் அறிவாள்; ஆயினும், அதைச் சிறிதும் மாற்ற நினைத்தாளல்லள்; மாற்ற நினையாத உள்ள வாழ்க்கையைப் பெற்றாள். புறத்தே காட்டப்படும் வாழ்க்கை யன்று அது; அவளது தன்னலமற்ற வாழ்க்கை – அவள் உள்ளம் ஒன்றே அறிந்த வாழ்க்கை. அவன் இன்பத்தை அவன் ஒழுக்கத்தை மாற்றாத வாழ்க்கை, மாற்ற நினையாத வாழ்க்கை.

"போற்றா ஒழுக்கம் புரிந்தீர் யாவதும்
மாற்றா உள்ள வாழ்க்கையேன் ஆதலின்
ஏற்றெழுந் தனன் யான்"

என்னும் அவளது சொற்களால் தெளிவாகின்றது. கோவலன் ஒழுக்கத்தை, அவ் வொழுக்கத்தால் அவன் நலம்பெறும் இன்பத்தை மாற்ற நினையாது இருந்த கண்ணகி, கோவலனும் மாதவியும் இன்பமாக உறைவது தனக்கு உடன்பாடு என்ப தையும், தான் மாதவியை வெறுக்கவில்லை என்பதையும் காட்டித் தன் அரும்பெருங்கலன்களை மாதவியிடம் அனுப்பி யிருத்தல் வேண்டும். கணவனால் விரும்பப்பட்ட மாதவி, அவைகளை அணிந்திருப்பது கணவனுக்கு இன்பந்தருவதாகலின், கணவன் இன்பத்தைக் கருதியே அவள் அவ்வாறு செய்திருப் பாள். மகளிர் அணிகலன் அணிவது கணவனை மகிழ்விப்பதற் கன்றோ? ஆதலின் கணவன் அக்கலன்களை எங்குக் கண்டால் மகிழ்வானோ, அங்கு அவன் கேளாமலே, தானே அனுப்புதலே கடமை என்று எண்ணியே, தனது மாற்றா உள்ள வாழ்க்கை யைக் காட்டியே, அருங்கலன்களைக் கண்ணகி மாதவிக்கும் அவள் அன்புச் செல்வி மணிமேகலைக்கும் அனுப்பியிருப்பாள் என் பதில் ஐயமும் உண்டோ? கண்ணகியின் இவ்வருஞ் செயல்களே, 'யாவதும் மாற்றா உள்ள வாழ்க்கை' யளாய்ச்செய்த செயல்களே, மாதவிக்கு இவள்பால் பேரன்பையும் பெருமதிப்பையும் ஊட்டியதோடு "குலப் பிறப்பாட்டி" என்று கண்ணகியை அவள் போற்றவும் செய்தன. இம் மட்டோ! தனது பெறற்கரிய செல்வியாம் மணிமேகலையைக் கண்ணகியின் மகளாகவே மாதவி வழங்கினள் என்பதும் கண்ணகியே அவள் தாய் என்று கூறினள் என்பதும் மணிமேகலைக் காவியத்தாலும் வலியுறுத்தப்படு இச் செய்தி,

"காவலன் பேரூர் கனையெரி யூட்டிய
மாபெரும் பத்தினி மகண்மணி மேகலை
அருந்தவப் படுத்த லல்லதி யாவதுந்
திருந்தாச் செய்கைத் தீத்தொழிற் படாஅள்."
மணிமேகலை—ஊரலருரைத்தகாதை—கச - கஎ.

என்னும் அடிகளால் விளங்கும். கண்ணகியின் அருஞ்செயலே "மாற்று உள்ள வாழ்க்கை"ச் செயலே மாதவியை இவள்பால் பெரு மதிப்புக்கொள்ளச் செய்தற்குக் காரணமாகும். இவற்றைக் கருதியே போலும் இளங்கோவடிகள்,

'வான்பொருட் குன்றந் தொலைந்த
இலம்பாடு நாணுத் தரும்'

என்று கூறினர். கண்ணகியும் "சிலம்பினைக் கொண்ம்" என்னாது "சிலம்புள கொண்ம்" என்றார். மீண்டும் இளங்கோவடிகள் கோவலன் வாயிலாகவும் "சென்ற கலனோடு உலந்த பொருள் ஈட்டுதலுற்றேன்" என்றும் கூறுகின்றார். சென்ற கலன் எவை? அவை உளவாகிய சிலம்பினைத் தவிரப் பிற இலவாகிய சென்ற கலன்கள் - "குலந்தரு வான்பொருள் குன்றம்" ஆகவேண்டும்.

கோவலன் பெற்ற இலம்பாடு தான் பெற்ற இலம்பாடன்று. ஆயிரம் பொன்கழஞ்சு அளித்ததால் வாரி வழங்கியதால் ஏற்பட்ட இலம்பாடன்று. சென்ற கலன்களால் ஏற்பட்ட இலம்பாடு. வான்பொருள் தொலைந்த இலம்பாடு.

இலம்பாடு என்பது வணிகர்க்கு இயல்பானது. அவர் பெரு நிதி பெறினும் பெறுவர்; கலங்கவிழ்ந்து பெருநிதி இழப்பினும் இழப்பர்; இழந்த பொருளினும் மிக்கதை ஈட்டினும் ஈட்டுவர். இதற்கு வருந்துதலோ நாணுதலோ வணிகர் இயல்பன்று. மணிப்பரல் கொண்ட, விலையிடற் கரிய, குலந் தந்த வான்பொருளாம் சிலம்பினைப் போன்ற அரும்பெறற் கலன்கள் ஈட்ட முடியாதன சென்று விட்டன. அவையும் சலம் புணர்கொள்கைச் சலதியை அடைந்தன.

தன் கணவன் இன்பம் மாறாது இருக்க, மாற்று உள்ள வாழ்க்கையை மேற்கொண்டு தன் அரும்பெருங் கலன்களைக் கணவன் இன்பம் ஒன்றே கருதி மாதவியிடம் செலுத்திய காதல் தெய்வத்துடன் உறைந்து மகிழாது "சலம்புணர் கொள்கைச் சலதியோடு ஆடிக் குலந்தரு வான்பொருள் குன்றந் தொலைந்தன வாதலால் ஏற்பட்ட இலம்பாடு" கோவலனுக்கு நாணத்தைத்

"நான் சலதியோடாடியதால் நீ குலந்தரு வான்பொருள்களை என் மகிழ்ச்சிக்காக, என் இன்பத்தை மாற்றக்கூடாது என்பதற்காக நீ மேற்கொண்ட அரிய செயலால், குலந்தரு வான் பொருள்கள் தொலைந்தன. அவற்றைப்பெறச் சற்றும் தகுதியற்ற சலதியைச் சென்று சேர்ந்தன. "இத்தகு குலந்தரு வான்பொருள் குன்றந் தொலைந்த; இலம்பாடு" எனக்கு நாணுத் தருகின்றது என்றுங் கூறுகின்றான் கோவலன்.

இத்தகு தெய்வக் காதல் உடையாளை, மாற்று உள்ள வாழ்க்கையாளை அறியாத, அவளை மகிழ்விக்காத, நுகராத அறிவின் (இலம்பாட்டை) வறுமையையும் எண்ணி நாணம் அடைகின்றான். இதனாலேயே அவன், 'குலந்தரு வான்பொருள் குன்றந்தொலைந்த; இலம்பாடு நாணுத் தருமெனக்கு'[1] என்று கூறினான் என இளங் கோவடிகள் கூறியுள்ளார். இத்தகு இலம்பாட்டினும் மிகுதியான நாணுத் தருவது உலகிலுண்டோ?

பாடமை சேக்கையுட் புக்குத்தன் பைந்தொடி
வாடிய மேனி வருத்தங்கண் டியாவுஞ்
சலம்புணர் கொள்கைச் சலதியொ டாடிக்
குலந்தரு வான்பொருட் குன்றந் தொலைந்த
இலம்பாடு நாணுத் தருமெனக் கென்ன
நலங்கேழ் முறுவல் நகைமுகங் காட்டிச்
சிலம்புள கொண்மெனச் சேயிழை கேளிச்
சிலம்பு முதலாகச் சென்ற கலனோ
டுலந்தபொரு ளீட்டுத லுற்றேன் மலர்ந்தசீர்
மாட மதுரை யகத்துச்சென் றென்னோடிங்
கேடலர் கோதா யெழுகென்று நீடி
வினைகடைக் கூட்ட வியங்கொண்டான் கங்குற்
கனைசுடர் கால்சீயா முன்."

—கனாத்திறமுரைத்த காதை [illegible]

# பஞ்ச மரபு

[வித்துவான், திரு. வே. ரா. தெய்வசிகாமணிக் கவுண்டர்]

வடவேங்கடந் தென்குமரியாயிடைத் தமிழ்கூறு நல்லுலகத்தின்கணுள்ள ஐவகை மண்டிலங்களுள் ஒன்ருய் விளங்கும் கொங்கு மண்டிலத்தின்கணுள்ள குறும்புநாட்டு விசயமங்கலத்தில் கொங்கு வேளிரும் குறும்புநாட்டுப் பேரூர்களில் ஒன்ருய் விளக்கமுற்றிருந்த நிரம்பையென்னு மூரின்கண் அடியார்க்கு நல்லாரும் அவதரித்தனர்.

முத்தமிழ் நூல்களை முறையாகக் கற்றுணர்ந்த கொங்கு வேளிர் ஐஞ்சிறு காவியங்களில் ஒன்ருகப் போற்றப்படுவதும் காவியங்களிற் சிறப்புடையதுமாகிய கொங்குவேள் மாக்கதை யென்னும் காவியப்பூஞ்சோலையை யமைத்தார். அடியார்க்கு நல்லாரென்னும் அருந்தமிழ்ப்புலவர் பண்டைத்தமிழ் நூல்களின் திறமெல்லாம் விளங்கும்படி ஐம்பெருங்காவியங்களில் ஒன்ருன முத்தமிழ்க் காவியமாகிய சிலப்பதிகாரத்திற்குச் சிரிய உரை வரைந்தார். தமிழர் தாம் நல்வினையின்மையால் இழந்த இசை நுணுக்கம் சயந்தம் முறுவல் முதலிய நூல்களின் பெயர்களையும் அவற்றின் சில சூத்திரங்களையும் கடல்கொண்ட தமிழகச் செய்திகளையும் நமக்கு நன்ருக அறிவித்து நிற்பது சிலப்பதிகாரவுரை.

"பாம்பின் கால் பாம்பறியும்" என்றபடி அடியார்க்கு நல்லார் தாம் வாழ்ந்த காலத்தின் முன்பு தாம் பிறந்த நாட்டின்கண் தோன்றிக் காவியமியற்றிய கொங்குவேளிரின் புலமைத் திறமெல்லாம் நன்கு அறிந்தவராவர். அவர் தம் சிலப்பதிகார வுரைப்பாயிரத்திலே கொங்குவேள் மாக்கதைபற்றிக் கூறுமிடத்து" இரண்டாம் ஊழியதாகிய கபாடபுரத்தின் இடைச் சங்கத்துத் தொல்காப்பியம் புலப்படுத்திய மாகீர்த்தியாகிய நிலந்தருதிருவிற்பாண்டிய னவைக்களத்து அகத்தியனாரும் தொல் காப்பியனாரும் இருந்தையூர்க் கோழிமோசியாரும் வெள்ளூர்க் காப்பியனாரும் சிறுபாண்டரங்கனாரும் மதுரையாசிரியன் மாறனாரும் துவரைக் கோமகனும் கீரந்தையாருமென்றித் தொடக்கத்தார் ஐம்பத்தொன்பதின்ம ருள்ளிட்ட மூவாயிரத்து எழுநூற்றுவர் தம்மாற்பாட்டப்பட்ட கலியும் குருகும் வெண்டாளியு முதலிய செய்யுளிலக்கியம் ஆராய்ந்து செய்த உதயணன் கதை யுள்ளும்" எனக் கூறுகின்ருர். இதனுல் கொங்குவேளிரென்னும் புலவர் ஆராய்ந்தறிந்துள்ள பழந்தமிழ் செய்யுளிலக்கிய நூல்களை யாசிரியர் அறிவுறுத்தினர்.

மற்றும், இசைத்தமிழ் நூலாகிய பெருநாரை பெருங்குருகும் பிறவும் தேவவிருடி நாரதன் செய்த பஞ்சபாரதீய முதலாகவுள்ள தொன்னூல்களிறந்தன. நாடகத்தமிழ் நூலாகிய பரதம் அகத்தியம் முதலாகவுள்ள தொன்னூல்களுமிறந்தன. பின்னும் முறுவல் சயந்தம் குணநூல் இயற்றியமென்பவற்றுள்ளும் ஒரு சார் சூத்திரங்கள் நடக்கின்ற அத்துணையல்லது முதல் நடு இறுதி காணாமையின் அவையும் இறந்தனபோலும் எனவும் இறக்கவே வரும் பெருங்கல முதலிய பிறவுமாம் எனத் தம் காலத்தில் இறந்தனவும் இறந்துவருவனவுமாகிய இசை நாடக நூல்களின் பெயர்களையும் அறிவித்தார்.

இறந்தன போகத் தம் காலத்தில் முத்தமிழ்க் காவியமாகிய சிலப்பதிகாரத்திற்குத் தாம் உரையெழுதுவதற்கு உதவியாகக் கிடைத்த இசை நாடக நூல்களைப்பற்றிக் கூறுமிடத்துங் "சார குமரனென அப்பெயர் பெற்ற குமரன் இசையறிதற்குச் செய்த இசை நுணுக்கமும் பாரசவ முனிவரில் யாமளேந்திரர் செய்த இந்திரகாளியமும் அறிவனார் செய்த பஞ்சமரபும் ஆதிவாயிலார் செய்த பரதசேனாபதீயமும் கடைச்சங்கமிரீஇய பாண்டியருட் கவியரங்கேறிய பாண்டியன் மதிவாணனார் செய்த முதனூல் களிலுள்ள வசைக் கூத்திற்கு மறுதலையாகிய புகழ்க் கூத்தியன்ற மதிவாணர் நாடகத்தமிழ் நூலுமென இவ்வைந்தும் இந்நாடகக் காப்பியக் கருத்தறிந்த நூல்களன்றேனும் ஒரு புடையொப்புமை கொண்டு முடித்தலைக் கருதிற்று இவ்வுரையென்க எனத் தம் சிலப்பதிகார உரைப்பாயிரத்திற் கூறியுள்ளார்.

அடியார்க்கு நல்லார் காலத்திலிருந்த மேற்குறித்த இசை நாடக நூல்களில் ஒன்றேனும் இப்பொழுது முழுமையாய்க் கிடைத்திலாமையால் அவைகளும் இறந்து பட்டனவாகவே கருதப்பட்டன. காவியத்தோற்றத்திற்கும் தமிழுரை காண்டற்கும் இசை நுணுக்க முதலிய பழந்தமிழ் நூல்களின் புழக்கத்திற்கும் இடனாயிருந்த கொங்கு நாட்டில் நம் பண்டைத்தமிழ்ச் செல்வங்களாகிய ஏட்டுச் சுவடிகள் பல இருக்கலாமென்ற எண்ணம் எனக்கு இளமை முதலே யுண்டாவதாயிற்று. அதனால் கொங்குவேள் மாக்கதையின் முழுப்பகுதியும் அடியார்க்கு நல்லார் தம் காலத்தில் இருந்ததாகக் கூறும் இசை நாடகம் பற்றிய ஐந்து நூல்களும் கொங்கில் குறும்பு முதலிய இடங்களில் எங்கேனும் கிடைக்கலாமென்றெண்ணிப் புகைவாயிலும் புகுந்தான்" என்றபடி கொங்கு நாட்டின் மூலை முடுக்குகளிலுள்ள பல ஊர்களிலும் பல காலம் சென்று தேடினேன். அத்தேடுதலின் பயனாகக் கிடைத்த இசை நுணுக்கமும் ஏனைய சுவடிகளும் யான் பிரதி செய்து வைத்திருந்த காகிதச் சுவடிகளும் அச்சிட்ட

நூல்கள் பலவும் யான் வேற்றூர் வாசம் செய்யும்படி நேர்ந்த காலத்தில் வீட்டிற் பாதுகாப்போரொருவருமில்லாதிருந்தபடியால் மாதக்கணக்கில் பெய்த மழைநீர் கூரையினுள் துளையில் புகுந்து வீடு முற்றும் நிரம்பியமையால் நனைந்து கரையான் புற்றாகக் கழிந்தொழிந்தன. இசை நுணுக்க முதலிய சுவடிகளைத் தேடுதலில் யானடைந்த வருத்தத்தினும் அவற்றை யிழந்தமையால் அடைந்த வருத்தம் பன்மடங்கு மிகுவதாயிற்று. இன்னும் கொங்கு நாட்டில் இசை நுணுக்கப் பிரதி யிரண்டோரிடங்களிலிருப்பதாகக் கேள்விப்படுகிறேன். அவற்றினிலையுமெவ்வாறுகுமோ; அதன் பின்னர்ச் சிலவாண்டுகளின் பிறகு கிடைத்தது "பஞ்சமரபு" என்னும் ஏட்டுச் சுவடி. அது கிடைத்துச் சில்லாண்டுகளாகியும் அந்நூலின் வேறு பிரதி தேடிக் கொண்டிருந்தமையாலும் எனக்குள்ள பிற வேலைத் தொல்லைகளினாலும் இதுவரையிலும் அதனைப் பரிசோதித்து வெளியிடற்கியலவில்லை. கிடைத்த அப்பிரதியும் அழிந்துபோகாதபடி அதனைப் பரிசோதித்துச் சிறு சிறு பகுதிகளாகச் செந்தமிழ்ச்செல்வியில் வெளியிட முயன்றுள்ளேன். நூல் முற்றும் வெளியான பின்பு அந்நூல் பற்றிய விரிந்த முகவுரை யொன்றும் வெளியிட விரும்பியுள்ளேன்.

அடியார்க்கு நல்லார் சிலப்பதிகாரவுரையில் இசை நாடகம் பற்றிக் கூறுமிடங்களில் இந்நூலின் மூலத்தையும் உரைப்பகுதிகளையும் எடுத்தாண்டிருக்கிறார். சிலப்பதிகாரம் கடலாடு காதை 35வது வரியிலுள்ள "மாயோன்பாணியும்," என்பதற்கு விளக்கவுரை கூறுமிடத்து "சாதியோசைகள்" மூன்றினுடனும் கிரியைகளுடனும் பொருந்தும் இசைப்பாக்கள் ஒன்பது வகையென்ப

"செப்பரிய சிந்து திரிபதை சீர்ச்சவலை
தப்பொன்று மில்லாச் சமபாத—மெய்ப்படியுஞ்
செந்துறை வெண்டுறை தேவபாணி வண்ணமென்ப
பைந்தொடியா யின்னிசையின் பா"

என்றார் பஞ்சமரபுடைய அறிவனாரென்னு மாசிரியரென்க. என நூலின்பெயரு மாசிரியர் பெயருங் குறித்துள்ளார். இப்பாடல் பஞ்சமரபு என்னும் நூலின்வகை யொழிபு கூறும் உ௨ஆம் செய்யுள்.

அரங்கேற்று காதை உ௬ஆவது வரியிலுள்ள "குழல் என்பதன் இலக்கணம் விவரிக்குமிடத்து வங்கியத்துக்குரிய மரத்தினிலக்கணம் பிண்டியிலக்கணம் துளையளவிலக்கணம் எழுவிரல் ஏழிசைகள் பற்றிக் கூறுமிடங்களில் மேற்கோளாகக் காட்டியிருக்கும் வெண்பாக்கள் ஐந்தும் பஞ்சமரபில் வங்கிய மரபு பற்

றிக் கூறும் பகுதியில் அமைந்துள்ள 1முதல் 5வரையிலுமுள்ள வெண்பாக்களாகும். இவ்வெண்பாக்கள் அமைந்த நூலின் பெயரும் ஆசிரியர் பெயரும் அவ்வுரையில் கூறப்படவில்லை. இன்னும் இசை நாடகம் பற்றிக் கூறும் வேறு சிலவிடங்களில் பஞ்ச மரபின் மூலமும் உரைப்பகுதிகளும் எடுத்தாளப் பெற்றுள்ளன. அவை விரிக்கிற் பெருகுமாதலின் அவற்றை விடுத்து மேற்செல்லுதும். இந்நூலின் முகப்பில் பாயிரமாக வமைந்துள்ள வெண்பாக்கள் ஐந்து. அவ்வெண்பாக்களையும் அவற்றினுரையினையும் மேற்கொண்டு நூலாசிரியர்பற்றியும் நூல் பற்றியும் சில செய்திகளை இக்கட்டுரையில் கூறுவோமாக.

இந்நூல் கார்மேனிச் செங்கட் கடவுளை யான் பணிந்து, என்று திருமால் வணக்கத்துடன் தொடங்குகின்றது. திருமாலே நூலின் காப்புக் கடவுளாதல் வேண்டுமென்று இந்நூலின் வகையொழிபு கூறும் பகுதியில் உள்ள 18ஆம் வெண்பா

சீரார் திருமகளும் செந்தா மரைமலரும்
ஏரார் பரிதிமதி யிந்நான்கும்—கார்மேனிக்
கண்ணனை முன்வைத்துக் காப்புரைக்க கற்றுணர்ந்தோர்
வண்ணம் புணர்க்கும் வகை

எனக் கூறுகின்றது. இவற்றால் இந்நூலாசிரியர் திருமாலை வழிபடும் குலத்தினரென்று தெரிகின்றது.

மன்னுபொதி யத்திருந்த மாதவத்தோன் றாள்வாழ்த்திப்
பன்னு பனுவற் றொகையினுடன்—றன்னருஞ்சீர்
சேறை யறிவனூற் செய்தமைத்த வைந்து தொகை
கூறுவ திந்நூற் குணம் (பஞ்சமரபு, பாயிரம்-ரு).

என்றும் இந்நூற்பாயிரம் நான்காவது செய்யுளுரையினுள், "இந்நூல் யாராற் செய்யப்பட்ட தோவெனின், ஐந்தியலுணர்ந்த அறிவனாரென்னுமாசிரியராற் செய்யப்பட்டதாமென்க," எனக் கூறுதலின் ஆசிரியர் அறிவனாரென்பது தெளிவாகின்றது. மற்றும் அவர் பனுவற்றொகை, ஐந்தொகை என இரு நூல்கள் செய்துள்ளனரெனவும் அவற்றின் சாரமாக விந்நூல் செய்தனரெனவும் தெரிகின்றது.

"சேறையறிவனாரென்பதால் இந்நூலாசிரியராகிய அறிவனார் சேறைப் (சேற்றூர்) பதியினரென்று தெரிகின்றது. இந்நூற் பாயிரம் ௫ஆவது பாடலுரையின்கண்". இந்நூல் என்ன பெயர்த்தோவெனின், இஞ்சிசூழ்மதுரைக் கோன் முனஅஞ்சுறுப்பாகச் செய்யப்பட்டமையின் பஞ்சமரபென்னும் பெயர்த்து. அஞ்சுறுப்பாவன இசையு முழவுந்தாளமுங் கூத்து, முசைவிலபிநய மஞ்சுறுப்பாகும் எனக்கொள்க, எனக் கூறுதலினாலும் இந்நூலின்

இசை மரபு கூறும் முதற் செய்யுளில் "தார் பொலிந்த, மன்ன திருமா றவண்கூடற் கோமானே" என்று பாண்டியனை முன்னிலையாக்கிக் கூறுதலினாலும் இந்நூல் பாண்டிய மன்னனொருவனுடைய அவைக் களத்தே அவன் வேண்டுகோளின்படி செய்யப் பெற்றதெனத் தெரிகிறது. மேலும், இசை முழவு தாளம் கூத்து அபிநயம் என்னும் ஐந்து றுப்புக்கள் பற்றிக் கூறுவது பஞ்ச மரபென்னும் நூலின் பெயர்க் காரணமென்பதும் தெளிவாகின்றது.

இந்நூலின் வகையொழிபு கூறும் முதலிரண்டு வெண்பாக்களிலும் அவற்றினுரையிலும் பஞ்சமரபு என்பதற்கு வேறு முறை கூறப்படுகின்றது. தோல் துளை நரம்பு கஞ்சம் மிடறு என்னும் ஐந்திடங்களில் தோன்றும் இசை பஞ்சமாசத்தம் எனப் பெயர் பெறும். அவற்றைக் கூறுவது பஞ்சமரபென்று பெயர் பெறும் என்பது.

"சொல்லிய நற்றோல் துளைதுய்ய மென்னரம்பு
கல்விமிகு கஞ்ச மிடறெனவே—வெல்லுமதன்
அஞ்சப் படும்விழியா யாயுங்கா லிவ்வைந்தும்
பஞ்சமா சத்தமாய்ப் பார்.

)யயன்படைத்த வாழ்) யுலகத்து
ளோதிய கீதவகை யெல்லாம்—நீதியினு
லைந்து திறனும் விரவி வருதலாற்
பஞ்ச மரபென்றுபார்.

பாயிரம் ரு-ஆவது செய்யுளுரை இந்நூலினளவும் பயனும் கூறுகின்றது. அது இந்நூல் இருநூற்று நாற்பது வெண்பாக்களையுடையது. தேவர்களுவப்பது கீத வாத்திய தாளங்களாதலால் மிக்கோ ரிதனை யறிதல்வேண்டும். இதனை மன்னர்க்குரைக்கப் பொருள்சேரும். பொருளால் நினைத்தவின்பம் கைகூடும். நினைத்தது முடிய வீடு பெறும் என்பது.

---

## அருட்டிரு. அருணந்தி சுவாமிகளின் அறக்கட்டளைகள்

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்தின் அதிபர் அருட்டிரு. அருணந்தி சுவாமிகள், இதுவரை 306 தருமங்களுக்குக் கட்டளை விடுத்துள்ளார். இவையனைத்துக்கும் மொத்தம் ரூ. 68 லட்சத்து 32 ஆயிரத்து 745 தொகை ஒதுக்கப்பட்டுள்ளது. திருமுறைவளர்ச்சி, கல்வி அபிவிருத்தி, சைவசித்தாந்தத்தைப் பரப்புதல், அன்னதானம், வைத்தியம், பொதுத் தருமங்கள், ஸ்நானகட்டம், அகதிகள் உதவி, தண்ணீர்ப் பந்தல், ஒளி விளக்குகள் அமைப்பு, பசுவளர்ப்பு முதலிய இனங்களுக்காக அறக்கட்டளைகள் வகுக்கப் பெற்றுப் பதிவும் செய்யப்பட்டுள்ளன.

# செய்திகளும் குறிப்புக்களும்

## (க) ஆசிரியப் பயிற்சிக் கல்லூரிகளில் தமிழ்

"அடுத்து வரும் கல்வி ஆண்டுமுதல் இம் மாநிலத்திலுள்ள நான்கு ஆசிரியப் பயிற்சிக் கல்லூரிகளில் தமிழ் பயிற்சி மொழியாக்கப்படும். கல்லூரிகளில் தமிழ் பயிற்சி மொழியாகும் நல்ல சூழ்நிலை உருவாகியுள்ளது கண்டு மகிழ்ச்சியடைகிறேன். ஆங்கிலம் கற்கவேண்டுவது அவசியமாயினும் அது பயிற்சி மொழியாக இருக்கவேண்டு மென்பதில்லை" என்று 20-5-61 இல் சைதாப்பேட்டை ஆசிரியப் பயிற்சிக் கல்லூரியில் பேசிய காலை கல்வி அமைச்சர் திரு. சி. சுப்பரமணியம் அவர்கள் குறிப்பிட்டார்.

குறிப்பு : பிறர்க்குத் தமிழ் மூலம் பாடம் கற்பிக்கும் ஆசிரியர்கள் அங்ஙனம் தாம் மேற்கொள்ளும் பணியினைப் பயிலுவதும் தமிழ் மூலமாகவே இருத்தல் மிகமிக இன்றியமையாதது. இத்தகைய அடிப்படைப் பணிக்கு அடிகோலும் ஆட்சியாளரைப் பாராட்டுகிறோம்.

## (உ) மைய அரசின்

1965 ஆம் ஆண்டிற்குப் பின்னும் ஆங்கிலம் அரசியல் பணிகளுக்குத் தொடர்ந்து பயன்படுத்தப்படும், என்று முதல் அமைச்சர் தந்துள்ள வாக்குறுதியைச் செயல்படுத்துவதற்கென அடுத்த மக்கள் மன்றக் கூட்டத்தில் மசோதா கொண்டுவரப்படும் என்று மைய அரசினர் தமிழகத்தினர்க்கு உறுதியளித்துள்ளனர்.

குறிப்பு : இந்த உறுதி இறுதிவரையில் நின்று பயன் தருமென்று நம்புகிறோம். ஆங்கிலம் நீடிப்பதால் ஓரளவு இந்தியின் ஆதிக்கம் குறையும். அதுமட்டுமல்ல, ஆங்கிலத்தின் இலக்கிய வளத்தால் தமிழிலக்கிய வளம் மேலும் பெருக வாய்ப்பும் வசதியும் ஏற்படும்.

## (ங) முறைப்பாடு தலையீடாகாது

"இலங்கைத் தமிழர் சிக்கலில் இலங்கைக்குத் தமிழர்களின் சார்பில் இந்திய அரசு வாதாடவேண்டும். இலங்கைத் தமிழர்களுக்காக இலங்கை அரசிடம் இந்திய அரசு பரிந்துபேசி வாதாடுவது அவர்களது உள்நாட்டு விவகாரங்களில் தலையிடுவது ஆகாது" என்று இந்திய மக்கள்சபை உறுப்பினர் டாக்டர் ஏ. கிருஷ்ணசாமி அண்மையில் விடுத்த அறிக்கையொன்றில் குறிப்பிட்டுள்ளார்.

குறிப்பு : ஆப்பிரிக்காவிலுள்ள இந்தியர் வெள்ளையரின் இனவெறிக்கு ஆளாகி அல்லலுறுவதைப் பன்னெடுங்காலமாகக் கண்டித்துப் பேசியும் எழுதியும், ஐ. நா. மன்றம் வரையில் இவ்விவகாரத்தை எடுத்துச் சென்று முறையிட்டும் வரும் இந்திய அரசினர் இந்தியாவின் காலடியில் இருக்கும் சின்னஞ்சிறு தீவாகிய இலங்கையில் இலட்சக்கணக்கான தமிழர் படும் அல்லலை அறியாரோ! எனவே டாக்டர் அவர்கள் கூறியுள்ளதுபோல் இந்திய அரசினர் இதில் சற்று அதிக அக்கறைகாட்டுதல் வேண்டும். அங்ஙனம் செய்தல் முறைப்பாடேயன்றித் தலையீடாகாது என்பதைச் சுட்டிக்காட்ட விழைகிறோம்.

## (ச) இலங்கை மொழிச் சிக்கல்பற்றி ஆச்சாரியார் கருத்து

"இலங்கைத் தமிழர்களின் உற்றநண்பன் என்பதைக் காட்டிக் கொள்ளும் வகையில் டில்லி காங்கிரசு அரசு நடந்துகொள்ளாதது வருந்தத் தக்கது. ஓர் அரசிற்கு இன்னோர் அரசு பரிவுகாட்டுவதும், புரட்சிக்காரர்களையும் எதிர்ப்பாளர்களையும் ஒடுக்குவதும் இயற்கைதான்.

"வடநாட்டில் உள்ளவர்களைவிடத் தென்னாட்டில் உள்ள எங்களுக்குத்தான் உங்களது நிலைமை நன்குதெரியும். நாங்கள் உங்களுக்குப் பெருமளவு அனுதாபம் காட்டுவோம். சிங்களம்தான் தேசியமொழி யெனத் திணிக்கப்படுவது போன்றுதான் இந்தி தென்னாட்டின் மீது திணிக்கப் படுகிறது" என்று இலங்கைத் தமிழர்களின் சார்பில் வந்த தூதுக் குழுவினரிடம் திரு. இராசகோபாலாச்சாரியார் அண்மையில் கூறினார்.

**குறிப்பு:** அரசியலில் மூதறிஞராகத் திகழும் திரு. ஆச்சாரியார் அவர்களின் இக் கருத்துரை அரசியல், சமுதாயம், மொழி ஆகிய துறைகளில் ஈடுபட்டுள்ளோரும், அரசியலில் அமைதியையும், மக்களாட்சிப் பண்பையும் எதிர்நோக்குவோர் அனைவரும் உற்றுநோக்கற்பாலது.

## (ரு) தாய்மொழிமூலம் கல்வி—உமாயூன் கபீர் கருத்து

"தொடக்கக் கல்வியிலிருந்து பல்கலைக் கழகம்வரை பயிற்சிமொழி தாய் மொழியாகவே இருக்கவேண்டும், என்பதுதான் என் சொந்தக் கருத்து. பாடநூல்களை ஆங்கிலத்திலிருந்து தாய்மொழியில் மொழி பெயர்க்கும் வேலையை விரிந்த அளவில் செய்யவேண்டும்" என்று அண்மையில் இராசக்கட்டத்தில் பேசிய காலை இந்திய அறிவியல்பண் பாட்டுத்துறை அமைச்சர் திரு. உமாயூன் கபீர் கூறினார்.

**குறிப்பு:** பயிற்சிமொழி தாய்மொழியாக அமைதல் வேண்டும் என்பது பல காலமாகப் பல அறிஞர்கள் வெளியிட்டுவரும் கருத்து. இப்போது ஓர் அமைச்சர், அதிலும் மைய அரசின் அமைச்சர்—அறிவியல் பண்பாட்டுத்துறை அமைச்சரே கூறிவிட்டார் எனில் இக் கொள்கையின் உயர்வையும் உறுதிப்பாட்டினையும் நாம் விளக்கவும் வேண்டுமோ?

## (சு) பேராசிரியர் அன்பு கணபதி அவர்கட்குப் பாராட்டு விழா

சென்னைப் பச்சையப்பன் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியரும், மாநிலத் தமிழாசிரியர் கழகப் பொதுச் செயலாளருமான புலவர் அன்பு கணபதி அவர்கள், சென்னை எழுத்தாளர் சங்கத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டதைச் சிறப்பித்துப் போற்று முகத்தான், 19-5-61 இல் தஞ்சை இராமநாதன் செட்டியார் மன்றத்தில் ஒரு பாராட்டுவிழா நடைபெற்றது. டாக்டர் அ. சிதம்பரநாதன் செட்டியாரவர்கள் விழாவிற்குத் தலைமைதாங்கினார். குன்றக்குடி யடிகளார், பி. சுப்பிரமணிய பிள்ளை பி. ஏ., சி. கோதண்டபாணி M. A., B. O. L., T. முருகையன் M. A., அ. வெ. ரா. கிருஷ்ணசாமி ரெட்டியார், பேராசிரியா ஐயன்பெருமாள் கோனார், புலவர் ஏகாம்பர நாட்டார், புலவர்கள் ப. அரங்கசாமி, ந. இராமநாதன், மா. தியாகராசன், பேராசிரியர் க. அன்பழகன் M. A., M. L. A., ஆகியோர் பாராட்டுரை வழங்கினர்.

**குறிப்பு:** புலவர் அன்புகணபதி அவர்கட்கு எமது உளமார்ந்த வாழ்த்தினையும் பாராட்டையும் தெரிவித்துக் கொள்கிறோம். அவர்தம் தமிழ்ப்பணி நீடினிது சிறப்பதாக.

# மதிப்புரை

**"உலக உள்ளங்கள்—முதல்பாகம்"**

ஆசிரியர்: **ஜெகவீரபாண்டியனார்** அவர்கள். விலை ரூ. 3-00 கிடைக்குமிடம்: திருவள்ளுவர் நிலையம், மதுரை. இந்நூலாசிரியர் தனிப் பெரும் நாவலரும், பாவலரும், உரையாசிரியரும், பன்னூலாசிரியரும், போதகாசிரியரும், தன்மதிப்புமிக்காரும், வேட்பச சொல்லும் வித்த கரும், பெருந்திருவினரும் ஆவர். ஆங்கிலம், தமிழ், தெலுங்கு என்னும் மும்மொழி வல்லாரும் ஆவர்.

மேனாட்டுப் பன்மொழிப் பெரும்புலவர்கள் பலவேறிடங்களில், பல வேறு காலங்களில் ஆக்கியுள்ள பயனார் நூல்கள் பலவற்றினின்று அவ் வப்போது படித்துவரும் காலங்களில் மூவாயிரத்திற்கு மேற்பட்ட சீரிய கருத்துக்களை இந்நூலாசிரியரவர்கள் தொகுத்துள்ளனர். அவற்றால் தாமடைந்த இன்பநலத்தை உலகும் எய்தவேண்டுமென எண்ணிக் குறள் யாப்பால் அவற்றை யாத்துள்ளனர். பாக்கள் இனிய எளிய நடையும், திட்பநுட்பச் செறிவும், ஆற்றொழுக்கமும் அமைந்துள்ளன. கருத்துக் கள் திருத்தமும் தெளிவும் பொதுளப் பொலிந்திலங்குகின்றன. முதற் பாகமாகிய இந்நூலின்கண் 832 குறட்பாக்கள் வெளிவந்துள்ளன. இக் குறட்பாக்கள் வலப்பக்கத்திலும், அவ்வவற்றிற் குரிய ஆங்கிலத்தொடர் கள் இடப்பக்கத்துமாக அமைந்துள்ளன.

இந்நூல் ஆங்கிலம் தமிழ் ஆகிய இரு மொழியும் நன்கு கற்பாரும் கற்பிப்பாரும், கற்றுவல்லாரும், மொழிபெயர்ப்பாளரும் ஆகியபலருக்கும் பெருந்துணை புரியும். அம்மட்டுமன்றி இந்நூல் யாப்பா னமைந்திருப்ப தால் நெட்டுருப் பண்ணுவார்க்குப் பெருந்துணை புரியும் என்பதில் எட் டுணையும் எவர்க்கு ஐயம் எழுவதற்கின்று. மேலும் தமிழ்யாப்பு நடையில் பெருநூல்கள் வெளிவரவும் பெருந்துணையாகும். பல்கலைக்கழகத்தார் இந்நூலினை இடைக்கலை வகுப்புக்குத் துணைப்பாடமாக வைப்பதற்கும் ஏற்புடையதாகும். இந்நூலினை வாங்கும் வாயிலாக இரண்டாம் பாகமும் விரைவில் வெளிவரத் துணைபுரிவார்களாக.

**"ஆலய விக்ரக நிர்மாண ஆயாதி நிர்மாண ஆயாதி சிற்ப இரகசியம்"**

ஆசிரியர்: திருப்போரூர்ப் பரம்பரைச் சிற்பக்கலைஞர் ஸ்தபதி **பா. கணேசமூர்த்தி** அவர்கள். விலை ரூபா. 4-0-0 கிடைக்குமிடம்: மூர்த்தி சில்பக்கலாசாலை, 1-54, வால்டாக்ஸ் ரோடு சென்னை-3.

இந்நூல் உலகனைத்தும் வியக்கும் தமிழகச் சிற்பக்கலையினை மிகவும் விளக்கமாகவும் தெளிவாகவும் எடுத்துக் கூறுகின்றது. இதுகாறும் நம் தமிழ் முன்னோர்களால் தொன்மையில் தமிழில் யாக்கப்பட்டுள்ள சிற்பக் கலைகளைப் பலநாட்டுக்கும் பயன்பெறும் பொருட்டு இடையே நம்மவர்கள் வடமொழியில் யாத்துவைத்துள்ளனர். அந்நூல்களை நம் தபதியவர்கள் நன்கு கற்று மீண்டும் தமிழில் பெயர்த்துள்ளனர். இவ்வாசிரியர் அச் சிற்பக்கலைத் திருப்பணியில் கைதேர்ந்தவராயும், இளமை தொட்டு நெடு கலும் செய்துகொண்டு வருகின்றவராயும், நூல்வழியாக உலகினுக்கு உணர்த்த வேண்டுமென்னும் ஆர்வமிக்கவராயும், தெய்வ வழிபாட்டின ராயும் விளங்குகின்றமையால் இந்நூல். நனிமிகச் சிறந்து காணப்படு

இதன்கண் ஆசிரியரவர்களால் வணக்கப் பாக்கள் பலவும் எளிய ...'ய முறையில் யாக்கப்பட்டுள்ளன. விளக்க உரைநடைகளும் செவ்விய முறையில் காணப்படுகின்றன. திருக்கோவில் திருக்கோபுரமும், திருவுருவம் முதலியவற்றின் அமைப்பு முறைகளும் அவ்வவற்றை விளக்கும் படங்களும் பல காணப்படுகின்றன. இருபத்து மூன்றுவகையான கையடையாளங்கள் படத்துடனும் விளக்கத்துடனும் காணப்

கணபதி யுருவம் 16, ஈசுவரத் திருவுருவங்கள் 64, சுப்பிரமணியர் அம்சம் 16, இவைகளின் அமைப்பும் தியானப்பாட்டுகளும் காணப்படுகின்றன. விஷ்ணு அம்சம் பத்தின் வரலாறுகளும் காணப்படுகின்றன. அறுபான்மும்மை நாயன்மார்களின் திருவுருவ அமைப்புக்களும் வரலாற்றுச் சுருக்கமும் காணப்படுகின்றன. வீரபத்திர அம்சம் எட்டு, நவக்கிரகம் முதலியனவும்; திருவுருவம் நாட்டல், குடமுழுக்கு முதலியனவும் பிறவும் விளக்கப்பட்டுள்ளன. மொத்தம் 104 பெருந்தலைப்புகளுள்ளன. அழகிய பதிப்பு. இத்தகைய சீரிய நூல் தாய்மொழியின்கண் அமைந்திருப்பதால் இது சிறப்பாகச் சிற்பக் கலைவல்லார் அனைவர்க்கும் பெரும் பயன் தருவதொன்றாகும்.

ல ாரு சைவ வைணவத் திருக்கோயிலிலும் இன்றியமையாது என்றும் இருக்கவேண்டிய தொன்றாகும். திருமடங்கள், அருச்சகர்கள், திருக்கோவில் மேற்பார்வையாளர், கொண்டுநடத்துவோர், சமய அன்பர்கள், செந்நெறிச் செல்வர்கள் முதலிய யாவர்களும் இதனை வாங்கியும் வாங்குவித்தும் நன்மை எய்துவார்களாக.

**"திருக்குறள் உரை விளக்கம்"**

[ஆசிரியர்: வித்துவான் நெல்லை, **க. சுப்பிரமணியன்** பி.ஏ. அவர்களாவர், பேரன்புருக் உயர்நிலைப்பள்ளி-சுரண்டை. இதன் விலை 40 காசு கிடைக்குமிடம் 'சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்'. அஞ்சற் பெட்டி எண் 85.]

இந்நூல் புதிய பாடத் திட்டத்தில் எட்டாம் வகுப்புக்கென்று குறிக்கப்பட்டுள்ள திருக்குறள் எண்பதும் செவ்விய உரையும் கொண்டு திகழ்கின்றது. வேண்டுமிடங்களில் இன்றியமையாத விளக்கங்களும், இலக்கணக் குறிப்புக்களும் காணப்படுகின்றன. சொற்பொருளுரையாக அமைந்திருப்பதால் மாணவர்கள் எளிதாகக் கற்றுக்கொள்வதற்கு மிகவும் ஏற்புடையதாகும். எளிய, இனிய, தெளிவான நல்லுரை. எல்லோரும் வாங்கிப் பயன்பெறுக.

திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக்
கழகத்திற்காக, சென்னை, 2-140, பிராட்வே,
அப்பர் அச்சகத்தில், திரு. வ. சுப்பையா அவர்களால்
அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர்: வ. சுப்பையா.



தேசிய பௌதிக ஆய்வுக்கூட இயக்குநர்

**பத்மபூஷண், டாக்டர், கே. எஸ். கிருட்டிணன்,**

D.Sc. (Madras) D.Sc. (Allahabad, Delhi, Lucknow, Calcutta)

LL.D., F.R.S. (London)

தோற்றம் : 4–12–1898 ஒடுக்கம் : 13–6–1961




| சிலம்பு ௩௫ | திருவள்ளுவர் ஆண்டு ௧௯௯௨, ஆனி<br>ஜூலை, 1961 | பரல் ௧௧ |
| --- | --- | --- |

டாக்டர் கே. எஸ். கிருட்டிணன் அவர்கள்

# இறையடி சேர்தல்

டாக்டர் கிருட்டிணன் அவர்கள் அளப்பரும் அறிவியற் றுறையின் வளப்பஞ்சால் பெருமேதையராவர். அறிவியற் றுறையை அண்மினூர் பலருள்ளும் பெரும்பான்மையோர் மொழியியற் புலமையும், பற்றும், தெய்வநூலாய்வும், வழிபாடும் உள்ளாராய்த் திகழ்வதரிது. நம் கிருட்டிணன் அவர்கள் இவற்றின் கண்ணும் அறிவியற்றுறையை யொத்து மிக்க ஈடுபாடுடையராய்ப் புலமையும் போற்றுதலும் கைக்கொண்டு வாழ்ந்து வந்தனரென்பதனை எண்ணுந்தோறும் எண்ணுந்தோறும் யாவர்க்கும் நண்ணும் வியப்பு. அதற்குச் சிறந்த காரணம் தமிழ்நாட்டின் பண்பும் தாய்மொழியாம் தமிழ்மொழியின் மாண்புமேயாம். தமிழ்நாட்டின் பண்பு பொதுமைத் தெய்வநாட்டமிக்கிருத்தல். தமிழ்மொழியின் மாண்பு அத்தகைய தெய்வத்திறமும் அதற்குப் புரியும் வழிபாடும், கிளர்ந்தெடுத்தோதும் சிறப்பாகும். செந்தமிழ் நூல்களனைத்தும் தெய்வத்தை முன்வைத்து ஓதப்படுவது மட்டுமன்றி இடமிடந்தோறும் தெய்வ அருளாற்றல்களின் பெருந்துணையினாலேயே அனைத்தும் நிகழ்கின்றன என்னும் உண்மையினையும் வலியுறுத்திச் செல்லும் வாய்மைய.

டாக்டர் அவர்களின் வரலாறு சுருக்கமாக அடியில் குறிக்கப்படும். அவர்கள் புதுத்தில்லியில் தம் வளமனையில் 1961 ஜூன் 13 ஆம் நாள் நள்ளிரவு வரையில் வீட்டில் அனைவருடனும் வழக்கம்போல் உளமகிழ்வாய் உரையாடிக் கொண்டிருந்தனர். எதிர்பாராதவண்ணம் திடும்மென நெஞ்சுவலிக்கின்றதென்றனர்.

உடனே மிக்க விரைவாகத் தக்கமருத்துவர் அழைக்கப்பட்டனர். அம்மருத்துவர் (டாக்டர்) தம் வளமனையை வந்தடைவதன்முன் டாக்டர் அவர்தம் ஆவி துன்புறலேதுமின்றிப் பிரிந்தது.

இங்ஙனம் துன்புறல் ஏதுமின்றி ஆவி பிரிந்ததனையுன்னின் நல்வினையினை நாடொறும் செய்துபோந்த நற்புண்ணியத்தாலும், தெய்வ வழிபாட்டு நற்றவத்தாலும், செந்தமிழ்த் தெய்வமறை ஓதுவதாலும், 'இன்பம் நம்மை ஏத்துநாள்களென்பாரும்' என்னும் தெய்வமறையின் வண்ணம் ஓவாது ஏத்துதலாலும், ஏத்தியவாறு தொழுதலாலும், தோய்ந்தவுளத்து அழுந்த எண்ணலாலும் ஆகிய நற்பண்பினர் நம் டாக்டர் என்பது புலனும். மேலும் நோய்த்துன்பமின்றி அடியடைய
மாவர். விண்ணப்பப் பயனுண்மை வருமாறு காண்க :

" நோயுற் றடாரமல் நொந்துமனம் வாடாமற்
பாயிற் கிடவாமற் பாவியேன்—காயத்தை
ஓர்நொடிக்குள் நீக்கியெனை யொண்போரூர் ஐயாநின்
சீரடிக்கீழ் வைப்பாய் தெரிந்து." —திருப்போரூர்-கஉ. மாலை-கூஉ.

குடும்பத்தாரும், நண்பர்களும், பிறரும் சொல்லொணு இன்னல் எய்தினர். யாமும் பொறுக்கலாற்ருப் பெருந்துன்புறுகின்ரேம். அவர் தம் இழப்பு நாட்டிற்கும், நற்றமிழுக்கும், நன்னெறிக்கும் அறிவியற்றுறைக்கும் எந்நாளும் ஈடுசெயவொண்ணுப் பேரிழப்பேயாம். அவர்தம் அடிச்சுவட்டைப் பின்பற்றித் தொண்டாற்ற அவர்தம் அரிய் தொடர்பினரும் அத்துறையில் பயில்வோரும் முன்வருதல் வேண்டும். டாக்டர் அவர்தம் ஆவி மாக்கடல்வண்ணன் அடியினை எய்தி இன்புறுமாக. அவர்தம் குடும்பத்தாருக்குக் கழகத்தாரின் கையறுநிலைப்பரிவினைக் கூறி ஆறுதல் செய்கின்ரேம். டாக்டர் அவர்களுக்கு இப்பொழுது அகவை அறுபத்துநான்காகின்றது.

உலகம்போற்றும் ஒப்பில் ஒருவராம் டாக்டர் கிருட்டிணன் பொன்னுடல்மீது குடியரசுத் தலைவர் டாக்டர் பிரசாத், தலைமை அமைச்சர் நேரு, விஞ்ஞானம், தொழில் நுணுக்க ஆராய்ச்சிக் கழகம், விஞ்ஞானம் மற்றும் பண்பாட்டு அமைச்சுத்துறை, இந்திய அணுசக்திக்குழுத் தலைவர் டாக்டர் ஹோமிபாபா ஆகியோர் சார்பில் நறுமலர் மாலைகள் அணியப்பட்டன.

குடியரசுத் துணைத்தலைவர் டாக்டர் இராதாகிருட்டிணன், உள்நாட்டமைச்சர் திரு. லால்பகதூர்சாத்திரி, திரு. கோபால் ரெட்டி, திரு. எம். எஸ். தாக்கர் முதலிய திரளான மக்கள் டாக்டர் கிருட்டிணனது இல்லத்துக்கு வந்து தங்கள் இறுதி வணக்கத்தைச் செலுத்தினர்.

### இரங்கலுரைகள்

தலைமையமைச்சர் நேரு, குடியரசுத் துணைத்தலைவர் டாக்டர் இராதாகிருட்டிணன், இராசகோபாலாச்சாரியார் முதலியவர்களின் பொருள் பொதிந்த உருக்கமான இரங்கலுரைகள் டாக்டர் கிருட்டிணன் அவர்களின் நுண்ணறிவையும், பேராற்றலையும், பெருந்தொண்டையும், அளவிடற்கரிய பெருமதிப்பினையும் நன்கு புலப்படுத்துவனவாயுள்ளன.

### எரியூட்டல்

டாக்டர் கிருட்டிணன் அவர்களின் பொன்னுடல் பகல் பதினொரு மணிக்கு எரியூட்டப்பட்டது.

குடியரசுத் வா டாக்டர் எஸ். இராதாகிருட்டிணன் அவர்களது இரங்க சுருக்கம் வருமாறு:

“ தலைசிறந்த விஞ்ஞானி ஒருவரை நாம் இழந்துவிட்டோம். அவர் விஞ்ஞானமும் சமயமும் இணைந்த ஒரு வடிவம். தமிழிலக்கியங்களில் ஆழ்ந்த புலமைபெற்றவர். அவரது மறைவினால் ஏற்பட்ட வெற்றிடத்தை நிரப்புவது மிகவும் கடினம்.”

இராசகோபாலாச்சாரியாரவர்களின் இரங்கலுரைச் சுருக்கம்:

“ விஞ்ஞானத்துறையில் எந்த அளவுக்குத் தலைசிறந்து விளங்கினாரோ, அந்த அளவுக்கு ஆழ்ந்த நூற்புலமையும் தமிழ், வடமொழி, வைணவ சமய இலக்கியங்களில் பெரிதும் ஈடுபாடு கொண்டு திகழ்ந்தனர்.”

### வாழ்க்கை வரலாறு

டாக்டர் கிருட்டிணன் அவர்கள் இராமநாதபுரம் மாவட்டத்தில் கரியமாணிக்கத்தைச் சார்ந்த வத்தராயிருப்பு என்னும் நல்லூரில் நற்குடும்பத்தில் நற்றவப்பேற்றால் 1898 ஆம் ஆண்டு திசம்பர்த் திங்கள் 4 ஆம் நாள் தோன்றினர். அவர்தம் முழுப்பெயர் கரியமாணிக்கம் சீனிவாசன் கிருட்டிணன் என்பதாகும். இளமையில் வத்தராயிருப்பிலும் ஸ்ரீவில்லிப்புத்தூரிலும் கல்வி கற்றனர். பின்பு மதுரை அமெரிக்கன் கல்லூரியிற் சார்ந்து கற்றனர். அதன்மேல் சென்னைக் கிறித்துவக் கல்லூரியைச் சார்ந்து கல்வி பயின்றார்.

### பணி

சென்னைக் கிறித்துவக் கல்லூரியில் சில ஆண்டுகள் விளக்குநராகப் பணியாற்றினர். பின்பு கல்கத்தாப் பல்கலைக் கழகம்

சென்று ஆங்குப் பேராசிரியராகப் பணிபுரிந்துவந்த டாக்டர் சி. வி. இராமனிடம் பௌதிக விஞ்ஞானம் கற்றார். 1928 ஆம் ஆண்டில் டாக்காப் பல்கலைக்கழகத்தில் ஆராய்ச்சியாளராகச் சேர்ந்தார். அங்கு 1933 ஆம் ஆண்டு வரை பௌதிக ஆராய்ச்சி செய்துவந்தார். அதன்பின் 'இந்திய விஞ்ஞானக் கழகத்தின்' பேராசிரியப் பணியை ஏற்றுப் பாங்குற நடத்தினர்.

அயல்நாட்டினர் அளித்த அரும்பெரும் பட்டங்கள்

1940 ஆம் ஆண்டில் பிரிட்டனின் எப். ஆர். எஸ். என்ற தலைசிறந்த விருது வழங்கப்பட்டது. 1955 ஆம் ஆண்டில் அமெரிக்க விஞ்ஞானக் கழகத்தின் ஆண்டுவிழா மாநாடு நடந்தபோது இந்தியாவின் வகையாளாக (பிரதிநிதி) டாக்டர் கிருட்டிணனைச் சிறப்பு விருந்தினராக அமெரிக்கா அழைத்திருந்தது. இத்தகைய தனிச்சிறப்பு இதன்முன்பெல்லாம் இலண்டன் விஞ்ஞானத் தலைவர்க்கும் சுவீடன் விஞ்ஞானத் தலைவருக்கு மட்டுமே கொடுத்துவந்தது. இப்பொழுது முதன்முறையாக நம்மிந்திய நாட்டுக்கு டாக்டர் கிருட்டிணன், அவர்தம் பேரறிவும், பேராற்றலும், பேருழைப்பும் கொண்டுவருமாறுசெய்த பெரும்புகழ் நீங்கா அரும்புகழே.

1956 ஆம் ஆண்டில் அமெரிக்கத் தேசிய விஞ்ஞானக் கழகத்தின் அயல்நாட்டு வகையாளாக டாக்டர் கிருட்டிணன் சேர்த்துக் கொள்ளப்பட்டார். இக்கழகத்தில் மொத்தம் 60 அயல் நாட்டு வகையாளர் உளர்.

முதற்பெரும் பரிசு

இவ்வாண்டு (1961) மார்ச்சு மாதத்தில் தலைசிறந்த விஞ்ஞான ஆராய்ச்சிப்பணிக்கான வெண்பொன் 10,000 மதிப்புள்ள முதல் 'பட்நாகர் பரிசை' டாக்டர் கிருட்டிணனுக்கு நேரு வழங்கினார்.

பொதுப்பணி

பல அறிவியற்றுறை நிறுவனங்களிலும் கழகங்களிலும் உறுப்பினராகவும் இருந்து வேண்டுவன புரிந்துவந்தனர். 1955 ஆம் ஆண்டில் ஐ. நா. கல்வி, விஞ்ஞானம், பண்பாட்டமைப்புக்களின் விஞ்ஞான ஆராய்ச்சிக்குழுவின் துணைத்தலைவராகப் பணியாற்றினர். 1955 ஆம் ஆண்டிலிருந்து உலக விஞ்ஞானச் சங்கங்களின் குழுவின் துணைத்தலைவராகப் பணியாற்றி வந்தனர். தேசியப் பௌதிகப் பரிசோதனைச்சாலையின் இயக்குநராக இருந்து வந்தனர். இந்திய அணுவாற்றற் குழுவின் தனிப்பேருறுப்பினராகவும் திகழ்ந்தனர். தேசிய பௌதிக ஆய்வுக்கழகம் 1947 ஆம்

ஆண்டில் தொடங்கப்பட்டது. அந்நாள்தொட்டு அதன் இயக்குநராகவிருந்து வேண்டுவ எழிலுற இயற்றிவந்தனர். விஞ்ஞானத்தில் சிறந்த சேவை செய்ததற்காக இந்தியப் பேரரசினர் இவருக்குப் '**பத்மபூஷண்**' என்னும் பெரும் பட்டத்தினை நல்கிப் பாராட்டினர்.

நூல்கள்

சர் சி. வி. இராமனுக்கு நோபல் பரிசைத் தேடித் தந்த 'ராமன் கொள்கையை' உருவாக்கியதில் டாக்டர் கிருட்டிணனுக்கும் பங்குண்டென்ப.

'காந்தம், மின்இயல், பௌதிகம், திடப்பொருள், இரசாயனம்' முதலியன பற்றிச் சிறந்த பல நூல்கள் இயற்றி வெளியிட்டுள்ளார்.

அருந்தமிழ்ப் பணி

புதுத் தில்லியிலுள்ள பண்பாடு, இலக்கியம் ஆகியவற்றின் வளர்ச்சி கருதிப் பணியாற்றிவரும் பல்வேறு கழகங்களில் இவர் பெரும் பங்குகொண்டிருந்தனர். இவர் சிறந்த தமிழறிஞர். சமக்கிருதமொழியிலும் இந்துசமய இலக்கியங்களிலும் ஆழ்ந்த புலமை உண்டு. கம்பராமாயணம் திருக்குறள் இரண்டும் அவர்க்கிரு கண்களே. தில்லித் தமிழ்ச் சங்கத்தின் தலைவராகவும் இருந்துவந்தனர். ஆழ்வார் பிரபந்தங்களில் மிகுந்த ஈடுபாடு கொண்டிருந்தனர். தில்லியிலுள்ள வைணவசித்தாந்த சபையின் தலைவராகவும் இருந்தனர்.

இவர்தம் அருந்தமிழ்ப் பற்றைப் பற்றி டாக்டர் ஏ. எல். முதலியாரவர்கள் நவில்வது வருமாறு :

"டாக்டர் கிருட்டிணனுக்குத் நமது தாய்மொழியான தமிழினிடம் இருந்த பற்றும் பத்தியும் அளவிடற்கரியது. தமிழ் மொழி வளர்ச்சிக்கு அவர் செய்த தொண்டு சொல்லுந்தரமன்று."

டாக்டர் கிருட்டிணன் அரிய விஞ்ஞானக் கருத்துக்களைத் தமிழில் கற்பிக்க முடியுமென்று துணிந்து கூறி வற்புறுத்தினர். அம்மட்டுமன்று; அதனை நடைமுறையில் ஆற்றியுங்காட்டுமுறையாகச் சென்னை மாநிலக் கல்லூரியில் ஒருமுறை விஞ்ஞானத்தைப் பொருளாக எடுத்துக்கொண்டு தமிழில் சொற்பொழிவாற்றியுள்ளனர். அதனைக்கேட் டின்புற்றோரனைவரும் நம் தமிழின் மேன்மையும் ஆற்றலும் இத்துணைத்தென அளவிடற் கரியதெனப் பாராட்டினர். இவற்றை வெளிப்படுத்திய கிருட்டிணனவர்களை நனிமிகப் போற்றிப் புகழ்ந்தனர்.

அவர்தம் தாய்மொழியாந் தமிழினிடம் அவர்கொண்டுள்ள அளவிறந்த ஆர்வநிறை பற்றுக்கு எடுத்துக்காட்டாகச் சென்னைக்கண் கழகத்தாரால் நடத்தப்பட்டுவரும் "**மறைமலையடிகள் நூல் நிலையத்தை**" இரண்டாண்டுகளுக்கு முன் பார்வையிடும் வாய்ப்பு நேர்ந்தது. மிக்க அன்பார்வங்களுடன் வந்து உவகையுடன் உற்று நோக்கி மகிழ்வுகொண்டனர். பார்வையாளர் ஏட்டில் தூய புலமை நிறைந்த தமிழில் தம் அருங் கருத்தையும் வரைந்துள்ளனர். அதுவருமாறு:

"மறைமலையடிகளின் நூல் நிலையத்தில் சிறிது நேரமாவது இருந்து அங்கிருக்கும் நூல்களைப் பார்த்து மகிழும்படியான பாக்கியம் கிடைத்தது. அதற்கு எனது நன்றி. அந்நிலையத்தில் ஒவ்வொரு புத்தகமும் மறைமலையடிகளுடைய தமிழார்வத்தையும், அவர் தமிழுக்குச் செய்த பெருந்தொண்டையும் நினைப்பூட்டுகிறது. இவ்வாசக சாலை தமிழ்வளர்ச்சிக்குப் பேருதவி புரிந்துவருவது போற்றத்தக்கது. இந்நூல் நிலையம் நீடூழி வாழ்க."

(ஒப்பம்) க. ஸ்ரீ. கிருஷ்ணன்
24-9-59

**K. S. Krishnan,**
*Director*
National Physics Laboratory,
New Delhi.

இத்தகைய உண்மைத் தமிழார்வமுள்ள வண்மை மிகு டாக்டர் கிருட்டிணன் அவர்கள் இன்னும் பல்லாண்டு வாழ்ந்திருப் பரேல் அறிவியல் துறைக்கு மட்டுமன்றி அருந்தமிழ் மொழிக்கும் ஆக்கம் பலவும் உண்டாகி அவை உயர்ந்து விளங்கும் என்பது உறுதி. நமக்கெலாம் நற்பேறின்மையால் எதிர்பாராத வண்ணம் இறப்பு நிகழ்ந்துவிட்டது. எனினும் அவர்கள் தமிழின்கண் அறிவியற்றுறை விளக்கத்திற்கு வேண்டும் சொற்களும், அமைத்தற்காம் ஆற்றலும் உள்ளன என்பதை நன்கு வெளிப்படுத்தியுள்ளனர். அவற்றை அடிப்படையாகக் கொண்டு ஏனைப் பலதுறைப் பேரறிஞர்களும் தமிழாக்கம் புரிவார்களாக. கிருட்டிணனாரின் பேராற்றல் பெருந்துணை புரியுமாக.

"செந்தமிழும் தெய்வமறைத் தேவழிபா டும்போற்றி
வந்த கிருட்டிணனார் வையமிசை—எந்தவகை
நற்புகழும் பெற்றுநல் லார்வகுத்த நாரணன்ருள்
அற்புளத்தாற் சேர்ந்தார் அறி"

திருவருள் துணை

# வரிப்பாட்டுக்கள்

## மறைமலையடிகளார் பாடியவை

இசை : (பைரவி)  தரவு கொச்சகக் கலிப்பா

வளம்பழுத்த விளைநிலமே விழிதிரும்பும் வழியெல்லாம்
குளம்பெருக்கும் அருவிவரும் குன்றுகளே குலவுவன
இளம்பருவச் சோலைகளே கருங்காடே எங்குமாய்
உளம்பழுத்த மூதறிஞர் உயிராகும் உனக்குஅன்னாய் ! (௧)

விரிந்தபெரு ஞாலத்தில் வேறுபல தேயத்தில்
பிரிந்திருந்த மக்களெல்லாம் பேதையராய் இருந்தஅந்நாள்
தெரிந்துபல கலைகளெல்லாம் தெளிவாக மிகவிளக்கி
வரிந்தனர்நின் மகார்எனில்உன் வளர்பெருமை சொலல்அரிதே.

அலையுலவும் வங்காளக் குடாக்கடலின் அடிக்கிடக்கும்
விலைவரம்பு காணாத முழுமுத்தும் மேலுயர்ந்த
மலையருவி கொழித்துவரும் மணிகளொடு பசும்பொன்னும்
தலையணியப் பிறநாட்டார் தந்தனைஇந்தி யமாதே. (௩)

முன்னாளில் வாணிகத்தில் முதன்மைபெறு யவனர்களும்
தென்னாட்டில் உவரியெனும் துறைமுகத்தில் திரண்டுவந்து
வன்னமயில் நறுஞ்சாந்தும் மணியானை அணிமருப்பும்
இன்னபல அருஞ்சரக்கும் ஏந்துகவென்று ஈந்தனையே. (௪)

தொழில்நுட்பம் மிகச்சிறந்த துகளறுபட்டு ஆடைகளும்
கொழும்பருத்தி இலவம்பஞ்சு எலிமயிரில் கோவைசெய்து
செழும்பாலின் நுரையெனவும் திகழ்பாம்பின் உரியெனவும்
ஒழுங்காகச் சமைத்தஉடை உலகமெலாம் நிலவியதே. (௫)

உலகிற்கோர் விளக்கனையாய் எம்முயிர்க்கோர் உயிரனையாய்
பலவாறு நின்புகழ்மை பாரித்துஎன் சிற்றறிவாற்
சொலவருமோ தொலையாத வளமுடையாய் தொன்றுதொட
நலமெல்லாம் பிறர்கவர இந்நாளில் நாணினையே. (௬)

அந்நாணம் இனியொழிய நின்மகார் அறிந்தெழுந்து
அந்நாளில் விரிந்தபல கைத்தொழிலும் முதிர்ச்சியுற
மன்னிமிக முயல்கின்றார் மனக்கவலை நீங்குற்றேம்
இன்னும்இவர் சிறக்கவென ஏத்திமிக வாழ்த்துதுமே. (௭)

---

1. சிறந்த பண்டைத் தமிழ் நாகரிகத்தைத் தமிழிந்திய மாது
ப் ப [illegible] கூறிய பாக்கள்.

உ

திருச்சிற்றம்பலம்

# கோட்டன் புகழ்[1]

## மறைமலையடிகளார் பாடியவை

இசை : (ஆரபி) கலித்துறை.

திருவார் மேலைத் திக்குறை மன்னர் செய்கோட்டை
ஒருபால் மேய நன்னகர் மன்னார் உறைவீரால்
தருபால் வேண்டுந் தன்மக விற்குத் தாய்செய்யும்
பெருவார் அன்பிற் பின்னையும் மிக்க பெரியீரே. (க)

பிறைசேர் சென்னித் தந்தைய மர்ந்த பெருமைத்தாய்
நறைசேர் பாலின் நற்றடம் மேய நன்மைத்தாய்
அறைசேர் வன்கே தீச்சுர ஞ் செல்லும் அடியார்க்கு
முறைசேர் மன்னார் முன்னிருந் தின்பம் முயல்வீரால். (உ)

முன்நின் பின்னோன் வள்ளியைக் கூட முயன்றாற்போல்
பின்நின் அன்பன் அப்பெயர் பெற்றான் பேரின்பம்
துன்னல் வேண்டிச் சூழ்கன வின்வெண் களிறாக
மின்னி மன்னார் யாப்புற நின்றீர் மேதக்கீர்! (ங)

ஓமென் சொல்லின் உட்பொரு ளான உயர்வெல்லாம்
தூமென் யானைத் தொன்முகங் காட்டிச் சொற்றீரால்
காமன் கிள்ளை நாகண வாய்ப்புள் கனிகோதிப்
பாமுன் சோலை சூழ்வர மன்னார் பயில்வீரே. (ச)

அடியார்க் கேற்ற பல்பரி சாலும் அங்கங்கே
குடியாய்க் கோயில் கொண்டனிர் கோடோன் றுடையீரே
படியார் சீரான் அன்பொடு செய்த பைங்கோயில்
மடியா தென்றும் மன்னினிர் மன்னார் மகிழ்ந்தீரே. (ரு)

ஒழியா துள்கி யுள்ளுரு குந்நல் அடியார்க்குப்
பழியார் செய்யும் அல்லல றுக்கும் பண்பீரே
கழியார் தோணி பல்பொருள் கூட்டுங் கரைதன்னால்
அழியாச் செல்வம் மல்கிடு மன்னார் அமர்ந்தீரே. (சா)

---

1. "இலங்கைத் தீவின் அருகேயுள்ள கோட்டை மன்னாரில் திருவானைக் கூடத்தின்கண் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் சித்திவிநாயகப் பெருமான்மீது மறைத்திருவாளர் மறைமலை அடிகள் பாடியவை"

அநதண உளளத தநதணா ஓதும் மறையார்ப்பும்
செந்தண் நால்வர் தீந்தமிழ் வேதத் தெளிபண்ணும்
சந்தம் ஓவா தென்றுமி சைக்குந் தகைமன்னர்
வந்தங் குள்ள வாய்மைய ருள்சால் வழக்கன்றோ. (௭)

உள்ளத் தூறும் அன்புறு தொண்டர்க் குருகாமல்
கள்ளத் தீது செய்திடுங் கீழ்கள் கலைதேய்ந்து
மெள்ளச் சாயுங் கார்மதி போல மெலிந்தல்லல்
கொள்ளச் செய்து நீர்மலி மன்னர் குடிகொண்டீர். (௮)

அருட்கண் கொண்டே யாமென தற்ற அடியார்கள்
தெருட்கண் ஓங்கித் தெண்பிறை யென்னத் திகழ்வெய்தப்
பொருட்கள் நல்கித் தீம்புனல் ஊறும் புகழ்மன்னர்
இருட்கள் நீங்க எல்லவன் என்ன இருந்தீரே. (௯)

ஒளியே காணும் ஓமெனும் வண்ண உருவத்தை
எளியேம் உய்ய இன்னிசை மன்னர் எடுத்தீரால்
களியார் தேனே கற்பகம் நாணக் கமழ்கின்ற
அளியார் தூய பூங்கழல் யானை அருட்கன்றே. (௧௦)

இமிழ்நீர் மன்னர் யானையின் கூடத் தெமக்காகச்
சிமிழார்ந் தல்குஞ் செல்வரை வாழ்த்திச் சீர்நாகைத்
தமிழார் ஊரிற் சான்றவன் வேதா சலன்சொன்ன
அமிழ்தார் பத்துங் கற்பவர் நற்பால் அடைவாரே. (௧௧)

---

## சார்லசு டிக்கன்சு
## 150 ஆவது பிறந்த நாள்விழா

ஆங்கிலத்தில் புகழ்பெற்ற நாவலாசிரியரான சார்லசு டிக்கன்சுவின் 150 ஆவது பிறந்த நாள் விழாவைக் கொண்டாட வேண்டுமென டிக்கன்சு சார்புக் குழுவினர் உலக முழுமைக்கும் ஒரு வேண்டுகோள் விடுத்துள்ளனர். இந்த விழா அடுத்த ஆண்டில் நடைபெறும்.

டிக்கன்சு சார்புக்குழுவிற்கு இந்தியா உட்பட 60 கிளைகள் உள்ளன. இந்தியா, பிரிட்டன், ஆஸ்திரேலியா, கானடா, நியூசிலாந்து, தென்னாப்பிரிக்கா, அமெரிக்க ஐக்கிய நாடுகள், நெதர்லாந்து ஆகிய நாடுகளிலுள்ள இக்குழு உறுப்பினர் கூடி இவ்விழா முயற்சியினை மேற்கொண்டுள்ளனர். அத்துடன் இவர்கள் டிக்கன்சின் நூல்களைப் பயிலவும் பரப்பவும் முயன்று வருகின்றனர்.

மேலும் டிக்கன்சு வாழ்ந்த இல்லத்தையும், அவர் புழங்கிய பொருட்களையும் பாதுகாத்து வைக்கவும், அவர் விரும்பிய அறங்களை மேற்[illegible]டமிட்டு வருகின்றனர்.

ஓம்

# உலகன்னையாகிய உமையம்மையார் புகழ்[1]

## மறைமலையடிகளார் பாடியவை

இசை : தோடி (இசை முகாரி) (ஆரபி)

செழும் புனலுங் கொழும் பழமும்
எழும்பொதியக் குளிர் வளியும்
தழும்பசிய பயிர் வளமும்
கெழும்பொழிலே வாழி அன்னாய்! (க)

நிலாவிளங்கும் இராப்பொழுதால் மகிழ்ச்சிதரும் நீள்நிலமே
குலாவுமுகை அவிழ்க்குமலர் உலாவும்மரம் நிறைநிலமே
கலாவுநகை தருநிலமே கனிமதுர மொழிநிலமே
இலாநலனும் விழைபொருளும் விளைநிலமே வாழிஅன்னாய்! (உ)

ஏழு கோடிபெயர் இடுமொலி கலகல அதிரவே
வாழு மீரெழு கோடிகரம் வாளொடும் விதிரவே
சூழும் அன்னைநினை வலிவில ளென்றுபிறர் சொல்வரோ
தாழு வேழுனை மீதுகிளர் ஆண்மைமிகு செல்வியே!
பாழ்படப் பகைவர்படை சாடுவாய், யாம்
வாழ்விடப் புரிகுவாய் வாழிஅன்னாய்! (௩)

கலைப்பொருள் நீயே கருதறம் நீயே
நிலைப்படு நெஞ்சமும் நீயே சொலப்படும்
உயிர்க்களன் நீயே உடம்பகத் தியங்கும்
உயிர்ப்பும் நீயே உலம்பொரு தோளின்
வன்பும் நீயே வணங்கு மெம்முள்ளத்து
அன்பும் நீயே வாழி அன்னாய்! (ச)

"கோயில்தொறும் கோயில்தொறும் அருட்கோலங் கொண்டிருக்கும்
தாய்துர்க்கே தமியேம்நின் படிவமன்றே பரவுவதே;
பாய்படைகள் பதின்கரத்தும் பற்றுகின்ற தாய்துர்க்கே
சேயிதழ்த்தா மரைநிழல்வாழ் திருமகளு நீயன்றே;
மேயகலை விழுப்பொருள்கள் விளக்குமின்னும் நீயானால்
சேயேம்நின் திருவடிகள் வாழ்த்துவதும் சிறப்பாமே. (ரு)

அன்னாய் வாழியரும் பொன்னாள் வாழிஒப்பில்
மின்னாள் வாழிகனி நீரும்வாழி வந்தேமாதரம்
களங்கமிலா தினிதாகி வளம்பெறுநன் னகைதுலங்க
விளங்குபசுங் கதிர்முகம்எங் கண்கணும் அன்னாய்நின்
இளங்குமுத வாய்முகமெம் இன்னுணவாம் அன்னாய், வந்தேமாதரம்.

---

1. எவ்வகையாற்றலும் நலமும் வாழ்வும் திருவருளாற்றலால் எய்துமுண்மையும் அதன் பொருட்டு அவள் திருவடியைத் தொழும் செம்மையும் இதன்கண் நவிலப்பட்டன.

# செவ்வந்திப்பூவின் சிறப்பு[1]

## மறைமலையடிகளார் பாடியவை

[இசை: சங்கராபரணம் தரவு கொச்சகக் கலிப்பா]

விலங்கலினும் விலங்கல்சேர் படுகரினும் மிதந்துசெலும்
துலங்குபுய லெனவேயான் துணையின்றித் திரிந்தவழிப்
பொலன்வண்ணச் செவ்வந்திப் பூத்தொகுதி மரங்கீழும்
இலங்கேரி மருங்கும்உலாம் இனியவளி வீசுதொறும்
கலங்கிநனி யாடுதலைக் கதுமெனநான் கண்டனெனால். (க)

ஒளிபரந்த வானகத்தில் ஒளிர்ந்துமினும் உடுக்குலம்போல்
நளிமிகுந்த கடல்வளைவின் கரைநெடுக நனிநீண்டு
விளிவில்லா வரிசையுடன் மிகத்தொடர்ந்து விளங்கும்அவை
தெளிபதினா யிரக்கணக்காய்த் திகழ்தலையை மிகஅசைத்துக்
களிசிறந்து குனிப்பதையோர் கண்ணோக்கிற் கண்டனெனால். (உ)

குனிக்குமலர்ப் பக்கலிலே கடல்அலையுங் குனித்தனவே,
இனிக்குமலர் என்றாலும் இலங்கலையிற் சிறந்தனவே;
நுனிக்குமதிச் செம்புலவன் நுவன்றகளிக் கூட்டத்தில்
கனிக்குமனக் களிப்பின்றி யமர்குவது காணானே
தனிக்குமனத் தமியேனும் நோக்கின்மேல் நோக்கினனே. (ந)

கருதிமிக நோக்கிடினும் காட்சியென்பாற் கொணர்வித்த
இருநிதிய மேதென்ன யான்சிறிது மெண்ணிலனே
தருதுயர மனத்தோடு தனிக்காட்டில் மிசைக்கிடக்கும்
ஒருவனேன் அகத்திலவை தனிமைமகிழ் வொளிவீச
உருகுமனம் பலகாலும் உவந்தவற்றோ டாடினதே. (ச)

1. அழகு மென்மையும் அகமகிழ்வுறுத்தலும் மிகவுடைய மலர் களையுற்றுநோக்குவார் கவலை நீங்கப்பட்டு நல்வாழ்வுறுவர் என்னுங் குறிப்புக் காண்க.

# தமிழன்னை அம்மானை

வான், திரு. மா. கணபதி]

செப்பார் தனமுடையாள் செந்தமிழாம் எங்களன்னை
இப்பாரிற் பன்மொழியை ஈன்றதா யம்மானை
இப்பாரிற் பன்மொழியை ஈன்றதா யாமாகில்
துப்பார்க்குப் பாலருளும் தூயவளோ அம்மானை
முப்பாலும் ஈந்தருளும் மொய்குழலி அம்மானை. (௧)

பாலடிசி லுண்ணுநற் பைங்கிளியாந் தீந்தமிழ்த்தாய்
தாலடியி னற்றரணி தானளந்தாள் அம்மானை
தாலடியி னற்றரணி தானளந்தா ளாமாயின்
காலடி யிட்டதனைக் காட்டுவளோ அம்மானை
நாலடியி னுலதனை நாட்டுவள்காண் அம்மானை (௨)

உருவார் பலகலைதேர் ஒண்டமிழ்த்தாய் மண்மேல்
மருவார் பொழில்சூழ் மலர்க்கொடிகாண் அம்மானை
மருவார் பொழில்சூழ் மலர்க்கொடியே யாமாயின்
பெருகு நறுந்தேனைப் பெய்யுமோ அம்மானை
அருள்பெருகும் வாசகத்தேன் அளிக்குமே அம்மானை. (௩)

கூடலிலே வந்தருளும் குலவிளக்காம் பைந்தமிழ்த்தாய்
ஆடலிலே வல்ல அணங்குகாண் அம்மானை
ஆடலிலே வல்ல அணங்கவளே யாமாயின்
பாடகத்தோ டாடல் பயில்வாளோ அம்மானை
நாடகமா டிச்சிலம்பை நன்கிசைப்பாள் அம்மானை. (௪)

தென்னன் மடிவளர்ந்த செந்தமிழாம் பெண்ணரசி
மன்னுங் கலாபமொளிர் மாமயில்காண் அம்மானை
மன்னுங் கலாபமொளிர் மாமயிலே யாமாயின்
துன்னுங் கலாபமிடை தோன்றுமோ அம்மானை
மின்னுமணி மேகலையே மிளிர்ந்திடுங்காண் அம்மானை. (௫)

ஒல்காப் பெரும்புகழ்சேர் ஒண்டமிழ்த்தாய் மாநிலத்திற்
பல்காப் பியமொழிந்த பைந்தொடிகாண் அம்மானை
பல்காப் பியமொழிந்த பைந்தொடியே யாமாயின்
தொல்காப் பியமவளென் சொற்றனள்சொல் அம்மானை
தொல்காப் பியந்தானே சொற்றதவள் அம்மானை. (௬)

# உண்மை விளக்கம்

[செந்நாப் புலவர், திரு. அ. வரதநஞ்சைய பிள்ளை]

## நூன்முகம்

உலகில் வாழும் உயிர்க்குலங்கள் அனைத்தும் இன்பப்பேறொன்றனையே பெரிதும் அவாவி முயல்கின்றனவேனும் அவ்வின்பத்திற்கு மறுதலையாகிய துன்பச் சுழற்கண்ணே சுழன்று தவிக்கின்றனவா யுள்ளன. இதற்குக் காரணம், அவை தத்தம் கருத்தின் வண்ணம் இன்பம் அடைதற்கு இயலாவகையில் எதிர்ந்து தடுக்கும் தடைகள் மிகப்பலவாக இருத்தலேயாம். அத் தடைகள்தாம், இன்பம் வழங்கும் பொருளும் அதனை உவந்து நுகரும் பொருளும் நிலைபேறில்லாத இயல்பினவாகிய இளமை, யாக்கை, செல்வம் முதலியவற்றை யடைந்திருத்தலும், தவிர்க்கமுடியாத பிணி மூப்புச் சாக்காடுளவாதலும், ஒருகணத் தின்பமுடையனவெனக் கருதும் பொருட்கள் மறுகணத்தே துன்பந்தருவனவாகி மாற்ற மடைதலும், ஆதிய பலவாம். செல்வத்தாற் சிறந்த முடியுடை மன்னராயினும் பகைவ ரஞ்சும் வீரரே யாயினும், அறிவான்மிக்க உறுவரேயாயினும் பிறந்த பிறப்பினர் எவர்க்கும் இத்தடைகள் இயல்பாகவே பெருகுதலால் பிறப்பே துன்பக்காரணமானது, என்னும் முடிவுகாணப்படுகின்றது. இது பற்றியே,

> "பிறந்தோ ருறுவது பெருகிய துன்பம்
> பிறவா ருறுவது பெரும்பே ரின்பம்"

என்றார் பெரியோர்.

> "இன்னா தம்ம இவ்வுலகம்
> இனிய காண்கிதன் இயல்புணர்ந் தோரே"

"இவ்வுலகமே துன்பம் நிறைந்ததாயுள்ளது. இத்துன்ப வுலகத்தினின்றே நீங்காத இன்பம் பெறுதற்கொரு வழியுளது. அதனைக் கண்டு அடைய முயல்க" என மற்றோ ரறிஞர் சுட்டிப் போந்தனர்.

அத்தகைய இன்பம் பயக்கும் நெறிதான் யாதோ? என ஆராய்தலுறுவோர்க்கு உறுதுணையாகி வழிகாட்டி நிற்பனவே சமயங்களாம். இச்சமயங்களும் தம்மை வகுத்த அறிஞர்களின் தகுதிக்கேற்பப் பலவாக விரிந்து ஒன்றோடொன்று முரணுவன வாகலான், இவற்றுள் எது உண்மை? எது நன்று? எனத்

துணியப்படாது பெரிதும் மயக்குறுத்துவன வாகின்றன. இம் மயக்க மனைத்தையும் நீக்கவல்ல அருமருந்தாய், [1]உலக இயற்கைக்குச் சிறிதும் மாறுபடாததாய், எல்லாச்சமயங்களும் விதந்து கூறும் பொருட்கள் பலவற்றையும் தன்கண் அடக்குவதாய், தான்காட்டும் முடிந்த பெருநெறி வேறு எச்சமயங்களினும் காணப்படாததாய், அச்சமயங்கள் பலவற்றையும் ஒருதன்னை அடைதற்கு ஏணிபோற்கொள்வதாய், அம் முறையானே அவற்றை அன்போடு சிறுமைபாராது தழுவிக்கொள்ளும் பெருங் கருணையுடையதாய், தன்னின் மேம்பட்ட சமயம் வேறொன்றில் லாததாய்ச், சிறப்புற்றுத் திகழும் ஓர் அரும்பெருஞ் சமயம் சுத் தாத்துவித வைதிக சைவ சித்தாந்தமேயாம்.

இவ்வுண்மை, இலக்கணம் தருக்கம் முதலிய கருவி நூல் களை நன்கு பயின்றுபெற்ற நுட்ப அறிவுகொண்டு பலசமயங் களையும் நடுநோக்குடன் நுணுகி ஆராய்வார்க்குத் தெற்றெனப் புலப்படும். இங்ஙனம் நுண்ணிதின் ஆராய்ந்த பேரறிஞர்கள் "சைவ சமயமே சமயம்" என்றும், ஓங்கும் பொருட்சமய முதற் சைவநெறி என்றும், "புறச்சமயத்தவர்க் கிருளாய் அகச் சமயத் தொளியாய்" என்றும் பலவாறு பாராட்டிக் கூறுவதும் காண்க. நம்தம் மணிவாசகனாரும், "பொய்த்தேவு பேசிப் புலம்புகின்ற பூதலத்தே, பற்றேது மில்லாதென் பற்றறநான் பற்றி நின்ற, மெய்த்தேவர் தேவுக்கே சென்றூதாய் கோத்தும்பீ" எனத் தம் அனுபவ ஞானத்தை இயம்பியருளினார்.

அளத்தற்கரிய இத்துணைச் சிறப்பு வாய்ந்த சமயம் இதுவா கவினன்றே, சமயங்களின் வன்மை மென்மைகளை அறியப்புகு வோர்க்கு,

"யாதுசம யம்பொருணூல் யாதிங் கென்னி
னிதுவாகு மதுவல்ல தெனும்பிணக்க தின்றி
நீதியினு னிவையெல்லா மோரிடத்தே காண
நின்றதியா தொருசமயம் அதுசமயம் பொருணூல்..."

என்று உளவுகூறிச் சமயங்களை அளக்கும் அளவுகோலொன்றை நீட்டித் தருவதாயிற்று.

இத்தகைய சைவநெறியை விளக்கும் சாத்திரங்கள் பதினன் குள. அவை,

(1) திருவுந்தியார் (2) திருக்களிற்றுப்படியார் (3) சிவஞா னபோதம் (4) சிவஞான சித்தியார் (5) இருபா இருபஃது (6)

---

1. உலகியலோடு பொருந்தும் சைவசமய நுண்பொருள்களை, யாம் எழுதிவரும் "உலகியலும் சைவமும்" என்னும் நூலிற் பரக்கக் காணலாம்.

உண்மைவிளக்கம்(7)சிவப்பிரகாசம் (8) திருவருட்பயன் (9) வினா வெண்பா (10)போற்றிப்பஃறொடை(11) கொடிக்கவி (12) நெஞ்சு விடுதூது (13) உண்மைநெறி விளக்கம் (14) சங்கற்ப நிராகரணம் என்பன.

இவற்றுட் பின்னின்ற எட்டுநூற்களும் சித்தாந்த அட்டகம் எனப் பெயர் பெறும். இவை கொற்றவன்குடி உமாபதி சிவம் திருவாய் மலர்ந்தருளியவை. முன்னின்ற ஆறு நூற்களும் முறையே திருவியலூர் உய்யவந்த தேவநாயனர், திருக்கடவூர் உய்யவந்த தேவ நாயனர், திருவெண்ணெய் நல்லூர் மெய்கண்ட தேவ நாயனர், [1]திருத்துறையூர் அருணந்தி சிவாசாரியார் திருவதிகை மனவாசகங் கடந்தார் என்பவர்களால் அருளப் பெற்றவை.

இவற்றுள் ஆறுவதாக நின்ற உண்மை விளக்கம் என்னும் நூற்பொருட்களை எடுத்து எளிய வுரைநடையில் எழுதுமாறு திருநெல்வேலிச் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினர் மெய்கண்ட சாத்திரமா நாட்டில் புலையனேனையும் பொருளென மதித்துப் புகன்றனராக, அம் மெய்யன்பர் திருக்குறிப்பைக் கடக்க மாட்டாமையான் யானறிந்த சிலவற்றை வெளியிடுவான் றுணிந்து புகுவேனுனேன்.

> "கல்லா தவரும் நனிநல்லர் கற்றோர்முற்
> சொல்லா திருக்கப் பெறின்"

என்னுந் தமிழ்மறை மறுப்பவும்,

"நல்லோர் வருந்தியுங் கேட்பவே மற்றவன் பல்லாருள் நாணுப்பரிந்து"

என்னும் மற்றொரு நீதிநூல் கைகொடுப்பவும், ஒருபாற்படாத உள்ளத்தோடு தொடங்கும் என்பாற் காணுங் குற்றங்களை எடுத்துக் காட்டித் திருத்தவும், ஏற்றபொருட்களைப் பொருத்தவும் சைவ நூலுணர்ந்த பெரியார்கள் முற்படநின்று அருள்கூர்வார்களாக. அன்னார்க்கெனது நன்றியறிதலுள்ள வணக்கத்தைத் தெரிவிக்கின்றேன்.

## உண்மை விளக்கம்

உண்மை ஆவது உள்ள பொருளின் றன்மை. விளக்கம் தெளிவுற விரித்து விளக்குவது. ஆகவே, "இல்பொருளல்லாத மெய்ப்பொருளை நன்குவிளக்கிக் கூறும் நூல்" எனத் தன்மையாற் பெயர் பெற்றது இந்நூல் என்க.

---

1. அருணந்தி சிவாசாரியார் சிவஞான சித்தியாரையும் பா இருபஃதையும் அருளினர்.

இல்லதற்குத் தோற்ற மின்மையின் புலப்பாடுமில்லா தொழியுமாகலான் அதனைப் பொருள் எனக்கோடல் சாலாது எனின் :—அற்றன்று, இன்மை, (1) முன்னின்மை (2) பின்னின்மை (3) ஒன்றினொன்றின்மை (4) என்றுமின்மை எனநால் வகைப்படும். அவற்றுள் என்றும்இன்மையையே ஈண்டுக் குறிக்கப் பட்டது. அதுதானும் முயற் கோடு, ஆகாயப்பூ, ஆமைமயிர்க்கம் பலம் எனச் சொற்களிருப்பவும் பொருளில்லாதாகின்றது. கோடும், பூவும், கம்பலமும், ஆங்கே முயலும், வானமும், ஆமையு மாகிய இவை தனித்தனி உள்ள பொருட்களே. வேறு விலங்கிற் குள்ள கோடும், நீர், மண் முதலியவற்றின் மலரும் பூவும் வேற்று விலங்கின் மயிர்க்கம்பலமும் உள்ளவைகளே. ஆதலின் இங்கு இன்மையாவது குறித்தபொருள்களிற் குறித்த உடைமைப் பொருட்கள் இல்லை என்பதுவேயன்றிப் பிறிதில்லையென்க. இவ் வாற்றால், பொருந்தாப் பொருளை இல்பொருள் எனவும் பொருந் தும் பொருளை மெய்ப்பொருளெனவும் கொள்ளப்பட்டதென் றறிக. இனி, உண்மை—(உள் + மை) உள்ளத்தின் தன்மை எனக்கொண்டு உள்ளம் என்பதற்கு (நம் மாதவச் சிவஞானமுனி வர்பெருமானார் பலவிடத்தும் கூறிப்போந்தவாறு) ஆன்மா வெனப் பொருள் கூறி, ஆன்ம இலக்கணத்தையும், அஃது பெறு தற்குரிய பெரும் பேற்றையும் விளக்குவது இந்நூல் என்று கோடலும் பொருந்தும். ஆன்ம இலக்கணம் என்ற துணையானே ஆன்மாவின் பொதுவியல்பாகிய பாசத்தொடர்பும் சிறப்பியல் பாகிய சிவானந்தப்பேறும் அடங்கலானும், அதுகொண்டு, ஆன் மாக்களை அநாதியேபற்றி நிற்கும் பாச இயல்பும் அத்தளையை அருளால் நீக்கித் தன்னைத் தந்து இன்புறுவிக்கும் பதி இயல்பும் ஆக, பதி பசு பாசம் என்னும் முப்பொரு ளிலக்கணங்களையும் உள்ளவாறு கூறிவிளக்குவது இந்நூல் என்பதும் பெற்றும்.

இவ்வருள்நூல், திருவதிகை மனவாசகங்கடந்தார் என்னும் சிவஞானனுபவச்செம்மலார் திருவாய் மலர்ந்தருளியது என முன்னரே கூறினும். இதனால், இவரது பிள்ளைத் திருநாமம் வழங்கப்படாமல் தீக்ஷா நாமமே வழங்கப்பட்டமை அறிக. திருவதிகை என்னும் நடுநாட்டுத் திருப்பதி, இவர்தம் பிறப் பிடம் அல்லது வாழ்ந்த இடம் என்பதும் இதனாற் பெறப்பட் டது இவ்வருட்செல்வர், மெய்கண்டசிவத்தைப் பல இடங்க ளிற் குருவாகவைத்து விணவுதலின், மெய்கண்டார் காலத்திற் கும், அருணந்திசிவாசாரியார் இயற்றிய நூற்களுக்குப்பின் இவர் தம் நூலை வைத்துள்ள முறைமையின் அவர் காலத்திற்கும் பிற்பட்டவராதல் வேண்டும். சித்தாந்த நூற்களில் 8 நூற்களை அருளிய கொற்றவன்குடி உமாபதிசிவத்திற்கும் இவர் காலத் தான் முற்பட்டவரெனக் கோடலும் நூற்களின் வைப்புமுறை உறுதிபெறுவதாம். (தொடரும்)

# கலைச்சொற்கள்

[திரு. அடிகள், நிக்கோபார்]

தமிழ் உணர்ச்சி எங்கும் கரை புரண்டோடும் காலம் இது. "காணும் இடத்தில் எல்லாம் - தமிழின் காட்சி தெரிகுதடி" என்னும் நிலையைக் காணப் பலர் முயலுகின்றனர். அவர்களுள் சிலர் கல்லூரிகளிலும் கலையறிவுக் கூட்டங்களிலும் தமிழைக் காண விரும்பிப் பல முயற்சிகளைச் செய்கின்றனர் ஆயின் அம் முயற்சிகளைக் கெடுக்கச் சிலர் அடிக்கடி ஒரு பூதத்தைக் கிளப்பி விடுகின்றனர். "கலைச் சொற்கள் தமிழில் இல்லை, அதனால் தமிழில் கலையறிவைப் புகட்ட முடியாது" என்பதே அப்பூதம். பொறுப்புள்ள அறிஞர்களும், அரசியல் வல்லுநர்களும் கூட அப்பூதத்தை அடிக்கடி கட்டிவிடுகின்றனர். அதைப் பார்க்கும் பொழுது கலைச் சொற்கள் தமிழில் இல்லாக்குறை நிலையான குறை போலும் எனவும், இனித் தமிழில் கலையறிவைப் பெற முடியாது எனவும், கலையறிவின் பொருட்டு அயல் மொழியைத் தமிழர்கள் கட்டாயம் கற்க வேண்டும் எனவும் கருதத் தோன்று ஆயின் மெய்யாராய்ச்சி தரும் காட்சி மற்றொன்றாக அதை ஓரளவு விரித்துக்காட்டுவதே இக் கட்டுரையின் நோக்கம். கலைச் சொற்களின் இயல்பை விளக்குவதன் மூலம் அது விளக்கப் படுகின்றது.

கலைச் சொற்களின் இயல்பை அறிந்து கொள்ளும் முன் சொற்களின் இயல்பை அறிந்து கொள்ள வேண்டும். முதல் முதலில் தோன்றிய மக்களிடம் மொழி என எதுவும் இருந்ததில்லை. மலைகளிலும் காடுகளிலும் விலங்குகளோடு விலங்குகளாகவே அவர்கள் வாழ்ந்து வந்தனர். நாட்கள் செல்லச் செல்ல அவர்களின் அறிவு பெருகிற்று. அதனால் ஒருவர் கருத்தை ஒருவர்க்குத் தெரிவிக்க வேண்டிய தேவை ஏற்பட்டது. அதற்கு அவர்கள் முதல் முதலில் சைகையைப் பயன் படுத்தினர். ஆயின் ஒளியில்லா இடத்திலும், வேலை செய்யும் பொழுதும் சைகை பயன்படவில்லை. அதனால் வேறு முறை தேவைப்பட்டது. அதற்கு அத்தொல் பழங்கால மக்கள் தங்கள் குரலைப் பயன் படுத்தினர். ஒவ்வொரு கருத்தையும் தெரிவிக்க ஒவ்வொரு வகை ஒலியைப் பயன்படுத்த அவர்கள் முனைந்தனர். அதனால் பல்வேறு பட்ட ஒலிக்குறிகள் தோன்றின. அவ்வாறு தோன்றிய ஒலிக்குறிகளையே நாம் சொற்கள் என்கிறோம்.

ஆண்டுகள் பல உருண்டோடின. மக்களின் அறிவு பெருகிக் கொண்டே சென்றது. அதற்குத்தகப் புதுப்புதுக் கருத்துக்

களும், அக்கருத்துக்களைக் குறிக்கும் ஒலிக்குறியீடுகளாகிய சொற்களும் பெருகிக் கொண்டே சென்றன. அதையே மொழி வளர்ச்சி என்கின்றோம். இவ்வாறு வளர்ச்சி அடைவது எல்லா மொழிகளுக்கும் இயல்பான ஒன்று. அறிவு பெருகப் பெருகக் கருத்துக்கள் பெருகுவதும், கருத்துக்கள் பெருகப் பெருகச் சொற்கள் பெருகுவதும் தடுக்க முடியா. இயற்கைச் சொல் இல்லாக் கருத்தையோ கருத்தில்லாச் சொல்லையோ எங்கும் காணமுடியாது. நாட்டில் ஒரு கருத்துப் பிறப்பது வீட்டில் ஒரு குழந்தை பிறப்பது போன்றது. வீட்டில் குழந்தை பிறந்தால் அதற்குக் கட்டாயம் ஒரு பெயர் தோன்றி விடும். இல்லை எனில் அதை அழைக்க வழி இல்லை. அதே போல் நாட்டில் ஒரு கருத்துப் பிறநதால் அதற்குக் கட்டாயம் ஒரு சொல் தோன்றிவிடும். அதனால் ஒரு மொழியில் சிலவற்றிற்குச் சொற்கள் இல்லை என்றால் அதற்குப் பொருள் அம்மொழியில் அவற்றிற்கு உரிய கருத்துக்கள் இல்லை என்பதே. கருத்துக்களை வளர்த்தால் சொற்கள் தாமாகவே வளர்ந்துவிடும்.

இதுவே சொற்களின் தோற்ற வளர்ச்சி பற்றிய வரலாறு. ஆயின் இதற்கு ஒரு புறநடை உள்ளது. சில நேரத்தில் கருத்துக்கள் அயல்நாட்டில் இருந்து வந்தால் அவற்றிற்குரிய சொற்களும் அவற்றுடன் வந்து விடுவது உண்டு. அப்பொழுது புதுச்சொற்கள் தோன்றா. இதுவே புறநடை. ஆயின் இது மொழியின் நெடுங்கால வளர்ச்சிக்கு நன்று அன்று. அத்துடன் மொழியின் இயற்கை எழிலையும் கெடுத்துவிடும். அதனால் தன் மொழிச் சொற்களை நாடுவதே மொழியின் ஆக்கத்திற்கு நன்று.

இவ்வாறு புறநடையாக அமையும் இடத்தைத் தவிரப் பிற இடங்களில் சொற்கள் கருத்துக்களுக்குத்தக வளர்வது மாறா இயற்கை. சொற்களின் வரலாறு இதுவாயின் கலைச் சொற்களின் வரலாறும் இதுவே. ஏன் எனில் பொதுச் சொற்களுக்கும் கலைச் சொற்களுக்கும் மிகுந்த வேறுபாடு இல்லை. பொதுச் சொற்கள் எல்லோராலும் வழங்கப் படுபவை. ஆயின் கலைச் சொற்கள் கலைத்துறையில் ஈடுபட்டுள்ள சிலரால் மட்டும் வழங்கப்படுபவை. இதுவே வேறுபாட்டு உண்மை. இதுவாயின் கருத்துக்கள் வளர வளரச் சொற்கள் வளர்வதைப்போல் கலைக் கருத்துக்கள் வளர வளரக் கலைச் சொற்களும் வளர்ந்துவிடும் ״னை எளிதில் கூறிவிடலாம்.

r இன்றைய தமிழ் வாழ்வில் ஒரு முரண்பாடு காணப்படுகின்றது. பன்னூறு ஆண்டுகளாக மொழி இயல்புக்குத் தகவே தமிழ் வளர்ந்து வந்தது. அதனால் சொற்கள்

இல்லை என்ற குறையை அது காணவில்லை. ஆயின் கடந்த சில நூற்றாண்டுகளில் அறிவு பின் தங்கிற்று. அதனால் தமிழ் வளர்ச்சியும் பின் தங்கிற்று. இன்று மீண்டும் தமிழர்களின் அறிவு பெருகத் துவங்கியுள்ளது. புதுப்புதுக் கருத்துக்கள் தமிழகத்தை எட்டிப் பார்க்கின்றன. அதனால் புதுப்புதுச் சொற்களும் தேவைப் படுகின்றன. மொழியின் இயல்பிற்குத் தகச் சொற்கள் தாமாகவே தோன்ற வேண்டும். அது நிகழவில்லை. அதற்குக் காரணம் புதுக் கருத்துக்களின் திடீர்த்தாக்குதலே. புதுக் கருத்துக்கள் மெல்ல மெல்லப் புகுந்து வளர்ந்திருந்தால் சொற்களும் மெல்ல மெல்ல எழுந்திருக்கும். இயற்கைக்கு மாறுபட்ட முறையில் கருத்துக்கள் திடீர்த்தாக்குதல் நடத்தி இருப்பதால் அதற்கு ஈடுகட்டும் முறையில் சொற்களால் வளர முடியவில்லை. ஐந்தாண்டுக் குழவியொன்று திடீரென அறுமூன்றாண்டுக் குமரி ஆனது போன்றது இது. குழவி மெல்ல மெல்ல வளர்ந்திருந்தால் உலகியல் அறிவைத் தானகவே பெற்றிருக்கும். அவ்வாறு இல்லாததால் இன்று நாம் அதற்கு உலகியல் அறிவைச் சொல்லிக் கொடுக்க வேண்டிய தேவை ஏற்பட்டுள்ளது. இதுவே மொழியின் இயல்பிற்கு முரண்பட்ட இன்றைய கலைச்சொல் திண்டாட்டக் கதை. இன்று முயன்று கலைச்சொற்களை உருவாக்கிக் கருத்துக்களின் திடீர்த்தாக்குதலிற்கு ஈடுகட்டி விட்டால் பின்னர் அறிவுப் பெருக்கத்திற்குத்தக மொழி வேண்டிய சொற்களை உருவாக்கிக்கொள்ளும். உலக மொழி நூலார் பலரும் புகழ்ந்து போற்றும் தமிழின் திறத்தில் ஐயங் கொள்ள வேண்டிய தேவை எதுவும் இல்லை. தமிழின் வளர்ச்சி கண்டு வயிறு எரிவோரும், தமிழின் உண்மை நிலையை உணராதோரும் மட்டுமே தமிழின் திறத்தில் ஐயங்கொள்ளுவர்.

ஆனல் தமிழ் யாரையும் பற்றிக் கவலைப்படாது வளர்ந்து கொண்டே வருகின்றது. கலைச்சொற்கள் இல்லை என்னும் குறையைப் பற்றிக் கவலைப்படாது எண்ணிறந்த கலைச் சொற்கள் நாளும் தோன்றிக் கொண்டே இருக்கின்றன. வானெலி, சிற்றலை, அலைவீச்சு (Amplitude) அலை நீளம், வானவலை (Aerial) இசைப்பு (Resonance) ஊர்தி அலை (Carrier Wave) மிளவணு மண்டிலம் (Ionospheric Layer) துடிப்பெண். (Frequency) இடைநிலைத் துடிப்பெண் (I. F.) உயர் துடிப்பெண் (H. F.) மிக உயர் துடிப்பெண் (V. H. F.) மின்காந்த அலைகள், எதிர் முனைக்கதிர்கள் (Cathode Rays), போன்றவை நேற்றும் இன்றும் வானெலித் துறையில் வளர்ந்துள்ள சொற்களில் சில. இதுபோல் இன்று எல்லாத் துறைகளிலும் வளர்ச்சியைக் காணலாம். அதனல் கலைச்சொற்கள் இல்லாததால் கலை

யறிவைத் தமிழில் தர முடியாது என்ற கூற்றுப் பொருளற்ற தாகிவிடுகின்றது.

இன்று தோன்றியுள்ள கலைச் சொற்கள் மிகச் சில, கலை யறிவை விளக்க அவை போதா எனச் சிலர் கூறலாம். அஃதும் பொருளற்றதே. நேற்றுக் கலைச்சொற்கள் இல்லை என்னும் நிலை இருந்தது; அதனால் கலையறிவைத் தமிழில் தர முடியாது என்ற கூற்று எழுந்தது. இன்று எழுந்துள்ள சில சொற்கள் அக்கூற்றின் அடிப்பகுதியை உண்டு விட்டன. அதே போல இன்று சிலவாகக் காட்சி தரும் கலைச்சொற்கள் நாளைப் பலவாகக் காட்சி தந்து புகுத்தடைக்கும் இடம் இல்லாதபடி செய்துவிடும். இன்றைய தமிழின் நிலையைக் கூர்ந்து நோக்குவோர் இன்றைய சில சொற்கள் நாளைப் பல சொற்களாக மாறப்போவதை எளிதில் உணர்வர். அதனால் கலைச்சொற்கள் இல்லை எனக் கூறித் தமிழைக் கலைக் கூடங்களில் இருந்து அகற்ற முனைவது ஒவ்வாதது.

மேலும் கலைச்சொற்கள் உருவாக்கப்பட முடியாதவைகள் அல்ல. ஆங்கிலத்திற்கென ஆண்டவனால் அளிக்கப்பட்ட சிறப்புக் கூறுகளும் இல்லை. மூலை முடுக்குகளில் இருந்து மெல்ல எட்டிப் பார்ப்பனவும் இல்லை. நாளும் நாட்டில் வழங்கி வரும் சொற்களே, கலைத்துறையிற் புகும்பொழுது கலைசொற்களாக மாறிவிடு கின்றன. எந்த மொழிக் கலைச்சொற்களை எடுத்து ஆய்ந்தாலும் இவ்வுண்மை எளிதில் விளங்கும். ஒப்புமைக்காகச் சில ஆங்கில கலைச்சொற்களைக் காண்போம். Screen என்ற சொல் திரை, மறை என்னும் பொருளில் வழங்கும் பொதுச் சொல். ஆயின் அஃது வானொலித் துறையில் கலைச்சொல்லாகப் பயன்படு கின்றது. (Screen Grid: Screen Supply) நாடக அரங்கிலும் திரைப்பட நிலையத்திலும் வழங்கப்படும் போது Screen தரும் பொருள் வேறு, கலைச்சொல்லாக வானொலித் துறையில் அது தரும் பொருள் வேறு. Screen என்னும் பொதுச் சொல்லே கலைச்சொல்லாக மாறிவிட்டது வானொலித் துறையில்.

Valve என்றால் ஒரு வழி என்று பொருள். ஆயின் அஃது ஈருருளியில் பணி செய்வோர்க்கு ஒரு பொருளையும் அகத்தெரி இயந்திரத்தில் (Intern Compuston Engine) பணி செய் வோனுக்கு ஒரு பொருளையும், வானொலித் துறையில் வேறு பொருளையும் தருகின்றது. Beacon என்னும் சொல் பண்டு கலங்கரை விளக்கத்தைக் குறித்தது. இன்று அது வானொலித் துறையில் வானூர்திகளையும், கலங்களையும் கரைந்தழைக்கும் ஒரு பொறியைக் குறிக்கின்றது. Capacity, Transmitter, Receiver, Dedection, Distortion, Interference, Fading, Rectifier,

Inductor, Multiplier, Amplify போன்றவையெல்லாம் வானொலித் துறையில் உள்ள கலைச் சொற்கள் ஆயின் பொது உலகம் அறியாப் புதுச்சொற்கள் இல்லை. அவற்றிற்கு இணையான சொற்கள் தமிழில் இல்லாமலும் இல்லை. ஆங்கிலப் பொதுச்சொற்கள் கலைச்சொற்கள் ஆனாற்போல் தமிழில் ஆகக்கூடாது என்று ஒரு தடையும் இல்லை. அதனால் தமிழில் கலைச்சொற்கள் இல்லையென்றோ, சிலவே உள்ளன என்றோ, அவை பலவாக மாறா என்றோ, தமிழில் கலையறிவைப் புகட்ட முடியாது என்றோ கூறுவது முற்றிலும் பொருளற்ற மூடத்தனம்.

இது வரை சொற்களின் இயல்பும், கருத்துக்கள் வளர வளரச் சொற்கள் தோன்றும் முறையும், கலைச்சொற்களுக்கும் பொதுச் சொற்களுக்கும் இடையே உள்ள தொடர்பும், பொதுச் சொற்களின் திரிபே கலைச்சொற்கள் என்பதுவும், கருத்துக்களின் திடீர்த்தாக்குலாலேயே தமிழில் கலைச்சொற்கள் வளரவில்லை என்பதுவும், முயன்றால் தொல்லை மாறிவிடும் என்பதுவும், பலர் முயற்சியால் இன்று பல கலைச்சொற்கள் தோன்றி உள்ளன என்பதுவும், இன்னும் பல தோன்றும் என்பதுவும், கலைச்சொற்கள் தமிழில் இல்லை; அதனால் கலையறிவைத் தமிழில் தரமுடியாது என்பது பொருளற்ற புல்லிய கூற்று என்பதுவும் ஓரளவு விளக்கப்பட்டது. இறுதியாக இனிக் கலைச்சொல் வளர வேண்டிய முறையைச் சிறிது விளக்குகின்றேன்.

வடமொழியின் துணையைக்கொண்டு பலர் பல காலத்தில் தமிழைத் தாக்கினர். ஆயின் இன்று வரை யாரும் அம்முயற்சியில் வெற்றி பெறவில்லை. அஃது அவர்களுக்கு வயிற்றெரிச்சலை ஊட்டிற்று. அதனால் அவர்கள் இன்று தங்கள் கடைசிக் கைவரிசையைக் கலைச்சொற்களில் காட்ட முனைகின்றனர். கலைச்சொற்கள் என்ற பெயரில் பல வடமொழிச் சொற்களைத் தமிழில் புகுத்த முனைகின்றனர். நற்றமிழில் பற்றுடையோர் அனைவரும் இதை நன்கு உணர்ந்து தடுக்க முனைய வேண்டும். கலைச்சொற்கள் என்ற பெயரில் அயல் மொழிச் சொற்கள் வந்தால் அவற்றை ஏற்றுக்கொள்ளக் கூடாது. கன்னித்தமிழ்ச் சொற்களே கலைச்சொற்களாக இலங்க வேண்டும்.

அடுத்துக் கலைச்சொல்லாக்கத்தார் ஆங்கில மொழியில் வழங்கும் கலைச் சொற்களுக்கு மாறான தமிழ்ச் சொற்களைத் தேடுவதைவிட அவை சுட்டும் கருத்துக்களுக்குத் தக்க தமிழ்ச் சொற்களைத் தேடுவது நன்று. ஏனெனில் சில இடங்களில் ஆங்கிலக் கலைச்சொற்கள் கருத்துக்களைத் தெளிவாக விளக்குவ அவ்விடங்களில் தமிழ்க் கலைச் சொற்கள் ஆங்கிலக் கலைச்

சொற்களின் பெயர்ப்பாக இருந்தால் கருத்தைத் தெளிவாக விளக்காக் குறை தமிழிலும் புகுந்துவிடும். அதனால் இயன்ற அளவிற்குக் கருத்துக்களுக்கேற்ற சொற்களை நாடுவது நன்று.

அடுத்துக் கலைச்சொல்லாக்கத்தார் புதுப்புதுச் சொற்களை மனம் போன போக்கில் ஆக்கிக்கொள்ளுவதைவிட இயன்ற அளவிற்குப் பழந்தமிழ் இலக்கியத்தில் உள்ள சொற்களைப் பயன்படுத்த முனைதல் நன்று. எண்ணிறந்த எழில் மிக்க வண்ணத் தமிழ்ச் சொற்கள் பழந்தமிழ் இலக்கியத்தில் கேட்பாரற்றுக் கிடக்கின்றன. அவற்றுள் பல கலைச்சொல்லாக்கத்தார்க்குப் பயன்படுபவை. அவைகளைப் பயன்படுத்துவதால் கலைச்சொல் பணியோடு அவைகளுக்கு உயிரளிக்கும் கன்னித் தமிழ்ப்பணியும் நிறைவடையும். அதனால் கலைச்சொல்லாக்கத்தார் அவைகளைப் பயன்படுத்தல் நன்று.

இவ்வாறு தக்க தமிழறிவும் கலையறிவும் உடைய சான்றோர்கள் கலைச்சொல்லாக்கத்தில் முனைந்து நின்றால், கலைச்சொற்களும் கலையறிவுகளும் கன்னித்தமிழ் நாடெங்கும் விரைவில் பெருகும்; பல பல இராமானுசர்களும், இராமன்களும் தோன்றித் தமிழ்ப் பெருமையைத் தழைத்தோங்கச் செய்வர். அதனால் அதற்கென முயலுதல் ஆன்றோர் கடன்.

---

## சிற்றூர்ப் பெண்

[திருமதி. சரஸ்வதி ராமகிருட்டிணன்]

வெள்ளி முளைத்திட எழுவாள் — வெளி
வீதியை நோக்கியே வருவாள்
தெள்ளத் தெளியநீர் தெளிப்பாள் — மிகத்
திருந்திய கோலமும் அமைப்பாள்.
ஆற்றங் கரையினைச் சேர்ந்தே — அவள்
ஆடியே நீரினில் மகிழ்வாள்
ஆதவன் எழக்கண்டு களிப்பாள் — மிகு
ஆர்வத் துடன்பணி புரிவாள்.
மாடு மனைகளைப் பேணி — நல்
மக்களை ஈன்றநல் தாயாய்
வீடு விளங்கிடச் செய்வாள் — நம்
வெற்றிச் சிற்றூரின் பெண்மணி.

# நிறைவுள்ளம் பேராக்கம்

[திரு. சு. அன்புமலர் பி. ஏ. (ஆனர்சு.)]

என்னுள்ளம் சீர்பெருக்கும் இன்பப்பே ரரசு ;
எங்குமிலா நேரின்பம் இங்குறைதல் காணின்
மன்னுலகில் ஆவல்சூழ் மண்பெண்பொன் மற்றும்
மக்களுறு பல்திறத்த மகிழ்வனைத்து மருளே
உன்னல்சேர் சுவைகோடி உண்டென்பார் நாடி
உகக்காணின் நாணுமுற வுட்கோட்டந் தோன்றும்
நன்றாமோ ! நண்ணுதலும் நச்சென்றென் னுள்ளம்
நற்றுரைக்கச் சிறிதுறைந்த நசைபசையும் மாளும்.

நிறைவுறுகை வாழ்வில்நனி நிறைகூட்டு நெறியாய்
நிரைசெய்தன் நெஞ்சிலது நிலவுதலைக் கண்டேன்
மிறைசேர்க்கும் மறம்பெருக்கும் மிடுக்கேற்றும் மேலும்
மீபொன்றும் பொருள்தேவை மிகலென்றும் வேண்டே
இறைஞ்சியெனைப் பிறர்பணியு மிறுமாப்பு விள்ளேன்
‘இல்லை’யெனக் கில்லையெலாம் எனக்களிக்கு முள்ளம்
பிறைநிலவு என்வாழ்வு பேரரசர்க் கெட்டா
பின்னென்ன என்னுள்ளம் பெருவிருப்பிற் கப்பால்.

மிகுசெல்வம் தேக்கிடினும் மிசைதற்கு மொண்ணா
மிடிதருநோய் வந்துறுங்கால் மீப்புடைமை யென்னும்
இகுசொப்ப வளமுயர இன்றுகந்தான் நாளை
இழந்தழிந்தா னெனுமுண்மை இம்மைதினக் கூற்று
தகுவின்யார் புகழ், பதவி தனமூன்றும் கொண்டோன்
தட்டழிந்தால் மண்மூடும் தகவனைத்தும் அந்தோ !
உகுக்கின்றார் வேர்வைமிக உழைக்கின்றார் சேர்க்க
உண்ணவல்ல ; பேராசை ஒருநாளும் தேரேன்.

நல்கூர்ந்தார் நிலைகண்டு நகலென்றும் செய்யேன்
நலஞ்சூழ்ந்தார் நிலைகண்டு நானழுக்கா றடையேன்
அல்லபொருள் ஆசையவை ஆழ்கடலின் அலைகள்
அகப்பட்டால் அம்மம்ம ஆழ்ந்திடுதல் திண்ணம்

பல்சிறப்பு வேண்டாவோ பாரினிலே என்று
பல்நயங்கள் கூறிடினும் பற்றறுதல் நன்று
கல்லலில்லை பகைகண்டு; கடிந்தறியேன் நட்பு
கவலையில்லை சாக்காடு, களிப்பெனக்கு முடிவு.

சிலராக்கம் பேரளவு செய்த்தாலும் மேலும்
சேர்த்திடவே தோன்றுவெறி சிறிதளவுங் குன்று
இலம்பாடென் கருவூலம், ஏழ்மையுறு நண்பன்
இருந்தாலும் மிகநாடும் இவறலுமென் பண்பில்
இலரவரே உண்டெனினும்; இருப்பிலலம் கண்ட
இல்லாநாள் செல்வந்தன்; இதில்வியப்பு முண்டோ?
பலபடைத்தும் என்பயனும் படரினுளை கின்றார்
பகுத்தீந்து மனங்குளிரும் படிவாழு கின்றேன்.

எறிப்பெறியும் பொன்னெனினும் எண்ணிலது மண்ணே
எத்துணைதான் குவித்தென்ன எறிபடையாந் திண்ணம்
தெறிகெடுக்கும் சேர்செல்வம் தெறித்துவிடில் என்னும்
தெளிவெல்லாம் பெற்றிருந்தும் தேயும்பண மீட்டும்
வெறியேனோ? பெருவியப்பு, வேண்டேனுத் தாழ்வு;
வெருள்கூட்டு வெஃகலதை விட்டொழித்தல் வாழ்வின்
நெறியெனவே கொண்டேன்; ஏன்? நீர்மையது மேலும்
நிறைவுள்ளம் பேராக்கம் நிகரெதுவும் இல்லை.

## வளம் ஈந்திடும்

[நாஞ்சில் திரு. கா. கணபதி

நயவ அருளே எவற்றினுக்கும்
தெளிந்த வலிமை தருமருந்தாம்
உய்வைத் தருமம் மருந்ததனால்
உலகில் வெற்றி அடைந்திடுமின்!
தூய்ய அருளாம் திருவருளால்
துயரம் யாவும் போக்கிடுமின்!
மெய்யாம் அறமும் அஃதாமால்
மிக்க வளமும் ஈந்திடுமால்!

# வேனில் வெம்மை

[திரு. மு. சதாசிவம், எம். ஏ.]

கோடைக் காலத்து வெம்மையெல்லாங் காட்டித் தெறுகதிர் வெய்யோன் தனியரசாட்சி செய்யும் காலமாகக் கொள்ளத் தக்கது இளவேனிற் பருவமேயாம். இயற்கைக் கூறுகளை நுனித்தறிந்து காலப் பிரிவுகளைச் செய்த நம் முன்னோர் கொடிய வெப்பம் கொடுக்கும் சித்திரை வைகாசித் திங்கள்களை இளவேனிற் பருவமாகக் கூறினர். வெப்பம் சிறிது குறைந்து காற்றும் மழையுங் கலந்து அளிக்கும் ஆனி ஆடித் திங்கள்களை முதுவேனிற் பருவம் என மொழிந்தனர். இளவேனில் என்ற பெயரில் உள்ள 'இளமை' என்ற பொருளை எண்ணி, இளவேனில் என்பது இளவெப்பத்தைக் கொடுப்பதொரு காலமே என்றும், முதுவேனிற் காலத்தேதான் முறுகிய வெப்பமும் கடிய கதிர்ச் சூடும் உணரப்படும் என்றும் பலர் கருதுகின்றனர்; இலக்கிய உரையாசிரியர்கள் சிலரும் இக்கருத்தைக் கூறியிருக்கின்றனர். உணர்ந்து நோக்கும்போது இளவேனிலே முதுவேனிற் காலத்தினும் பெருகிய வெப்பநிலைக் காலமாகத் திகழ்வதை யறிகிறோம். இயற்கை நுண்புலவோரும் இளவேனிற் கொடுமையையே யாங்கணும் எடுத்துரைத்துக் கூறி, முதுவேனில் வெப்பநிலையை மிகுத்துக் கூறாது விட்டுள்ளனர்.

இளவேனிலின் முற்பகுதி 'தண்பத வேனில்' எனக் கூறப்படும். அக்காலத்தே குயில்கள் கூவும்; வண்டுகள் பாடும். கோங்கம், குரவம், பாதிரி, புன்கம், வேம்பு முதலிய மரங்கள் மலரும். தென்றலும் உலாவரும். இவ்விளவேனிலின் முற்பகுதி மக்கட்கு இன்பந்தரும் பகுதியாகத் திகழ்ந்தாலும், அதன் பிற்பகுதியில் கதிரவன் தன் முடியாட்சியைக் கருணையின்றிச் செய்ய முற்படுகிறான். வெப்பக் கொடுமையையும் பொருட்படுத்தாது திருமணங்களும், திருவிழாக்களும் நிகழ்வதற்கேற்ற காலமெனமுன்னோர் இவ்விளவேனிற் பருவத்தையே சிறப்பாகத் தேர்ந்தெடுத்துள்ளனர். இதனால் பருவங்களுட் சிறந்தது இளவேனில் என்ற கருத்து நம் நாட்டில் வழங்குகிறது. பிற சிறப்புக்களைப் போலவே இக்காலத்தேதான் வேனில் வெம்மையும் சிறப்புற்றுக் காணப்படுகிறது என்பதை மறந்துவிடக் கூடாது.

கெ லெ ந ப் பாடல்களுள

யான பாடல்கள பா யைச் ய. அக

நானூற்றில் சரிபாதி இருநூறு பாட்டுக்கள் பாலைத்திணை ஒன்றே பற்றியும், மற்றப்பாதி இரு நூறு பாட்டுக்கள் குறிஞ்சி, முல்லை, மருதம் நெய்தல் என்ற நான்குதிணைகளைப் பற்றியும் கூறு கின்றன. நற்றிணை, ஐங்குறு நூறு, கலித்தொகை இவற்றிலும் பாலைத்திணைப் பாடல்கள் காணப்படுகின்றன. பாலைநிலத்தின் பொழுதாகிய வேனிலைப் பற்றியும், வேனிலின் வெப்பத்தைப் பற்றியும் இப்பாலைத்திணைப் பாடல்கள் குறிப்பிடுகின்றன. ஆனால் அவையெல்லாம் 'வேனில்' என்று பொதுப்படையாகக் குடுப்பிடுகின்றனவேயன்றி, இளவேனில், முதுவேனில் என்று பிரித்துக் கூறவில்லை. பாலைத்திணையைப் பாடும் புலவர்கள் செய்யுள் மரபுக்காக முதற் பொருளாய வேனிலைப் பாடல்களுட் குறிக்கும் கடப்பாடுடையவரே. எனினும் உரிப்பொருளே பாட்டின் உயிர்ப்பொருளாதலின், முதற்பொருளாகிய காலத்தை இளவேனில் என்றோ முதுவேனில் என்றோ பகுத்துக் கூறுவதில் அவர்கள் கருத்தைச் செலுத்தவில்லை.

இருபத்தைந்தாம் அகப்பாட்டு இளநாள் எனப்படும் இளவேனிலைப் பற்றி வருணிக்குங்கால் இக்காலத்தே காட்டாற்றின் வேகம் மிக்க நீர் அற்றொழிகிறது என்றும், நீர்த்துறையிடத்து மணல்மேடுகள் பெருகி, அவற்றின்மேல் காஞ்சிமரப் பூக்களின் தாதுகள் உதிர்ந்து புதுமணம் வீசும் என்றும் குறிக்கின்றது:

“நெடுங்கரைக் கான்யாற்றுக் கடும்புனல் சாஅய்
அவிர்அறல் கொண்ட விரவுமணல் அகன்துறைத்
தண்கயம் நண்ணிய பொழில்தொறும் காஞ்சிப்
பைந்தாது அணிந்த போதுமலி எக்கர்
வதுவை நாற்றம் புதுவது கஞல......” (வரி : க - ரு)

காட்டாற்றின்நீர் வற்றி மணல் மேடுகள் தோன்றுவது இளவேனிலின் வெப்பமிகுதியை அறிவிக்கின்றது.

முப்பத்துநான்காம் கலிப்பாட்டும் இளவேனிற் காலத்தே நீர் பரந்த யாறுகள் வற்றி அறல்பெற்றிருக்கும் என்று கூறுகின்றது.

“மன்னுயிர் ஏமுற மலர்ஞாலம் புரவின்று
பன்னீராற் கால்புனல் பரந்தூட்டி இறந்தபின்
சின்னீரான் அறல்வார அகல்யாறு கவின்பெற...
இன்னமர் இளவேனில் இறுத்தந்த பொழுதினான்.” (வரி : க - ௩, எ)

இவ்வரிகளிலிருந்து அவ்வாறுகள் நீர்வற்றுவதற்குக் காரணம் இளவேனிலின் கொடுவெப்பமே என்பது உணரப்படும்.

சங்கப்பாடல்களில் வெம்மைமிகுதியைக் கூறுமிடங்களில் 'வேனில்' எனப் பொதுப்படையாகக் கூறும் பகுதிகளுக்கு உரைவகுக்கும்போது நச்சினார்க்கினியர் போன்ற உரையாசிரியர்கள் வேனில் என்பது முதுவேனில் என்று பொருளுரைத்துப் போந்துள்ளனர். இதனால் வெப்பமிகுதியுடையது முதுவேனிலே என்பது ஓர் இலக்கிய மரபாக ட்டது. காட்டாக, 'வேனில் உழந்த வறிதுயங் கோய்களிறு' என்று தொடங்கும் பாலைக்கலி ஏழாம் பாடலில் வேனில் என்ற பொதுச் சொல்லிற்கு முதுவேனில் என நச்சினார்க்கினியர் பொருள் கொள்கிறார். இவர் கருத்துப்படி முதுவேனில்தான் வெப்பமிகுதிக் காலம் என்பது உண்மையாயின், பாலைநிலத்தையும், கோடைக் காலத்தையும் பாடுவதில் சிறப்புப் பெயர்பெற்ற பாலைபாடிய பெருங்கடுங்கோ மேற்காட்டிய முப்பத்துநான்காம் பாட்டில் முதுவேனில் என்றே குறித்திருப்பாரன்றோ? இளவேனிற் காலத்தினும் வெப்பமிக்க பகுதி முதுவேனிற் பருவமே என ஒப்பிட்டுக் கூறும் பகுதி சங்கவிலக்கியத்துட் காணப்படாமையான், முதுவேனிற் பருவமே வெப்பமிக்க காலம் எனக் கொள்ளுவது ஏற்புடைத்தாகாது.

மனிதவாழ்க்கையை இளமைப்பருவம் முதுமைப்பருவம் என இருகூறுபடுத்துக் கூறியது போன்று வேனிற்பருவத்தையும் இளவேனில் முதுவேனில் என்று இருகூறு செய்தனர் நம் முன்னோர் எனக் கொள்ளுதலே பொருத்தமுடைத்து. மக்கள் இளமைக்காலத்தேதான் உடல்கட்டும், முறுக்கும், வலிவும், திண்மையும் பெற்றிலகுகின்றனர் என்பது கண்கூடா யறியப்படு முண்மை. மற்று வாழ்வின் பிற்பகுதியான முதுமைக் காலத்தே நரையும் திரையும் தோன்றி மக்கள் நலிவெய்துகின்றனர். இதுபோன்றே இளவேனிற் காலமும் திருமணங்களும், திருவிழாக்களும் நிகழ்தற்கேற்ற இனிய காலமாயினும், பருவநிலையில் மற்றெல்லாப் பருவங்களினும் வெம்மையும் மிகுதியாகப் பெற்றிருக்கின்றது. இளவேனிலின் தொடக்கக் காலத்தை முற்றுவேனில், அரும்பதவேனில், குழவிவேனில், யாணர் வேனில், செவ்விவேனில் எனச்சிறப்பித்து அகநானூறு, ஐங்குறுநூறு, சிலப்பதிகாரம் முதலிய நூல்கள் புகழ்ந்தேத்துகின்றனவாயினும், அக்குழவி வேனிலின் செவ்வி நெடிதுநாள் நிலைநிற்பதில்லை என்பதைப் பாலைத்திணைக் கலிப்பாடல்களை ஓதுவார் நன்கு உணர்தல் கூடும். இளவேனிலின் தொடக்கத்தைக் கவிஞர்கள் புகழ்ந்து கூறுதலை வைத்துக்கொண்டு முதுவேனிலினும் இளவேனில் வெப்பம் குறைந்த காலம் எனக் கொள்ளுவது ஒல்லாது.

நம் தமிழ்நாட்டில் இளவேனிற் பருவமாகிய சித்திரை வைகாசித் திங்கள்களையே கோடைவிடுமுறைக் காலமாகக் கொள்ளுகிறோம். பள்ளிகளும், கல்லூரிகளும் அக்காலத்தில் தான் மூடப்படுகின்றன. 'அக்கினி நட்சத்திரம்' எனப்படும் உச்ச வெப்பக்காலப்பகுதியும் இளவேனிற் காலமாகிய சித்திரை யிலேதான் காணப்படுகிறது. பெருஞ்செல்வர்கள் கோடைக் கானலுக்கும், உதகமண்டலத்திற்கும் சென்று தங்கிக் கடுங்கதிர் வெப்பத்தினின்று தங்கள் உடலைப் பாதுகாத்துக் கொள்வதும் இளவேனிற் காலத்திலன்றி முதுவேனிலில் அல்லவே ! எனவே உலகியல் அனுபவத்திலும் இளவேனில் கொடுவெப்பமுடைய காலமாகவும், முதுவேனில் வெப்பங்குறைந்த காலமாகவும் இருப்பதைக் காண்கிறோம்

வெப்பமானியின் (Thermograph) துணை கொண்டு நோக்கினாலும் இளவேனிற் காலத்தேதான் வெப்பம் உச்ச நிலையை அடைகிறது என்பதை அறிகிறோம். இலக்கியத்திற்கு அறிவியல் உதவிபுரியும் காலம் இதுவாகலின், அறிவியல் அளித்த வெப்பஅளவைக் கருவியினின்று இளவேனிற் காலத்து வெப் பத்தையும், முதுவேனிற்காலத்து வெப்பத்தையும் ஒப்பிட்டுக் காண முடிகிறது. வெப்பநிலை மிகுதியான காலம் இளவேனிற் காலமே என்பதை இக்கருவி தெள்ளெனக் காட்டி விடுகிறது.

சென்னைப் பல்கலைக் கழகத்தார் வெளியிட்ட தமிழ் லெக்சி கனில் முதுவேனில் என்பதற்கு அறக்கொடிய வெப்பக்காலம் (The season of extreme heat) என்றும், இளவேனில் என்ப தற்கு வெப்பக் குறைவான கோடைக்காலம் (Milder part of the hot season) என்றும் பொருள்கள் கூறப்பட்டிருக்கின்றன. இவ்வாறு நேரிடையாக மாறுபடு பொருள்களை லெக்சிகன் கூறு தற்கு 'இள' 'முது' என்ற வேர்ச் சொற்களின் அடியாகப் பிறந்த பல சொற்களின் பொருட்டொடர்புணர்ச்சியே காரணம் எனலாம். 'இள' என்ற அடியைக் கொண்டு பிறந்த சில சொற் களைக் கருதுவோம். 'இளங்கதிர்' காலையில் தோன்றும் கதிர வனைக் குறிப்பது ; வெப்பம் குறைந்த கதிரவனின் நிலையை உணர்த்துவது. இளங்கால் அல்லது இளங்காற்று இன்பந்தரும் தென்றற் காற்றிற்குப் பெயராகும். இளங்காலை என்பது வெயி லேறப் பெறாத அதிகாலையைக் குறிக்கின்றது. இளஞ்சூடு என்ற சொல் வெதுவெது என்ற வெப்ப நிலையை உணர்த்தும். இளம் பிள்ளை என்று பச்சைக்குழந்தையைக் கூறுவர். இளவெயில் என்பது வெப்பமேறப்பெறாத சிறு சூடுள்ள வெய்யிலைக் குறிக்கும். மேற்குறித்த சொற்களின் பொருள்களை ஒட்டிக் காண்பார்க்கு இளவேனில் என்ற சொல் சிறிது சூடுள்ள வேனில்

அல்லது இளங் கோடைப்பருவம் என்ற பொருள்படுதலே பொருத்தமானதாகத் தோன்றும். 'இள' என்ற வேர்ச்சொல்லுக்குரிய இந்தப் பொருட்டொடர்பு(association of ideas)பற்றித் தான் லெக்சிகன் வெப்பக்குறைவான காலம் என்று இளவேனிலுக்குப் பொருள்கூறிவிட்டது.

இவ்வாறே, உலகியலுண்மைக்கு மாறாக முதுவேனிலுக்கும் 'முது' என்ற அடிக்கண் பிறந்த பல சொற்களின் பொருள் தொடர்பை எண்ணிப் பொருள் குறிக்கப்பட்டது எனக் கருத வேண்டியிருக்கிறது. முதுக்குறைவு என்ற சொல் பேரறிவு என்ற பொருளைத் தருகிறது. முதியவன் என்றால் வயதில் மூத்தவன். முதிர்தல் — பக்குவமாதல், இளமை நீங்கி முற்றுதல் எனப் பொருள்படும். முதிர்காற்று என்றால் கடுங்காற்று. முதிர்ச்சி என்ற சொல்லுக்குப் பக்குவம், வயது முதுமை, செருக்கு என்ற பொருள்கள் உள்ளன. முதிர்ச்சிக்காரன் என்றால் செருக்குள்ளவன் என்று பொருள். முதிர்வு என்ற சொல் மிகுதியைக் குறிக்கும். இச்சொற்கள் எல்லாம் 'மிகுதி' என்ற பொருளைத் தருதலால் பொருளியைபு ஒன்றே கருதி முதுவேனில் என்பதற்கு மிகுதியான வெப்பமுடைய கோடைக் காலம் எனப் பொருள் கூறப்பட்டது.

இளவேனிலின் தொடக்கத்திலே வெப்பம் சிறிது குறைவு என்பது உண்மைதான். ஆனால் இளவேனிற் பருவம் முடியு முன்பே கதிரவன் வெப்பம் உச்சநிலையை அடைந்துவிடுகிறது. முதுவேனிற்காலத்தே தென்மேற்குப் பருவக்காற்றும், அக் காற்றால் மழையும் வந்துவிடுகின்றன. இவற்றால் வேனிலின் வெம்மை குறைந்துவிடுகிறது. முதுவேனிலின் பிற்பகுதியால் மழைபெய்வதை ஒட்டி அக்காலத்தே பயிரிடலைத் தொடங்க வேண்டும் என்பதை 'ஆடிப்பட்டந் தேடிவிதை' என்ற பழமொழி காட்டுகின்றது. முதுவேனிற் காலம் வெம்மை மிக்க காலமாயின் பைங்கூழ் உயிர்பெற்றுத் தழைத்து வளரமுடியாமல் போய்விடும். இன்றும் முதுவேனிற் காலமாகிய ஆனி, ஆடி மாதங்களில் சிறுவர்கள் தாளாற்செய்த பட்டங்களைக் காற்றில் பறக்கவிட்டு மகிழ்கின்றனர். காற்றும் மழையும் முதுவேனிலின் வெம்மையைக் குறைத்துவிடுவதால், இளவேனிற்காலமே முது வேனிற் பருவத்திலும் வெம்மை மிக்க காலம் என்பது அறியப் படும். நாட் காலையிலே கதிரவன் வெப்பம் படிப்படியே பெருகி நண்பகலுக்குப்பின் மாலைக் காலத்தே குறைந்து வருவது போல, இளவேனிலில் வெப்பம் வர வர உயர்ந்து உச்சநிலை அடைந்து பின் முதுவேனிலில் குறைந்து விடுவது இயற்கையாம்.

# பஞ்சமரபு

## மூலமும் உரையும்

[வித்துவான், வே. ரா. தெய்வசிகாமணிக்கவுண்டர்]

காப்பு

*கார்மேனிச செங்கட் கடவுளை யான்பணிந்து*
*பார்மேல் மிகவிளங்கப் பல்விதத்தால் — சீர்மேவு*
*மூவிசையுந் தோலு முயர்கூத்துந் தாளமும்*
*பாவிசைய வோதுவனிப் பண்பு.*

என்பது சூத்திரம். இச்சூத்திர மென்னுதலிற்றோவெனின் கீத வாச்சிய நிருத்த தாளங்களை யுணர்த்துதல் நுதலிற்று.

(இதன் பொருள்.) கார்போன்ற மேனியையுஞ் செந்தாமரை மலர் போன்ற கண்ணிணையுமுடைய திருமால் சேவடியை வணங்கிப் பாரிடத்து மிகவும் விளங்கப் பலவிதங்களாலும் கீத வாச்சிய நிருத்த தாளங்களை யியற்பாக்களாலே விளங்கச் செய்திவற்றின் பண்புகளை யறிவிப்பனென்றவாறு.

சீர்மேவு மூவிசையுமென்பது எழுத்து முதற்சீர்களாற் சேர்க்கப்பட்ட மூவிசையுமென்றவாறு. அவையாவன:

"நரம்பொடு குழலே மிடற்றின திசைசேய
மியங்கிய மூவிசை யாகு மென்ப."

தோலுமென்றவதனால் தோலாற் செய்யப்பட்ட முழவுகளையுஞ் சொல்லுதுமென்றவாறு. அவையாவன: நான்கு வகைப்படும்.

"பெயரொடு முறையே பிண்ட மெழுத்தாம்
வாரணி முலையாய் தோலின் வகையே"

என்றாராகலின். உயர்கூத்துமென்று சிறப்பித்தவதனால் உயர்ந்த தேவர்களா லாடப்பட்ட கூத்தினையுஞ் சொல்லுது மென்றவாறு. அவை:

"தாண்டவ நிருத்த நாட்டியங் குரவை
வரியே கோலங் கூத்துட் பட்டன
வரிமலர்க் கண்ணாய் வன்றொழிற் கூத்தே".

என எழுவகைப்படுமெனக்கொள்க. அவை மூன்று வகைப்படும்; சாந்தி விநோதம் வகைக்கூத் தெனக்கொள்க.

"சாந்தி விநோதம் வகைக்கூத் தென்ன
முந்திய வெல்லா மூவகைப் படுமே".

என்றாராகலின் அவற்றுள் சாந்தியாவது—"தாண்டவம், நிருத்தம் நாட்டியமெனவரு மூவகைக்கூத்தும், சாந்திக்கூத்தெனக்கொள்க.

தாண்டவமாவது, சொக்கதாண்டவம், ஆனந்ததாண்டவம் என இரண்டுவகையாகிய நூற்றெட்டுக் கரணக்கூத்துமெனக் கொள்க.

நிருத்தமாவது, தேசி, வடுகு, சிங்களமென்னும் மூவகைக் கூத்து மெனக்கொள்க வென்றவாறு.

நாட்டியமென்பது, இயலுமிசையுந் தழுவிய நாடகங்கள்.

"குரவை வரியே கோல மூன்றும்
வியவிய விநோத மாகு மென்ப".

இவற்றுட் குரவையாவது பதினாறாயிரம் கோபிகைகளை நடு நிறுத்தித் தம்முடைய கைகளைக் கோத்தவன் வீரமுமழகும் பாடி யாடியதெனக் கொள்க.

வரியாவது, "கொம்பு திருத்தி கொடியம் மானை, பந்துவில் பத்திரம்" முதலாயினவற்றால் ஆடப்படும் பெண்கோலமெனக் கொள்க.

கோலமாவது, ஈழம், அராளம், மறம், சித்து, சோனகம் இவை முதலிய பலகோலமாக ஆடப்படும் ஆண்கோலமெனக் கொள்க. வகைக்கூத்தாவது :

"பதினோ ராடலின் பகுதி யெல்லாம்
அதிரா வகைக்கூத் தாகுமென்ப".

அவையாவன: அல்லியக்கூத்து, குடைக்கூத்து, குடக்கூத்து, பாண்டரங்கம், மறக்கூத்து, கொடுகொட்டி, பாவைக்கூத்து, கடையம், பேடு, துடி, மரக்கால் எனவிவை.

இனித்தாளமென்றவதனால் வடதாளமுந் தமிழ்த்தாளமு மென விரண்டு வகைப்படும். அவையெல்லாஞ் சொல்லுது மென்றவாறு:

### அவையடக்கம்

"மால்பாடும் பாட்டினையும் வார்சடையோன் கூத்தினையும்
மேலாய நான்முகன்செய் பாணியையும் — சாலவென்
புன்கவியுஞ் சான்றோர்பாற் பொற்புடைத்தா மென்றுரைத்தேன்
மென்கொடியே மேதையான் மிக்கு".

[என் - னின்.] நூற்சிறப்பு அவையடக்கமுணர்த்துதல்

[இ-ள்.] திருமால் பாடிய பாட்டினையும் பரமேசுவரனாடிய கூத்தினையும் நான்முகன் கொண்ட தாளத்தினையும் ஓராதே,

யானுமொரு நூலாகச் செய்யவேண்டியதென்னையோ வெனின் யாரேனுமொருவர் செய்த புன்கவியுஞ் சான்றோரா லிகழப்படா தென்பதன்றி யென்மேதையாற் பாடினதா மென்றவாறு.

பாயிரம்

"நூலின் றிகழ்பெயருங் காரணத் தின்விரிவும்
பால்வகையாற் பாடினோன் றன்பெயரும் — நூலின்
அளவும் பயனு மெடுத்துரைக்க வென்றே
தளவ முறுவலாய் சாற்று".

[என் - னின்] பாயிரமுணர்த்திற்று.

[இ - ள்.] யாதானு மொருநூல் செய்யுமிடத்து நூற்பெயருங் காரணமு மாக்கியோன்பெயரு மளவும் பயனு முரைத் துரைக்கற்பாற்று.

இந்நூல் என்னபெயர்த்தோவெனின் இஞ்சிசூழ் மதுரைக் கோன்முன் னஞ்சுறுப்பாகச் சொல்லப்பட்டமையாற் பஞ்சமர பென்னும் பெயர்த்து.

அஞ்சுறுப்பாவன:

"இசையு முழவுந் தாளமுங் கூத்து
மசைவி லவிநய மஞ்சுறுப் பாகும்".

எனக்கொள்க.

"நல்ல நரம்பு குழல்கண்டந் தோல்கூத்துப்
பல்லபொருட் கூடுகின்ற பாணியுடன் — சொல்லிமலர்க்
கையா லவிநயமுங் காட்டுதல்காண் காரிகையாய்
பொய்யாத நூலின் பொருள்".

[என் - னின்] அஞ்சுறுப்புமுணர்த்திற்று.

இந்நூல் யாதுகாரணமாக யாக்கப்பட்டதோவெனின் நூற்பொருளையு மதன்பகுதியையு மோதா மாக்க ளுணர்தல் வேண்டியு மிகுபொருளுணர்ந்த மெய்த்தவத்தோரை நகுதல் காரணமாகவுஞ் செய்யப்பட்டது.

"மன்னுபொதி யத்திருந்த மாதவத்தோன் றாள்வாழ்த்திப்
பன்னு பனுவற் றொகையினுடன் — றன்னருஞ்சீர்
*சேறை யறிவனார் செய்தமைத்த வைந்துதொகை
கூறுத லிந்நூற் குணம்".

இந் நூலாராற் செய்யப்பட்டதோவெனின் ஐந்தியலு முணர்ந்த அறிவனாரால் செய்யப்பட்டது. இந்நூலெவ்வளவைத் தோவெனின் இருநூற்றுநாற்பது வெண்பாவாலே முற்றுப் பெற்றது.

[SXSI ·M• M·]

(தொடரும்)

* சேறைவாழ் சேதிபனார் என்ற பாடபேத முளது.

ஓம

# திருத்தொண்டத்தொகையில்

# தொல்காப்பியக் குறிப்பு

[சித்தாந்த பண்டிதர், திரு. ப. இராமநாத பிள்ளை]

தொல்காப்பியர் நிலத்தை முல்லை முதலாகப் பகுத்து நூற்பாச் செய்தனர். முல்லைக்குச் சிறுபொழுது—மாலை. குறிஞ்சிக்குச் சிறுபொழுது யாமம். மருதத்துக்குச் சிறுபொழுது வைகுறுவிடியல். நெய்தற்குச் சிறுபொழுது எற்பாடு.

இவை வருஞ் சூத்திரங்களான் உணரலாம்:

"காரு மாலையு முல்லை குறிஞ்சி
கூதிர் யாமம் என்மனார் புலவர்"

"வைகுறு விடியன் மருத மெற்பாடு
நெய்த லாதன் மெய்பெறத் தோன்றும்."
(தொல். பொருள் அகத்திணை - சு, அ)

'ஆகாத்தோம்பி ஆப்பயன் அளிக்கும், கோவலர் வாழ்க்கையோர் கொடும்பாடில்லை' என்பவாதலால் ஆவின் சிறப்பு நன்கு புலனும். ஆனேற்றுமீது இவர்தந்தூர்வோன் சிவன். அவ்வாக்களை மேய்த்துக் காப்போன் மாயன். அனைத்துயிர்களையும் செலுத்தலும் காத்தலும் முறையே செய்தருள்பவர் சிவனும் சிவையுமாவர். அம்முறையான் வாழ்க்கைக்கு முன்னிற்பது முல்லைத்திணையாகும். இவ்வுண்மை "முல்லையங் கண்ணி முடியாய் போற்றி" (சு.ரு.ந.) என்பதனால் உணரலாம். முல்லை சூடுதல் விறன் மிகு கற்பின் விழுமிய அடையாளமாகும். அவ்வுண்மை 'முல்லை சான்ற கற்பின் மெல்லியல்' (சிறுபாணாற்றுப் படை வரி, ந௦.) என்பதனால் உணரலாம்.

இம்முறையான வாழ்க்கைத் திருக்குறிப்பட் சேக்கிழாரடிகள் முல்லைக்குரிய மாலை முதலாக ஓதியருளுனர் அது வருமாறு:

"மாலை யாமம் புலர்வுறும் வைகறை
வேலை செய்வினை முற்றிவெண் ணீறணி
கோல மேனிய ராய்க்கைம் மலர்குவித்
தேல வஞ்செழுத் தோதி யெழுந்தனர்."
(கஉ சம்பந்தர், உ0அ)

முல்லைக்குக் கொன்றையுண்மையும் பெறப்படுதலால் அம் முறைபற்றிவரும் திருமாமறை வருமாறு :

" அங்கட் கடுக்கைக்கு முல்லைப் புறவ முறுவல்செய்யும்
பைங்கட் டலைக்குச் சுடலைக் களரி பருமணிசேர்
கங்கைக்கு வேலை யரவுக்குப் புற்றுக் கலைநிரம்பாத்
திங்கட்கு வானந் திருவொற்றி யூரர் திருமுடியே." (௪.௮௬-௧௦)

கடுக்கை-கொன்றை. முல்லைத்திணை. சுடலை-பாலைத் திணை. வேலை-நெய்தற்றிணை. புற்று-மருதத்திணை. வானம்-குறிஞ்சித் திணை: இக்குறிப்புக்களான் இவை பெறப்படும். இவை முதற் பொருள்பற்றி வந்தன.

இது போல் திருத்தொண்டத் தொகைக்கண் முதலும் ஈறு மாய்க் கருப்பொருள் பற்றி வருங்குறிப்புங் காண்க; கருப் பொருள் :

"தெய்வ முணவே மாமரம் புட்புறை
செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ
அவ்வகை பிறவுங் கருவென மொழிப"
(தொல். பொருள், அகத்-௧௮)

தெய்வமுதலாக யாழ் இறுதியாக ஓதப்பட்ட எட்டும் அவை போன்ற பிறவும் கருப்பொருள்களாகும். கருப்பொருள் கள் என்பன வாழ்க்கைத்துணைப் பொருள்கள்: இவ்வெட்டனுள் தெய்வநாட்டம் மாந்தர்க்கேயுள்ளது: மா, மரம், புள் முதலிய வற்றிற்கு உணு, பறை, செய்தி, யாழ்களுள்ளன. இவை மாந்தர்க்கும் உள்ளன. மாந்தர்க்குரிய சீரிய உணு கொலை புலை இல்லா நல நிறை உணவே. இதனைச் சுருங்கக் கூறின் சைவவுண வென்றும் ஆம். மா, மரம், புள், பறை, யாழ் முதலியவற்றால் தெய்வவழிபாடும் செய்தியால் உணவும் பெறப்படும்.

ஈண்டுத் தெய்வம் என்றது 'முப்போதுந்திருமேனி தீண்டி' வழிபாடியற்றும் செந்தமிழ் அந்தணரை என்க. இவ்வுண்மை வருந்திருமாமறையான் உணர்க.

" செந்தமிழர் தெய்வமறை நாவர் செழு
நற்கலைதெ ரிந்தவவரோ
டந்தமில்கு ணத்தவர்க ளர்ச்சனைகள்
செய்யவமர் கின்றவரனூர்
கொந்தலர்பொ ழிற்பழன வேலிகுளிர்
தண்புனல்வ ளம்பெருகவே
வெந்திறல்வி ளங்கிவளர் வேதியர்வி
ரும்புபதி வீழிநகரே." (௩. ௮௦ - ௪)

மேலும் பண்டைத் தில்லைவாழந்தணர்கள் சிவவழிபாட்டின ராய் வாழ்ந்து வந்த செந்தமிழ்ச் சீரியோராவர். அவ்வுண்மை வரும் சேக்கிழாரடிகள் திருமொழியானுணரலாம் :

"இன்றிவர் பெருமை எம்மால் இயம்பலாம் எல்லைத் தாமோ
தென்றமிழ்ப் பயனுயுள்ள திருத்தொண்டத் தொகைமுன்பாட
அன்றுவன் தொண்டர் தம்மை அருளிய ஆரூர் அண்ணல்
முன்திரு வாக்கால் கோத்த முதற்பொரு ளானார் என்றால்"
(கஉ. தில்லைவாழந்தணர் - க)

செந்தமிழந்தணர் என்பார் திருவைந்தெழுத்தினையோதியும், ஓதுவித்தும், வழுத்தியும், வழுத்துவித்தும், இடையறாது சொல்லி யும், சொல்லக்கேட்டும் வருவதே விழுப்பந்தரும் நல்லொழுக்க மாகக் கொண்டொழுகும் நல்லோராவர். அவ்வுண்மை நம்பி யாரூரர் குருகாவூர்த் திருமறையவர்பால் 'சிவாயநம' எனப் பேசி இருந்தார் என ஓதுவதான் உணரலாம். அது வருமாறு :

"குருகாவூர் அமர்ந்தருளுங் குழகர்வழி பார்த்திருப்பத்
திருவாரூர்த் தம்பிரான் தோழர்திருத் தொண்டருடன்
வருவாரப் பந்தரிடைப் புகுந்துதிரு மறையவர் பால்
பெருகார்வஞ் செலவிருந்தார் சிவாய நம எனப்பேசி.
(கஉ ஏயர்கோன், கருஅ)

திருமறையோர்—செந்தமிழ்த் தெய்வமாம் சிவனையும், பெருமறையாம் திருவைந் தெழுத்தினையும், திருமுறைகளையும் எந்தவேளையும் முறையே வழிபட்டும் வழுத்தியும் வரும் நல்லோராவர்.

தெய்வவழிபாட்டால் திருவருள் கைவரப் பெற்ற அந்தணர் மக்களால் தெய்வமெனவே போற்றப்படுவர். இவ்வுண்மை வரும் சிவஞானபோத மறை மொழியானுணரலாம் :

'இனி இவ்வான்மாக்களுக்குத் தமது முதல்தானே குருவுமா யுணர்த்துமென்றது'—சிவஞானபோதம் அ. உ: மேற்கோள்.

"அவன் அன்னியமின்றிச் சைதன்னிய சொரூபியாய் நிற்றலான்!" சிவஞானபோதம் அ. உ: ஏது.

இம்முறையில் தில்லைவாழந்தணர்கள் சிவவடிவமாகத் திருவருளால் காட்சியளிக்கப்பட்டனர். அவ்வுண்மை வரும் திருமாமறைகளானுணர்க :

"நீலத்தார்கரிய மிடற்றார்நல்ல
நெற்றிமேலுற்ற கண்ணினார்பற்று
சூலத்தார் சுடலைப்பொடி நீறணி வார்சடையார்

சீலத்தார்தொழு தேத்துசிற்றம்பலஞ்
சேர்தலாற்கழற் சேவடிகைதொழக்
கோலத்தாயரு ளாயுன காரணங் கூறுதுமே." (௩.க - ௩)

சிவவழிபாட்டு நற்றவத்தவ ருடம்பு மாசிலாப் பளிங்கொத்துத் திகழும். அவ்வுடம்பகத்துள்ள ஆருயிரைத் தன்னுளடக்கி அவ்வுடம்பின்கண் சிவன் தானாகவே தோன்றியருள்வன். இதுமுழு நீறு பூசிய முனிவருடம்பு அத்திருவெண்ணீற்றினுள்ளடங்கித் திருவெண்ணீறே புறந்தோன்றுவதனை யொக்கும். சிவபெருமானால் ஆட்கொண்டருளப்பட்ட அடிமையின் திருவுடம்பு சூழ்ந்த ஒளியில்தோன்றும் உண்மையினைவரும் திருமாமறைகளா னுணரலாம்.

"செங்கண் விடையார் திருமலர்க்கை
தீண்டப் பெற்ற சிறுவனார்
அங்கண் மாயை யாக்கையின்மேல்
அளவின் றுயர்ந்த சிவமயமாய்ப்
பொங்கி எழுந்த திருவருளின்
மூழ்கிப் பூமேல் அயன்முதலாம்
துங்க அமரர் துதிசெய்யச்
சூழ்ந்த ஒளியில் தோன்றினார்." (கஉ. சண்டேசுரர், ௫௫)

"ஆடி னாய்நறு நெய்யொடு பால்தயிர்
என்றெடுத் தார்வத்தால்
பாடி னார்பின்னும் அப்பதி கத்தினிற்
பரவிய பாட்டொன்றில்
நீடு வாழ்தில்லை நான்மறை யோர்தமைக்
கண்டவர் நிலைஎல்லாம்
கூடு மாறுகோத் தவர்தொழு தேத்துசிற்
றம்பலம் எனக்கூறி." (கஉ. சம்பந்தர், கஎச)

இம்முறையில் வைத்துன்னுங்கால் திருவள்ளுவநாயனார்:

"தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்றாங்
கைம்புலத்தா(று) ஓம்பல் தலை" (திருக்குறள், சங)

என்பதன்கண் தெய்வம் நடுவாக நிற்ப முன்னும் பின்னும் முறையே தென்புலத்தாரெனவும், விருந்தெனவும் ஓதியருளினர். முன்னோதப்பட்ட தென்புலத்தாராவார் கடந்த காலத்துத் தெய்வவழிபாடியற்றி ஏனையாரையும் வழிபடுவித்து வழிபாட்டு மறையும் அருளிச்செய்த மூதறிஞராவர். மூதறிஞர்—திருவடியுணர்வினர். தென்புலத்தார்—அழகிய மெய்யுணர்வினர். பின்னோதப்பட்ட விருந்தினர் நிகழ்காலத்து அங்ஙனம்

தொண்டுபூண் டொழுகுவோர். புதுமை 'தமக்கென முயலா நோன்றாட் பிறர்க்கென முயலும்' பெற்றிமை. மெய்கண்ட நூல்களுள் எண் பெரு நூல்களை இயற்றியருளிய **உமாபதிசிவ நாயனாரும்** தில்லை வாழந்தணரின் கால்வழியினராவர் என்பதுங் கருதுக.

இதுகாறும் கூறிய வாற்றால் தொல்காப்பியத்தில் காணப் படுங் கருப்பொருள்களுள் தெய்வம் என்பது அந்தணர் என்ப தன்கண் அடங்கவே அடுத்து நிற்பது 'உணு'வாகும். ஈற்றில் நிற்பது **'யாழ்'** ஆகும். இவ்விரண்டும் திருத்தொண்டத் தொகைக் கண் நம்பியாரூரர் திருவாயான் வெளிப் போந்த முதலும் ஈறு மாகிய திருமாமறைமொழிகளின் திருக்குறிப்பால் பெறப் படும்.

க. முதல்: "திருநீல கண்டத்துக் குயவனார்க் கடியேன்"

கக. ஈறு: "திருநீல கண்டத்துப் **பாணனார்க்** கடியேன்"

ஆருயிர்கள் அன்பு, அறிவு, அமைதி, அடியாரிணக்கம், ஆண்டவன் வழிபாடு, அகம்புறந்தூய்மை, ஆன்றவொழுக்கம், இன்ப வாழ்க்கை முதலியன பெற்று எழிலுறவாழ நல்லுணவும், நாயனடி வழிபாடும் வேண்டும். நல்லுணா எளிமையும், மாசின் மையும், நலம் பயப்பதுமாகிய மட்கலத்தில் ஆக்கப்படுதல் வேண்டும், கலத்தின்தீமை நலத்தினைக் கெடுக்கும் என்னும் உண்மை வரும் செந்தமிழ்ப் பொது மறையான் உணரலாம்:

"பண்பிலான் பெற்ற பெருஞ்செல்வம் நன்பால்
கலந்தீமை யால்திரிந் தற்று" (திருக்குறள் க000)

அந்தகைய மட்கல மமைத்து அடியார்க்கும் மாந்தர்க்கும் அன்புடன் அளித்து வந்தவர் திருநீலகண்டக்குயவனாராவர். மை வருந் திருமாமறையானுணர்க:

"அளவிலா மரபின் வாழ்க்கை
மட்கலம் அமுதுக் காக்கி
வளரிளந் திங்கட் கண்ணி
மணாளர் அடியார்க
உளமகிழ் சிறப்பின் மல்க
ஓடளித் தொழுகும் நாளில்
இளமைமீ தூர இன்பத்
துறையினில் எளியர் ஆனார். (கஉ. திருநீலகண்ட, ரு)

உணா ... ல் உள்ளம் அழகுறும் என்பதை வருமாறு ...ர்க:

உழைப்பால் உடலழகாம் ஊணாலாம் உள்ளம்
மழையொழுக்கா லாமுயிரின் மாண்பு.

எனவே உணவின் குறிப்பாக உணக்கல மமைத்தளிக்கும் வேட்கோவர் முதற்கண் ஓதப்பட்டனர். வேள்—மண். வேட்கோவர்—மண்ணின் முதல்வர். இயற்கை மண்ணைச் செயற்கையால் பற்பல வடிவமாக்கும் பயனார் பண்பினால் முதல்வராவர்.

இனி இறுதியில் 'திருநீலகண்டத்து யாழ்ப்பாணர்' ஓதப்பட்டுள்ளனர். 'அளப்பில கீதம் சொன்னார்க்கு அடிகள் தாம் அருளுமாறு' என ஓதப்படுதலால் வழிபாட்டின் சிறந்தவுறுப்புக் கீதமாகும். கீதம் என்பது செந்தமிழ்த் திருமாமறையாகும். இவ்வுறுப்பு வழிபாட்டின் உயிராகும். இக்கீத விழுப்பத்திற்குத் துணையாக நிற்பது யாழாகும்; கீதத்தின் மாண்புண்மை வருமாறு :

" அந்தணர் வேள்வியு மருமறைத் துழனியும்
செந்தமிழ்க் கீதமுஞ் சீரினால் வளர்தரப்
பந்தணை மெல்விர லாளொடும் பயில்விடம்
மந்தம்வந் துலவுசீர் மாமழ பாடியே." (ங - உ - அ - ங)

உணவு உடலை வளர்க்கும். கீதம் உயிரை வளர்க்கும். உணவுக்குத் துணை மட்கலம். கீதத்துக்குத் துணை யாழ். இவ்விரண்டும் முதலும் ஈறுமாக அமைந்துள்ளன. அம்மட்டுமன்றி இருவர் திருப்பெயரும் திருநீலகண்டர் என்பதும் நினைக்க நினைக்க வியப்பும் இன்பமும் மீக்கூரும். திருநீலகண்டர் என்னும் செந்தமிழ்ப் பெருமாமறையே யாண்டும் அடியார் இடர்தீர்ப்பதாகும். அவ்வுண்மை சம்பந்தப்பெருமானார் ஓதியருளிய திருநீலகண்டத் திருப்பதிகத்தானுணரலாம் :

" மறக்கு மனத்தினை மாற்றியெம் மாவியை வற்புறுத்திப்
பிறப்பில் பெருமான் திருந்தடிக் கீழ்ப்பிழை யாதவண்ணம்
பறித்த மலர்கொடு வந்துமை யேத்தும் பணியடியோம்
சிறப்பிலித் தீவினை தீண்டப்பெ றாதிரு நீலகண்டம்"

(க. கசு - சு)

சிவபெருமானின் அளவிலாப் பெருமைகளுள் நஞ்சுண்டு கண்டங் கறுத்தது நனிமிகச் சிறந்த தொன்றாகும்; என்னை ? ஏனையாரைக் காட்சியளவானே மாள்விக்க வந்த ஒருவரும் உண்ணா நஞ்சினைத் தான் உண்டு மாளாதிருந்த மாண்பினால் புலனாம் என்க.

சிவபெருமான் ஒருவரும் உண்ணா நஞ்சுண்டும் இறவாமையை வரும் திருமாமறையானுணரலாம் :

நவடியாற் கூற்றட் டானை
விளக்கினொளி மின்னினொளி முத்தின் சோதி
ஒப்புறுத்த திருவுருவத் தொருவன் றன்னை
யோதாதே வேத முணர்ந்தான் றன்னை
அப்புறுத்த கடனஞ்ச முண்டான் றன்னை
யமுதுண்டா ருலந்தாலு முலவாதானை
அப்புறுத்த நீரகத்தே யழலா னானை
யாரூரிற் கண்டடியே னயர்த்த வாறே." —சு. உசு - உ

கடல் கடைந்த காலத்துத் தோன்றிய கொடுநஞ்சு உண்டாரைக் கொல்லும் ஏனைய நஞ்சு போன்றதன்று. அது கண்டாரைக் கொல்லுங் கடுநஞ்சாகும். அவ்வுண்மை வரும் திருமாமறையா னுணரலாம்:

"விண்டார் புரமூன்று மெய்தாய் நீயே
விண்ணவர்க்கு மேலாகி நின்றாய் நீயே
கண்டாரைக் கொல்லுநஞ் சுண்டாய் நீயே
காலங்க ளூழியாய் நின்றாய் நீயே
தொண்டா யடியேனை யாண்டாய் நீயே
தூமலர்ச்சே வடியென்மேல் வைத்தாய் நீயே
திண்டோள்விட் டெரியாட லுகந்தாய் நீயே
திருவையா றகலாத செம்பொற் சோதீ" —சு. ௩அ - க0

இவ்வுண்மை வரும் பழந்தமிழ்நூல்களானு முணரலாம்:

"துண்ணென் றுடியொடு துஞ்சு ரெறிதரு
கண்ணி லெயின ரிடுகட னுண்குவாய்
விண்ணோ ரமுதுண்டுஞ் சாவ வொருவரு
முண்ணாத நஞ்சுண் டிருந்தருள் செய்குவாய்"
(சிலப்பதிகாரம், கஉ. வேட்டுவவரி.)

"பேரிசை நவிர மேஎ யுறையுங்
காரி யுண்டிக் கடவுள தியற்கையும்"
(பத்துப்பாட்டு, மலைபடுகடாம் - அஉ - ௩)

கடல் நஞ்சினை அளித்தவுண்மை வருமாறு:

" தடநிலைமா ளிகைப்புலியூர்
தன்னிலுறைந் திறைஞ்சிப்போய்
அடல்விடையின் மேல்வருவார்
அமுதுசெய அஞ்சாதே
விடமளித்த தெனக்கருதி
மேதினிக்கு வளம்நிறைத்தே
கடல்வயிறு நிறையாத
காவிரியின் கரையணைந்தார்'.' (கஉ. திருமூலர் - அ)

" அடுத்து மேன்மேல் அலைத்தெழும் ஆழியே,
தடுத்து முன்னளே ஆண்டவர் தாம் உணக்
கடுத்த நஞ்சுன் தரங்கக் கரங்களால்
எடுத்து நீட்டுநீ என்னையின் றென்செயாய் "

(கஉ தடுத்தாட் - கசுசு)

சிவபெருமானின் முழுமுதற்றன்மை நஞ்சமுதினை உண்டு வயிற்றடக்காமலும், உமிழ்ந்து நிலத்துப் போகடாமலும் கண்டத்துத் தங்க வைத்தமையாற் புலனும். அவ்வுண்மை வருமாறு:

" அவர்தங்கண் மனைவி யாரும் அருந்ததிக் கற்பின் மிக்கார்
புவனங்கள் உய்ய ஐயர் பொங்குநஞ் சுண்ண யாம்செய்
தவமின்று தடுத்ததென்னத் தகைந்துதான் தரித்ததென்று
சிவனெந்தை கண்டந் தன்னைத் திருநீல கண்ட மென்பார் "

(கஉ. திருநீலகண்டத் - ச)

'யாம்செய்தவம்:' மூவரென்றே எம்பிரானொடுமெண்ணி மயக்குற்றுப் பிறப் பெய்தாமல் மூவர்க்கு முதல்வனாய் அம்மூவர்க்குமுயிர்கொடுத்த மூதறிஞனாய் உள்ளவன் சிவனென்பதனைத் தெளிந்து அவனையே வழிபட்டுச் சிறப்பெய்துமாறு செய்த தவம். 'சென்று நாஞ் சிறுதெய்வஞ் சேர்வோ மல்லோம், சிவபெருமான் திருவடியே சேரப்பெற்றோம்' என்னும் மறைமொழியும் ஈண்டுன்னத்தக்கதாகும்.

திருத்தொண்டத் தொகைக்கண் 'திருநீலகண்டத்துப் பாணனார்க்கடியேன்' என்பதன்பின் வருந் தொடர்கள் திருக்கடைக் காப்பாகும். எனவே திருத்தொண்டத்தொகையின் முதலும் முடிவும் திருநீலகண்டம் நின்று திகழ்வது காண்க. இனிக் கண்டம் என்னும் சொல் பிரிவு என்னும் பொருளும் தருவதாகும். அம்முறையான் நோக்கின் நீலகண்டம் என்பது நீலப்பகுதி எனப் பொருள்பட்டு 'நீலமேனி வாலிழை பாகத்தொருவனும்' சிவன் என்பது புலனும். சிவபெருமானின் வடிவும் செயலும் திருவருளாற்றலே யாதலின் 'திருநீலகண்டம்' அம்மையினையே முற்றுங் குறிக்கு மென்றலுமொன்று!

திருத்தொண்டத் தொகையின் மேல் விளக்கிய குறிப்பினை நினைவுகூர ஒரு வெண்பாவில் தருகின்றோம்.

தெய்வமா ரூரிறையாற் செப்பநம்பி யாரூரர்
உய்யுமுறை யாழ்க்கலன்கள் ஒண்பொருளால்—செய்யகைக்
கொண்டார் இருவரையுங் கொண்டார் முதலீறாய்க்
கொண்ட திருத் தொண்டத் தொகைக்கு.

# அகராதிகள்

(செல்வி சிலம்பு, ௩௫, பரல் ௧0, ௬௫௪ ஆம் பக்கத் தொடர்ச்சி)

## 4 ஔ. மதுரைத்தமிழ்ப் பேரகராதி (1937)

யாழ்ப்பாண அகராதி, கதிரைவேற் பிள்ளை அகராதி போன்ற விரிவான முறையிலே இயற்றப்பட்டது இது. தமிழில் வழங்கும் சொற்களனைத்தையும் பல முறைகளில் திரட்டி இப் பெரிய அகராதியைத் தயாரிக்கச் செய்து வெளியிட்டவர் மதுரை இ. மா. கோபாலகிருஷ்ண கோன் அவர்கள். தமிழில் பல அகராதிகள் வெளிவந்திருப்பினும் அவ்வப்பொழுது வெளிவரும் நூல்களால் அதுவரை வெளியான அகராதிகளில் காணப்படாத சொற்கள் பல தெரிய வருகின்றன.

'இவ்வகராதியில் அதற்கு முன் வழங்கி வந்த அகராதிகளிற் காணப்படாத பல புதிய அமைப்புக்கள் இதில் உள்ளன. பல புதிய சொற்கள் இதில் சேர்க்கப்பட்டிருக்கின்றன. பல அறிஞர் களுடைய துணைகொண்டு இது தொகுக்கப்பெற்றது' என்று இவ்வகராதியின் முன்னுரையில் டாக்டர் உ. வே. சாமிநாதையர் குறிப்பிட்டுள்ளார். இது மிக விரிந்த முறையில் தயாரிக்கப் பட்டுள்ளது என்பதில் ஐயமில்லை. ஊர்ப் பெயர், நாட்டுப் பெயர், காவியப் பெயர், காவிய உறுப்பினர் பெயர், நூற் பெயர், நூலாசிரியர் பெயர் போன்ற பலவற்றிற்கும் சுருங்கிய அளவில் தேவையான அளவு விளக்கங்களைத் தந்துள்ளார்கள். சொற் பொருள் அகராதியோடு, பொருளகராதி, தொகையகாரதி, தொடையகராதி ஆகியவையும் சேர்க்கப்பட்டுள்ளன. வீரமா முனிவர் இயற்றிய சதுரகராதியில் இவை முதன் முதலில் வெளி யாயின எனினும் அவற்றைத் தமிழ்ப் புலவர்களைக் கொண்டு விரிவாக்கி வெளியிட்டுள்ளனர். இவையல்லாது தமிழ்மொழி பேசுவோர் தம் பேச்சில் மிக இயல்பாய் வழங்கிவரும் உருது, அராபி, பர்சியா, போர்த்துகீசிய, ஆங்கிலமொழிகளின் சொற்களை யும் தொகுத்தெடுத்து இவற்றுள் ஆங்கிலமல்லாத பிறமொழிச் சொற்களை ஓர் அகரவரிசையிலும், ஆங்கிலச் சொற்களை மற்றோர் அகரவரிசையிலும் கொடுத்துள்ளனர். இது இவ்வகராதியின் தனிச் சிறப்பாகும். இவ்வகராதியில் ஏறத்தாழ எழுபதாயிரம் சொற்களுக்குமேல் பொருள் விளக்கப்பட்டுள்ளன. இவ்வளவு விரிந்த முறையில் பல தமிழ்ப் பெரியோர்களை ஊக்குவித்து இவ் வகராதியை திரு. இ. மா. கோபாலகிருஷ்ண கோன் வெளியிட் டுள்ளார்.

இதன் முதல் பதிப்பு 1937-இல் வெளிவந்துள்ளது. இரண் டாவது பதிப்பு 1956 இல் வெளியாகியுள்ளது. இரண்டாவது

பதிப்பு இரண்டு பாகங்களாக வெளியிடப்பட்டுள்ளது. மதுரை எக்ஸெல்ஸியர் பிரஸில் பதிப்பிக்கப் பெற்றது. இதன் அளவு 26 × 17 செமீ. முதல் பாகத்தில் 4+1229 (1233) பக்கங்களும் இரண்டாம் பாகத்தில் 1058 பக்கங்களும் உள்ளன. மொத்தத்தில் 2291 பக்கங்களுடைய இவ்வகராதியின் விலை ரூ. 40. இப்பொழுது விலைக்குக் கிடைக்கக்கூடிய நல்ல அகராதியும் பெரியதும் விரிவான முறையில் தயாரிக்கப்பட்டதும் இது ஒன்றுதான்.

## 4 க. தமிழறிஞர் அகராதி (1939)

இவ்வகராதி இதுவரை வெளியாகாத புதிய முறையில் தொகுக்கப்பெற்று வெளியாகியுள்ளது. இதன் ஆசிரியர் சென்னை புரசைபாக்கத்தைச் சேர்ந்த ச. கிருஷ்ணசாமிப் பிள்ளை ஆவர். இவருடைய தந்தையார் பெயர் சீனிவாசன். தாயார் பெயர் செகநாதம்மாள் ஆகும். இவ்வாசிரியர் இவ்வகராதியைத் தொகுப்பதற்கு முன்னர் 'நவீன தமிழகராதி' என்ற அகராதியையும் தொகுத்து வெளியிட்டிருக்கிறார். இவரைப் பற்றிய குறிப்பு

யும் தெரி॥

நல்ல அகராதிகள் சில வெளியாய பின்னரும் இவர் இவ்வகராதியைத் தொகுத்துள்ளாரெனில் இதில் புதுமையில்லாதிருக்க முடியாது. இவ்வகராதி ஒரு புதியமுறையில் அமைந்துள்ளது. வழக்கம்போல் சொற்களைத் தொகுத்து அவற்றிற்குப் பொருளைக் கூறுவதோடு அமைந்து விடவில்லை. பிறமொழிகளினின்றும் தமிழ் மொழியில் வந்து கலந்துள்ள சொற்களைத் தொகுத்து இன்ன இன்ன மொழியினின்றும் இன்ன இன்ன சொற்கள் தமிழ் மொழியிற் கால அளவையிற் புகுந்துள என்பதைச் செவ்விய வகையில் விளக்கும் இந்நூலின் பலன்தரு திறனைக் கூறல் மிகையாகும். சொற்களின் பொருட் பொருத்தத்தைக் காட்ட ஆசிரியர் ஆங்காங்கு ஏற்புடைத்தாய் மேற்கோள்களை எடுத்துக் காட்டியுள்ளது அகராதிக்குப் பெரும் ஏற்றத்தைத் தருகின்றது.

இவ்வகராதியில் இருபத்தேழு தலைப்புகளில் சொற்கள் பிரிக்கப்பட்டு அவற்றிற்குப் பொருள் விளக்கப்பட்டுள்ளன. வடமொழியினின்றும் தமிழுக்கு வந்த சொற்கள், தெலுங்கு மொழியினின்றும் வந்த சொற்கள், உருது, இந்துஸ்தானி, பாரசீகம், அரபு, ஆங்கிலம், போர்த்துகீசியம், பிரஞ்சு, டச்சு, கிரீக், டர்க்கி, இந்தி ஆகிய மொழிகளினின்றும் தமிழுக்கு வந்த சொற்கள், ஆங்கிலத்தில் வழங்கும் தமிழ்ச் சொற்கள், இரண்டு அல்லது இரண்டுக்கு மேற்பட்ட மாறுதலான பொருள்களைத் தரும்

தமிழ் மொழிகள், கொச்சை மொழிகளும் அவற்றிற்கீடான தமிழ்ச் சொற்களும், நல்ல தமிழ்ச் சொற்களும் அவற்றிற்கீடான கொச்சைச் சொற்களும், மக்கள், விலங்கு, புள்ளினமுதலிய வற்றின் பெயர்த் தொகுதிபோல் வழங்கு மூலிகை வகைகளைக் குறிக்குஞ் சொற்கள், வான இயலைப்பற்றிய சொற்கள், ரகர றகர எழுத்துக்கள் உண்மையால் பொருள் வேறுபடும் தமிழ்ச் சொற்கள், ணகர னகர எழுத்துக்கள் உண்மையால் பொருள் வேறுபடும் தமிழ்ச் சொற்கள், லகர ளகர எழுத்துக்கள் உண் மையால் பொருள வேறுபடும் தமிழ்ச் சொற்கள், முறையே லக ரத்துக்கு ளகரத்தையும் ரகரத்திற்கு றகரத்தையும் ணகரத்திற்கு னகரத்தையும், நகரத்திற்கு னகரத்தையும் மாறுபாடாகப் பயன் படுத்தினும் ஒரே பொருளைத் தருபவையான தமிழ்ச் சொற்கள், எதிரிடையான பொருளைத் தரும் தமிழ்ச் சொற்கள், சொல்லத் தகாத சொற்களின் பொருளை நயம்பட வுரைக்கும் தமிழ்ச் சொற்கள், அமங்கல நிகழ்ச்சிகளையும் பொருள்களையும் மங்கல மாகக் கூறுந் தமிழ்ச் சொற்கள், பல்வேறு கூட்டத்தார் மொழி யும் மறைபொருட் சொற்கள், ஓரெழுத்து மொழிகள், ஒரு சொல்லின் முதல் இடை கடைகளில் ஒரெழுத்துக்கு ஈடாக மற் றோரெழுத்து வரினும் இலக்கண முடையதாகவே வழங்குவன, எழுத்துக்கள் மாறுபடினும் பொருள் வேறுபடாத சொற்கள், பழமையான சொற்கள், மருவி வழங்கிவரும் மரூஉச் சொற்கள் என்ற பல தலைப்புகள் மிகச் சிறந்த முறையில் இவ்வகராதி தொகுக்கப் பெற்றுள்ளன. புதிய முறையில் தொகுக்க வேண்டு மென்று எண்ணிய ஆசிரியரின் முயற்சி பாராட்டற் குரியது.

இதனை வெளியிட்டவர் சென்னை வி. குமாரசாமி நாயுடு ஸன்ஸ் ஆவர். 1939இல் வெளியிடப் பட்டுள்ளது. இதன் அளவு 18 × 13செமீ (16 + 336) 358 பக்கங்களையுடையது. இதன் விலை ரூ 1, அணா 4.

---

## உலக மொழிகளில் தமிழின் தனிச்சிறப்பு

'உலகில் அகத்துறை புறத்துறை இலக்கியங்களிற் சிறந்து விளங்கும் தமிழுக்கு ஈடு இணை கூறமுடியாது' என்று இந்திய அரசின் கல்வித் துறையைச் சேர்ந்த திரு. ஆர். ரெங்கராசன் தில்லித் தமிழ்ச் சங்கத்தில் பேசியுள்ளார்.

-த்திற்குத் தலைமை தாங்கிய இந்திய வேளாண்மை, ஆராய்ச்சிக் கழகத் தமிழ் வெளியீட்டுத்துறை ஆசிரியர் திரு. எம். எஸ். பி. சண்முகம், 'அகத்துறைக்கிலக்கணம் கண்ட பெருமையும், பக்தி நெறியில் பல்லா யிரம் பாக்களைத் தன்னகத்தே கொண்டுள்ள சிறப்பும் உலக மொழி களுள் தமிழ் ஒன்றிற்கே உண்டு' என்று குறிப்பிட்டுள்ளார்.

# தமிழகத் தென்றல்

[சாலை திரு. இளந்திரையன், M.A., M. Litt.]

மலைச்சாரல் விட்டிறங்கி மனிதச் சாரல்
மகிழ்சிறக்க வருகின்ற தென்றலே! என்
தலைச்சேரும் வெம்மையினைத் தணிக்க வந்து
தவழ்கின்ற இளங்குளிரே! 'வடக்கு நோக்கும்
மலைபோன்ற மாளிகையைக் காட்டில் தெற்குப்
பார்த்திருக்கும் மண்குடிசை இனிதாம்!'' என்ற
கலைச்செஞ்சொற் பழமொழியைக் கட்டி வைத்த
காட்டரசே, உன்பெருமை நவிலப் போமோ?

என்களைப்புத் தீர்க்கஎதோ முணுமு ணுக்கும்
என்தோழா, உயிரிருக்கும் எதுவும் என்றும்
உன்னணைப்பை வெறுத்ததில்லை அம்மட்டோ? நீ
உணர்வூட்ட நிமிர்ந்தகளிர் கோடி கோடி!
பின்னிருக்கும் குழல்மலரின் மணத்தை அள்ளிப்
பேசிநிற்கும் அவன்முகத்தில் தெளிப்பாய், உன்னை
அன்பிருக்கும் வரைமறப்ப துண்டோ, அன்பை
அருகிருத்தி மகிழ்ந்திருந்த 'காதற் காரன்?'

காதலிளங் காளைக்கு மட்டுந் தானோ?.......
கட்டுடலம் திரைத்தநரைப் பாட்டி சொல்லும்
"வேதமொழி'' ஊடுருவி, நினைவைப் பின்னால்
ஓட்டுகின்ற வெள்ளைமுடித் தாத்தா மேனி
சீதமதிக் கீற்றுருகு மாறன் றோநீ
சிறிதாகத் தொடுகின்றாய்! தென்றலே, என்
காதலனே, உலகெல்லாம் காத லிக்கும்
கனிவினனே,-நீ வாழ்க, என்றும் எங்கும்!

## தாய்மொழி வாயிலாக அனைத்துங் கற்பதே சிறந்தது

"கல்வி அறிவைக், குறிப்பாக விஞ்ஞானக் கல்வியைக் கற்பவரின் சொந்த மொழியில் கற்பிக்காவிட்டால் மக்கள் அனைவரையும் படித்தவர்களாக்க முடியாது. ஆங்கிலம் பாடமொழியாக இருந்தால் கல்வியின் முன்னேற்றம் மெதுவாகவே யிருக்கும்.

எந்த மொழியானாலும் விஞ்ஞானக் கலைச்சொற்கள் சிறிது காலத்தில் பழக்கத்திற்கு வந்துவிடும். ஆகவே எந்த மொழியிலும் பாடங்களைக் கற்பிக்கலாம்.''

பேராசிரியர் சத்தியேந்திரநாத் போசு
கல்கத்தா.

# செய்திகளும் குறிப்புக்களும்

## க. இந்தியின் பிடி இறுகுகின்றது !

இந்தி மொழியைத் திணிப்பதில் இந்திய அரசு தீவிரம் காட்டத் தொடங்கி விட்டது. இதற்கான எல்லா முயற்சிகளையும் அரசு கடுமை யாகச் செய்து வருகிறது. இந்திய அரசு ஊழியர்கள் விவகாரத்தில் இந்தி மொழித் திணிப்பு உறுதியாக நடத்தப் படுகிறது. இந்தியில் வரும் கடிதங்கள் அனைத்துக்கும் இந்தியிலேயே மறுமொழியளிக்க வேண்டும் என்று இந்திய அரசுத் துறைகளுக்கு ஆணை பிறப்பிக்கப் பட்டுள்ளது. அலுவலக அறிவிப்புக்கள் கூடுமானவரை இந்திமொழியி லேயே இருக்கவேண்டுமென்று உத்தரவு பிறப்பிக்கப்பட்டுள்ளது. நாற்பத்தைந்து வயதுக்குக் குறைந்த அரசு அலுவலர்கள் எல்லாரும் இந்தி மொழியை அறிந்தவர்களாகவே இருக்கவேண்டும் என்ற கட்டா யம் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது.

**குறிப்பு :** இந்தியைத் திணிப்பது எங்கள் நோக்கமல்ல என்று பண்டித நேருவும பிற அமைசசர்களும் சிற்சில வேளைகளில் பேசுவதும், அதேபோதில் இம்மாதிரியான அரசு ஆணைகள் ஒருபுறம் பிறப்பிக்கப் பட்டுக் கொண்டு வருவதும் இந்தி எப்படியும் கட்டாய மொழியாக்கப் படும் என்பதைக காட்டும் அறிகுறிகளாகும்.

## உ. தனித்தமிழ் இயக்கம் பற்றி அமைச்சர் பக்தவத்சலம் கருத்து

"இன்று பலர் ஆவேசத்துடனும் பிடிவாதத்துடனும் அறியாமை யுடனும தனித்தமிழ் வெறி காட்டுகின்றனர். அயல் மொழிகளி லிருந்து ஆங்கிலமொழி பல சொற்களை ஏற்றுக்கொண்டதால்தான் இன்று சிறந்து விளங்குகிறது. வளர்ந்து கொண்டுமிருக்கிறது. இங்குச் சிலர் இறைவனைத் தமிழில்தான் வழிபட வேண்டு மென்றும் இறைவனின் பெயரைக்கூட தமிழில்தான் அழைக்கவேண்டு மென்றும் கூறுகின்றனர். இம்மாதிரி வெறி ஏற்படுவது வருந்தத்தக்கது. நம் முடைய நல்ல தமிழ்ச சொற்களை மலையாளிகள் பயன்படுத்துகின்றனர். ஆகவே தனித்தமிழ் வெறி வருந்தத் தக்கது."

என்று தமிழக அமைசசர் திரு. பக்தவசசலம் அவர்கள், 2-7-61-இல் மயிலையில் நடைபெற்ற மகாபாரத நூல் வெளியீட்டு விழாவில் பேசிய காலை குறிப்பிட்டுள்ளார்.

**குறிப்பு :** அமைசசரவர்கள், தனித்தமிழியக்கத்தை, இங்ஙனம் 'வெறி' எனக் கடிந்து கூறியிருப்பது மிகமிக வருந்தத் தக்கது. மொழிப்பற்று, நாட்டுப்பற்று, இனப்பற்று முதலியன வெறியாகா. பற்று வேறு ; வெறி வேறு. பிறமொழிக் கலப்பால் ஆங்கிலம் வளர்ந்தது எனச் சுட்டிக் காட்டுவது பொருத்த முடைத்தன்று. ஆங்கிலம், வளர வேண்டிய குறைபாடுடையது ; தமிழ் நன்கு வளர்ந்து விட்ட முழுத் தன்மை வாய்ந்தது. இதை முதலில் புரிந்து கொள்ளவேண்டும். மலையாளிகள் சில தனித்தமிழ்ச் சொற்களைப் பேசுவது வியப்பன்று. மலையாளத்திலுள்ள வடமொழிக்கலப்பை நீக்கி விட்டால் அது தூய தனித்தமிழேயாகும். எனவேதான் தமிழும் பிறமொழிகள்போல் உருத்தெரியாமல் மாறிவிடக் கூடாது என அறிஞர்கள் கூறுகின்றனர். இஃது எங்ஙனம் வெறியின் பாற்படும் என்பதுதான் புரியவில்லை. இன்றுள்ள நிலைத்திருக்கும் சைவ வைணவத் திருக் கோவில்கள்

தேவாரம் திருவாய்மொழி முதலிய தமிழ்மறைகளாலேயாம். அத் தமிழ்மறைகளிற் காணப்படும் தூய தமிழாக வழங்கிவந்த ஊர்ப் பெயர் இறைவன் இறைவியர் பெயர் மாற்றப்பட்டிருப்பதை யுன்னிஞல் வெறி எவர்பால் எந்நாள் தோன்றியதென்பது தானே வெளிப்படும்.

## ௩. வாழ்க. ம. பொ. சி.!

"தமிழகம் முழுச் சுயாட்சி உரிமை அடையும் வரை நான் ஓய்ந் திருக்கப்போவதில்லை" என்று தமிழரசுக் கழகத் தலைவர் திரு ம.பொ. சிவஞானம் அவர்கள், கடந்த 25-6-61 இல் நடைபெற்ற தமது 56 ஆவது பிறந்த நாள் விழாவில் பேசிய காலை குறிப்பிட்டார். விழா விற்குத் திரு. ஐயம்பெருமாள் கோனார் அவர்கள் தலைமை தாங்க, பல கட்சியினரும் வாழ்த்துரை வழங்க விழா இனிது நடைபெற்றது. அக்காலை திரு. ம. பொ. சி. அவர்கட்குப் பொற்காசுகள் 56 அன்பளிப் பாக வழங்கப்பட்டன.

குறிப்பு: திரு. ம. பொ. சி. அவர்கட்கு எமது வாழ்த்தினையும் தெரிவித்துக் கொள்ளுகிறோம். அவர் சூளுரைத்திருப்பதுபோல் "வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத் தமிழ் கூறு நல்லுலக"த்தின் முழு விடுதலைக்கும் அவர்கள் தொண்டாற்ற மேலும் நீண்ட வாழ்நாளை அவர்கட்கு நல்கி இறைவன் அருள்புரிவாஞக.

## ௪. நீலகண்ட சிகரம்

இதுகாறும் சென்றடைய முடியாதிருந்த இமயத்தின் பகுதியான நீலகண்ட சிகரம் என்னும் இடத்தை இந்திய மலையேறும் குழுவினர் கடந்த 18-6-61-இல் அடைந்து விட்டனர். இச்சிகரத்தின் உயரம் 21,640 அடி. இதற்கு முன் இச்சிகரத்தை அடைய எழு முறை முயன்றிருக்கின்றனர்.

குறிப்பு: சிகரத்தை அடைந்தவர்களின் சீரிய முயற்சி பாராட்டத் தக்கது. அத்துடன் 'நீலகண்டம்' என்னும் பெயரில் இமயத்தின் ஒரு பகுதி பெயர் பெற்றிருப்பதும் குறிப்பிடத்தக்கது. தமிழரின் பண்டைய சமய வரலாற்றுக்கு இஃது அரண் செய்வதாகும். இது போன்றே கயிலாய மென்னும் திருவெள்ளி மலையும் திகழ்வது

## ௫. 1200 ஆண்டுகட்கு முன்பிருந்த நகரம்

கௌசாம்பி மன்னர்கள் ஆளுகையில் இருந்ததாகக் கருதப்படும் பழங்கால அரண்மனை, கற்கோட்டை, அரண்செய்யப்பட்ட நகரமைப்பு ஆகியவை யமுனை ஆற்றங்கரையில் அண்மையில் தோண்டியெடுக்கப் பட்டுள்ளன. அலகாபாத் பல்கலைக் கழகப் பண்டை வரலாறு - பண் பாட்டுத் துறைத் தலைவர் திரு. சி. ஆர். சர்மா அவர்கள் தலைமையின் கீழ்ச் செய்யப்பட்ட புதைபொருள் ஆராய்ச்சியின்போது இவை கண்டு பிடிக்கப்பட்டன. அரப்பா, மொகஞ்சதரோ நகர்க் கோட்டை வளைவு களில் மூன்றில் இரண்டு பங்குக்குச் சமமான அகலத்தில் இந்தப் பண்டை அரண்மனை அமைந்து கிடக்கிறது. 1015 அடி நீளமும், 500 அடி அகலமும் இருக்கிறது. கோட்டையைச் சுற்றி 15 அடி ஆழம் 15 அடி அகலத்தில் அகழியும் காணப்படுகிறது. அறைகளும் அமைப்பும் முன்னேறிய நாகரிகத்தைக் காட்டுகின்றன.

குறிப்பு : யமுனை ஆற்றங்கரையில் இப்புதை பொருள் ஆராய்ச்சி நடைபெற்றதுபோல் காவிரி, பொருநை ஆற்றங்கரைகளிலும் ஆராய்ச்சி செய்யப்பட்டால் தமிழகவரலாற்றில் பல உண்மைகளைக் காணலாம்.

## சு. சமக்கிருத மொழிபற்றி திரு. இராசேந்திர பிரசாத் கருத்து

"நாட்டை ஒற்றுமைப் படுத்தும் மொழியாக விளங்கியது சமஸ்கிருதம், இந்தியாவின் மொழிகள் எல்லாம் ஒரு மரத்திலிருந்து தோன்றிய கிளைகள் போல சமஸ்கிருதத்திலிருந்து தோன்றின. அந்த மரத்தின் வேரிலிருந்து ஊட்டம் பெற்று வருகின்றன" என்று இந்தியக் குடியரசுத் தலைவர் திரு. இராசேந்திரபிரசாத் அண்மையில் கல்கத்தாவில் நடைபெற்ற சமஸ்கிருத சாகித்ய கழகத்தின் 26 ஆவது மாநாட்டைத் துவக்கி வைத்துப் பேசியகாலை குறிப்பிட்டுள்ளார்.

குறிப்பு : சமக்கிருதம் வழக்கொழிந்த மொழி. அஃதொன்றே அதன் குறைபாட்டை விளக்கப் போதுமான சான்று. அங்ஙனமிருக்க அஃதே எல்லா மொழிகட்கும் அடிப்படை எனப் புகல்வது பொருந்தாக் கூற்றே. தமிழ் மொழியொன்றே தொன்மைதொட்டு நின்று நிலவி வரும் மொழி. சமக்கிருதத்தால் நாட்டில் ஒற்றுமை நிலவியது என்று கூறுவதும் பொருத்த முடைத்தன்று. சமக்கிருதக் கலப்பால்தான் தமிழ் சிதைந்து, தெலுங்கு, மலையாளம், கன்னடம், துளு முதலிய மொழிகள் தோன்றவும், தமிழினம் பல மொழியினங்களாகச் சிதறவும் ஆன நிலைமை ஏற்பட்டது.

## எ. வ. உ. சி. நினைவு மன்றம்

இந்தியாவின் விடுதலைப் போராட்டத்தில் முதன்மைப் பங்கு கொண்ட முதல் தமிழரான வ. உ. சிதம்பரம் பிள்ளையவர்களின் நினைவு மன்ற மொன்றை, அவரது பிறந்தவிடமாகிய ஓட்டப்பிடாரத்தில் அறுபதினாயிரம் ரூபா செலவில் அரசியலார் அமைத்துள்ளனர். விடுதலைப் போராட்டத்தின் நூற்றாண்டு விழாவினையொட்டி இம்மன்றம் சூலைத்திங்கள் மூன்றாவது கிழமையில் தமிழக முதலமைச்சர் காமராச நாடார் அவர்களால் திறந்து வைக்கப்பெறும்.

## அ. . பாகம் பிரியாள் மாதர் கழகத்தின் 33ஆவது ஆண்டு விழா

இவ்விழா ஆனித்திங்கள் கஉ ஆம் நாள் (22-6-61) திங்கட் கிழமை திருமதி. அம்மணி சுப்பிரமணியம், B Sc. M.Ed. அவர்கள் (தலைமை ஆசிரியை, ஸ்ரீ காந்திமதி அம்மாள் மகளிர் உயர்நிலைப் பள்ளி பாளையங்கோட்டை) தலைமையில் மிக்க சிறப்பாக நடந்தது. பெரும் புலமையும் ஆசிரியைப் பணியு மிக்க மகளிர் பலரால் பல பொருள்கள் பற்றி விரிவுரைகள் நிகழ்த்தப்பட்டன. வாழ்க! அனைவரும், வாழ்க! கழகம்.

## கூ. குடியரசுத் தலைவர் நூலகம்

டாக்டர் இராசேந்திரப் பிரசாத் தமக்குச் சொந்தமான நூல் நிலையத்திலுள்ள பன்னீராயிரம் நூல்களையும் பீகார் வித்தியா பீடத்திற்கு அன்பளிப்பாகத் தரப்போவதாகப் பாட்னாவில் அறிவித்துள்ளார்.

# மதிப்புரை

**'முக்கனி'**

இஃதோர் அரிய இலக்கியத் திங்களிதழ். இதன் பன்மொழிப் புலவர் ப. சுந்தரவேலனாரவர்கள். வெளியிடுபவர், ப. முகம்மது மைதீன், 8. வேல்லார்சு ரோடு, சென்னை-2. தனி இதழ் விலை காசு 25.

இவ்விதழ் சிறந்த அரிய கட்டுரைகளையும், பல அறிஞர்களின், கட்டுரைகளையுங் கொண்டு அழகிய முறையில் திகழுகின்றது. மேலும் தமிழேயுயிராய், அதற்குழைப்பதே உயிர்த் தொண்டாய், தமிழ் வளர்ச்சியே தன்வளர்ச்சியாய், தமிழ்ப்புலவர்களைப் பாராட்டுவதும், தமிழ் மாணவர்கட்கும் பெருமக்கட்கும் தமிழார்வத்தையுண்டுபண்ணி அவர்களால் தமிழ் பயிலப்படுவதனைக் காண்பதே தம் வாழ்வின் குறிக்கோளாய், எளிமையும், இனிமையும், அன்பும், பணிவும், பண்பும், ஈவும், இரக்கமும் முதலிய நலங்களெலாம் ஒருங்கே ஒருவடிவத்தில் காணுமாறு திகழ்பவர் பேராசிரியர் நம் மயிலை. சிவ. முத்து அவர்களாவர். அவர்களுடைய வரலாறும், உருவப் படமும் இதன்கண் காணப்படுகின்றன. இவ்விதழுக்குரிய அவர்கள் வாழ்த்தும், பிற சான்றோர்கள் வாழ்த்துங் காணப்படுகின்றன. யாமும் எல்லா வகையாலும் இவ்விதழ் வளர்ந்தோங்கி நாட்டுக்கும், மொழிக்கும், நன்னெறிக்கும் ஆக்கம பல புரிந்து வாழுமாறு இறையடியை வழுத்தி வாழ்த்துகின்றோம்.

## தூத்துக்குடி சைவசித்தாந்த சபையின்
## 77 ஆம் ஆண்டு நிறைவு விழா

இவ்விழாவின் தலைவர் தருமபுர ஆதீனச் சார்பாகச் சென்னையின்கண் நிகழ்ந்துவரும் சமயச் சொற்பொழிவு மன்றத்துறை வித்துவான். ஒடுக்கம், தவத்திரு சோமசுந்தரத்தம்பிரான் சுவாமிகள் அவர்கள் ஆவர்.

விழா நிகழ்வு வள்ளுவர் ஆண்டு கதகூஉ ஆனித்திங்கள் க0, கக (24, 25-6-1961) சனி, ஞாயிறு ஆகிய இரண்டு நாட்களிலும் அதற்கென அமைக்கப்பட்ட அழகிய சிவஞானப் பந்தரின்கண் மிக்க சிறப்பாக நடந்தேறின.

நுண்மாண் நுழைபுலமிக்க பேராசியர்களும், பெரும் புலவர்களும், அகத்தவம்புரி அருந்துறவியரும் ஆகிய பலரும் பற்பல அரும்பொருள்கள்பற்றி விரிவுரையாற்றினர். தமிழகத்தே நீண்ட பல யாண்டுகளாக மிக்க சிறப்போடு தொடர்ந்து நிகழ்ந்துவரும் சபை இஃதொன்றுமேயாம். இச்சபையின் தலைவர் செயலர், உறுப்பினர், ஆதரவாளர் முதலியோரின் அரும் பேருழைப்பே இதன் சீர்மைக்குக் காரணமாகும். சபையும் சார்பினரும் என்றும பெரு நன்றெய்தி வாழ்க! விழாவுந் தலைவரும் விரிவுரையாளரும் வெறுக்கை பலபெற்றுப் பெருக்கமொடு வாழ்க!

திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக்
கழகத்திற்காக, சென்னை, 2-140, பிராட்வே,
அப்பர் அச்சகத்தில், திரு. வ. சுப்பையா அவர்களால்
அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர்: வ. சுப்பையா.




சிலம்பு ௩௫ — திருவள்ளுவர் ஆண்டு ௧௯௯௨, ஆடி — பரல் ௧௨
ஆகஸ்ட், 1961

திருச்சிற்றம்பலம்

# தாய்மொழி அருச்சனையே தக்கது

*நாழிகையே நாள்கிழமை நண்ணு திங்கள் ஆண்டடியார்*
*வாழிமறை யோதல்வழி பாடு.*

'அருச்சனை வயலுள் அன்புவித்து இடுதல்' வேண்டும். அப்படிச் செய்வோர் தொண்டராவர். அருச்சனை என்பது வழிபாடு. வழி பாட்டின் உயிர் மலர்தூவிப் போற்றல். தளிர் தூவியும் போற்றலாம். அருச்சனைக்குரியது 'போற்றி' எனப் புகலும் தூய தனித்தமிழ் மந்திரம. சிவாலய முனிவர்க்கு நாடொறும் ஓதி வழிபடத் தேவாரங்களைத் தொகுத்துக் கொடுத் தருளியவர் அகத்திய முனிவர். அவர் தொகுத்தருளிய திருப்பதிகங்கள் இருபத்தைந்து. அவற்றைப் பகுத்த பகுப்புக்கள் எட்டு, இவ்வெட்டனுள் அருச்சனைப் பகுதி ஏழாவதாகும். அதன் குறிப்பு வருமாறு:

"பந்து வேற்று கொன்றிவை மூன்றும்
நந்தலில் **அருச்சனை** நாட்டிய தாகும்".

இந்நூல் அகத்தியர் தேவாரத்திரட்டென வழங்குகின்றது.

'போற்றி' என்னும் மறைமொழி ஓதி வழிபடல் வேண்டும் என்பதனை வருந் திருமாமறைகளான் உணரலாம்.

"போற்றிசைத்து நின்கழற் புகழ்ந்துபுண் ணியங்கொளார்"
—௩. (தேற்றமில்) - ௫௨ - ௧௦.

"போற்றிசைத்துன் னடிபரவ நின்றாய் போற்றி"
—ரு. ருஎ - ௧0.

"போற்றித் தன்கழல் தொழுமவ னுயிரைப்"
—எ. (காற்றுத்) ௬உ - ௬.

"போற்றி யென்றும் புரண்டும் புகழ்ந்துநின்று"
— அ. திருசசதகம் - ௪௫.

"போற்றிசைத் தும்புகழ்ந் தும்புனி தன்னடி"
—௧0. கடவுள் வாழ்த்து - உ௪.

"போற்றி செய்தரன் பொற்கழல் பூண்டதே"
—௧௧. ஆளுடைய...கலம் - ௬௧.

"போற்றிசைத் துப் பணிந்தருள் பெற்றுப்போந் தெவ்வுருவும்"
—௧உ. சம்பந்தர் - ௪0௫.

இவை போன்று வரும் திருக்குறிப்பிடங்கள் பலவாகும்.

"கூற்றுதைத்த, நீற்றினனைப்,போற்றுவார்கள், தோற்றினரே."
—௩ ௪0 - ௪.

"நின்று மலர்தூவி, இன்று முதுகுன்றை, நன்று மேத்துவீர்க்கு, கென்றும் இன்பமே."
—௧. ௬௩ - ௧.

"கடிமலர்தூய்த் தொழுமடியார் நெஞ்சி னுள்ளே கன்றாப்பூர் நடுதறியைக் காண லாமே." (௬. விடிவதுமே. ௬௧ - உ)

என்பதனால் தொழுகையிற் சிறந்தது மலர்தூவிப் போற்றல் என்பது விளங்கும். சேக்கிழாரடிகள் தாம் பாடியருளிய திருத்தொண்டர் புராணத்துள் "பெருமதில் சிறந்த" (௧உ. தடுத்தாட்கொண்ட புராணம், ௧0௪) எனத் தொடங்கும் திருப்பாட்டில் ஒன்று முதல் பதினொன்று முடியவுள்ள திருமுறைகள் தனித்தமிழ்மாமறைகள் என ஓதியருளினர். மேலும் "நெருளுமெய்க்கலை" (௧உ - சம்பந்தர் - உஉ௩) எனத் தொடங்கும் திருப்பாட்டில் "எழுது சொன் மறை" எனவும், "திங்களணி" (௧உ - சம்பந்தர் - உ௬0) எனத் தொடங்கும் திருப்பாட்டில் "தமிழ் வேதம் பாடினர்" எனவும் ஓதியருளியமை மேலதனை ...ரம்.

திருமுறை கண்ட புராணத்துள் 'அருமறையைச் சிச்சிலி' எனத் தொடங்குந் (௧எ) திருப்பாட்டில் ஆரிய மறையினும் சீரியது தமிழ்மறை எனவும், 'கொண்டுகுல' எனத் தொடங்குந் (௧௩) திருப்பாட்டில் 'கண்டபெரு மந்திரமே மூவர் பாடல்' என்பதன்கண் மூவர் பாடல், தனித்தமிழ் மந்திரமே பெருமந்திரம் எனவும் ஓதுதல் காண்க. 'திசைக்கு மிக்குலவு' எனத் தொடங்

குந் திருவிசைப்பாத்திருப்பாட்டில் ‘அசிக்கஆ ரியங்கள் ஓதும் ஆதரை’ எனவும், பதினோராந் திருமுறையில் ‘ஆரியப் புத்தகப் பேய்கொண்டு புலம்புற்று’ எனவும் வருதலால் தமிழ்மாமறையின் தனிப்பெருமை காண்க.

சிவப்பிரகாசவடிகள் நால்வர் நான்மணிமாலையில் ‘வேத மோதின் விழி நீர் பெருக்கி, நெஞ்சுநெக்குருகி நிற்பவர்க் காண் கிலம்’ எனவும், ‘திருவா சகமிங் கொருகா லோதின்,............ அன்பரா குநரன்றி, மன்பதை யுலகில் மற்றைய ரிலரே’ எனவும், இராமலிங்க அடிகள்,

“இலைக்குளந் தழைந்த அளி விடங்கருற வழைத்தூன்வாய்த்
தலைகுத் தலை மதலையுயிர் நுழைப்பவழைத் தருளியநின்
கலைக்குட்பட கலையின்முதற் கலைக்குமுறு கணக்குயர்பொன்
மலைக்குமணு நிலைக்குமுரு வன்றெண்டப் பெருந்தகையே.”

—ஆளுடைய நம்பிகள் அருண்மாலை, ௩

எனவும் ஓதுவன வற்றாலும் அவ்வுண்மை பெறப்படும்.

ஆசிரியர் தொல்காப்பிய முனிவரனார் :

“நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த
மறைமொழி தானே மந்திர மென்ப.”

—தொல். பொருள் - [illegible].

இந்நூற்பாவின் உரையின்கண் பேராசிரியர் ‘தானே’ என்பது பிரித்தான், இவை தமிழ் மந்திர மென்றற்கும், பாட்டாகி அங்கத மெனப்படுவனவும் உள, அவை நீக்குதற்குமென உணர்க என உரைத்தனர். இதனால் தனித்தமிழ் மந்திரவுண்மை பெறப் படும்.

இவ்வாற்றால் நம் அருமைக் கன்னித் தமிழில் மறைகளும் மந்திரங்களும் தொன்றுதொட்டே நின்று நிலவுகின்றன என்பது உறுதி. தாய்நாடு, தாய்மொழி, தாய்நெறி ஆகிய மூன்றி னிடத்தும் உண்மையான பேரன்புகொள்ளாதார் சீர் சிறப்புக்க ளெய்தார். உலகோரால் மதிக்கப் படவுமாட்டார்.

பன்மொழிக்குத் தாயாக நிலவும் நம் ஈறில் தமிழின்கண் தொன்றுதொட்டே மறை வழங்கி வந்த உண்மை திருமறைக் காட்டு நிகழ்ச்சியாற் காணலாம். சேக்கிழாரடிகள் “அருமறை கள் திருக்காப்புச் செய்துவைத்த அக்கதவந் திறந்திடவும் மறை கள் ஓதும், பெருகியவன் புடையடியார்” எனப் பிள்ளையாரையும் அப்பரையும் கிளந்தெடுத்து ஓதியருளினர். ‘அம்மறைகள் ஓதும்’ என்பது அம்மறைகளோடு ஒத்த மறைகள் ஓதும்

என்றாகும். இவ்வுண்மை தொல்காப்பியம் நான்காம் வேற்றுமை நூற்பாவின் பொருட்பாகுபாட்டுரையின்கண் வரும் எடுத்துக் காட்டான் உணரலாம்.

அப்பொருட் கிளவியும் அதன்பால என்மனார்"-தொல் - சொல் - எசு. "அப்பொரு ளென்றது அன்ன பொருளை; இவ் வாடையு மந்நூலானியன்ற தென்றது போல." அந்நூல்-அது போன்ற நூல்.

'செல்வன் கழலேத்தும் செல்வ'த்தையருளும் சைவ சமயத்தைச் சார்ந்த நாம் சிவதீக்கையின் வண்ணம் நாடொறும் திருநீற்றுத் திருப்பதிகம் ஓதிப் பதினாறு இடங்களில் குழைத்து நீறணிதலும், திருவங்க மாலைத் திருப்பதிகம் ஓதி ஒன்பதிடம் தொடுதலும் முப்பொருளுண்மை தேறலும் கைக்கொண் டொழுகிவருகின்றோம்.

நாடொறும் 'க. நாழிகைப்பாட்டு உ. நாட்பாட்டு ௩. கிழமைப்பாட்டு ச. திங்கட்பாட்டு ரு. ஆண்டுப்பாட்டு சு. அடியார்ப்பாட்டு எனப் பகுத்துத் திருமாமறைகளை ஓதி வருதல் வேண்டும்.

இவற்றின் சுருக்கம் வருமாறு:

க. நாழிகை, க. துஞ்சலும், உ. காதலாகிக் ௩. சொற்றுணை, ச. மற்றுப்பற்று.

இந்நான்கற்கும் உரிய வேளைகள் முறையே: க. இரவு நாழிகை இருபத்தைந்து முதல் காலை ஐந்துவரை, உ. காலை ஐந்துமுதல் நண்பகல் பதினைந்து வரை; ௩. பகல் ப[illegible] முதல் மாலை இருபத்தைந்து வரை; ச. மாலை முதல் இரவு ஐந்து வரை.

உ. நாள்: ஐந்தாந்திருமுறைக்கண் 'சிந்திப்பார் மனத்தான்' எனத் தொடங்கும் திருப்பதிகம்.

௩. கிழமை: போற்றித் திருத்தாண்டகம் ஐந்து, திருவாசகத்துள்ள போற்றித்திருவகவல், தரிக்கிலேன் காய வாழ்க்கைத்திருப்பதிகம் ஆகிய இரண்டு; மொத்தம் ஏழு. இவ்வேழும் அருச்சனைத் திருப்பாட்டாகும்.

ச. திங்கள்: இரண்டாந் திருமுறைக்கண் 'மட்டிட்ட' எனத் தொடங்கும் திருப்பதிகம.

ரு. ஆண்டு: ஆண்டென்பது பன்னிரு திங்களுங்கூடிய தொன்றாகும். திருவருட் குறிப்பால் திருமுறைகளும் பன்னிரண்டேயாம். திருநெறிச் செல்வர்கள் திங்களுக்கு ஒவ்வொன்றாகப் பன்னிரு திங்களிலும் பன்னிரு திருமுறைகளையும் ஓதி வருதல் அவர் தம் இன்றியமையா நற்றவப்பண்பாகும். நாடொறும் ஆண்டு நினைப்பாக ஒவ்வொரு திருமுறைகளின் முதலும் முடிவுமாயுள்ள திருப்பாட்டுக்கள் இவ்விரண்டாக இருபத்து நான்கு திருப்பாட்டுக்கள் ஓதி வருதல்வேண்டும். அவற்றின் முதனினைப்புக்கள் வருமாறு: க. தோடுடைய செவி, பொன்னொடு நன்மணிமா, உ. செங்நெலங்கழ, எய்தவொண்ணு; ௩. ஆடினாய்நறு, நறும்பொழிற்; ச. கூற்றாயினவா, மேலுமறிந்திலன்; ரு. அன்னம் பாலிக்குந், அரக்கன் வல்லரட்; சு. அரியானை, ஒருவனையுமல்லாது; எ. பித்தாபிறை, ஊழிதொறூழிமுற்றும்; அ. நமச்சிவாய வாஅழ்க, செம்மைநலம்; (திருச்சிற்றம்பலக்கோவையார்) திருவளர் தாமரை, காரணி கற்பகம்; கூ. ஒளிவளர் விளக்கே, ஏயுமாறெழிற் சேதிபர்; (திருப்பல்லாண்டு) மன்னுகதில்லை, எந்தை எந்தாய்; க0. ஒன்றவன் தானே, நீரும் நிலனும்; கக. மதிமலிபுரிசை, நன்றுமாதர நாவினுக்; கஉ. உலகெலாமுணர்ந், என்று மின்பம்.

சு. அடியார்: ஏழாந்திரு முறைக்கண் 'தில்லை வாழந்தணர்' எனத் தொடங்குந் திருப்பதிகம்.

திருக்கோவில் அமைப்பில் ஐம்பெரும் திருத்தொழில் பற்றிய நிலைகள் ஐந்து, இவ்வைந்தும் ஒருங்கமைந்த நிலையொன்று, திருவடிப்பேறு பெற்ற சிவனடியார்கள் நிலையொன்று ஆக நிலை ஏழாகும். ஐந்தொழில்: க. படைத்தல் உ. காத்தல் ௩. துடைத்தல் ச. மறைத்தல் ரு. அருளல். இந்நிலைகள் ஐந்தும் வருமாறு:

க. படைத்தல் - பிள்ளையார். இவர் தமக்குரிய அருச்சனைத்திருப்பதிகம் "பொறையுடைய பூமி நீ ரானாய் போற்றி" எனத்தொடங்கும் (சு. ருசு - க - க0) போற்றித்திருத்தாண்டகம். இதன்கண் ஏழாந்திருப்பாட்டில் வரும் 'தொழில் நோக்கி யாளுங் காடே போற்றி' என்பது பிள்ளையாரைக் குறிக்கும் குறிப்பாகும். இத்திருப்பதிகத்துக் காணப்படும் போற்றியென்னும் மந்திரம் எண்பத்தேழு; இத்துடன் திருவிசைப்பாவில் 'செங்கண போற்றி' எனத் தொடங்குந் திருப்பாட்டில் வரும் போற்றி மந்திரம் எட்டு, கக. திருக்கைலாய ஞானவுலா முற்பகுதியில் "இமையோர் பெருமானே போற்றி எனத் தொடங்கிப் போற்றியெனப் பூமாரி பெய்து" என முடிய வரும் போற்றி மந்திரம் பதினொன்கு, ஆக இருபத்திரண்டனையும் சேர்த்து அருச்சனை நிறைவாக்கிக் கொள்ளுதல் வேண்டும்.

உ. காத்தல் - முருகவேள். இவர் தமக்குரிய அருச்சனைத் திருப்பதிகம் "எல்லாஞ் சிவனென்ன நின்றாய் போற்றி" எனத் தொடங்கும் (சு. ரு - க - க0.) போற்றித்திருத்தாண்டகம். இதன் கண் பத்தாந்திருப்பாட்டில் வரும் 'முருகவேள் தன்னைப் பயந்தாய் போற்றி' என்பது முருகவேளைக் குறிப்பதாகும். இத்திருப்பதிகத்துக் குறிக்கப்படும் போற்றி மந்திரம் எண்பத்திரண்டு. இத்துடன் பதினொராந் திருமுறையில் நக்கீரதேவர் பாடியருளிய "போற்றித் திருக்கலிவெண்பா" முழுவதிலும் வரும் போற்றி மந்திரம் இருபத்திரண்டு, பன்னிரண்டாந்திருமுறை - இயற்பகை நாயனார், முப்பத்திரண்டாம் திருப்பாட்டு 'சொல்லுவதறியேன்' எனத் தொடங்குவதில் வரும் போற்றி மந்திரம் நான்கு ஆக இருபத்தாறினையும் சேர்த்து அருச்சனை நிறைவாக்குக.

௩. துடைத்தல் - ஆலமர் செல்வன். இவர் தமக்குரிய அருச்சனைத்திருப்பதிகம் "பாட்டான நல்ல தொடையாய் போற்றி" எனத் தொடங்கும் (சு. ருஎ - க - க0.) போற்றித்திருத் தாண்டகம். இதன்கண் வரும் இரண்டாந்திருப்பாட்டில் "ஆலநிழற்கீ ழமர்ந்தாய் போற்றி" என்பது ஆலமர் செல்வனைக் குறிப்பதாகும். இத்திருப்பதிகத்துக் குறிக்கப்படும் போற்றி மந்திரம் தொண்ணூறு. இத்துடன் பதினொராந் திருமுறையில் பட்டினத்துப்பிள்ளையார் பாடியருளிய கோயினான்மணி மாலையின் நாற்பதாவது செய்யுள் 'சதுர்முகன்' எனத்தொடங்குவது. இதன்கண் முழுவதிலும் வரும் போற்றி மந்திரம் இருபத்தைந்து. இவற்றையும் சேர்த்து அருச்சனை நிறைவாக்குக.

இப்போற்றித் திருத்தாண்டகத்திருப்பதிகத்து இப்பொழுது காணப்படுந் திருப்பாட்டுக்கள் ஒன்பது. ஆனால் இருக்கவேண்டிய திருப்பாட்டுக்கள் பத்தாகும். மற்றெல்லாப் போற்றித்திருத் தாண்டகத் திருப்பதிகத்தும் காணப்படுவன பப்பத்தேயாம். ஆனால் 'வேற்றாகி விண்ணாகி நின்றாய் போற்றி' எனத்தொடங்கும் திருப்பதிகத்துத் திருப்பாட்டுக்கள் பதினொன்றாகக் காணப்படுகின்றன. இதன்கண் ஒன்பதாந்திருப்பாட்டாகக் காணப்படுவது 'மூவாய் பிறவாய்' என்னும் திருப்பாட்டு. இது "பாட்டான" எனத் தொடங்கும் இத்திருப்பதிகத்து ஒன்பதாந்திருப்பாட்டாக அமைய வேண்டுவதாகும். அதற்குரிய காரணம் வருமாறு: 'வேற்றாகி விண்ணாகி' எனத் தொடங்கும் திருப்பாட்டுப்பதிக முதற்பாட்டென்பது சேக்கிழாரடிகள் திருமொழியானுணரலாம். எனவே 'மூவாய் பிறவாய்' எனத் தொடங்கும் இத்திருப்பாட்டும் முதற்பாட்டு நீங்கலாக எஞ்சிய ஒன்பது திருப்பாட்டிலும் 'என் சிந்தை' என்னுந் தொடர் பத்திடங்களில் காணப்படுகின்றது. இத்தகைய வரன் முறை மற்றைப் போற்றித்திருத்

தாண்டகங்களின்று. எனவே 'மூவாய் பிறவாய்' என்னும் திருப்பாட்டு இத்திருப்பதிகத்து அமைவதே சால்புடைத்தாம். இப்பிழை ஏடெழுதுவோரால் நிகழ்ந்திருத்தல் கூடும்.

௪. மறைத்தல் - அருளம்மை. இவர் தமக்குரிய அருச் ...ருப்பதிகம ...ாகி நின்றாய் போற்றி" எனத் தொடங்கும (சு. ௫௫ - க - க0) போற்றித்திருத்தாண்டகம். இதன்கண் வரும் எட்டாந்திருப்பாட்டில் "**உமை பாகம் ஆகத் தணைத்தாய் போற்றி**" என்பது அருளம்மையைக் குறிக்கும் குறிப்பாகும். இத்திருப்பதிகத்துக் குறிக்கப்படும் போற்றி மந்திரம் எண்பத்தெட்டு. இத்துடன் பதினொராந்திருமுறையில் பட்டினத்துப்பிள்ளையார் பாடியருளிய திருவொற்றியூர் ஒருபா வொருபது பத்தாம் திருப்பாட்டுக் 'காலற் சீறிய கழலோய் போற்றி' எனத் தொடங்குவது அது முழுவதிலும் வரும் போற்றி மந்திரம் இருபத்தொன்பது. இவற்றையும்சேர்த்து அருச்சனை ...க.

௫. அருளல் - அருளோன் (சிவலிங்கம்) இவர் தமக்குரிய அருச்சனைத் திருப்பதிகம "கற்றவர்களுண்ணுங்கனியே போற்றி" எனத்தொடங்கும் (சு. ௬உ - க - க0) போற்றித் திருத்தாண்டகமாகும். இதன்கண் வரும் ஆறாந்திருப்பாட்டில் "**சதாசிவனே நின்பாதம் போற்றி போற்றி**" என்பது. அருளோனாகிய சதாசிவக் கடவுளைக் குறிக்கும் குறிப்பாகும். இத்திருப்பதிகத்துக் காணப்படும் போற்றி மந்திரம் நூற்றெட்டாகும் இஃது அருச்சனை நிறைவாகும்.

௬. அம்பலவாணர் : - தில்லைத் திருச்சிற்றம்பலக்கூத்தனார். இவர் திருவைந்தொழிலும் ஒருங்குணர்த்தும் ஒரு திருப்பிழம்பினர். இத்திருப்பிழம்பே, சிவபெருமான் கொள்ளும் முதல் திருப்படிவமாகும். சிவபெருமானின் வெவ்வேறு நிலைத்திருப்படிமங்கள் இருபத்தைந்தென்ப திருவைந்திருதொழிலைக் குறிக்கும் உண்மை விளக்கத்திருவெண்பா வருமாறு :

"தோற்றந் துடியதனில் தோயுந் திதியமைப்பில்
சாற்றியிடும் அங்கியிலே சங்காரம்—ஊற்றமாய்
ஊன்று மலர்ப்பதத்தே உற்ற திரோதமுத்தி
நான்ற மலர்ப்பதத்தே நாடு."

இவர்தமக்குரிய அருச்சனைத் திருப்பதிகம் எட்டாந்திருமுறைக்கணுள்ள "**போற்றித் திருவகவல்**" ஆகும். இதன்கண் காணப்படும் போற்றி மந்திரம் நூற்றைம்பத் தொன்பதாகும். இத்திருவகவல் தொடக்கம் 'நான்முகன் முதலா' என்பதாகும். போற்றி மந்திரத்தொடக்கம் அடி அஎ. '**தாயே யாகி வளர்த்தனை**

போற்றி' என்பதாகும். அடி ௧௱௭௯. '**மறையோர் கோல நெறியே போற்றி**' முடியப் போற்றி மந்திரம் நூற்றெட்டாகும். அடி ௯௨ இல் '**தென்றில்லை மன்றினுள் ஆடி போற்றி**' என்பது அம்பலவாணரைக் குறிக்குங் குறிப்பாகும். நூற்றைம்பத்தொன்பது போற்றி மந்திரமும் ஒருங்கோதி மலர்தூவி அருச்சித்தலும் வாய்வதேயாம்.

எ. அடியார் - நாயன்மார் திருக்கூட்டம் எழுபத்திரண்டாகும். தனியடியார் அறுபத்து நால்வரும், தொகையடியார் எண்மருமாவர். பலவாயில்களானும் ஆயின் 'பொய்யடிமையில்லாத புலவர்' தனியடியாராதலே சால்புடைத்து. இத்திருக்கூட்டத்தார்க்குரிய அருச்சனைத் திருப்பதிகம் எட்டாந்திருமுறை திருச்சதகம் எ. காருணியத்திரங்கல் என்னுந் தலைப்பில் காணப்படும் "**தரிக்கிலேன் காய வாழ்க்கை சங்கரா போற்றி**" எனத் தொடங்கும் திருப்பதிகமாகும். இதன்கண் காணப்படும் 'போற்றி' மந்திரம் ஐம்பத்தாறாகும். இதன்கணுள்ள ஏழாவது திருப்பாட்டில் வரும் '**என்னை ஆளுடை ஒருவ போற்றி**' என்பது திருக்கூட்டத்தைக் குறிக்கும் குறிப்பாகும். இவ்வெட்டாந் திருமுறை 'போற்றித் திருவகவலில்' ௧௱௯ ஆவது அடி '**மறையோர் கோல நெறியே போற்றி**' என்பது தொடங்கி ௨௨௫ ஆவது அடி 'போற்றி போற்றி சயசய போற்றி' என்பது முடியவரும் போற்றி மந்திரம் ஐம்பத்திரண்டாகும். இவ்விரண்டுங்கூட்ட வரும் போற்றி மந்திரம் நூற்றெட்டாகும். இவற்றையோதி அருச்சித்தல் வேண்டும். இப்போற்றித் திருவகவலில் ௧௬௮ ஆவது அடியிலுள்ள '**ஆளாளவர்கட் கன்பா போற்றி**' என்பதும் திருக்கூட்டத்தைக் குறிக்கும் குறிப்பாகும்.

திருக்கோவில் வழிபாடு இவ்வெழுவகைப் பாகுபாட்டினுள் நிறைவுறுவதாகும். மேலும் அம்மையப்ப பிள்ளை (சோமாசுக்கந்தர்) நிலையினுக்கு அருளோன் முருகவேள் அருளம்மை இம்மூவர்க்கு முரிய போற்றி மந்திரம் ஓதி மலர்தூவி வழிபடுதல் வேண்டும். அருச்சனை வழிபாட்டினைத்திற்கு முரிய பொதுப் போற்றி மந்திரம் எட்டாந்திருமுறையிலுள்ள சிவபுராணத்துக் காணப்படும் "ஈசனடி போற்றி" என்பது முதல் "அருளுமலை போற்றி" என்பது முடிவாகவுள்ள 'போற்றி மந்திரம்' எட்டாகும். இவ்வெட்டும் சிவபெருமானின் 'தன்வய' முதலிய எண்பெருங்குணங்களையும் ஒருபுடை குறிப்பனவாகும்.

காவல் நந்தி, ஊர்தி நந்தி ஆகிய இரண்டு நிலைகளுக்கும்
ககூட்டத்திற்குள்ள போற்றி மந்திரம்
வேண்டும். சண்டேசுர நாயனார்க்கும் இதுவே அருச்சனைக் குரியதாகும். கொற்றவை (துர்க்கை), நாமகள், திருமகள்

முதலிய அம்மை நிலைகளுக்கும் ச. அருளம்மைக்குரிய போற்றி மந்திரம் ஓதி அருச்சித்தல் வேண்டும்.

இவைகளேயன்றிப் பன்னிரு திருமுறைகளுள்ளும் தனித் தனித் திருப்பாட்டுக்களிலும், அடிகளிலும், சிவபுராணத்துள் "தாயிற் சிறந்த தயாவான தத்துவனே - அரனேயோ என் றென்று போற்றி" எனவரும் விளிமொழிகளிலும் இணைந்து வரும் போற்றி மந்திரங்களையும் மேலவற்றோடு கூட்டி எண்ணின் ஆயிரத்தெட்டுக்கு மேலாகும்.

வழிபாடு தன்பொருட்டும் ஊரவர் பொருட்டும் செய்யப் படுவதென இருவகைப்படும். மெய்யன்பர்தம் தூயவுள்ளத்தும் அன்னவர் வாழும் இல்லத்தும் அவரவர் அன்பு நிறை குடும்பத் துடன் செய்யப்படும் வழிபாடு தம் பொருட்டுச்செய்வதாகும். திருக்கோவில்களில் செய்யப்படும் வழிபாடு ஊரவர் பொருட்டுச் செய்யப்படுவதாகும். ஊரவர் பொருட்டுச் செய்யப்படும் திருக் கோவில் வழிபாடு அவ்வூரவர்தம் தாய்மொழியிலேயே நிகழ்தல் இன்றியமையாததாகும். இவ்வுண்மை வரும் சேக்கிழாரடிகள் திருவாய் மொழிகளானுணரலாம் :

"அங்கண்வட திசைமேலும் குடக்கின் மேலும்
அருந்தமிழின் வழக்கங்கு நிகழா தாகத்
திங்கள்புனை முடியார்தந் தானந் தோறுஞ்
சென்றுதமி ழிசைபாடுஞ் செய்கை போல
மங்கையுடன் வானவர்கள் போற்றி சைப்ப
வீற்றிருந்தார் வடபயிலை வணங்கிப் பாடிச்
செங்கமல மலர்வாவித் திருக்கே தாரந்
தொழுதுதிருப் பதிகவிசை திருந்தப் பாடி"

"கூற்றுதைத்தார் மகிழ்ந்தகோ கரணம் பாடிக்
குலவுதிருப் பருப்பதத்தின் கொள்கை பாடி
ஏற்றின்மிசை வருவாரிந் திரன்ற னீல
பருப்பதமும் பாடிமகிழ்ந் திறைவர் தானம்
போற்றியசொன் மலர்மாலை பிறவும் பாடிப்
புகலியர்தம் பெருந்தகையார் புனித மாகு
நீற்றினணி கோலத்துத் தொண்டர் சூழ
நெடிதுமகிழ்ந் தப்பதியி னிலவு கின்றார்."

—கஉ. சம்பந்தர் - க0உசு, எ.

"நாளும் இன்னிசை யாற்றமிழ் பரப்பு ஞான சம்பந்தப்" (எ. சுஉ - அ) பெருமானார் திருக்கோவில்களிற் சென்றால் அந் நாட்டு மொழி வேறாயினும் தாந் தமிழாலன்றிப் பாடியருளார். தமிழாற் பாடுவது அந்நாட்டவர்க்குப் பயனின்மையால் அங்குச்

செல்லுதல் வேண்டற்பாலதன்றென்றனர். அங்ஙனமாயின் அவா காலத்துத் தமிழ்நாட்டுத் திருக்கோவில்களில் எம்மொழியால் வழிபாடுகள் நிகழ்ந்திருக்கு மென்பதனை நன்கு சிந்திமின்! மேலும் நாயன்மார் திருப்பாடல்களை ஓதி வழிபடுவதனைச் சிவபெருமான் மிக்கவுகப்புடன் ஏற்றருள்கின்றனன். அது வருமாறு:

"நாளு மின்னிசை யாற்றமிழ் பரப்பு
ஞான சம்பந் தனுக்குல கவர்முன்
தாள மீந்தவன் பாடலுக் கிரங்கும்
தன்மை யாளனை யென்மனக் கருத்தை
ஆளும் பூதங்கள் பாடநின் றாடு
மங்க ணன்றனை யெண்கண மிறைஞ்சும்
கோளி லிப்பெருங் கோயிலு ளானைக்
கோலக் காவினிற் கண்டுகொண் டேனே."

—எ. சுஉ - அ.

"நல்லிசை ஞானசம் பந்தனு நாவினுக்
கரசரும் பாடிய நற்றமிழ் மாலை
சொல்லிய வேசொல்லி யேத்துகப் பானைத்
தொண்ட னேனறி யாமை யறிந்து
கல்லி யன்மனத் தைக்கசி வித்துக்
கழலடி காட்டியென் களைகளை யறுக்கும்
வல்லியல் வானவர் வணங்கநின் றானை
வலிவ லந்தனில் வந்துகண் டேனே."

—எ. சுஎ - ௩.

தக்காரொருவரைத் தனித்துக் காண்பதினும் அவர்தம் தமராயினாரொருவர் தரும் பரிவுரை மேலெழுத்துடன் காண்பது போன்ற சிறப்பினையுடையதாகும் திருமுறை வழி அருச்சனை என்ப. வழிபாடு அன்பினாலும் அறிவினாலும் செய்யப்படுவன. அன்பினால் செய்யப்படுவன 'அம்மையே அப்பா' போன்ற பொருள்சேர் புகழ் மந்திரங்கள். அறிவினால் செய்யப்படுவன 'போற்றி சைத்துன் னடிபரவ நின்றாய் போற்றி' போன்ற போற்றி மந்திரங்கள். இவற்றை வருமாறு நினைவு கூர்க.

அன்புபுகழ் போற்றி அறிவுதிரு வைந்தெழுத்தும்
இன்புவழி பாடிவையோர் மூன்று.

கழக 1008-வது வெளியீடான

# பன்னிரு திருமுறைப் பெருந்திரட்டு

## வெளியீட்டு விழா

திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் 1008-ஆவது வெளியீடாகிய "பன்னிரு திருமுறைப் பெருந்திரட்டு" நூல் வெளியீட்டைச சிறப்பிக்கும விழா, 1961 ஆகஸ்டுத் திங்கள் 20, 21, 22 ஆகிய நாட்களில் சென்னை, இராசாசி மண்டபத்தில்கொண்டாடப்படும்.

20-8-61 காலையில் அண்ணாமலைப் பல்கலைக் கழகத் துணை வேந்தர். வி. சுப்பிரமணியம வரவேற்புரையாற்றுவார். சென்னை மாநில ஆளுநர் மேன்மை தாங்கிய திரு. விட்ணுராம் மேதி அவர்கள் விழாவிற்குத் தலைமை தாங்குவார்கள். அவ்வமயம் சென்னை மாநில உள்துறை அமைச்சர் திரு. எம் பக்தவத்சலம் அவர்கள் கழக 1008 ஆவது வெளியீடாகிய 'பன்னிரு திருமுறைப் பெருந் திரட்டு' என்னும் நூலை வெளியிடுவார்.

இவ்விழாவினைச் சார்ந்த நூற்காட்சியொன்று அன்று காலையில்இராசாசி மண்டபத்தின் பின்புறத்தில் அமைந்திருக்கும் சட்டமன்றத்தினரின் விருந்து மண்டபததில் திறந்து வைக்கப் படும். சென்னை உயர்நீதி மன்ற நடுவர் திரு. சு. கணபதியா பிள்ளை நூற்காட்சியைத் திறந்து வைப்பார்கள்.

அன்று மாலை நடைபெறும் மொழி மாநாட்டில் டாக்டர் திரு. எஸ். ஆர். அரங்கநாதன் தொகுத்துள்ள கழகத்தின் வெளியீடுகளான 1008 நூல்களின் பாராட்டுவிழாப்பட்டியைக் கல்வித்துறை இயக்குநர் நெ. து. சுந்தரவடிவேலு வெளியிட இசைந்துள்ளார்.

பேரறிஞர் பலரின் பல்வேறு பொருள்கள்பற்றிச் சிறந்த முறையில் வரையப்பட்டுள்ள சுசு கட்டுரைகள், கழக வரலாறு, கழகம் தமிழுக்கும், சைவத்திற்கும் செய்துள்ள தொண்டுகளின் விபரங்கள், கழகம் குறித்த பல்வேறு துறைகளில் உள்ள பெரு மக்களின் கருத்துரைகள் வாழ்த்துக்கள் உருவப்படங்கள்

அடங்கிய விழா மலரை 21-8-61 மாலையில் நடைபெறும் இலக்கிய மாநாட்டில் நிதியமைச்சர் சி. சுப்பிரமணியம் அவர்கள் வெளியிடுவார்

அன்று நலத்துறை அமைச்சர் திரு. மாணிக்கவேலு அவர்கள் கழகத்திற்குப் பெரும் நூற்றொண்டாற்றிய எழு பெரும் புலவர்களுக்குத் திருவுருப் பரிசு வழங்குவார்கள்.

விழாக் கொண்டாடப் பெறுகின்ற 20, 21, 22 ஆகிய மூன்று நாட்களிலும் மாலையில் முறையே மொழி, இலக்கியம், சமயம் குறித்த மூன்று மாநாடுகள் நடைபெறும். சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்த் துறைத் தலைவர் டாக்டர் மு. வரதராசனுர் மொழி மாநாட்டிற்கும், அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழ்த் துறைத் தலைவர் பேராசிரியர் தெ. பொ. மீனுட்சி சுந்தரனுர் இலக்கிய மாநாட்டிற்கும், தவத்திரு குன்றக்குடி அடிகளார் சமய மாநாட்டிற்கும் தலைமை தாங்க இசைந்துள்ளார்கள்.

சென்னை அறநிலையப் பாதுகாப்புத் துறை ஆணையாளர் சாரங்கபாணி முதலியார் சமய மாநாட்டைத் திறந்து வைக்க இசைந்துள்ளார்.

## செந்தமிழ்ச் செல்வி வாழ்த்து

[திரு. சித. அழகப்பன்]

செந்தமிழ்ச் செல்வி என்னைச்
சேர்ந்திடும் போதென் னுள்ளம்
பைந்தமிழ்ச் சுவைகண் டின்பம்
பருகிடத் துடிக்கு தையா
முந்தைநம் பெரியோர் கண்ட
முறையினை முறையாய்ச் சொல்லிச்
சிந்தையைச் செம்மை யாக்கும்
செந்தமிழ்ச் செல்வி வாழ்க.

# வெள்ளத்திற்சிக்கிப் பிழைத்த விந்தை

[கருப்பக்கிளர், திரு. சு. அ. இராமசாமிப்புலவர்]

1961 ஆம் ஆண்டு சூலைத்திங்கள் ஒன்பதாம் நாளுக்குச் சரியான பிலவ ஆண்டு ஆனித்திங்கள் 26 ஆம் நாள் ஞாயிற்றுக் கிழமை பிற்பகல் இரண்டுமணிக்குச் சென்னைக்கு வருதற் பொருட்டு ஊரைவிட்டுப் புறப்பட்டேன். திருப்பத்தூர் (தஞ்சை மாவட்டம்) என்னுமிடத்தில் பேருந்து ஏறித் திருத்தருப் பூண்டியை அடைந்து புகைவண்டியேறித் திருவாரூர் மாயூரம் வழியாகச் சென்னையை அடையத் திட்டமிட்டிருந்தேன். வழக்க மும் இதுதான். அன்று வெகுநேரம்வரை திருத்தருப்பூண்டிக்குச் செல்லும் பேருந்து வண்டிகளில் இடங்கிடைக்கவில்லை மன்னார் குடியை அடைந்து பேருந்துவழியே திருக்குடந்தையடைந்து அங்கிருந்து சென்னைக்குப் புகைவண்டியேறலாம் என்று முடிவு செய்தேன். மன்னார்குடிசெல்லும் பேருந்தில் ஏறினேன்; மன் னார்குடியடைந்தவுடன் திருக்குடந்தை செல்லும் பேருந்து புறப் பட்டது. அதில் ஏறிப் புறப்பட்டேன்; கும்பகோணத்திற்குச் சீட்டுக் கேட்டபோது யாதுந்தடைகூறுமற் சீட்டுக் கொடுத்தனர்.

பேருந்து புறப்பட்டு ஐந்தரை மணிக்கு வலங்கைமான் என் னும் ஊரைக் கடந்து சில கல்தொலை சென்று நின்று விட்டது. "இதற்கு அப்பால் வெள்ளம் வந்துவிட்டது. கும்பகோணம் செல்ல வேண்டியவர்கள் இறங்கி வெள்ளத்தைக் கடந்து அப்பாற் சென்று அங்கு நிற்கும் பேருந்தில் ஏறிக் கும்பகோணத்தை யடையலாம் வெள்ளம் முழங்கால் வரை செல்கிறது" என்று சிலர் கூறினர். பேருந்தில் இருந்த பலர் இறங்கிக் கும்ப கோணத்தை நோக்கி நடந்தனர். ஏறக்குறைய நாற்பது ஐம்பது பேர் சென்றனர். அவர்கள் செல்வதை நம்பி நானும் புறப்பட டேன். எல்லோருக்கும் முன்னதாகவே சென்றேன். தண்ணீர் முழங்கால் அளவு ஓடிக்கொண்டிருந்தது. இரண்டு பர்லாங்குவரை சென்றேன். திரும்பிப்பார்த்தால் ஒருவரும் வரவில்லை. எல் லோரும் திரும்பிப் போய்விட்டார்களா அல்லது வேறிடங்கட்குச் சென்று விட்டார்களா என்பது தெரியவில்லை.

பத்துப் பதினைந்து பேர் தொழிலாளர்கள் வடக்கு நோக்கி நடந்தனர். நானும் அவர்களைப் பின்பற்றினேன். சிறிதுதொலை சென்றதும் அவர்கள் வெள்ளம் அடைப்பதற்கோ வேறு வேலைக்கோ வேறொரு பக்கமாகப் போய்விட்டனர். இப்பொழுது நான்மட்டுந் தனித்தவனானேன். திரும்பிப் போய்விடலாமா என்று பார்த்தேன். வந்த வழியிலும் வெள்ளம் அதிகரித்திருந்-

தது. முன்வைத்த காலைப் பின்வைக்கக் கூடாது. போய்ப்பார்க்கலாம். எவ்வளவு தொலைதான் இவ்வாறு தண்ணீர் போகப் போகிறது என்னும் எண்ணத்தோடு மேலும் நடந்தேன். வெள்ளம் போகப் போக மிகுதியாயிற்று. இப்பொழுது இடுப்புவரை வந்துவிட்டது. இழுப்போ பலமாக இருக்கிறது. என் கையில் சிறிய பெட்டியொன்றும் துணி மூட்டையொன்றும் இருந்தன. இவைகளோடு வெள்ளத்தோடு போராடுவது இயலாததாகிவிட்டது. போதாக்குறைக்கு என் உடல்நலமும் ஒரு திங்களாகக் குன்றியிருந்தது.

எந்தக் கணத்திலும் வெள்ளம் அடித்துக்கொண்டு போகக் கூடும் என்று எண்ணினேன். நான் சாவைப்பற்றி எந்தச் சமயத்திலும் அஞ்சியதில்லை. அதனால்

'நோயுற் றடராமல் நொந்துமனம் வாடாமல்
பாயிற் கிடவாமல் பாவியேன் - காயத்தை
ஓர்நொடியிற் போக்கியெனை ஒண்போரூர் ஐயாநின்
சீரடிக்கீழ் வைப்பாய் தெரிந்து''

என்னுந் திருப்போரூர்ச் சந்நிதிமுறைப் பாடலை அடிக்கடி பாடுவதுண்டு. இப்பாடலைத் திருப்போரூர்க் கோவிலில் இருந்தும் பலமுறை பாடியிருக்கிறேன். இப்பாடல் இச்சமயத்தில் நினைவுக்கு வந்தது. நம்முடைய வேண்டுகோள் இப்பொழுது பலித்துவிடும் போல் இருக்கிறது அஃது இவ்வாறு பலிக்க வேண்டும் என்று எண்ணினேன். உள்ளம் பற்பல எண்ணலாயிற்று. அஞ்சுமுகந் தோன்றின் ஆறுமுகந் தோன்றும் என்று பெரியோர்கள் பாடியிருக்கிறார்களே நமக்கு அஞ்சுமுகந் தோன்றியுள்ள இச்சமயத்தில் ஆறுமுகந் தோன்றவில்லையே! ஆயுள் முடியுஞ் சமயத்தில் தோன்றாது போலும் என்று எண்ணினேன். வேலுமயிலுந்துணையென்பர். பல ஆண்டுகளாக என் மடியில் வேலாயுதம் இருந்துகொண்டிருக்கிறது. அந்த வேலாயுதம் மடியில் இருப்பதை எண்ணிச் சிறிது ஆறுதலடைந்தேன். அடைந்தேனாயினும் எச்சமயத்திலும் வெள்ளத்தோடு வெள்ளமாகப் போக நேரிடும் என்னும் எண்ணமே மேலோங்கியது. இடுப்பளவு வெள்ளம் குறையக் காணேன். கண்ணுக் கெட்டியவரை தண்ணீர்தான் தெரிகிறது. மணியோ ஆறரையாய் விட்டது. மழைவேறு வந்துவிட்டது. இச்சமயத்தில் என் நிலை எவ்வாறிருக்கும் என்பதைப் படிப்பவர்களே எண்ணிப் பார்க்கவேண்டும்.

இச்சமயத்தில் திடுதிடென்று ஓர் இளைஞன் என்னிடம் வந்தான். "மூட்டை முடிச்சுகளோடு போகமுடியாது, நான் கொண்டு வருகிறேன்'' என்று கூறிப் பெட்டியையும் மூட்டையையும்

வாங்கித் தன் தலைமீது வைத்துக் கொண்டான். அகவை இருபத்தைந்து மதிக்கலாம். நல்ல உடற்கட்டமைந்தவன். இப்பொழுது நான் மட்டும் வெள்ளத்தோடு போராடினேன். இழுப்பாகச் செல்லும் வெள்ளத்தில் காலை இழுத்துவைத்து நடப்பது முடியாத காரியமாக இருந்தது. எந்தச் சமயத்திலும் இப்பொழுது நான் மட்டும் வெள்ளத்தில் அடித்துச் செல்லப்படலாம் என்று எண்ணினேன். ஓர் எண்ணந் தோன்றியது; மூட்டைகளையெடுத்து வந்தவனுடைய கையொன்றைக் கெட்டியாகப் பற்றிக் கொண்டேன். இப்பொழுது வெள்ளம் அடித்துக் கொண்டு சென்றால் இருவரையுந்தான் அடித்துக் கொண்டு போகவேண்டும். அவ்விளைஞன் அவ்வெள்ளத்தில் மேலும் ஒரு பர்லாங்கு நடந்தான். வெள்ளந் தாண்டிக் கரையேறலாம் என்னும் எண்ணம் என் உள்ளத்திற் சிறிதும் இல்லை. அதன்பிறகு தண்ணீர் குறையலாயிற்று. அடுத்த ஊரும் வந்துவிட்டது எங்கும் பேருந்து காணப்பட

அவ்விளைஞன் மேலும் இரண்டொருமைல் நடந்து கும்பகோணம் புகைவண்டி நிலையத்திற்கு என்னைக் கொண்டுபோய்ச் சேர்த்தான். உடைமுதலியவைகள் மழையிலும் வெள்ளத்திலும் நனைந்திருந்தன அவைகளைப் பிழிந்து காயவைக்கச் செய்தான். "செய்யாமற் செய்த உதவிக்கு வையகமும் வானகமு மாற்றலரிது" என்பது தமிழ் மறை. தக்க சமயத்தில் வந்து உயிரைக் காப்பாற்றிய அவனுக்கு எத்தகைய கைம்மாறுஞ் செய்யமுடியாது. ஆயினும் இரண்டு ரூபாய்களை எடுத்துக் கொடுத்தேன். பேசாமல் வாங்கிக் கொண்டான். இவ்விளைஞனை முருகனே என்னிடம் அனுப்பியிருக்க வேண்டும் என்பதற்குச் சிறிதும் ஐயமில்லை.

"மண்ணிலும் மரத்தின் மீதும் மலையிலும் நெருப்பின் மீதும்
தண்ணிறை சலத்தின் மீதும் சாரிசெய் ஊர்தி மீதும்
விண்ணிலும் பிலத்தி னுள்ளும் வேறெந்த இடத்தும் என்னை
நண்ணிவந் தருளார் சட்டி நாதன்வேல் காக்க காக்க"

என்பது பாம்பன் குமரகுருதாச சுவாமிகள் இயற்றிய சண்முக கவசம். நான் இக்கவசத்தை நாள்தோறும் படித்துவருகிறேன். மடியிலோ எக்காலமும் வேலாயுதம் இருந்து கொண்டேயிருக்கிறது. இவ்வாறாக வேற்படை என்னைக் கைவிடுமோ ?

இத்தகைய தொல்லை ஏற்படுமென்று தெரிந்திருப்பின் நான் வந்த அதே பேருந்தில் திரும்பிச் சென்று வேறு வழியாகப் போயிருப்பேன். குடந்தையிலிருந்து எதிரே வந்த சிலர் "தண்ணீர் முழங்காலளவுதான் செல்கிறது போய்விடலாம்" என்று கூறிச்

சென்றனர். அவர்கள் கூறியதைப் பொய்யென்று கூறமுடியாது அவர்கள் தாங்கள் வந்தபொழுது இருந்த நிலைமையைக் கூறிச் சென்றிருக்கிறார்கள். தண்ணீர்ப் பெருக்கோ கணத்துக்குக் கணம் மிகுதிப்பட்டு வந்திருக்கிறது. இந்நிகழ்ச்சியைக் கொண்டு நான் ஒரு பாடத்தைக் கற்றுக் கொண்டேன். அஃதாவது, நல்ல நிலைமையில் உள்ள ஒருவருக்குத் துன்பம் வர அதிகநேரம் பிடிக்காதென்பதும், துன்பம் வந்து விட்டால் இறை திருவருளை நம்பியவர்கட்கு அத்துன்பம் நீங்க அதிகநேரம் ஆகாது என்பதுமேயாம்.

**வேல்**

"பழுத்தமுது தம்ழ்ப்பலகை இருக்குமொரு கவிப்புலவ
னிசைக்குருகி வரைக்குகையை இடித்துவழி காணும்,
தனித்துவழி நடக்குமென திடத்துமொரு வலத்துமிகு,
புறத்துமரு கடுத்திரவு பகற்றுணைய தாகும்."

## சென்னைப் பல்கலைக் கழக நூற்றாண்டு விழாக்

# கட்டடத்திறப்பு

இச்சிறந்த திறப்பு விழா 2—8—1961இல் மிக்க வனப்புடன் நிகழ்ந்தது. கட்டடத்தைத் தற்காலிக இந்தியக் குடியரசுத் தலைவர் டாக்டர். எஸ். இராதாகிருட்டிணன் அவர்கள் திறந்து வைத்தனர். பல்கலைக்கழகத் துணைவேந்தர் டாக்டர். திரு. ஏ. இலட்சுமணசாமி முதலியாரவர்கள் குடியரசுத் தலைவரவர்களைக் கட்டிடத்தைத் திறந்து வைக்கும்படியாகக் கேட்டுக் கொண்டனர். பல்கலைக் கழகச் சார்பில் நிகழ்ந்த பட்டமளிப்பு விழாவில் உயர்நீதி மன்ற முன்னாள் தலைமை நீதிபதி திரு. பி. வி. இராசமன்னாருக்கு 'டாக்டர் ஆப் லா' என்ற சிறப்புப் பட்டமும், துணை வேந்தர் திரு. ஏ. இலட்சுமணசாமி முதலியாரவர்கட்கு 'டாக்டர் ஆப் சயன்ஸ்' என்ற சிறப்புப் பட்டமும் வழங்கப் பட்டன. குடியரசுத் தலைவரவர்கள் அரியதொரு சொற்பொழி வாற்றினர். சுருக்கம் வருமாறு: 'சென்னைப் பல்கலைக் கழகத்திற்கு உள்நாட்டிலும் வெளிநாட்டிலும் பெருமதிப்பு இருக்கின்றது. தற்பொழுது பேராபத்தாக விருப்பது அணுக்குண்டுகளல்ல, மனிதனேயாகும். மனிதப் பண்பு வளர்ந்துவிட்டால் அணுக்குண்டுகள் ஒன்றுஞ் செய்யமாட்டா. வெறும் பாடங்களைப் போதிப்பது மட்டும் கல்வியன்று. நல்ல பண்புகளையூட்டி உயர்வான ஒழுக்க சீலர்களை உருவாக்குவதே கல்வியின் குறிக்கோள்.'

# சாகாக் கல்வி

[திரு. க. மாசிலாமணிப் பிள்ளை, திருநகர்]

**மண்ணவர்**

காணும் இம்மண்ணுலகிலுள்ள ஆருயிர்கள் நரகர் விலங்கு மக்கள் என்ற முப்பிரிவாய் நிற்பன நடப்பன முதலிய அறுவகைப் பட்டு வித்து, வியர்வை, முட்டை பையென்ற நால்வகைத்தோற்ற வாயிலாய் எழுபத்துமூன்று நூறாயிரம் வேறுபாட்டினராய்த் தோன்றியுள்ளனர்." இவ்வாறு தோன்றிவாழும் பல்கோடி வகை உயிர்களில் மகன் தலைமையில் நிற்குஞ்சிறப்பையடைந்தான். ஏனெனில் கல்வியென்னுஞ் சிறப்புடைச்செல்வம் மகனுக்கெனத் தனித்த உரிமையாக இறைவனால் அவனுக்கு அளிக்கப்பட்டிருப் பதனால் என்க. கல்வி அறிவை வளர்க்கும் மாண்புடையது. ஒரு மகன் ஒரு பிறப்பிற்கொண்ட கல்வி அப்பிறப்போடழியாது அவனுடன் கூடிநின்று பின்னர் அவனேற்கும் ஒன்றல்லது பல பிறப்புகளிலும் அவனுக்கு உறுதுணையாயிருந்து உதவக்கூடிய ஆற்றலுடையது. தக்காரிடத்தே நிலைத்திருக்குஞ் செல்வ மாயுள்ளது. ஆதலால், இவ்விதச் சிறப்புகள் வாய்ந்த கல்வியைப் பெறும் மகனும் மற்றைய கீழான உயிரினங்களினும், ஒன்பது நூறாயிரம் பிரிவாயுள்ளனவற்றின் இனத்தைச் சேர்ந்தும் கல் வியைப் பெறாத மக்களினும் மேம்பட்டவனாகிறான்.

**விண்ணவர்**

இம்மண்ணுலகில் மகன் சிறந்தோனாயினும் இவனுக்கு மேம் பட்ட நிலையிலுள்ள உயிர்கள் சிவனருட்படைப்பில் இல்லையென் பது அறியாமையாகும். ஏனெனில், மண்ணுலகுக்குப் புறம்பான நுண்ணிய விண்ணுலகிலடங்கிய பலப்பல அண்டங்களில் மக னுக்கு மேனிலையிலுள்ள சிறப்புடைய தேவ இனத்தார் பதினொரு நூறாயிரம் வகையினர் என்றும் மனிதரில் மேலோர் தம் மண் ணுலக வாழ்வை முடித்துக்கொண்டு வானுலகில் தேவராய்த் திகழ்வதுண்டு என்றும் சிவாகமங்கள் போதிக்கின்றன. "பெரு மான் இவனென்று பேசி யிருக்கும், திருமா னிடர்பின்னைத் தேவரு மாவர், வருமாதவர்க்கு மகிழ்ந்தருள் செய்யும், அருமா தவத்தெங்கள் ஆதிப் பிரானே" என்றும், "விடுகின்ற சீவனார் மேலெழும் போது, நடுநின்று நாடுமின் நாதன்தன் பாதங், கெடுகின்ற வல்வினை கேடில் புகழோன், இடுகின்றான் உம்மை இமையவ ரோடே" என்றும் அறிவுறுத்துகின்றான் சித்தபர சித்தாகிய திருமூலர் பிரான்.

**கல்வியின் தூர்**

கல்வி மகனுக்கேயுரிய பொருளானது எவ்வாறெனின் கல்விக்கு ஆதாரம் பேச்சு; பேச்சு விரிவது சூக்கும நாதமென்னும் வாக்கிலிருந்து; வாக்கு ஆதியில் விந்துவினின்றும் விளைந்தது: இவ்விந்து மகனின் மூலப்பகுதியில் நீங்காது நின்றுதவும் ஒரு சிவசத்தியாகும். மகனுக்குக் கீழாயுள்ள சீவர்கட்கு இயற்கையில் இவ்வாக்கு விரியாது நிற்றலால் அவைகட்குப் பேச்சுங் கல்வியுங் கலையும் அறிவின் விளக்கமும் இல்லாமற்போயிற்று. அதனால் புலனறிவுக்கு மேலான பகுத்தறிவு (ஆராய்ச்சி அறிவு) அவைகட்கு இல்லையாய் முடிந்தது. மகன் ஒருவனுமே இவ்வாராய்ச்சி அறிவைப் பெறுதற்குத் தகுதியுடையவன். இவனுந் தக்க கல்வி கேள்வி—சிந்தனை உணர்வுகளைக் கொண்டன்றிப் பயன்பெறுமளவிற்கு அதனைப் பெறுதலரிது.

**உயிர்க்கருள் சிருட்டி**

அதி சூக்கும அணுத்தன்மையிலுள்ள உயிர்கட்குண்டான அனாதிக் கறையான ஆணவ மலம் உயிரின் இயற்கை அறிவு இச்சை செயல்களை, ஒளியை மறைக்கும் இருள்போற் படிந்து மறைத்துச் சத்திகெடச் செய்யும் இயல்புடையது. இம்மாசினைத் துடைத்தொழிக்கும் வழியறிந்து கடைப்பிடித்து மாசற்ற நிலையை எய்துவதற்கு வேண்டியதன் அறிவும் தன்னாற்றலுமில்லாத உயிரின் பரிதாப நிலையைக் கண்டிரக்கங்கொண்ட முதல்வன் அவற்றிற்கு அறிவிச்சை செயல்கள் விளையுங் கழனிபோன்ற தூலவுடலையும் மனமுதலிய கரணங்களையும் கருவிகளையும்—அநுபவப் பொருள்கள் நிரம்பிய இம்மண்ணுலகு சூரியகோளம் முதலியவற்றையும் ஆக்கித்தந்து உயிரின் மறைப்புண்ட அறிவு சிறுகச் சிறுக விளக்கமுறச் செய்தருளுகின்றான். இவ்வித அருளுதவி பெற்ற உயிர்கள் ஓரறிவு முதல் ஐயறிவுகொண்ட உயிர்களாய் இவ்வுலகிற் பற்பல பிறவிகளெடுத்துப் படிப்படியாகப் பட்டறிவு வளர்ச்சியுற்றுப் பக்குவமடைந்து இறுதியில் ஆறறிவோடுங் கூடிய மக்களாய்ப்

**உலகக் கல்வி**

இவ்வாறு உயர்நிலை மகனாய்ப் பிறந்த ஒருவனும் தக்க கல்வி கேள்விகளின் உதவிகொண்டு தனக்குண்டான பகுத்தறிவை விரிந்து படரச் செய்தானெனின் இம்மையில் இல்வாழ்வான் ஒருவனுக்கு உறுதி பயக்கும் பொருள்களெனச் சான்றோராற் கொள்ளப் பட்ட இல்லறம் பொருள் இன்பங்களைப் பற்றிய தன்னறிவைப் பெருக்கிக்கொண்டு தன்னொழுக்குத் தக்கவாறு அப்பொருள்களின் பயனை விதிப்படி ஈட்டி அநுபவிப்பவனாவான்.

இப்பொருள்களைத் தவிர்த்த மற்றப்பொருள்கள் இவ்வுலகில் எண்ணிறந்து கிடக்கின்றன. அவைகளிலொன்றை அதற்குரிய கல்வியின் துணைகொண்டு முயன்று அடைவானென்றால் அதன் பயனாகத் தனக்கும் பிறவுயிர்கட்கும் கேடு விளைவிப்பவனுவானன்றி ஆக்கங்கொள்ளமாட்டான் என்பது சான்றோரின் அநுபவம். உதாரணமாக, மேனாட்டு வல்லரசுகளிற் சில அணுகுண்டுக் கருவிகளை ஆக்கிச் சேகரித்துவருவதைக் காணலாம். ஏவல் பில்லி சூனியம் மாரணம் முதலிய கீழ்மையான மந்திரக் கல்வியும் இதிலடங்கும். ஆதலால் உலகில் மக்களிடையிற் காணும் கல்வியும் தக்கது தகாதது என இருவகைத்து எனலாம். பொதுப்பட நோக்கில் கல்வி மண்ணுலக எல்லையையுங் கடந்து பலவாக விரிந்துள்ளது. "கல்வி கரையில கற்பவர் நாள் சில"; "கற்றது கைம்மண்ணளவு கல்லா துலகளவு" என்றமுதுமொழிகள் இதனை வலியுறுத்தும். ஆதலால், ஓர் அறிவுடைய மகன் இவ்வுலக வாழ்க்கைப் பயனை நன்கு பெற வேண்டினால் "கற்க கசடறக் கற்பவை கற்றபின், நிற்க அதற்குத் தக" என்ற தமிழ்மறையின் போதனையையுணர்ந்து கற்பவை இன்னின்னவை என்று மேலோரைப் பின்பற்றித் தேர்ந்து கற்பானாகில் அது தக்க கல்வியாகும்; மற்றவை தகாத கல்வியென்று புறக்கணிக்கத் தக்கவாம்.

## சாகாக் கல்வி

ஒரு மகன் இம்மையில் அடையக் கிடக்கும் நிலைகள் இரண்டுள, அவைதாம் இம்மையும் அம்மையும். சுருங்கச்சொல்லின்உடலோடுடலாய் ஒட்டிநின்று உலக இன்பங்கருதி வாழும் நிலை இகம் எனவும், உடலை ஒட்டியும் ஒட்டாது வேறாய் நின்று நிலைத்த பேரின்பங் கருதி வாழும் நிலை பரம் எனவும் மெய்யுணர்ந்தோர் கூறுவர். பரம் என்றால் மேலாயுள்ளது. ஆனால், ஒன்றையுமொட்டாது தனித்தியங்கும் ஆற்றல் இயற்கையில் உயிருக்கு இல்லையாதலால் உடலையொட்டாத நிலையில் உடலுக்கும் உயிருக்கும் ஆதாரமாய் மேலாயுள்ள மூன்றாவதான என்றுமுள்ள முதற்பொருளாகிய சிவபிரானை உயிர் தொடக்கத்தில் ஒட்டாது ஒட்டி நிற்குமென்றாயிற்று. உடல் அழிவுறுவதாகையால் அதனுடனொட்டிய இம்மைநிலை அழிவுறு நிலையாகும். முதல்வன் அழியாதவனாகையால் அவனுடனொட்டிய அம்மை நிலை அழியா நிலையாயிற்று.உடலும் உயிரும்போல் ஒரு மகனுக்கு இம்மையும் அம்மையும் ஒட்டிய நிலைகளாகும். உடலை இயக்குவது உயிர்போல இகத்தை இயக்கிச் செம்மைப்படுத்துவது பரம். உயிர்ப்பற்று மிக உடற்பற்றுக் குறைவதுபோல் பரத்தின் பற்று ஓங்க இகத்தின் பற்றுத் தாழும். உயிரை இன்னதென்றறியாமலே உடலைவிட்டுச் செல்லுங் கொடிய மரணத்தையுறும் கல்லா மாந்தர் கோடா

கோடி. அதுபோலப் பரவாழ்க்கை நிலையை எய்தாமலே இவ் வுலக வாழ்வை இக நிலையோடு முடித்துக்கொண்டு செல்லுங் கற் றறிந்த இனத்தவர்களும் எண்ணிறந்தவர்கள் எனலாம். "கல்வி யுடையார் கழிந்தோடிப் போகின்றார்" என்றார் திருமூலர்பிரான். ஏன்? இவர்கள் கற்றது இகத்துக்குதவக்கூடிய உலகப்பொருளைப் பற்றிய கல்விதான். சிற்றின்பத்தை நல்கும் உலகக் கல்வி மேலும் மேலும் சாவையும் (பிறப்பையும்) கொடுக்கும் இயல்புடையதாக லின் சாகும் கல்வி என்று பழித்துக் கூறப்பட்டது. இகத்துக்கு மேலாய் முடிவாயுள்ள வீடென்னும் உறுதிப் பொருளையறிந்து ஈட்டுதற்குகந்த கல்வியை அவர்கள் கற்கவில்லை. "இயலறிவ திசையறிவ தினமறிவ துளவாம்—அயலறிவ தறிவதல அறிவறிவ தறிவே" என்ற உண்மையை அவர்கள் மறந்தனர். பிறவாஇறவா அழிவில் பேரின்ப நிலையைத் தரும் வீட்டைப்பற்றிய கல்வியைத் தான் சாகாக் கல்வி என்று மெய்ஞ்ஞான சித்தர் முத்தர்கள் மப்பித்துக் கூறினார்கள்.

**கல்வியின் முடிந்த பயன்**

பல பிறவிகளில் முயன்று இறையருளால் அருமையாகக் கிடைக்கப்பெற்ற எண்ணிறந்த சீவவுடல்களிற் சிறந்த மானுட வுடலானது அழிவுறும் இகவாழ்வில் மட்டும் நின்று கழிப்பதற்கு அமைந்ததல்ல என்பதை அறிவுடையோர் மறக்கக்கூடாது மக னுக்குச் சிறந்த பண்டாரமாகிய கல்வி கேள்வி ஆராய்ச்சி அறி வினால் அவனடையக் கிடக்கும் முடிந்த பயன் "வாலறிவன் நற் றாள் தொழு"தல் என்று தமிழ்மறை அறுதியிட்டு அறிவுறுத்து கின்றது. இப்பயனைப் படைத்தற்குதவுஞ் சாகாக் கல்வியைக் "தூய நற்கல்வி" என்றும்—"நிற்கின்ற போதே நிலையுடையான் கழல், கற்கின்ற செய்யின் கழிந்தறும் பாவங்கள், சொற்குன்ற லின்றித் தொழுமின்" என்றும் "பற்றது பற்றிற் பரமனைப் பற்றுமின்" என்றும், அவனருள் பெறக் "கற்றவர் பேரின்பம் உற்றுநின்றார்" என்றும், "செறிதுணையாவது சிவனடிச் சிந்தை, பெறுதுணை கேட்கிற் பிறப்பில்லை தானே" என்றும் திருமூலர்பிரான் இச் சாகாக் கல்வியைப்பற்றி விளக்கமுறக் கூறியுள்ளார். ஞானக் கிழவியாம் ஔவைப் பிராட்டியாரும் "உடம்பினைப் பெற்ற பயனாவ தெல்லாம், உடம்பினுள் உத்தமனைக் காண்" என்ற அநு பவ மெய்யுரையைக் கற்றோர்க்குப் புகட்டியுள்ளார். கண்டு தொழ வேண்டிய இவ்வுத்தமனை உடம்பினுள் எவ்விடத்துக் காண்பது என்னும் ஐயப்பாட்டிற்கிடமின்றி "சிந்தையினுள்ளே எந்தை திருவடி, சிந்தையும் எந்தை திருவடிக் கீழது" என்று திரு மூலர்பிரான் குறியிட்டுக் காண்பித்துள்ளார். "சிவனவன் என் சிந்தையுள் நின்ற அதனால்" என்றார் மணிவாசகப் பெருமானும்.

### சித்தாந்தச் செம்பொருள்

சைவசித்தாந்த நன்னெறியைப் பற்றிவாழும் நல்லூழ் படைத்தோர் உலகில் என்றும் அழியாது நிலைத்து நிற்கும் பொருள்கள் மூன்று: அவை பதி பசு பாசம்; பதியாம் பரம சிவப் பொருளுக்கு அருவம் அருவுருவம் உருவம் என்ற மூன்று திருமேனிகளுண்டு; அவை "அறிவே திருமேனி ஆன்மா திரு மேனி—குருவே திருமேனி" என்பன என்ற உறுதிகொண்டு வாழ்பவராவர். இந்த நன்னம்பிக்கை கல்வி கேள்விகளினால் உண்டாயிற்று. இது கருத்து (உணர்வு) காட்சி (அநுபவம்) என்ற மேலளவைகளினால் உறுதி செய்யப்படவில்லையெனில் ஏட்டுச் சுரைக்காய் போன்று பயனளவில் சிறக்காது என்று அறிவுமிக்கோர் காண்பர். ஆதலால், அழியக் காணும் உட லுக்குப் பரமாய்—உயிரென்னும் பொருள் ஒன்றுண்டு; அதன் குற்றமென்னும் மாசு—கழிந்த உண்மைநிலை இன்னது; அந்நிலை யில் அதற்கு அழிவென்பது இருக்க இயைபில்லை என்றிவ்வாறு நுண்ணறிவுடையோர் அநுபவத்தில் அறியவேண்டும். இவ்வாறே, பதிப்பொருள் உயிருக்குப் பரனாய் (தற்பரனாய்) உயிரையொட்டிப் புணர்ந்த அத்துவிதக் கலப்புடன் அவனை ஆளும் நாதனாய், இடையறாத் தோழனாய், அம்மையப்பனாய் ஞான குருபரனாய் உயிருக்குயிராய் உள்ளத்துறையும் சோதிவடிவப் பொருளாய் இருப்பதை அநுபவத்திற் கண்டுணரவேண்டும். சித்தாந்த சமயத் தெளிவறிவு கொண்டு இவ்வாறு சிவ சீவ உண்மைநிலைகளைக் காட்சியளவிற் காண இயலுமோவெனின், "சித்தாந்த வேதாந் தம் செம்பொரு ளாதலால், சித்தாந்த வேதாந்தங் காட்டுஞ் சிவனையே" என்று 'திருமந்திர' ஆகம நூல் இயலும் என்று உறு[

### சிவகுரு கடாட்சம்

உலக முத்தமிழ்க் கல்வியறிவு படைத்து இக வாழ்க்கை இன்பத்தை நுகரும் "மொழித்திறத்தின் முட்டறுத்த நல்லோர்" ஆகிய புலவர் உடனடியாகச் செய்யக்கடவது "முதனூற் பொரு ளுணர்ந்து கட்டறுத்து வீடுபெற"லாகும். இதனை வேண்டி முதற்கண் சிவாகம சித்தாந்த மெய்ப்பொருளைக் கற்றுக் கேட்டுக் கருதுதலோடு அமைவுறாது கல்வியின் முடிந்த பயனாகிய முற்ற றிவுச் செல்வனின் நற்றாளைக் கண்டு வழிபடவேண்டிய முக் காலக் கடமையை யுணரவேண்டும். மேலும், இதுவரையில் கற்றுத்தேர்ந்த உலகக் கல்வியறிவு கொண்டு அத்திருவடியைக் கண்டு வழிபட இயலவில்லை என்று மெய்யாகவே உணர வேண் டும். பின்னர்த் தேட்டம் மிக்கூறி திருச்சேவடிக் காட்சியை அடைபடுத்தும் சாகாக் கல்வியைப் புகட்டவல்ல ஒரு மெய்ஞ்

ஞான குருதேவரைத் தேடித்தேடி மனம்புழுங்கி இறையருளாற் கண்டு குறையிரந்து வருந்திக் கேட்டு அவருடைய திருவடியில் அமரவேண்டும். அஞ்ஞான்று அச்சிவ குருபரனார் பக்குவமுற்ற சாதகனைத் தன் ஞான மாணவனாக ஏற்றுச் சாகாக் கல்வியின் முற்கூறாகிய அட்டாங்க சிவராஜயோக தவத்தையூட்டிப் பல்லாண்டுகாலம் கண்காணித்துக் காமம் வெகுளி மயக்கங்களி னின்றுந் தன் மகனை மீட்பித்து இகப்பற்றொடுங்கி மனமாசு தேய்ந்து சுருங்கக்கண்டு அவனுக்குச் சிவஞானக் கண் அளித்து அகத்தே திருவடிக் காட்சி பெற்றுய்யச் செய்தருளுவார். சிவ யோக தவத்தாலன்றி வேறெவ்வித உபாயத்தினாலும் உடலுக்கு ஊறு விளையாமல் மாசு கழிந்து மனம் அடங்குவதரிதாகும். மனமடக்கமில்லையெனில் சொல்லடக்கஞ் செயலடக்கங்கள் கை வரா. இவைகளின் அடக்கத்தைப் பெறாத புலவர்களையும் "பேதையிற்பேதைய"ராம் கற்றறிமூடர் என்று இடித்துரைக் கின்றார் பொய்யாமொழிப்புலவர். "கற்றுஞ் சிவஞான மில் லாக் கலதிகள்" என்றும், "ஓதி உணரவல்லோம் என்பர் உள் நின்ற, சோதி நடத்தும் தொடர்வறியாரே" என்றும் வருந்து கிறார் திருமூலர் பிரானும். "மனமிறக்கக் கல்லார்க்கு வாயேன் பராபரமே" என்று இறைவனிடம் விண்ணப்பிக்கின்றார் சிவ யோக ஞானபரராகிய தாயுமானாரும். "அழிவினவை நீக்கி ஆறுய்த்தல் நட்பு" ஆகலான் "ஆன்மநேய ஒருமைப்பாட் டுரிமை"யினால் இரக்கங்கொண்டு இவ்வாறு மேலோர் இடித் துரைத்தல் பொருந்தும்.

**முக்கண்**

முதல்வனுடைய திருவடிக் காட்சியை யடைய வேண்டிய ஞானசாதகன் "ஞானக் கண்ணினிற் சிந்தை நாட வேண்டுமென் பது சிவஞானபோத உரையாகும். முதற்கண் சாதகன் ஞானக் கண்ணைப் பெறல்வேண்டும். மேலே கூறியபடி சிவஞானக் கண் ணளிக்குந் தாதாவாகிய பெருங் கொடைவள்ளல் சிவஞான குருபரன்தான். மகனுக்கு உறுப்பாகிய "கண்ணானது உடலின் விளக்குப் போன்றது; அது பிரகாசமாயிருந்தால் உடல் முழுவ தும் (உள்ளும் புறமும்) பிரகாசமாயிருக்கும்" என்று போதித்தார் இயேசுகிறித்துநாதர். மக்களிற் கற்றோரே இவ்விதம் விளக்க முற்ற இரண்டு கண்களையுடையவரென்றும் கல்லாதாருக்கு அவை நோயால் துன்புறுத்தும் புண்களைப் போன்றவை யென் றுங் கூறினார் பொய்யாமொழிப்புலவர். இவ்விரு கண்களுக்கு மேலாகக் "கற்றறிவாளர் கருத்திலோர் கண்ணுண்டு" என்றார் திருமூலர்பிரான். இவ்வித அகக்கண்ணைப் பெற்றவரே சாகாக் கல்வி கற்றவராவர். இப்புருடோத்தமர் புறத்தே இரண்டு கண்

களோடு அகத்திலொரு கண்ணுமாய் முக்கண்ணுடையவ ராவர். இது என்ன விபரீதம்! பதியாம் சிவபெருமானும் முக்கண் மூர்த்தி; பசுவாய்ப் பிறந்த ஒருவர் சாகாக் கல்வியில் தேர்ந்த ஞானயோகியாயினும் முக்கண்ணுடையவரோ? என்று மயங்க வேண்டுவதில்லை. "கடவுள் மனிதனைத் தன் சாயலில் படைத்துளார்" என்றார் கிறித்துநாதர். "மானுட ராக்கை வடிவு சதாசிவம்" என்று கண்டுரைத்தார் திருமூலர் பிரான். பதமுத்தியடைபவர்களில் சாரூப பதவிக்குரியவர் சிவயோகாரூடர் என்று சிவாகமங்களுங் கூறுகின்றன. ஆதலால் துரிய ஞானயோகியும் முக்கண் பெற்றவர் என்பதில் ஐயமின்று. மெய்யுணர்வு பெற ஊனக்கண்ணாகிய முகக்கண்ணின் உதவி பயனற்றது. அது அழிவுறும் உலக விடயங்களைக் காணவுதவும் சிற்றின்பக் கருவியாகும். அகக்கண்ணொன்றே திருவடிக் காட்சியைச் சாதகனுக்கு ஊட்டிப் பேரானந்த முத்தியெய்த உதவுவதாகும் என்ற பொருள்பட "முகத்துக்கண்கொண்டு பார்க்கின்ற மூடர்காள், அகத்துக் கண்கொண்டு பார்ப்பதே ஆனந்தம்" என்று மேலுஞ் சொன்னார் அப்பிரானார். அகக்கண்ணை, ஞானக்கண், மனக்கண், முகக்கண், நெற்றிக்கண், இமையாநாட்டம் என்ற பல பெயர்கொண்டு கூறுவர் ஞானக்கண் கொண்டோர். இக்கண்ணும உலகில் மகனுக்கே உரித்தாயுள்ள பொருள்தான். ஆனால், மலமறைப்பால் அதன் நிலையும் உருவும் மறைப்புண்டு கிடக்கின்றது. சாகாக்கல்வி என்னும் அருளுபதேச உதவிகொண்டால் மன மாசு கழிந்து அதன் ஒளி மனவாக்கிறந்ததாகும்.

### துரிய நிலைக்காட்சி

சாகாக் கல்வியின் பயனாகச் சிவயோகி முதற்கண் திருவடிக் காட்சியுறுகிறான். பின்னர் அத்திருக்காட்சி கொண்டு தன்னுண்மை நிலையையும் காண்கின்றான். அந்நிலைதான் ஞானத் துரிய நிலையென்றும், நாலாம் நிலையென்றும், யோக நிர்வாணமென்றும் சிவ (அடி) நிலையென்றும், முத்தராற் கூறப்பட்டது. இந்நிலையில் தேர்ந்த சிவயோகி தன்னடிமைத் திறங்கண்டு யாதுஞ் சிவச்செயலாகுமென முன்னர்க் கேட்டபொருளை இப்பால் அநுபவத்திலுணர்ந்து தன்பணியறுத்துச் சிவப்பணியில் நிற்கிறான். அதனால் உத்தமக் கருமயோகி அவனே. திருவடிச் செல்வமே இருமைக்குந் தனக்குத் தஞ்சமெனக் கண்டுணர்ந்து இடையறாது அதனையே பற்றி நிற்றலால் மெய்யன்பென்னுஞ் சிவபத்தியிற் சிறந்தோனானவனும் அவனே. "வாஅய்மை வேண்ட வரும்" அவாவின்மை வந்து எய்துமாதலால் பெருநோயென்னும் பிறப்புக்கு வித்தாகிய ஆசையையொழித்துக் காமதகனஞ் செய்கிறான். சிவயோக தவத்தைத் தாழாது உஞற்றி அதில் ஆற்றல் கொண்

டவனுகையால் ஊழை உப்பக்கங் காண்கின்றான். சிவன் சேவடி பற்றிய திறத்தால் ஊசியின் பின்னே நுழையும் இழைபோன்று காமனைத் தொடர்ந்து வந்து ஓசைப்படாமல் உடலினுட் புகுந்து நரை திரை மூப்புச் சாக்காடென்னும் ஆறுத்துன்பங்களைக் கொடுக்கும் கொடிய கூற்றங் குதித்து மேலேறுகின்றான்.

## அதீத சிவானுபூதி

இத்துரிய சிவநிலையில் தேர்ந்த சிவயோகி அந்நிலைக்கு மேலாயுள்ள அதீத நிலையைச் சாகாக் கல்வியின் பிற் (முடிந்த) கூறாகிய சிவநிட்டை (ஞான நிட்டை பிரமநிட்டை) யிற் சார்ந்து நெடுங் காலம் பழகித் திருவருட்பதிவை முழுதுமாய்ப் பெற்றுத் திரிபுடியற்றுச் சிவபிரானோடு ஏகமாய் ஒட்டிப் புணர்ந்து சிவப்பேறெய்தி அமருகிறான் என்பர் மெய்யுணர்ந்தோர். இது மனவாக்கிறந்த அருவ சிவ நிலையாகும். இவ்வதீத நிட்டை நிலையினின்றும் வெளிப்போந்து துரிய சாக்கிரநிலையி லமரும் சிவமுத்தனே சீவன் முத்தனாகும். இந்நிலையில் அம்முத்தனுக்கு அட்டமா சித்திகள் எண்ணுமலே திரிபுரையருளால் தாமாகவே வந்தெய்தும். "சித்திகள் எட்டன்றிச் சேரெட்டி யோகத்தாற், புத்திகளானவை எல்லாம் புலப்படும், சித்திகள் எண்சித்தி தானுந் திரிபுரை, சத்தி அருள்தரத் தானுள வாகுமே" என்றது திருமந்திர வாக்கு. சிவயோகாரூடன் இவ்வுன்னத சிவநிட்டை நிலையை இவ்வூழிலேயே அடையப் பெறுனெனின் மண்ணவருக்கு மேலான விண்ணவரில் சகலர் நிலைகடந்த பிரளய ஆகலர் விஞ்ஞான ஆகலர் முதலான தேவகுலங்களில் உன்னத குலத்தவனாய்த் திகழ்ந்து திருவருட் கடாட்சத்தினுல் மறுமைக் கண்ணே சிவசாயுச்சிய முத்தியெய்தித் திருவடி நீழலில் அமருவான் என்று சிவாகமம் கூறுகிறது.

ஆதலால், சைவ சித்தாந்த சன்மார்க்கத்தைக் கடைப்பிடித் தொழுகும் "அற்றங்காக்கும் அறிவு படைத்த சிலர், தன்னலந் துறந்த கருமயோகியாய், மெய்ப்பத்தராய், அட்டமா சித்தராய், சிவமுத்தராய், சிவமேயாய் நித்திய பேரின்ப நிலையை எய்துதற்குத் தீவிரமாய் விழைந்து, வேண்டிய வேண்டியாங்கெய்த" வுதவும் தலையாய சிவயோக தவத்திற் காலந்தாழ்த்தாது ஈடுற்று, உடல்வாடத் தவமியற்றிக் குரைகழல் கண்டேத்தி ஏத்தித் தொழும் கல்விப்பயனெய்தி, முடிவில் பிறவிப் பயனும் சிவனடி நிழலிற் சார்ந்தமர்ந்து பேரின்பந் துய்ப்பார்களாக. மனோன் மணித் தாயின் திருவருள் ஓங்குக.

# உலகப் பெருமொழிகளும் தமிழும்

[ மு. சதாசிவம், எம். ஏ.]

மொழி என்பது மக்கள் தம்மனத்துள் தோன்றும் கருத்துக்களைப் பெரும்பாலும் ஒலிகள் மூலம் வெளிப்படுத்தும் சொற்களைத் தன்னகத்தே கொண்டு இயங்கும் ஒலித்தொகுதி நிலையமாகும். வாயிற் பிறக்கும் ஒலிகள் பொருள் பெறும்போதுதான் சொற்கள் என்றழைக்கப்படுகின்றன. 'எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே' என்றார் தொல்காப்பியனாரும். மனிதர்களைப் போலவே எம்மொழியிலும் சொற்கள் பிறந்து வளர்ந்து இறந்துபடுகின்றன. காலத்தாலும், இடத்தாலும் பல்வேறு வகையாய்ப் பிறந்த சொற்கள் எல்லாப் பேச்சு மொழிக்கண்ணும் தோன்றி வழங்கிப் பொருள் மாறுபாடுகளை அவ்வப்போது பெற்று வருவதை நோக்கியே, மொழியானது இயல்பாகவே மாறுபாடுகளை எய்தும் தன்மைத்து என்று மொழி நூலார் 'றனர். உலக மொழிகளின் வரலாற்றை நோக்கு மொழியின் சொற்களைப் போலவே எத்தனையோ மொழிகளும் தோன்றி வளர்ந்து மறைந்து போயுள்ளன என்ற உண்மையை அறிகிறோம்.

உலகில் இதுவரை எத்தனை மொழிகள் தோன்றின என்று யாராலும் அளவிட்டுக்கூற முடியாது. மறைந்து போன எண்ணிலா மொழிகளின் பெயர்களைக்கூட அறிந்து கொள்ள முடியவில்லை. இப்போது உலகில் மூவாயிரத்திற்கும் குறையாத எண்ணிக்கையுடைய மொழிகள் பேச்சில் வழங்குகின்றன என்று கணக்கெடுத்துள்ளனர். பேச்சு வழக்கற்று இறந்துபோன பல மொழிகள் நூல்களின் வாயிலாக எழுத்து மொழிகளாகக் கற்கப் பட்டு வருகின்றன. மொழிகளைப் பற்றிய ஆராய்ச்சி சென்ற நூற்றாண்டிலேதான் தொடங்கப்பட்டது. இன்னும் ஆராயப் படாத மொழிகள் உலகில் நூற்றுக்கணக்காக உள்ளன.

மொழிகளின் தோற்றத்தைப் பற்றியும் அவற்றின் வளர்ச்சியைப் பற்றியும் மொழிநூலார் ஆராய்ந்து வருகின்றனர். இக்காலத்தில் மொழிகளைப்பற்றிய ஆராய்ச்சிகளைச் செய்யும் மொழியியல் ஒரு அறிவியல் துறையாகவே கருதப்பட்டு வருகிறது. உலக மொழியியலார்களுள் ஒருவரான தொல்காப்பியர் கருத்துப்படியே மொழியியலானது ஒலியியல் அல்லது எழுத்தியல், சொல்லியல், பொருளியல் என்ற முப்பெரும் பிரிவாகப் பகுக்கப் பட்டுளது. இம்மூவியலின் கீழும் பற்பல உட்பிரிவுகள் இருக்

கின்றன. உலகத்து மொழிகளின் எண்ணிக்கைப் பெருமையை நோக்கும்போது மொழியியல் துறை அளவிலாப்பெருங்கல்வித் துறையாக மலர்ந்திருப்பதில் வியப்பில்லை.

இரண்டாயிரமாண்டுகட்கு முன்பு உலகப்பெரு மொழிகளாகத் தமிழ், ஆரியம், இலத்தீன், கிரீக்கு, அராபிக் மொழிகள் திகழ்ந்தன இவை பன்னெடுங் காலம் அவை பேசப்படும் நாடுகளில் வலிமை பெற்று ஆட்சி மொழியாக விளங்கிச் சிறப்புற்றன. இவற்றுள் ஆரியம், இலத்தீன் இவை பேச்சு வழக்கற்றுவிட்டன. பேசப்படும் அல்லது வழங்கப்படும் மொழிக்கண்ணேயே சொற்கள் நிலை கொள்ளுகின்றன என்பது மொழிநூலார் துணிபாதலின், ஆரியம் ஒரு காலத்தில் இப்போதைய திருந்திய வடிவம் அமையு முன்பு பிறிதோருருவில் பேச்சு மொழியாக இருந்திருக்கலாம் என்று கொள்வதில் தவறில்லை. ஆரியம் நாட்டில் வழங்கும் இயல்புமாறி ஏட்டில் மட்டும் வழங்கும் பெற்றியை எய்திய பிறகு அம்மொழிக்கண் சொற்கள் புதிதாகச் சேரும் சிறப்புக் குன்றியது. எனவே காலமாறுபாட்டுக் கேற்ப வளைந்து கொடுக்கும் தமிழைப் போலல்லாது நிலைத்த தன்மையை எய்திப் பண்டிதரின் மொழியாகவே பல காலமாக இருந்து வருகிறது. ஐரோப்பா நாடுகளில் அரசியல் பண்பாட்டுத் தலைமை மொழியாய் வீற்றிருந்த இலத்தீனும் பண்டிதர்களாலேயே பெரிதும் போற்றப்பட்டுப் பதினெட்டாம் நூற்றுண்டிலிருந்து பேச்சுவழக்கினை இழந்துவிட்டது. தமிழ், கிரீக்கு, அராபிக் மொழிகள் இக்காலத்தில் குறைந்த எண்ணிக்கையுடையவராலேயே பேசப்பட்டு வருகின்றன.

மொழியானது அதைப் பேசும் எல்லா மக்களின் பொதுவுடைமையாகும். அதைப் பேசுவோருள் பெரும்பாலோரின் ஒப்புதலைப் பெறுது புதிதாகச் சொற்களும், சொல்லமைப்புக்களும் சேருவதில்லை. ‘வல்லான் வகுத்ததே வாய்க்கால்’ என்ற உண்மை மொழியியலுக்கு முற்றிலும் பொருந்துவதாகாது. இன்ன இன்ன சொற்களையே வழங்க வேண்டும் என மொழியியல்புக்கு ஏலாத புதுச்சொற்களை வலுக்கட்டாயமாகத் திணிக்க முயல்வார் தோல்வியுறுவது திண்ணம். மொழியியலுக் கேற்றது குடியாட்சி முறையே. பெரும்பாலோரின் ஒப்புதலைப் பெற்றே மொழிக்கண் எவ்வகைச் சீர்திருத்தமும் செய்ய இயலும். எனவே மொழியை வளர்ப்பதில் அதைப் பேசும் மக்கள் எல்லாருக்கும் பங்குண்டு ; படித்த பாவலர்க்கும், படியாத பாமரர்க்கும் மொழி மாற்றத்தில் அல்லது வளர்ச்சியில் பங்குண்டு. பாமரர்க்கு எட்டாத மொழிகளாக மாறிய இலத்தீனும், ஆரியமும் பேச்சு வழக்கற்றுப் போன உண்மை மக்கள் கருத்தை மதியாது மொழி

யாட்சி செய்ய விரும்பும் கற்று வல்ல பண்டிதர்கட்கு பாட மாகத் திகழ்கின்றது.

இக்காலத்தில் ஆங்கிலம், பிரெஞ்சு, செர்மன், இத்தாலியன், இசுபானியம், உருசியன் போன்ற மொழிகளே உலகப்பெரு மொழிகளாகத் திகழ்கின்றன. இவற்றுள் ஆங்கிலமும் செர் மனும் செர்மானியக் குடும்பத்திலிருந்து பிறந்தவை. பிரெஞ்சு, இத்தாலியன், இசுபானியம் இவை பாமர இலத்தீனிலிருந்து (Vulgar Latin) தோன்றியவை. உருசியன் ஸ்லாவ் மொழிக் குடும்பத்தைச் சார்ந்தது. சோவியத் மக்களின் ஆட்சி, அறிவியல், பொருளாதார வளச்சிறப்பால் உலகப்பெரு மொழியின் இடத் தைப் பெற்ற மொழி உருசியன் ஆகும். 'கதிரவன் மறையாத பேரரசை' நிலை நாட்டிய ஆட்சி வலிமைச் சிறப்பால் ஆங்கிலம் உலகின் எல்லாப் பகுதிகளிலும் பரவி வளர்ந்திருக்கிறது. அறி வியல் துறையின் பெருமையால் செர்மன் உலகப்பெரு மொழி களுள் ஒன்றாயது. இத்தாலியனும் இசுபானியமும் பண்டை ஐரோப்பாவின் பண்பாட்டினை இலத்தீனின் வழித்தோன்றல் களாக இருந்து நிலை நாட்டும் சிறப்பால் உலகப்பெரு மொழி களுள் வைத்து மதிக்கப்படுகின்றன. ஒருமொழியாயிருந்த சீனம் இப்போது ஆறு வெவ்வேறான மொழிகளைக்கொண்ட ஒரு மொழிக் குடும்பமாகப் பிரிந்துவிட்டதால் அதைத் தனிப் பெரு மொழியாகச் சிலர் கொள்ளுவதில்லை. பாரத நாட்டின் அரசுத்துணையைப் பெற்று இப்போது இந்தி மொழி, பண்டைப் பண்பாட்டின் சிறப்பினால் பெருமை பெற்ற இந்நாட்டின் ஆட்சி மொழியானால் உலகப்பெரு மொழிகளுள் ஒன்றாகக் கருதப்படும் நிலையை எய்திவிட முடியும்.

வடமேற்குச் செர்மனியில் செர்மானியக் கிளை மொழி யாய இருந்த ஆங்கிலம், இங்கிலாந்து நாட்டை அடைந்த பிறகு தான் ஒரு மொழியாக வளர்ந்தது. இங்கிலாந்தை நார்மண்டி யரசன் கி. பி. 1066இல் வென்று கைப்பற்றியாண்ட போது ஆங் கிலத்திற்கு அரசுரிமையில்லை. அவன் பிரெஞ்சு பேசும் மக்க ளுக்கே அரசியற் பதவிகளை யளித்தான். அரசியற் காரியங்கள், சட்டம், மாதாகோவில் நிகழ்ச்சிகள் எல்லாம் பிரெஞ்சிலேயே நடைபெற்றன. அதனால் செர்மானிய மூலத்தைப் பெற்ற ஆங்கில மொழியில் பாதியளவுக்குத்தான் செர்மானிய மொழிச் சொற்கள் உள்ளன. மற்றப்பாதி பிரெஞ்சு அல்லது இலத்தீன் சொற்களைக்கொண்டுள்ளது. நார்மன் வெற்றிக்கு முன்பு டேனி யர்கள் நாட்டைக் கைப்பற்றி யிருந்ததால், அப்போது டேனிய மொழிச் சொற்கள் மிகுதியாக ஆங்கிலத்தில் கலந்தன. டேனிய மும் ஆங்கிலமும் ஒரு மொழியின் கிளைகளே என்று எண்ணு

மளவுக்கு அவ்வளவு ஒன்றாய்க் கலந்தன. இங்கிலாந்தின் பல இடப்பெயர்கள் இன்னும் டேனிய மூலத்தைக் காட்டுகின்றன. பதினான்காம் நூற்றாண்டில்தான் ஆங்கிலம் அரசியல் மொழியாயிற்று. கி.பி. 1362இல் முதன் முதலாக அரசன் பார்லிமெண்டை ஆங்கிலத்தில் துவக்கி வைத்துப்பேசினான். அரசவையிலும், நீதி மன்றத்திலும் ஆங்கிலமே வழங்கப்பட வேண்டுமென்றும், நாட்டுச்சட்ட நூல்கள் அனைத்தும் ஆங்கிலத்திலேயே இருக்க வேண்டும் என்றும் சட்ட மியற்றப்பட்டது. அதற்குப் பிறகு ஆங்கிலம் தன் செல்வாக்கைப் படிப்படியாக வளர்த்துக்கொண்டு ஆங்கில மக்களின் ஆண்மைச் சிறப்பால் உலகெங்கும் பரவியது. இதனாலும், புதிய உலகமான அமெரிக்காவில் மேலோங்கியிருப்பதனாலும் இன்று அது உலகப் பொதுமொழியாகத் திகழும் நிலையை எய்திவிட்டது.

உருசியனைத் தவிர மேற்குறிப்பிட்ட உலகப்பெரு மொழிகள் எல்லாம் ஐரோப்பாவில் பிறந்து ஐரோப்பியப்பண்பாட்டைப் பெற்று, ஐரோப்பிய வல்லரசுகளால் வளர்க்கப்பட்டமையாலேயே சிறப்பு எய்தின எனலாம். சென்ற நூற்றாண்டு வரை சிறு கிளை மொழியாய்க் கவனிப்பாரற்றுக் கிடந்த உருசிய மொழி அம்மொழி பேசுவோரின் வல்லரசாண்மையால் வலுப்பெற்று வருகிறது. பன்னிரண்டாம் நூற்றாண்டில் உருசிய மொழி கிழக்கு ஸ்லாவிக் மொழியின் கிளைமொழியாக இருந்ததற்குச் சான்றுகள் உள்ளன.

இலத்தீன் மொழியும் முற்காலத்தில் உரோம் நகரத்தில் பேசப்பட்டு வந்த ஒரு கிளைமொழியே. இலத்தீனின் பழைய ரிக்கார்டுகள் கி.மு. மூன்றாம் நூற்றாண்டைச் சேர்ந்தவையே. இந்தியாவின் வடமொழியைப் போலவே, அது இடைக்காலத்திலும் பிற்காலத்திலும் கல்விமிக்காரின் எழுத்துக்கும், சொற்பொழிவுக்கும் உரிய மொழியாகப் போற்றப்பட்டு வந்தது.

இக்காலத்தில் கிரீக்கு மொழி எழுபத்தைந்து நூறாயிர மக்களால் பேசப்படுகிறது. அதன் இக்காலக் கிளை மொழிகள் எல்லாம் பெரும்பாலும் முதல் நூற்றாண்டில் இருந்த திருந்திய மொழியின் (Standard language) வடிவங்களே. பழங் கிரீக்கின் கிளைமொழிகளைப் பற்றிக் கி.மு. ஏழாம் நூற்றாண்டிலிருந்து எழுதப்பட்ட கல்வெட்டுக்களினின்றும், மிகப் பல இலக்கியங்களினின்றும் அறிகிறோம். இலக்கியங்களுட் பெருமையும் புகழும் வாய்ந்த ஹோமர் கதைகள் கி.மு. எட்டாம் நூற்றாண்டைச்சேர்ந்தவை. பழைய பெர்சியன் மொழியில் கி.மு. 6 முதல் 4 நூற்றாண்டுகளில் வாழ்ந்த மாபெருமன்னன் டாரியசும் அவன் வழி மரபினரும் கல்வெட்டுக்களைப் பொறித்துப்போந்தனர்.

இலத்தீன் மொழி பரவியதற்குக் காரணம் அம்மொழியை எழுதுவதற்குப் பழங்காலத்திலேயே சிரிலிக் வரிவடிவம் கண்டு பிடிக்கப்பட்டதுதான். அதுவரை மொழியை வரிவடிவில் எழுதி யறியா மக்கள் சிரிலிக் எழுத்துக்களை ஆர்வத்துடன் கற்றனர். இலத்தீனும் விரைவில் பரவிற்று. ஸ்லவானிக் மொழி கிறித்துவ சமயம் பரவியதால் மக்களிடையே நன்மதிப்புப் பெற்று வளர்ந்தது. அவ்வாறே, பௌத்தமதம் பரவியதால் பாலி மொழியும், இசுலாம் பரவியதால் அராபிக் மொழியும், இந்துமதம் போற்றப் பட்டதால் வடமொழியும் வளர்ந்து வந்தன. பேச்சுவழக்கற்ற பிறகும் இலத்தீனும் வடமொழியும் கோயிற் பூசாரிகளால் சமயங்களின் அடிப்படையில் போற்றப்பட்டு வருகின்றன.

ஒரு மொழி பரவிவரும்போது சிறுபான்மையினரால் பேசப்படும் வலிமை குறைந்த மொழிகள் வலிகுன்றி நலிந்து விடுகின்றன என்பது வரலாறு காட்டும் உண்மை. உரோமான்சு மொழிகளான பிரெஞ்சு, இத்தாலியன், இசுபானியம், போர்த்துக் கீசிய மொழிகளும், செர்மானிய மொழிகளும், ஸ்லவானிக் மொழிகளும் அவற்றைப் பேசுவோர் குடியேறிய நாடுகளில் முன்பு பேசப்பட்டுவந்த மொழிகளை நசுக்கி வந்தன. அதனுல் அந்நாடுகளில் பழைய மொழிகள் மறையத் தொடங்கின.

மொழியாராய்ச்சியாளராலும் எப்போது தோன்றியது என்று அறுதியிட்டுக் கூறவொண்ணுத தொல்பழமையுடைய தாயும், பல்லாயிரமாண்டுகளாக வைடீடின்றிப பேசப்பட்டு வரும் புதுமையுடையதாயும், புதிய கருத்துக்களுக்கெல்லாம் இடங்கொடுத்து வளர்ந்துவரும் இளமையுடையதாயும், பாரத நாட்டு மொழிகளில் மூத்த புகழுடையதாயும் திகழும் நம் தமிழ் மொழி உலகத்து உயர்தனிச் செம்மொழிகளுள் ஒன்ருய் இருந்து வந்திருக்கிறது. தமிழின் சீர்மையே அதைப் போற்றி வளர்த்துவந்த தமிழ்மக்களின் பெருமைக்கும் பண்பாட்டுக்கும், நாகரிகத்துக்கும் அளவுகோலாகும். பல்லாயிரமாண்டுகளாகப் பலகோடித் தமிழர்களின் நெஞ்சத்தில் குடிகொண்டு, புலவர் களின் உள்ளங்களில் நடமாடிச் செழித்து வளர்ந்து வந்த தமிழ் மொழியே தமிழ் உள்ளத்தைப் பிரதிபலிக்கும் கண்ணுடியாகத் திகழ்கிறது. தமிழே தமிழின் மரபையும், சமுதாய வாழ்வையும், தமிழ் உள்ளத்தையும் விளங்கக்காட்டும் கருவியாய் உள்ளது.

தமிழின் வரலாறு அதன் பெருமைச் சிறப்பைத் தெள்ளி தாய்க் காட்டுகிறது. சங்ககாலத்தில் முடியுடை மூவேந்தரின் ஆட்சிமொழியாகவும், இடைக்காலத்தில் பிற்காலச் சோழர், பாண்டியர்களின் ஆட்சிமொழியாகவும் விளங்கியது. ஏறத்தாழ எழுநூறு ஆண்டுகள் ஆட்சியுரிமைச் சிறப்புக் குன்றியிருந்த

தமிழ், இக்காலத்தில் மீண்டும் தமிழ்நாட்டின் ஆட்சிமொழியாகப் பிறங்குகிறது. இரண்டாயிரத்தைந்நூறு ஆண்டுகளாக வடமொழியின் ஆதிக்கத்தை எதிர்த்துப் பேச்சுமொழியாய்ச் செம்மாந்து விளங்கும் வெற்றி யொன்றே தமிழின் அழியாச் சிறப்புக்குப் போதிய சான்றாகும். தமிழகத்தை ஆண்டு வந்த பிறமொழியாளரும் தமிழின் இயல்புவளர்ச்சியை அழித்துவிட முடியவில்லை. பாரதம் முழுவதும் பரந்து நிற்கும் வடமொழியும் வடமொழியினின்று பிறந்த மொழிகளுங், குறிப்பாக இந்திமொழியும் கொடுக்கும் தாக்குதல்களைச் சமாளித்து வென்று தற்சிறப்புடன் வீற்றிருக்கும் பெருமை தமிழுக்கு உண்டு. எனினும் தமிழ்மொழியின் ஆற்றலை, இலக்கியச் சிறப்புக்களின் மூலமாகவேனும் பாரதத்துப் பிறமொழியாளரும், பிறநாட்டாரும் உணர்ந்துகொள்ளச் செய்வது நம்மனோர் கடமையாகும்.

ஒரு மொழியின் சிறப்பை அதைப் பேசும் மக்களின் தொகையைக் கொண்டு அளவிடக் கூடாது. உலகில் ஐந்தில் ஒரு பங்கினர் பேசும் சீனமொழி சைனாவைத் தவிர வேறெங்கும் ஆங்கிலத்தைப்போல் பரவவில்லை. அதற்குக் காரணம் சீனம் அதைத் தாய்மொழியாகப் பெற்றவராலன்றி மற்றவர்களால் எளிதில் கற்றுக்கொள்ள முடியாதபடி சித்திரங்களைப் போன்ற கருத்துச் சொற்களைப் (ideograms) பெற்றிருப்பதேயாம். மேலும் குரல் ஒலியின் உச்சரிப்பு வேறுபாட்டால் மொழிப் பொருள் மாற்றத்தை எளிதில் அடைந்துவிடுகிறது. எனவே இதைக் குரல்ஒலி மொழி (Tonal language) என்று கூறுவர். சீன எழுத்துமொழியைக் கற்பதிலும் இடர்ப்பாடுகள் உள்ளன. சித்திர எழுத்துக்களைச் சிறிது முறைமாற்றி எழுதுவதனாலேயே பெரிய பொருள் மாற்றங்கள் ஏற்படுகின்றன. ஒவ்வொரு கருத்துக்கும் தனிதனித் சித்திரக் கருத்துச் சொற்கள் இருப்பதால், சிறு எண்ணிக்கை கொண்ட வரிவடிவ எழுத்துக்களால் இயங்கும் உலகத்துப் பெரும்பாலான மொழிகளைப்போல அதைக் கற்பது எளிதாக இல்லை. உலகத்தில் பேசப்படும் மொழிகளில் பெரும்பாலன இன்னும் வரிவடிவத்தில் எழுதப் பெறாமல் இருக்கின்றன; அவற்றில் இலக்கியச் செல்வங்கள் இல்லை.

இலக்கண வளமும் இலக்கிய வளமையும் பெற்று விளங்கும் திராவிடத்தாயான நம் மொழியை எல்லோரும் ஒருமித்துப் போற்றி வளர்க்க முற்படவேண்டும். உலகத்து இலக்கியங்களின் வகையெல்லாம் தமிழ் பெற்றிருக்குமாறு உழைத்துப் புதிய இலக்கியங்களைப் படைக்கவேண்டும். உலகப் பேரிலக்கியங்களை யெல்லாம் மொழி பெயர்த்து 'இம் மொழிக்கண் எல்லாப் பொருளும் உள; இதன்பால் இல்லாத எப்பொருளும்

என்று எல்லா நாட்டவரும் புகழ்ந்தேத்தும் நிலை எய்தவேண்டும். இந்நிலையை எய்துவது எளிதன்று; தமிழ்ப் பெருமக்களனைவரும் பல்லாண்டுகள் உழைத்து மொழிவளர்ச்சியில் தத்தம் பங்கினை நல்கிவரல் வேண்டும். சென்ற நூற்றாண்டுவரை வடமொழிக்கு இணையாக வளரவேண்டுமென்று நம் தமிழைப் புலவர்கள் போற்றி வந்தனர்; வெற்றியும் கொண்டனர். இனிப் பிற்காலத்தில் ஆங்கிலமொழிக்கு இணையாக மேம்படுதலே தமிழ் எய்த வேண்டிய நிலை எனலாம்.

தமிழ்மொழிபோல் இலக்கண வளம் நிரம்பிய கிரீக்கு இன்று சிறு எண்ணிக்கையுள்ள மக்களாலேயே பேசப்படுகிறது. சிறுபான்மையினரால் பேசப்படுவதால் மட்டும் தமிழ், கிரீக்கு மொழிகளின் பெருமை குன்றிவிடாது. ஒரு மொழியைப் பெரும்பாலான மக்கள் பேசும்நிலை ஏற்பட்டதற்குப் பல காரணங்கள் உள்ளன. இந்தோ-ஐரோப்பிய மொழிகளைப் பேசுவோர் பலநாடுகளில் சென்று குடியேறியதாலும், செமிதிக் மொழிகள் பேசுவோர் நாடோடிகளாக இடம் பெயர்ந்து உறைந்து வந்ததாலும், ஆஸ்ட்ரோனீசியன் மொழிகளைப் பேசியவர்கள் கடல்கடந்து பல நாடுகளுக்குச் சென்றதாலும் அம்மொழிகள் விரைவில் பரவ முடிந்தது. தமிழும் பிற்காலச் சோழரின் ஆட்சியில் கடல்கடந்து ஈழம், கடாரம், சாவகம், மலேயா முதலிய பல தூரக்கிழக்கு நாடுகளுக்குச் சென்று பரவியது. சோழப் பேரரசு வீழ்ச்சிக்குப்பின் தமிழ் பிறநாடுகளில் விரைவில் பரவும் வாய்ப்பை இழந்துவிட்டது. எனினும் இக்கால இந்திய மொழிகளுள் கடல் கடந்து பலநாடுகளிலும் பேசப்படும் மொழி தமிழே என்பது நாமறிந்து பெருமைப்படத் தக்கதொன்றாகும். அரசியல் காரணமின்றியும் பல நாடுகளில் தமிழ் பரவியிருப்பது அதன் சிறப்புக்கு ஒரு சான்றாகும்.

இங்கிலாந்து, போர்த்துக்கல், ஒல்லாந்து, இத்தாலி, பிரான்சு, செர்மனி முதலிய நாடுகளிலேயுள்ள பல சிறந்த நூல் நிலையங்களில் தமிழ் நூல்களும் தமிழோடு தொடர்புடைய நூல்களும் வைக்கப்பெற்றுள்ளன. அவற்றையும் நாம் ஆராய்ந்து இதுவரை அச்சிடப்பெறாவிடின் அச்சிடவேண்டும். உலக நூலகங்களில் எல்லாம் தமிழிலக்கிய நூல்கள் இடம்பெறச் செய்யவேண்டும்; உலகப் பல்கலைக் கழகங்களில் எல்லாம் தமிழ் வீற்றிருக்கச் செய்யவேண்டும் என்பதுமே தமிழரின் உள்ளத்துள் எப்போதும் ஊற்றெடுத்து நிற்கும் இன்ப எண்ணக் குறிக்கோளாக இருக்க வேண்டும். அப்போதுதான் தமிழ் உலகப் பெருமொழியென எல்லா நாட்டினராலும் மதிக்கப்படும் நிலை விரைவில் வந்தெய்தும்.

# உணர்க அன்னோர்!

[வித்துவான் திரு. சொ. சிங்காரவேலன் பி. ஏ.]

தமிழ்மொழிச் சிறப்பை ஓரார்;
    தனித்திறந் தன்னை ஓரார்;
தமிழ்மொழிப் பெற்றி ஓரார்;
    தாயெனுந் தன்மை ஓரார்;
    ங்கடல் உலகில் நின்று
    யங்கிடும் புகழ்மை ஓரார்;
கமழிளங் கனிவை ஓரார்;
    கண்மூடிக் கிடப்பர் சில்லோர்! (௧)

கன்னடம் தெலுங்கு மற்றும்
    கருதிடும் துளுவம், வாய்த்த
நன்னய மலையா ளந்தான்
    நலம்பெறத் தோன்றி நிற்கச்
சென்னெறி வரலா றேனும்
    செந்நெறி யுணரா மாந்தர்
அன்னையைந் தமிழா மென்ற
    அறிவின்றிப் பிதற்று கின்றார்! (௨)

மொழிகூறும் வரலா றெல்லாம்
    முன்னோர்தம் கதையோ? நல்ல
வழிகூறும் சான்றோர் பேச்சு
    வாய்மையில் நெறியோ? இன்று
பழிகூறும் தீயோர் கூற்றுப்
    பண்பிற்றோ? கூறீர், சான்றீர்!
விழிகூறும் காட்சி கண்டும்
    வீணர்சொல் மெய்யாய்ப் போமோ? (௩)

சங்கநாள் ஒன்றாய் நின்று
    சான்றவர் பேணி வைத்த
துங்கமாந் தமிழ்பின் னாளில்
    தொடக்குறுங் கலப்பை யேற்று
அங்கமாப் பிரிந்து லாவி
    அருந்திரா விடமா நின்ற
பங்கமில் லுண்மை தன்னைப்
    பாரெலாம் அறியு மன்றே? (௪)

கால்டுவெல் முதலா வுள்ள
    கனிமனச் சான்றோ ரெல்லாம்
ஏல்வுறக் கூறும் உண்மை
    ஏன்மறந் துளறு கின்றார்?
சால்புறுந் தென்ன கத்தே
    சார்பெலாந் தமிழே யாகி,
மேல்நிலை பெற்று நிற்போர்
    மிக்கசொல் உணர்க அன்னோர்!

# உண்மை விளக்கம்

[செந்நாப்புலவர் திரு. அ. வரதநஞ்சைய பிள்ளை]

(செல்வி சிலம்பு, ௩௫, பரல் ௧௧, ௪௮௮ ஆம் பக்கத் தொடர்ச்சி)

இந்நூல், விநாயக வணக்கத்தை முதலிற்கொண்டு 54 நேரிசை இருவிகற்ப வெண்பாக்களால் முற்றுகின்றது.

மெய்கண்ட சிவத்தையே குருவாக அடைந்தான் ஒரு சீடன், சைவசித்தாந்த நூற்பொருட்களை முறையே வினவுவதாகவும், அவனுக்கு அப்பரமாசாரியர் விடை கூறுவதாகவும் தெளிவுபெற எளிய நடையில் இயன்று, சைவசாத்திரக் கருத்துக்களைத் தொகை வகை விரிகளால் சுருங்கவுரைப்பது. சிவஞானபோதம், சிவஞானசித்தியார் போன்ற அரும்பொருள் நூற்களையும் சிவஞானமாபாடிய முதலான விரிந்து பெருகும் கருத்துக்கள் செறிந்த நூற்களையும் உணரப்புகுவோர்க்கு வழிகாட்டியாயும் அன்னோர் முதற்கண் பயிலற்கேற்றதாயும் அமைந்துள்ளது.

இயல்பாகவே எளிய நடையில் செம்பொருட்களை விளங்கக் கூறும் இந்நூற்கு மேலும் எளிய உரைநடையில் பொருள்வகுக்க வேண்டுமென்று விரும்பிய நம் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழக உறுப்பினர் கருத்து, சைவத்தின் பெருமையையும் உண்மையையும் கற்று வல்லரல்லாத ஏனையோர்க்கும் பயன்படுமாறு உணர்த்தவேண்டும் என்னும் பெருங்கருணையே யென்போம்.

வாழ்க அப்பெரியார்! வாழ்க அவர் பேரருள்!!
ஞாலமுற்றும் சிவமணங் கமழ்க!!!

## நூல்

**விநாயகர் துதி**

பசுப்போல்வதாகிய வேதத்தில் பால்போல்வதாகிய சைவாகம சாத்திரங்களின் நுண்ணிய பொருட்களை வழுவின்றிக் கூறும் உண்மை விளக்கம் என்னும் இந்நூலை முற்றுவித்தற்கு யாதோரிடையூறும் நேராமற் காக்கும்பொருட்டு மும்மதங்களையும் அந்திச் செவ்வானம் போன்ற திருமேனியையும் யானை முகத்தையும் சரிந்த வயிற்றையும் ஐந்து கரங்களையுமுடைய விநாயகக் கடவுளை எம் பாச பந்தங்கள் நீங்கும்பொருட்டு மனத்துட்கொண்டு துதிக்கின்றோம்.

அவதாரிகை

(சிவஞானம் பெறுதற்கேற்ற அதிதீவிரபக்குவம் பெற்ற நன்மாணவகன் தனது ஞானாசாரியரைப் பல்கால் வழிபட்டுத் தன் ஐயப்பாடுகளை வினவுகின்றான்.)

சீடன் வினா:—கணந்தோறும் மாறுபட்டழியும் தன்மைத் தாகிய இப்பிரபஞ்சத்தின் இயல்பை அறிவித்து எனது மயக்க வுணர்வை அகற்றி உண்மைஞானம் உதிக்கச்செய்யவல்ல அடிகளே! அடிமையின் விண்ணப்பம் ஒன்று கேட்டருள்வீராக, எம்பெருமானே! மெய்கண்ட மூர்த்தியே!

சைவசித்தாந்தத்திற் கூறப்பெறும் முப்பத்தாறு தத்துவங் கள் யாவை? ஆணவமென்பது யாது? கன்மம் என்பது என்ன? இவற்றோடு வேறறக் கலந்து நிற்கும் ஆன்மாவின் இயல்பு யாது? என் பக்குவம் நோக்கி ஞானோபதேசம் செய்து உய்விக்கத் திருவுளங்கொண்டு மானிடச் சட்டை தாங்கி எழுந்தருளிய சிவ மாகிய தங்களின் சொரூபம் யாது? பரமேசுவரனுடைய ஐந் தொழிற் கூத்தும் அஞ்செழுத்துண்மையும் எவை? திருவாய் மலர்ந்தருளல் வேண்டும்.

ஞானாசாரியர் விடை:—உண்மை உணர்ச்சியில் ஊக்கமுள்ள நன்மகனே! கேட்பாயாக.

சைவாகமங்களின் வடித்த சாரமாகவுள்ள சித்தாந்த நூற் கள் ஓதும் தத்துவப் பொருட்கள் (1) ஆன்மதத்துவம், (2) வித்தியாதத்துவம், (3) சிவதத்துவம் என மூவகையாகப் பகுக்கப் பெற்று, முறையே போக்கியகாண்டம், போககாண்டம், பிரேரககாண்டம் எனவும்; அசுத்தம், சுத்தாசுத்தம் சுத்தம் என வும் வழங்கப்பெறும்.

(1) ஆன்மதத்துவப் பகுதிகள் :—பூதம் 5; தன்மாத்திரை 5, ஞானேந்திரியம் 5, கன்மேந்திரியம் 5, அந்தக்கரணம் 4, ஆக இருபத்து நான்காம்.

(2) வித்தியாதத்துவப் பகுதிகள் :—காலம், நியதி, கலை, வித்தை, அராகம், புருடன், (அசுத்த) மாயை என ஏழாம்.

(3) சிவதத்துவப் பகுதிகள் :—சுத்தமாயை, ஈச்சுரம், சாதாக்யம் அல்லது சதாசிவம், சத்தி, சிவம் என ஐந்தாம். ஆக இம்முப்பகுதியினும் தத்துவங்கள் முப்பத்தாறுதல் அறிக.

இனி இவற்றை விவரிக்கின்றோம் நன்கு கவனிப்பாயாக.

முதற்கண் உரைக்கப்பெற்ற பூதங்கள் ஐந்தாவன:— (1) பிருதிவி அல்லது நிலம், (2) அப்பு அல்லது நீர், (3) தேயு அல்லது தீ, (4) வாயு அல்லது காற்று, (5) ஆகாயம் அல்லது வான்.

இப்பூதங்களே எல்லா ஆன்மாக்கட்கும் உடற்கூறுக அமைந்தும், ஞானேந்திரிய கன்மேந்திரியங்கட்கு விடயமாயும் நிலக்களமாயும் மிகப் பயன்படுவனவாம். விடயம்: நுகர்பொருள், நிலக்களம்! நுகர்பொருள்கள் உண்டாகி நிலத்திருக்குமிட

இப்பூதங்களின் விளக்கவிவரங்களைக் கீழேகொடுக்கப்பட்டுள்ள அட் _வ— ?: காண்க.

## அட்டவணை 1

| ஐம் பெரும் பூதங்கள் | பூதங்களின் வடிவம் | பூதங்களின் நிறம் | பூதங்களின் குறியீட்டு எழுத்துக்கள் | பூதங்களின் குறிவடிவங்கள் | பூதங்களின் அதிதேவதைகளும் அவர்கள் தொழில்களும் | பூதங்களின் இயற்கை அமைப்புக்கள் |
|---|---|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 |
| பிருதிவி | நாற்கோணம் \| \| | பொன்மை | ல | குலிசம் | 1 அயன் 2 படைத்தல் | கடினமாய் நின்று தாங்குதல் |
| அப்பு | அர்த்த சந்திரன் | வெண் | வ | தாமரை | 2 காத்தல் | கு நெகிழ்தல் |
| தேயு | முக்கோணம் △ | சிவப்பு | | அல்லது தலை மழி | 1 உருத்திரன் 2 அழித்தல் | வெம்பிச் சுட்டு ல் (காட்டுதல்) |
| வாயு | அறுகோணம் | கருமை | | புள்ளி | 1 மகேச்சுரன் 2 மறைத்தல் | பரவி அசைந்து திரட்டுதல் |
| ஆகாயம் | வட்டம் ○ | | அ | அமுதபிந்து | 2 அருளல் | நுகரும் இடம் கொடுத்தல் |

இப்பூதங்களின் தன்மாத்திரைகளையும் ஞானேந்திரிய கன்மேந்திரியப் பகுதிகளையும் குறித்த விவரங்களை அடியில் வரும் அட்டவணை காட்டுகின்றது.

## அட்டவணை 2

| ஐம் பெரும் பூதங்கள் | பூதங்களின் காரணதன் மாத்திரைகள் | ஞானேந்திரியங்கள் | | கன்மேந்திரியங்கள் | |
|---|---|---|---|---|---|
| | | ஞானேந்திரியங்களின் பெயர் | ஞானேந்திரியங்களின் தொழில் | கன்மேந்திரியங்களின் பெயர் | கன்மேந்திரியங்களின் தொழில் |
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 |
| பிருதிவி | நாற்றம் (கந்தம்) | மூக்கு | மோந்தறிதல் | உபத்தம் | ஆநந்தித்தல் முதலியன |
| அப்பு | சுவை (ரசம்) | நாக்கு | உருசித்து அறிதல் | குதம் | மலமுதலிய கழித்தல் |
| தேயு | ஒளி (ரூபம்) | கண் | பார்த்து அறிதல் | பாணி (கைகள்) | இடுதல் ஏற்றல் முதலியன |
| வாயு | ஊறு (பரிசம்) | உடம்பு | உற்று அறிதல் | பாதம் | நடத்தல் முதலியன |
| ஆகாயம் | ஓசை (சத்தம்) | செவி | கேட்டறிதல் | வாக்கு | பேசுதல் முதலியன |

## அட்டவணை 3

| அந்தக் கரணங்கள் | அந்தக்கரணங்களின் தொழில் | அந்தக்கரணங்கள் தோன்றும் இடம் | அந்தக்கரணங்களின் எழுத்துக்கள் | அந்தக்கரணத்தின் அதி தெய்வங்கள் |
|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 |
| 1 மனம் | ஞானேந்திரியங்களின் உதவியால் உலக விஷயாதிகளைப் பற்றி நினைத்தல் | தைசத ஆங்காரம் | ம | உருத்திரன் |
| 2 புத்தி | மனத்தாற் பற்றி நினைப்பூட்டப்பட்டவற்றை இன்னதென ஆராய்ந்து நிச்சயித்தல் | மூலப்பிரகிருதியின் காரியமாகிய குண தத்துவம் | உ | விஷ்ணு |
| 3 அகங்காரம் | நிச்சயிக்கப்பட்டவற்றை அடைய முயற்சித்தெழுவது | புத்தி | அ | பிரமன் |
| 4 சித்தம் | முயற்சிப்பயனை நன்கு சிந்தித்தல் | மனத்தின் ஒரு பகுதி | விந்து | மகேசன் |

இவை தூலக்கருவிகள் அல்லது புறக்கருவிகள் எனப்பெறும்.

இனி சூக்குமக் கருவிகள் அல்லது அகக்கருவிகளாகிய அந்தக்கரணங்களின் பெயரும் இயல்பும் மேலுள்ள எண் 3 அட்டவணையால் அறிக.

உடம்பாகிய ஒரு தேயத்தை ஆளும் அரசனை ஒத்த ஆன்மாவுக்கு ஞானேந்திரியங்களாகிய ஒற்றரால் அறிவிக்கப்படும் செய்திகளை அந்தக்கரணங்களாகிய இவ்வமைச்சர்கள் ஆராய்ந்து செய்யத்தக்கவைகள் இவை, செய்யத்தகாதன இவை எனக் கூறிக் கன்மேந்திரியங்களாகிய படைகளால் தொழில்புரிவித்துவரும் அற்புதம் உற்றுநோக்கத் தக்கது. ஆன்மதத்துவங்களாய் முதற்கண் நின்ற 24 தத்துவங்களின் இயல்பு இங்ஙனம் விளக்கப்பட்டது. மேல் இரண்டாவதாக நிற்கும் வித்தியாதத்துவங்களின் பெயரும் செயலும் கீழ்வரும் அட்டவணையா லறியலாம்.

## அட்டவணை 4 கள்

| வித்தியா தத்துவங்கள் | வித்தியா தத்துவங்களின் செயல்கள் |
|---|---|
| 1 | 2 |
| 1 காலம் | இறப்பு, நிகழ்வு, எதிர்வு என மூன்றாகி முறையே எல்லை, பலம், புதுமைகளைப் பொருத்துவது |
| 2 நியதி | ஆன்மாக்களின் கன்மத்திற்கேற்ற பலன்களை நிச்சயித்து நிற்பது |
| 3 கலை | ஆன்மாவின் அநாதிப் பற்றாகிய இருண்மலத்தைச சற்று நீக்கிச் செய்கையை எழுப்புவது |
| 4 வித்தை | ஆன்மாவிற்கு அறிவுதிக்கச் செய்தல் |
| 5 அராகம் | ஆன்மா அறிந்த பொருட்கண் ஆசையைத் தோற்றுவித்தல் |
| 6 புருடன் | காலம் முதலிய ஐந்தனுடன் கூடிப் போகநுகர்ச்சியைத் தூண்டும் பும்ஸத்துவ மலமுடைய ஆன்மா |
| 7 மாயை | பிரபஞ்ச மயக்கத்தைத் தருவது. (ஆயினும் இருண்மலத்தை நீக்கற்குஅடிகோலுதலால் ஓரளவு உயிர்க்குப் பயன்படுவது. |

இனி மூன்றாந் தொகுதியாகிய சிவ தத்துவங்களின் பெயரும் செயல் முதலியனவும் பின் காட்டிய அட்டவணையிற் காண்க.

## அட்டவணை 5

| சிவ தத்துவங்களின் பெயர் | சிவ தத்துவங்களின் தன்மை | சிவ தத்துவங்களின் பயன் |
|---|---|---|
| 1 | 2 | 3 |
| 1 சுத்தவித்தை | ஞானம் (அறிவு) கிரியை (ஆற்றல்) என்னும் இரண்டில் ஞானம்பெருகிக் கிரியை குறைந்திருத்தல் | இஃது சுத்த ஆன்மாக்களுக்கும் புவனங்களின் தோற்ற ஒடுக்கங்கட்கும் சிவ தத்துவப் பகுதிகள் எவற்றிற்கும் இடமாய்ப் பயன் படுவது |
| 2 ஈச்சுரம் | ஞானம் குறைந்து கிரியை மிகுந்து இருத்தல் | உயிர்கள் பக்குவம் எய்தும் வரையில் முன் பின் நிகழ்ச்சிகளைத் தெரியவொட்டாது மறைத்துப் பயன் படுவது |
| 3 சாதாக்கியம் (அல்லது சதாசிவம்) | ஞானமும் கிரியையும் அளவு ஒத்து இருத்தல் உருவம் அருவம் ஆகிய இரு தன்மையும் பெற்று நிற்பது | ஆன்மாக்களுக்கு இறுதிப் பேறாகிய வீட்டின்பத்தை அருளும் உபகாரமுடையது |
| 4 சத்தி | முழுவதும் கிரியை மயமானது | எல்லாவற்றையும் உருவாக்கியும் படைத்தல் முதலிய ஐந்தொழிற்கும் இன்றியமையாததாயும் உள்ளது |
| 5 சிவம் | முழுவதும் ஞான மயமானது | எல்லாவற்றையும் அறிந்து ஆன்மாக்களுக்கு என்றும் உபகரிக்கும் அருட்செயலுள்ளது |

இச் சிவ தத்துவம் ஐந்தில் சிவம், சத்தி என்னும் இரண்டு தத்துவங்களும் எல்லாப் பொருட்களும் ஒடுங்குதற்கிடமாய் நிற்றலால் "இலய சிவம்" என்றும் சதாசிவ தத்துவம் என்றும் ஏனைய முகூர்த்தங்களைத் தோற்றுவித்தலான் "போக சிவம்" என்றும், மகேசுரம் சுத்த வித்தை என்றும் ஏனைய முகூர்த்தங்கள் தோன்றித் தொழில் புரிதற்கு இடமாகலின் "அதிகார சிவம்" என்றும் வழங்கப்பெறும். இவையே சிவபெருமானுக்குச் சுந்தரவடிவம். இங்ஙனம் தத்துவங்கள் முப்பத்தாறின் இலக்கணங்களை உணர்க.

# பஞ்சமரபு

[வித்துவான், திரு. வே. ரா. தெய்வசிகாமணிக் கவுண்டர்]

(செல்வி சிலம்பு ௩ ௫, பரல் ௧௧, ௫0௪ ஆம் பக்கத் தொடர்ச்சி).

## இசைமரபு

ஒழிபு

" ஆதி யுடன்சுத்தஞ் சாளவஞ்சங் கீரணம்
ஏதமில்சீர்ச செந்தமிழோ டிவ்வைந்தும்—பேதமே
பாடற் பகுதி பலநிறம் பேசினார்
கோடிமொழி நூலோர் குறித்து."

[என் - னின்.] ஐந்துநிறமு முணர்த்திற்று.

கேத்திராங்கம் சுத்தம் சாளவம் சங்கீர்ணம் தமிழ் என வைந்துநிறமும் கண்டுகொள்க. இவ்வைந்தும் மூன்று பகுதியாம். பூருவம் சுத்தத்துடனே சிவணும். பூருவமெனினும் கேந்திராரங்கமெனினுமொக்கும். சங்கீர்ணஞ் சாளவத்துடனே சிவணும். தமிழ் களியெனவரும் என ஐந்துநிறமும் மூன்று பகுதியாமாறு கண்டுகொள்க.

பேதமே, பாடற் பகுதி பலநிறம் பேசினார், கோடிமொழி நூலோர் குறித்து, எனின் முன் சொன்ன நிறங்களுடைய பேதமே யுலகத்துட் பாடற் பலநிறங்களுமென்றவாறு. பல நிறங்களாவன—ஒரு பண்ணுயிருக்க உருவண்ணந் தேவபாணி யிவற்றுடன் பொருந்திய நிறமாய் வருவன. கவிகளுடனும் சிந்துகளுடனும் பொருந்தி அகப்புறமாய் வருவனவும் வேடு மறம் குறம் சித்து சோனகம் இவற்றுடன் பொருந்திப் புறமாய் வருவனவும் சாத்தன் வயிரவன் காடுகாள் இவர்களைப் பாடும் புறப்புறமாய் வருவனவும் முன்சொன்ன நிறங்களுடைய பேதமே பாடற் பகுதியெனக் கரைகாணாத மொழியையுடைய நாப்புலவராற் றுணியப்பட்டதென்றவாறு. (௧)

" மூன்று நிறமு நிறமொன்றே முன்சொன்ன
வான்றெழி லால்வேற்று மையாகும்—என்றுலகில்
வங்கியமே வீணையாழ் மன்னுஞ் சுருதியெனத்
துங்கமிடற் றூற்பிறக்குஞ் சொல்."

மூன்று நிறமுமொன்றே என்பது.

முன்சொன்ன சுத்தம் சாளவம் தமிழ் என்னும் மூன்று நிறமும் உண்மைத்தன்மை பார்க்கில் நிறம் ஒன்றே. வேற்றுமை

யாய தெவ்வாறேனெனின்; முன்சொன்ன தொழிலாலே வேற்றுமையாம். ஓரோசையாய் நின்றகாலத்து நிறம் வேற்றுமையில்லை. அத்தகைய மூவகை நிறமும் வேற்றுமையாய தெவ்வாறேனெனின்; முற்கூறிய தானங்களாலும் தொழில்களாலும் வேற்றுமையாம்.

மூவகைத்திறமும் நிற வேற்றுமைகளும் வருமாறு. சுத்தமாவது ஓசையை யுச்சரித்து நாசியிலே பொட்டிச் சிரத்தையும் நாபியையும் கம்பித்துத் தூங்கிசையாகப் பாடுவது. சாளகமாவது ஓசையை யுச்சரித்து நாசிதட்டாமை யாகாச கம்பிதமாக்கி யேந்திசையாகப் பாடுவது. தமிழாவது ஓசையை யுச்சரித்து நாபியைக் கம்பித்துக் குடிலமாக்கி மயங்கிசையாகப் பாடுவது.

"சொல்லிய விசைவகைப் பகுதியென்னும், வில்லோர் நுதலாய் வீணையாற் காண்க" என்பவாகலின் மூவகைப் பகுதியுமாசான் கண்ணகத்தடுத்து மின்னின வீணை முதலாக வல்லது தோன்றுதென்றவாறு.........சையே கண்டத்திற் பிறக்குமென்றவாறு. (உ)

"வங்கியமே [1]வீணையாழ் சுத்தமே சாயைதமிழ்த்
துங்கவெழுத் தேழ்நரம்பு மேழோசை—பொங்கொலிசேர்
தென்சொல் வடமொழியா விட்ட திறநான்கும்
பின்புமோர் நால்வகையும் பேசு"

[என் - னின்.] கலன்க ளிசையுடன் பிறக்குமாறுணர்த்

வங்கியமே வீணையாழ் சுத்தமே சாயை தமிழ், என்பது நிரைநிரை. சுத்தத்திற்குரித்து வங்கியம். சாளகத்திற்குரித்து வீணை. தமிழிற்குரித்து யாழெனக் கொள்க.

துங்கவெழுத் தேழ்நரம்பு மேழோசை என்பது வங்கியத்திற்கும் வீணைக்கும் எழு(டு)த்துள்ளவை, சரிகமபதநி என்றிவை. தமிழுக்கு நரம்பேழுமுள. அவையாவன: குரல் துத்தம் கைக்கிளை இளி விளரி தாரம் எனவிவை. தென்சொல்........நால்வகையும் பேசு, என்பது ஆரியச்சொல்லும் தமிழ்ச்சொல்லும் நூற்று மூன்று பண்ணுகும். அவை நாலு கூறு பெயர் பெற்றுவழங்கும். அவைதாம் சம்பூர்ணம், சாடபம், அவுவிதம், சதுர்த்தம் என வடமொழிப் பெயர்பெற்றன. பண் பண்ணியற்றிறம் திறம் திறத்திறம் எனத் தமிழ்ப் பெயர்பெற்றது.

---

1. "இன்னிசை வீணையர் யாழின ரொருபால்
இருக்கொடு தோத்திரம் இயம்பின ரொருபால்"
திருவாசகம் திருப்பள்ளியெழுச்சி.

பின்புமோர் நால்வகையும் பேசு என்பது. இன்னமிவற்றிற்குப் பெயர் நாலுள. அவையாவன. அக[illegible] அருகியல், பெருகியல் எனவிவை. (ந)

"பண்பாற் கிரியையாற் பாவா னிலத்தாலும்
முன்பாக நின்றிலங்கு மோசையினை—விண்பாய்
மணிமாட மோங்கு மதுரையார் கோவே
அணிமா மரபிவற்ற லாம்."

[என் - னின்.] பண்கள் பெயர்பெறு மிடத்துப் பண்பாலுங் கிரியையாலும் பாவினாலும் நிலத்தினாலு மிந் நாலுவகையினாலும் பெயர்பெறும். இவற்றுள், பண்பாற் பெயர்பெற்றது கொல்லி துக்கராகம். கிரியையாற் பெயர்பெற்றது பண்........ பாவாற் பெயர்பெற்றது. இசை....நிலத்தாற் பெயர்பெற்றது, பாலையாழ் குறிஞ்சியாழ் மருதயாழ் செவ்வழியாழ் நெய்தல்யாழ் எனினுமொக்கும். தாரப் பண்ணென்பது முல்லையாழ். தாரத்துக்கின மில்லாமையின் இதனை யொழித்து நாற்பெரும் பண்ணென்று வழங்கு மென்றவாறு.

"அணிமா மர பிவற்ற லாம்" என்பது முன்சொல்லப்பட்ட பண்ணூற்று மூன்றினையும் இவ்வாறுய்ந்தறுதி யிடுகவென்றவாறு. (ச)

"பாவோ டிணைத்த விசையென்றார் பண்ணென்ற
தோவாப் பெருந்தான மெட்டாலும்—பாவா
யெடுத்தல் முதலா விருநான்கு பண்ணிற்
படுத்தமையாற் பண்ணென்று பார்."

[என் - னின்.] பண்ணென்றற்கு மிசையென்றற்குங் காரணமுணர்த்திற்று.

பண்ணென்பதற்குக் காரண தானங்களெட்டாலுங் கிரியைகளெட்டாலு மோசைப்படுத்தலாற் பண்ணென்று பெயராயிற்று. தானங்க ளெட்டாவன: தலை மிடறு நெஞ்சு மூக்கு இதழ் பல் நா அண்ணம். கிரியைகளெட்டாவன: எடுத்தல் படுத்தல் நலித்தல் கம்பித்தல் குடிலம் ஒலி உருட்டு தாக்கு எனவிவை. இவற்றாலோசையைப் பண்ணப் படுதலால் பண்ணென்று பெயராயிற்று. (ரு)

"இடையீடு தொட்டுக்கோள் வேறுபாடேனைப்
புடையூ றிட்டை புகலும்—படையார்ந்த
கூர்வேல் விழிமடவாய் கூட்டிசையுங் காட்டினார்
பார்மே லிசையதனின் பண்பு."

[என் - னின்.] இசைப் புணர்ப் பைந்தினையு முணர்த்திற்று.

அவை, இடையீடு, தொட்டுக்கோள், வேறுபாடு, இரட்டை, கூட்டிசை, யெனவிவை. இவற்றைப் பாக்களுடன் புணர்க்கு மிடத்து இடையீடாவது "எழுவா யடிமாற் றடியே யொத்து வழுவி லிரண்டு மிடையீ டாகும்" தொட்டுக்கோளாவது, "முதலடி தன்னொடு மூன்றா மடியொத், தயலடி தன்னுட னீற்றடி யொத்துத், தோன்றிற் றொட்டுக் கோளென மொழிப". வேறுபாடாவது, "ஊறிய விசைக ளொருநான் கடியும், வேறுபட வருவது வேறுபா டாகும்" இரட்டையாவது "முன்னிரண் டடியு மோரிசை யாகப், பின்னிரண் டடியும் பிறிவில வாகித், துன்னி நிற்ப திரட்டை யாகும்" கூட்டிசையாவது "நாலடி யிசையு மோரிசை யாகிச், சேர வருவது கூட்டிசை யாகும்." இவை யைந்தும் நாலடி யான் வருவன. (௬)

"ஓரிசை முன்னிறை சுத்தம்பீர் கண்டமிசை
நேர்புரி கண்ட நெறிமுறையே—சார்பொலிந்த
வெட்டுவகையு மிசையின் புணர்ப்பென்றார்
மட்டலருங் கூந்தலாய் வந்து."

[என் - னின்.] ஓரடியானும் இரண்டடியானும் மூன்றடி யானும் வருஞ் சிந்துக ளிசை புணர்க்கு மிடத்து எட்டுவகை யாலும் புணர்க்குத லுணர்த்திற்று.

அவை ஓரிசை, முன்னிசை, நிறைநிலை, சுத்தம், பீர்கண்டம் இசைகண்டம், நெறிநிலை, முறைகண்டம் எனவிவை. இவற்றுள் "ஓரடி யிசையே யோரடி யாகும்" "இரண்டடி யிசையே வேறுபட வரின், முரண்டபுலவர் முன்னிசை யென்ப" "இரண்டடி யோரிசை நிறைநிலை யாகும்" "மூன்றடி யோரிசை முறைவே றெனிற், றோன்றிச் சுத்த மாகு மென்ப" "முன்னிரண் டடியு மோரிசை யாகிப், பின்னிசை வேறுறிற் பீர்கண் டம்மே" "முதலடி தன்னுடன் மூன்றா மடியொத், திரண்டடி வேறா யிசைகண் டம்மே" "முதலடி வேறாய் முதலீ ரடியும், நேர்படு மோரிசை நெறிநிலை யாகும்" "மூன்றடி யோரிசை முறைகண் டம்மே" எனவிவ்வா றெட்டுவகைப் புணர்ப்புங் கண்டுகொள்க. (௭)

"நெய்தன் முகத்த னெறிவிலங்கப் பாய்தலை
கொய்து நுளைதலெனக் கூறினார்—மொய்குழலாய்
வன்மையே மென்மை சமமென்ப வையத்து
நுண்மையி னாற்கலக்க லாம்."

[என் - னின்.] இசை நுளை யுணர்த்திற்று.

அவை நெய்தல் முகத்தல் பாய்தல் நுளைதல் எனவிவை நாலுமியலுடன் புணர்க்குமிடத்து நெய்தல் வல்லினைக் கெழுவா

யாகும். முகததல மெல்வினைக் கெழுவாயாகும். பாயதல சமநிலைக் கெழுவாயாகும். நனைதலென்பது புன்மைத் தொழிலே யெனச் சொன்னார்களெனக் கொள்க. (அ)

"ஒருக்க ணிசை நூல்கண் ணோசையி லாதான்
பெருக்குரலன் பேழ்வாய் பிரிந்தோன்—கருப்பிரிந்
தாணிற் குறைந்தோ னொழுக்கமிலி யோடாறுந்
தானத் திசைக்கலா தார்."

[என் - னின்.] இத்தன்மையா ரரங்கத்துப் பாடப்பெறு ரென்றவாறு. (௯)

"மிகக குடிப்பிறந்தோன் மெய்யான வோசையான்
றுக்க மிலாதான் சுகமுடையான்—ஒக்கவே
ஊனப் படாதா னுறுப்பில்மறு வில்லாதான்
றானத் திசையியற்று வான்."

[என் - னின்.] இத்தன்மையா ரரங்கத்துப் பாடப்பெறுவ றவாறு. (௧0)

"துய்யமொழி மென்குயிலுஞ் சோலைவரி வண்டினமும்
வைய முழங்கும் வலம்புரியும்—கைவைத்துத்
தும்புரு நாரதர் பாடியமூ வோசையென
நம்புநீ நால்வேதத் துள்."

[என் - னின்.] உத்தமவோசை வருமாறுணர்த்திற்று.

மூவோசையாவன குயில் கூவலும், வண்டின முரற்சியும், வலம்புரியோசையும் போல வொழுகினவோசை தும்புரு நாரதர் பாடிய மூவோசையென்று விளங்கும் வாறு (௧௧)

"பெருக்குரல் கட்டை நழுவல் விலங்கல்
ஒடுங்கி யொதுங்கல் புரைத்தல்—விருப்பில்லாக்
காகுளி காக சுரமென்னு மிவ்வெட்டு
மாகா வெனச்சொன்னா ராய்ந்து."

[என் - னின்.] பாடுதற்கல்லாத விசைகளை யுணர்த்திற்று.

அவை பெருங்குரல் கட்டை நழுவல் விலங்கல் ஒதுங்கல் புரைத்தல் காகுளி காகசுரம் எனவிவை. இவற்றுள் பெருக் குரலாவது நிறமில்லாதவோசை. கட்டையாவது நிறமுந் தான முங் குறைவாவது. நழுவலாவது ஒருதானத்தில் பாட வொரு தானத்தில் நழுவுவது. விலங்கலாவது ஒருபண்பாட வேறொரு பண்ணிலே விலங்குவது. ஒதுங்கலாவது பாடுகிற நிறத்தை யொதுக்கிப் பாடுவது. புரைத்தலாவது ஓரோசையான தன்மை

நீக்கிப்பலவோசையாய் வருவது. காகுளியாவது பேய்கத்தினாற் போலப் பாடுவது. காகசுரமாவது காக்கையின் குரலாவது போலு மிவை யெட்டுஞ் சிறப்பில்லையென்றவாறு (௧௨)

"சிச்சிலி பூனை குடமுழக்கஞ் செம்மைசேர்
உசசி மலைநீர் விழுக்காடு—பச்சைநிற
வேயினிலை வீட்சியுடன் வேய்ந்த நிறப்பறவை
யேயுங்கா லோசை யியல்பு."

[என் - னின்.] பாடுவான் தொழிற்கிரியை வருமா று ..........

இசையோடு தொழிற்படுமிடத்துச் சிச்சிலியாகிய நீர்மேல் பறவைபோலவும் பூனைய துறுமல்போலவும் முழவின் முழக்கம் போலவும் அருவியோசைபோலவும் மூங்கிலிலைவிழுகிற தொழில் போலவும் வானம்பாடியென்கிற பறவைபோலவும் செல்லுகிற தொழிற்கிரியை யியல்புடைத்தென்றவாறு. இவைகாணுமிடத்து வீணையாற் காணப்படும். (௧௩)

"ஒட்டுதலுங் கட்டுதலும் விட்டோசை யாகுதலும்
பட்டமரு நல்லொழுக்கம் பாரணையுங்—கொட்டவணிந்
தாடுவா ராடு மரங்கத் திருந்திசையப்
பாடுவார் பாடும் பரிசு."

[என் - னின்.] பாடுவான் றொழிற்கிரியை வருமாறுணர்த் திற்று.

ஒட்டுதல் கட்டுதல் விட்டோசையாகுதல் நல்லொழுக்கப் பாரணையென்று சொல்லப்பட்ட நான்கும் பாடுவான் சிறப் புடைய னென்றவாறு. (௧௪)

"தூய சுருதியுட னேடா யகம்வருணை
ஏய கெதிவியர்த்தி யிவ்வைந்தும்—சேயிழையாய்
தேசாள சுத்தக் கிரியையெனச் செப்பென்று
பேசினர் நூலோர்[1]பெயர்."

[என் - னின்.] தேசாள சுத்தக்கிரியை வருமாறுணர்த் திற்று.

அவையாவன: சுருதியாவது குற்றப்படாத வோசை. ஏடாயகமாவது தூக்கித் தாக்குதல். வருணையாவது இசைத் திரட்சி. கெதியாவது தாளசதி. வியர்த்தியாவது வழிகாண்டல் எனவிவை தேசாள சுத்தக்கிரியையெனச் சொல்லப் பேசினர் நூலோர்பெயரென்றவாறு. (௧௫)

1. பெரிது என்றும் பாடபேதமுண்டு.

" திப்பிலி தேன்மிளகு சுக்கிஞ்ஞே டிம்பூறல்
தப்பில்லா வான்பால் தலைக்காடை—யொப்பில்லா
வெந்நீரும் வெண்ணெயு மெய்ச்சார்தும் பூசவிவை
மன்னூழி வாழும் மகிழ்ந்து."

[என் - னின்.] மிடறுபாடற்குரிய மருந்துகளை யுணர்த்திற்று.

திப்பிலி தேன் மிளகு சுக்கு இம்பூறல் பசுவின்பால் காடைச்சாறு எனவிவை புசிப்பன. குளிப்பது வெந்நீர். பூசுவது வெண்ணெய் நறுநாற்றங்கள். இப்படிச்செய்யில் இசை குற்றப் படாதென்றவாறு. (கசு)

" நகைபுகை யெட்காடி காமம் நறவு
பகையெனச் சொன்ஞர்கள் பார்மேல்—முகைமலரும்
கூந்த விளம்பிடியே கோல விசைகூறு

[என் - னின்.] மிடற்றுக்காகா தெனவுணர்த்திற்று.

நகைபுகை எள் காடி காமம் கள் இவை பகையெனச் சொன்ஞர்கள் பாரிடத் தென்றவாறு. இவற்றையறிந்துபாடுக வென்றவாறு. (கஎ)

பஞ்சமரபில்வரும் இசைமரபின் ஒழிபு முற்றிற்று.

### தவத்திரு குன்றக்குடி அடிகளார்

## மறைமலையடிகள் நூல் நிலையத்திற்கு வருகை

18-7-61 செவ்வாய்க் கிழமையன்று பகல் 11 மணியளவில் குன்றக்குடியாதீனகர்த்தர் தவத்திரு குன்றக்குடி யடிகளார் நூல்நிலையத்தைப் பார்வையிட வந்தனர். அடிகளாரைக் கழக ஆட்சியாளர் திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்கள் வரவேற்றனர். நூலகத்தை ஒருமணி நேரம் பார்வையிட்ட பின்னர் அடிகளார் நூலகத்தைப் பற்றிய தம் எண்ணத்தைக் கீழுள்ளவாறு எழுதியுள்ளனர்.

"தமிழகத்திற்கு ஒரு பொது நூல் நிலையம் தேவை. அத்தேவையை நிறைவு செய்துள்ளது மறைமலை அடிகள் நூல் நிலையம். இந்த நூற்றூண்டில் தமிழர்க்குக் கிடைத்த ஒப்பற்ற பேராசிரியர் மறைமலை அடிகளார் அவர்கள். அவர்கள் தொகுத்துப் படித்து அனுபவித்த நூல்களைக் கொண்டதாக நூல் நிலையம் அமைந்திருப்பது பாராட்டுதற்குரியசெய்தி. மறைமலை அடிகளுக்குப் புகழைத் தந்து, தனக்கும் புகழை உரிமையாக் கொண்ட சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் இந்நூல் நிலையத்தை அமைத்துப் போற்றி வளர்த்துவருவது மகிழ்ச்சிக்குரிய செய்தி. கழக அமைச்சர் சிவத்திரு வ. சுப்பையா பிள்ளை அவர்களுக்குத் தமிழுலகம் கடமைப்பட்டுள்ளது. வளர்க நூல் நிலையம்."

# செய்திகளும் குறிப்புக்களும்

## க. காமராசர் வாழ்க!

"பொருளாதாரச் சமநிலை பெற்ற சமுதாயத்தை உருவாக்கவும், எல்லோரும் கல்வி அறிவுடையவர்களாக இருக்க வேண்டுமெனவும், உள்ளத்தால் பற்றற்ற நிலையில் எளிய வாழ்க்கையில் வாழ்பவர் முதலமைச்சர் திரு. காமராசர்" என்று 22—7—61இல் சென்னை நடராசாக் கல்விக் கழகத்தின சார்பில் நடைபெற்ற திரு. காமராசரின் 59 ஆவது பிறந்த நாள் விழாவில் பேசுகையில் தவத்திரு. குன்றக்குடி அடிகளார் குறிப்பிட்டார்.

குறிப்பு :—இங்ஙனம் பொதுநலம் நாடி அயராது பாடுபடும் அறிஞர் காமராசர் அவர்கள் மேலும் பல்லாண்டுகள் வாழ்ந்து பெரும் புகழும் வளமும் வாழ்வும் பெற்று வாழ இறைவன் அருள் புரிவானாக.

## உ. ஆங்கிலம் நீடிக்க வழி செய்க

1965ஆம் ஆண்டுக்குப் பிறகும் ஆங்கில மொழி தொடர்ந்து ஆட்சி மொழியாக இருக்க வேண்டும் என்பதற்கு வேண்டிய பொருத்தமான அரசியலமைப்புத் திருத்தச் சட்டத்தைக் கால தாமதமின்றிக் கொண்டு வரவேண்டும் என்றும், அதன் மூலம் இந்தி மொழி பேசாத மக்களுடைய அச்சத்தையும் உண்மையான ஐயப்பாடுகளையும் நீக்க வேண்டுமென்றும் பாராளுமன்ற உறுப்பினர் டாக்டர் ஏ. கிருஷ்ணசாமி அவர்கள் அண்மையில் ஓர் அறிக்கை விடுத்துள்ளார்.

குறிப்பு :—மொழிச் சிக்கல்கள் பற்றியும் பிற அரசியல் சிக்கல்கள் பற்றியும் டாக்டரவர்கள் அவ்வப்போது அறிக்கை விடுப்பதைத் தமிழகம் நன்கு அறியும். டாக்டர் அவர்களின் அறிக்கையைக் கவனித்து மைய அரசினர் ஆவன செய்வார்களாக.

## ௩. எழுத்தாளர்க்கு நேரு அவர்களின் அறிவுரை

"மொழிப் பிரச்சினைக்கு ஆக்க முறையில் பரிகாரம் தேட வேண்டுமானால் மதச்சார்போ அல்லது அரசியல் சார்போ இருக்கக்கூடாது. மொழிப் பிரச்சினைகளை அரசியலுடன் பிணைத்துவிட்டால் அந்த மொழியின் வளர்சசி தடைப்பட்டு விடுகிறது," என்று 22—7—61இல் புதுடில்லியில் பஞ்சாபி மாநாட்டைத் திறந்து வைத்துப் பேசுகையில் பண்டிதநேரு குறிப்பிட்டார்.

குறிப்பு :—அரசியல் சார்போ சமயச் சார்போ மொழித்துறையில் கூடாது என்பது நல்ல கருத்தேயெனினும், இக்கருத்துரை எழுத்தாளருக்கு வழங்கப்படுதைவிட அரசியலாருக்கு வழங்கப்படுவதே தேவையானதும் பயனுள்ளதுமாகும். ஏனெனில் அரசியலார், குறிப்பாக மைய அரசியலார் அரசியல், சமயம் இவை சார்பான கருத்துக்களுடனேயே மொழியை அணுகுகின்றனர். அதனாலேயே ஒரு சிக்கல் பல சிக்கல்களாகின்றன. மொழிப்பிரசசினை தொடர்பு பற்றிய அளவில் அவரவர் நாகரிகம் பண்பாடு இவற்றுக்கேற்பவே சட்டம் செய்தல் வேண்டும்.

## ௪. இந்தி கட்டாயமே!

“வருகிற 1965ஆம் ஆண்டு முதல் அரசு அலுவல்கள் பெரும்பாலும் இந்தியிலேயே நடைபெறும். எனவே 45 வயதிற்கு உட்பட்ட இந்திய அரசு ஊழியர்கள் அனைவரும் இந்தியை 5 ஆண்டுகளுக்குள் கட்டாயமாகக் கற்றுக வேண்டும்” என்று இந்திய அரசின் உள் துறையினர் அனுப்பியுள்ள ஆணைகளில் ஒன்று கூறுகிறது.

குறிப்பு :—இந்தி கட்டாய மொழியாக்கப்படுகிறது - இந்தி இந்நாட்டில் தன்னிச்சையாட்சி நடத்த விரும்புகிறது என்பதற்கு இதைவிட வேறு சான்று என்ன தேவை? எனவே தத்தம் தாய் மொழி காக்க விழைவோர் மத்திய அரசினர் கொள்கையை மாற்றிக்கொள்ளும் படி செய்தல் வேண்டும்.

## ரு. கல்வியின் மாண்பு பற்றி அமைச்சர் பக்தவத்சலனார் கருத்து

“முன்காலத்தில் ஆடவரும் மகளிரும் பிறர் காணத் தங்க மோதிரம் அணிவதைப் பெருமையாக எண்ணினார்கள். ஆனால் இக்காலத்தில் கையில் புத்தகம் வைத்திருப்பதைத் தான் பெருமையாகக் கருதுகிறார்கள். இருபது முப்பது ஆண்டுகளுக்கு முன்பு புத்தகம் படிக்கும் பழக்கத்தை அவ்வளவாக மக்கள் கைக்கொள்ள வில்லை. இன்றுள்ள நிலைமையில் மக்கள் புத்தகம்படிக்கும் பழக்கத்தை அதிகமாக வளர்த்துக் கொண்டிருக்கிறார்கள். அரசும் இதற்கு ஊக்கம் அளிக்கிறது இதனால் வருங்காலச் சமுதாயத்தின் அறிவாற்றல் பெருகும். நாடு நன்மையடையும்.” என்று சென்னை நகர மைய நூல் நிலையத்தின் புதிய கட்டிடத்தைத் திறந்து வைத்துப் பேசிய காலை, உள் துறை அமைச்சர் திரு. எம் பக்தவத்சலம் அவர்கள் பேசியுள்ளார்கள்.

குறிப்பு :—கல்வியின் மாண்பு பற்றியும், தற்போதைய அதன் வளர்ச்சி பற்றியும், அரசியலார் கல்விக்குத் தரும் ஊக்கம் பற்றியும் அமைச்சரவர்கள் கூறியிருப்பது அனைத்தும் உண்மை. மக்களிடையே நூல்கள் அதிகமாக அதிகமாக நாடு நலம்பெறும். இத்தகைய நல்ல அறிகுறியினைக் கண்ட அரசியலார், இந்த அளவோடு மனநிறைவு கொண்டு விடாமல் மேலும் நூல்கள் வளர ஆக்கமளித்துக் கற்றோர் தொகை பெருக ஆவன செய்வார்களாக.

## சு. டாக்டர். யு. கிருஷ்ண ராவ் மறைவு

தமிழகச் சட்ட மன்றத்தலைவர் டாக்டர் யு. கிருஷ்ண ராவ் அவர்கள், சில காலம் நோய்வாய்ப்பட்டிருந்து 2—8—61 இ வு 1-35 மணியளவில் புரசையில் உள்ள தமது இல்லத்தில் காலமானார் என்ற செய்தியறிந்து வருந்துகிறோம். திரு. கிருஷ்ண ராவ் அவர்கள் அரசியல் உலகில் எல்லாக் கட்சியினராலும் நல்ல பண்பாளர் - நடு நிலையாளர் - எப்பொருளிடத்தும் மெய்ப்பொருள் காணும் இயல்பினர் என்றெல்லாம் பாராட்டப்பட்டவர். இத்தகைய ஒரு நல்லவரின் மறைவு தமிழக அரசியலுக்கு ஒரு நட்டமே யாகும். அன்னாரை இழந்து வருந்தும் அவர்தம் குடும்பத்தாருக்கும் உற்றார், உறவினர், நண்பர் ஆகியோருக்கும் எமது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக்கொள்ளுகிறோம். அவர்தம் ஆருயிர் இறையடியில் இன்புறுக.

# மதிப்புரை

'தொல்காப்பிய ஆராய்ச்சி'

[ஆசிரியர்: திரு. சி. இலக்குவனார் எம். ஏ., எம். ஓ. எல்.
ரூபா. 5-00. பக்கம் 295. வள்ளுவர் பதிப்பகம், புதுக்கோட்டை.]

இந்நூலில், புலவர்க்குரிய அரும்பெறற் பெட்டகமாகிய தொல்காப்பியத்தின் எழுத்து, சொல், பொருளதிகாரங்களின் நுண்கருத்துக்களை எல்லாரும் எளிதில் அறிந்துகொள்ளும் வகையில், இனிய தெளிவிய நடையில் வழங்கியிருக்கிறார் பேராசிரியர் திரு. சி. இலக்குவனார் அவர்கள். தொல்காப்பியத்தைப் போலவே இந்நூலும் மூன்று பிரிவாகத் தலைப்பிடப் பெற்றுள்ளது. பொருளதிகாரத்தைப் பற்றிய ஆராய்ச்சியே விரிவாக அமைந்துள்ளது. இந்நூலுள் ஆசிரியர் முன்னைய உரையாசிரியர்களின் பொருந்தாக் கூற்றுகளை எடுத்தாய்ந்து, புதிய முடிபுகளை அகச்சான்றுகள் காட்டி நிலைநாட்டுகின்றார். அவற்றுள் சில வருமாறு: (1) தொல்காப்பியர் பாணினீயத்திற்கு முற்பட்டவர். அவர்காலம் கி. மு. ஏழாம் நூற்றாண்டு. (2) ஆரியமே தமிழைப் பின்பற்றி நெடுங்கணக்கை அமைத்துக் கொண்டது. (3) குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்ற மரங்களாலேயே நானிலத்துக்கும பெயர்கள் வந்தன. (4) மூவகைக் காலத்தைப் பற்றிக் கூறிய தொல்காப்பியர் கால இடைநிலைகளைப் பற்றிக் கூற

பசு என்ற சொல் ஆரியச்சிதைவு என்று நச்சினார்க்கினியர் கூறுவதை மறுத்து அது 'பசுமை' என்றதனடியாகப் பிறந்திருக்க வேண்டும் என்கிறார் இந்நூலாசிரியர். வடமொழி மரபை மூட்டி நச்சினார்க்கினியரும் இக்காலத்து அறிஞர் சுப்பிரமணிய சாத்திரியாரும் தங்கள் வடமொழிப் புலமையை வெளிக்காட்டவும், தமிழில் வடமொழி மரபை நிலைநிறுத்தவும் செய்த முயற்சிகளை எடுத்துக்காட்டி அவற்றைச் சாடி உண்மைப் பொருள்களைப் பலவிடங்களில் நிலைநாட்டுகிறார்.

தமிழின் சீர்மையை உலகுக்குணர்த்திய அறிஞர் கால்டுவெல் அவர்களுக்குத் தொல்காப்பியம் எட்டாமல் போனது குறித்து இரங்குகிறார். தொல்காப்பியம் அறியாமல், வினை எச்சத்திலிருந்தே வினைமுற்று வந்திருக்க வேண்டும் என்றும், தமிழில் செயப்பாட்டுப் பொருளை உணர்த்தும் முறை பண்டிருந்தே இல்லை என்றும் கூறும் கால்டுவெல் கருத்துக்கள் உண்மையாகா என நிலைநாட்டுகிறார்.

மொழியியலுண்மைகளை ஆங்காங்கே எடுத்துக்காட்டித் தொல்காப்பிய ஆராய்ச்சியில் ஒரு புதுத் திருப்பத்தை உண்டாக்கி யிருக்கிறார் இந்நூலாசிரியர். சிந்தனைக்கு விருந்தா யமைந்த இந்நூல் தமிழார்வமுடைய எல்லாராலும் படித்துப் பயன் பெறத்தக்க நூலாகும். —மு. ச.

திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக்
கழகத்திற்காக, சென்னை, 2-140, பிராட்வே,
அப்பர் அச்சகத்தில், திரு. வ. சுப்பையா அவர்களால்
அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர்: வ. சுப்பையா.